

ஸ்ரீமத். நா. கதிரைவேற் பிள்ளை அவர்கள்.

கடவுள் துணை

# தாயுமான சுவாமிகள்

# சரித்திரச் சுருக்கம்

வணக்கம்

*வீயுமா ணவமலமு மறுபிறப்புந் துறவறத்தான் மாறவீசி*
*யாயும்வே தாகமத்தி னருள்வலியிற் சிவஞான வாழி மூழ்கிப் [றுந்*
*பாயுமால் விடைப்பரம * னிருவியலும் பார்த்துணர்ந்து பதத்திறென்*
*தாயுமா னவன்றனிரு சரணமலர் சிரமதனிற் றரித்து வாழ்வாம்.*

*புராதனமெய்ச் சிவஞான போதமெனுஞ் சித்தாந்தப் பொருளியாவுந்*
*தராசுமுனை யாநிறுவிச் சாயாம லநுபவத்திற் றமிழைப்பாடிப்*
*பராவுசிவமயமாகிப் பரஞானத்தனி மைநெறிப் பரிமேலேறி*
*நிராமயதே யத்தேகி நிறைதாயு மானவனை நினைந்து வெல்வாம்.*

உலகின்க ணின்று மொன்றோடொன்று முரணி யிகலுறா உம் பலவேறு வகைப்பட்ட சமயங்கள், போலாது, சமயாதீதமாய் முடிந்த நிலையதாகி விளங்கும் அத்துவித சைவ சித்தாந்தத்தை நிலை நாட்டிய தந்தையானவரும், பதி பசு பாசம் என்னும் முப்பொருளி னியல்புகளை யெல்லாம் உலக முணர்ந்துய்வான்பெற வைத்தருளிய தாயுமானவரும், எம்மவர்க்குச் சருவமானவரும் ஆகிய ஸ்ரீ தாயுமான சுவாமிகளது திருப்பாடல்கள் காரணமாக, அவர் ஒரு சமயத்தை யுஞ் சாராத பொது நிலையர் என ஓர் சாராரும் தமது விவர்த்தவாதக் கொள்கையை யுடையார் என ஏகான்மவாதிகளாகிய மாயாவாதிக ளும் மயங்குவாராயினர். இருவர் மாறுகோள் ஒரு தலை துணிதல் எம் மவர்க்கிலக்கணமா விருத்தலான், அவர் தங் கூற்றுக்களை யெல்லாம்

* இரு இயல் ஆவன = தடத்த லக்கணம், சொரூப லக்கணம் என்பனவாம். இவை முறையே பொது வியல்பு, சிறப்பியல்பு எனவுங் கூறப்படும்.

அடிகளது சரித்திர வாயிலாகவும், திருப்பாசுர வாயிலாகவும் நடுவு நிலையோடாராய்ந்து நிச்சயித் துண்மை காட்டுவான் எழுந்த தென்க.

வேதங்களாற் பூசிக்கப்பட்டதும், சுத்தாத்துவித சைவ சித்தாந்தம் என்னும் அரசு வீற்றிருப்பதும் புகழாற் றிக்கெங்கும் போயது மாகிய திருத்தலம் சோழநாட்டின்றென் கோடிக்கணுள்ள ஸ்ரீவேதாரணிய புரியேயாம். ஆங்கு இற்றைக்குச் சுமார் 280-வருடங்களுக்கு முன்னர், வேளாள வருணத்திலே, உழுவித்துண்போர் வகையினருள் தோன்றிய கேடிலியப்பப்பிள்ளை என்பார் ஒருவர் இருந்தார். அவர் கல்வி கேள்விகளின் முதிர்ந்து, குருலிங்க சங்கம பக்தியிற் சிறந்து, தம் பெயர்க்கேற்பக் கேடிலராய், அவ்வூர்ச் சிவதல விசாரணைக் கர்த்தராயிருந்தார். அதுகாலைத் திரிசிரபுரத்திலே செங்கோனடாத்தி யரசுபுரிந்த ஸ்ரீமாந் முத்துவிசய ரகுநாத சொக்கலிங்க நாயகர் என்னும் வேந்தரேறு * பிள்ளை அவர்களது நற்குண நற்செய்கைகளையும், கல்வி கேள்வி யறிவின் பெருமையையுங் கேள்வியுற்று வரவழைத்து, சிறந்த சம்பிரதி உத்தியோகந் தமர்த்தினர்.

பிள்ளையவர்கள் அரசனது வேண்டுகோட்படி உத்தியோக மேற்று, அதற்குரிய கடமைகளைக் குறைவறப் புரிந்துவந்தனர். அங்ஙனம் நிகழு நாளிலே தமக்கு ஒரேபேறு வாய்த்த சிவசிதம்பரம் பிள்ளை என்னும் அருமைக் குமாரனைச் சந்ததியின்றி யிருந்த தந்தமையனுர்க்கு முன்னரே சுவீகாரமாகக் கொடுத்து விட்டமையால், தமக்குச் சந்ததியுண்டாகத் திருவருள் செய்யுமாறு, † தக்கிண கைலாயத்துள் ஒன்றாய அத்திரிசிராமலைக்க ணெழுந்

* பிள்ளை என்பது வேளாளர்க்குரிய காரணவாக்கப் பெயருளொன்று. இறைவனிடத் திருநாழி நெற்பெற்ற காமாட்சி யம்மையார், அதனை விருத்தி செய்தற் குரியார் இவரேயெனத் திருவுளங்கொண்டு "பிள்ளையே!" என்றழைத்தமையால் வந்ததெனக் காரணங்கொள்க. அது "உள்ளங்குழைந்தா யுழவாற் பெருக்கவிதை—பிள்ளையெனக் கூயுதவப் பேணுங்கை" எனத்திருக்கை வழக்கங் கூறியதனுலும் பெறுதும்.

† திரிசிராமலை தக்கிண கைலாயத்துள் ஒன்றென்பதை செவ்வந்திப் புராணம், தக்கிண கைலாசபுராணம் என்பவற்றிற் காண்க. திரிசிரபுரம், திரிசிராப்பள்ளி எனவும் பெயர். இக்காலத்து திருச்சிணப்பள்ளி என வழங்கப்படுகின்றது.

தருளி யிராநின்ற தாயுமானேசுரரைத் திரிகாலங்கடோறும் தம் தேவி சகிதமாகச் சென்று ஒருமையுற்று மெய்யன்புடன் தரிசித்தும், நித்திய நைமித்திகாதிகள் செய்தும், விரத மநுட்டித்தும், தானம்செய்தும் வருவாராயினர். அக்காலை, தமிழ்நாட்டகத் துள்ளாரது தவமெலாந் திரண்டொரு வடிவெடுத்து வந்தாற்போலவும், மன்பதைகளின் மலவிருள் துமிக்க இம்மண்ணுலகிற் றோன்றுவான் விமலன் விடுத்தருளியவோர் சித்தாந்த ஞானசூரியன் போலவும் மகவொன்றவதரித்தது. அப்போழ் தத்தந் தந்தையார், அகமிக மகிழ்ந்து செய்யவேண்டியன வெல்லாஞ் செய்து, தாயுமானேசுரர்க்குக் காணிக்கை முதலியனவுஞ் செலுத்தி, சாதகருமமுஞ் செய்வித்தார். சோதிடத்தில் வல்லார், "சுபவோரையிலே ஐந்துகோ ளுச்சமாகத் தோன்றியதனால் இவர் தேவாம்சமாக அவதரித்தார் என்றும், அனைத்துலகையுமாள வல்ல நரேந்திரனாக நிலவுவர்" என்றுங் கூறக்கேட்ட இருமுது குரவர் மகிழ்ச்சியை யென்னென்பேம். தாயுமானேசுரர் அருளா லுதித்தமையால் அப்பிள்ளைக்கு அக்கடவுளின் பெயரையே நாமகரணஞ் செய்தனர்.

அப்பால், தாயுமான சுவாமிகள் வடமொழி தென்மொழிக்கணுள்ள இலக்கிய இலக்கணங்களையும், வேதசிவாகமோப நிடத மிருதி புராண இதிகாச முதலியனவற்றையும் நன்கு கற்று வல்லவராயினர். அவையன்றித் தேவார முதலிய பன்னிரு திருமுறைகளையும், மெய்கண்ட சாத்திரம், அருணகிரிநாதர் திருவாய் மலர்ந்தருளிய திருப்புகழ் முதலியவற்றையும் தக்காருழையாராய்ந்து அன்புடன் பாராயணஞ் செய்தார். இங்ஙனம் வருநாளிலே தகப்பனார் இகவாழ் வொருவ, அரசன் அவரது சம்பிரதி உத்தியோகத்தை ஏற்குமாறு வலாற்காரஞ் செய்ய, மறுக்க வியலாமையான் அதை ஏற்று நடத்தி வந்தார். தாயுமான சுவாமிகள் சம்பிரதி உத்தியோகத்திற் பதினன்கு வயதிலேயே அமர்ந்தாரென்ப. அப்போதில் ஓர்காரிய நிமித்தம் அரசனைக் காண்பான் போந்த சுவாமிகளது திருவடிச் சுவடுகள் அரண்மனையுட் புதுக்குவித்தற்காகக் கொட்டப்பட்டிருந்த மணன்மேற் பதிந்து செவ்வே விளங்கின. பிரதானியும் அரசனும் அவ்வழி வந்தார். பதும ரேகை பதிந்து காணுஞ் சுவடுகளைப் பார்த்து மிக்க ஆச்சரியமுற்று, யாவர் இவ்வழி வந்தார் என, ஆங்கு நின்றார் சம்பிரதியாரே வந்தவர் என்றனர். அரசனும் பிரதானியும் ஐயுறீஇ, அவ்வுண்மை யாராய்வான் சுவாமி

களை ஆங்கழைப்பித்துப் பின்னர் அனுப்பிவிட்டுச் சுவடுகளை யொத்து நோக்கித் தஞ் சந்தேகந்தீர்ந்து மகிழ்வுற்றார். பிரதானி அரசனைப் பார்த்து அரசரேறே! சம்பிரதியாரது அழகைக் கண்டு ஆடவரு மவாவுவரன்றோ? "இலங்கெழிலளவு குணமெனவுரைப்பர்" இதற்கு மேற்கோளாக அவரையே யிக்காலத்து யான் றுலங்குறக் கண்டேன். அவரது வடிவத்தை உற்று நோக்கியுள்ளேன்.

அகவடி யுகிர்விரல் புறவடி கரடே
கழலே கணைக்கான் முழந்தாள் குறங்கே
கடிதடங் கொப்பூழ் வயிறதின் வரையே
யிடையே மயிரி னொழுக்கே முலையுகிர்
விரலே முன்கை யங்கை தோளிணை
கழுத்தே முகநகை செவ்வாய் மூக்குக்
கண்ணே காது புருவ நுதலெனு
மாறைந் துறுப்புட னிரண்டும் பாதம்.

என்று சங்கப்பாட்டியலிற் கூறப்பட்டபடி, அவரது முப்பத்தி ரண்டு உறுப்புக்களும் ஆண்டன்மையோடு தெய்வத்தன்மை சிறந்து, சாமுத்திரிகா லக்கணங்கள் நிரம்பப்பெற்று விளங்குகின்றன. அவர் இன்னுஞ் சிறிது காலத்துள் உலகமெலாந் தன்னேவல் கேட்ப ஆணைசெலுத்தும் மகைஸ்வரிய மகௌதாரிய மகா மண்டலாதிபதி யாகிப் புகழ் நிருவலொருதலை. நிருபவோ! அவரது காற்சுவட் டிற் பிரகாசிக்கும் பதும ரேகைபோல் எவர்க்கு மிருப்பதை யிஞ் ஞான்றுங் கண்டு கேட்டிலேன். அவரது நெடுங்கரங்கள் கணைக்காலின் கீழ்த்தூங்குவது தானுங் கண்டிலிரோ? என்று கூறினன். அது தொடங்கி நாயகன் அவரிடத்து மிக்க பிரீதியும் அச்சமு முடையவனாயினன். இருவினையொப்பு நேருங்கால மாதலால் இவர்க்கு உண்மை யாராய்தலே பெருங்கடமை யெனத் தோன்றிற்று. அரசனிடத்தில் கவிராயர், கவிச் சக்கிரவர்த்தி, பண்டிதர், பாரதி, பாவலர், நாவலர், வித்துவான், மகாவித்துவான், வித்துவசிரோமணி, ஆசிரியர், புலவர் முதலிய பட் டங்களைத் தரித்துச் சன்மானம் பெற வருவோர் எவரையும், யதார்த்த வாதஞ்செய்து தக்கவிடை கொடாமையால் "உண்மை காணுதிர்" என்று விடுப்பார். அரசனும் இவரது இளம்பருவத் தையும், கல்வி கேள்விகளின் அருமையையும், அதற்குத் தகுந்த

வொழுக்கத்தையுங் கண்டு நனிவியந்து பேரன்புடையனாயினன். தலையிற் றீப்பிடிக்கக் கண்டான் வேறொன்றனையும் நாடாது தண்ணீரையே தேடுவதுபோல, இவரும் தம் ஐயங்களை யொழித்து உண்மைகாட்ட வல்ல, ஞானாசிரியர் யாண்டையர்? எற்றைத்தினத் தெதிர்ப்படுவர் என்றேக்கமுற் றெதிர் பார்த்திருந்தார்.

அங்ஙன மமருநாளிலே, அடிகளார் பிறவிகடோறும் ஈட்டிய பெருந்தவப்பேறு காரணமாகவும், இற்றைஞான்றும் பிற்றைஞான்று முள்ளவுயிர்கள் முப்பொருளி னுண்மையறிந்து, சித்தாந்த நிலையேறிச் சிவஞான நிட்டாபரராய், அத்துவித முத்தியை யடைந்துய்தற்குச் சாதனமானவற்றை யோதுவிக்கு முண்மை காரணமாகவும், திருவருண் ஞானப் பெருஞ் செல்வப் பிழம்பாகிய திருமூல நாயனார் மரபிலே தோன்றி, திருக்கைலாய பரம்பரைச் சந்தானமாகிய மெய்கண்டதேவ நாயனாரது வழிக்குரவரிடத்து ஞானோபதேசம் பெற்ற சற்குரு மூர்த்திகளாகிய மௌனகுரு சுவாமிகள் திரிசிராமலைப் பரமநாதனைத் தரிசிப்பான் ஆண்டுற்றனர். நந் தந்தையுமான தாயுமானார் அவரைக் கண்டமாத்திரையே, தலைவனைக் கண்டுழித் தன்வயமிழக்கும் உழுவலன்புடைப் பதிவிரதையைப் போலப் பரவசப்பட்டு, காந்தங்கண்ட ஊசிபோன்று தம்மனம் அவர் மாட்டிழுக்கப் பட்டாராய், அடியுற வணங்கி, "எம்பெரும! தந் திருக்கரத்துள்ள புத்தகம் யாதோ" வென்றனர். குருசுவாமிகள் யாதொன்று முரையாராய் ஏகினர். பின்னரும் பன்முறை வினவி நீழல்போல் தொடர்ந்தனர். அவ்விடங்கடோறும் சுற்றித் திரிந்து, ஊரடங்கி யாமம் பதினைந்து கடிகை யளவிலே தாயுமானவர் சந்நிதி சென்று *பதுமாசனத்துட்கார்ந்த மௌனாசாரியர் இவர் பக்குவங்கண்டு "சிவ ஞான சித்தி" என்றனர். தாயுமானார் அகமிக மலர்ந்து, அந்த நாளிலே வாதவூர் நாதனை ஞானபோதத்தா லேதந் தொலைத்துச் சாதங்காட்டிப் பாதமளித்தாண்ட பரமபதி, இந்த நாளி லெளியேனையும் ஞானசித்தியான் மோனபத்தி யளித்தாட் கொள வெழுந்ததோ வென்று துதித்து, அருட்கடலே!

---

* பதுமாசனமாவது யோகாசனங்களுள் ஒன்று. அஃதாவது இடப் பக்கத் தொடையின்மேல் வலக்காலினையும் வலப்பக்கத் தொடையின் மேல் இடக்காலினையும் மாறவைத்து, இருகாற் பெருவிரலையு மிருகரங்களாலும் மாறியுறப் பிடித்திருத்தல். அதனை "சவ்வியபாக வூருமேல்" என்னுஞ் சூதசங்கிதைச் செய்யுளா னறிக.

1. சிவம் யாது ?

2. ஞானம் என்ப தென்னை ?

3. சித்தி எது ? என்று வினவ,

ஆசாரிய சுவாமிகள் அவரை நோக்கி, அன்புளாய் !

1. சிவம் என்பது பதி.

2. ஞானம் என்பது அந்தப் பதியை உள்ளவா றறியும் அறிவு.

3. சித்தி ஆவது அவ்வறிவை வருவிப்பது என்றார்.

தாயுமானவர் கேட்டுத் தவராச !

1. அப்பதிப்பொருள் ஊர் குணம் குறி செயல் பெயர் முதலியன வில்லாதது, சொல்லளவைக்கும் பொருள் அளவைகட்கு மெட்டாதது, என்று வேதாகமங்கள் முழங்கவும், தேவரீர் அவையிற்றிற்கு முரணாகச் சிவம் என்றல் பொருந்துமோ ?

2. சிவம் எனவே, அசிவம். (அமங்கலம்) சிவாசிவம் (மங்கலாமங்கலம்) என்பனவும் பெறப்படலால் அப்பொருளவை ?

3. அப்பொருள்கள் சிவத்திற்குப் பேதமோ, அபேதமோ, பேதாபேதமோ ?

4. வியாபகமோ ? வியாப்பியமோ ? வியாத்தியோ ? சுசாதியோ ? விசாதியோ ? சுகதபேதமோ ? இவை அல்லாதனவோ ?

5. "உண்மையுமா யின்மையுமாய் இருப்பவன்பதி" என்றுன்றோ ரருளிய துண்மையாயின், சிவம் (மங்கல முடையது) எனக் கூறல் சால்பேயோ ? என்னை ? அமங்கலம், மங்கலா மங்கலமும் அவனே யாகலால்.

6. பிரமப் பொருளன்றி யிரண்டாவது பொருள் இல்லையென்று வேதங் கூறவும், சிவஞானம் என்பதற்குப் பொருள் சிவனையறியும் அறிவு எனின், சிவன் ஞேயப் பொருளாகவும், ஞானம் காட்சிப் பொருளாகவும் முடிதலால், ஞாதுரு (அறிபவன்) ஞானம் (அறிவு) என்பன வெவை ?

7. அந்த ஞாதுரு பரிபூரணனுய சிவனுக்கு வேறு நின்று அறிவனோ ? ஒன்றாய் நின்றறிவனோ ? வேறும் ஒன்றுமாய் நின்றறிவனோ ?

8. சிவன் அறியப்படுமேல், அறி பொருளெல்லாம் தூலமாகியும், அழிவனவாயும், விகாரப்படுவனவாகியும், அறிவானுக்கு வேறவாகியும், கண்டப் படுவனவாகியும், விளங்கு முண்மையால், அவனும் சடத்துவம், அழிவு, விகாரம், பேதம், கண்டப்படுகை முதலிய தன்மையனாய், சித்துசத்து, நிர்விகாரம் அத்துவிதம் அகண்ட முதலிய வற்றை யிழக்குமன்றோ.

9. அறியப்படுதல் கருவி கூடிய விடத்தோ? கழன்ற விடத்தோ? கூடிய விடத்தெனின் கருவிகள் எல்லாம் பசு பாச ஞானங்களாகலின் அந்த ஞானங்களா னறியப்படானே? கழன்றவழியெனின் அறிதலெங்ஙன்?

10. சிவம், அறியப்படுதல், ஐயக்காட்சியானோ? திரிபு காட்சியானோ? மானதக்காட்சியானோ? சையோகம், சையுக்தசமவாயம், சையுக்த சமவேத சமவாயம், சமவேத சமவாயம், விசேடண விசேடிய பாவம் என்னும் வகைத்தாய வாயிற்காட்சியானோ? தன்வேதனைக் காட்சியானோ? யோகக்காட்சியானோ? விகற்பக் காட்சியானோ? நிருவிகற்பக் காட்சியானோ? சுவார்த்தாநு மானத்தினாலோ? பரார்த்தாநு மானத்தினாலோ? சுபக்கம், விபக்கம், சுபக்க விபக்கம், ஒப்பு, பாரிசேடம் உலகவாதங்களானேயோ?

11. ஞானம் அறிவானுக்கு இயற்கையா? செயற்கையா? இயற்கையெனிற் சித்தித்தல் வேண்டா. செயற்கையெனிற் சித்திக்கமாட்டா அஞ்ஞானமு மங்ஙனே யன்றோ?

12. அங்ஙனஞ் சித்தித்தல், * சமுதாயவாதமோ? ஆரம்பவாதமோ? விவர்த்தவாதமோ? பரிணாமவாதமோ? விருத்திவாதமோ?

---

* சமுதாயவாதமாவது எள்ளாலாய குப்பை யென்பது. இது புத்தர் சமணர் கொள்ளுமதம். ஆரம்பவாதமாவது நூலானாகிய வாடைபோல்வ தென்பது. இது தார்க்கிகர்மதம். விவர்த்த வாதமாவது கயிற்றிற் பாம்பு போலவும், பேய்த்தேரானாய நீர்த்தோற்றம் போலவும் உள்ளதென்பது. இது ஏகான்மவாதிகளாகிய மாயாவாதிகள் மதம். பரிணாமவாதமாவது பாலினாலுண்டாகிய தயிர்போல் முற்றும் பரிணமித்தலும், நெய்யினுண்டாம் புழுப்போல ஏகதேசத்திற் பரிணமித்தலும் என இருவகைத்து. படங்குடிலாதல் போலவும், வித்து மரமாதல் போலவும், உள்ளது விருத்திவாதம்.

[என்றின்னனவாய தம் ஐயப்பாடுகளை யெல்லாம் விண்ணப்பிக்க குருசுவாமிகள் புன்னகை புரிந்து, சகல வர்க்கத்து ஆன்மாக்களுக்கு அநுக்கிரகிக்கும் உபதேச முறைமையை ஓர்ந்து]

* ஔத்திரி தீக்கைக்கு அவரப்போது அருகரல்லாமையால் அதற்கு அங்கமாயுள்ள † அறுவகைத் தீக்கையுளான வியற்றி மைந்த! நீ வினவிய ஐயப்பாடுகளை யெல்லாம் அறுத்து, விபரீத ஞானத்தையும் வீட்டி சிவஞான நெறியாகிய அத்துவித ஞானத்தைக் கொடுப்பது இந்நூலேயாம். இஃது நங்குரு மரபி னிலவிய சகலாகம பண்டிதர் என்னும் அருணந்தி சிவாசாரிய மூர்த்திகளா னருளப்பட்டது. இதனைப் பூசித்துப் பாராயணஞ்செய்து வருகின்றும். சிவஞானபோதவழி நூலாயுள்ள இதுவேதாகம சாரமாகிய சித்தாந்த வியல்பினை யெடுத்துத் தாபித்தலாற் சுபக்கம் என்றும், வேதாகமங்கட்குப் புறப்புறமாகவும், புறமாகவும், அகப்புறமாகவும், அகமாகவுமுள்ள சமயக் கோட்பாடுகளை யெடுத்துக் கண்டனஞ் செய்தலாற் பரபக்கம் என்றும் இருவகைப்படும். மாணவ!

‡ "பாரிலுள்ள நூல்களெலாம் பார்த்தறியச் சித்தியிலே
யோர்விருத்தப் பாதி போதும்."

என்று, அவர் வினவிய வினாக்கட்கெல்லாந் தக்க விடை கொடுத்துச், சித்தாந்த சாத்திரம் பதினான்கினையும் முறையே உபதேசித்தருளினர். பதியிலக்கணம், பசுவிலக்கணம், பாசவிலக்கணம், ஞானஞ்ஞான இலக்கணம், அத்துவித விலக்கணங்களை யெல்லாம் போதித்தருளுங் காலத்தில் தேசிகநாதர் § "இருநிலனாய்த்தீயாகி நீருமாகி" தானெனை முன்படைத் தானதறிந்து தன் பொன்னடிக்கே "ஏழிசையாயிசைப்பயனா யின்னமுதா யென்னுடைய தோழனு

* ஔத்திரி - உத சகிதமாகப் பண்ணுவது. உதசகிதம் ஓமத்தோடு கூடியது. அது கிரியாவுத்திரி, ஞானவுத்திரி என இருவகைப்படும்.

† அறுவகைத் தீக்கையாவன:—சட்சு தீக்ஷை, பரிச தீக்ஷை, வாசக தீக்ஷை, மானத தீக்ஷை, சாத்திர தீக்ஷை யோக தீக்ஷை என்பனவாம். இவை யிற்றை வருணபத்ததி, சைவசந்நியாசி தீபிகை, காலோத்தரம், சித்தாந்த சேகரம், ஞானப்பிரகாச வியாக்கியானம் என்பவற்றிற் பரக்கக் காண்க.

‡ இதனை "பாதிவிருத்தத்தா லிப் பார்விருத்தமாக வுண்மை—சாதித்தார் பொன்னடியைச் சாருநா ளெந்நாளோ" என்று குருமரபின் வணக்கத்துள் தாயுமானர் அநுவதித்ததுங் காண்க.

§ அப்பர் தேவாரம் - நின்ற திருத்தாண்டகம்.

மாய் " பன்னிலூறும் பழத்தினுமின் சுவை யென்னிலூறி யெனக்கே களிதரும் உன்னி லுன்னுமுன் னுவிடில் விட்டிடும்" எனவரூஉம் தேவார அருட்பாக்களேயும், " இன்றெனக் கருளி யிருள் கடிந் துள் ளத் தெழுகின்ற ஞாயிறே போன்று - சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றும்" ஆதியுமந்தமு மில்லாவரும் பெருஞ் சோதியை " னவரூஉந் திருவாசகத் திருவருட்பாக்களேயும், " உற்றவர் பெற்றவரற்றவர் முற்றும் - அற்றவர்க் கற்றவனல்ல வர்க்கு " எனவரூஉம் இருபாவிருபஃதின் செய்யுளேயும்,

குமர குருபர குணதர நிசிசரர்
திமிர தினகர சரவண பவகிரி
குமரி சுதபகி ரதிசுத சுரர்பதி குலமானும்
அரவு புனேதரு புனிதரும் வழிபட
மழலே மொழிகொடு தெளிதர வொளிதிகழ்
அரிவை யறிவது பொருளென வருளிய பெருமாளே.

என்ற திருப்புகழின் திருப்பாவையும் ஏனேயவற்றையும் உதரிகத் துண்மை காட்டினரென்ப. அதுபற்றி யன்றோ தாயுமான சுவாமி களும் தாம் அருளிச்செய்த அரிஞருரைக் கண்ணியில்,

" இருநிலனுய்த் தீயாகி யென்ற திருப்பாட்டின்
பெருநிலேயைக் கண்டணேந்து பேச்சறுவ தென்னாளோ."

என்பது முதலாக அவற்றை யெல்லா மெடுத்தாண்டு மன்பதைப் பக்கத்தாரைத் தம்வயப்படுத்தினர். நிற்க, இவ்வுபதேசத்தானே வைதிக சைவ சுத்தாத்துவித சைவசித்தாந்தமே உண்மைநிலே யென்றும், சிவபெருமானே பரமபதி யென்றும், அவருடன் இரண் டறக் கலத்தலே அத்துவித முத்தியென்றும் உணர்ந்து உலகாசை யைத் துறந்து முமுட்சுத்துவ முற்முர். மௌனதேசிகர், " நீ இன்னுஞ் சிறிது காலமிருந்து இல்லற நடாத்திப் புத்திரனேயீன்று நிற்றி; பின்னர் யாம்வந்து நிட்டைகூடு முபாயமளிப்பேம்" என் றனர். ஆசாரியர் பிரிவை யாற்ருமல் தாயுமானர் வருந்த " சும்மா இரு " என்று அகன்றனர். இவற்றைச் சுவாமிகளது திருப்பாட லில் மௌனகுரு வணக்கத்துள்,

சிந்தையற நில்லென்று சும்மாவிருத்திமேற்
சின்மயா னந்த வெள்ளத்

தேக்கித் திளைத்துநா னதுவா யிருக்கநீ
செய்சித்ர மிகநன் றுகாண்
எந்தைவட வாற்பரம குருவாழ்க வாழவரு
ளிய * நந்தி மரபு வாழ்க
வென் றடியர் மனமகிழ வேதா கமத்துணி
பிரண்டில்லை யொன்றென் னவே
வந்தகுரு வேவீறு சிவஞான சித்திநெறி
மௌனோப தேச குருவே
மந்த்ர குருவேயோக தந்த்ரகுருவே மூலன்
மரபில்வரு மௌன குருவே.— என்றதனானும்.

"வேதாந்த சித்தாந்த சமரசநிர் வாகநிலையும்"

"சமய் நடைசாராமல் வேதாந்த சித்தாந்த சமரச சிவாநுபூதி, மன்னவொரு சொற்கொண் டெனைத்தடுத் தாண்டபின் வாழ்வித்த ஞானகுருவே" என்றதனானும்,

† "காட்சியநு மானமுத ஞாவிதங்க டோர்ந்து நானூனெனக் குழறு படைபுடை பெயர்த்திடவு நான்குசா தனமு மோர்ந்திட்

‡ டணுபக்க சம்புபக்க மாமிரு விகற்பமும்" என்றதனானும் அறிக.

---

* நந்தி மரபு ஆவது - தக்கிணாமூர்த்தி சிவஞானபோதத்தைத் திருநந்தி தேவர்க்கு உபதேசிக்க, அவர் சனற்குமார முனிவர்க்கும், அவர் சத்திய ஞான தரிசனிகளுக்கும் அவர் பரஞ்சோதி முனிவர்க்கும், அவர் மெய்கண்ட தேவர்க்கும், அவர் அருணந்தி சிவாசாரியர் முதலாயினோர்க்கும், அவர் மறைஞான சம்பந்த நாயனார்க்கும், அவர் உமாபதி சிவாசாரியர்க்கும், அவர் அருணமச்சிவாயர்க்கும் உபதேசித்த வரன்முறை வழியாம்.

† காட்சி முதலியன வென்றது, காண்டல், கருதல், உரை, இன்மை, ஒப்பு, ஒழிவு, உண்மை, உலக வழக்கு, இயல்பு என்னும் பொருளளவையை என்க. நானூனெனக் குழறுபடையாவது மாயாவாதக் கொள்கை. நான்கு சாதனமாவன - நித்தியா நித்திய வத்துவிவேகம், இகமூத்திரார்த்த பல் போக விராகம், சமாதிசட்க சம்பத்து, முமூட்சுத்துவம் என்பனவாம்.

‡ அணுபக்க சம்புபக்கமாவது - சிவபெருமான் பஞ்ச கிருத்திய நிமித்தம் நவபேதங்களாகும் இருவகைப்பகுதி, அவற்றின் விரிவை, யாழ்ப்பாணத்து ஞானப்பிரகாச முனிவர் செய்தருளிய "சித்தியார்" உரைக் கண் டெளிக.

இப்பால் ஆசாரியர் சேதுதரிசனஞ் செய்து, குமரி மூழ்கிப் பொதிய மலைபோய் அகத்திய பகவானை யடைந்தருள்பெற்று நிட்டையி லமர்ந்தனர். ஈண்டுத் தாயுமான சுவாமிகள் உபதேச மொழிகளை யெல்லாஞ் சிந்தித்து அவற்றின்படி யொழுகலால் விரத்திதோன்ற, இல்லௌகிகத் தொழிலை மறந்துவந்தார். முத்து விசய ரகுநாத சொக்கநாயக அரசன் அவரது தன்மைகளை யெல் லாம் கேள்விவாயிலா னறிந்தும், அற்புதத் தன்மையான பல செய் கைகள் அவரிடத்து நிகழ்ந்ததை நேரிற்கண்டும், அச்சமும் அதி சயமும் அன்பும் உற்று, அவரை யழைத்து உயர்ந்த ஆசனத்தி லெழுந்தருளச் செய்து, சுவாமி! தேவரீரது மகிமைகளை அறியாமை யால் என் உத்தியோகத்தில் அமர்த்தினேன். இனிமேல் தேவரீ ருக்கு யானே குற்றேவல் செய்யப் பணித்தருளவேண்டு மென்றி ரந்து, அவர் நிலைக்கு முட்டுருவண்ணம் ஒழுகினன். சுவாமிகள் * சரியையிற் சரியை, சரியையிற் கிரியை, சரியையில் யோகம், சரியையில் ஞானம் என்பவற்றை யெல்லாம் அநுட்டித்துவந்து கிரி யாபாத சோபான முற்றார்.

அக்காலை அரசன் மண்ணுல கொருவினன். அரசன் மனைவி யிவரது அழகைப் பலமுறை கண்டுள்ளா ளாகலின் ஆசைமீதூர்ந்து அவரிடஞ்சென்று, "என்னர சாட்சிகட்குத் தேவரீரைத் தலைவ ராக்குவல், என் உடல், பொருள் ஆவிமூன்றுந் தம்மவே. என் வேண்டுகோட் கிணங்கி யெளியேனது பெருங்குறையை முடித் தருளவேண்டு" மென்று இரந்தாள். பெருமானார் அவள் மன மடங்க வேண்டிய நீதிகளை யெல்லாம் உரைத்து அறிவு வரச்செய்து, தாபதப் பக்கமாக்கி இங்கிருத்த லன்றன்றென்றுணர்ந்து இராம நாத புரத்திற்கு எழுந்தருளினர். அதனைத் தமையனாராகிய

* சரியையிற் சரியையாவது - திருக்கோயில் அலகிடல், மெழுக்குச் சாத்துதல், நந்தவனம் வைப்பித்தல், தல தீர்த்தயாத்திரை செய்தல் முத லியன. சரியையிற் கிரியையாவது-இடபாரூடர், கல்யாணசுந்தரர், பிச்சாட னர், உமாமகேசர் முதலிய இருபத்தைந்து மூர்த்திகள், விநாயகர், கந்தர் முதலிய ஆவரண மூர்த்திகள் என்பவற்றுள் ஒன்றை வழிபடுதல். சரியை யில் யோகமாவது-நெஞ்சின்கண் ஸ்ரீகண்ட வுருத்திர மூர்த்தியைத் தியானித் தல். சரியையில் ஞானமாவது-அத்தியான பாவனையின் உறைப்பினால் மெய்யநுபவ வுணர்வு நிகழ்தலாம்.

சிவசிதம்பரப் பிள்ளை அவர்களும், சிறிய தாயார் குமாரராகிய அருளையபிள்ளை அவர்களும், கேள்வியுற்று, ஆங்குச்சென்று சந்ததி விளங்கும்படி திருமணஞ் செய்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தனர். அவருக்கு அவ்விடத்திற் பிரியமில்லாதிருந்தும் தங்குரு சுவாமிகள் தாஞ்ஞையும் ம்துவாதலானும், தமயனார் வேண்டு கோளுமன்ன தாகலானும் மறுத்தல் பாவமென்றெண்ணி யுடம்பட்டு, தங்குலத்திற்றோன்றிய மாட்சி வாய்ந்த மட்டுவார் குழலம்மை என்னும் நங்கையாரொருத்தியைத் திருமன்றல் புரிந்தனர். இல்லாளோடு தாமரையிலையி னீர்போற் கூடி யில்லற தருமங்களையும் நடாத்தி வந்தார். அது காலை மட்டுவார் குழலம்மையாந் தேவியார் ஓராண்மகவை யீன்றுவைத்துச் சிவபதமடைந்தனர். அக்குழந்தை பெயர் கனகசபாபதிப் பிள்ளை. அக்குமாரரும் "மகன்றந்தைக்காற்று முதவியிவன்றந்தை யென்னோற்றான் கொல்லெனுஞ் சொல்" என்பதற் கிலக்கியமாய் விளங்கினர். தாயுமானரும் * கிரியாபாத நான்கையு முடித்து, யோகபாத சோபான முற்றூர் மௌனதேசிகர் அவணெழுந்தருளி ஞானவுத்திரி யென்னுந் திட்சைசெய்து, யோக நிட்டைகளி னியல்புகளை யுணர்த்திக் துறவுபெற ஆக்ஞாபித்துச் சென்றனர். அது தொடங்கி அடிகளார் கௌபீனதாரியாய் வெளிப்பட்டு † யோகபாதத்தை யநுட்டித்து, சிவஞானப் பெருஞ் செல்வராய் நிட்டை கூடுவாராயினர். சோதிடர்களும் பிரதானியும் கூறியவாறே புவிராசர் கவிராசர் ஆதிய மன்பதைகள் யாவரும் போற்றும் சிவயோகத் தவராச ராயினர். அரசர்கள் மலை, நதி, நாடு, ஊர், மாலை, குதிரை, யானை, கொடி, முரசு, ஆணை யென்றார்

* கிரியையிற் சரியை-சிவபூசைக்கு வேண்டப்படும் உபகரணங்களை யெல்லாஞ் செய்துகோடல், கிரியையிற் கிரியை-ஐவகைச் சுத்தி முன்னாகச் சிவலிங்க வடிவிற்செய்யும் பூசனை, கிரியையில் யோகம்-அகத்தேபூசை ஓமம் தியானம் மூன்றற்கும் மூவிடம் வகுத்துக்கொண்டு செய்யும் அந்தரியாகம், கிரியையில் ஞானம்-அவ்வந்தரியாக வுறைப்பின்கண் நிகழும் ஓரநுபவ வுணர்வு.

† இயமம், நியமம், ஆதனம், பிராணயாமம் என்னு நான்கும் யோகத்திற் சரியை, பிரத்தியாகாரமுந் தாரணையும் யோகத்திற் கிரியை. தியானம் யோகத்தில் யோகம். சமாதியோகத்தில் ஞானம் எனக. இவற்றை "யோககாரிகையினும்" திராவிட மாபாடியத்தினும், தத்துவப் பிரகாசத்தினுங் காண்க.

தசாங்கத்துடன் வெண்கொற்றக்குடை, நவமணிமுடி, சிங்காசனம் என்னுஞ் சிறப்படையாளங்களையும் உடையராதல்போலத் தாயுமான சுவாமிகளும் அவாவின்மை, மெய்யுணர்வு, துறவாதியகுணம் என்னும் மலையும், நித்தியானந்தம் என்னும் நதியும், வேதமுதலிய கலைகளானும் அறிதற்கரிய சிற்சத்தித்தானம் ஆகியநாடும், அநுபூதி என்னுஞ் சுத்தப் பெருவளமுடைய ஊரும், விடயவழிச் செல்லாமல் நிறுத்தித் தன்வயமாக்கும் அருள் என்னும் மாலையும், எவ்வெப்பொருளினிடத்தும் விரைந்து சென்று அவ்வப்பொருளாய் நிற்கும் வியாபகத்துவம் என்னும் குதிரையும், வினைகட்டறுத்துப் பாசப் பகையை யெறிந்து, அன்பாகிய வேகமுற்று ஆரணி சென்னி உரோதயித்திரி என்னுஞ் சத்திகளாகிய மும்மதங்களுடன் தத்துவ கூட்டங்களுட் புகுந்து ஆனந்தத்தேனையளிக்கும் சிவஞானம் என்னும் யானையும், சமய நிலைகளுக்கெல்லாம் மேற்பட்டு, அத்துவிதப் பெரும்பயனை விளக்கித் துன்பச் சுமையை நீக்குதற் கேதுவாய வைதிக சைவ சித்தாந்தம் என்னும் வெற்றிக்கொடியும், தசநாடிகளுந் தசநாதமாகத் தோன்றலின் நாதம் என்னும் முரசும், பிருதிவி முதல் நாதமீறாய் அகம்புறம் என்னும் கருவிகளாகி விளங்கும் உலகமெங்கணுமுள்ள ஆன்மாக்களுக்கு அறிவித்தல் என்னும் ஆணையும் ஆகிய தசாங்கங்களுடன், எவற்றையும், ஒருசேரவோரியல்பான் அறியும் பேரறிவு என்னும் ஒரு பெருஞ்சுடர் முடியும், மும்மலப் பசையானேறும் பிறவிவாதனையையும் போக்கித் தன்னடிக்குள் வைத்துப் பேரின்ப நிழலைச் செய்யும் அந்தண்மை என்னும் வெண்கொற்றக்குடையும், சமாதி என்னுஞ் சிங்காதனமும் உடையராய், மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் சதுரங்க சேனைகளுந் தம்மேவல் கேட்டடங்கு நிற்கத் * தவராசராய் விளங்கினார் என்க.

நில வுலகத்துள்ள உயிர்களெல்லா முணர்ந்தீடேறுந் திருவுளத்தானே தம் அநுபவசாரங்களையெல்லாந் திரட்டி அதியற்புத திருப்பாடல்களாகப் பொழிந்தனர். அவற்றையெல்லா முடன்

* தவம் என்றது ஈண்டுச் சிவஞான நிட்டையை அதனை "ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தனை - தம்முதல் குருவுமாய்த் தவத்தனிலுணர்த் தவிட் டன்னிய மின்மையி னரன்கழல் செலுமே" என்னுஞ் சிவஞான போதச் சூத்திரத்தா னறிக.

திரிந்த அருளையர் முதலாய மாணவர் எழுதினரென்ப. சுவா கள் அருளையர்க்குத் தத்துவோபதேசஞ்செய்து, இராமநாதபுர சேர்ந்த இலக்ஷ்மிபுரத்தில் சென்று ஆங்குள்ள நந்தவனத்தி (கி-பி 1659) சிவத்தோடு இரண்டறக் கலந்தலாகிய அத்துவி முத்தியை யடைவான் *சமாதிகூடினார். அருளைய சுவாமிகள் அ வற்பாவினாலே சுவாமிகளைத் துதித்து, சிவயோக சாதனராய் கனகசபாபதிப்பிள்ளை அவர்கட்கு மெய்யுணர்வருளித் துறவுற்று இக்குருபரம்பரையில் தஞ்சைமா நகரின் கீழ்ப்பால் அன்னப்ப பேட்டையிலுள்ள அம்பலவாண சுவாமிகள் ஆதீனத்தில் அருணா சலப்பிள்ளை என்பார் இருந்தனர் என்ப. இச்சரிதம் வேதாரணி ஆதீனத்திலே எமது சந்தான தீக்ஷிதாசாரிய சுவாமிகளது உப தேசப்படியும் திருப்பாடற்படியும் எழுதப்பட்டது. எஞ்சிய ச தங்களையெல்லாம் ஷை கதிரைவேற்பிள்ளை அவர்கள் சென்னை ஞானபோதினியில் 6-புத்தகம் இலக்கச் சஞ்சிகையில் வெளிப்படுத் தினர். ஆங்கு பாக்கக் கண்டு கொள்க.

நமது நாட்டில் உள்ள பல் வேறு சமயங்களுள், தோன்றிச சிறந்த சமய அறிவையும் சமரச ஞானத்தையும் மக்களுக்குப் புகட் டிய பேரறிஞருள் தாயுமான சுவாமிகளும் ஒருவர். இவரது பாடல்களைப் படிப்போர் பொது நோக்கம் பெற்றுக் கடவுள் பாட் டுப் பேரன்பு கொள்வர் என்பதில் ஐயமில்லை.

---

* இச்செய்தி "துகளறு சாலிவருடம்" என்று அடிகளின் மாணாக் கர் கோடிக்கரை ஞானியார் பாடிய பாடலால் விளங்குகிறது.

தாயுமான சுவாமிகள் சரித்திரச் சுருக்கம்

முற்றிற்று.

# திருப்பாடற் சிறப்பு



வெள்ளமருவு விரிசடையான் வேதவனத்தான் விமலேச
னுள்ளமருவத் திருமூலனுறவின் மருவுமொருமவுன
வள்ளலருளுங் கருணைவெள்ள வாரிமடுத்தே மறைசைநகர்ப்
பிள்ளைமுனிவ னருண்முகிலாய்ப் பெய்தான் கருணைத் தமிழ் மழையே. (1)

திருமூலன் மரபினெழுங் குருமவுனி திருவருளைத்திரட்டிவாரி
யருளூறு மானந்த வநுபூதிச் சாரமெலா மருந்திநாளு
மருளோடு மிருளோட மறைக்காட்டி னெழுந்தாயுமானோன் ஞானப்
பொருளாகுஞ் சித்தாந்தத் தமிழ்மழையை யுலகமுயப் பொழிந்தான்மாதோ.

சிராப்பள்ளிமா மலைமேவுஞ் செவ்வந்திப் பெருமானருள் செய்யவாங்கிப்
பராபரமு மெந்நாளும் பைங்கிளியும் பலபாவும் பாடிப்பாடித்
தராதலமா னுடர்க்கெல்லாந் தண்ண முதாத்தந்தருளுந் தாயுமான
நிராமயனா ரருள்பெரிய கவிதையினாற் பொருளதனை நினைந்து நிற்பாம். (3)

அன்னையத் தனுமாய்க் குருவுமாய்த் தேவா யமர்பிள்ளை முனிவன் மெய்யுரு
மன்னுதத்துவத்தை யவனருளறியாமதியிலே னாய்ந்திடற்குமோ [ளான்
வென்னவாகிடுமே கான்மவா தியர்க்கும் பிறர்க்குமா வெடுத்தனன்வேறின்
றென்ன யாதவஞ்செய் திட்டனோமறைசை யெம்பிரான் புகழுரைத்திடற்கே.

நீரணி சடையா னிருமலன் வரதனிட்கள சகளமா நிறைவோன்
சீரணி கருணைத் திருவுரு வாகித் திருமறைக் காட்டெழுஞ் செல்வ
னீரடிக் கமலத் தாயுமா னவன்றனிருந்தமிழ்ப் பெருமையென் னளவோ
பாரினிற் படுமோவெடுத்தமா விடயம் பகருவ வினியினிப்பாக. (5;

உ

கடவுள் துணை

# தாயுமான சுவாமிகள்

## திருவாய் மலர்ந்தருளிய திருப்பாடல்களுள்

## முதன் மூன்று பாடல்களுக்கும் உரை



### 1-வது பாடல்.

### திருவருள் விலாசப் பரசிவ வணக்கம்

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

அங்கிங்கெ னாதபடி யெங்கும்ப்ர காசமா
யானந்த பூர்த்தியாகி
யருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
யகிலாண்ட கோடியெல்லாந்
தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது மனவாக்கினில்
தட்டாம னின்றதெது சமயகோ டிகளெலாந்
தந்தெய்வ மெந்தெய்வமென்
றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதெது
வெங்கணும் பெருவழக்கா
யாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமா
யென்றைக்கு முள்ளதெதுமேற்
கங்குல்பக லறநின்ற வெல்லையுள தெதுவது
கருத்திற் கிசைந்ததுவே
கண்டனவெ லாமோன வுருவெளிய தாகவுங்
கருதியஞ் சலிசெய்குவாம்.

இந்நூலாசிரியர் மேலே [2-வது பாட்டில்] "பெரிய பொருளைப் பணிகுவாம்" எனவியந்து வாழ்த்துதல் செய்யும் சிவத்தின் வியாபக வியாப்திகள் பலவற்றையும் தொகுத்து "முடிந்தது முடித்தல்" என்னும் உத்தியால் கூறுவான் எடுத்துக்கொண்டது இச்செய்யுளின் கருத்தாம்.

அங்கு இங்கு எனாதபடி என்பது:—அண்டபகி ரண்டங்களாகிய சேய்மைக்கணுள்ள தெனவும், அன்றிப் பூமி பாதலங்க ளென்னும் அணிமைக்கணுள்ள தெனவும் கண்டித்துரைக்கப் படாமை.

இனம்பற்றி உங்கு எனவுங் கூட்டி அவ்வற்றிற்கு இடைவெளியின்கணுள்ளதெனவு முரைக்க.

' என்னாத ' என்பது ' எனாத ' எனத் தொக்கு நின்றது.

எங்கும் பிரகாசமாய் என்பது:—மேல், கீழ், உள், புறம், நடு, பக்கங்களனைத்தினும் பரந்து நிற்கும் பேரொளியாகி,

ஆனந்த பூர்த்தியாகி என்பது:—அவ்வாறே யகண்ட பூரணானந்தமாகி,

ஆனந்த பூர்த்தி—வடசொற் புணர்ச்சி யாதலின் இயல்பாயது.

அருளொடு நிறைந்தது எது என்பது:—தனது திருமேனியாகிய பேரருளோடு விபுவாயுள்ளது எப்பொருள் ?

ஒடு உருபு " ஈட்டிய விரண்டாம்வேத நூறுருவோடெழுந்தது " என்றாற்போல ஒற்றுமைப் பொருட்கண் வந்தது.

அருள் ஆவது - அபின்னசத்தி ; நிறைவு ஆவது - உதியாமல் முக்காலத்தினும் உள்ளதாகி, ஓங்கிப் பேராமல், குறையாமல், இடையறாமல், அசைவின்றிப் பரந்துநிற்குந் தன்மை. இதனைப் பூரணமென்றும் விபுவென்றுங் கூறுவர். இந்நூலாசிரியர் மேலே " அண்டபகிரண்டமுமடங்கவொரு நிறைவாகியானந்த மானபரமே " என்றும், " பார்க்குமிடமெங்குமொரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணானந்தமே " என்றும் பலவிடங்களினும் கூறியவா றுணர்க.

அன்றியும், அங்கு - வீடுபேறாகிய அம்மைக் கண்ணும், இங்கு - உயிர் வாழ்க்கைக் கிடமாகிய இம்மைக் கண்ணும், எனலும் ஒன்று. இனம்பற்றி உம்மைக் கண்ணுமெனக் கூட்டியுரைக்க. எனவே, அண்டதத்துவம் பிண்டதத்துவம் முதலிய அனைத்திடமுமா மென்பது பெற்றாம். அவையாவன: பிருதிவியண்டம் புவலோக முதல் சிவலோகமளவாக ஏழுலோகமும், மேல் அண்டகடாகமும் பிரம்மாண்டமும், மேல் அப்பு தேயு வாயு ஆகாயங்களாகிய அண்டங்களும், மேல் மனம் புத்தி ஆங்காரம் குணம் ஆகிய அண்டங்களும், இவைக்குமேற் பிரகிருதியண்டமும், மேல் அராகம் வித்தை கலை நியதி காலங்களாகிய அண்டங்களும், மேல் அசுத்தமாயையும், அதன்மேல் சுத்தமாயையிற் சுத்த வித்தை மாகேச்சுரம் சாதாக்கியங்களும், அவைக்குமேற் பரவிந்து பரநாதங்களும், எண்பத்து நூறாயிரம் யோசனை கனமுள்ள பூமியும், கனிட்ட பாதலமும், கீழே ஆடகேசுரர்க்குப் புவனமாகிய ஏழு பாத

லங்களும், கூர்மாண்டரென்னும் உருத்திர புவனமுமாய் அண்டகடாக முட்டப்பட்ட புவனமும், இன்ன அண்டங்களனைத்திற்கும் ஆதார பூதமாய்ச் சிவசத்தியான ஆதாரசத்திக்கும் அப்பாலும் சிவத்தின் பூரண அளவு எல்லைப்படாததலால்,

"ஆதியுமந்தமுமில்லா வரும்பெருஞ்சோதி"

எனவும்,

"அப்பாலைக் கப்பாலைப் பாடுதுங்காண்"

எனவும் பெரியாருரைத்தவாற்று னுணர்க.

அங்குள்ளது எனின் இங்கில்லதெனவும், இங்குள்ளது எனின் அங்கில்லதெனவும், அங்கிங்குள்ளது எனின் எங்குமில்லதெனவும், எங்குமுள்ளது எனின் ஏற்றத்தாழ்ச்சியாயிருக்கிறதெனவும் ஐயப்பொருட்கு இடமாகாமே "அங்கிங்கெனாதபடி யெங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி" என வற்புறுத்திக் கூறினர்.

அநாதி முத்த சித்துருவாகிய பதிக்கு அருளே திருமேனி என்பதற்கு உதாரணம் :—

(சிவஞானசித்தியார், சூத்திரம் 1. பாட்டு 47.)

"உருவருள் குணங்களோடு முணர்வருளுருவிற் றோன்றுங்
கருமமு மருள ரன்றன் கரசர ணாதி சாங்கந்
தருமரு ளுபாங்க மெல்லாந் தானரு ளரக்கொன்றி ன்றி
யருளுரு வுயிருக் கென்றே யாக்குவ னமலன்றானே."

மற்றும் வருவனவற்றாற் காண்க.

தன் அருள் வெளிக்குள்ளே என்பது:—அங்ஙனம் தனது அருளாகிய வெளியினிடத்தே.

கடவுளின் பொதுக்குணங்களெட்டில் ஒன்றாகிய பேரருளுடைமை யெனும் பெயரைக் கொண்டு "அருள்வெளி" என்றனர். இதே பரவெளி. சிதாகாசமென்பதும் சிதம்பரமென்பதும் அதற்கே பெயராம். இதினின்றும் அண்டவெளி தோன்றி, யதினின்றும் மனவெளி தோன்றித் தோற்று முறையானே யொடுங்கும். மனவெளியென்பது மனம்விரிந்த இடம், அண்டவெளியென்பது ஒவ்வோரண்டத்தைச் சூழ்ந்திருக்கும் வெளி, பரவெளியென்பது எல்லாவற்றையும் தன்னு ளடக்கியிருக்கும் வெளியாம்.

அகிலாண்ட கோடியெல்லாம் தங்கும் படிக்கு என்பது:— அனந்தங் கோடி அண்டபுவனங்கண் முற்றும் பரிணமித்துத் தங்குமாறு.

இச்சைவைத்து உயிர்க்கு உயிராய்த் தழைத்தது எது ? என்பது:— அருளைக் கருதி இச்சையைவைத்து உயிர்கட்குள் உணர்வாகி விரிந்துள்ளது எப்பொருள் ?

அருள்வெளி என்பது தனது சந்நிதானமாம் ; ஆகவே, தனது சந்நிதான மாத்திரத்தாலே எல்லா வுலகங்களுந் தோன்றி விரிந்து அடங்குமென்பதாயிற்று. தனது அருள் ஆதியிலொன்றாயிருந்து, பின்னர் இச்சை ஞானம் கிரியைகளாகி, முறையே மலத்தான் மூடப்பட்டுள்ள ஆன்மாக்களுக்கு அருள்செய்தற் பொருட்டுவைத்த கிருபையை "இச்சைவைத்து" என்றும், தனது ஞானசத்தியால் அவர்களது நலத்தைவிரும்பி அறிதலை "உயிர்க்குயிராய்" என்றும், கிரியாசத்தியால் அவர்களுக்குத் தநுவாதி பிரபஞ்சங்களைத்தருதலை "தழைத்தது" என்றுங் கூறினர்.

ஆன்மாவும் இச்சை ஞானம் கிரியைகளை உடையனாயினும் அவற்றை அநாதியாகிய மலம் மறைத்து நிற்கும். மெய்ப்பொருளின் சக்திகள் ஒன்றானும் மறைக்கப்படாமல், தான் அவற்றின்முகமாக ஆன்மாவுக்குக் கன்மவளவையால் போகாதிகளைக் கொடுத்து, அவற்றால் தாக்கப்படாமல் தன்னந்தானே யறிந்து விளங்கு மியல்பிற்று. இதுவே அவ்விரண்டிற்கும் வேற்றுமை எனக் காண்க.

தனது சந்நிதிமாத்திரமின்றி யாண்டும் பிறிதோறிட மின்றாதலால் "அருள்வெளிக்குளே" என்று தேற்றப்பொருளிற் கூறினர்.

"இச்சைவைத் துயிர்க்குயிராய்த் தழைத்தது" என்றதற்கு உதாரணம்:—

(சிவஞானசித்தியார், சூத் 1. பா. 63.)

"ஒன்றதா யிச்சா ஞானக் கிரியையென் றொரு மூன்றாகி
நின்றிடுஞ் சத்தி யிச்சை யுயிர்க்கருணை மாகும்
நன்றலா ஞான சத்தி யானயந் தறிவ னாதன்
அன்றருட் கிரியை தன்னா லாக்குவ னகில மெல்லாம்."

தன் சந்நிதியின்கண் முத்தொழில்களும் நிகழுமென்பதற்கு உதாரணம்:—

திருவிளையாடற்புராணம், பாயிரம்.)

"பூவண்ணம் பூவின்மணம் போலமெய்ப் போதவின்ப
மாவண்ண மெய்கொண்டவன்றன் வலியாணை தாங்கி
மூவண்ண றன்சந்நிதி முத்தொழில் செய்யவாளா
மேவண்ண லன்னான் விளையாட்டின் வினையை வெல்வாம்."

மனவாக்கினில் தட்டாமல் நின்றது எது? என்பது:—மனத்தான் இத் தன்மைத்தென நினைத்தற்கும், வாக்கால் இன்னதென, உரைத்தற்கும் இயையா வண்ணம் அதீதமாய் நின்றது எப்பொருள் ?

இனம் நோக்கிக் காயத்தாலும் பற்றற் கமையாதெனவும் உரைக்க. இதனால் திரிகரணமெனும் தத்துவ மூன்றற்கும் மேலாய் நிலைபெற்றுள்ளது அப்பொருள் என்றதாம்.

இத்திரி கரணங்களிலும் அப்பொருள் தங்கியிருந்தும் அப்படி தங் கியிருப்பதை யுணராமலிருப்பதுந் தவிர, அஞ்ஞான விசேஷத்தால் தட்டுப் படாமலும் கூட விருக்கின்றதெனல்.

உள்ளேநின்று சங்கற்ப விகற்பங்களைச் செய்வதால் சலம் என்றும், இந்திரியங்களைப் புறத்தே விடயங்களிற் செலுத்துவதால் அசலம் என்றும் கூறப்பட்ட மனம் பிரகிருதியில் தோற்றம். சூக்குமை பைசந்தி மத்திமை வைகரி என்னும் நான்கு வாக்குகளும் விந்துவில் தோற்றம். இவை யெல் லாம் பசு பாச ஞானங்களின் வழிப்பட்டு இயங்கிப் பின்பு பதிஞானம் மேற் பட்டெழும் எழுச்சியின்கண் கீழ்ப்பட் டடங்குமாதலால், அவற்றில் "தட் டாமல் நின்றதெது" என்றார். இஃது நின்மலதுரியம். இந்நிலையின் கண் மனச்செயலும் வாக்கின் காரியங்களும் இல்லையாய் நிற்க, மேல் அவற்றோடு சிறிதுந் தாக்கற்றதாய்ச் சிவம் அதீதமாகி நிற்கும், என்பதாம்.

வாக்கு நான்கனுள் சூக்குமை விந்துவினுள்ளே அரும்பும் ; பைசந்தி இதயத்துள் மயின் முட்டையுட் சலம்போன்று மலரும் ; மத்திமை கண்டத் துள் சவிகற்பமா யுணரத்தக்க ஒலியாய்க் காய்க்கும் ; வைகரி வாயினின் றும் செவியிற் கேட்கப்படுவதாய்ப் பொருள்தரு மொலியாய்க் கனிந்து வெளிப்படும் ; இவை வாக்கின் உற்பத்தியாம்.

மனவாக்கு முதலியவற்றில் தட்டாதது என்றதற்கு உதாரணம் :—

[திருவிளையாடற்புராணம் நான்மாடக்
கூடலானபடலம்]

"பூதங்க ளல்ல பொறியல்ல வேறு
புலனல்ல வுள்ள மதியின்
பேதங்க ளல்ல வினையன்றி நின்ற
பிறிதல்ல வென்று பெருநூல்
வேதங் கிடந்து தடுமாறும் வஞ்ச
வெளியென்ப கூடன் மறுகில்
பாதங்க ணோவ வளையிந்த ஞாதி
பகர்வாரை யாயு மவரே."

மற்றும் வருவனவற்றாற் காண்க.

மன வாக்கினில் தட்டாமனின்றதற்கு மற்றொரு பிரகாரமாக வுரைப்பினுமாம்; அஃதாவது:—மனம் - மானதக்காட்சியும், வாக்கு - (வேதம் முதலிய வாக்காகிய) நூல்களும். இவை முதலிய அளவைகளாலும் பற்றப் படாதது என்பதாம். வாக்கினிலும் என உம்மை விரிக்க.

"ஆசிலாசார தபோதன ரின்புறு
வாசகாதீத மனோலய பஞ்சரன்"

என்றதனானு முணர்க.

சமயகோடிகளெலாம் தம் தெய்வம் எம் தெய்வம் என்று எங்கும் தொடர்ந்து எதிர் வழக்கிடவும் நின்றது எது? என்பது:—பல்வேறு சமயங்களெல்லாமும் தமது தமது தெய்வமென்றும், எமது எமது தெய்வமென்றும் முறையிட்டு, எவ்வெவ்விடங்களினும் ஒருவரையொருவர் விடாதுபற்றி எதிர்த்து வாதித்திடுமாறும், அவ்வச் சமயங்கடோறும் அவரவர்க்கடவுளராய் வீற்றிருப்பது எப்பொருள்?

எல்லாமென்பதில் உம்மை தொக்கது.

'வழக்கிடவும்' என்றதால் அவரவரும் சிந்திக்கவும் வாழ்த்தவும் வணங்கவும் நின்றது என வுணர்க.

பல்வேறு சமயங்களாவன:—உலகாயதம், பௌத்தம், சமணம், மீமாஞ்சை, மாயாவாதம், பாஞ்சராத்திரம், இவை புறச்சமயம், சைவம், பாசுபதம், வாமம், வைரவம், மாவிரதம், காளாமுகம், இவை உட்சமயம் இன்னும் காலேகவாத முதலிய பலவுமாம்.

இச்சமயங்கள் பலவாறு வாதிக்குந் தொடர்பனைத்தும் ஈண்டுச் சொல்லப்புகின் வரையறைப் படாமையின் அவற்றுட் சில சிலவே சுருக்கி யெடுத்துக் காட்டுதும்.

உலகாயதன் பிரபஞ்சத்துக்குத் தோற்றமு மொடுக்கமுமின்றி அது தானே தோன்றி யழியும் எனவும், வேறொரு கர்த்தா அதனையுண்டாக்கிக் காரியப்படுத்த வேண்டுவதில்லை எனவும் வாதிக்க, சித்தாந்தி அவைகளை மறுத்துரைப்பது.

பௌத்தரிற் சௌத்திராந்திகன் உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, விஞ்ஞானம் ஆகிய பஞ்சகந்தச் சார்பால் எல்லாந் தோற்றுமென வாதிக்க, பிறனொருவன் கருத்தாவன்றி ஒன்று நிகழாது என மறுப்பது.

காலேகவாதி காலமே கர்த்தா என்று வாதிக்க, அதை மற்றொருவன் மறுப்பது.

நையாயிக வைசேடிகர் பரமாணுவிலே பரிணமித்த பிரபஞ்சம் அழிந்து பரமாணுவான பின்னும் ஆந்மாவின் கன்மத்துக் கீடாகப் பிரபஞ்சமாகத் தோன்றி நின்று கழிந்திடும் என்றுவாதிக்க, அக்கன்மமும் அணுவும் அசேதனமாதலால் முறையறிந்து தாமாகவே தோற்றுவியாது அவ்வணுரூபமும் பிரளயத்திலே யழியும் என்றும், இப்பிரபஞ்சத்திற்கு உபாதானகாரணம் மாயையே என்றும் வாதிக்க, மற்றொருவன் மறுத்துத் தனது கொள்கையை நிறுத்துவது. இங்ஙனம் பலவாறு வாதிக்கப்படுவனவும் மறுக்கப் படுவனவுமாம். இவை முதலியன சமயகோடிகளின் வழக்குகள்.

சைவத்திற்குத் தாண்டவ பூஷணனென்னும் மூர்த்தியாயும், பாசுபதத்திற்குத் திருநீறுஞ் சடைமுடியுந்தரித்த மூர்த்தியாயும், மாவிரதத்திற்கு என்புமாலைதரித்த மூர்த்தியாயும், காளாமுகத்திற்குப் படிகமும் புத்திரதீபகமணியுந் தரித்த மூர்த்தியாயும், வாமத்திற்கு அக்கினியும் உபவீதமுந்தரித்த மூர்த்தியாயும், வைரவத்திற்குத் தமருகமும் சிலம்புந்தரித்த மூர்த்தியாயும், பாஞ்சராத்திரத்திற்குச் சங்க முதலிய ஐம்படையுந் தரித்த மூர்த்தியாயும், சாத்தேயத்திற்குச் சத்திமூர்த்தியாயும், இன்னும் பௌத்தாதிகளுக்குப் பௌத்தன் முதலிய மூர்த்திகளாயும் வீற்றிருந்து, அவரவர் நினைந்த வடிவோடுஞ்சென்று, எண்ணியாங் கெய்துவித்தும், தேகாந்தத்தில் முத்திப் பதங்கள் அருளியும் விளங்குவது. இஃதே அவ்வச் சமயங்களிலும் நின்றது என்பது. அங்ஙனம் தமிழ்வேதமாகிய தேவாரத் திருவருட்பாவும் "ஆறொன்றிய சமயங்களி னவ்வவர்க் கப்பொருள்கள் — வேறொன்றிலாதன" என முழங்குவதுங் காண்க.

எங்கணும் பெரு வழக்காய் யாதினும் வல்ல வொரு சித்தாகி இன்பமாய் என்றைக்கும் உள்ளது எது? என்பது:—இவ்வாறு யாண்டும் அறுதி பெருமையாயுள்ள வழக்காகி, எவ்வகைத் தொழிலினும் வல்லதாய் ஒப்பற்ற சித்துருவாகி, பேரின்பவடிவாகி, எக்காலத்தும் நித்தியமா யிருக்கின்றது எப்பொருள்?

ஓரிடத்தும். ஒருகாலத்தும் ஒருவரானும் ஒருவாற்றானும் அவரவர் கொள்கைகளும், உத்தேசம், இலக்கணம், சோதனை இவை முதலியவற்றால் வாதிக்கப்பட்டும், அநுவாதிக்கப்பட்டும், தோல்வி வெற்றிகளுண்டாய்ச் சிறிதும் ஒழிவு பெறுதல் அருமையாதல் பற்றிப் 'பெருவழக்கு' எனப்பட்டது. ஒருபொருண்மேல் இருவர் மாறுகொண்டு செல்லும் வழக்குப் போலாது, இது அவரவரும் அங்கங்கும் அவ்வக்காலத்துத் தத்தம் பல்வேறு கொள்கைகளை மேற்கொண்டு தொடர்வதாம்.

எவ்வகைத் தொழிலினும் வல்லது என்பது:—சிருட்டி - படைத்தல், திதி - காத்தல், சங்காரம் - துடைத்தல், திரோபவம் - மறைத்தல், அநுக்

கிரகம் - அநுக்கிரத்தல் என்னும் ஐந்தொழில்களும் வல்லமையுண்மை. எவ்வகைப்பட்ட தொழில்களும் இவ்வைந்தனுள் அடங்குமா றுய்த்துணர்க.

இவை தூலம் சூக்குமம் காரணம் என்பவற்றால் மூவைந்தாகும். அவற்றுள் மாயையினிடமாக உயிர்கட்குத் தநுகரணபுவன போகங்களைத் தருவது படைப்பாம்.

தநு—எண்பத்துநான்கு லட்சபேதமாம்.

கரணம்—சீவன் வித்தை சிவன் என மூவகைத்து விடயாதிகளை அறியுந்தன்மை சீவகரணமாம்.

உயிர்கள் போகங்களை நுகர்வதற்கு மூக்காலமாயும், அவற்றை வினைக் கீடாய் அளவிடுவதாயும், உயிர்கட்கு இச்சையாதி மூன்றனையும் எழுப்பும் சார்பாயும், தன்னையும் விடயத்தையும் வேற்றுமை யறியவொட்டாமல் மயங் கச் செய்வதாயும் இருக்கின்றது வித்தியா கரணமாம்.

ஆன்மாக்கட் கிருவினை யொப்பும் மலபரிபாகமும் சத்திநிபாதமும் வரு வித்து அவற்றை முத்தியிற் சேர்ப்பது சிவகரணமாம்.

வித்யாகரணத்தைப் பொருந்தி நடத்தும் புவனங்கள் இரு நூற்றிரு பத்து நான்காம்.

போகங்களாவன—சிவிகை குடை தேர் யானை குதிரைகளும், அறு சுவை மாதர்கீதம் முதலியனவுமாம்.

இவைகளுக்குட் சரீரத்தையும் கரணத்தையும் யான் என்றும், புவன போகங்களை எனது என்றும் உயிர்கள் கருதச் சுகாதிகளை யநுபவிக்கச் செய்தல் காத்தலாம்.

உயிர்களால் காணப்பட்டவற்றை ஒடுக்கல் துடைத்தலாம்.

இவற்றுட் பலநாளுழன்றும் வெறுக்காமல் ருசிப்பித்தல் திரோபவித் தலாம்.

பின்னர் நித்தியமும் அநித்தியமுமாகிய பொருள்களைப் பகுத்துத் தெரிவிப்பது அநுக்கிரகித்தலாம்,

இங்ஙனம் எண்பத்து நான்கிலட்ச பேதமான உடல்களினிடத்தே பரமகர்த்தா ஐந்தொழில்கள் செய்வது தூலமென்றும், அத்தூலவுடலில் அவத்தைக் கருவிகளில் ஐந்தொழில்கள் செய்வது சூக்குமம் என்றுஞ் சொல்லுவர்.

காரண பஞ்சகிருத்யம் குருமுகமாக வழிபட்டுக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டைகூடி அநுபவிக்குவ தாகலான், அம்முறையை அவ்வாறு

உணர்ந்து கொள்ளத்தக்கது. இவ்வண்ணம் எல்லாம் வல்ல சத்தும், சித்தும், இன்பமும் தானேயாம்.

இங்ஙனம் சத்து, சித்து, ஆனந்தமாகிய தனக்குச் சச்சிதானந்தனெனப் பெயராம்.

“என்றைக்கு முள்ளது” எனவே அப்பொருளில்லாத காலமில்லையென்றாயிற்று.

மேல் கங்குல் பகல் அற நின்ற எல்லை உளது எது ? என்பது:— சத்திநிபாதத்தின்கண் இரவும் பகலும் இல்லையாக நின்றதொரு நிலைக்களத்தே தானேயாயுள்ளது எப்பொருள் ?

‘மேல்’ என்பது வினை ஒப்பு மல பரிபாகத்துக்கு மேற்பட்ட இடம். அதுவே சத்திநி பாதமாம்.

‘ஆன்மா’ பயனின் முயற்சிகளையும் தேகபோகப்பற்றுக்களையும் முற்றத்துறந்து பிறிதொரு பயனையுங் கருதாமல் தத்துவங்களைச் சடமென்றறிந்து கழன்று, சத்தும் அசத்தும் பகுத்துணர் சத்தாயது ஆன்மாவென்றும், அவ்வாறு காட்டியது அருளென்றும் உள்ளுணர்ந்து, அவ்வருளைப் பற்றுதலாலும், நிட்டையிற் பெயராது நிற்றலாலும், முறையே மாயை கன்மங்களுக் கிடமாகிய சகலாவத்தையையும் ஆணவத்துக்கிடமாகிய கேவலாவத்தையையும் நீங்கின இடமாகிய சுத்தநிலையின்கண் போதஞ் சிறிதுந் தோன்றாமல் நிற்க, பலகோடி சூரியர் ஓரிடத் தொருங்கு தோன்றினாற்போல நீக்கமற நிறை பேரொளியாய்ச் சடசித்துக்களின் உள்ளும் புரம்புமாகிப் பூரண நிர்மல நிட்கள சொரூபமாக எங்கெங்கும் பரந்து விளங்கும். இச்சுத்த நிலையே இராப்பகலற்ற இடமென்றும், மறப்பு நினைப்பற்றவிடமென்றும், இன்னும் பலவாறாகவும் பெரியோர் கூறுவர்.

இவ்வெல்லைக்கண் மேலீடாய் நின்ற திருவருட் போகத்தையும், சிவத்தையும் எதிரிட்டுக்காணும் தற்போத நீங்கிச் சிவயோகமெய்துதல் முத்தான்மாக்கட் கியையுமென வேதாகமங்கள் கூறுவனவாம்.

இவ்வெல்லையே தாதநெறி முதலிய நான்கு நெறிகளுள் சன்மார்க்க நெறியாய், மகாமலப்பிணிப்புக் கட்டறுத்துச் சிவானந்தப் பெரும்பேறு மருவிப் பாச இரிவும் பதியிற் புகலுமின்றி ஒருநிலையாம் இயல்பு.

இதுவே ஞானவரம்பும், மௌனாரம்பமும், பேசாவநுபூதி பிறந்தவிடமுமாம், (உதாரணம்,)

(கொன்றைவேந்தன்.)

“மோனமென்பது ஞானவரம்பு”

(கந்தரநுபூதி.)

"தாசாமணியுந் துகிலும்புனைவா
ணேசாமுருகாநின தன்பருளா
லாசாநிகளந் துகளாயினபின்
பேசாவநுபூதி பிறந்ததுவே.

மற்றும் வருவனவற்றுற் காண்க.

தனக்கு வழித்துணையாகக் குடும்பபாரம் தலைக்கொண்டு அதன் பாது காப்பி னேக்கத்தால் நெடுங்கால மறிவுமழுங்கி, இனி எக்காலத்தில் யாண்டு ஓர் சுகங்கூடப் பெறுவலென் றேக்கமுற் றுள்ளயர்ந்து நோக்கி யிருந்தவன், தனதோர் நல்வினையுளதாக, ஒருநகரின்க ணிருந்தாங் கெய்திய முதியோனை யெதிர்ப்பட்டு வணங்கிக் குறையிரத்தலும், அன்னேனிரங்கி, "அஞ்சலை எனது அநுஞையாற்றுன் அந்நகர்க்க ணெய்துதியாயின் அந் நக ராதிபதி தயவினுற் சுகமேவாழ்வை" என வுபகரித்து வழிப்படுத்த, தானு மம்முதியோனைப் பணிந்து வழிகொண்டு, இடையிலுள்ள பல மிருகாதிக ளடர்ந்த மலை காடு யாறு கவர்நெறிகள் யாவும் பிற்பட அரிதிற் கடந்து சென்று அந்நகரி னெல்லைக்கணணுகலும், ஆண்டுள்ள செல்வக் கிளர்ச்சியை நோக்கி நோக்கி வியந்து, அந்நகரையணைந்து, மந்திரத் தலைவ னுதவியாற் புரவலனைக் கண்டிறைஞ்சி, அவன் தயவுபெற்று, அவன் அரசியனெறிநின்று நீடுவாழப் பெற்றேனுகி அங்கணியங்குங்கால், நேர்ப்படுகின்ற நகரின் எல்லையை நோக்குந்தோறும் இது தொடங்கியன்றே நமக்குச் சுகோதயப் பேறுண்டாயிற்றென்று அதன் பெருமையைக் கருதி அவ்வெல்லையையும் வந்தித்தல் செய்வாஞகை.

இக்கருத்தேபற்றிப் பெரியோர் கோயில் முதலிய திருப்பதிகடோறு மெய்தியக்கால் அத்தலங்களின் திருவெல்லையை முன்னர் வணங்கு மியல்பை அடியார் புராணந்தோறும் புராணகர்த்தர் கூறியிருப்பது. அம்முறை பிறழ்வின்றி, முத்தியினெல்லைக்கும் முத்திப்பதிக்கும் அணுக்கமான அநுசந் தான முள்ளதால், "எல்லை யுளது" என அக்குறிப்புண்மை புலப்படுத்து வான் நூலாசிரியரும் போற்றினர் போலும்.

"அது கருத்துக்கு இசைந்தது" என்பது:—அவ்வாறய மெய்ப் பொருளுணர்ச்சியே பதிவர்க்கம் பசுவர்க்கங்களின் கருத்தெவற்றிற்கும் ஒப்ப முடிந்தது.

"அதுவே கண்டன எலாம்" என்பது:—அம்மெய்ப்பொருளே தூல சூக்குமங்களாற் காணப்பட்ட பூதபௌதிகங்களாகிய விடய பதார்த்தங்க ளனைத்தும் ஆதலால்,

இஃது அசுத்த நிலையில் காணப்படுவதாகிய ஞேயமாம் ஆகவே சுத்த நிலையிற்காணப்படும் ஞேயமும் ஒன்றுண்டென்பதாயிற்று. இச்சுத்த நிலை மேற்கூறிய திருவருளையே கண்ணாகக்கொண்டு யாண்டுங் காணப்பட்ட வனைத்தும் சிவமேயாகவும், பிறிதொன்றின்றாகவும் காண்பதாம். உதாரணம்:—

"நவிலுங்கால்மேல்கீழ் நடுபக்கமெங்கும்
சிவமொழிய வேறில்லைதேர்."

என்பதனானும்,

"பார்ப்பனவெல்லாம் பரமாயறிதல்
சீர்ப்படுபேரறி வுடையோர்திறனே."

என்பதனானும்,

(சிவஞானசித்தியார். சூ-8. பா-30.)

"அறியாமை யறிவகற்றி யறிவி னுள்ளே
யறிவுதனை யருளினா லறியாதே யறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடுங்
கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாகிற்
பிறியாத சிவன்றானே பிரிந்து தோன்றிப்
பிரபஞ்ச பேதமெல்லாந் தானாய்த் தோன்றி
நெறியாலே யிவையெல்லா மல்ல வாகி
நின்றென்றுந் தோன்றிடுவ னிராதார னாயே."

மற்றும் வருவனவற்றானுங் காண்க.

"மோனவுரு வெளியது ஆகவும் கருதி அஞ்சலி செய்குவாம்" என்பது:—அம்மெய்ப் பொருளை மௌனரூபமான வெளியீடாகவும் தியானித்துக் கைகூப்பி வணங்குதல் செய்வாம். எ-று.

"வெளியது" என்பதில் "அது" பகுதிப்பொருள் விகுதி

"வெளியதாகவும்" என்றதால் எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி யருளொடு நிறைந்ததாகவும், இச்சையைத் துயிர்க்குயிராய்த் தழைத்ததாகவும், தட்டாமனின்றதாகவும், வழக்கிடவு நின்றதாகவும், என்றைக்கும் உள்ளதாகவும், எல்லையுளதாகவும், அதுவே கண்டவை வெலாமாகவும், தனித் தனிக் கருதி அஞ்சலிசெய்குவாம். அன்றியும் கடையிற் கூறியவாறாகவும் கருதி அஞ்சலி செய்குவாம் எனவும் உரைக்க.

இவ்வாறு கூறியவாற்றான் ஆதாரங்க ளனைத்திற்கும் அதீதமாகிய நிராதாரப் பரமகுருவை [தக்ஷிணாமூர்த்தியை] அஞ்சலி செய்தமை கண்டு கொள்க.

அதுவன்றி இந்நூலாசிரியர் தாம் சொல்லப்புகுந்த சுருதி குரு அநுப வங்களையும் அவற்றின் பயனையும் அருட்சார்பாய் நின்று ஒருவாற்று ணர்த்துவதாகிய இந்நூல் இனிது முடிதற் பொருட்டு "ஆகாரபுவனம் சிதம்பரரகசியம்" என்னுந் தொடர்நிலைக்கண் "எண்குணமுங்காட்டி" "சௌபான பக்ஷங்காட்டி" மந்திரஞ்சிக்ஷை சோதிடாதி மற்றங்க நூல் வணங்க மௌனமோலி யயர்வறச் சென்னியில் வைத்து ராசாங்கத்தி லமர்ந்தது வைதிக சைவமழகி தந்தோ!" இதுவன்றித் "தாயகம் வேறில்லை இல்லை" அருளைக் காட்டத்தக்க நெறியிந் நெறியேதான் சன்மார்க்கம்' என்றும், சின்மயானந்தகுரு என்னுந் தொடர்நிலைக்கண் "சிந்தாந்த முத்தி முதலே" என்றும், இன்னும் பலவிடங்களினும் பழிச்சுதல்செய்தபடி இவ் வாசிரியர்க்கு வேதாந்தத் தெளிவாகிய சித்தாந்தமே சிறப்புடைத்தாதலால் அஃதொன்றே உடன்பாடென்பது பெறப்படுகின்றது. உதாரணம் :—

(சிவஞானசித்தியார், சூத்-8. பா-15. 16.)

"வேதநூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள்
வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்கள்
ஆதிநூ லநாதியம லன்றருநூ லிரண்டு
மாரணநூல் பொதுச்சைவ மருஞ்சிறப்பு நூலா
நீதியினு லுலகர்க்குஞ் சத்திநிபா தர்க்கு
நிகழ்த்தியது நீண்மறையி னொழிபொருள்வே தாந்தத்
தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல்சைவம் பிறநூ
றிகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்த மாகும்."

"சித்தாந்தத் தேசிவன்றன் றிருக்கடைக்கண் சேர்த்திச்
செனனமொன்றி லேசீவன் முத்த ராக
வைத்தாண்டு மலங்கழுவி ஞான வாரி
மடுத்தானந் தம்பொழிந்து வரும்பிறப்பை யறுத்து
முத்தாந்தப் பதமலர்க் கீழ்வைப்ப னென்று
மொழிந்திடவு முலகரெல்லா மூர்க்க ராகிப்
பித்தாந்தப் பெரும்பிதற்றுப் பிதற்றிப் பாவப்
பெருங்குழியில் வீழ்ந்திடுவ ரிதுவென்ன பிராந்தி."

"மௌன உருவெளி" என்பதில் * குடிலை ஆகிய மூலமநு † வினின் றும் சிவம் சத்திகளின் திருநோக்கத்தால் வெளிவந்தருளிய முதற்கடவுள் என்பதும் அமைந்து கிடத்தலின், தொல்லோர் வழக்கின்படி தாமும் மெய்ப் பொருளை அம்முதற் கடவுளாகவும் கருதி அஞ்சலிசெய்தனர் என உரைத் தலு மமையும்.

* பிரணவம். ‡ மந்திரம்.

யோகிகள் மூலமநுவை மௌனக்ஷரமென்றும் மூங்கை எழுத்தென்றுங் கூறுவர். உதாரணம் :—திருமந்திரம்.

"ஊமையெழுத்தொடு பேசுமெழுத்துறி
லாமையகத்தினி லஞ்சுமடங்கிடு
மோமயமுற்றது வுள்ளொளிபெற்றது
நாமயமற்றது நாமறியோமே."

முதற்கடவுளாகிய மூத்தபிள்ளையார் மூலமநுவினின்றும் வெளி வந்தருளிய வரலாற்றை விநாயக புராணத்திற்கண்டு கொள்க.

அன்றியும், இந்நூலாசிரியர் மேலே "மௌனகுரு வணக்கம்" என்னுந் தொடர்நிலைக்கண் "மூலன்மரபில் வருமௌனகுருவே" என்று தமது ஆசிரியரை வழிபடுகின்றாராகலின், அத்துணை யியல்பு வாய்ந்த சிவமே தம்மையாட்கொள்வான் திருவுளங்கொண்டு மேற்கூறிய திருமூலநாயனார் மரபிற் குருவடிவாய் எழுந்தருளிவந்து தமக்குப் பந்த மோசனஞ் செய்வித்தமையை யுட்கொண்டு, அவரை ஈண்டும் வணங்குதல் செய்தபடி என்பதுங் காண்க.

இங்ஙனம் குறிப்பாற் பொருளுணர்த்துவது உள்ளுறை யணியாம்.

திருமூல நாயனார் ஸ்ரீ கயிலாயத்திலே ஸ்ரீ நந்திதேவரது அருள்பெற்று அணிமாவதி அட்ட சித்திகளினும் வல்ல சிவயோகியார். அகத்திய முனிவர் பாலுள்ள நட்பினால் அவருடன் சிலநாள் வசிக்கவேண்டிக் கயிலையினின்றுங் காசி சிதம்பர முதலிய அங்கங்குள்ள தலங்களைத் தரிசித்து வந்து, திருவாவடு துறைக்கண் பரமசிவத்தைப் பணிந்து, அத்தலத்தின்கண் வசிக்கவிரும்பிக் காவிரிக்கரைச் சார்பிலுள்ள வனத்தில் வரும்போது, அங்குதம்மைமேய்த்திருந்து அந்நாளிற் காலஞ் சென்றுவிட்ட மூலன் என்னும் பெயருள்ள வோரிடையனைச் சூழ்ந்து கதறிக் கொண்டிருந்த பசுமந்தையைக் கண்டிரங்கி, அவற்றின்றுயர் நீக்கற்பொருட்டுத் தமது யாக்கையை ஓரிடத்திற் சேமித்துவைத்து, அவனுடலிற் பிரவேசித்துப் பசுக்களை யன்று முழுதும் மேய்த்து, பின்பு அதனதனிடங்களில் அவற்றைப் போக்கி, கணவனிறந்தது தெரியாத இடையன் மனைவி வந்தழைக்கவும் மறுத்துவிட்டு, தாஞ் சேமித்து வைத்தவிடத்திற்போய் பார்க்க தமதுடல் அங்கில்லாமை கண்டு அது பரமசிவத்தின் அருளென் றுள்ளுணர்ந்து, தாம் பிரவேசித்த யாக்கையொடு சென்று, ஆவடுதுறைக்கண் பரமசிவத்தைத் தரிசித்து, கோயிலின் மேற்பாலுள்ள அரசமரத்தினிழற்கணமர்ந்து ஆகமங்

கள் கூறுகின்ற சரியையாதி நான்கு பாதங்களையும், ஆண்டுக்கொரு பாசுரமாக மூவாயிரந் திருமந்திரஞ் சொல்லி யருளினர். அவரது திருமரபிற் றோன்றிய மௌனகுரு சுவாமிகளின் மரபினரே இந்நூற் கருத்தராகிய தாயுமான முனிவர்.

"எங்கும் பிரகாசமாய் ஆனந்தபூர்த்தியாகி அருளொடு நிறைந்ததும்" "இச்சை வைத்து உயிர்க்கு உயிராய்த் தழைத்ததும்" "மனவாக்கினிற் றட்டாமல் நின்றதும்" "எங்குந் தொடர்ந்து எதிர்வழக்கிடவு நின்றதும்" "யாதினும் வல்லவொரு சித்தாகி இன்பமாய் என்றைக்கும் உள்ளதும்" கங்குல்பக லறநின்ற எல்லை யுளதும், ஆகிய இவ்வறுவகைத் தன்மைத்தாய பொருளொன்றே ஞேயத்தழுந்தின சீவன் முத்தர் கண்டனவெலாமாகு மாதலின், அதனை "மௌனகுரு வெளியதாகவும் கருதி யஞ்சலிசெய்குவாம்" என முடிக்க.

இவ்வாறனையும் வாய்பாடுகளாகக்கொண்டு நூன்முகத்தில் "பரிபூரணானந்தம்" என்னுந் தொடர்நிலை முதல் "சிற்சுகோதய விலாசம்" என்பதிறுதியாகிய பன்னிருதொடர் நிலைகளினும், அதன் வியாபக இலக்கணங்களை ஒவ்வொன்றிற் கிவ்விரண்டாக ஒருவாறு குறிப்பித்து, அம்மெய்ப் பொருளைப் பழிச்சல் செய்கின்றாரெனக.

அப்பன்னிரண்டின்மேற் கூறும் "சிதம்பர ரகசியம்" என்னும் தொடர் நிலையில் வஸ்து நிர்ணயமும், ஏனைத்தொடர் நிலைகளில் அதனைச் சார்ந்த பன்னெறிகளுங் கூறினர்.

அம் மெய்ப்பொருள் இவ்விதத் தன்மைத்தாய் விளங்குவதென்று நுவன்றதால் இதுபொருட்டன்மையணி. பொருள்வகை பின்னர்க் கூறுதும்.

இறைவன் ஆன்மாக்களுய்யும்பொருட்டுக் கடாக்ஷித்தருளிய வேதாகம நெறியைப் பற்றுதார்க்கன்றி, அந்நெறியைப்பற்றியவழி உளதாகும் தத்துவஞான முடையார்க்கு, தியான சமாதிகளாற் சீவன் முத்தத்துவப்பேறு கைவந்துள்ள தாயுமான முனிவர், தமது சிவானந்தானுபவத் தேர்ச்சியை ஒருவாறு புலப்படுத்துவான் எடுத்துக்கொண்ட இம் முதற்செய்யுள், சொற்கள் வாளா விரியாமையும், பொருள்கள் விபரீத ஐயங்கட் கிடமாகாமையும், சிரவணஞ் செய்வார்க்கு இன்பந்தருகையும், சீரிய சொற்களுடைமையும், சந்தச்சுவையுடைமையும், ஆழியகருத்தைக் கொண்டிருக்கையும், காரண காரிய முறைகளை யுடைமையும், சான்றோர் ஆட்சியோடு மாறுபடாமையும், சிறப்பாகியபொருட் பேற்றைப் பயத்தலும், காரணமுடையதாதலும் ஆகிய பத்தழகோடுங் கூடி நிற்கின்றது காண்க.

## 2-வது பாடல்.

ஊரனந் தம்பெற்ற பேரனந் தஞ்சுற்று
முறவனந் தம்வினையினால்
உடலனந் தஞ்செயும் வினைபனந் தங்கருத்
தோவனந் தம்பெற்றபேர்
சீரனந் தஞ்சொர்க்க நரகமு மனந்தநற்
றெய்வமு மனந்தபேதம்
திகழ்கின்றசமயமு மனந்தமத னானஞான
சிற்சத்தியா லுணர்ந்து
காரனந் தங்கோடி வருஷித்த தெனவன்பர்
கண்ணும்விண் ணுந்தேக்கவே
கருதரிய வானந்த மழைபொழியு முகிலைநங்
கடவுளைத் துரிய வடிவைப்
பேரனந் தம்பேசி மறையனந்தஞ்சொலும்
பெரிய மௌனத்தின் வைப்பைப்
பேசருமனந்தபத ஞானவா னந்தமாம்
பெரியபொருளைப் பணிகுவாம்.

"ஊரோ அனந்த (பேதம்)" என்பது:—ஊர்களோ அளவில்லன வாகிய பேதங்கள்;

பல்லாயிரகோடி அண்டங்களிலும் சேய்மை, அண்மை நடுவிற் பல வேறு வகையாய் அளவில்லனவாய் உள்ள ஊர்களாம்.

"பெற்றபேரோ அனந்த (பேதம்)" என்பது:—அவை கொண்டுள்ள பேர்களோ அளவில்லனவாகிய பேதங்கள்;

மேற்கூறிய ஊர்கள் பலவற்றுள்ளுந் தோன்றுந் தேகிகளுடையும் பேர்களோ அளவில்லனவாகிய பேதங்களெனினு மமையும்.

"சுற்றும் உறவோ அனந்த (பேதம்)" என்பது:—தேகிகளைச் சூழ்கின்ற உறவாதிகளோ அளவில்லனவாகிய பேதங்கள்;

உறவினராவோர் ஒருவரை யொருவர் சூழ்ந்து நத்தியிருப்ப 'சுற்றுமுறவு' எனப்பட்டனர்.

'சுற்றும் உறவு' என்றதால் அளவில்லனவாகிய பகையும் நொதுமலுங் கூட்டி யுரைத்துக்கொள்க. உறவாதிகளாவன:—மனைவி, மக்கள், தாய், தந்தையர் முதலிய பலர்.

"வினையினால் உடலோ அனந்த (பேதம்)" என்பது :—வினைகள் காரணமாகத் தோற்றும் உடல்களோ அளவில்லனவாகிய பேதங்கள் ;

'வினை' நல்வினை தீவினையென விருவகையாம். வினையினாலன்றித் தேகமெடுப்ப தில்லையாதலால் 'வினையினால் உடல்' என்றனர்.

உள்ளம் முதலியவற்றின் விவகாரமே யிருவினைக்குங் காரணம் ; அவ் வினைகளே பிறப்பிற்குக் காரணம் ; இவை மேல் நடு கீழ் ஆகிய மூவுல கத்தினும் தோற்றிக் கெடுவனவாம். தறு எண்பத்து நான்கிலக்க யோனி பேதமென வரை யறுக்கப்பட்டதேனும், ஒவ்வொரு பேதத்தினும் எண்ணி றந்த உடல்கள் தோன்றி அழிவனவாதலால் 'உடல் அனந்தம்' என்னப் பட்டது. தறு எண்பத்து நான்கிலட்ச யோனிபேத மென்பதற்கு உதாரணம் :—

சிவஞான சித்தியார்.

"அண்டசஞ் சுவேத சங்க ளுற்பிச்சஞ் சராயு சத்தோ
டெண்டரு நாலெண் பத்து நான்குநூ றாயி ரத்தா
யுண்டுபல் யோனி யெல்லா மொழித்துமா னிடத்து தித்தல்
கண்டிடிற் கடலைக் கையா னீந்தினன் காரி யங்காண்."

"செயும் வினையோ அனந்த (பேதம்)" என்பது :—அவ்வுடல்க ளோடு கூடியவுயிர்கள் செயுஞ்செய்கைகளோ அளவில்லனவாகிய பேதங்கள் ;

ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல், ஓம்பல், பயிறல், பயிற்றல், பொருந்தல், பொருத்தல், ஈட்டல், உழுதல், உழுதுவித் தல், காத்தல், அழித்தல், விரும்பல், வெறுத்தல், எதிர்த்தல், நள்ளுதல் முதலிய பல வேறுவகைப் படுவனவாம். மனோலய மாகுமளவும் செய் வினைக ளளவுபடாமையின் அனந்தமாயின.

கருத்தோ அனந்த (பேதம்)" என்பது :—தேகிகள் பலவாறு கருதும் எண்ணங்களோ அளவில்லனவாகிய பேதங்கள் ;

அவற்றை யீண்டு விரிக்கிற் பெருகும், தேவாரத் திருவருட்பாக்களிற் பரக்கக் கண்டுகொள்க.

"உண்பதுநாழி யுடுப்பது நான்குமுழம்
எண்பதுகோடி நினைந்தெண் ணுவன"

என்னும் ஔவையார் வாக்கானும்,

"ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல"

என்னும் திருக்குறளுக்குப் பரிமேலழகர் இயற்றிய விருத்தியானுங் கண்டுகொள்க.

செய்யுஞ் செய்கைகள் தேகாதி யவயவங்களாலாம், கருத்தும் எண்ணங்கள் மனாதி யந்தக் காரணங்களாலாம்.

இவ்வினைகளுங் கருத்துகளும் யோக முயற்சியையும் அக்கருத்தையு நோக்குங்கால் பயனில்லனவாய்க் கழியும்.

" பெற்ற பேர் சீரோ அனந்த (பேதம்) " என்பது :—மேற்கூறிய ஊர் முதலியவற்றைத் தத்தம் வினைக்கீடாய்ப் பெற்றவர்களது செல்வமுதலிய வையோ அளவில்லனவாகிய பேதங்களாம் ;

செல்வ முதலியவற்றின் எதிராகிய வறுமை முதலிய பேதங்களுங் கொள்க.

" சொர்க்கமோ நரகமுமோ அனந்தபேதம் " என்பது :—(தேகிகள் அவ்வவ் வந்தத்திலடையும்) முத்திபதங்களும் நகரங்களும் தனித்தனி அளவில்லனவாகிய பேதங்கள் ;

சொர்க்க நரகங்கள் புண்ணிய மிகுதியானும் பாவமிகுதியானும் அடையப்பட்டவையாம் ; ஆகவே, நடுவாகிய கன்மபூமி அவ்விரண்டனையும் சமமாக அநுபவிக்கும் இடமென்பது காண்க.

சொர்க்கங்களாவன :—இந்திரன் முதலிய இறைவர் பதங்களாம்.

நரகங்களாவன :—கனிட்ட பாதலங்கட்கும், அசுரகண்டம் சர்ப்ப கண்டம் இராக்கதகண்டம் இவை ஒவ்வொன்றும் மும்மூன்றாயுள்ள எழு பாதலங்கட்கும் கீழே அடுக்காயுள்ள இரௌரவம், கும்பிபாகம், அபிசிகம் முதலிய அநேக பேதங்களாம்.

செய்கையுங் கருத்து மளவில்லனவாதலின் அவற்றாலடையும் பலனாகிய சொர்க்க நரகமு மளவில்லனவாம்.

" நற்றெய்வமமோ அனந்த (பேதம்) " என்பது :—(அவரவர்களும் பூசிப்பதுப் போற்றி அங்கங்கும் வழிபாடு செய்யும்) நன்மையுள்ள தெய்வங் களோ அளவில்லனவாகிய பேதங்கள் ;

தம்மை வழிபடுகின்றார்க்கு இயன்றவாற்றாற் பேற்றை யளிக்கின்ற உண்மைநோக்கி ' நற்றெய்வம் ' என்றார்.

பரமார்த்தாய தெய்வம் ஒன்றேயாயினும் தேகிகள் பல வேறுவகை யாகியும், அவர்கள் மனோவாக்குக் காயங்களால் அர்ச்சிக்குங் கர்மம் அள

விலாப் பேதங்களை யுடையனவாகியு மிருக்கையால், அவ்வவற்றிற்கேற்பச் சுகதுக்கங்களை யூட்டு நிமித்தம் பகவான் திருவிளையாடலாக அனந்த கரும காண்டங்களை நியமித்து அனந்த வுருவங்களைக் கொண்டிருத்தலால் ' தெய்வ முமனந்தம் ' என்றார்.

" திகழ்கின்ற சமயமுமோ அனந்த (பேதம்) என்பது :—(முடிவுபெறாமல் அங்கங்கும்) விளங்காநின்ற சமயங்களுமோ அளவில்லனவாகிய பேதங்களாம் ;

அவ்வச் சமயங்களும் வாதிக்கப்பட்டு ஒழிவு கூடாமல் அனந்தமான அளவைகளைக்கொண்டு நிற்கின்றன ; ஆதலால், " திகழ்கின்ற சமயமும் " என்றார். உதாரணம் :—அவிரோத உந்தியார்.

" ஒன்றேடொன்றொவ்வா மதங்களொன்றினொற்
பொன்று வதில்லையே லுந்தீபற
பொய்யென்பதெத்தை நாமுந்தீபற "

பூர்வத்திற் சமயங்க ளறுவகையா யிருந்தன. உதாரணம் :—
திருமந்திரத் திருவருட்பா,

" ஒன்றதேபேரூர் வழியதற்காறுள
தென்றதேபோலு மிருமுச்சமயங்க
ணன்றிதுதீதிது வென்றுரைமாந்தர்கள்
குன்றுகுரைத்தெழு நாயையொத்தாரே."

என்பதனாலும்,

" முதலொன்றானை முதுகுடன்வாலுந்
திதமுறுகொம்பு செவிதுதிக்கைகான்
மதியுடனந்தகர் வகைவகைபார்த்தே
யதுகூறலொக்கு மாறுசமயமே "

என்பதனானு மறிக. இவை அகச்சமயமெனக் கொள்க.

பிற்காலத்தில் இச்சமயங்களினின்றும் பலவேறுவகைப் புறச்சமயங்கள், அகப்புறச்சமயங்கள், புறப்புறச்சமயங்கள் முதலிய வுற்பத்தியாகி யொவ்வொன்றினின்று மனேக சமயங்களுண்டாகி யிருத்தலான் ' சமயமு மனந்தம் ' என்றார்.

தெய்வபேதமும் சமயபேதமும் சிற்சில முன்னருரைக்கப் பட்டன.

" அதனால் " என்பது :—(இங்ஙனம் மேற்போந்த ஊர் முதலியவைகளின் ஒவ்வொன்றின் பேதங்கள் எண்ணில் அடங்கரியனவா யிருக்கும்) தோன்மையினாலே,

"ஞான சிற்சத்தியால் உணர்ந்து" என்பது :—ஞானமே திரு மேனியாகியும் உயிருக்கு ஒளியாகியு மிருக்கும் சிற்சத்தி யருளால் கூறிய விடயங்களையும் இனிச்சொரூபத்தையும் பாகுபட்டா லறிந்து,

அநாதியே ஆன்மாவை இருவகை மறைப்புக்களாய் விஷய சொரூபங் களை மறைத்துள்ளது ஆணவமலமாம். ஆணவத்தினிலக்கணம் சித்தியாரிற் றெற்றெனக் காண்க.

உயிர்க்குப் பரிபாகமேறுவான் தநுகரணாதிகளைக் கொடுத்து முன்னர் விடயமறைப்பை நீக்கவும், பின்னர்ச் சுருதியாற் சொரூப மறைப்பை நீக்கவும் அவ்விருவகை ஞானங்களையுந் தருவது அருட்சத்தியே யாகலாற் 'சிற்சத்தி யாலுணர்ந்து' என்றது,

எனவே, அவ்வுயிர் உணர்த்த உணரு மாத்திரையேயன்றித் தனக் கென வேறொரு சத்த மில்லாததான சிற்றறிவினதா மாகலான் அவ்வாறு கூறப்பட்டது. கூறவே நித்தா நித்தப்பொருள்களை அருண்முன்னீடா யறிந்து என்பதாம். இவ்வாறுணர்தல் சீவன் முத்தத்துவமாம். உதாரணம்:

அவிரோதவுந்தியார்.

"பல்சித்திமுத்தி பரனாலடைதலாற்
றொல்சீவருமுளா ருந்தீபற
சுதந்தரகீனரென் றுந்தீபற."

(சிவஞான சித்தியார, சூத் - 8. பா—28.)

"சூரியகாந் தக்கல்லி னிடத்தே செய்ய
சுடர்தோன்றி யிடச்சோதி தோன்று மாபோல்
ஆரியனா மாசான்வந் தருளாற் றோன்ற
வடிஞான மான்மாவிற் றோன்றுந் தோன்றத்
தூரியனாஞ் சிவந்தோன்றுந் தானுந் தோன்றுந்
தொல்லுலக மெல்லாந்தன் னுள்ளே தோன்று
நேரியனாய்ப் பரியனுமா யுயிர்க்குயிரா யெங்கு
நின்றநிலை யெல்லாமுன் னிகழ்ந்து தோன்றும்."

"கார் அனந்தம் கோடி வருஷித்தது என" என்பது :—அளவில்லை வாகிய மேகசாலங்கள் ஒருங்குசேர்ந்து ஏககாலத்தில் இடையறாமற் பொழிந் தனபோலு மென்னும்படி.

"அன்பர் கண்ணும் விண்ணும் தேக்க" என்பது :—அன்பர்கள் கண் களும் அவைநாடும் ஞானகாயமுந் தேங்குமாறு.

"கருதரிய ஆநந்தமழை பொழியும் முகிலை" என்பது :—நினைத்தற் கியையாத ஆனந்தப் பெருமழையை விடாது பொழியாநின்ற நிலைமைத்தாய முகிலை.

"அன்பர் கண்ணும் விண்ணுந் தேக்கப்" பொழிமானந்த மழையை யேனையோர் மனத்தினாலேனு மதித்தலு மரிதாகலான் "கருதரிய" என்றார்.

சம்வர்த்தம் முதலிய எழுமேகங்களும் மணி முதலியவன்றி ஆனந்த மழையைப் பொழியமாட்டா வாகலானும் இது அவை போலாது கருணை மழையைப் பொழிவ தாகலானும், இம்மழை பொழியக்கண்ட அன்பர்க்கு ஒரு நினைவு முண்டாய்ச் சலியா தாகலானும், "கருதரிய ஆனந்தம்" என்றார்.

இவ்வாறு வருவது அற்புத உருவக அணியாம்.

கைம்மாறு எதிர்பாராது நீரைச்சொரிந்து உலகுயிரைக் காக்கும் மேகம் போல அருண்மழையைப் பொழிந்து ஆன்மகோடிகளை யீடேற்றலால் "முகிலை" என்றார்.

"நம் கடவுளை" என்பது :—நமது கடவுளை.

"கடவுள்" என்பது எல்லாவற்றையுங் கடந்துள்ளதாகலாற் காரண குறியாயிற்று.

எல்லாவற்றையும் கடந்துள்ளதாவது :—பூத முதலிய இருபத்துநான்கு தத்துவங்களும் பிரகிருதியி லொடுங்க, புருட தத்துவ முதலியன மாயையி லொடுங்க, சுத்தவித்தை முதலியன விந்துவிலொடுங்க, சத்தி சிவங்களின் கூறுகிய அபரவிந்து அபரநாதங்கள் சுத்தமாயையிலொடுங்க, இவை யெல் லாங் கடந்து நின்றது சுத்த சிவம் ஆதலால் கடவுள் என்னப்பட்டது உதாரணம் :—

(சிவஞான சித்தியார், சூத் - 2. பா—72.)

"மொய்தரு பூத மாதி மோகினி யந்த மாகப்
பொய்தரு சமய மெல்லாம் புக்குநின் றிடும்பு கன்று
மெய்தரு சைவ மாதி யிருமூன்றும் வித்தை யாதி
யெய்துதத் துவங்க ளேயு மொன்றுமின் றெம்மி றைக்கே."

ஞேயத்தழுந்தின சீவன் முத்தரான தம்மைப்போலச் சிவ சந்நிதி யநுசந்தான முடையோரையும் உள்ளிட்டுக் கொண்டு "நமது கடவுள்" என்று சுதந்தரித்துக் கூறினர். அங்ஙனங் கூறின் சங்கற்ப விகற்பங்கள்

தோன்றுமே யென்னும் பேதம் சிறிது மில்லாராகலால், உடைமையை உடைப் பொருளாக "நமது" என வுபசரித்தனர். அன்றி மலபரிபாகத் தின்மேல் ஞானம் பிரகாசித்துச் சதாசாரியன் அருளால் நிட்டை கைகூடிச் சீவன் முத்தராய் விகற்பமின்றி ஓடும் பொன்னும் ஒப்பக்கண்டு, மெய்ப் பொருளின் வியாபகத்தில் வியாப்தமாகப் பொருந்தி அதனை நீங்காம லுடைந்தையாய் அதனையே நோக்கி யிருக்கை அவர்க்கியல்பாகலால், அவ்வாறு கூறவுங்கூடும் எனக்கோடலுமொன்று. உதாரணம் :—

(சிவஞான சித்தியார், சூத் - 8. பா—29.)

"மிக்கதொரு பக்குவத்தின் மிகுசத்தி நிபாத
 மேவுதலு ஞானம்விளைந் தோர்குருவி னருளாற்
புக்கனுட்டித் தேநிட்டை புரிந்து ளோர்கள்
 பூதலத்திற் புகழ்சீவன் முத்த ராகித்
தக்கபிரி யாப்பிரிய மின்றி யோட்டிற்
 றபனியத்திற் சமபுத்தி பண்ணிச்சங் கரனோ
டொக்கவுறைந் திவரவனை யவனிவரை விடாதே
 யுடந்தையாய்ச் சிவன்றேற்ற மொன்றுமே காண்பர்."

"துரியவடிவை" என்பது :—துரியஞான சொரூபத்தை.

எல்லாவற்றையும் தன்னியல்பானேயறிந்து, ஆன்மாக்களை அறிவிக்கு மதே துரியஞானமாம். துரியம் மேலான ஞானமாம், நிர்மலாவத்தையிலே தற்சொரூப தரிசனந் தோன்றுவது துரியம். அஃது அறிவே மயமா யிருத்தலாம். இவ்வாறு தோற்றுவித் தருளியதாகலின "துரியவடிவு" என்றார். உதாரணம் :—

(திருமந்திரத் திருவருட்பா.)

"அறிவறி கின்ற வறிவு நனவா
மறிவறி யாமை யடையக் கனவா
மறிவறி வவ்வறி யாமை சுழுத்தி
யறிவறி வாகு மான துரியமே"

என்பதனானும்,

"சிவமா யவமான மும்மலந் தீரப்
பவமான மூப்பாழைப் பற்றறப் பற்றத்
தவமான சத்திய ஞானனந் தத்தே
துவமார் துரியஞ் சொரூபம தாமே."

என்பதனானும்,

"பரம குரவன் பரமெங்கு மாகித்
திரமுற வெங்கணுஞ் சேர்ந்தொழி வற்று
நிரவு சொரூபத்து ணீடுஞ் சொரூப
மரிய துரியத் தணைந்து நின்றானே."

என்பதனானுங்காண்க.

"பேர் அனந்தம்பேசி மறை அனந்தம் சொலும்" என்பது :—அள வில்லனவாகிய அபிதானங்களை யெடுத்து எண்ணிலவாகிய வேதாகமங்கள் ஏத்தாநின்ற,

பேரனந்தமாவன :—நிர்க்குணம், நிராமயம், நிரஞ்சனம், நிராலம்பம், நிர்விடயம், நிட்களம், அசங்கம், நிர்வசனம், நிர்த்தொந்தம், நித்தம், முக்தம், தற்பரம், விசுவாதீதம், பரிபூரணம், சுயம்பு, சிவம், பதி, பரம், அபரம், பராபரம், அந்நியம், அநந்நியம், தற்பதம், பரபதம், அநுபூதி, பரமாகாயம், அற்புதம், நிரதிசயம், தேசோமயம், சின்மயம், சிற்பரம், ஆதி, அநாதி, ஏகம், அநேகம், அகண்டம், பரஞ்சோதி, மாயாதீதம், சுகாதீதம், வன்னி, ரேதா, சத்தியன், அரு, உரு, புருடன், புருட்டுதன், புருகூதன், மெய், சத்து, பரமான்மா, பரதத்துவன், பரப்பிரமம், யாக முதல்வன், மும்மண்டலேசன் முதலிய பலவும், பலவேறு சமயிகள் கூறுவனவும், அன்பர்கள் துதிப்பனவும் ஆம்.

மறையனந்தமாவன :—நான்கு வேதங்கள், அவற்றின் சாகைகள், இருபத்தெட்டு மூல ஆகமங்கள், இவற்றின் பிரிவுகள், உபாகமங்கள், இவற்றின் பகுதி விகுதிகள் முதலியவையாம். தாரகம் காயத்திரி முதலியன பகுதிகளும், அங்கம், கலைகள் முதலியன விகுதிகளும் ஆம்.

"மறை அனந்தம்" என்பதற்கு உதாரணம் :—

"இன்னவை யிரண்டு மிவனருள் வலியா
லீன்றநான் மறையைய் நான்கும்
பின்னிவ னருளா லளவில வான
பிரணவ மாதிமந் திரமும்
அன்னவா றன தாரகத் தகார
மாதியக் கரங்களு முதித்த
சொன்னவக் கரத்திற் சிவாகம நூலிச்
சுரவர னடுமுகத் துதித்த."

தேகிகள் பக்குவத்திற் கேற்பக் கடவுணிலை பலவாக வேதங்கள் சொல்லி யிருத்தலின் "மறையனந்த மாகச்சொலும்" எனப் பொருள் கோடலு மொன்று. உதாரணம் :—

(அஞ்ஞவதைப்பரணி.)

" பலபலவாய்ச் சொல்லுநெறி யெல்லாஞ் சொல்லப்
பட்டதொரு பொருளினையாம் பணிதல் செய்வாம்."

(அவிரோதவுந்தியார்)

" சுருதிகள் சொல்பல் சமயத் துணிவுமப்
பரசிவ பந்தமென் றுந்தீபற
பகர்நாமம் வேறுவே றுந்தீபற."

மற்றும் வருவனவற்றுற் காண்க.

"பெரிய மௌனத்தின் வைப்பை" என்பது:—பெருமைத்தாய மௌன நிக்ஷேபத்தை,

பண்டையோ ருகத்தின் கண், சனகராதி நான்கு பிரம விருடிகளும் பரம சிவத்தைப் பிரார்த்தித்து " எங்களறிவு அமைந் தடங்கும் வகைமையை அடியேங்கட் குணர்த்தியருளுதி " என விண்ணப்பஞ்செய்ய, அதனைத் திருவுள்ளத்தடைத்து, கல்லாலி னீழற்கண் வீற்றிருந்து, வேதாந்தத் தெளிவாகிய ஆகமத்தியம்பும் திரிபதார்த்த வியல்புகளையு முபதேசித்தருளலும், அதனைக் கேட்டுணர்ந்து பின்னரும் " அறிவமைந் தடங்குதற்கு இன்றியமையாக் கருவியாகிய ஞான போதகத்தையும் போதித்தருளல் வேண்டும் " என்ன, பரமகுரவன் புன்முறுவலரும்பி அதற்குயாதும் எதிர் கூறுஞகி ' அதுவாயாற் புகல்வதன்று, இவ்வண்ணமிருக்கையே அந்நிலையாகும் " என்று அவர் கட்கு உணர்த்துவாஞகித் தனது திருமார்பின் கண் ஒருகையைச் சேர்த்து, ஒருகையில் மோன முத்திரையைக்காட்டி, யோகியர்போல நின்றபடி அவரும் அவ்வாறுணர்ந்து அறிவொடுக்கம் பெற்றுரென்ப. இங்ஙனமாகிய மோனத்தினிலையுந்தானே யாகலானும், அதுவே பரமுத்தியாகிய வைப்பாகலானும், " பெரிய மௌனத்தின் வைப்பு " என்றார்.

மௌனநிலையி லிருப்போர் அடையும் நிட்சேபத்தை யெனினுமாம். உதாரணம் :—

(கண்ணுடைய வள்ளலார்.)

" தானே சிவமான சத்தியஞா னானந்த
மோனநிலை சொல்காழி முன்னேனே. "

என்பதானும்,

" மாயைமயக் கற்றறுத்தற் போத மற்று
மவுனநிலை யுற்றோர்கள் பெற்ற பேறே. "

என்புதானுமறிக.

“ பேசரும் அனந்தபதம் (அனந்த) ஞானம் (அனந்த) ஆனந்தம் ஆம் ” என்பது :—பேசற்கரிய அந்தமில்லாததான, பதமும் அந்த மில்லாததான ஞானமும், அந்தமில்லாததான ஆனந்தமுமே தனது மெய்யாகின்ற,

முடிவில்லா தனவாகிய பதத்தையும், ஞானத்தையும், ஆனந்தத்தையும் மனதிற்கொளலே வெகு அருமை, அவற்றை வாக்கினால் வசனித்தல் அதினுனு மருமையாதலால் “ பேசரும் ” என்றார்.

அனந்த பதமாவது :—முடிவில்லா நித்தமுத்தியாம் அது கேவல சகலங்கள் நீங்கி, அருளைத் தரிசித்து, காண்பானுங் காட்சியுமா யறிந்துவந்த தற்சுதந்தரத்துவமும் விட்டு, தற்போதமும் நீங்கி, ஆனந்தாநுபவம் பெற்று, ஒன்றுந் தானாகாமல் ஒன்றாயிருந்த சிவத்தில் இரண்டறக்கலந்து, போத வாசனையு மொழிந்த சுகாதீதமாகிய நிலையாம் ; ஆகலின் “ பேசருமனந்த பதம் ” என்றார். இந்நிலையே சிவயோகசிவ போகங்களாம்.

அனந்த ஞானமாவது, முற்றுமுணர்தலாம்.

அனந்த ஆனந்தமாவது :—வரம்பிலின்ப முடைமையாகிய பரம சுகமாம். அவை முறையே வேதாகமங்களை யருளிச் செய்தமையையும், திவ்யாகமத்தின் வழியே செல்வார்க்கு வினைகளை யொழித்து அநுக்கிரகிக்கின்றமையும் ஆமெனக்காண்க.

இனம்பற்றித் தன்வயத்தனாதல் முதலிய ஏனைய ஆறு குணங்களையுங் கூட்டியுரைக்க.

அவையாவன :—

“ தன்வயத்தவன் றூயவுடம்பினன்
றுணி யற்கை யுணர்வின னாகுதல்
பன்னு முற்ற வுணர்த லியல்பினன்
பாச நீங்குதல் பேரரு ளாகுதல்
மன்னு மீறில வாற்ற லுடைமையும்
வரம்பி லின்பமு மாகிய வெண்குணம். ”

என்பனவாம்.

“ பெரிய பொருளைப் பணிதுவாம் ” என்பது :—பரம கர்த்தாவை வணங்குவாம்,

இப்பொருளினும் உயர்வும் ஒப்புமுள்ளது பிறிதொன்றின்மையாக இஃதே எல்லாவற்றிற்கும் பெரியதாகலான் “ பெரியபொருள் ” என்றார் பூராதியண்டப்பரப்பு அனைத்தும், அவற்றுட் சராசரமனைத்தும் விரிக்கின்

பசுபாசங்களுளடங்கும்; இவ்விரண்டும் பதியிலடங்கும், அடங்கவும் தான் சுதந்தரனாய் அவைக்கெல்லாமாதாரமாகி அவற்றொடு தாக்கற்று நிற்பதால் எல்லாவற்றிற்கும் பெரிய பொருளாம். உதாரணம் :—

(அவிரோதவுந்தியார்.)

"பல்லோர் துணிவும் பாரதிமூன் றுந்தேர்த
லல்லால்வே றில்லெனு முந்தீபற
வவரவர் கொள்கை வேறுந்தீபற."

ஊர்முதற் சமயம் ஈறுயுள்ள விடயங்கள் தனித்தனி அனந்தம் என்னும் பேதங்களாயுள்ளன; அவற்றின் தோற்றக் கேடுகளைச் 'சிற்சத்தியா லுணர்ந்து' 'ஆனந்த மழைபொழியுமுகிலும்' 'நம் கடவுளும்' 'துரியவடிவும்' 'பெரிய மௌனவைப்பும்' 'அனந்தபதமும் அனந்தஞானமும்' 'அனந்தானந்தமும்' ஆகிய பெரிய பொருளைப் பணிகுவாம் என முடிக்க.

இது சிவத்தைப் பணிந்தது.

'கருத்தோ அனந்தம்' என்பதிலுள்ள ஓகாரத்தையும், 'நற்றெய்வமும் அனந்தபேதம்' என்பதிலுள்ள 'பேதம்' என்னும் சொல்லையும் எல்லாவற்றோடுங் கூட்டுக.

'தெய்வமும்' 'சமயமும்' என்பவற்றுள்ள உம்மைகள் சிறப்பும்மை; மற்றவை எண்ணும்மைகள்.

---

## 3 - வது பாடல்.

அத்துவித வத்துவைச் சொர்ப்ரகா சத்தனியை
யருமறைகன் முடிசறையவே
அறிவினுக் கறிவாகி யானந்த மயமான
வாதியை யநாதியேக
தத்துவ சொரூபத்தை மதசம்மதம் பெறுச்
சாலம்ப ரகிதமான
சாசுவத புட்கல நிராலம்ப வாலம்ப
சாந்தபத வ்யோம நிலையை

நித்தநிர் மலசகித நிஷ்ப்ரபஞ்சப் பொருளை
நிர்விஷய சுத்தமான
நிர்விகா ரத்தைத் தடத்தமாய் நின்றெளிர்
நிரஞ்சன நிராமயத்தைச்
சித்தமறி யாதபடி சித்தத்தி நின்றிலகு
திவ்யதே சோமயத்தைச்
சிற்பர வெளிக்குள்வளர் தற்பரம தானபர
தேவதையை யஞ்சலிசெய்வாம்.

"அத்துவித வத்துவை" என்பது :—சிவத்துடன் இரண்டற அநாதியே கலந்துள்ளதாகிய பொருளை,

பண்ணும் ஓசையும், பழமும் சுவையும், அவற்றினின்றும் வேறன்றும், அவைபோல அபின்னமாகக் கலந்திருக்கின்றதால் வத்துவை யேக மென்னுமலும் துவிதமென்னுமலும், சுருதி கூறிய வண்ணம் "அத்துவிதம்" என்றார்.

உதாரணம் :—(வள்ளலார்.)

"அத்துவித மொன்றேயா மாங்கிரண்டின் மையெனி
லத்துவித மன்றேவது." என்பதனாலும்,

(திருமந்திரம்)

"அன்பு சிவமிரண் டென்ப ரறிவில
ரன்பே சிவமாவ தாரு மறிகில
ரன்பே சிவமாவ தாரு மறிந்தபி
னன்பே சிவமா யமர்ந்திருப் பாரே," என்பதனானும்,

"அத்துவிதப் பொருளென் றாரணங்களோதுகின்ற
சச்சிதா னந்தத் தனிப்பொருளை."

என்பதனானு முணர்க.

'பக்குவான்மாக்களைச் சிவத்துடன் அத்துவிதப் படுத்துவதாகிய வத்துவை' எனலுமாம். இது பக்குவமுடையவருக்கு இருவினையொப்பு மலபரிபாகமுண்டாகச் சத்திநிபாதம் விளைந்தவழி மானைக்காட்டி மானைப் பிடிப்பதுபோலச் சிவமே மானிடவுருவமேந்திச் குருமூர்த்தமாயெழுந் தருளி, அவர்கள் உடல்பொருள் ஆவியாகிய மூன்றையுங் கைக்கொண்டு,

ஞானவனுக்கிரகஞ் செய்து, மும்மலங்களை நீக்கி, அவர்களைத் தன்னோடு சுத்தாத்துவித நிலையை யடையச் செய்தலாம். உதாரணம் :—

(அவிரோதவுந்தியார்.)

" மாய்க்கு நோய்க்கன்றே மருந்தீகுவாரின்மா
றேய்க்குமோர் பக்குவற் குந்தீபற
தேசிக னய்ச்சிவ முந்தீபற. "

(வள்ளலார்.)

" குருவுருவங் கொண்டிக் குவலயத்துட் டோன்றிப்
பருவரலை நீக்கும் பரன். "

(திருவாசகம்.)

" அருபரத் தொருவ னவனியில் வந்து
குருபர னாகி யருளிய பெருமையைச்
சிறுமையென் றிகழாதே. "

எனவரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

இவ்வாறு அத்துவிதப்படுவதே வீடு. உதாரணம் :—

(திருவாய்மொழி.)

" நன்றாய் ஞானங் கடந்துபோய்
நல்லிந் திரிய மெல்லாமீர்த்
தொன்றாய்க் கிடந்த வரும்பெரும்பா
ழுலப்பி லதனை யுணர்ந்துணர்ந்து
சென்றாங் கின்ப துன்பங்கள்
செற்றுக் களைந்து பசையற்றா
லன்றே யப்போ தேவீ
டதுவே வீடு வீடாமே.

என்பதனானும்,

(சிவானந்தமாலை.)

" மித்தையுடற் கட்டறுத்து மெய்யருளாய் மெய்பொழிக்குந்
தத்துவமுங் கேவலமுஞ்சார் வகற்றிச்—சுத்தத்
தனியாகித் தானும்போய்த் தற்பரமாய் விட்டாற்
சென்னியானிது சத்தியம் " என்பதனானும்.

(அவிரோதவுந்தியார்.)

" அந்தப் பாத்தோ டிரண்டற் றயிக்கமா
மந்தநன் னிட்டையே யுந்தீபற
அத்துவித வீடென் றுந்தீபற."

என்பதனானுமுணர்க.

'வீடு' என்பதற்குப் பொருள் :—விடுதலை. விடுதலையாவது பந்த நீக்கமாதலின் பந்தமொன்று உண்டென்பதும், அஃது உண்டாகவே பந்தத்தினாலே கட்டுப்பட்டிருந்து அதினின்றும் விடப்படுவான் உண்டென்பதும், பந்தம் சடமாகையினாலும், பந்தமுடையோன் சுதந்தர ஈனனாகையினாலும், உயிர்களுக்குப் பந்தத்தை நீக்கி முத்திகொடுப்பான் ஒரு சுதந்தர கர்த்தா உண்டென்பதுஞ் சர்வமத சம்மதமாம். உதாரணம் :—

(சிதம்பரசுவாமிகள்.)

" வீடென்றுரைதரு சொற்குப்பொருளோ விடுதலையாதலினால், வீக்குண்டோனுங் கட்டுமாக விளங்குந் திடமாகப்; பீடுறுகட்டுத் தானாய்விட்டுப் பெயராதிது சடமாம், பிணிபட்டோன சுதந்தரனுமிப் பிணிபோச் செய்வோன்; நீடுசுதந்தரமுளனுமொருவன் னேருமிவ்வேதுவினா, னிகழ்பதி பசு பாசம்மென முப்பொரு ணிச்சய மென்றருளி, வேடனை வெல்லுங் குருவா யெனையாண் மெய்ப்பொருணீயன்றோ, வேதகிரிப் பவரோக வயித்திய வேணிமுடிக் கனியே. "

மேற்கூறிய பக்குவான்மாவாகிய சற்சீடனது குணாதிசயங்கள் :—

(சிவநெறிப்பிரகாசம்.)

கூசியிடா திட்டபணி செய்து குருபத்தி
குறைவிலராய் நம்பினராய்த் துரோகமின்றி
மாசிலராய் மனவாக்குக் காயத்தாற் குருவின்
வாக்கியபா லனஞ்செய்யு மதிமானு மாயே. "

அன்றியும்,

" ஆதரவுஞ் சாந்தியுநற் பொறுமை தானு
மசத்தியமில் லாவுரையு மாசாரந் தவமும்
தீதான செயன்மறந்து நன்றியறிந் திடலுஞ்
சிவாகமத்தைக் கேட்டதனைத் தெளித றானும்
போதலறப் பொறிவழியி னிற்ற லாதிப்
புகன்றுடைய நற்குணங்கள் பொருந்தி மேலும்."

முதலியவாம்.

இது காரியத்தைக் காரணமாக உபசரித்ததென வுணர்க.

"சோற் பிரகாசத் தனியை" என்பது :—மந்திரவடிவப் பேரொளியாகிய ஒன்றை,

பிரபஞ்சவுற்பத்திக்கு உபாதான காரணங்கள் குண்டலிசத்தி. அசுத்தமாயை, பிரகிருதி, எனமூன்றும். அவற்றுட் குண்டலி சுத்தமாயிருத்தலால், பராசத்தி அதனை அதிட்டித்து நிற்க வாக்குண்டாய், அதிற்றோன்றிய மந்திரங்களே திருமேனியாய், உயிர்களுக்குப் புத்திமுத்திகளைக் கொடுத்தலால், "சொற்பிரகாசம்" என்றார். மந்திரம் சிவனுக்குத் திருமேனியாகு மாதலால் தனக்கும் அத்திருமேனியுள்ள தென்பது போதரும்.

உதாரணம் :—(சிவஞானசித்தியார், சூத்-1. பா-59.)

"மந்திரமதனிற்பஞ்சமந்திரம்வடிவமாகத்
தந்திரஞ் சொன்னவாறிங் கென்னெனிற் சாற்றக்கேணீ
முந்திய தோற்றத்தாலு மந்திர மூலத்தாலு
மந்தமில் சத்தியாதிக் கிசைத்தலு மாகுமன்றே."

என்பதனானும்,

"பங்கயற்கண் ணரியபரம் பானுருவே
தனக்குரிய படிவ மாகி"

என்பதனானு முணர்க.

சொல்லின் தெளிவாகிய ஒன்றையெனினுமாம்,

உதாரணம் :—

(பட்டினத்துச் சுவாமிகள்.)

சொல்லினுஞ் சொல்லின் முடிவிலும் வேதச்சுருதியிலு
மல்லினுமா சற்றவாகாயந் தன்னிலுமாய்ந்து விட்டோ
ரில்லினு மன்பரிடத்திலு மீசனிருப்ப தல்லால்"

என்பதனானும்,

(திருவுந்தியார்.)

சொல்லும் பொருள்களுஞ் சொல்லா தனவுமங்
கல்லவு மானனென் றுந்தீபற
யம்பிகை பாகனென் றுந்தீபற"

என்பதனானு முணர்க.

சில பிரதிகளிற் சொற்பிரகாசத் தனியை :—(சுயமாய் பிரகாசிக்கும் ஒன்றை) யென்றிருக்கின்றது. இது பின்வருவனவற்றாற் கூறியது கூற லெனுங் குற்றத்துக் குடன்படு மாதலாற் பிசகேயாம்.

“அருமறைகள் முரசு அறைய” என்பது :—அருமையாகிய வேதங் கள் பலரு மறியுமாறு முழங்காநிற்ப,

அருட்சத்தியே யுயிர்க்கு உணர்வாகிப் பேரின்பத்தை யடைவிக் கின்றது என வேதாகமங்கள் ஐயமற வுணர்த்துகின்றது என்பதற்கு “மறைகள் முரசறைய” என்றார்.

வேதத்துட்பொருள் யாவருக்கு மெளிதல்ல வாதலால் “அருமறை” என்றார். சகல இரகசியங்கட்கும் உறையிடம் வேதங்களாகலினாலும், அவற்றின்பொருள் புதைபொருளா யிருத்தலினாலும், வேதங்கள் “மறை” எனும் பெயர் பெற்றன. முரசறைதல்—வெளிப்படுத்தல்.

“அறிவினுக்கு அறிவாகி ஆனந்தமயமான ஆதியை” என்பது :— சிற்றறிவாகிய வுயிர்க்குள் அறிவாகிப் பேரின்பப் பெருக்கே தனது மயமான ஆதிசத்தியை.

உயிரானது உடலுக்கும் அந்தக்கரணங்கட்கும் அன்னியமான தென் றும், பாசவுணர்வொழிந்து நின்றவிடம் பசுவுணர்வென்றும், பசுவுணர் வொழிந்து நின்றவிடம் பதியுணர்வென்றும், தனது ஞானக்கிரியைகள் மலமறைக்கப்பட்டு அவத்தைப்படுவதென்றும், தன்னைக் கர்த்தர் சத்தி தானே யான அருள் காரணமாகக் கருவி முதலியவற்று லுணர்த்துவ னென்றும், பக்குவச் செயலைக்கண்டு வியாபகமான அறிவையு நல்க, முத்தி யில் ஆனந்தம் பெறுவையென்று முணர்த்துதலை “அறிவினுக் கறிவாகி ஆனந்த மயமான ஆதி” என்றனர். உதாரணம் :—

(சிவஞான சித்தியார், சூத் - 5. பா—8.)

“தெரிந்துகொண் டொரோவொன் றாகச்
 சென்றைந்து புலனும் பற்றி
புரிந்திடு முணர்வி னோடு
 போகமுங் கொடுத்தி யோனி
திரிந்திடு மதுவுஞ் செய்து
 செய்திகண் டுயிர்கட் கெல்லாம்
விரிந்திடு மறிவுங் காட்டி
 வீட்டையு மளிப்பன் மேலோன்.”



எனவும்,

(கந்தபுராணம்.)

"அருளி னீர்மையா லைந்தொழில் புரிபவன்" எனவும்,

(சௌந்தரியலகரி.)

"சிவமெனும் பொருளு மாதி சத்தியொடு சேரி னைந்தொழிலும் வல்லதாம்."

எனவுங் கூறியவாற்றால், பஞ்ச கிருத்தியங்களும் ஆதி சத்தியின் சேர்க்கையால் நடக்குமெனலும் ஒன்று. இவ்வாறு கூறுதலும் சத்தியும் சிவமும் ஒன்றுதல்பற்றி என்க. உதாரணம் :—

(சிவஞான சித்தியார், சூத் - 2. பா—77.)

"சிவஞ்சத்தி தன்னை யீன்றுஞ்
சத்திதான் சிவத்தை யீன்றும்
உவந்திரு வரும்பு ணர்ந்திங்
குலகுயி ரெல்லா மீன்றும்
பவன் பிரம சாரி யாகும்
பான்மொழி கன்னி யாகுந்
தவந்தரு ஞானத் தோர்க்கித்
தன்மைதான் றெரியு மன்றே."

'அறிவினுக்கறிவாகி' என்பதற் குதாரணம் :—

(வள்ளலார்.)

'அறிவுக் கறிவா யறிவிப்பான் சில்லோர்க்
கறிவுருவு கொண்டருளு வான்.'

(கந்தபுராணம்.)

'ஒருமையா னுணருவோ ருணர்வினுக் குணர்வதாம்
பெருமையா னெங்கணும் பிரிவரும் பெற்றியான்.'

என்பனவற்றாற் காண்க.

ஈச்சுரனுக்குரிய கல்யாண குணங்களில் 'வரம்பிலின்பம்'—(அளவிலாப் பேரின்பம்) ஒன்றுதலால் 'ஆனந்த மயம்' என்றார். உதாரணம் :—

(வள்ளலார்.)

"இன்ப வயனீச னின்பம் விளைத்தலாற்
சம்புவெனும் பேருந் தரும்."

(திருமந்திரம்.)

" இன்பமு மின்பக் கலவியு மாய்நிற்கும். "

என்பனவற்றுற் காண்க.

" ஆதியை " எல்லாவற்றிற்கும் மூலகாரணமாகிய முதற் பொருளை (பரமசிவத்தை) யெனினுமாம்.

உதாரணம் :—

(திருமூலர்.)

" அருளும் வகைசெயு மாதிப் பிரானும்."

என்பதனுலும்,

" பகலவன் பல்லுயிர்க் காதியுமாமே "

என்பதனுனு மறிக.

" அநாதி ஏகதத்துவ சொரூபத்தை " என்பது :—ஆதியந்த மில்லாததாய சிவமே தானாகியும், தானே சிவமாகியும், ஒன்ருயுள்ள உண்மை வடிவம்.

சத்தி சிவத்தின் வேற்றுமையின்றி, நிற்குமென்பதாம். சத்தியுஞ் சிவமும் இரண்டெனனில், நீக்கமுற்று நிற்பதெனப் பொருள்பட்டு, சருவ வியாபகம் பின்னப்படுமாதலால், சூரியனும் கிரணமும்போல, தன்னியல்பி னிற்பதும் புறம்பே நின்றுணர்த்துவது மாகிய இரு தன்மையையுடைய போறிவாய சைதன்யமொன்றே புரப்பொருளை நோக்கு நிலையிற் சத்தியெனவும், அதனை நோக்காது அறிவு மாத்திரையாய் நிற்கு நிலையிற் சிவமெனவும், வேதாகமங்க ளுணர்த்துமாற்ருல் " அநாதியேகம் " என்றும், அனலின் தன்மைபோன்று சுடுதல் அடுதன் முதலிய தொழிலால் வேறுவகை யாமாறுபோல, சிவசத்தி ஒன்றே காரிய வேறுபாட்டால் சிற்சத்தி, பாரசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி என்றை வகையாயும், நிவிர்த்தி முதலிய ஐவகையாயும், இன்னும் பலவேறு வகையாயும் நிற்குமாதலால், " தத்துவசொரூபம் " என்றுங் கூறினர். அவ்வச் சத்திகளோடு புணர்ந்த சிவமும் அச்சத்திகட்கு இடமான விந்துவும் பலவேறு வகையான விருத்திப்பட்டு அவ்வப்பெயர் பெறுமென்றுணர்க. உதாரணம் :—

(சிவஞானசித்தியார்.)

' மருவிடு மணுதிமுத்த சித்துரு மன்னிநின்றே.'

(கந்தபுராணம்.)

" இத்திறத்தா லவசமதா யீறுமுத னடுவுமிலா
வத்தனது திருவடிக்கீ ழடங்கியே யாணையினுன்."—எனவும்,

" அண்ணலு மேகன்ருனு மளப்பருங் குணத்திஞனும்."

(பிரமகீதை.)

" ஒருத்தனே யவிஞசி யாகிய
வொளியாயவ ஞெளிர்கின்ருன்."

எனவும்,

(தத்துவராயர்.)

" தலம்வந்த தத்துவஞ் ரெம்மையே
யின்று சார்ந்தனரே."

" போதமேதத்துவரூ பம்மிதனைச் சங்கையற்ற
மாணவக புத்தியிடை நன்ருய்ப்புதை."

எனவும் வருவனவற்ருற் காண்க.

" மதசம்மதம் பெறச் சாலம்ப ரகிதமான சாசுவதம் புட்கலம் நிரா லம்பம் ஆலம்பம் சாந்தபதம் வியோம நிலையை " என்பது :—பற்பல சமயங்களினும் பலவேறு பொருண்மைபடக் கூறுங் கொள்கைகளில் அவ் வவ்வாற்ருனின்றும், அவைக் கதீதமுமாகின்ற சாலம்ப ரகிதமும் சாசுவத மும் புட்கலமும் நிராலம்பமும் ஆலம்பமுமான சாந்த பதமென்னும் பரவெளியை,

" மதசம்மதம்பெற "—என்பதற் குதாரணம் :—

(பட்டினத்துச் சுவாமிகள்.)

" அன்றென்று மாமென்று மாறு சமயங்க
ளொன்ருேடொன் ருெவ்வா துரைத்தாலும்."

என்றும்,

(பிரமகீதை.)

" வேதமா கமபு ராண மிருதிகள் வேரு மார்க்க
ரோதுமா கமங்க டர்க்க மொன்ருேடொன் ருெவ்வா தாகும்."

என்றும் வருவனவற்ருற் காண்க.

சாலம்பம் - ஆதாரத்தோடு கூடியது ; சாலம்பரகிதம் தானென்ருே டும் பிடிப்பில்லாதது ; எல்லாவற்றிற்கும் தான் ஆதாரமா யிருத்தலன்றி, தனக்குத் தன்னிலும் வேருேராதார மின்றியுள்ளது. உதாரணம் :—

(சிவஞானசித்தியார்.)

' நின்றென்றுந் தோன்றிடுவ னிராதார ஞயே '

என்பதஞனும்,

'ஆதாரமின்றிச் சற்று மனைத்திற்கா தாரமானாய்'
என்பதனானுங் கண்டுகொள்க.

சாசுவதம்—முதலு முடிவு மில்லாதது.

(பிரமகீதை.)

எப்பொருள் களுக்குந் தோற்றமு நிலையு
மிறுதியு மிதன்கணே யாகி
யொப்பிட வொன்று மின்றியே யென்று
முள்ளதா யுரையுணர் விறந்த."

என்பதாலும்,

(சிவஞானசித்தியார்.)

"அந்தமொ டாதி யில்லா னளப்பில னதலாலே."
என்பதாலு மறிக.

புட்கலம்—நிறைவு. உதாரணம் :—

(கந்தபுராணம்.)

"ஒருவர் பாலினும் பிறந்திடா னருவதா யுருவா
யிருமை யாயுறை பூரண னியாவர்க்கு மீசன்."

(வள்ளலார்.)

"போக்கொடு வரவுமில்லாப்
பூரணப் பொருள்வந் தெய்தும்"
மற்றும் வருவனவற்றாற் காண்க.

நிராலம்பம்—தன்னிலும் பிறிதொன் றியற்கையானே யில்லாதது. உதாரணம் :—

(பிரமகீதை.)

"ஒழிந்ததொரு பொருளில்லை யுள்ளதெல்லா மவனேமுன் கழிந்த பொருள் மேலும் வரக்கடவ பொருடானுமவன்."

(கந்தபுராணம்.)

"மூல காரண மில்லாதோர் பராபர முதல்வன்." என்பனவற்றாற் காண்க.

ஆலம்பம்—எல்லாவற்றிற்கும் தானே ஆதாரமாயிருப்பது. உதாரணம் :—

(திருவாசகம்)

" ஒன்றுநீ யல்லை யன்றியொன்றில்லை
யாருனை யறியகிற் பாரே. "

(தேவாரம்.)

" தக்கானைத் தானன்றி வேறொன்றில்லாத் தத்துவனை."

என்பனவற்றாற் காண்க.

சாந்தபத வியோமமிலை— அகங்காராதிகளில்லாத ஞானமாகிய ஆகாயம். உதாரணம் :—

(அருணகிரிநாதர்.)

" இராப்பக லற்ற விடத்தே யிருக்கை
யெளிதல்லவே."

(தலமான்மியம்.)

" மங்கல்செய் மலம்புலன்கண் மானவோட்டி
மன்னுயிரை யாட்கொள்ளும் விருது கட்டித்
துங்கமமை தணிந்திடமே தங்கு மெங்கட்
டுரைமகன்றன் றிருவடியைத் துணைக்கொள்வாமே. "

(ஞானவாசிட்டம்.)

" திடவிசும்பன் றாயிருந்தும் விசும்பான
நிலையதுவாம் '

என்பனவற்றாலறிக.

யோகமாவது அகத்தொழின் மாத்திரையானே ஈச்சுரன் அருவத்திரு மேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு, அது இந்திரியங்களை யொடுக்கி, மனத்தை விடயங்களின் வழிசெல்ல வொட்டாமல் திருப்பி, ஒரு குறிப்பில் நிறுத்தி, உச்சுவாசம் நிச்சுவாசமென்னும் இரேசக பூரகமாட்டையைக் கடுத்து, நடு நாடியாகிய சுழிமுனை மார்க்கத்திலே பிராணவாயுவை நிறுத்தி, மூலாதார முதலிய ஆறாதாரங்களின் அந்தர்மா திருகாக்கிரமத்தை யறிந்து, அவ்வவ் வாதாரங்களி னதி தேவதைகளை யுபாசித்து, அவர்களனுக்கிரகத்தா லவ்வாதாரங்களி லதோமுகமான பதுமங்களைப் பேதித்து, அவற்றின் மேல் பிரமரந்திரமளவும் அசபையுடன் சென்றணைந்து, அங்கு அதோமுகமாகவிருக்கும் சகத்திரதள தாமரை முகையை ஈசுரனருளால் அங்கு உதிக்கும் சிவார்க்கனாலே மலரச்செய்து, அந்தத் தாமரைப் புட்பத்தின் கேசாக்கிரகத்திலே உள்ள சந்திரமண்டலத்தை ஆகுஞ்சனஞ் செய்தலினாலே மூலாக்கி

னியை அக்கினி பீசாட்சர உச்சாரணத்தினுலே எழுப்பி, நாடி சக்கரங்களைப் பேதித்து, அவ்வக்கினியினுலே சந்திரமண்டலத்தை யிளகப்பண்ணி, அந்த வமிர்தத்தைச் சர்வநாடி வழியாயிழுத்து, உடல் முற்றும் நிறையச் செய்து, அதிலுண்டாகும் சுகோதயத்தில் அந்தமயமான ஞானமிர்தாவத்தையை யடைந்து நின்று, சோம சூரியாக்கினிப் பிரகாசாதிகளாகிய பிரத்தியேகப் பிரகாசங்களெல்லாம் சூரியோதயத்தில் நட்சத்திராதி பிரகாசங்களடங்கினுற் போலத் தன்னிடத் தடங்கப் பரவொளி நடுவிற் சர்வதோமுகமாய்ப் பெருஞ்சோதியான சிவத்தைச் சத்தியோடு நேர்நோக்கிச் சுயம்பிரகாசமா யதனுளழுந்து மியல்பாதலாலும், சாந்தி யோகத்திற்குக் காரணமாதலாலும், யோகியர் புக்கழுந்துவது பரவெளிச்சோதி யுள்ளாகலாலும் 'சாந்தபத வியோமநிலே' என்னப்பட்டது. உதாரணம் :—

"காலே நேர்பெற வோட்டியே கனலினை மூட்டிப்
பால மார்பயன் வீட்டியே தன்னுறு படிவத்
தேனு மன்பினின் மஞ்சன மாட்டியே யிறைக்குச்
சீல மாமலர் சூட்டியுட் பூசனே செய்தான்."

"காலமூ வாயிரங் கழிந்த பின்முறை
மாலுறு மருத்தெனு மாவைத் தூண்டியே
மூலவெங் கனலினை முடுக்கி மூட்டுரு
மேலுறு மமிர்தினை மிசைதன் மேயினுன்."

இடத்தின் பொருளே யிடமாக வுபசரித்தனர்.

'நித்தம் நின்மல சகிதம் நிட்ப்ரபஞ்சப் பொருளே' என்பது :—நித்தத்துவமும் இயற்கையிலே அநாதி மலமில்லாததும் பிரபஞ்சாவத்தை கடந்துள்ளதுமாகிய பொருளே.

விடயங்களே ஒவ்வொன்றாய் விசாரித்தறிய அவை துன்பத்தன்மையன வென்று அனுபவத்தாற் கண்டு ஒழிவுபெறலும், ஆன்மா தனது நிலைமையையும் உணரப்பெறும். பெறவே நித்தமாயுள்ள திருவெனவே மேலே யுணரக் கிடைத்தற்குத் திருவருள் முன்னிற்பதாகலான் இது மெய்ப்பொருளின் குணமென்றும், சமவேதம்பற்றி நித்தத்துவமும் சிவம் மலத்தான் மறைக்கப்படாத இயல்புடைமைத் தாதலால் அதன் குணமாகிய சத்தியும் அவ்வியல்பாகலால் நின்மல சகிதமும், ஆன்மாக்கட்குச் சுகதுக்கங்களேப் பக்குவத்தில் இல்லையாகப் பண்ணிப் புலங்கொளுத்தி வீட்டின்கணுய்ப்பதற்குச் சத்தி கருவியாய் முன்னிற்றலால் 'நிட்பிரபஞ்சப் பொருளுமாம்' என்பது காண்க. உதாரணம் :—

(கந்தபுராணம்.)

'நித்தனு முயிர்க்கு ணீங்கா நிருத்தனு மவனே யென்னும்.'

(வள்ளலார்.)

'பராபரமாய் நித்தமாய்ப் பரிபூரணமாய்,'—என்பதனானும்,

(திருவாசகம்)

'நீருறு தீயே நினைவதே லரிய நின்மலா
நின்னருள் வெள்ளம்.'

(கந்தபுராணம்)

'நிர்க்கு ணத்தனே நிமல னன்னவன்.'—என்பதனானும்,

(வள்ளலார்.)

'உலகமேழையுங் கடந்தவ னடிகளை யுவப்பாம்.'
'உலகப் பற்றை யொழித்த நிபுணன்'—என்பதனானுமறிக.

'நிர்விடய சுத்தமான நிர்விகாரத்தை' என்பது:—விடயப் பற்றுச்சொன்று மில்லாததாய்ச் சுத்தமாக யாதொன்றின் வயத்தும் தானெய்தாமல் யாவும் தன்வயத்தனவா வுள்ளதை,

மயக்கவடிவாகிய கேவலாவத்தையும், விகற்பவடிவாகிய சகலாவத்தையுமே விடயமாகும். அவையில்லாதது நிர்விடயம். இதுவே சுத்தாவத்தையாம். இதில் நின்ற திருவருளே யெவைக்குந் தாரகமாதலால் நிர்விடயமும், சுத்தமும், நிர்விகாரமுமாம் என்பது காண்க. நிர்விடயம்-அபரிச்சின்னம்; சுத்தம்-தான் பூரணனாகவிருந்து பிறிதொன்றானும் மறியொண்ணுமை; நிர்விகாரம்-விகாரங்களை யடையாதது. உதாரணம்:—

'விடயப் பேயை விலக்கியவிபுதன்.'

(தேவிகாலோத்தரம்)

"பொருவிலா நித்தசுத்தப் பொருளினை யடைவரன்றே."

(கந்தபுராணம்.)

'சுத்தனு முணர்தற் கொண்ணுச் சோதியு மியாண்டு மேவும்.'

(வள்ளலார்)

"அறிவுக் கறிவா யவிகாரி யாகி நிறைதல் பதிநிச் சயம்."
"அவிகாரி யீசனருளொடீ பெற்று லவிகாரி யாவையன்றி யச்சோ."
என்பனவற்று லறிக.

'தடத்தமாய் நின்று ஒளிர் நிரஞ்சனம் நிராமயத்தை' என்பது:—இஃதெனவும், அஃதெனவும், இஃதன்றெனவும், அஃதன்றெனவும், பிரு

திவி முதலிய கருவிகளாயும் அவையல்லாததுமாகி நடுவாய்நின்று விளங்கா நின்ற நிரஞ்சனமாகிய நிராமயத்தை.

தனக்கு வேண்டுதலும் வேண்டாமையுமாகிய பற்றொரு சிறிதுமின்றாய்த் திருவருட்போத ரானவரை வீட்டின்கணுய்ப்பதும், தோற்றக் கேடில்லாத அருட்சத்தியேயாகலின் "நிரஞ்சன நிராமயமும்" ஆமாறு காண்க. தடத்தம்-பொதுவாயிருக்கை; நிரஞ்சனம்—பற்றில்லாதது; நிராமயம்—அவத்தை யில்லாதது. உதாரணம் :—

(தேவாரம்.)

'புக்கானை யெப்பொருட்கும் பொதுவானானை.'

(வள்ளலார்.)

"சாற்றிரண்டுமற்ற சமநிலையை சுத்தத்து
வீற்றிருப்ப னெங்கள் விமலன்."

(தத்துவராயர்.)

'நிரஞ்சன நிராமய பராபர புராதன.'

(திருவள்ளுவர்)

"பற்றுக பற்றற்றான் பற்றினை"

(வள்ளலார்.)

"நிராமயமாய் நிட்களமாய் நீங்காப் புராதனமாய்."

(தேவாரம்.)

"நிராமய பராபர புராதன பராவுசிவ ராக வருளென்."
என்பனவற்றாற் காண்க.

"சித்தம் அறியாதபடி சித்தத்தில் நின்று இலகு திவ்யம் தேசோமயத்தை." என்பது :—சிந்திக்குந் தன்மைத்தாகிய சித்தம் இன்னபடித்தென அறியாவண்ணம் அச்சித்தத்தினிடத்தே நின்று உள்ளும் புறம்புமாய்ப் பிரகாசிக்கின்ற உயர்வினு ளுயர்வான தேசோராசியை.

பானுவும் கண்ணும் நீரும் நிழலும்போலச் சிவ சந்நிதியின்கண் தற்போதங்கழன்று நீங்கா திருப்பவராகிய பரையோகர், ஒன்றென்றும் இரண்டென்றுமாகாத கலப்பிற் பரமசுகத்துடன் பொருந்திநிற்க, இருள் நக்ஷத்திரங்கள் சந்திரன் முதலியன சூரியனொளிமுன் றோன்றாத வாறுபோல, எல்லாமும் எங்கும் எப்போழ்தும் அகண்டாகார சோதியாயே பரந்து நிற்குமாற்றால், "திவ்ய தேசோமயமுமாம்" என்பதுணர்க. இவ்வனுபவக்

காட்சி தோன்றித் தற்போதம் நீங்கினவழி விகற்பமின்றி எங்குமாகப் பி. சிக்கின்றமையால் "சித்தமறியாதபடி சித்தத்தினின் றிலகும்" என்ற உதாரணம் :—

(அமுதசாரம்.)

உள்ளத்தி னின்று மொளித்தான் பரன்குரவன்.

(பிரமகீதை.)

தீம ரங்தொறு மடைந்தழி வுறுது தெரிவா
காமை நின்றணி யால்வடிவு காணு மதுபோ
லாமு டம்பிலழி வின்றி மறை கின்றவமல
ஞெமெ னும்பொருளுணர்ந்திட வுடம்பிலொளியாம்.

(தேவாரம்.)

சிந்தையு ளொன்றி நின்றவெம்மான்
ஊற்றாகி யுள்ளே யொளித்தாய் போற்றி.—என்றும்,

(திருமூலநாயனர்.)

'பேரொளி யாய பெரிய பெருஞ்சுடர்.'

(பிரபுலிங்கலீலை.)

'தூயபர மானந்த பரஞ்சோதி தோன்றக்கண் டிருந்தார்.'

(அருணகிரிநாதசுவாமிகள்.)

அதல விதலமுத லந்தத்த லங்களென
வவனி யெனவமர ரண்டத்த கண்டமென
வகில சலதியென வெண்டிக்கில் விண்டுவென-வங்கிபானு
அமுத கிரணமென வந்தத்து மந்த்ரமென
வறையு மறைகளின ருந்தத்து வங்களென
வணுவிலணுவெனநிறைந்திட்டுநின்றதோர் பரப்பிரகாசம்

(திருமூலநாயனர்.)

"பரமாண்டத் தூடே பராசத்தி பாதம்
பரமாண்டத் தூடே படரொளி யீசன்
பரமாண்டத் தூடே படர்தரு நாதம்
பரமாண்டத் தூடே பரனட மாடுமே."

(வள்ளலார்.)

"நிராமயமாய் நிட்களமாய் நித்தியமாய் நின்மலமாய்ப்
புராதனமா யசஞ்சலமாய்ப் பூரணமாய்ப் புனிதமாய்ச்
சராசரமாய்ச் சாக்கியாய்ச் சத்தியமாய்ச் சித்துருவாய்ப்
பராபரமாய் வெறுவெளியா யிருக்குமந்தப் பரமசிவம்."

"ஈசனுய்ப் பரம தத்துவனுகி யீறிடை முதலில னுகி
யேசறு மணியா யெவைக்குமா தார மாகியே தனக்கவை யிலையாய்ப்
பாசமோ சகனு யனுதிமுத் தனுமாய்ப் பகருஞா னனந்தக் கடலா
யாசையாற் காண்போர்க் கற்புத வடிவா மம்பிகா பதியினைப் பணிவாம்."
என்றும் வருவனவற்றுற் காண்க.

'சிற்பரவெளிக்குள்வளர் தற்பரமதான பரதேவதையை அஞ்சலிசெய்வாம்' என்பது :—சித்தாகிய பரமாகாயத்தில் பூரணுகாரமாயிருக்கும் சிவ சத்தியை அஞ்சலித்து வணங்கல் செய்வாம்.

சிற்பரவெளி—பரம ஆகாயமாம்; இதன் பொருளை முதற் பாட்டுரையிற் காண்க. ஆகவே, பரமாகாய சரீரியான சிவம் என்பதாம்; எனவே, சிவத்தினுட்கிடையா யதனேடு பூரணுகாரமாய்த் தான அதுவாகியும் அது தானுகியும் உள்ளது சத்தி என்றவாறும். உதாரணம் :—

(சிவஞான சித்தியார், சூத்-5. பா—9.)

"அருளது சத்தியாகு மரன்றனக் கருளையின்றித்
தெருள்சிவ மில்லையந்தச் சிவமின்றிச் சத்தியில்லை
மருளினை யருளால் வாட்டி மன்னுயிர்க் களிப்பன் கண்கட்
கிருளினை யொளியா லோட்டு மிரவியைப் போலவீசன்."

ஆன்மாக்களுக்குப் பந்தமோசன காரியார்த்தமாகக் கேவல சுத்தாவத்தைகளிற் சிவத்தினது திருவருளின் தாரதம்மியாதிக் கேற்ப அச்சிவசத்தியும் பரை ஆதிவிருப்பு அறிவு தொழில்களான ஐந்து சத்திகளாயும், நிவர்த்தி முதலிய ஐந்து கலாசத்திகளாயும், வாமை முதலிய அட்டசித்திகளாயும், உன்மனை சமனை முதலிய கலைகளாயும், இன்னும் காரிய வேறுபாட்டாற் பல்வகை உருவங்களையும் பெயர்களையும் பெற்று ஆறுகோடி மாயா சத்திகளாகியும் பிரிந்தும், சிவத்தோடென்றும் பிரியாமலும் நிற்றலால் 'அத்துவிதவத்துவை' எனத் தொடங்கி 'சிற்பரவெளிக்குள்வளர் தற்பரமதானபர தேவதையை' எனமுடித்து, அதனுண்மையை எடுத்து வாழ்த்துதல் செய்தனர்.

இனிச்சிவம் எவ்வாற்றானிற்கும் அவ்வாற்றாற் சத்தியும் சமவேதமாய் நிற்குமென்னு மியலால் 'அங்கிங்கெனாதபடி யெங்கும்பிரகாசமா யானந்த பூர்த்தியாகி' என்னும் செய்யுளில் 'ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்தது' என்பதற்கு 'அத்துவிதவத்துவாகிய சொற்பிரகாசத்தனி' என்பதனையும், 'உயிர்க்குயிராய்த் தழைத்தது' என்பதற்கு 'ஆனந்தமய மான ஆதி' யென்பதனையும், 'மனவாக்கினில் தட்டாமனின்றது' என்பதற்கு 'ஏகதத்துவசொரூபம்' என்பதனையும், 'வழக்கிடவு நின்றது' என்பதற்கு 'மதசம்மதம் பெறாச் சாந்தபதவியோமகலை' என்பதனையும், 'சித்தாகியின்பமா யென்றைக்கு முள்ளதெது' என்பதற்கு 'நிட்பிரபஞ்சப்பொருள்' என்பதனையும், 'கங்குல்பக லறநின்ற எல்லையுளது' என்பதற்கு 'சுத்தமான நிர்விகாரத்தை' என்பதனையும், 'அது கருத்திற் கிசைந்தது' என்பதற்கு, 'தடத்தமாய் நின்றொளிர் நிராமயம்' என்பதனையும், 'அதுவே கண்டனவெலாம்' என்பதற்கு, 'திவ்யதேசோமயம்' என்பதனையும், 'மௌனவுரு வெளியதாகவும் கருதி அஞ்சலி செய்குவாம்' என்பதற்கு 'சிற்பரவெளிக்குள் வளர் தற்பரமதாம் பரதேவதையை யஞ்சலி செய்வாம்' என்பதனையும் நிரைநிரையாகக் கூட்டிப் பொருளுரைத்துக் கொள்க.

சிவம் எவ்வாறு நிற்கும் அவ்வாறு சத்தியுமா மென்பதற்கு உதாரணம்:—

(சிவஞானசித்தியார், சூத்-2. பா-75.)

"சத்தியாய் விந்துசத்தி யாய்மனோன் மணிதானாகி
யொத்துறு மகேசையாகி யுமைதிருவாணியாகி
வைத்துறுஞ் சிவாதிக்கிவ் வருஞ்சத்தி யொருத்தியாகு
மெத்திற நின்றானீச னத்திற மவளு நிற்பள்."

(விநாயகபுராணம்.)

"எத்திற மிறைவ னின்றா னவ்வனுக்
கியைதர வத்திற நின்று
மெத்திய வுயிரின் மலவிருள் கெடுத்து
விளங்குபூ ரணியையேத் தெடுப்பாம்."

மற்றும் வருவனவற்றானுணர்க.

சத்திக்கும் சிவத்திற்கும் பேதமின்மை என்பதற்கு உதாரணம்:—

(சிவஞானசித்தியார், சூத்-2. பா. 76.)

"சத்தி தானாதமாதி தானாகுஞ்சிவமு மந்தச்
சத்தி தானாதியாகுந் தரும்வடிவான வெல்லாஞ்

சத்தி யுஞ்சிவமுமாகுஞ் சத்திதான் சத்தனுக்குச்
சத்தி யாஞ்சத்தன்வேண்டிற் றெல்லாமாஞ் சத்திதானே.''

தேவதை, கடவுள், தெய்வம், சிவம் முதலிய சொற்கள் அஃறிணைப் பெயர்களாயினும் உயர்திணை முப்பாலினும் வழங்கி வருகின்றனவாதலாற் பரதேவதை என்பதைப் பரமசிவன் என ஆண்பாலாகக் கோடலுமாம்.

'சிற்பரவெளிக்குள் வளர்தற்பரம்' என்பதற் குதாரணம் :—

(நெஞ்சுவிடுதூது.)

''வெறு வெளியாய்ப் பாழாய் வெறும்பாழுக்கப்பா
லுறுபொருளாய் நின்றவொருவன்.''

(சிவப்பிரகாசம்)

'சொற்பெறுமதீதம் வந்து தோன்றுமே தோன்றிநின்ற
சிற்பரமதனுள்ளச் செயலறுத்திட வுதிக்குந்
தற்பரமாகிநின்ற சாக்கிராதீ தந்தானே.'

(அருணகிரிநாத சுவாமிகள்.)

'யானு கியவென் னைவிழுங் கிவெறுந்
தானய் நிலைநின் றதுதற்பரமே.'

(திருவம்மானை.)

'சத்திய மானது சத்தேகா ணம்மானை
தற்போதம் போனவிடந் தற்பரமா மம்மானை.'

(திருவுந்தியார்.)

'இரவுபக லில்லா வின்பவெளி யூடே
விரவி விரவிநின் றுந்தீபற
விரய விரயநின் றுந்தீபற.'

(விநாயகபுராணம்.)

''நித்தியமாய் நிர்க்குணமாய் நின்மலமாய் நிரஞ்சனமாய் நினைவுக்கெட்டாச்
சத்தியமாய்த் தற்பரமாய்த் தத்துவமாய்ச் சச்சிதா னந்த மாகி
யத்துவிதப் பொருளாகி யகண்டபரி பூரணமா யமல ஞான
மெத்தியமுள் ளத்தமர்ந்த விநாயகமான் மியத்தவத்தோர் விரும்பிக்
கேட்பார்.'

தயா, உமா, மாலா, க்ருபா, சீதா, ப்ரமா, பூஜா, கலா, கதா, க்ரியா முதலிய வடசொற்களி னீற்றுயிர் கெட்டு ஐகாரமேற்றுத் தயை, உமை, மாலை, க்ருபை, சீதை, ப்ரமை, பூஜை, கலை, கதை, க்ரியை யெனத் தமிழில்

வழங்குவது போலத் தேவதா என்னும் வடமொழியி னீற்றுயிர் கெட்டு ஐகாரமேற்று 'தேவதை' யெனத் தமிழில் வழங்கி வந்தது. உதாரணம்:—

'வேத முதலாய் விரிந்தபன் னூல்களு
மோதி யோதியு முரையாப் பொருட்ற்
போத மிறந்தோர் பொருந்துந் தேவதை
சீதைமலரடி சிந்தையில் வைப்பாம்.'

இச் செய்யுளிலும் வத்துவை, தனியை, ஆதியை, சொரூபத்தை, வ்யோம நிலையை, நிட்பிரபஞ்சப் பொருளை, நிர்விகாரத்தை, நிராமயத்தை, தேசோமயத்தை "அஞ்சலி செய்வாம்" எனத் தனித்தனிக் கூட்டியு முரைத்துக் கொள்க.

இந்தச் செய்யுளுக்கு ஈசுவரி பரமாகப் பெண்பாலிலும், ஈசுவரன் பரமாக ஆண்பாலிலும் பொருளுரைத்தமை காண்க.

அ, அன், ரகிதம், நிர், நின், நிஷ் இவை வடமொழி எதிர்மறையைக் குறிக்கும் உபசர்க்கங்க ளென்னும் முதலடை மொழிகள்.

ஏ, இன்-அசை நிலைகள்.

அது—பகுதிப்பொருள் விகுதி.

பிரகாசம், ஒளிர், இலகு, தேசு என்பனவும்; அத்துவிதம், தனி, ஏகம் என்பனவும்; சாசுவதம், நித்தம் என்பனவும்; வியோமம், வெளி என்பனவும்; நின்மலம், சுத்தம் என்பனவும் தனித்தினி ஒருபொருட்கிளவிகள்.

ஆதி, அநாதி; ரகிதம், சகிதம்; நிராலம்பம், ஆலம்பம் இவை ஒன்றற்கொன்று முரணுகவந்த சொற்கள்.

தனி, ஆதி, நிலை, நிர்விகாரம், நிராமயம், தேசோமயம் முதலிய வற்றை யிவற்றையுடைய பொருளெனவுருவகஞ் செய்யப்பட்டது.

'ஆயிரமுகத்தா னகன்றதாயினும், பாயிரமல்லது பனுவலன்றே' யென்றிருப்பதால் நூல் செய்யப்புகுந்த இக்கிரந்த கர்த்தர் இம்மூன்று செய்யுளாற் பாயிரம் புகன்றதாம். இது தெய்வ வணக்கம் கூறியபடி. இவை கடவுள் வாழ்த்துத் துறையின் பகுதிகளாம்.

ஸ்ரீமத் தாயுமான சுவாமிகள் திருப்பாடல்களில் முதல் மூன்று பாட்டு களுக்கு மகா வித்துவானாகவிருந்த புரசை அஷ்டாவதானம் சபாபதி முதலியாரவர்க ளியற்றிய உரை எமக்கு வெகு அருமையாகக் கிடைக்க, அவசிய முள்ள இடங்களிற் சீர்திருத்தி, ஆங்காங்குச் சேர்க்க வேண்டியவைகளைச் சேர்த்து, பலசாத்திரங்களினின்றும் உதாரணங்களை யெடுத்துக் காட்டி அச்சிடுவித்தனம்.

நா. கதிரைவேற் பிள்ளை.

# நூலினுட்பிரிவு.

உ

கடவுள் துணை.

## தாயுமானசுவாமிகள்

# திருப்பாடலகராதி.

முற்றிற்று.

உ

கடவுள் துணை.

# தாயுமான சுவாமிகள்

திருவாய் மலர்ந்தருளிய

# திருப்பாடற்றிரட்டும்

## தெளிவான பொழிப்புரையும் விசேடக் குறிப்புரையும்



### திருவருள் விலாசப் பரசிவ வணக்கம்



பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்.



க. அங்கிங்கெ னாதபடி யெங்கும்பிர காசமா
யானந்த பூர்த்தி யாகி
யருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
யகிலாண்ட கோடி யெல்லாந்
தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது மனவாக்கினில்
தட்டாம னின்றதெது சமயகோ டிகளெலாந்
தந்தெய்வ மெந்தெய்வ மென்
றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதெது
வெங்கணும் பெருவழக்கா
யாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமா
யென்றைக்கு முள்ளதெதுமேற்
கங்குல்பக லறநின்ற வெல்லையுள தெதுவது
கருத்திற் கிசைந்த ததுவே
கண்டனவெ லாமோன வுருவெளிய தாகவுங்
கருதியஞ் சலிசெய் குவாம்.

பொழிப்புரை :—எங்குமா யெல்லாமாயுள்ள ஒப்பற்ற ஒரு தனிப் பெரும் பொருளை அவ்விடத் திவ்விடத் துள்ளதென பேதபாவனையாற் குறித்துக் கூறாதபடி எவ்விடத்தும் எஞ்ஞான்றும் பரிபூரணமாய் விளங்கி ஆநந்த சகிதமாய்த் திருவருட்சத்தி சமேதராய் வியாபகமாயது எந்த வஸ்து? தனது கருணாகர வடிவாம் சிதாகாசத்தின்கண் அண்ட புவனங் களும், அவைகளுள்ளே சராசர பேதங்களும் பொருந்தி வாழும்படி பேரு வப்பெய்தி சகலாத்மகோடிகளிடத்தும் உள்ளீடாய்ப் பொருந்தியுள்ளது எது? அன்றி, மனவாக்கினுக்கு அகோசரமாக நின்றது எந்த வஸ்து? மற்றும் சமயவாதிகளெல்லாம் தத்தம் தெய்வமாகச் சுதந்தரித்து பற்பல சுருதிப் பிரமாணங்களால் வாதுபுரிந்து எதிர்வாதம் பேசி ஒவ்வொருவரும் நிலைபெறவும் நின்றிடந்தந்தது எந்த வஸ்து? அன்றி, யாண்டும் உறுதிப் பட சாத்தியமாகாத மிக்கதோர் விகார கோரனையாய்ப் பின் எதனினும் வலிமைபெற்ற ஓர் ஞானகாரமாகியும் ஆனந்தமயமாகியும் எஞ்ஞான்றும் வியாபகமாயும் சத்தாயுமிருப்பது எந்தவஸ்து? பின்னரும், இரவு பகல் காணாது நின்ற எல்லைக்கண் னிலவியது எந்த வஸ்து? அவ்வஸ்து வொன்றே என் அறிவினுக்கெட்டியது; ஆகவே, அந்தமைய வஸ்துவையே யான் காணத்தக்க பொருளினைத்துமாகவும், மௌனசொரூப வஸ்துக்களாக வுங் கருத்திற்கொண்டு சிரமீது கரங்கூப்பித் தொழுவோம். என்றவாறு.

குறிப்புரை :—இதனால், சுத்த சாட்குண்ய பரிபூரணராய அகண்டா காரப் பரம்பொருளை மனவாக்குக் காயங்களால் பிரதமத்தில் வணங்கித் துதி செய்தனரென்பது தோன்ற நின்றது. பின்னும், சர்வவியாபகமாயும், பராநந்த சொரூப ஞானசத்தி சகிதராயுமுள்ள அப் பரம்பொருளின் இலக் கணங்கூறி அதுவே தமக்கு ஒப்பற்ற நிலைக்களமாயுமுள்ள தென்பதையும் விளங்கக்காட்டி, ஏனையோரையும் அவ்வழி நிற்றல் காரணமாக கண்டு சத்து சித்தாநந்த வத்துவைத் தெரிவுறப் புலனாக விளக்கினர் எனலுமாம்.

பரம்பொருளினது சர்வவியாபகத்தினை விளக்குவான் வேண்டியே ஆண்டுளான் ஈண்டுளான் என்பன மறுத்து "எங்கும் பிரகாசமா" யென் றனர்.

இறைவன் மலர் மணம்போன்று தமது அருட்சத்தியினைப் பிரிவின்றி நிற்றலின் "ஆநந்த பூர்த்தியாகி யருளொடு நிறைந்தது" என்றார்.

இன்னும், அம் முழுமுதற்கடவுள் கருணை சொரூபனாயிருந்து சர் வான்மகோடிகளையும் தமது கர்ப்பத்துள் வைத்து உயிர்க்குயிராய்க் காத் தருளும் கர்த்தத்துவத்தையே "தன்னருள் வெளிக்குளே யகிலாண்ட கோடியெல்லாந் தங்கும்படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த் தழைத்தது" என்றருளினர்.

"மனுதிகளுக் கெட்டாத பரமாநந்த வாழ்" வென்று ஆன்றோர் கூறியவாறே ஈண்டு நம் பெருந்தகையாரும் "மனவாக்கினில் தட்டாமல் நின்றது" என்று அநுவதித்தார்.

எப்பொருளினு மெய்ப் பொருளாம் அப் பரம்பொரு ளானது நித்திய ஞானநந்த மயமாய் நிற்றலையே "யாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமா யென்றைக்கு முள்ளது" எனக்குறித் துணர்த்தினராக.

மேலும், "துரிய நிறை சாந்த தேவதை" யென்று ஆசிரியர் பிற ஆண்டும் கூறிவரலான் இங்கே "கங்குல் பகலற நின்ற வெல்லையுளது" என்றும், அதுவே அவன் அருளொடும் சம்யோகித்திருக்கும் ஆநந்த நிலைய மென்றும் நன்கு புலனுமாறு தாம் அகமுகத் தோற்றத்தான் வணங்கித் துதித்தோதின ரென்பாம். (1)

உ. ஊரனந் தம்பெற்ற பேரனந் தஞ்சுற்று
முறவனந் தம் வினையினால்
உடலனந் தஞ்செயும் வினையனந் தங்கருத்
தோவனந் தம்பெற்றபேர்
சீரனந் தஞ்சொர்க்க நரகமும னந்தநற்
றெய்வமு மனந்த பேதம்
திகழ்கின்ற சமயமு மனந்தமத னுன்ஞான
சிற்சத்தியா லுணர்ந்து
காரனந் தங்கோடி வருஷித்த தெனவன்பர்
கண்ணும்விண் ணுந்தேக்கவே
கருதரிய வானந்த மழைபொழியு முகிலைநங்
கடவுளைத் துரிய வடிவைப்
பேரனந் தம்பேசி மறையனந் தஞ்சொலும்
பெரியமௌ னத்தின் வைப்பைப்
பேசரு மனந்தபத ஞானவா னந்தமாம்
பெரியபொருளைப் பணிகுவாம்.

பொழிப்புரை :—(ஆன்மாக்கள் வாழ்தற்கிடமாய) ஊர்கள் பலவாகும்; (ஒவ்வொரு ஜனனங்களிலும் வழங்கிய) நாமங்களும் பலவாகும்; (இவர் களைத்) தொந்தித்துப் பந்திக்கும் உற்றார் பெற்றாரும் பலவாகும்; பாவ, புண்ய பலனாக (இவர்களுக்குக் கிடைக்கும்) சரீரமோ பலபேதங்களாகும் இவர்கள் உதரபோஷணை நிமித்தமாகச் செய்துவரும் காரியாதிகளும் பல வாகும்; (இந்நிலையில் இவர்களது) எண்ணங்களும் பற்பலவாகும்; (மற்றும் இன்னோர் பெறுகின்ற) கீர்த்திகள் முதலியனவும் பலவாயிருக்கின்றன;

(இவைகட்குத் தக்கினவாறாக) போகபோக்கிய ஸ்தலங்களும் பலவாகும்; (இவைகளை யறிந்து இரக்ஷிக்கும்) தேவர்களும் பல வேறு வகைத்தாம்; (இவர்களுக் கேற்பட்டுள்ள) மதக்கொள்கைகளும் பலவா யிருக்கின்றன; ஆதல்கொண்டு, இவைகளை யெல்லாம் ஞானமாகிற சக்தியாலறிந்து, கோடிக் கணக்கான மேகக் கூட்டங்கள் திரண்டு வந்து மழை பொழிந்தாலன்ன மெய் யடியார்களது கண்களிலும் இதயாம்பரத்திலும் திகைக்கும்படியாக எண்ணற் கரிய நிரதிசயானந்த மழையைக் கொட்டுகின்ற மேகத்தை, நமக்குரிமையாங் கடவுளை, துரிய நாயசொரூபத்தை, வேதங்கள் பற்பல நாமங்களால் முழக்கிவரும் மௌன முத்திரைகொண்டருளும் புதை பொருளை சொல் லரியதாகும் அநேக மதமாய்த் துலங்கும் நித்தியானந்த மயமாய பெரிதாம் பரத்தினை வணங்குவாம்.

குறிப்புரை :—ஊர், பேர், சுற்றம், உடல், வினை, கருத்து, பேர் சீர், சொர்க்க நரகம், தெய்வம், சமயம் ஆகிய இவையெலாம் பற்பல வகையா யிருத்தல் காக்ஷிப் பிரமாணத்தால் வெள்ளிடையாயது.

இவைகளின் பேதாபேதங்களை யுணர்ந்து இவைகளிற் கோடற் பாலன கொண்டு விடற்பாலன வொழித்து, ஒப்பற்றதாய ஞானைஸ்வரியத்தால் பெரியதினும் பெரியதாய பரசிவானந்தப் பேற்றினைப்பெற்று ஞான சத்தி யின் அநுக்ரகத்தால் நங்கடவுளை வழிபட்டுய்ய வேண்டுமென்பது ஆசிரி யர் குறியாது குறித்தமை நன்கு உணரற் பாலது.

மௌன முத்திரை சகித ஞானானந்த பரமாயுள்ள மெய்யன்பர் தம் துரிய வெளியூடு நிலவப்பெற்று நிரதிசயானந்த மயமா யொளிரும் பரஞ் சோதியையே, ஈண்டு ஆசிரியர் பெரிய மௌனத்தின் வைப்பென்று அதா வது பெரும் புதை பொருளெனவும், கருதரிய ஆனந்த மழை பொழியு முகி லெனவும், நங்கடவுளெனவும், துரிய வடிவெனவும், ஞானானந்த பெரிய பொருளெனவும் உபசரித்தோதி வாழ்த்தினமையுங் கண்டுணர்க.

உண்மை யன்பர்களாம் ஞானவான்கள் இறைவனை யுள்ளுந்தோறுள்ளு தோறும் உள்ளமுவத் தற்றன்மையையே "அன்பர் கண்ணும் விண்ணுந் தேக்க வானந்த மழை பொழியு முகிலே" யென்றநுவதித்தமை காண்க.

ஈண்டு "விண்" ணென்றது மெய்யன்பர்களது இதயாம்பர வெளி யென்றுணரற்பாலது. (2)

௩. அத்துவித வத்துவைச் சொப்ரகா சத்தனியை
யருமறைகண் முரசறையவே
அறிவினுக் கறிவாகி யானந்த மயமான
ஆதியை யநாதியேக

தத்துவ சொரூபத்தை மதசம்மதம் பெறுச்
சாலம்ப ரகிதமான
சாசுவத புட்கல நிராலம்ப வாலம்ப
சாந்தபத வ்யோம நிலையை
நித்தநிர் மலசகித நிஷ்ப்ரபஞ்சப் பொருளை
நிர்விஷய சுத்தமான
நிர்விகா ரத்தைத் தடத்தமாய் நின்றொளிர்
நிரஞ்சன நிராமயத்தைச்
சித்தமறி யாதபடி சித்தத்தி னின்றிலகு
திவ்யதே சோமயத்தைச்
சிற்பர வெளிக்குள்வளர் தற்பரம தானபர
தேவதையை யஞ்சலிசெய்வாம்.

பொழிப்புரை :—(இரண்டெனற் பொருந்தா) ஒரு பொருளாயும், இயல்பாகவே ஜொலித்து விளங்கும் ஏக வஸ்துவாயுமுள்ள ஓர் பொருளை அரிய வேதங்களால் பிரசித்தி செய்யப் பெற்றுள்ளதையும், (ஆன்ம) அறிவுக் குள்ளறிவாகியதையும், நித்யானந்த சொரூபமாயதையும், எவைக்கு முதற் பொருளையும், பழமைக்கும் பழமையதாயதையும், ஒரே தன்மையதான வடிவையும், சமயங்களுக் கதீதமாயதையும், இறுமாப்பு முதலிய அகங்கார சேட்டித மற்றதையும், நித்தியத்துவமும் எங்கு நிறைவுமா யுள்ளதையும், ஓரிடத்தும் ஆதாரமாகக் கொண்டிராததையும், பரமசாத்துவிக பரமாகாய வாசனையும், நித்தியத்துவமும், அழிவிலாமையும், மலபந்தமில்லாமையும், சேதனுசேதன நாமரூபப் பிரபஞ்சாதியவைகளில் லயப்படாததையும், யாதா மொரு விஷயப் பற்றுக்கோடு மில்லாததையும், ஓரணுவத்தனை விகாராதிக ளற்றதையும், பக்ஷபாதமில்லாததையும், இருண்மயமின்றியும் நோயற்றதுமா யுள்ளதையும், ஆன்மாக்களது கருத்தறியாதபடி அங்கு வியாபித்திருந்து அதியற்புத ஜோதிமயமா யுள்ளதையும், இன்னும் அதியற்புத ஞானவெளி யைத் தாயகமாக்கொண்டு ஓங்கும் தற்பரமாங் கடவுட்டன்மை வாய்ந்துள ஒப்புயர்வற்ற வோர் தனிப்பெருந் தெய்வத்தை நாம் கைகுவித்து துதித்து வாழ்த்துவாம்.

குறிப்புரை :—அத்துவிதம் என்னுஞ் சொல்லுக்கு "இரண்டெனு தொரு பொருள்" என்பதாம். சான்றாக சிவஞான வள்ளல் கூறியன ஈண்டு காண்க.

அத்துவிதக் கலி வெண்பா

பராபரமாய் நித்தமாய்ப் பரிபூரணமாய்
நிராமயமாய் நிட்களமாய் நீங்காப்—புராதனமாய்ச்

சத்தியமாய்ச் சித்தாய்ச் சதாநந்த தேசாய்ச்
சுத்தவெறு வெளியாய்ச் சூனியமாய்ப்—புத்தமாய்
தற்பரமாய்ச் சிற்கனமாய்த் தத்துவாதீதமாய்ச்
சிற்பரமாய் ஞானச் செழுஞ்சுடரா—யற்புதமா
யறிவுக் கறிவா யகண்டிதமா யெங்குஞ்
செறியும் பரம சிவமாய்ப்—பிரியாத
வேதச் சிகரத்தில் வீற்றிருந்த தெய்வமே
போத குருவாய்ப் புவிமீது—நாதனென
வந்தான் றிருவடியை மந்தகத்திற் சேர்த்திஞன்
றந்தானென் சென்னித் தடக்கையை.

வெளிப்படையாக சிவத்தினுடைய உருவம் இரண்டு. ஒன்று மாயா சகிதம், மற்றென்று மாயா ரகிதம். இதையே சகளமென்றும் நிர்க்குணமென்றும் சாஸ்திரங்கள் கூறுகின்றன. உபாசனு காண்டத்தின் வண்ணம் அத்வைதிகள் சகள ரூபத்தை யறிந்து அன்பு மிகுந்து உபாசனைசெய்து, அவ்வுபாசனையின் பயனுன பதவி முத்தியைப் பெறுகின்றூர்கள்; அவர்களே அச்சகளோபாசனையினுல் வரும் பதவி முத்தி ஆக்கத்தையும் கேட்டையும் உடையதென்றும், ஈண்டுள்ளார்க்குச் சுகம்போல் தோன்றுவதாயினும் உண்மையில் அது துக்கவடிவுடையதென்றும் உணர்ந்து, பின்னர் ஞான காண்டத்தின்படி பரோக்ஷமாய் விசாரணை செய்து, நித்தியமும் திரிபுடிரகிதமுமான நிட்கள சிவத்தை யபரோட்சமா யறிந்தனுபவித்து முத்தியடைகிறூர்கள். இவ்வித முறைமைகளை வேதாந்த சாஸ்திரங்கள் மந்திர யோகம், பரிசயோகம், பாவயோகம், அபாவயோகம், மகா யோகமென்னும் ஐந்தில் அடக்கிக் கூறின. இவ்விஷயங்களை யெல்லா மறியாது 'கட்டையைக் கட்டையென் றறிவதுபோலச் சிவத்தைச் சிவமென்றறிந்து விட்டதிஞலேயே மோக்ஷம் சித்தித்துவிடாவாம்.' ஆகவே, "அதுவானுல் அதுவாகும் அதுவே சொல்லும்" என்ற மூதுரையின்படி யறிந்து கொள்ளுவதே யறிவாகும்.

பௌதிக பூதத்தி ஞென்றும் வெறு வெளியிலன்றி மெய்ஞ்ஞானப் பரவெளியின்கண் பரன்பரை வியாபகமுரித் தாதலின் ஈண்டு ஆசிரியர் பரகுடிலையை நோக்கி "சிற்பர வெளிக்குள்வளர் தற்பரமதான பர தேவதையை" என வியந்து கூறினரென்க.

இறைவன் ஊன்றி சுட்டிக்காட்ட, அதன்மேல் ஆன்மாவுக்கு விஷயமாதல் நோக்கி 'அறிவுக் கறிவாகி' என்பாராயினர். (3)

## பரிபூரணனந்தம்

ச. வாசா கயிங்கரிய மன்றியொரு சாதன
மனுேவாயு நிற்கும்வண்ணம்

வாலாய மாகவும் பழகியறியேன் றுறவு
மார்க்கத்தி னிச்சைபோல
நேசானு சாரியாய் விவகரிப்பே னந்த
நினைவையு மறந்தபோது
நித்திரைகொள் வேன்றேக நீங்குமென வெண்ணிலோ
நெஞ்சந் துடித்தயருவேன்
பேசாத வானந்த நிட்டைக்கு மறிவிலாப்
பேதைக்கும் வெகுதூரமே
பேய்க்குண மறிந்திந்த நாய்க்குமொரு வழிபெரிய
பேரின்பநிட்டை யருள்வாய்
பாசா டவிக்குளே செல்லா தவர்க்கருள்
பழுத்தொழுகு தேவதருவே
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

**பொழிப்புரை** :—வாசாலமாய நாடோறும் ஊழியத்தை யன்றி மனத்தையும் பிராண வாயுவினையும் (சற்றேனும் சலனமற்று) ஓரிடத்து நிலை பெறுமாறு முறையாகப் பழகிவந்தேனு மில்லை! துறவறத்திலே மிகுதியும் விருப்புடையேன் போன்று அதில் மிக்க வாஞ்சையுடையதாக ஊன்றி உபந் நியசிப்பேன்; அன்றி அவ் வெண்ணமாறியபோது சிறிதுறங்குவேன்; பின் னர் இச்சரீரம் நீங்கும் என்று நெஞ்சமறியிலோ மனமிகப் பதைபதைத்து வாடி நிற்பேன்; ஆகவே, இத்தன்மையுள்ள அறியாமை மிகுந்த இழிந்த வெளியேற்கும் மௌன சாதனமாய நிரதிசயானந்த தியான நிஷ்டைக்கும் சிறிதேனும் பொருந்தாதாயிற்றே! அங்ஙனமாயினும், இந்த ஏழை மதிப் பித் துடைமையை யுணர்ந்து நாயினேற்கும், கடைத்தேறு மாறதாக மேலா கிய பேரானந்த நிட்டையினை யருளி அநுக்ரகிப்பாய்; பேராசையாகிய காட்டிலகப்பட்டு துன்புறுதல் மகாமேதாவியாகிய உத்தமர்களுக்கு கிருபா நோக்கமாய கனிரஸத்தைப் பருகி ஒழுகச் செய்கின்ற கற்பக விருக்ஷத்தை யொத்த பிரபுவே! வீக்ஷண்யம் படுமிடமெங்கணும் ஒரு சிறிதும் நீங்குத லின்றிப் பரிபூரணமாய் நிறைந்தருளும் நித்யானந்த சொரூபமே!

**குறிப்புரை** :—மனோவாயு நிற்றல், நெஞ்சம் நினைப்பொழிந்து நிற்றல், அன்றி வாயுவையுங் கூறியதால் ஈண்டு அட்டாங்க யோகத்தை யென்க. மனம் சலிக்கும் சுபாவமா யிருத்தலின் அதனை வாயுவெனக் கூறினும் அமை யும். ஏன், மனம் வாயு வாம்ஸமாதல் கொண்டு.

அருள் பழுத்தொழுகலாவது = அருள் கனிந்த கனிரஸமே யென்று பிறவடியார்களும் கூறிப் போந்தமையா னுணர்க.

பேரின்ப நிட்டை யென்றது ஞானானந்த நிட்டையினை யென்க; சான்றாக "சராசரப் பொருள்கடோறுந் தங்கி நின்றவற்றின் றன்மை, விரா வுதலின்றி யொன்றாய் விமலமாய் விண்ணிறைந்தாய்ப், பராபரவெளி யாய் நீங்காப் பாசசாலங் கடந்த, நிராமய சிவந்தானாகி நிற்பது ஞான நிட்டை" யாதலின் இதனையும், எங்கணு நிறைந்து நின்ற வீசனோடொன்ற லாகிய சங்கரனுமே யென்னச் சமாதி யோகம் புரிந்து துங்கவெண்மதிபோ லுள்ளக் கலங்கிடச் சுவானு பூதியங் குறித்திட வானந்த மடைவதே யமல யோகம் என்று மிச்செய்யுட் கருத்தானும் ஆசிரியர் விரும்பிக் கூறிய "பேரின்ப நிட்டை" யென்று வேண்டி யோதினரென்க. (4)

ரு. தெரிவாக வூர்வன நடப்பன பறப்பன
செயற்கொண் டிருப்பனமுதல்
தேகங்க ளத்தனையு மோகங்கொள் பௌதிகஞ்
செனித்த வாங்கிறக்கும்
விரிவாய பூதங்க ளொன்றோடொன் றாயழியு
மேற்கொண்ட சேடமதுவே
வெறுவெளி நிராலம்ப நிறைசூன்ய முபசாந்த
வேத வேதாந்தஞானம்
பிரியாத பேரொளி பிறங்கின்ற வருளாட்
பெற்றோர்கள் பெற்றபெருமை
பிறவாமை யென்றைக்கு மிறவாமை யாய்வந்து
பேசாமை யாகுமெனவே
பரிவா யெனக்குநீ யறிவிக்க வந்ததே
பரிபாக காலமலவோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

பொழிப்புரை:—பிரத்தியக்ஷமாக சிறிய எறும்பு முதலியனவென்ன, மிருகாதிகளென்ன, பக்ஷிகள் முதலியன வென்ன, விருக்ஷாதிகளென்ன ஆகிய இவை முதலான சகல ஜீவஜெந்துக்களும், மயக்க ஆஸ்பதமாய பௌதிகபூத சிவராசிகளென்று சொல்லத் தக்கதாக பூமியிற் றோன்றியன போன்றே பிறகு சர்வமும் நசித்துவிடும்; மற்றப்படியுள்ள ஐந்துவகையான பெரிய பூதங்களும் ஒன்றனு ளொன்றாய் ஒடுங்கிப்போக, மிச்சப்பட்டது அந்த பரவஸ்துவேயாம்; அதுவும் வெட்டவெளியாகவும், நிராதாரமான தாகவும், பெரும்பாழாகவும் உபசாந்தி யேதுவாய வேதங்களும் வேதாந்தங்களும் உறுதியாகக் கூறும் மெய்ஞ்ஞானமாகவும், ஒழிதலில்லா பெருஞ்

சோதியின்கண் பிறக்கும் பேரருளாகவும், அவ்வருளினைப்பெற்ற பெரியார்களடைந்த பெருமையாகவும், ஜெனனமில்லாமையும், எக்காலத்தும் இறத்தலில்லாமையுமாக வந்து மௌன நிலையதாகவும் எளியேற்கு அறிவுறுத்துமாறு தேவரீர் அன்பாய் எழுந்தருளி வந்ததானது இச்சிறியேனது பக்குவப்பட்ட காலமல்லவா? எங்கணும் பரிபூரணமாக நிறைந்துள்ள ஆனந்த சொரூபனே!

குறிப்புரை:—சேதனு சேதன நாமரூபப் பிரபஞ்ச சகல ஜீவராசிகளும் எழுவகைத் தோற்றத்தான் தோன்றி முறையே ஒன்றினொன்றாக வொடுங்கும் பான்மையும், அவை ஒடுங்கியவாறே எஞ்சியது அவ்வொரு பொருளாமெனக் குறித்தலோடல்லாது, அவ்வொப்புவமை யற்ற தற்பரமதான பொருளின் இயர்க்கையாயுள்ள பல விலக்ஷண சுலக்ஷணுதிகளையுங் கூறி, முடிவாக அத்தகைய பரமனை எத்தகைய நியதியாற் காண்பது எனின், அதுவும் அவனருண் ஞானத்தானே யென்றும் தெளிவாக விளக்கினர். (5)

சீ. ஆராயும் வேளையிற் பிரமாதி யாஞலு
 மையவொரு செயலுமில்லை
அமைதியொடு பேசாத பெருமைபெறு குணசந்த்ர
 ராமென விருந்தபேரும்
நேராக வொருகோப மொருவேளை வரவந்த
 நிறைவொன்று மில்லாமலே
நெட்டுயிர்த் துத்தட் டழிந்துளறு வார்வசன
 நிர்வாக ரென்றபேரும்
பூராய மாயொன்று பேசுமிட மொன்றைப்
 புலம்புவார் சிவராத்திரிப்
போதுதுயி லோமென்ற விரதியரு மறிதுயிற்
 போலேயிருந்து துயில்வார்
பாராதி தனிலுள்ள செயலெலா முடிவிலே
 பார்க்கினின் செயலல்லவோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
 பரிபூர ணனந்தமே.

பொழிப்புரை:—ஆராய்ந்து பார்க்கும்போது, பிரமேந்திராதியராயினும் ஐயனே! தற் சுதந்தரமான யாதொரு செய்கையுங் காணேம்; சாந்த நிறைவோடும் பேச்சற்றதான பெருமையைப் பெற்ற சற்குண சந்திரனென்று கொண்டாடத் தக்கவர்களா யுள்ளவர்களும் ஒருசமய சந்தர்ப்பத்திலே ஓர் கோபம் வந்திடுமாயின், முன்னுள்ளதான சாந்தநிறை வென்

பது இருந்தவிடந் தெரியாமற்போய் பெருமூச்சுவிட்டு தட்டுத் தடுமாறி குழறுவர்கள்; மற்றும், வார்த்தை பேசுவதில் மிக்க மேதாவியென்று கொண்டாடா நின்றோரும் ஓர் விஷயத்தை ஆதியந்தமாய்ப் பேசிவரும் போது ஒன்றைவிட்டு மற்றொரு விஷயத்தினை புலம்பா நிற்பர்; இன்னும் சிவராத்திரி காலத்திலே சிறிதும் நித்திரை செய்யமாட்டோம் என்னு மாவிரதியரும் அற்ப நித்திரை செய்வார்போலிருந்து துயில்வர்கள்; ஆகையினாலே, ஜகஜீவபரங்களால் ஏற்படும் செய்கைகள் யாவும் முடிவாக பார்க்குமிடத்து தேவரீர் தம் திருவுளச்செயலாகவே முடிகின்றதல்லவோ? எங்கும் நீக்கமின்றி ஒளிரும் ஆனந்த சொரூபமே!

குறிப்புரை—சிருஷ்டி, திதி, சம்ஹாரம், திரோபவம், அநுக்ரகம் என்னும் ஐந்து கிருத்தியங்களும் ஒருங்கே நடத்தற்றன்மை சர்வக்ஞத்து வம் வாய்ந்த முக்கட் பரமற்கேயன்றி மற்றைப் பிரம விட்டுணு வாதியர்க் கின்றென்பதும், அவர்கள் சிருட்டி, திதியாகிய இரண்டொரு கிருத்தியங் களே புரியு முரிமையுடையா ரென்பதாக வேதாதி விளம்புவ குறித்தே ஆசிரியரும் "ஆராயும் வேளையிற் பிரமாதியாலும் ஐயவொரு செயலு மில்லை" என்றும், "பாராதி தனிலுள்ள செயலெலா முடிவிலே பார்க் கினின் செயலல்லவோ" என்று அருளியவாற்றானும் நன்கு புலனையது.

அங்கையி னெல்லிப்பழம்போ லகந்தொறு நீயிருப்பச்
சங்கைய றவுனை நோக்கஞ் செய்யார் சமயச் சழக்கர்
செங்கண னிந்திர னான்முகன்றன் னையுந் தெய்வமென்பர்
கங்கை மகத்துவ மீனறியா கச்சியேகம்பனே.

தொல்லாழி யண்டத்தைத் தோற்றிவிப்பா னயன் றோற்றியத்தை
நல்லா ரிவர்சிறு நீயாரிவரெனு நாட்டமின்றி
வில்லா ருதரத்தில் வைத்தளிப்பான் விண்டு மற்றிவைக
ளொல்லாந் துடைப்பவ நீயேபுகழ் கச்சியேகம்பனே.

என்னு மிச்செய்யுட் கருத்தினை யோர்ந்துகொள்க.

மற்றும் தவசியர், விரதியர் முதலாய அன்பர்களும் தத்தம் சங்கல்ப வைராக்கியாதிகளி னின்றும் ஒவ்வோரமையத்தில் மயக்கத்தான் தவறி விடுவதையும் ஆசிரியர் குறித்தமை பரதந்திர ராயினமையைக் குறித்தே யென்க. (6)

எ. அண்டபகி ரண்டமு மாயா விகாரமே
யம்மாயை யில்லாமையே
யாமெனவு மறிவுமுண் டப்பாலு மறிகின்ற
வறிவினை யறிந்து பார்க்கின்

எண்டிசை விளங்குமொரு தெய்வவரு ளல்லாம
வில்லையெனு நினைவுமுண்டிங்
கியானெனு தறத்துரிய நிறைவாகி நிற்பதே
யின்பமெனு மன்புமுண்டு
கண்டன வெலாமல்ல வென்றுகண் டனைசெய்து
கருவிகர ணங்களோயக்
கண்மூடி யொருகணமி ருக்கவென் றுற்பாழ்த்த
கர்மங்கள் போராடுதே
பண்டையுள கர்மமே கர்த்தா வெனும்பெயர்ப்
பக்ஷநா னிச்சிப்பனோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

பொழிப்புரை :—இந்த பூவண்டமும் இதனடுத் துள்ளதான மற்ற இதர புறவண்டங்களிலேயும் மூலப்பிரகிருதியின் நியம பேதங் களாயே யுள்ளன; அந்த மூலப்பிரகிருதியானது பொய்ப் பொருளேயன்றி மெய்ப் பொருளன் றென்கின்ற உண்மையறிவு மிருக்கிறது. அதன்பின் உணரக்கூடிய மெய் யறிவினைப்பற்றி ஆராய்ந்து பார்க்குமிடத்து, எட்டுத்திசைகளையும் விளக்க முற நடத்துவிக்கின்ற ஓர் ஒப்பற்ற தெய்வசக்தி யானேயன்றி வேறில்லை யென்னும் உண்மையறிவுந் துலங்குகின்றது ; இம்முறைகொண்டாயுங்கால், 'யான்' யென்கின்ற அகங்காரமும், 'எனது' என்கின்ற மமகாரமும் என்னைவிட்டொழிய வேண்டி அழிவுள்ள தத்துவ ஸ்தலங்களுக் கப்பாலுள்ள துரிய நிலையாம் சுத்த நிலையிற் சலனமற்றிருப்போ மென்னும் ஆசையு மிருக்கின்றது ; ஆங்கு வசிப்பதே பரமசுக மென்கின்ற வறிவும் துலங்கி யுள்ளது ; இஃதன்றி, வேதாந்த ப்ரமாணங்களால், பார்க்கப்படுகின்ற நாமரூப சடசீவ பரங்களனைத்தும் நித்தியத்துவமுடைய தன்றென்று மெய் யறிவாற் கடிந்து அதன்மேற் கருவி கரணாதிகள் யாவும் ஒடுங்குமாறு ஓர் க்ஷணநேரமாவது சட்சிந்திரியத்தை யடக்கி அகமுகமாயுள்ள அறிவினால் நிட்டைகூடி யிருப்போமென்றால் பாழ்பட்ட பழய கர்மங்கள் வந்து இடை யிடையே தொந்தித்து சும்மாயிருக்க விடுகிறதில்லை ; ஆகவே அவ்வூழ் வினையையே யான் கர்த்தவ்ய காரியாதிகளென்று கண்டு இன்பமெய்தலு முண்டோ ! இல்லையென்றபடி ; யாண்டும் பரிபூரணமாய் நிறைந்திலங்கும் ஆனந்தமயமே !

குறிப்புரை—நாமிருக்கும் பூவண்டமாயது ஒன்பது கண்டங்க ளோடுங் கூடியதாம். அவைகளில் இப்பூமி பரதகண்டமென்பர். இவை யன்றி புறம்பே அநேக அண்டங்களு முள்ளனவென அறியக் கிடக்கின்றன ;

ஆக எல்லா அண்டங்களும் மாயாசத்தி வியாபகமாகவே காணப்படு மென்றார்.

மற்றும் அம்மாயா விசிரிம்பிதமாய இக்கற்பித வுலகமும் இதில் தோன்றி நின்று அநுபவிக்கும் ஜெகஜீவபாங்க ளெல்லாமும் அநித்தியத்துவ முள்ளனவேயன்றி நித்தியத்துவ முடையன 'வன்றென்றும், நித்தியமாயுள்ளது பராதுரிய சிவபெருமானே யென்றும், அச்சிவபாஞ்சுடரையே திரிகரண சுத்தியோடு உபாசித்து முத்திப்பதத்தை பெறுதலே ஆன்மாக்களுக்குரிய பெரியதோர் பேறாகவும் நன்கு விளக்கினரென்க.

சத்துவகுண பிரவிர்த்தியாய உபாசனைக்கு மனோசசம் அவசிய மாதலால் கண்மூடியிருந்து சாதனைகொண்டு சாதித்தலும் அவசியமென்பது தோன்ற நின்றது.

இச்சாதனைக்கு நேர் விரோதமாய கன்மத்தைக் கூறி அக்கன்மானுபவ மன்றி மீண்டும் கன்ம யேதுவாகத் தினைத்துணையும் செய்தல் கூடாதென்பதும் ஓர் கருத்தெனக் காண்க. (7)

அ. சந்ததமு மெனதுசெய னினதுசெய லியானெனுந்
 தன்மைநினை யன்றியில்லாத்
தன்மையால் வேறலேன் வேதாந்த சித்தாந்த
 சமரச சுபாவமிதுவே
இந்தநிலை தெளியநா னெக்குருகி வாடிய
 வியற்கைதிரு வுளமறியுமே
இந்நிலையி லேசற் றிருக்கவென் றுன்மடமை
 யிதசத்ரு வாகவந்து
சிந்தைகுடி கொள்ளுதே மலமாயை கன்மந்
 திரும்புமோ தொடுவழக்காய்ச்
சென்மம்வருமோ வெனவும் யோசிக்கு தேமனது
 சிரத்தையெனும் வாளுமுதவிப்
பந்தமற மெய்ஞ்ஞான தீரமுந் தந்தெனைப்
 பாதுகாத் தருள்செய்குவாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
 பரிபூர ணனந்தமே.

பொழிப்புரை :—(என் வாழ்நாட்களில் பெரும்போது) என்னுற செயப்பட்டது நின்னுற் செயப்பட்டது என்று தோன்றி விவகரிக்குந் தன்மையை யோசிக்கின் தேவரீரையல்லாது வேறலாத்தன்மையாக் காணப்

படலான், யான் தம்மைவிட வேறல்லாதவனுக வறிந்திருக்கின்றனன்; ஆகவே, இந்த நியாயம் பார்க்கும்போது இம்முறை வேதாந்த சித்தாந்தம் என்னு மிரண்டினது சமரசபாவமாக விளங்கலாயின; ஆகையினுலே யான் இத் தன்மையை யுணர்தற்கு என் சரீரமுற்றிலும் தனித்தனி கட்டுவிட்டுருகி யயர்ந்தமை தேவரீர் திருவருட்சத்திக்கு நன்கு விகசிதமாயிருக்குமே! அன்றி இந்த நிதானமாகச் சிறிதுபோது சாதனையாயிருந்து வருவோமென்றுல் என்பாலிலங்கும் அறிவில்லாத் தன்மையானது எனக்கு நேர்விரோதமாய் நன்மைபுரியுந் தன்மையாய் வந்து என் சித்தமிசை குந்திக்கொள்கின்றதே! இதனுல் ஓர் சமயம் மலசம்பந்தமாய கன்ம வினைகளும் வந்து தொந்திக்குமோ வென்றும், அதனுன் மீண்டும் பிறவி வருமோவெனவும் என் மனம் மிகவும் அவலம்பிக்கின்றதே! ஆதலால் தேவரீர் ஈதனைத்தும் நன்கு யோசித்து எளியேற்கு 'சிரத்தாபத்தி' யென்னும் பெரும்வாளாயுதத்தையுங் கொடுத்து, பழய தொந்தமாம் பந்தவினைகளும் ஒழியுமாறு உண்மையான ஞான வைராக்கியத்தையுங் கொடுத்துதவத் திருவருள் புரிவீராக, யாண்டும் பரிபூரணமாய் நிறைந்துள்ள ஆனந்தமயமே!.

குறிப்புரை—ஆன்மாக்கள் செய்துவரும் இருவினைப் பாகுபாடுகளும் தற்போதங்காரணமாகக் கொள்ளுகின்றூர்களேயன்றி சிவபோதமாகச் சிறிதும் எண்ணுகின்றூர்களில்லையாதலால் "ஆட்டுவித்தா லாரொருவராடாதாரே" என்று பெரியார் ஓதியவாறு அனைத்தும் எம்மான் செயலாக வுணர்தலே அறிவாளர்களது கொள்கை யென்பது தோன்ற நின்றது.

இங்ஙனங் கருதி வினைப்போகந் துய்ப்பாரெவரோ அவர்களே வினைப்பயன் தொந்தத்திற் பந்திக்கப்படாரென்பதை நன்குணர்தல் வேண்டுமென்பதும் ஆசிரியர் உட்கிடையாகும்.

இன்னும், 'சிரத்தையென்னும் வாளுதவி' என்றூர் :—ஈண்டு சிரத்தையாவது, பரம சற்குருவின்பாலும், வேதாந்த சாத்திரத்தினிடத்தும் அன்பு கொண்டு விசாரஞ் செய்துணரலாம். ஆகவே, இவையாகிற வாளாயுதத்தையும், சிரவண மனன நிதித்தியாசனமாகிற ஞானதிடத்தையும் அவனருளால் கொண்டருளின், பந்தபாசங்களெல்லாம் வந்தவழி செல்ல வழிபார்க்குமாதலால் ஞானதீரமும் தந்தருளப் பிரார்த்தித்தனரென்க.

இதசத்ரு :—அதாவது ஆன்மாக்களுக்கு நன்மை பயத்தல்போன்று போலியாகத் தீமையே புரிதலால் அங்ஙனங் கூறினர். (8)

கூ. பூதலய மாகின்ற மாயைமுத லென்பர்சிலர்
பொறிபுல னடங்குமிடமே
பொருளென்பர் சிலர்கரண முடிவென்பர் சிலர்குணம்
போனவிட மென்பர்சிலபேர்

நாதவடி வென்பர்சிலர் விந்துமய மென்பர்சிலர்
நட்டநடு வேயிருந்த
நாமென்பர் சிலருருவ மாமென்பர் சிலர்கருதி
நாடிலரு வென்பர்சிலபேர்
பேதமற வுயிர்கெட்ட நிலயமென் றிடுவர்சிலர்
பேசினரு ளென்பர்சிலபேர்
பின்னுமுன் னுங்கெட்ட சூனியம தென்பர்சிலர்
பிறவுமே மொழிவரிவையாற்
பாதரச மாய்மனது சஞ்சலப் படுமலாற்
பரமசுக நிஷ்டைபெறுமோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

பொழிப்புரை :—உண்மை யறியாத சிலர், பூதபேதங்களானவை யொடுங்கற் கிடமாய மாயையையே முழுமுதற் பொருளென்று கூறுவர்; மற்றுஞ் சிலர்கள், ஐவகைப் பொறிகளென்ன அத்தன் விஷயாதிகளென்ன இவை ஒருங்கிடமாயதே பொருளெனவுங் கூறுவார்கள். பின்னுஞ் சிலர்கள், அந்தக் கரணாதிகள் அடங்குமிடமே அப் பரம்பொரு ளென்பார்கள்; வேறு சிலர்கள், மூவித குணாதீதமான விடமே பரம்பொருளென்பார்கள்; மற்றுஞ் சிலர்கள் நாதரூபத்தையே அப்பரம்பொருளென்று உறுதி கூறுவார்கள்; இன்னுஞ் சிலர்கள் விந்துரூபத்தையே அப்பெரும் பொருளென திடம்பெற கூறுவர்கள். ஓர் சிலர், இதயாம்பர வெளியிலே தங்கியுள்ள ஆன்மாவையே நாமென்று சொல்வதால் அதனையே அப்பரம்பொரு ளென்பார்கள்; இன் னுஞ் சிலர், அப்பொருள் உருவமாயுள்ள தென்பர்கள்; வேறு சிலர், தேறிய விசாரிப்பால் அரூபமாயுள்ளார் என்று சாதிப்பார்கள். மற்றுஞ்சிலர், அபேதமாயுள்ள தற்போதம் ஒழிந்த விடமே பொருளெனப் பேசுவர்; இன் னுஞ் சிலர், சொல்லுமிடத்து அவனருளையே அப் பொருளென்பார்கள்; மற்றுமோர் சாரார் ஆதியந்தமிலா வரும்பெரும்பாழ் வெளியிலே சுத்த சூனியமாயுள்ளதே ஒப்பரும் அத்தற்பரம் பொருளென்பர்கள்; வேறு சிலர், பலவேறு ஆதார பூதங்களையும் பொருளென்று புலம்பா நிற்பர்; இத்தனை விதங்களால் யோசிக்குமிடத்து மனமானது இரசம்போன்று அசைந்து சலனப்படுவதாயே முடியுமல்லால் விசேடமாய பரமானந்த நிட்டையைப் பெறுமோ, பெருமென்றபடி, எங்கணும் ஒழிபின்றி நிறைந்தருளும் பரா னந்தமயமே !.

குறிப்புரை :—அரூப சொரூபங்கடந்ததும், ஆண் பெண் அலி என்று முப்பாலுக் கப்பாலாயுள்ளதையும், மனவாக்குகளுக்கு அகோசரமானதையும்

பற்பல மதவாதிகளும் பிறரும் தம்தம் புத்தியின் தாரதம்மியத்திற் கெட்டிய யுத்தி வாதமாகக் கூறி முடிவில் ஒன்றும் பொருந்தாது அவலம்பித்த மனமுடைய ராய் பாதரச மென்கின்ற சூதம்போல சஞ்சலப்படுவர்களே யன்றி பரானந்த நிட்டைபெற வறியார் என்பது தெளிபொருளாம்.

சான்றாகத் தேவாரத்தில் கூறுவதறிக. நிருமலமாய் ஞான சொரூபமா யுள்ள சிவபிரான் உருவம் குணமுதலியன ஒன்றுமில்லாதவ ரென்பது கீழ்க் கண்ட தேவாரவாயிலாக நன்கு தெளியத் தக்கதாகும்.

சிவசொரூபம்.

மைப்படிந்த கண்ணாளுந் தானுங்கச்சி
மயானத்தான் வார்சடையா னென்னினல்லா
னொப்புடையனல்ல னொருவனல்ல
னோரூரனல்ல னோருவமனில்லி
யப்படியு மந்நிறமு மவ்வண்ணமு
மவனருளே கண்ணாகக் காணினல்லா
லிப்படிய னிந்நிறத்தனிவ் வண்ணத்த
னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே.

மற்றும், பொறி, புலன், கரணம், குணம் இவை முதலியன வெளி. (9)

௰. அந்தகா ரத்தையோ ரகமாக்கி மின்போலென்
னறிவைச் சுருக்கினவரார்
அவ்வறிவு தானுமே பற்றினது பற்றா
யழுந்தவுந் தலைமீறிலே
சொந்தமா யெழுதப் படித்ததார் மெய்ஞ்ஞான
சுகநிஷ்டை சேராமலே
சோற்றுத் துருத்தியைச் சதமெனவு முண்டுண்டு
தூங்கவைத் தவரார்கொலோ
தந்தைதாய் முதலான வகிலப்ர பஞ்சந்
தனைத்தந்த தெனதாசையோ
தன்னையே நோவனோ பிறரையே நோவனோ
தற்கால மதைநோவனோ
பந்தமா னதுதந்த வினையையே நோவனோ
பரமார்த்த மேதுமறியேன்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

பொழிப்புரை :—(என்பாலுள்ள) அஞ்ஞானமென்கின்ற பெரிய இருட்டினை ஓர் தாயகமாகச் செய்து, மின்னற்போன்றுள்ள எனது புத்தியினை சுருக்கமாக்கி அவ்வகத்திடை நிறுத்தினவர்யாவர் ? பின்னர் அந்த அறிவும் தான் கொண்டதையே கொள்கையாக்கொண்டு அதனிடத்திலேயே அமிழ்ந்திக் கிடக்கவும், மற்றும் என் சிரசிலே மிகச்சுதந்தரமா யெழுதி வைத்தற்குக் கற்றூர் யாவரோ ? சத்திய மாய ஞானத்திற்கு மூலமாயுள்ள பரம நிட்டையைப் பெறாமல் பௌதிகவுடலாம் சோறடைப் பையை நித்தியமாயதென்று உண்பித்து உண்பித்து உறங்கச்செய்தவர் யாவர் ? மற்றும் பிதா மாதா முதலாய சகலமாயுள்ள பிரபஞ்சாதியையுங் கொடுத்தது என் இஷ்டமோ ? ஆகவே, இவைகளனைத்தையும் யோசித்து என்னை யான் நொந்துகொள்வதா ? அல்லது வேறு பிறரை நொந்துகொள்வதா ? அன்றித் தற்காலத்தை நொந்துகொள்வதா ? வேறே பிறவிக்கு வித்தாயிருந்த இருவினைகளை நொந்துகொள்வதா ? ஆகவே இவைகளி னுண்மை யாதுந் தெரிந்துகொண்டே னில்லையே எங்கணும் பரிபூரணமாய் நிறைந்தொளிரும் ஆனந்தமயமே !

குறிப்புரை :—'ஆசைக் கயிற்றாலாடும் பம்பரம்' என்று பெரியார் உணர்த்த பெருமொழி காரணமாகச் சோற்றுத் துருத்தியாம் இவ்வுடலைச் சதமென நம்பியும், தந்தை தாய் தமர் முதலாய பிரபஞ்சாதியில் பற்றுவைத்துத் தங்காலமுற்றும் வீணே கழித்து மெய்மையான ஆனந்த நிஷ்டாநுபூதியால் பெறவேண்டிய அப் பரம்பொருளைப் பெறுமாறின்றி இடருறும் ஆசிரியர், என்னை நோவதா, அன்றி பிறரை நோவதா, மற்றும் காலத்தை நோவதா, வினையை நோவதா என்று பலவாறு அவலம்பித்துள்ள அநுதாபம் எனையோர்க்குச் சுட்டி யறிவித்த சுருதிபோற் காணலால் "ஆசையறுமின்கள் ஆசையறுமின்கள், ஈசனோடாயினு மாசையறுமின்கள்" என்ற தாற்பரியத்தைத் தோன்றவறிதலே அறிவார் தம் மறிவுக்கழகா யுணர்த்தினர் என்பதாம். (10)

௰க. வாரா தெலாமொழிய வருவன வெலாமெய்த
மனது சாட்சியதாகவே
மருவநிலை தந்ததும் வேதாந்த சித்தாந்த
மரபுசம ரசமாகவே
பூராய மாயுணர ஆகமது தந்ததும்
பொய்யுடலை நிலையன்றெனப்
போதநெறி தந்ததும் சாசுவத வானந்த
போகமே வீடென்னவே
சீராள மாயுருக வுள்ளன்பு தந்ததும்
நின்னதரு ளின்னு மின்னும்

நின்னையே துணையென்ற வென்னையே காக்கவொரு
நினைவுசற் றுண்டாகிலோ
பாராதி யறியாத மோனமே யிடைவிடாப்
பற்றாக நிற்கவருள்வாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

பொழிப்புரை :—என்பால் வாராதன வெல்லாம் வாராமலே இருக்க, வரக்கூடியன எவையும் வந்துசேரட்டும் என, மனச்சாட்சியாக நடுநிலையாய் அமையும்படிக்குள்ள மெய்நிலை யருளியதும், வேதாந்த சித்தாந்த மென்னும் இருவகை மரபும் சமரசப்பட்டுள்ளதாய் அத்யாவசியமா யுணருமாறு யுக்திப் பிரயோகங் காட்டி யருளினதும், அநித்திய வுடலை நித்தியமாகக் கருதாத மெய்யறிவூட்டியதும், நித்தியானந்த வநுபூதியே மோக்ஷமென்று நீராயுருகும் வண்ணம் உண்மை யன்பருளியதும் முடிவில் தேவரீரது திருவருட்செயலே யாம், அடுத்தடுத்து தம்மையே அருந்துணையாக்கொண்ட எளியேனைக் காத்தருளுதற்கே ஓர் திருவருளெண்ணமுண்டாகிலோ, பிருதிவி முதலாக நாத மீறாயுள்ள தத்துவாதிகளால் அறிதற்கியலாத மௌன முத்திரையே அடமான பற்றுக் கோடாக் கைக்கொண்டு அந்நிலையிலே யான் தவறாது நிலைபெறுமாறு கிருபை செய்வாய்; எங்கணும் பூரண நிறைவாயுள்ள மௌன ஆனந்த சொரூபமே!

குறிப்புரை :—கீழ்க்குறித்துள்ள பாடலின் கருத்திற்கிணங்க நமது தாயுமானார் "வாராதெலாமொழிய, வருவனவெலாமெய்த மனது சாட்சியதாகவே மருவ நிலை தந்ததும்" என்றெடுத் தோதியது மெய்யன்பர்கள் மிகவும் போற்றத் தக்கனவேயாம். இம்முறை, சமம், தமம், விடல், சகித்தல், சமாதானம், சிரத்தையென்னு மறுவகை உத்தம குணங்களுள் 'சகித்தல்' என்னும் குணமொன்றை அநுபூதி செய்தமை யாயிற்று.

வாசிட்டம்

ஆனதிறத்தாற் குடும்பபார வியாபாரத்தி லணுகும்போது [வார்
போனபொருட் கிரங்காமற் பொருந்து பொருண்மாத்திரமே புசித்துவாழ்
தீனமுறவருபொருளைச் சிந்தியார்வந்த பொருட்டீதென் றெண்ணார்
ஞானபர ரானோர்க்குச் சுபாவமாங்குண மிதுவே நளினக்கண்ணாய்.

பின்னும், வேதாந்தம் சித்தாந்த மென்னும் இருவகையும் சமரச நன்னிலைக்கு உடன்படுமாறு யுக்தியை யுணர்த்தியதென்ன, மேற்கூறிப் போந்த உண்மை நிலையுணர்ந்த அக்காலத்தில் உடல் பொய்யுறவென்ற ஞானநெறி காட்டியதென்ன, இவ்வுண்மைத் தெளிவுற்ற அக்கால் நிச்சயமான ஆனந்தானுபவமே மோக்ஷமென்று விளக்கிய தென்ன, இவ்வுண்மை திடப்படவே

உடலெலாம் உயிரெலாம் உள்ளகமெலாம் ஜலமெனவுருகும் உள்ளன்பு வந்த தென்ன ஆகிய இவை யெலாம் படிப்படியாகத் தோன்றியது எம்மான்றன் திருவருளின் திருநோக்கானே யென்று தெளிவுற விளக்கினமை மிகவும் அறிவுறுத்தலாயிற்று.

இது நிற்க; இத்தனையுங் கூறியதோடு நில்லாது பிறப்பற வேண்டிந் தத்துவக் கோட்டையைத் தகர்த்து தனியிருப்பா மோனநிலை யெய்தலே முக்கிய சாதனை யென எடுத்துக் காட்டியதும் முடிவுரையேயாம். (11)

௰௨. ஆழாழி கரையின்றி நிற்கயிலையோ கொடிய
வாலமமு தாகவிலையோ
அக்கடலின் மீதுவட வனனிற்க வில்லையோ
வந்தரத் தகிலகோடி
தாழாம னிலைநிற்க வில்லையோ மேருவுந்
தனுவாக வளையவிலையோ
சப்த மேகங்களும் வச்ரதர னாணையிற்
சஞ்சரித் திடவில்லையோ
வாழாது வாழவே யிராமனடி யாற்சிலையு
மடமங்கை யாகவிலையோ
மணிமந்த்ர மாதியால் வேண்டுசித் திகளுலக
மார்க்கத்தில் வைக்கவிலையோ
பாழான வென்மனங் குவியவொரு தந்திரம்
பண்ணுவ துனக்கருமையோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

பொழிப்புரை:—கணக்கிடற்கு அரியதான சமுத்திரமும் கரை யென்னும் வரம்பு கடவாமல் ஓர் கட்டுப்பாடாக நிலையுறவில்லையோ? மிகக் கொடிய விடமானது (ஸ்ரீ சிவபெருமானுக்கு ஓர் காலத்திலே) உண்ணும் பொருளாக வில்லையோ? பின்னும் அந்த சமுத்திரத்தின் நடு விடத்திற்கண் வடவாமுகாக்கினியும் நசியாது நிலையா யிருக்கவில்லையோ? மற்றும் ஆகாய நிலயத்தில் அண்டங்களெல்லாம் ஆங்காங்கு யேற்றத் தாழ்வின்றி ஒரு சம நிலையாக நின்றிலங்க வில்லையோ? இன்னும், மகா மேருமலையும் வில்லாக வளைக்கப்பட வில்லையோ? ஈதன்றி, எழுவகை மேகங்களனைத்தும் வஜ்ராயுதங் கைக்கொண்ட தேவேந்திரனது பராக்கிரம சக்தியினாலே மகா காயத்திற் சஞ்சாரஞ் செய்யவில்லையோ? சிறந்து வாழாமல் கரந்து வாழும்படி இராமனது பாதத்தினாலே கேவலமான கருங்கல்லாயது திவ்ய பெண்ணாகி

யாகவில்லையோ? மற்றும் உருத்திராக்க மணியென்ன பஞ்சாக்ஷர மந்திரமென்ன இவைகளாலே யார் யார் என்னென்ன இஷ்ட சித்திகளை வேண்டி நின்றார்களோ அவைகளையெல்லாம் பெற்றுய்யுமாறு நிலவுலகின்கண் நிலை நிறுத்தவில்லையோ? ஆகவே இந்த அதியற்புத அருஞ்செயலனைத்தும் புரிந்தருளிய தேவரீரது திருவருளுக்கு வெகுகாலமாகப் பாழ்பட்டுக் கிடக்கும் என் மடமை பூண்ட மனத்தினைக் குவிந்தடங்கும்படியாகச் செய்தருள ஓர் உபாயத்தைத் தேடுவதுமட்டுமென்ன நினக்கு அரியசெயலா? அரியதன்று என்றபடி; எங்கணும் இடைவிடாதமர்ந்து பூரணமாய்த் துலங்கும் ஆனந்த மயமே!

குறிப்புரை :—ஆலமென்னும் ஆலகால விஷத்தினை அமுதாகக்கொண்டருளி கண்டத்தில் நிறுத்தியவர் ஸ்ரீ சிவபெருமானுவர்.

வடவனல் என்றது வடவா முகாக்கினியை யென்க; இது குதிரை முக மனையவடிவாய் கடல் நீரின் மத்தியபாகத்திருந்து சமுத்திர ஜலத்தை இயக்குந் தன்மையதாய்த் தன் குணங்குன்று தோங்கியுள்ளதான ஓர் ஒப்பற்ற அக்னியாகும்.

அகிலாண்டகோடிகளை அந்தரம் என்னும் ஆகாய மத்தியிலே ஓர் பக்கத்துக் கொருபக்கம் தாழ்ந்துயரா வண்ணம் செய்தருளியது ஸ்ரீ சிவபரஞ்சுடரார்தம் திருவருளே யென்க.

மகா மேரு பர்வதத்தை வில்லாக ஓர் காலத்தில் வளைத்தருளிய பரம சக்தன் ஸ்ரீ சிவபெருமானே யாவர்.

எழுவகை மேக படலங்களையும் இந்திரனைக்கொண்டு ஆகாயத்தில் செல்லும்படியாகச் செய்தவரும் அப்பரசிவமேயாம்.

ஓர் காலத்திலே சாபமேற்ற அகலிகை கல்லாய்க் கிடந்து பின்னர் இராமனது கால்பட பெண்ணுகும்படிச் செய்தருளியவரும் முப்புரஞ்செற்ற முழுமுதற் சிவமேயாவர்.

இன்னமும் மந்திராதிகளால் பற்பல சித்திகளை யெல்லாம் உலகத்தவர்க்காக நியமித்துள்ளது பிறப்பிறப்பில்லாப் பெருந்தகையாளப் பெம்மான்றன் பராக்கிரமப் பான்மையே யாமென்க. (12)

௰௩. ஆசைக்கோ ரளவில்லை யகிலமெல்லாங் கட்டி
யாளினுங் கடன்மீதிலே
ஆணைசெல வேநினைவ ரளகேச னிகராக
வம்பொன்மிக வைத்தபேரும்
நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்
நெடுநா ளிருந்தபேரும்

நிலையாக வேயினுங் காயகற்பந் தேடி
நெஞ்சுபுண் ணாவரெல்லாம்
யோசிக்கும் வேளையிற் பசிதீர வுண்பதும்
உறங்குவது மாகமுடியும்
உள்ளதே போதுநா னெனக் குளறியே
யொன்றைவிட் டொன்றுபற்றிப்
பாசக் கடற்குளே வீழாமல் மனதற்ற
பரிசுத்தநிலையை யருள்வாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

பொழிப்புரை:—மனிதர்களது இச்சைக்கு ஓர் யெல்லையே கிடையா; எங்ஙனமெனின், பூமண்டலத்தையே ஓர் குடை நீழலிலிருந்து அரசு புரிந்து ஆட்சிசெய்து வந்தாலும் சமுத்திராதிகளுக்கு அப்புறமுள்ள தீவாந்தரங்களிலுள்ள தேயங்களிலும் தம்மரசுரிமை நடாத்த வெண்ணுவர்கள்; இன்னும், குபேரனுக்கு ஒப்பாக எல்லையற்ற நிதிக்குவைகளையுடையவரானாலும், மேலும் மேலும் இரசவாதமென்கின்ற இரும்பைப் பொன்னாகச்செய்கின்றவேலையைத் தெரியுமாறு அஃதுணர்ந்த பெரியாரை சிநேகித்து அவரைச்சுற்றித் திரிவர்; மற்றும், இம்மண்ணிற் பிறந்து நீண்டகாலமாக வாழ்ந்திருப்போரும், அவ்வாசை நீங்கிச் சலிப்புறாது தம்முடல் நிலையுறுமாறாகக் காயகற்பமென்னும் ஓர் அரிய மருந்தினை ஆராய்ந்து அலைந்து முடிவில் கிட்டாமையால் மனம் புண்பட்டோய்வர்; ஆகவே இத்தனையும் யோசிக்கும் போது ஓர் முடிவும் பெறாது ஈற்றில் பசிநோய் உபத்திரவிக்கும்போது யேற்ற உணவருந்திப் பின்னுறக்கங் கொள்வதாக முடிந்துவிடும்; ஆகையினாலே இந்த பேராசை யெனும் பேய்க்கு யான் ஆளாகாது, தற்போதுள்ள நிலைமையே போதுமானது. எவற்றினும் யான் யான் என்று முன்னேறுங்கும் அகங்கார முனைப்பொடும் கெர்விதமாக வாய்ச்சமத்தாயுளறி ஓர் பொருளை விட்டு மற்றோர் பொருளைப்பற்றி ஆசாபாசச் சமுத்திரத்திலே வீழ்ந்தொழியாது மனமிறக்கும்படியான ஓர் நன்னிலையினை அதாவது மோன நிட்டையை எளியேற்கருளிச்செய்வாய்; எங்கணும் நிரந்தரமாய் நிறைந்தருளும் ஆனந்தமயமே!

குறிப்புரை:—ஆன்மாக்களது ஆசைக்கு அளவுகூற முடியா; ஏன்? அரசர்களும் குபேர சம்பத்துடையோருமே போதிய சான்றாவர்; இன்னும் மூன்றரைக்கோடி வயதுபெற்ற இராவணனும் ஆசையை யறுத்தானில்லை; ஆகையால் அவ்வாசைப் பிறப்பிற்கு வித்தாயிருத்தலின் கட்டோடே விட்டொழித்து உள்ளதே போதுமென்ற உறுதி மொழியைக் கடைப்பிடித்து

அகங்கார மமகாராதிகளையும் வேர்களைந்து பெருவாழ்வு பெறுமாறு கொஞ் சத்தைத் தமக்கிடமாக்கொள்ள ஞானயோக நிட்டையினை அருள்புரியுமாறு ஆசிரியர் வேண்டினமை நன்கு புலனாயுள்ளது. இவ்வாசையினைத் திரு மூலரும் :—

திருமந்திரம்

ஆசையறு மின்களாசையறு மின்கள்
ஈசனோடாயினு மாசையறு மின்கள்
ஆசைபடப் படவாய்வருந் துன்பங்கள்
ஆசைவிடவிட வானந்தமாமே. (13)

## பொருள் வணக்கம்

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

க. நித்தியமாய் நிர்மலமாய் நிட்களமாய் நிராமயமாய்
நிறைவாய் நீங்காச்
சுத்தமுமாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த் துரியநிறை
சுடரா யெல்லாம்
வைத்திருந்த தாரகமா யானந்த மயமாகி
மனவாக் கெட்டாச் [யைச்
சித்துருவாய் நின்றவொன்றைச் சுகாரம்பப் பெருவெளி
சிந்தை செய்வாம்.

பொழிப்புரை :—முக்காலங்களினு முள்ளவராயும், மலபந்தமற்றவரா யும், யாதாமொரு உருவமில்லாதவராயும், எந்த வியாதியு மில்லாதவராயும், எங்கும் பரிபூரணமாய் நிறைந்தவராயும், சிவத்துவம் என்னும் அதிசுத்த முடையராயும், மாயா சகிதர்க்கு வெகு தூரத்திருப்பவராயும், மாயாரஹி தர்க்கு மிகச்சமீபத்தில் அதாவது அன்னார் இதய வெளியூடிருப்பவராயும், துரியமென்னும் பரிசுத்தவிடத்தில் வீற்றிருக்கும் பரஞ்சுடராயும், அனைத்தையும் தம்பால்கொண்டுள்ள தாரகத்தாயக மாயும், சுகசொரூபியா யும், மனத்திற்கும் வாக்கிற்கும் அகோசர ஞானரூபமாயும், எக்காலமும் விளங்கப்பெற்ற ஒப்புவமையில்லா ஒரு தனிப்பொருளையும், சுகஜொலித சிதாகாயத்தையும் யாம் சிந்தைகுடி கொள்வாம்.

குறிப்புரை :—நித்தியம் - அழியாதுள்ளது. நிர்மலம் - பிரகிருதியற் றது. நிட்களம் - உருவமிலாமை. நிராமயம் - நோயற்றது. தூரமுமாய் -

பாசசகிதர்க்குத் தூரத்துள்ளவராய். சமீபமாய் - பாசரகிதர்க்கு இதயத்தி லிருப்பவர். துரியம் - நன்னிலம். தாரகம் - தாயகம். சித்துரு - ஞானமயம். ஒன்றை - ஒரே பொருளாயுள்ளதை. சுகாரம்பப் பெருவெளி - ஆனந்தம் உதயமாயுள்ள மகா ஞான காயமாம். ஈண்டு, " கூடுவிடுமுனங் தேடுமெய்ஞ் ஞானம் " என்ற நன்மொழி பொன்மொழியாயது. (1)

உ. யாதுமன நினையுமந்த நினைவுக்கு நினைவாகி
யாதின் பாலும்
பேதமற நின்றுயிருக் குயிராகி யன்பருக்கே
பேரா னந்தக் [னைக்
கோதிலமு தூற்றரும்பிக் குணங்குறியொன் றறத்தன்
கொடுத்துக் காட்டுந்
தீதில்பரா பரமான சித்தாந்தப் பேரொளியைச்
சிந்தை செய்வாம்.

பொழிப்புரை :—மனமாயது எந்தப் பொருளினை எண்ணுதல் செயுமோ அந்த எண்ணத்திற்கு நினைவாக நின்று எப்பொருண் மாட்டும் அபேதமாகப் பொருந்தி யிருந்து ஜீவாத்ம சொரூபத்திற்கு உள்ளொளி யாகிய பரமாத்ம சொரூபமாய்த் தன்பா லன்பால் நெருங்கியுள்ள மெய்யன் பர்களுக்குக் குற்றமற்ற பேரின்ப ஆஸ்பதமாய அமிர்தமாயது ஊற்றெனப் பெருகிக் குணங்குறிகள் யாதுமின்றிய அப்பரம்பொருள் தன்னை ஈடுபடுத்தி அகத்தறிவினுக்கு விளங்குமாறு காட்டுகின்ற குற்றமற்ற பரமாத்ம சொரூப மாய சித்தாந்த (அதாவது நிச்சயமா யறியப்பட்டுள்ள) திருவருட் பெருஞ் சோதியினைச் சிந்தித்துய்வோமாக.

குறிப்புரை :—மனமானது எண்ணுதற்கேமட்டும் உரியதான அந்தர்க் கதமாய கரணங்களுள் ஒன்றானலும், அம்மனத்தினுக்குத் தற்சுதந்திர மின்றி, இறைவன் எண்பிக்கத்தான் எண்ணுதல் " செய்யுமாற்றால், யாது மனம் நினையுமந்த நினைவுக்கு நினைவாகி " என்றோதினமை யறிக.

எப்பற்று மற்று மெய்ப் பற்றுமிறைவன் பற்றை யுற்று தற்போதங் கழன்று சிவபோதங் கைவரப்பெற்ற உத்தம மெய்யன்பர்க்கே உள்ளொளி காட்டி அஞ்ஞான மோட்டி மெய்ஞ்ஞான மூட்டுவரென்பது விகசிதமாதலின், அப்பொன்னெறி கொள்ளாத புவன போகானுபவிகளுக்குக் கிடைப்பது சாந்துணையும் சஞ்சலமேயாமென்பது தெளிவுபெறக் கண்டாம்.

சான்று சில ஈண்டு சாற்றுதலறிக.

வேறு

அறிவென்னு முதல்வேத மகமென்னு மிரண்டாமோத்
தறிவது நீயானுயென்றறையு மூன்றும் வேதஞ்

செறியிந்த வான்மாவே சிவமென்னு மதர்வண்ணஞ்
செறியுநால் வாக்கியத்தின் சித்தாந்த மறிந்தேனே.

நானேநீ நீநானே யானமையான் ஞானகுரு
வானவனே கைம்மாறும் வழிபாடுந் தோத்திரமு
மீனமிலாப் பூசனையு மியற்றுவான் றனைக்காணே
னூனுமில்லை யுயிருமில்லை யுனையன்றி யொன்றுமில்லை.

எல்லா நானென்று ணராக்காலத்தி லிடர்ப்பட்டே
னெல்லா நானென்று ணர்ந்தகாலத்தி லின்புற்றே
னெல்லா நானேயென்றிங் கெனையெடுத்து விழுங்கினு
யெல்லா நீயென்றுணரு மெண்ணமும் போய்மாண்டதே. (2)

௩. பெருவெளியா யைம்பூதம் பிறப்பிடமாய்ப் பேசாத
பெரிய மோனம்
வருமிடமாய் மனமாதிக் கெட்டாத பேரின்ப
மயமாய் ஞானக்
குருவருளாற் காட்டிடவு மன்பரைக்கோத் தறவிழுங்கிக்
கொண்டப் பாலுந் [யாஞ்
தெரிவரிதாய்க் கலந்ததெந்தப் பொருளந்தப் பொருளினை
சிந்தை செய்வாம்.

பொழிப்புரை:—விசாலமாயதோ ராகாயமாயும், அவ்வாகாயத்தினிடத்தே ஐவகைப் பூதங்களும் தோன்றற்கிடமாகியும், மற்றும்; சொலற்கரியதாயுள்ள பெருமைவாய்ந்த மௌனம் பிறத்தற்கு யோக்கியமாய ஸ்தானமாகியும், மனமுதலிய கரணங்களுக்கு அறியப்படாத பெரியதோ ரானந்த சொரூபமாகியுமுள்ள (தனிப் பரம்பொருளே) ஞானாசிரியர் தந் திருவருளாற் சுட்டிடவும், தம்பா லன்பார்ந்துள்ள மெய்யடியவரை அன்பாலீர்த்து அன்னார் தற்போத நீக்கித் தன்னுட்படுத்தி, பின்னர் அறிதற்கு அருமையாக ஐக்கியங் கொண்டருளியது எப்பொருளோ அவ்வொப்பரும் பொருளினையேயாம் சிந்தை குடிவைத்து நமஸ்கரிப்போம்.

குறிப்புரை:—நாமரூபப் பிரபஞ்சாதி சேதனு சேதனப் பொருள்கள் எவைக்கும் மூலப்பொருளாயிருந்த மண்ணாதி ஐம்பூதங்கள் தோற்றற்குத் தாயகமாயதுபற்றி அதனைப்பெரு வெளியென்று சிறப்பித்தார். பின்னர்;

அந்தப் பெருவெளியிலேயே உள்வெளியாக பராகாய மென்கின்ற ஞான காயமாயிலங்கி அதாவது மகா காயத்தூடே கடாகாயம்போன்று பேச்சற்ற மெய்ஞ்ஞான மோனமும் அம்மோனத்திடையே ஞானசற்குருமணி தோன்றி

வந்தருளு முறைமையினையும் தெளிவுறவே 'ஞானக்குருவருளாற் காட்டிடவும்' என்று வியந்தாண்டார்.

ஒப்பருந் தற்பரம் பொருளின் பிரேரணையால் திருவருட் சத்தியே ஞானசாரியராகத் தோன்றிவந்து அன்பனது தற்போத மழிவித்துச் சுத்தனாக்கிப் பிறகே உபதேச கிரம வாயிலாய் ஒன்றை உபதேசித்தலும், உடனே அவ்வாசிரிய அம்சம் மறைந்து, அதாவது திருவருட்சத்தி சிவத்திலயித்து பக்தனைச் சித்துருவாக விழுங்குமாறு செய்தலும் நன்கு புலனாகும்.

இதன்மேல், உபதேசம்பெற்ற அடியார் சத்தியினம்சங் காணப்பெறாராய் சிவமுந் தானுமாயே யேகோபித்து நின்று தன்னை மறத்தலாய சிவபோதாம்சனாய் விளங்குவதையே பெரியார் "தாயை மறந்துபின் றாதையைக் காட்டி" என்று சிறப்ப ஓதுவ துணர்க. (3)

ச. இகபரமு முயிர்க்குயிரை யானெனதற் றவருறவை
யெந்த நாளுஞ்
சுகபரிபூ ரணமான நிராலம்ப கோசரத்தைத்
துரிய வாழ்வை
யகமகிழ வருந்தேனை முக்கனியைக் கற்கண்டை
யமிர்தை நாடி
மொகுமொகென விருவிழிநீர் முத்திறைப்பக் கரமலர்கள்
முகிழ்த்து நிற்பாம்.

பொழிப்புரை :—இம்மை மறுமையென்னு மிருமையினு ஆன்மாக்களுக் குயிர்போன்று விளங்குவதையும், அகங்காராதிய வொழித்தவர்கள் தம் முரிமையையும், எக்காலத்தும் இடையறா வின்பமயமாய் நிறைந்துள்ளதையும், யாதாமோர் ஆதாரமுமின்றித் தானாகவே தோன்றியுள்ளதையும், பரிசுத்தவிடத்து வியாபகமுள்ளதையும், அகங்களிப்ப வழியுந் தேனமுதையும், மூவகைப் பழங்களின் ரசம்போன் றினிப்பதையும், இனிப்புறுங் கட்டியை யொத்ததையும், தேவாமிர்தம் போன்றதையும், ஆக இத்தன்மையனவாய உவமையிலா வரும்பொருளைச் சதா தியானமுற்று இரு நேத்திரங்களினும் மொகு மொகென்னும்படியான ஆனந்த வருவிநீர் சொரிய நம் கரங்கூப்பி வணங்குவாம்.

குறிப்புரை—இகபரமு முயிர்க்குயிரை என்பார் பிறண்டும் இகபரமு முயிரினுக்குயிராகி யெங்கு நிறைகின்றபொருளே என்றுங் கூறியுள்ளமை காண்க. அன்றியும் தேவாரச் செல்வர் "இம்மையேதரு சோறுங்கூறையும் ஏத்தலாமிடர் கெடலுமாம்; அம்மையே சிவலோகமாள்வதற் கியாதுமையுற வில்லையே" என்று திருவாய் மலர்ந்தருளியதானுங் கண்டுணர்க.

கோசரம்=தெரியக்கூடியது. அகோசரம்=தெரியக்கூடாதது. "ஈண்டு நிராலம்ப வகோசரத்தை" யென்றும் பாடபேதங் கூறுவதுண்டு.

இறைவன் திருவடி சேர்ந்தார், என்றும் பொன்றுதலின்றிய நித்தியானந்த பெருவாழ்வு பெற்றுய்வாராகலின் "அமிர்தை" யென்றும் வாழ்த்தின ரென்க.

தலைவன் அநித்திய தத்துவஸ்தானங்களி லமையாது உத்தம ஸ்தலமாம் துரியமெனும் பரவெளியிலே பரனும் பரையும் ஐக்கிய முற்றிருத்தலின் 'துரியவாழ்வை' யென்றுங் கூறினரென்க. ஆகவே அப் பரம்பொருளை அடியார் அறிவாலறிந்து அளவிடலரிதாம். ஆனந்த சாகரத்தி லமிழ்வாராகலின் அதற்கு முக்கனிச் சுவையை ஓர் மரியாதை உபமானமாய்க் கூறினதே யாகுமென்க. (4)

ரு. சாதிகுலம் பிறப்பிறப்புப் பந்தமுத்தி யருவுருவத்
 தன்மை நாமம்
ஏதுமின்றி யெப்பொருட்கு மெவ்விடத்தும் பிரிவறநின்
 றியக்கஞ் செய்யும்
சோதியைமாத் தூவெளியை மனதவிழ நிறைவான
 துரிய வாழ்வைத்
தீதில்பர மாம்பொருளைத் திருவருளே நினைவாகச்
 சிந்தை செய்வாம்.

பொழிப்புரை:—வருணங் குலம் கோத்திர முதலியனவும், அன்றிச் சனித்தல் சாதல்களும், மற்றும் தொந்த மோக்ஷங்களும், இன்னும் அரூப சொரூபத் தன்மைகளும், நாம தேயமாகிய எதுவு மில்லாது யெல்லாப் பொருளின்பாலும், மற்றெங்கணும் இடையறாது பொருந்தி இயங்காநின்ற தேசோன்மயத்தையும், மகா பரிசுத்தமான ஞானாகாயத்தையும், மேலும் உண்மை யன்பரது இதய தாமரை விரியுமாறு அதிற் பொருந்தியுள்ள பரிசுத்த வாழ்வினையும், மாசற்ற பரம்பொருளையும் சதா தியானித்தற்கு ஒப்பற்றதுமான திருவருட் செல்வத்தையே பெரியதோர் துணையாக் கொண்டு சிந்திப்போமாக.

குறிப்புரை:—இறைவற்கு சாதி சமயச்சழக்கு என்பது எக்காலத்தும் எங்கணும் நிகழாமையும், அன்றி கர்மமாதி பந்தமுத்தி பிறப்பு இறப்பு நாம ரூபாதிகள் எவையும் அவரைப் பற்றாமையும், எங்கும் பூரணப் பொருளாய் வியாபித்து எல்லாப்பொருளிடத்தும் பொருந்தி அத்துவித பான்மையாயுள்ள சோதி சொரூபனென்றும், அச்சோதியம்சம் துலங்குமிடம் பரிசுத்தா

காயமெனவும், இன்னும் பிண்டத்தில் அன்பர்களது இதயாம்பர வெளியே யெனவும் குறிப்பிட்டோதியது வேதசாரமேயா மென்க. (5)

சா. இந்திரசா லங்கனவு கானலினீ ரெனவுலக
மெமக்குத் தோன்றச்
சந்ததமுஞ் சிற்பரத்தா லழியாத தற்பரத்தைச்
சார்ந்து வாழ்க
புந்திமகி ழுறநாளுந் தடையறவா னந்தவெள்ளம்
பொலிக வென்றே
வந்தருளுங் குருமௌனி மலர்த்தாளை யநுதினமும்
வழுத்தல் செய்வாம்.

பொழிப்புரை :—(மெய்மையாகக் கருதப்பெற்ற) இம் மண்ணுலகமாயது இந்திரசாலத் தோற்றமாயும், நித்திரையிற் காணும் சொப்பனம் போன்றும், கானலிற் காணும் தண்ணீரைப் போன்றும் எமக்குத் தோற்றும்படியாகவும், எப்போதும் ஞானசத்தியினாலே அழிவற்றதாயுள்ள தற்பரம்பொருளைப் பற்றிப் பெருவாழ்வுறவும், எமது மெய்யறிவு களிப்புறுமாறுக எப்போதுந் தடைபடாது நிரதிசயானந்தப் பிரவாகம் பெருகுமாறு என்பால் கருணையோடும் வந்தருளி திருவருள் பாலிக்கும் மௌனதேசிகரது திருவடித் தாமரையை எக்காலத்தும் வாழ்த்துதல் செய்வோமாக.

குறிப்புரை :—மூல மாயாந்தரங்க சேஷ்டித காரியப்பட்ட இந்த உலகமாயது தோன்றிநின்று அழியுங் கணக்கறியாது நித்தியவுலகம் நித்திய போகம் நித்திய சரீரம் என்று இயல்பாகவே கொண்டுள்ள ஆன்ம அறிவினைத் துலக்கஞ் செய்யுமாறு ஆசிரியர் இந்திரசாலங் கனவு கானல் நீரென்னும் இயற்கைப் போலித்தன்மைய தென்றெண்ணிக் கழிந்து சிற்பர தற்பர துரிய பரசிவத்தினையே பரவஸ்துவாக் கொண்டடையும் பான்மையினை உலகமும் தாமும் நன்குணர்ந்துய்யுமாறே அருளிறை வேண்டலாகக் கூறியபடி யாயிற்றென்க. ஆகவே இப்பா அருட்குரு வணக்கமாயோதினர்.

இந்திரசாலம், கனவு, கானல் நீர் இம்மூன்றும் இல்பொருளுவமை. (6)

எ. பொருளாகக் கண்டபொரு ளெவைக்குமுதற் பொருளாகி
போத மாகித் [கிப்
தெருளாகிக் கருதுமன்பர் மிடிதீரப் பருகவந்த
செழுந்தே னாகி
யருளானோர்க் ககம்புறமென் றுன்னுத பூரணவா
னந்த மாகி
யிருடீர விளங்குபொரு ளியாதந்தப் பொருளினையா
மிறைஞ்சி நிற்பாம்.

பொழிப்புரை :—வஸ்துவாய் விளங்கியுள்ள சமஸ்த பொருள்களுக் கும் முன்னுள்ள பொருளாயும், பின்னர் ஞானமாகியும், இதனாற்கண்டறிந்த தெளிபொருட்சாரமாய் ஆராய்ந் துணர்ந்த மெய்யன்பர்தம் வறுமையொழியு மாறு வந்த செழுமைவாய்ந்துள்ள தேனேயாயும், பின்னர் தம்மருள் வாய்ந் துள்ள உண்மை யடியர்க்கு உள்ளமும் புறமும் ஒப்ப பேரானந்த மயமாயும், அவிவேகத்தன்மை அடியோடு தொலைந்து துலங்கும் பரிசுத்தமாய பரவஸ்து எதுவோ அவ்வொப்பற்ற ஒரு பொருளினை யாம் துதி செய்துய்வோம்.

குறிப்புரை :—பழம் பொருளெவைக்கும் முன்னைப் பழம் பொருளாய் விளங்கலான் முதற்பொருள் என்றார்போலும்.

அன்பர் மிடியென்றது :—ஈண்டு திருவருட்பிரசாதம் கைவரப்பெறாது ஆனந்தப் பேறின்றி அவலம்பிக்கும் அடியர் துன்பத்தை யென்க.

மாயாரகிதமாய் விளங்கும் சச்சிதானந்தப் பரம்பொருளினையே ‘ இருடீர விளங்குபொருள் ’ ளென்றார் போலும். (7)

அ. அருமறையின் சிரப்பொருளாய் விண்ணவர்மா முனிவர்
ராதி யானோர் [சித்த
தெரிவரிய பூரணமாய்க் காரணங்கற் பனைகடந்த
செல்வ மாகிக்
கருதரிய மலரின்மண மெள்ளிலெண்ணெ யுடலுயிர்
கலந்தெந் நாளும் [போற்
றுரியநடு வூடிருந்த பெரியபொரு ளியாததனைத்
தொழுதல் செய்வாம்.

பொழிப்புரை :—அருமைவாய்ந்த நான்கு வேதார்த்தங்களின் சார மாய உச்சிப்பொருளாயும், தேவர்களென்ன மேலாம் தவமுனிவர்களென்ன, ஞானசித்திகளென்ன ஆக சிலர் உள்ளிட்ட எண்ணிறந்தோர்களும் தெரித லில்லாது மயங்கும் எங்குநிறை வஸ்துவாயும், சர்வ ஏதுவாய் புனைந்துரை முதலியன கடந்துநின்ற பொருளாகியும், எண்ணுதற் கருமையாய புட்ப வாசனை யென்ன, எள்ளினுள் மறைந்திலங்கும் நெய்யென்ன, இன்னும் உடம்பூடிலங்கும் ஒருயிரென்ன ஆய இவையாதி மறைந்துள்ளவாறாக ஆன்மாக்கடோறும் கலப்புற்று எக்காலும் துரியமெனும் மேலாம் பரிசுத்த தலத்திலமர்ந்துள்ளதான ஒப்பற்ற ஓர்தனிப் பெரிய பொருள் எதுவோ அப்பரம சைதன்யத்தை வணக்கஞ் செய்வாம்.

குறிப்புரை :—நான்மறை பிரதிபாதிக்கின்ற அத்வைத முறைகொண் டிலங்கும் இலக்ஷணத்தை இலக்ஷியமா யுள்ளதன்மை இன்னன வென விதந்

தமையும், அம் மெய்ப்பொருள் விளங்கும் ஸ்தானம் துரியமென்றும் குறிப்பா யுணர்த்தியவா றுணர்க.

இவ்வுண்மைப் பரம்பொருளையே கைவல்யக் காரரும் காப்புச் செய்யு ளில் கூறிய "எந்நிலங்களினுமிக்க எழுநிலங்களில் நன்னிலமாம் துரிய பூமியே" பூரணப்பொருளை வியந்தோதியவா றுணர்க.

மலர்மண மணியொளி மஃனிய வண்ண
மாவிக்கியல்பு மபிமுக மாதலு
மாகாயம்போ லாந்தரங் கண்டாங்
கெழுமியெங்கணு மாய்க் கிளரொளிச் சடையனைப்
பின்னியொன்றாகிப் பெறுமெனு நூலே.

என இவற்றானும் நன்குணரற்பாற்று. (8)

௯. விண்ணாதி பூதமெல்லாந் தன்னகத்தி லடக்கிவெறு வெளியாய் ஞானக்
கண்ணாரக் கண்டவன்பர் கண்ணூடே யானந்தக் கடலாய் வேறொன்
றெண்ணாத படிக்கிரங்கித் தானாகச் செய்தருளு மிறையே யுன்றன்
றண்ணருஞ் சாந்தவரு டனைநினைந்து கரமலர்க டலைமேற் கொள்வாம்.

பொழிப்புரை:—ஆகாயமுதற் சகல பூதங்களையும் தனது அகண்டா கார வடிவத்துளே வைத்து, வெறுமையான மகா காயமாகி ஞானக்கண்கள் நிறையவும் தரிசித்த யாதொரு மெய்யன்பர்களது அரியதான நேத்திரத்தி னிடமாக ஆனந்த நீர்சொரியத் தக்கதாய் அன்பர் மனமாதிகள் யாதொன் றினும் செல்லாதவாறு தன்வச மீர்த்துத் தன்னவனாகச் செய்தருளும் கருணைவாய்ந்த தலைவனே தேவரீரது குளிர்ந்ததான அதிசாந்த வருளினை நினைந்துருகி எமது சிரமீது இருகரங்களையுங் கூப்புவாம்.

குறிப்புரை:—சமஸ்தமான பூதபௌதிகங்களையும் தமது அகண்டா கார வியாபக சச்சிதானந்த மகா வடிவத்துளே உடையவராய பரங்கருணைத் தடங்கடலார், ஆன்மகோடிகளுள் பரிபக்குவப்பட்டுள்ள மெய்யடியவர் களைத் தம் கருணையினாலே வலிந்தாட்கொண்டருளுந் தயாளத்துவத்தா லேயே 'தாயினுங் கனிந்த தந்தையார்' என்பது இப்பாசுரத்தில் இனிமை யாய் விளங்குகின்றது. (9)

௰. விண்ணிறைந்த வெளியாயென் மனவெளியிற் கலந்தறி வெளியி னூடும் [வாம்

தண்ணிறைந்த பேரமுதாய்ச் சதானந்த மானபெருந்
தகையே நின்பால்
உண்ணிறைந்த பேரன்பா லுள்ளுருகி மொழிகுழறி
யுவகை யாகிக்
கண்ணிறைந்த புனலுகுப்பக் கரமுகிழ்ப்ப நின்னருளைக்
கருத்தில் வைப்பாம்.

பொழிப்புரை :—பூதவெளியானது செறிந்திலங்கற்கு யேற்ற மகா பரமாகாயமாய், எனது இருதய ஆகாயத்தின் கண்ணும் பொருந்தி அதோடும் நில்லாது என் அறிவாய ஞானவெளியினும் குளிர்ச்சியாய மகா அமுதமாய் இடைவிடாத ஆனந்தந் திளைக்கச் செய்தருளும் பெருமானே, நின்பால் என் மனம்பற்றி நீராளமா யுருகி மனங்கரைந்து வார்த்தைகள் தடுமாறி பேரானந்தமுற்று கண்களில் ஆனந்த நீர்சொரிய கரங்கள் சிரமீது குவிய வதுவாய தமது திருவருட் கருணையை எனது நெஞ்சகத்தில் நிறுத்துவாம்.

குறிப்புரை :—எல்லாம்வல்ல இறைவன் ஆன்மாக்களது அன்பின் வயத்தராய் பரிபக்குவான்மாக்களைத் தேடிச்சென்று அன்னார் அறிவிலும் மனத்தினுங் கலந்து உவகை பூப்பக் கருணைபுரிந்தாளும் தீனதயாளு வென்பதும், அப்பரமபதியின் திருவருள் திரும்பிய அக்கணமே அன்பரது மொழிகுழறிக் கண்ணீர் ததும்பி மெய்ப்புளகித்துச் சதானந்த பராளாய் விளங்குவ ரென்பதும், அத்தகையாளர்க்கு அன்றுமுதல் ஜனன மரண வேதனையற்று சாயுச்சியபதவி பெறுவார்களென்பதுந் தெளிவாயது.

விழுங்கப்படுதலாவது :—“ இறைவன் அம் மெய்யடியவர்பால் பரம கருணைகொண்டு அரவணைத்து செய்ய திருக்கரங்கொண்டு சிரஞ்சூட்டி பேருவகையால் தன்னுயிருடலாதியன தந்தாள்வன் ” என்பது பெறப்பட்டது. (10)

எண்சீர்க்கழிநெடி லாசிரிய விருத்தம்

௰க. ஆதியந்தங் காட்டாத முதலா யெம்மை
யடிமைக்கா வளர்த்தெடுத்த வன்னை போல
நீதிபெறுங் குருவாகி மனவாக் கெட்டா
நிச்சயமாய்ச் சொச்சமதாய் நிமல மாகி
வாதமிடுஞ் சமயநெறிக் கரிய தாகி
மௌனத்தோர் பால்வெளியாய் வயங்கா நின்ற
சோதியையென் னுயிர்த்துணையை நாடிக் கண்ணீர்
சொரியவிரு கரங்குவித்துத் தொழுதல் செய்வாம்.

பொழிப்புரை :—தோன்றலும் இலயப்பாடலு மில்லாத மூலப்பொருளாய், எம்மைத் தேவரீரது அடிமைத்தனத்திற்காக காப்பாற்றியுள்ள நற்றாய்

போல நியாயமுள்ள சற்குருவாய், மனமென்ன, வாக்கென்ன, இவைகளுக்குத் தெரியப்படாத உண்மைப் பொருளாய், மாசிலதாய், மலமிலாததாய், விவாததர்க்கங்கள் புரிகின்ற மனப்பான்மைக்குச் சிறிது மெட்டாததாய், ஞானத்திற்கேதுவான மோனநிலையுற்றோர்பால் தோன்றிப் பிரகாசியா நின்ற பரஞ்சோதி மயமாயதை, எனது ஆன்மாவுக்கு அரிய தோன்றாத்துணையை யடையப்பெற்று கண்களில் அன்பு நீர் வடிய, இரண்டு கைகளையுஞ் சிரசின் மேல் கூப்பி வணக்கஞ் செய்வாம்.

குறிப்புரை :—பிறத்தல் இறத்தல் முதலியனவற்ற முழுமுதற் கடவுளாய பரமாத்மாவானவர் கைம்மாறு வேண்டாத கருணையினாலே ஆன்ம கோடிகளுக்கு இயல்பாகவே உரிய மும்மலங்களைக் கழுவித் தமது திவ்ய திருவடிக் கமலத்திற் றுலங்கும் திருவருட் சத்தியின் அநுக்ரகஞ்செய்வித்துப் பிறகு தமக்கடிமைகொண்டு உய்விப்பான் வேண்டியே சற்குரு மூர்த்தியாய்த் தோன்றி வந்தாட்கொண்டு மெய்ஞ்ஞானியர்களைக் காத்து ஈற்றில் தம்முருவில் இலயப்படுத்தும் என்பது முடிபுரையாம்.

சொச்சம்-மாசின்மை. (11)

௰௨. அகரவுயி ரெழுத்தனைத்து மாகி வேறு
யமர்ந்ததென வகிலாண்ட மனைத்து மாகிப்
பகர்வனவெல் லாமாகி யல்ல தாகிப்
பரமாகிச் சொல்லரிய பான்மை யாகித்
துகளறுசங் கற்பவிகற் பங்க ளெல்லாந்
தோயாத வறிவாகிச் சுத்த மாகி
நிகரில்பசு பதியான பொருளை நாடி
நெட்டுயிர்த்துப் பேரன்பா னினைதல் செய்வாம்.

பொழிப்புரை :—அகரமெனும் அட்சரமானது மற்ற சகல அட்சரங்களினும் பொருந்தியும், பின்னர்தான் தனித்தும் விளங்குவது போன்று (ஸ்ரீ சிவபெருமான்) சேதனு சேதன நாமரூபப் பிரபஞ்சங்களோடும் சர்வாண்ட புவனங்களாயும் கலந்து பின்னர் தனிப் பரம்பொருளாய் விளங்கியும், மற்றெப்பொருட்கு மிறைமையாகி, இன்னும் வாய்கொண்டுரைத்தற் கரியதானதுமாய், குற்றமற்ற கொள்கைகளில் விகற்பங்களாகிற சமஸ்தங்களினும் பொருந்தாதுள்ள மெய்யறிவு மயமாகி, அன்றியும், மிகப்பரிசுத்தமாகியும், ஒப்புயர்வற்ற சீவான்மாக்களுக்குத் தலைவனுயுமுள்ள பரம்பொருளைச் சார்ந்து பெருமூச்செறிந்து மெய்யன்பினாலே சிந்தை செய்வோமாக.

குறிப்புரை :—இறைவன், சர்வாண்ட புவன சராசரங்களினெல்லாம் தாம் தலைமையோடும் பொருந்தியும் பின்னர் அவைகளினின்று நீங்கியும் விளங்கற்கு அகார அக்ஷரத்தை ஈண்டு உவமை கூறி நிறுவியது அருமையினும் அருமையாயிற்று.

ஈதொருபால் நிற்க, உலக உற்பத்தி நாசங்களிலே தற்பரசிற்பரனுக்கு இராகத் துவேஷாதிகளில்லாமை விளக்குவான் வேண்டிச் சங்கற்ப விகற்பாதிகள் எல்லாம் பொருந்துதலில்லா மெய்யறிவு மயமானவன் என்று விரித்துரைத்தல் ஆகமக் கருத்தாம். (12)

## சின்மயானந்த குரு

### பன்னிருசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

க. அங்கைகொடு மலர்தூவி யங்கமது புளகிப்ப
வன்பினு லுருகிவிழிநீர்
ஆறுக வாராத முத்தியின தாவேச
வாசைக் கடற்குண்மூழ்கிச்
சங்கர சுயம்புவே சம்புவே யெனவுமொழி
தழுதழுத் திடவணங்குஞ்
சன்மார்க்க நெறியிலாத் துன்மார்க்க னேனையுந்
தன்னருள் கொடுத்தாள்வையோ
துங்கமிகு பக்குவச் சனகன்முதன் முனிவோர்கள்
தொழுதருகில் வீற்றிருப்பச்
சொல்லரிய நெறியையொரு சொல்லா லுணர்த்தியே
சொரூபானு பூதிகாட்டிச்
செங்கமல பீடமேற் கல்லா லடிக்குள்வளர்
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

பொழிப்புரை :—ஸ்ரீ சிவபெருமானுக்கு அழகிய கரத்தினாலே மணமலர்கொண் டருச்சித்து மெய்யெலாம் புளகாங்கிதங் கொள்ளுமாறு மெய்யன்பினாலே மனம் நீராளமாயுருகி ஆனந்தக் கண்ணீர் ஆறுபோற் பெருகுமாறு தெவிட்டுதலில்லா மோட்சாபேட்சை ஆவேச ஆசையாம் கடற்குள் ஆழ்ந்து, ஏ சங்கர! சுவய ஜொலிதமாயுள்ளவனே! பரம பிதாவே! என்று பலவாறுந் துதிபுரிந்து வார்த்தை தடுமாற தொழுதுவரும் உத்தம மார்க்க வொழுக்கமற்று தீய வொழுக்கமுடைய என்னையும் தேவரீர் தம் திருவருள் பாலித்து ஆண்டருளுவீரோ? மகா பரிபக்குவிகளாகிய சனகன், சனந்த

னன், சனாதனனன், சனற்குமாரன் முதலாய நால்வர்களும் அடிபணிந்து அருகில் அமர்ந்திருப்ப, அரிய மெய்ஞ்ஞானவழியை ஓர் சுருக்கச் சொல்லினாலே தெரிவித்து திவ்ய சொரூபாநுபூதியினைச் சுட்டிக்காட்டியருளி சிவந்த பத்மாசனத்தின்மீது கல்லால விருக்ஷத்தின் கீழ் எழுந்தருளியுள்ள முடிவான மோக்ஷப்ரதானமாயுள்ள முதற்பொருளே! திரிசிரகிரியின்கண் ஆன்மாக்கள் உய்யுமாறு எழுந்தருளியுள்ள தக்ஷிணாமூர்த்தியே! ஞானானந்தமயமான சற்குருமணியே!

குறிப்புரை :—மேல் துதிப்பாவாயது திரிசிரபுரமெனும் திவ்யபதியின் திருக்கோயில் மேவிய தட்சிணாமூர்த்தியைக் குறித்த ஓர் தோத்திரப்பா. தக்ஷிணமுக நோக்கி யமர்ந்துள்ள சற்குருமணியாம் பரம்பொருளினை மலர் கொண்டருச்சித்து புளகாங்கித முற்று அன்பின் பெருக்கால் கண்ணீர் ஆறு போல் வழிய, முத்திபெறும் ஆவேச ஆசையாம் கடலிலே ஆழ்ந்து சங்கர! சம்புவே! என்று கூறிய வார்த்தை தடுமாற வணக்கஞ்செய்யும் சன்மார்க்கமென்பதின்றி தீயவொழுக்கமுடைய எனக்கு நின் குளிர்ச்சி வாய்ந்த திருவருளீந்து ஆட்கொள்ளவேண்டி நின்ற பிரார்த்தனையாகும்.

சங்கரன் - சுகமளிப்பவன். சுயம்பு - தான்றோன்றி; முத்தியுத்தேச ஆவேசம். சம்பு - சுகோதயதாயகம். சிரகிரி - திரிசிரனால் ஆண்டுவந்தமையின் திரிசிரகிரி யெனலாயிற்று. (1)

உ. ஆக்கையெனு மிடிகரையை மெய்யென்ற பாவிநா
னத்துவித வாஞ்சையாதல்
அரியகொம் பிற்றேனை முடவனிச் சித்தபடி
யாகுமறி வவிழுவின்பம்
தாக்கும்வகை யேதிநாட் சரியைகிரி யாயோக
சாதனம் விடுத்ததெல்லாம்
சன்மார்க்க மல்லவிவை நிற்கவென் மார்க்கங்கள்
சாராத பேரறிவதாய்
வாக்குமன மணுகாத பூரணப் பொருள்வந்து
வாய்க்கும் படிக்குபாயம்
வருவித் துவட்டாத பேரின்ப மானசுக
வாரியினை வாய்மடுத்துத்
தேக்கித் திளைக்கநீ முன்னிற்ப தென்றுகாண்
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

பொழிப்புரை :—உடலென்கிற இடியத்தக்க ஆற்றங்கரையினை சத்தியமானதென்னும் மகா மூடனாய யான், அத்வைதமாயுள்ள சத்வ சிவ பரம் பொருளை யான் அடைய விருப்பங்கொள்ளுதலானது எட்டாவிடத்துள்ளதும் கொம்பிலே அமையப் பெற்றுள்ளதுமாய தேனை (உண்ண) ஓர் அங்கயீனன் விரும்பியதுபோலாகும்; இங்ஙனமாக, என் நல்லறிவானது நன்கு விளக்கமாகும்படியாய்ச் சுகப்படக்கூடியதாகக் காணோம்! தவிர, இந்த காலம்வரையில் சரியை கிரியை யோகம் என்னுமிவைகளின் பழக்கத்தினை விட்டுவிட்டது நல்ல மார்க்கமாகாது; இவையும் நிற்கட்டும், எந்தவகையாயுள்ள மார்க்கங்களுஞ் சாராததோர் பேரறிவு உருவமாய் வாக்கென்ன, மனமென்ன இவைகள் பொருந்தலாகாத பூரண வஸ்துவானது எனக்குக் கிடைக்கும்படியாக ஓர் தந்திர வழியைத் தெரிவித்து தெவிட்டலில்லா பேரானந்த யேதுவாம் இன்பக் கடலினில் வாய் வைத்து நிரம்பவும் அநுபூதி செய்யுமாறு நீ முன்வந்துதவுவது என்று கொலோ! சித்தாந்த முத்தியினுக்கு முதன்மையுடையவனே! திரிசிரகிரி விளக்க முறும்படியாகவுள்ள தக்ஷிணாமூர்த்தி யெனுந் தேவதேவனே! ஞானஸ்வரூபானந்த சற்குரு மணியே!

குறிப்புரை :—ஜீவியகால பால்ய யௌவன திசையில் உலக விவகார ரீதியிலிருந்து வாணாளை வீணாளாக்கினமை நோக்கி உடலை மெய்யென்று கருதினமையால் காலம் வீண்போக்கின அனுதாபங் கூறலாயினர். ஆயுட்கால பிற்பங்கிலே அத்துவிதவாஞ்சை கொண்டது முடவன் கொம்புத் தேனுக் காசை கொண்டதை உவமை கூறி வருந்துவதாயிற்று. ஆகவே, இனி அறிவு விரிந்து இன்பநிலை பெறுவதெங்ஙனே யென்று பதவி சித்திக்காமைக்கு இரங்குகின்றார். அன்றி சரியை கிரியா யோகமெனுஞ் சாதனை கைவல்யமாகாமையுங் குறித்துத் தன்னைத்தானே கடிந்தனர். போகட்டும்! இனி எந்த மார்க்கத்தைக் கொண்டாவது மனோவாக்குக்கு அதீதப்பட்ட முழு முதற் பரம்பொருளானது என்னகத்திருந்து எனக்கினிய உவட்டலில்லா பேரின்ப சுகவாரியைப் பெற்றுப் பெருவாழ்வுற, ஏ! சித்தாந்த முதலாயுள்ள சின்மய குருவே! நீ என்மீதிரங்கி முன்வந்தோதி யருள்வது எந்தக் காலமோ! என்று வினவெதிர்மறையாய்க் கூறலாயினர். (2)

௩. ஒளவிய மிருக்கநா னென்கின்ற வாணவ
மடைந்திட் டிருக்கலோபம்
அருளின்மை கூடக் கலந்துள் ளிருக்கமே
லாசா பிசாசமுதலாம்
வெவ்விய குணம்பல விருக்குமென் னறிவூடு
மெய்யநீ வீற்றிருக்க

விதியில்லை யென்னிலோ பூரண னெனும்பெயர்
　　விரிக்கினுரை வேறுமுளதோ
கவ்வுமல மாகின்ற நாகபா சத்தினாற்
　　கட்டுண்ட வுயிர்கண்மூர்ச்சை
கடிதகல வலியவரு ஞானசஞ் சீவியே
　　கதியான பூமிநடுவுட்
செவ்விதின் வளர்ந்தோங்கு திவ்யகுண மேருவே
　　சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
　　சின்மயா னந்தகுருவே.

பொழிப்புரை :—என்பால் பொருமை குடிகொண்டிருக்கவும், நானென்னும் ஆணவ முனைப்பு வேரூன்றி யிருக்கவும், இன்னும் உலோபித் தனமாய ஈதலில்லாமையோடு தயாளகுண மின்மையுஞ் சேர்ந்து உள்ளகத்தில் நிரம்பியிருக்கவும், பின்னும் ஆசையாகிய பெரும்பேய் ஆவேசித்திருக்கவும் இன்னும் பல குணக்கேடுகளெல்லாமும் கூடியிருக்கிறபோது, என்னறிவின்பால் உண்மைப் பரம்பொருளாய நீ வியாபித்திருத்தற்கு நியாய மின்று என்று கூறுவையே யானால், பரிபூரண னென்னும் நின் திருநாமத்தை விரித்துரைக்கும்போது அதற்குப் பொருள் வேறுமோ! பற்றுநின்ற மும்மலமெனும் நாகபாசத்தினாலே கட்டப்பட்டிருக்கிற ஆன்மாக்கள் மூர்ச்சித்துக் கிடக்கும் தன்மை விரைவாக நீங்குமாறு வலிந்துவரும் ஞானமாகிற சஞ்சீவியே! மோக்ஷமாம் பூமியிடையே நன்குற வளர்ந்தோங்கா நின்ற தெய்விகமாங் குணமுள்ள மகாமேருவே! சித்தாந்த முத்திக்கு முதன் மூலனே! திரிசிரகிரியானது விளக்கமுறுவதாக வந்தருளிய தக்ஷிணாமூர்த்தியே! ஞானமயானந்த சற்குருமணியே!

குறிப்புரை :—என்பக்ஷமாய தீக்குணங்கள் பல குடியாயிருக்குங்கால் சர்வகுண சம்பந்னாய தாம் அவைகளோடும் கலந்து அவைகளினொன்றாய் வீற்றிருத்தல் தகுதியன்றென்று கூறினும் நின்னுமமாய பரிபூரண நாமத்திற்கு அங்ஙனிருந்தாக வேண்டும் என்று தேற்றமாய்க் கூறினரென்க.

ஆன்மகோடிகள் அநாதிகால முதலாக மும்மலங்களினாலே பந்திக்கப் பட்டிருத்தலை, மலத்தால் கவ்வப்பெற்றும் நாக பாசத்தால் கட்டப்பெற்று முள்ளதாக உருவகித்து, பின்னர் அந்நாகபாசமாயது சஞ்சீவியாலன்றி நீங்காமைகொண்டு இங்கே "கடிதகல வலியவரு ஞானசஞ்சீவி" என்று தலைவனைச் சிறப்பித்தோதினர்.

இறைவன் சொல்லரிய பரஞ்சோதி வடிவமாய் மேலாம் நன்னிலமாய துரியவெளி ஸ்தானத்தில் வீற்றிருந்தருள்வதையே ஆசிரியர் "கதியான

பூமிநடுவுள் செவ்விதின் வளர்ந்தோங்கு திவ்யகுணமேரு" என்று அழகு பெற வோதினர். (3)

ச. ஐவகை யெனும்பூத மாதியை வகுத்ததனு
ளசரசர பேதமான
யாவையும் வகுத்துநல் லறிவையும் வகுத்துமறை
யாதிநூலையும் வகுத்துச்
சைவமுத லாமளவில் சமயமும் வகுத்துமேற்
சமயங் கடந்தமோன
சமரசம் வகுத்தநீ யுன்னைநா னணுகவுந்
தண்ணருள் வகுக்கவிலையோ
பொய்வளரு நெஞ்சினர்கள் காணாத காட்சியே
பொய்யிலா மெய்யரறிவிற்
போதபரி பூரண வகண்டிதா காரமாய்ப்
போக்குவர வற்றபொருளே
தெய்வமறை முடிவான பிரணவ சொரூபியே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

பொழிப்புரை:—ஐந்துவகையாகச் சொல்லாநின்ற பூதபௌதிகாதி பிரபஞ்சங்களை யெல்லாம் சிருட்டிசெய்து, பின்னர தன்பால் சராசரமாகிய அசையும் பொருள் அசையாப் பொருள்கள் முதலான சீவராசிகளையும் உண்டு பண்ணி அவைகட்குத் தக்கினவாறுள அறிவாதி கரணங்களையும் நிருமித்து, மற்றும் ஆன்மாக்களுக் குரிய வேதாகம சாஸ்திரங்களையும் ஏற்படுத்திக் கொடுத்து, சைவ முதலாய அளவிலா மதங்களையும் கற்பித்து, இதன்மேலே சமயங்களுக்கு அதீதமாயுள்ள மோனமாய சமரச நிலையினையும் கற்பித்துள்ள நீ, நின்னையான் அடையத்தக்கதான சீதளவருளினை யுண்டுபண்ணு தென்னையோ! அசத்தியமானது வேரூன்றி விருத்தியடைகின்ற மனத்தினை யுடையோராகிய அவிவேகிகள் காண்டற்கிசையாத அரிய பெரிய காக்ஷிப் பொருளே! அப் பொய்யகன்ற மெய்மையினர்தம் அறிவூடு ஞானாகார வகண்டித வடிவமாய்ப் போதலும் வருதலுமற்ற புண்ய வஸ்துவே! தெய்வீகம் வாய்ந்த நால் வேதங்களி னுச்சிப்பொருளாம் ஓம் என்னும் பிரணவத்தின் அந்தர்க்கதமான வடிவனே! சித்தாந்த உண்மை முத்திக்கு வித்தாய முதன்மையானவனே! திரிசிரகிரி விளக்கமுற எழுந்தருளி யிருக்கின்ற தக்ஷிணாமூர்த்தியே! ஞானமயானந்த தேசிகனே!

குறிப்புரை :—உலகத் தோற்றத்திற்கு ஆதியாக பஞ்சபூதங்களும், அதனாலாய பௌதிகாதி பிரபஞ்சமும் மற்றும் சராசரங்களும், அவை கட்குரிய அறிவையும், சைவமுதலான கணக்கற்ற மதங்களையும், இம்மதாதீத சமரச நிலையையும் கற்பித்த இத்தகைய முடிவிலாற்றலுடைய தேவரீர்க்கு, யான் தம்மைப் பெறுமாறு திருவருள் வருக்கவில்லை யென்பது வியக்கத்தக்கதென்றுரென்பதூஉம் அமையும்.

மற்றும் இறைவனை, பொய்யுடையார் நெஞ்சிற் பொருந்தாரென்றும், மெய்வளர் நெஞ்சினையே மேவுவாரென்றும் விளக்காதே விளக்கினமை அரியதோர் குறிப்பென்க.

இன்னும், சதுர்மறை தெய்வீக மாயதென்றும் அதில் முடிவுரையாகக் கூறியது 'பிரணவமே' யென்றும், அப்பிரணவத்தின் அம்சமே தேவரீரென்றும், மற்றும் ஆகமாதிகளின் அந்தம் எதுவோ அதுவே சித்தாந்தம் என்றும், அந்த சித்தாந்தமுறையினேற்படும் மோக்ஷத்தின் முதற்பொருளென்றும் தெளிவுற விளக்கியருளினரென்க. சித்தாந்தம்=முடிந்த முடிவு என்று பொருளாம்.

வேதம், ஆகமங்களினன்றிச் சித்தாந்த சாத்திரங்களாலேயே அரிய பெரிய உண்மைப் பொருள்களை எளிதில் நன்கறிதல் கூடுமாதலால் ஈண்டு ஆசிரியர் "சித்தாந்த முத்திமுதலே" என்றும் கௌரவித்துக் கூறினரென்க.

சித்தாந்த சாத்திரங்களாவன :—சிவஞானபோதம், சிவஞான சித்தியார், சிவப்பிரகாசம், தத்துவ விளக்கம், ஞானமிர்தம், துகளறுபோதம் இன்னும் இவைபோன்ற மற்றையனவுமாம்.

இவைகளுள் சிவஞானபோதம் முதல் நூலாகவும், சிவஞான சித்தியார் வழி நூலாகவும், மற்றவை சார்பு நூலாகவும் விளங்குகின்றன.

போக்கு வரவற்ற பொருள்=நித்திய நிர்ச்சல நிர்விகாரமான பரப்ரம்மப் பொருளாம். (4)

ரு. ஐந்துவகை யாகின்ற பூதபே தத்தினு
லாகின்ற வாக்கைநீர்மே
லமர்கின்ற குமிழியென நிற்கின்ற தென்னநா
னறியாத காலமெல்லாம்
புந்திமகி ழுறவுண் டுடுத்தின்ப மாவதே
போந்தநெறி யென்றிருந்தேன்
பூராய மாகநின தருள்வந் துணர்த்தவிவை
போனவழி தெரியவில்லை

யெந்தநிலை பேசினு மிணங்கவிலை யல்லா
    விறப்பொடு பிறப்பையுள்ளே
யெண்ணினு னெஞ்சது பகீரெனுந் துயிலுரு
    திருவிழியு மிரவுபகலாய்ச்
செந்தழலின் மெழுகான தங்கமிவை யென்கொலோ
    சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
    சின்மயா னந்தகுருவே.

பொழிப்புரை :—ஐவகைப் பூதவகைகளினு லாக்கப்பட்டுள்ள மனித சரீரமாயது தண்ணீரின் மேலமையாநின்ற குமிழியைப்போன்று அதிசீக்கிர அழிவுள்ளதென நான் அறிந்து கொள்ளாத காலம்வரையிலும் மிக்கச் சந்தோஷகரமாகவே நல்ல அறுசுவைகளோடும் புசித்து அழகாயுள்ள வஸ்திராதிகளை யுடுத்து மனங்களிப்பதே உரிய நல்ல நெறியாகும் என எண்ணியிருந்தனன்; (இவ்வாறுகச் சிலகாலம் நடந்தேறி வருகிறபோது) நினது திருவருளானது என்பால் உதயமாகி ஆதியோடந்தமா யறிவிக்க, மேற்கண்ட பொய்யனுபவாதி மகிழ்ச்சிகளனைத்தும் மறைபட்டுப்போன வகை இவ்விதமென்று நானறியேன்; தவிர எந்த முறையைக்கொண்டு எடுத்துப் பேசினும் அவை இணக்கமாகவே யில்லை; இது இவ்வண்ணமாக சாதல் பிறத்தல்களைச் சிறிது மனதினுல் நினைவுகூறும்போது மனமானது திடுக்கிட்டு அரண்டு இரவு முழுதும் இரு கண்களும் மூடி உறங்குவதே யில்லை; இவ்வுடலோ அக்கினியிற்பட்ட மெழுகென உருகுகின்றது; இவ்வாறுக என்பால் நிகழ்தற்குக் காரணம் யாதோ; சித்தாந்த முறை வந்த முக்திக்கு முதற்பொருளே! சிரகிரி மேவிய தக்ஷிண மூர்த்தியே! ஞானமய ஆனந்த தேசிகனே!

குறிப்புரை :—இந்த மானிட சரீரம் பிரிதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் ஐம்பெரும் பூத பஞ்சீகரணத்தா லாகப்பெற்றது என்றும், ஆனுல் இவ்வுடல் நீர்க்குமிழியினும் அதி அநித்தியத்துவத்தை யுடையதென்றும், இவ்வுண்மையை ஆன்மாக்கள் அஞ்ஞான வசப்பட்டுள்ள காலம் வரையில் அறியமாட்டா வென்றும், அதன்மேல் இறைவன் திருவருள் வந்து உதயமாகும்போது ஏற்கனவே அநுபவித்துவந்த போகாதிகளனைத்தும் சொப்பனம்போல் பொய்த்துத் தோன்றிவிடுமென்றும் தெளிவுபெற கூறியது சாலச் சிறந்த சத்ய மொழியா மென்க.

இன்னும், பிறத்தல் இறத்தல்போன்று கஷ்டமுறும்வகை வேறொன்றில்லை யென்றும், இவ்விரண்டினும் இறத்தல் விஷயமாக ஏற்படும் பயங்கரமானது அளவிடப்படாதது என்றும் ஊன்றிக் குறித்தனர் என்க. இதோடு

நில்லாது மரணஞாபக முறும்போது உடல் அக்கினியிற்பட்ட மெழுகென நீராளமா யுருகுகின்றதென்றது பிரத்தியக்ஷானுபவ மொழியாகின்றது. (5)

சா. காரிட்ட வாணவக் கருவறையி லறிவற்ற
கண்ணிலாக் குழவியைப்போற்
கட்டுண் டிருந்தவெமை வெளியில்விட் டல்லலாங்
காப்பிட்ட தற்கிசைந்த
பேரிட்டு மெய்யென்று பேசுபாழ்ம் பொய்யுடல்
பெலக்கவிளை யமுதமூட்டிப்
பெரியபுவ னத்தினிடை போக்குவர வுறுகின்ற
பெரியவிளை யாட்டமைத்திட்
டேரிட்ட தன்சுருதி மொழிதப்பி னமனைவிட்
டிடருற வுறுக்கியிடர்தீர்த்
திரவுபக லில்லாத பேரின்ப வீட்டினி
லிசைந்துதுயில் கொண்மினென்று
சீரிட்ட வுலகன்னை வடிவான வெந்தையே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

பொழிப்புரை :—கருமைவாய்ந்த ஆணவாதி மலத்தினாலே ஏற்பட்டுள்ள கருப்பொறை யென்னுஞ் சிறிய அறைபோன்ற விடத்தின்கண், அறிவில்லாததும் நேத்திர மில்லாததுமான ஓர் சிறு குழந்தையைப் போன்று நின் ஆணையாற் கட்டுப்பட் டிருந்தவனான என்னை அக்கட்டவிழ்த்து புறம் விடுத்து துன்பத்திற் காஸ்பதமாய காத்தல் செய்து அன்றிப் பொருத்த முள்ள நாமஞ்சூட்டி (உண்மையெனப் பொருள்தரும்) மெய்யென்னும் பாழ்த்த அநித்திய சரீரத்தினைப் பலப்படுத்துமாறு விளங்காநின்ற அநேக வித சத்தான இனிய ஆகாராதிகளை யூட்டி பெரிதும் விசாலித்துள்ள இப் புவன பூமியின்கண் பிறத்தல் சாதலாதிய பெரும் விளையாடல்கள் செய்வித்து, அழகுவாய்ந்த தம் சொல்லென்னும் வேத சாத்திர முறையினின்றும் சிறிது தவறியக்கால் அப்படிப் பட்டவர்களுக்குச் சண்டனைக்கொண்டு கண்டனைபுரிவித்து, பின்னர் இத்துயரமு மொழித்து இராப் பகலற்றதான சுகோதய தானத்திருத்தி ஆனந்த நித்திரை புரியுமின் எனச் சிறப்புறச் செய்த சகலலோக மாதாவாகிய அருளன்னை சொரூபமாய எமது பரம பிதாவே! சித்தாந்தமாகிய முடிவான மோக்ஷத்திற்கு முதற்பொருளே! திரிசிரகிரி மேவிய தக்ஷிணமூர்த்தியே! ஞானமய ஆனந்தவஸ்துவே!

குறிப்புரை :—அனுதி காலந்தொட்டு ஆணவமலத்தால் கட்டுண்டிருந்த ஆன்மாக்களைத் தனுகரண புவன போகாதிகளால் புசிப்பித்தலையே ஈண்டு காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற கண்ணில்லாக் குழவியைப் போல் கட்டுண்டிருந்தவெமை வெளியில்விட்டென்றனர்.

'இரவு பகலில்லாத பேரின்ப வீடு' என்பது இராப்பக லென்பதின்றி ஆங்கே என்றும் கோடி சூரிய பிரகாசமாய் விளங்காநின்ற சோதிமய வஸ்துவையே 'சுயபரஞ்சோதி' யென்றுங் கூறுவர் சான்றோர்.

இத்தகைய பரஞ்சோதியினையே பேரறிவினல் பார்த்து நிரதிசயானந்தமெய்தி பிரம்மானந்த பரானாக வீற்றிருப்பவரெவரோ அவர்களே பரமஞானிக ளெனப்படுவார்.

இந்த மெய்ஞ்ஞானிகட்கே பிறத்த லிறத்தலாதியனவும், பிணி மூப்பும், பசிதாக முதலிய துன்பங்களும் சிறிதும் இராவாம். (6)

எ. கருமருவு குகையனைய காயத்தி னடுவுட்
களிம்புதோய் செம்பனையயான்
காண்டக விருக்கநீ ஞானவனன் மூட்டியே
கனிவுபெற வுள்ளுருக்கிப்
பருவமதறிந்துநின் னருளான குளிகைகொடு
பரிசித்து வேதிசெய்து
பத்துமாற்றுத் தங்க மாக்கியே பணிகொண்ட
பக்ஷத்தை யென்சொல்லுவேக
னருமைபெறு புகழ்பெற்ற வேதாந்த சித்தாந்த
மாதியா மந்தமீது
மத்துவித நிலையரா யென்னையாண் டுன்னடிமை
யானவர்க ளறிவினூடுந்
திருமருவு கல்லா லடிக்கீழும் வளர்கின்ற
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

பொழிப்புரை :—கருவானது உற்பத்தியாகிப் பொருந்தும் குகையினைப் போன்றுள்ள இந்தச் சரீரத்தினுள்ளாக களிம்பூரும் செம்பினையொத்துள்ள யான் காணுமாறிருக்கிறபோது, நீ பரஞானத்தீயினை யுண்டு பண்ணியதன்றியும் மிக்கபதமாம்படி உள்ள முருகுமாறு செய்து பின்னர் பரிபக்குவந்தெரிந்து உனது திருவருளாம் குளிகையைக்கொண்டு பற்றிச் சுட்டுப் பத்துமாற்றுள்ளதான பசிய தங்கமதாகச்செய்து (அதன்மேல்) என்

னைத் தொழும்பனுக்கிக் கொண்ட நின் அன்பின் பெருக்கத்தினை என்னென்றெடுத்துரைப்பேன்! அருமை பெருமை வாய்ந்துள்ள வேதாந்தமென்ன, சித்தாந்தமென்ன இவைகளாம் முதல் முடிவுகளிலும் அத்வைத நிலையினையுடைத்தாகி என்னை ஆண்டு கொண்டருளி, நினக்கு ஆட்பட்டவர்களுடைய மெய்யறிவினுள்ளும் அழகுவாய்ந்த கல்லால விருக்ஷத்தின் கீழும் எழுந்தருளி வாழ்கின்ற சித்தாந்த முடிந்த முடிவாகிய மோக்ஷ முதற்பொருளே! திரிசிரகிரி விசேடித்தற் பொருட்டதாக வீற்றிருக்கின்ற தக்ஷிணாமூர்த்தியாம் பரசிவமே! ஞானஸ்வரூபானந்த தேசிகனே!

குறிப்புரை :—ஆசிரியர், மாயாபந்த முடைமையால் தம்மைக்களிம்பு சேர் செம்பென்றும், அவ்வகையாயுள்ள தம்மைக், களிம்பினை அக்கினிகொடு தகித்துத் தங்கமாக்குவது போன்று ஞானமெனும் அக்கினியினாலே சுத்திகரித்ததையே ஈண்டு "ஞானமாம் அனல்மூட்டி கனிவுபெற உள்ளுருக்கி" யென்பதோடுமல்லாது அந்த தாமிரத்தைப் பதந்தெரிந்து இரசவாத குளிகை கொண்டு சுடுவதுபோல அருள் என்னும் குளிகையான் பரிசித்து வாதஞ் செய்தமையான் அருளாம் குளிகையாற் பரிசித்து சுட்டு எனவும் பொருந்தவோதி, திரும்பவும் அச்செம்பு பத்துமாற்றுத் தங்கமாயதுபோல் தன்னைப் பக்குவத்தில் அடிமைகொண்ட பக்ஷத்தை நான் என் சொல்லுகேன் என்றும் வியந்தோதினர்.

பின்னர், இறைவனது விசேடத்தை முக்கியமாக் கொண்டுள்ளது வேதத்தின் முடிந்த பொருளான உபநிடதாதிகளும், ஆகமாந்தமாய சித்தாந்த பொருளுமேயெனவும், மற்றும் வேதாந்த, சித்தாந்த, கலாந்த, போதாந்த, நாதாந்த, முத்தாந்த மென்னும் ஆறு அந்தங்களும் சமரசாந்தமாய விடத்தும் விசேடிக்கப் பெற்றதென்றும் கூறுனருமுளர். (7)

௮. கூடுத லுடன்பிரித லற்றுநிர்த் தொந்தமாய்க்
    குவிதலுடன் விரிதலற்றுக்
குணமற்று வரவினொடு போக்கற்று நிலையான
    குறியற்று மலமுமற்று
நாடுதலு மற்றுமேல் கீழ்நடுப் பக்கமென
    நண்ணுதலு மற்றுவிந்து
நாதமற் றைவகைப் பூதபேதமு மற்று
    ஞாதுருவின் ஞானமற்று
வாடுதலு மற்றுமே லொன்றற் றிரண்டற்று
    வாக்கற்று மனமுமற்று
மன்னுபரி பூரணச் சுகவாரி தன்னிலே
    வாய்மடுத் துண்டவசமாய்த்

ீதடுதலு மற்றவிட நிலையென்ற மௌனியே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

பொழிப்புரை :—சேர்தலும் நீங்குதலு மில்லாததாகியும், யாதா மோர் தொடர்பு மற்றவனுகியும், சுருங்கலும் விரிதலுமில்லாத தாகியும், யாதொரு தன்மையுமில்லாத பண்பனுமாகியும், தோன்றலுடன் மறைதலு மில்லாத தாகியும், சாசுவதமான அடையாளம் இல்லாத தாகியும், மலர கிதமாகியும், யாதாமொன்றை அடைதலுமில்லாத தாகியும், எப் பக்கத்தும் பெறுதலு மில்லாத தாகியும், ஒலி, வட்டம் இவை யற்றதாகியும், ஐந்து பூத பேத வகைகளுமில்லாத தாகியும், காண்பான் காட்சியற்ற தாகியும், வாட்ட மடைதல் முதலியனவு மில்லாத தாகியும், மேலும், ஒரே தன்மையற்ற தாகியும், அன்றி இரு பாகுபாடற்றதாகியும், வார்த்தையும் மனமும் இல்லாததாகியும், நிலையுற்ற பரிபூரணமாய் விளங்கிய இன்பமய சாகரத்திலே வாய்வைத்து அருந்துதல் புரிந்து பரவசப்பட்டு 'தேடலு மற்று விடமே யதார்த்தமான நிலைக்கள' மென்று உபதேசஞ்செய்த மௌன முத்திரைவாய்ந்த சற் குருவே! சித்தாந்தமென்னும் முத்தி முடிவான பொருளே! திரிசிரகிரி மேவிய தக்ஷிணாமூர்த்தியே! ஞான வடிவானந்த தேசிகனே!

குறிப்புரை :—கூடுதல் பிரிதல்=எவற்றினும் பொருந்தியும் பொருந் தாது மிருத்தலாம். நிர்த்தொந்தம்=யாதொரு தொடர்புமின்மை. நிலை யான குறி=நாமரூபாதிக மின்மை. விந்துநாதம்=சுத்தமாயை. சுக வாரி=சுகசொரூபனுய இறைவன், ஆனந்தக் கடலென்பாரு முளர். வாக்கு மனமற்றது=வாசாமகோசரமான பரம்பொருள். (8)

௯. தாராத வருளெலாந் தந்தருள மௌனியாய்த்
தாயனைய கருணைகாட்டித்
தாளிணையென் முடிசூட்டி யறிவிற் சமாதியே
சாசுவத சம்ப்ரதாய
மோராமன் மந்திரமு முன்னுமன் முத்திநிலை
யொன்றோ டிரண்டெனுமை
லொளியெனவும் வெளியெனவு முருவெனவு நாதமா
மொலியெனவு முணர்வுமுமற்
பாராது பார்ப்பதே யேதுசா தனமற்ற
பரமவனு பூதிவாய்க்கும்
பண்பென் றுணர்த்தியது பாராம லங்நிலை
பதிந்தநின் பழவடியர்தஞ்

சீரா யிருக்கநின தருள்வேண்டு மையனே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

பொழிப்புரை:—சாதாரணமாகக் கிடைத்தற் கருமையாயுள்ள தேவரீர் தம் திருவருட் பிரசாதத்தினை (முற்றிலும்) எனக்கு அநுக்ரகிக்கும்படி மகா மௌன குருவடிவாய் அன்னையினை யொப்ப கிருபை பாலித்து நின் உபய பாத கமலங்களையும் எனது சிரசின்கண் தரித்து அறிவின்பாற் கூடத்தகும் நிஷ்டையினையே நிலையான வழக்கமென்ன யான் நன்காய்ந் துணராதபடியும், மற்றும் மந்திர ஜெபத்தைப்பற்றிச் சற்றும் நினைத்தல் செய்யாமலும், மோக்ஷநிலைமை ஒன்று அல்லது இரண்டென்று உரையாமலும், பிரகாசமயம் எனவும், பரமாகாய மெனவும், அன்றித் திருவுருவென்றும், நாதமாகிய சப்த மெனவும், அறிதலின்றிக் காணாது காணப்பெறுவதே எவ்வகைத்தான சாதன முறைகளு மல்லாதபடி ஒப்பற்ற அநுபவநிலை பெறுதற்குரிய தன்மை யதென்று நீ (எனக்கு) அறிவூட்டியுள்ளதை யான் நன்காய்ந் தறியாதபடி அந்த பெருநிலையிலே நின்ற நினது பழவடியாராம் பூர்வ அன்பர்களது நன் முறையாகவிருக்கிற அந்தத் திருவருட் பிரசாதம் கிடைத்தல் வேண்டுமென் கடவுண்மணியே! முடிவான முத்திக்குரிய முதற்பொருளே! திரிசிரகிரி மேவிய தக்ஷிணாமூர்த்தியே! ஞானானந்தமய சற்குருமணியே!

குறிப்புரை:—பாராது பார்த்தல்=ஊனநேத்திரங்களால் நோக்காது ஞான நேத்திரத்தாலறிதல். "கூர்த்த மெஞ்ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தி நோக்கரிய நோக்கே, நுணுக்கரிய நுண்ணுணர்வே" என்றார் மணிவாசகரும்.

இறைவன் திருவருள் பெறுமாறு இருவினையொப்பு மலபரிபாக முண்டாகச் சத்தி பாதம் விளைந்தவாறு மானைக்காட்டி மானைப்பிடிப்பது போலச் சிவமே மானிட வேடங்கொண்டு குருமூர்த்தமா யெழுந்தருளி, அவர்களது உடல், பொருள், ஆவியாகிய மூன்றையுங் கைக்கொண்டு மெய்ஞ்ஞானப் பிரசாதமளித்து திரிமலமொழித்து அவர்களைத் தன்னோடு சுத்தாத்துவித நிலையை யடையச் செய்தலாகும். உதாரணமாக வள்ளலார்:—

"குருவுருவங் கொண்டிக் குவலயத்துட் டோன்றிப் பருவரலை நீக்கும் பரன்."

திருவாசகம்

அருபரத் தொருவ னவனியில் வந்து
குருபரனா கியருளிய பெருமையைச்
சிறுமையென் றிகழாதே. (9)

ம. போதமா யாதிநடு வந்தமு மிலாததாய்ப்
புனிதமா யவிகாரமாய்ப்
போக்குவர வில்லாத வின்பமாய் நின்றநின்
பூரணம் புகலிடமதா
வாதரவு வையாம லறிவினை மறைப்பதுநி
னருள்பின்னு மறிவின்மைதீர்த்
தறிவித்து நிற்பதுநி னருளாகி லெளியனேற்
கறிவாவ தேதறிவிலா
வேதம்வரு வகையேது வினையேது வினைதனக்
கீடான காயமேதென்
னிச்சா சுதந்தரஞ் சிறிதுமிலை யிகபர
மிரண்டினுண் மலைவுதீரத்
தீதிலருள் கொண்டினி யுணர்த்தியெனை யாள்வையோ
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

பொழிப்புரை :—சுத்தபரஞான சொரூபமாகியும், முதல், நடு, முடிவு என்னும் மூவிடமு மற்றதாகியும், மிக்க பரிசுத்த வத்துவாகியும், யாதொரு விகாராதிக ளற்றதாகியும், ஒழிதல் மீளுதலற்ற ஆனந்த சொரூபமாகியும், நிலைபெற்றதான உனது பரிபூரணமாய நிலையினையே அடைக்கலத் தாயக மாக்கொண்டு அதன்பால் இச்சை கொள்ளாத வகையாக எனது சிற்றறிவை மறைத்தலும் நினது திருவருளேயாகும்; மற்றும், என்னறியாமையை ஒழித்து எனக்குள்ளே வியாபித்து விளக்கி நிற்பதும் நினது திருவருளே யாகும்; அவ்வாறுயின், எளியேற்கு அறிவென்பது யாதோ? அறிவின்றி குற்றமுண்டாந் தன்மையாதோ? அவ்வறிவு அறியாமைக்கு ஏதுவாய வினை யாதோ? அவ்வினைகட்கு ஸ்தானமாகிய உடலேது? எனக்குள்ள இச்சை யாம் சுதந்தரங்கள் சிறிதேனுமின்றாகும்; இகபர மென்னும் இரண்டிடத்தி னும் என் மயக்கமொழியு மாறதாக நினது மெய்யான திருவருளினைக் கொண்டு இனியெனக் கறிவித்து எனைத் தொழும்பனாகக் கொள்வையோ! முடிவுற்ற ஓர் முடிவான முத்திக்குரிய முதற்பொருளே! திரிசிரகிரி மேவிய தக்ஷிணாமூர்த்தியே! ஞானமயானந்த சற்குருவே!

குறிப்புரை :—ஈசன் ஆன்மாக்களது தற்போத மறிந்து அறிவினை மறைக்கும், பின்னர் தற்போதங் கழன்று சிவபோத மாயபோது அம்மறைத் தலை யொழித்து ஞானத்தை யளிப்பதும் செய்வதும் பேரருட்டன்மை யென்பர் மேலோர்.

இறைவன்றன் உத்தமமான வடிவம் மெய்ஞ்ஞான வின்பமே யென்றும், அப்பொருள் பொய்ப்பொருள்போல் ஆதியந்த மில்லாத நித்திய வஸ்து வென்றும், மற்றும் அம்மெய்ப் பரமன் விகாராதிகளற்ற பூரண புனித முடையான் என்றும், இத்தகையானை மறைத்துவைத்தல் மாயா விநோத மென்றும், பின்னர் பரிபக்குவ நோக்கி உண்ணின்று ஒளிர்வது அப்பா னருளே யென்றும், ஆன்மாக்களார் தற்சுதந்தர மற்றவர்க ளென்றும் இறைவன் திருவருள் வந்துதேக்க, அதன் பின்னரே மாயாபந்த மொழிந்து மற்றும் பரமுத்தியென்றும், சித்தியார் முதலிய நூல்கள் சிறந்தோது மென்க. சான்றாக :—

'ஆசிலாசார தபோதன ரின்புறு, வாசகாதீத மனோலய பஞ்சரன்' என்றார் மேலோர். (10)

யக. பத்திநெறி நிலைநின்று நவகண்ட பூமிப்
பரப்பைவல மாகவந்தும்
பரவையிடை மூழ்கியு நதிகளிடை மூழ்கியும்
பசிதாக மின்றியெழுநா
மத்தியிடை நின்றுமுதிர் சருகுபுனல் வாயுவினை
வன்பசி தனக்கடைத்து
மவுனத் திருந்துமுயர் மலைநுழை தனிற்புக்கு
மன்னுதச நாடிமுற்றுஞ்
சுத்திசெய் தும்மூல ப்ராணனோ டங்கியைச்
சோமவட்டத் தடைத்துஞ்
சொல்லரிய வமுதுண்டு மற்பவுடல் கற்பங்க
டோறுநிலை நிற்கவீறு
சித்திசெய் துஞ்ஞான மலதுகதி கூடுமோ
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

பொழிப்புரை :—(ஆன்மாக்களார் ஆசாபாசங்களோடு) பக்தி மார்க்கத்திலே (மிக அழுத்தமாய் மனதை) நிலைநிறுத்தினும், ஒன்பது கண்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ள இந்த பூமண்டல முற்றிலுமே பிரதக்ஷணமாகச் சுற்றி வந்திடினும், அன்றிக் கடல் ஸ்நானம் புண்ணிய நதிஸ்நானங்கள் செய்து வந்திடினும், கொடிய பசிதாகங்களை யடக்கிக்கொண்டு நாற்புறமும் நெருப் பிட்டு அதன் மத்தியில் நின்றும், உதிர்ந்த சருகாதி கிழங்குகளையும், தண் ணீர், வாயு இவைகளை உட்கொண்டு பசியாற்றி வந்தும், மோனமாம் நன்

னிலே கொண்டிருந்தும், உயர்வாகிய மலையின் குகைகளிலிருந்து தவ மியற்றியும், மற்றும் நிலையாயுள்ள பத்துவித நாடிகளையுஞ் சுத்தஞ் செய்தும், மூலாதார வாயுவோடு அக்கினியை சந்திர மண்டலத்திற் செலுத்தியும், அன்றி (சீதள பூர்ண மதிமண்டலச் செழுந்) தேன்மடை திறந்துண்டு களித்திருந்தும், இந்த கேவலமான பொய் உடம்பானது ஊழிகாலங்கள் வரை நிலைத்திருக்குமாறும், மற்றும் பல சித்திகள் புரிந்தும், மேலான மெய்ஞ் ஞான மின்றி மோக்ஷானுபவம் கிடைக்கற்பாலதோ, கிடைக்காதென்றபடி ; முடிவான மோக்ஷ முதற்பொருளே! திரிசிரகிரியின்கண் ஓங்காநின்ற தக்ஷிணாமூர்த்தியே! ஞானஸ்வரூபானந்த சற்குருமணியே!

குறிப்புரை :—இத்துரியாதீதத்தி லிமைக்கொட்டு மளவானாலும்
உற்ற கண்ணாடிதன்னில் உளுந்துருள் பொழுதானாலுங்
கைத்தலத்தா லாவின்பால் கறக்குறுங்காலமேனுஞ்
சித்துருவாகிநின்றே சின்மயவீடு சேர்வார்.

இச்சுருதி வாக்கிய பிரகாரமாக ஞானமென்ற நன்னிலே பெறாத வரையிலும் பூமிவலம், தீர்த்தயாத்திரை, பஞ்சாக்கினி மத்தியத்வம், சருகு, கிழங்கு தண்ணீர், வாயு முதலிய பக்ஷித்தும், யோகாநுட்டானஞ் செய்தும், மதியமிர்தமுண்டல், எட்டுவகைச்சித்தி முதலிய பல கர்மாக்களால் சிறிதும் பிறவா நெறியினை யடைந்து இறைவனோடு அத்துவித நிலையாயிருத்தல் இயலாவென்று உறுதிப்பட ஓதினமை நன்கு சந்தேக விபரீதமறக்கோடல் மரபாம்.

மூலபிராணவாயுவினை, மெள்ளவிரேசித்து மெய்விம்மி பூரித்து
கொள்ளுமின் கும்பங் குறித்து,
இரேசக முப்பத்திரண்டது மாத்திரைப்
பூரகம் பத்தாறு புகும்,
கும்பகம் நாலோ டறுபது மாத்திரைத்
தம்பித்திடுவது தான்,
முன்னமிரேசி முயலுபின் பூரகம்
பின்னது கும்பம் பிடி.




என்றோதிய ஔவை ஞானியின் கருத்தின்படி திடப்பிரக்ஞை கொண்டு மூலாதார திரிகோண மத்தியில் மாணிக்கப் பீடமேவி விளங்கும் விநாயக மூர்த்தியை வேண்டி ஆண்டிருந்து மூலவன்னியோடும் பிராணவாயுவினை யெழுப்பி மீதான வழிச்சென்று சந்திரமண்டலத்திற் றுக்கலாம் வாசி யோகத்தையே ஆசிரியர் "சந்திரவட்டத் தடைத்து" என்று கூறினர்.

ஹட யோக அப்பியாசியாகிய விசுவாமித்திரர் பிராணாயாம முதலிய யோகதாரணையைப் பற்றிக் கூறிய விவரங்கள் ஆத்மானந்த போதம் 64-ம் பக்கத்தில் விரிவாய்க் காண்க.

அக்கினிதேவனுக்கு நாவு ஏழாம்; ஆதலானே ‘ஏழு நாமத்தியிடை நின்றும்’ என்றும் குறிப்பாகக் கூறினரென்க. (11)

---

## மௌனகுரு வணக்கம்.

---

க. ஆசைநிக ளத்தினை நிர்த்தூளி படவுதறி
யாங்கார முளையையெற்றி
அத்துவித மதமாகி மதமாறு மாறுக
வங்கையின் விலாழியாக்கிப்
பாசவிரு டன்னிழ லெனச்சுளித் தார்த்துமேற்
பார்த்துப் பரந்தமனதைப்
பாரித்த கவளமாய்ப் பூரிக்க வுண்டுமுக
படாமன்ன மாயைநூறித்
தேசுபெற நீவைத்த சின்முத்தி ராங்குசச்
செங்கைக்கு ளேயடங்கிச்
சின்மயா னந்தசுக வெள்ளம் படிந்துநின்
திருவருட் பூர்த்தியான
வாசமுறு சற்சார மீதென்னை யொருஞான
மத்தகஜ மெனவளர்த்தாய்
மந்த்ரகுருவே யோக தந்த்ரகுருவே மூலன்
மரபில்வரு மௌனகுருவே.

பொழிப்புரை:—ஆசை யென்கின்ற விலங்கினை தூளியாமாறு வீசி யெறிந்து, மமதாங்காரமெனும் முளையினை வேர் களைந்தெறிந்து, அத்வைதமாய மதத்தினைக்கொண்டு அறுவகை மதங்களும் நதிகளாகத் துதிக்கையினுமிழ் நீராகச்செய்து, பாசமா மிருளினைத் தனது நிழலாகக் கருதி கோபங்கொண்டு கெர்ச்சித்து மேனோக்கிப் பரவிய மனத்தினைப் பெரியதோர் பெருங்கவள உருண்டையாக நிரம்பவு முண்டு, நெற்றிப்பட்டம் போன்றுள்ள மாயையை நசுக்கி, பிரகாசிக்குமாறு நீ அமைத்துள்ள ஞான முத்திரையாம் அங்குசத்தினைத் தரித்துள்ள செங்கையினிடமாக அடங்குதலாகி ஞானமாய பேரானந்த வெள்ளத்தாழ்ந்து, நினது திருவருள் நிறைவினில் வாசமாயிருக்கும் விசாலித்த கூடத்திலே அடிமையை ஓர் ஞானம்சமத்த யானைபோன்று வளர்த்தனை; ஏ மந்திர குருவே! தாந்திரீக யோகாசாரியனே! திருமூல நாயனாரது மரபில் தோன்றி வந்துள்ள மோன சற்குருநாதனே!

குறிப்புரை :—ஆசையினை=திகளம் என்றார். அதாவது விலங்காம் சங்கிலியினைக் கெடுமாறு யெறிந்து என்றார் ஆசிரியர் ஈண்டு. மற்றோரிடத்து இதனையே பேயெனவும் உருவகித்துள்ளார்.

'ஆசாநிகளந் துகளாயினபின், பேசாவனுபூதி பிறந்ததுவே' என்றார் அருணகிரியாரும்.

இதனால் ஆசையாம் காற்றளை அறுத்தெறியப்பட்ட பின்னரே பேச்சற்ற மோனநிலை கை வந்த தென்பது பெறப்பட்ட தறிக.

தீய ஆசையைச் சங்கிலியாகவும், ஆங்காரத்தை முளையெனவும், அத்துவிதத்தை மதமாகவும், மதம் ஆறையும் ஆறுகதிகளாகவும், பாசமாம் இருவினைத் தனது நிழலாகவும், மனத்தினை பெரிய கவளாகார மாகவும், மாயையை நெற்றிப்பட்ட மாகவும், சின்முத்திரையை அங்குசமாக்கி, தன்னையோர் ஞான மத்தயானை யெனவும் உருவகித்து, இங்ஙனமாய யானையை வளர்த்தனையே! யென்று வியந்தமையாகும். ஆறுமதம் - புறச்சமயம் அறுவகையாகும். அதாவது: உலோகாயதம், புத்தம், சமணம், மீமாம்சம், பாஞ்சராத்திரம், பட்டாசாரியம். என இவை யாறுமாம். இவற்றுள் பாஞ்சராத்திரம் பட்டாசாரியம் இவ்விரண்டும் வைணவ உட் பிரிவாகும். யோகதந்த்ர மாவது=யோகநூலாகும். (1)

உ. ஐந்துவகை யாகின்ற பூதமுத லாதமு
மடங்கவெளி யாகவெளிசெய்
தறியாமை யறிவாதி பிரிவாக வறிவார்க
ளறிவாக நின்றநிலையிற்
சிந்தையற நில்லென்று சும்மா விருத்திமேற்
சின்மயா னந்தவெள்ளந்
தேக்கித் திளைத்துநா னதுவா யிருக்க நீ
செய்சித்ர மிகநன்றுகா
ணெந்தைவட வாற்பரம குருவாழ்க வாழ்வரு
ளியநந்தி மரபுவாழ்க
வென்றடியர் மனமகிழ வேதா கமத்துணிபு
இரண்டில்லை யொன்றென்னவே
வந்தகுருவே வீறு சிவஞான சித்திநெறி
மௌனோப தேசகுருவே
மந்த்ரகுருவே யோக தந்த்ரகுருவே மூலன்
மரபில்வரு மௌனகுருவே.

பொழிப்புரை :—ஐந்து வகைப்பட்ட பூதங்கள் முதல் நாதம் வரையுள்ள வெல்லாம் வெளியாமாறு பகிர்முகமாய் விரித்து, மடமை யென்ன அறிவென்ன இவைகளை வேறு வேறாகப் பிரித்தறிய வல்லவர்கள் மெய்யறிவினர்களாக நின்றவிடத்து 'மனமொடுங்க நிற்க' வென்று அவர்களைச் சும்மாயிருக்கு மாறருளி, அதன்மேல் ஞானமயமாம் திவ்யானந்த வெள்ளத்திலே நிரம்பவும் அநுபூதி செய்து யான் அதுவாயிருக்கிற அத்துவித பான்மையாக நீ செய்துவந்த விசித்திரம் மிக்க நன்றே யாகும்! வடவால விருக்ஷத்தின் கீழ் நிலவும் என் தந்தையுமாய பரம சற்குருநாதன் வாழ்க; அங்ஙனம் பெருவாழ்வெய்து மாறருளிய நந்திதேவர் மரபும் வாழ்கவென்று அன்பராவார் களிப்புறுமாறு வேதவாகமாதிகள் நிலைநாட்டியது துவிதமன்றி அத்துவிதமாகு மென்றருளுவதற்காகவே கருணையோடும் எழுந்தருளிவந்த என் சற்குருமணியே! சிறப்புவாய்ந்த சிவஞான சித்திபெறுமாறதான மார்க்கமுள்ள மௌனவுபதேசஞ் செய்தற்கென வந்தருளிய பரம ஆசாரிய மூர்த்தியே! மந்த்ர குருவே, யோகதந்த்ர குருவே! திருமூலரது மரபினில் வந்த மௌன குருவே!

குறிப்புரை :—பூதமுதல் நாதமீறாகவுள்ள தத்துவங்கள் 36 வகைப்படும். அவையிற்றுள் பூதங்கள் 5.—பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்பன. ஞானேந்திரியங்கள் 5.—சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, சிங்ஙுவை, ஆக்கிராணம். தன் மாத்திரைகள் 5.—சப்தம், பரிசம், ரூபம், இரசம், கந்தம். கன்மேந்திரியங்கள் 5.—வாக்கு, பாதம், பாணி பாயுரு, உபத்தம். அந்தக்கரணங்கள் 4.—மனம், புத்தி, அகங்காரம், சித்தம். ஆக, ஆன்மதத்துவங்கள் 24. வித்தியாதத்துவம் 7.—அதாவது :—காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை. சிவதத்துவம் 5.—சுத்தவித்தை, ஈஸ்வரம், சாதாக்கியம், சத்தி, சிவம். ஆக, அகக்கருவிகள் 36 ஆம்.

ஈறு ஆன நாதம் என்றார் :—அதாவது 10 வகையாயுள்ள ஒலியென்ப. மணி, கடல், ஆனை, சங்கு, குழல், மேகம், வண்டு, தும்பி, யாழ், பேரிகை ஆக இவைகளின் தொனிகளை யொத்தொலிக்கும் சப்தமாம். இதனால் பஞ்சபூதங்கள் முதலாக நாதம் வரையுள்ள 36 தத்துவங்கட் கப்பாலறிவாகாரமாயுள்ள பெரியார் எவரோ அவர்களே தன்னை முன்னறிந்து பின்னர் தலைவனையுமறியும் பேராற்றலுடையோராவ ரென்றும் நன்கு விளங்கா நிற்கும். மற்றும் இன்னவரே சும்மாயிருந்து சுகானந்த மெய்துவ ராகலின் ஈண்டு ஆசிரியர்க்கும் அந்நிலையினை யெடுத்தோது மாறாக சற்குருமூர்த்தியும் நாடிவந்தருளினா ரென்க.

இங்ஙனம் பரமாசாரியரா மௌன குருவுபதேசம் பெற்ற இவ்வாசிரியரும் அறிவாக நின்ற நிலையின்கண் சும்மாயிருந்து தானது வாகுமாறு "நீ செய்யும் சித்ரம் மாவிசித்ரம்" என்று மிகமகிழ்ந்து அம்மௌன குருவை வியந்தோதினர் என்க. (2)

ரு. ஆதிக்க நல்கினவ ராரிந்த மாயைக்கெ
னறிவன்றி யிடமில்லையோ
அந்தரப் புஷ்பமுங் கானலின் னீருமோ
ரவசரத் துபயோகமோ
போதித்த நிலையையு மயக்குதே யபயநான்
புக்கவரு டோற்றிடாமற்
பொய்யான வுலகத்தை மெய்யா நிறுத்தியென்
புந்திக்கு ளிந்த்ரசாலஞ்
சாதிக்குதே யிதனை வெல்லவு முபாயநீ
தந்தருள்வ தென்றுபுகல்வாய்
சண்மதஸ் தாபனமும் வேதாந்த சித்தாந்த
சமரசநிர் வாகநிலையு
மாதிக்கொ டண்டப் பரப்பெலா மறியவே
வந்தருளு ஞானகுருவே
மந்த்ரகுருவே யோக தந்த்ரகுருவே மூலன்
மரபில்வரு மௌனகுருவே.

பொழிப்புரை :—இம்மாயாதேவிக்கு இவ்வளவு ஆதிபத்திய மளித்தவர் யார்? அப்படியே அளித்தாலும் இதற்கு என் அறிவைத்தவிர வேறிடங் கிடையாதோ! ஆகாயத் தாமரையும் கானலின் ஜலமும் ஓர் சமயத்திற்கு உதவக்கூடுமோ? தம்மால் போதனை செய்யப்பெற்ற அந் நிலைமையையும் மயங்கச் செய்துவிட்டதே! யான் அடைக்கலமாகப் புகுந்த திருவருளானது கொஞ்சமுந் தோன்றாதபடி இந்தப் பொய்யுலகத்தினை மெய்யெனப் பகட்டி எனது சிற்றறிவின்பால் இந்திரஜால வேலைகளை நடத்தி வருகின்றதே! இதனை ஜெயங் கொள்ளுமாறு ஓர் தாந்திரீக வழியை நீ யெனக்கு உபதேசித்தருள்வது எக்காலமோ? தெரிவிப்பாய்; அறுவகைத்தான சமய ஸ்தாபனங்களை நிலை நாட்டத்தக்க மகா சாமர்த்தியத்தையும், இன்னும் வேதாந்த சித்தாந்த வகையினைச் சமரசமாய் அநுபூதி செய்து வரும் தன்மையையும், விசாலித்துள்ள திக்குகளோடுங் கூடியதான அண்டபுவனங்கள் யாவும் அறியுமாறு வ மெய்ஞ்ஞானதேசிகனே! எழுந்தருளி வந்தருளும். மந்திரோபதேசஞ் செய் சற்குருவே! யோகதாந்திரீக குருவே! திருமூலனது மரபிற் றோன்றி வந்த மோனகுருமணியே!

குறிப்புரை :—பொய்ப்பட்ட காரியாதிகளைவற்றினையும் மெய்ப்பட்டதாக எண்பிக்கும் சுபாவமுடையதே மாயைக்கு உரிய இலக்ஷணமாகும். ஆயிரத் தெட்டண்டத்தையும் தனக்குள்ளடக்கி, அவைகளுள் பொருந்தி வாழாநின்ற பல் கோடிக்கணக்கான 84 லட்ச யோனி பேதங்களையும் தனது

ஒப்பற்ற வல்லமையால் போகானுபவங்களில் அழுத்தி யாண்டுவருமேல் அம் மாயாதேவியின் பெருமையை யாவரே அறிந்து அளவிடவல்லார்! அம் மம்ம!! வாய்கொண்டுரைப்ப வகையின்று!!! இந்த அம்மை பெருமை இம் மட்டாக.

இப்படிப்பட்ட அம்மைக்கு ஆதிக்கங் கொடுத்தவர் யாவரென்றூர் நமது அரிய பெரிய ஆசிரியர் தாயுமான சுவாமிகள்; அது தெரியவேண்டுவ தவசியமே.

முன் ஓர் காலத்திலே 1008 அண்டத்தையும் 108 சதுர்யுக காலபரி யந்தம் அரசாளும்படி சூரபத்மனுக்கு அநுக்கிரகித்தது எந்த முடிவிலாற்ற லுடைய பரமபதியோ அந்த ஒப்புவமையற்ற நற்பரமபதியே யென்பது நிராடங்கமாகப் புலனாகின்றது.

இத்தகைய மகாசக்திவாய்ந்த சூரபத்மன் என்னும் அரக்கனை ஞான சக்தி யென்னும் வேலாயுதத்தால் மாய்த்த அதி தீரவீர மகாசூர சிகாமணி யாம் எந்தையார், செந்தில்மாநகர் சிவசுப்ரமண்யரே யென்புழி அவர் பெருமை யளவிடவல்லார் யாவரோ வறியேம். ஆகவே, இவ் வறுமுகப் பெருமானுக்கு இம்மகாசக்தியினைத் தந்தருளினவர் அவர் தந்தையாராய தனிப் பரசிவமேயாதலாலும், அவர்பாலே அம்மாயை லயமாதலாலும் அவராற்றலை யளத்தற்கவரே யன்றி மற்றெவரு மெங்கு மில்லையாம்.

ஆனல் சிலர், அவர் தம் அடியவராம் மெய்ஞ்ஞானியர் மாயையை வென் றுளாரென்று வெகுதிடமாய்க் கூறுவர்; ஆயினும், அப்பரசிவத்தின் திரு வருளாலே யென்று நன்கறியத்தகும். அன்றி இந்நூலாசிரியரான தாயுமானர் இப்பாடலின் கண்ணே, "இம்மாயையை வெல்லவு முபாயம் நீ தந்தருள்வ தென்று புகல்வாய்" என்று வேண்டியமையே சாலும்.

இங்கு சண்மதஸ்தாபன மாவது:—சைவம், வைணவம், வாமம், காளா முகம், மாவிரதம், பாசுபதம் என்னும் ஆறுமாம். இவையே அகச் சமயங் களாகும். (3)

ச. மின்னனைய பொய்யுடலை நிலையென்று மையிலகு
விழிகொண்டு மையல்பூட்டு
மின்னார்க ளின்பமே மெய்யென்றும் வளர்மாட
மேல்வீடு சொர்க்கமென்றும்
பொன்னையழி யாதுவளர் பொருளென்று போற்றியிப்
பொய்வேட மிகுதிகாட்டிப்
பொறையறிவு துறவீக லாதிநற் குணமெலாம்
போக்கிலே போகவிட்டுத்

தன்னிகரி லோபாதி பாழ்ம்பேய் பிடித்திடத்
தரணிமிசை லோகாயதன்
சமயநடை சாராமல் வேதாந்த சித்தாந்த
சமரச சிவானுபூதி
மன்னவொரு சொற்கொண் டெனைத்தடுத் தாண்டன்பின்
வாழ்வித்த ஞானகுருவே
மந்த்ரகுருவே யோக தந்த்ரகுருவே மூலன்
மரபில்வரு மௌனகுருவே.

பொழிப்புரை :—மின்னலை யொத்த அதிசீக்கிர அழிவுடைய இந்த அநித்தியமான சரீரத்தினை சாசுவதமாய தெனவும், கருமை தீட்டப்பெற்ற நேத்திரங்களினாலே மருட்டி காம இச்சையை யூட்டிவருகின்ற பெண்களது சையோக சுகமே உண்மையான பரமசுக மென்றும், வானோங்கியுள்ள மாட மாளிகைகளே சொர்க்க லோகமாகவும், பொன், பொருள் முதலியவற்றை அழிவற்ற பொருளாகக் கருதி காப்பாற்றிவந்தும் ஆகிய இவ்வாரான பொய் நடபடிக்கைகளை யனுசரித்துவந்து பெருமை கொண்டாடி, பொறுமை, ஞானம், ஆசை யொழித்திருத்தல், கொடுத்தல் ஆகிய இவை முதலான நற்செயல்களி யாவையும் அவைகள் சென்றபடியே விட்டுவந்து, தனக்கு எவரும் நிகரில்லையென்று, இருபுணத்தன்மை முதலான பாழான பிசாசு என்னை வசப்படுத்திக் கொள்ள, இவ்வுலகத்திலே உலோகாயத சமயத்தைப்பற்றாது வேதாந்தமும் சித்தாந்தமும் சமரசப்பட்டுள்ள ஓர் நடு நிலையினைச் சாருமாறு ஓர் வார்த்தையினால் என்னைத் தடுத்தாண்டு அன்பின் வழி வாழுமாறு அருள் புரிந்த உண்மையாய ஞான சற்குருவே! மந்த்ர குரு மணியே! யோகதந்த்ர குரு நாதனே! மூலன் மரபினில் வந்தருளிய மௌன தேசிகனே!

குறிப்புரை :—"யான் இவ்வுலகின்கண் உலோகாயதமத வழக்க வொழுக்கங்களான, வானிடைத் தோன்றி மறையும் மின்னலொத்த சரீரத்தை சத்தியமாக நம்புதலும், மையணி விழியால் மயக்குறும் மாதர் தம் சுகமே பரமபத மெனக் கொண்டனுபவித்தும், மாடமாளிகை யனுபவமே சொர்க்க மென்றும், பொன்பொருளை அழிவுறாததென்று அதனை மிகப் பாதுகாத்தும், ஈகை, இரக்கம், துறத்தல், அறிவு இவையான உத்தமகுணங்களை மனம் போனபடி போகவிட்டும், வறியார்க் கொன்றீயாத உலோப குணத்தன்மையும் ஆகிய இவையாகிற தீய மதக் கோட்பாடுகளைச் சேர்ந்தொழுகாது ஆசிரியர் சமரசானுபூதி பெறுமாறு ஓர் வார்த்தையினாலே என்னைத் தடுத்தாட் கொண்டு வாழுமாறு அன்புற்றருளிய மௌன குருவே" என்று ஞானதேசிகரைப் பிரார்த்தனை புரிந்தன ரென்க.

உலோகாயதமதம்—சரீரமே ஆன்மா வென்றும், போகமே மோக்ஷ மென்றும் அநுபவிப்பவ ராவர். (4)

ரு. போனக மிருக்கின்ற சாலையிடை வேண்டுவ
புசித்தற் கிருக்குமதுபோற்
புருஷர்பெறு தர்மாதி வேதமுட னாகமம்
புகலுமதி னாலாம்பயன்
ஞானநெறி முக்யநெறி காட்சியனு மானமுத
னவை விதங்கடேர்ந்து
நானெனக்குளறு படைபுடை பெயர்த்திடவு
நான்குசா தனமுமோர்ந்திட்
டானநெறி யாஞ்சரியை யாதிசோ பானமுற்
றணுபக்ஷ சம்புபக்ஷம்
ஆமிரு விகற்பமு மாயாதி சேவையு
மறிந்திரண் டொன்றென்னுமோர்
மானத விகற்பமற வென்றுநிற் பதுநமது
மரபென்ற பரமகுருவே
மந்த்ரகுருவே யோக தந்த்ரகுருவே மூலன்
மரபில்வரு மௌனகுருவே.

பொழிப்புரை:—போசனாதிகள் உள்ள அன்ன சாலைக்கண் உண்டற்கு வேண்டும் ஆகாராதிக ளெல்லாம் நிரம்ப விருத்தல் போன்று புருடர்களால் தேடற் பாலனவாகிய தர்மார்த்த காமமோக்ஷ மென்னும் சதுர்வித புருஷார்த் தங்களைப்பற்றி வேதாகமாதிகள் விளம்பும் பிரயோசனமும், ஞானமார்க்கம் மிக விசேடமானதாயும், காண்டல், அநுமானம் என்று சொல்லத் தக்கதாய சுருதி வாக்கியங்கள் முதலாய பலவேறதான வகைகளையும் நன்காராய்ச்சி செய்து யான், யான் என்று எதனினும் முன்னோங்கும் முனைப்பை அதாவது உளறுபடியை அடியோ டொழிக்கவும், சாதனாதி சதுஷ்டயங்களையும் நன் காய்ந்தறிந்து நன்னெறியாம் சரியையாதி படிகளைச் சார்ந்து அணுபக்ஷம் சம்பு பக்ஷமாகும் இருவகை வேற்றுமையும், மாயையாதிகளது தரிசனத்தையும் நன்கு உற்றுணர்ந்து துவிதம் அத்துவித மென்கின்ற ஓர் ஒப்பிலா மனதின் பேதாபேதங்கள் எவையும் ஒழிந்து போக வென்று வெற்றி பெற்றிருப்பதே நம் மரபா மென்றோதியருளின பரம சற்குரு நாதனே! மந்த்ரகுருவே! யோகதந்த்ர குருவே! மூலனது மரபு வந்த மௌனகுருவே.

குறிப்புரை:—சாதன சதுஷ்டயம் நித்யா நித்யவஸ்து விவேகம். இக வுத்திரார்த்த பலபோகவிராகம், சமாதி ஷட்க சம்பத்தி, முமுக்ஷுத்துவம் என்பனவாம். சோபானம்=மேற் செல்லும் படிகளாம்.

அணுபக்ஷமாவது :—ஆன்மாக்கள் தாமாகத் தம்மறிவின் முதிர்ச்சியால் பரிபக்குவமா யடையும்படியான மார்க்கமாம்.

சம்புபக்ஷ மாவது—தலைவனால் திருந்திப் பக்குவம் வந்தடையா நின்ற நெறியா மென்க.

ஓர் பெரிய சமையற் சாலைக்கண் நானாவித அன்னுகாராதிகள் நிலை பெற அமைக்கப் பட்டிருப்பது போன்றே, வேதவாகமாதிகள் அதிகாரி களது படித்தரத்திற் கேற்ப அறம், பொருள், இன்பம், வீடு என்பனவாய நான்குவித புருஷார்த்தங்களைத் தன்னிடத்து அமைத்துக் கொண்டிருத்தல் இயல்பாயிற்றென்க. ஆகவே அதிகாரிகளுக் கேற்றவாறு அனுட்டித்து வரு மாறு கூறப்பட்டமை காட்சி, அனுமானம், உவமானம் என்னும் அளவை களா லறிதல் வேண்டும்.

" விரும்புஞ் சரியை முதன் மெய்ஞ்ஞான நான்கு
மரும்புமலர் காய்கனிபோலன்றோ பராபரமே"—என்றார். (5)

சீ. கல்லாத வறிவுமேற் கேளாத கேள்வியுங்
கருணைசிறி தேதுமில்லாக்
காட்சியுங் கொலைகளவு கட்காம மாட்சியாய்க்
காதலித் திடுநெஞ்சமும்
பொல்லாத பொய்ம்மொழியு மல்லாது நன்மைகள்
பொருந்துகுண மேதுமறியேன்
புருஷர்வடி வானதே யல்லாது கனவிலும்
புருஷார்த்த மேதுமில்லேன்
எல்லா மறிந்தநீ யறியாத தன்றெனக்
கெவ்வண்ண முய்வண்ணமோ
இருளையிரு ளென்றவர்க் கொளிதா ரகம்பெறு
மெனக்குநின் னருடாரகம்
வல்லா னெனும்பெய ருனக்குள்ள தேயிந்த
வஞ்சகனை யாளநினையாய்
மந்த்ரகுருவே யோக தந்த்ரகுருவே மூலன்
மரபில்வரு மௌனகுருவே.

பொழிப்புரை:—முறையாகக் கற்கவேண்டுவன வற்றைக் கற்றறியா மல் ஏற்படுகிற விவேகமும், இதன்மேல் காதினால் கேட்டறித லில்லாத கேள்விகளும், கொஞ்சமேனும் காருணிய மற்றதான பார்வையும், உயிர் வதைத்தல், திருடுதல், மதுவருந்தல், மறுமாதரை விரும்புதல் ஆகிய இத் தீயகாரியாதிகளை மிக மேன்மையுள்ளதாகக் கருதிக்கொண்டு விருப்பஞ்

செலுத்துகின்ற மனமாதிகளும், மிகக் கொடிய பொய்யுரையும் அல்லாமல் நன்மையான குணங்கள் எதுவும் உள்ளதாக வறிந்திலன், அன்றி, யான் புருஷாகாரமாய் மட்டுமுள்ளவனு யிருக்கிறேனே தவிர சொப்பனத்தி லேனும் புருஷார்த்த மென்கின்ற தர்மார்த்த காமமோக்ஷ மென்பனவற்றைக் கொஞ்சமும் உடையவனல்லேன்; ஆகவே, இவையனைத்தையும் நீ அறிந்த விஷயமே யன்றி அறியாதனவல்ல; ஏன்? நீ சர்வஞ்ஞன் ஆனது பற்றி யென்க; ஆகையால் அடிமை பிழைக்கும் வழியினை யறியவில்லை; இருட்டினை இருளென்று கொண்டவர்க்கு பிரகாசமாயது தாயகமானது; அதே போன்று நின்னை அடைக்கலமாக் கொண்ட எளியேற்கு நின்னதான திருவருளே பேராதரவாயிருக்கின்றது. 'சர்வசக்தன்' என்கிற நாமம் நினக்குரியதா கும்; ஆகவே, இந்த வஞ்ச நெஞ்சினனை ஆண்டருளுமாறு அநுக்ரகஞ் செய்வாயாக. மந்த்ரகுருவே! யோக தந்த்ரகுருவே மூலன் மரபில் வரு மௌன குருநாதனே!

குறிப்புரை :—மனிதனால் தேடற் பாலனவாய பொருள்கள் நான்கே யாம். அவையே அறம் பொருள் இன்பம் வீடென்பனவாகும்; இதனைப் புருஷார்த்தம் என்றும் வடநூலார் கூறுவர். இவை இருமைக்கும் ஏற் பட்டதான பலப்ராப்தியாகும்.

கலை யுணரார்க் கறிவில்லை; காதாற் கேட்டறியார் கேள்வி பயனற்ற தாகும். இரக்கமற்ற பார்வை பயனற்றதாகும்; கொலைகளவு கட்காமம் அன்றி நன்னிலை சிறிது மில்லேன் என்றும், பொய் யொழிய மெய்சிறிதும் புகலேன் என்றும், மனித சொரூபமட்டும் கொண்டுளனே யன்றி மனித சுபாவமாம் புருஷார்த்த மானது கனவினு மில்லேன் என்றும், ஆகவே அனைத்து மறிந்த நீ அறியாதன வல்லவென்று தன்குறை கூறித் தன்னருள் வேண்டுவ தறிக. (6)

எ. கானக மிலங்குபுலி பசுவொடு குலாவுநின்
கண்காண மதயானைநீ
கைகாட்டவுங் கையா னெகிடிக் கெனப்பெரிய
கட்டைமிக வேந்திவருமே
போனக மமைந்ததெ னவக்காம தேனுநின்
பொன்னடியி னின்றுசொலுமே
புவிராஜர் கவிராஜர் தவராஜ னென்றுனைப்
போற்றிஜய போற்றியென்பார்
ஞானகரு ணாகர முகங்கண்ட போதிலே
நவநாத சித்தர்களுமுன்

நட்பினை விரும்புவார் சுகர்வாம தேவர்முதன்
ஞானிகளு முனைமெச்சுவார்
வானகமும் மண்ணகமும் வந்தெதிர் வணங்கிடுமுன்
மகிமையது சொல்லவெளிதோ
மந்த்ர குருவே யோக தந்த்ர குருவே மூலன்
மரபில்வரு மௌன குருவே.

பொழிப்புரை :—வனத்திடை வாழும் வன் புலியானது பசு மாட்டோடுங் கலந்து வாழா நிற்கும், நினது நேத்திரமறிவதாக மதங்கொண்ட யானையானது நீ கை காட்டிய அளவில் தன் தும்பிக்கையினாலே நெகிடிக்காக பெருத்த கட்டைதனை மிகச் சுமந்து கொண்டே வரும்; பின்னும் அந்தக் காமதேனுவாயது நினது பொன்போலும் பிரகாசிக்காநின்ற திருப்பாத கமலங்களில் நின்று போசனம் தயாராகியுள்ளன வென்று கூறும்; மற்றும் பூவுலகத்து மன்னரும் வித்வரத்னங்களும் தேவரீரைத் தவராஜனென்று துதி செய்து நமஸ்காரம், ஜய விஜயீபவ நமஸ்காரம் என்று புகழ்ந்து கொண்டாடுவார்கள். ஞானம், கருணையென்னு மிவைகட்கும் பிறப்பிடமாயுள்ள நினது திருவதனத்தினைப் பார்த்த வக்கணமே நவநாத சித்தாதிகளென்னும் சத்திய நாதர் முதலிய ஒன்பது சித்தர் குழாங்களும் நினது நட்பை நாடிக்களிப்பர்கள்; மற்றும் சுகர்வாமதேவர் முதலாகிய ஞானியர்களும் நின்னை மிகப் புகழ்ந்தேத்துவர்கள். அன்றி தேவலோகத்தாரும் பூவுலகத்தார்களும் வந்து எதிர் நின்று வணங்குகின்ற நின்பெருமை யென்னும் அதனைச் சொல்லலும் எளியனவோ! அரியதினும் அரிது என்றபடி; மந்த்ர குருவே! யோக தந்த்ர குருவே! மூலன் மரபினில் வந்தருளிய மௌனதேசிகனே!

குறிப்புரை :—'கானக மிலங்குபுலி' என்பதற்கு, கால், நகம் எனப் பிரித்து 'காலில் நகம் வாய்ந்துள்ள புலி' எனப்பொருள் கொள்வாரும் உண்டு. நெகிடி = தீ மூட்டம் போடுதல்.

ஆசிரியரின் பெருமையை இத்தகைமைய தெனக் கூறவந்தவர், காட்டகத்தில் வாழும் புலியானது பசுவோடு குலவும் எனவும், நெருப்பு மூட்டத்தைப் பார்த்துப் பயமெய்தும் யானையும் அந்த நெகிடியின் பொருட்டதாகப் பெருங்கட்டையை யேந்தி வருமென்றும், காமதேனுவும் போசனம் தயாராகவுள்ளதென நின்பாதங்களின் கீழ் நின்று வணங்கிக் கூறும் எனவும், அரசச் செல்வமும், கலிச்செல்வமும் உடையவர்களும் நின் தவச் செல்வப் பெருமையையறிந்து வணக்கஞ் செய்வர் என்றும், நின் திருவதனங்கண்டபோதே சத்திய நாதர் முதலிய ஒன்பது சித்தர்களும் நின் சிநேகத்தை விரும்புவர்கள் என்றும் மற்றும் சுகர் வாமதேவர் முதலிய ஞானியர்களும் நினைக்கொண்டாடுவரென்றும் இனையவுங்கூறி, ஆதலினாலே

நின்னை வானகமும் வையகமும் வந்து திருவடியில் வணங்குவதைச் சொல்லவும் வேண்டுமோ! எனவும் போற்றினமை யறிக. சான்றாக:—

ஞாலமுண்டவன் றலைமிசைச் சுமப்பன் மெஞ்ஞானி வேண்டுவ வெல்லாம்
ஆலமுண்டவ னவன்பினே திரிகுவனவனடித்து கட்கன்றோ
சீலமன்னரும் மற்றுமுள்ள தேவரும் திசைதிசை தொழுதேத்த
காவிரண்டையுஞ் சிரமிசை வையெனக் கழறுவன் கமல நான்முகத்தோன். (9)

அ. சருகுசல பக்ஷணிக ளொருகோடி யல்லாற்
சகோரபட் சிகள்போலவே
தவளநில வொழுகமிர்த தாரையுண் டழியாத
தன்மைய ரனந்தகோடி
இருவினைக ளற்றிரவு பகலென்ப தறியாத
**வேகாந்த மோன ஞான**
இன்பநிஷ் டையர்கோடி மணிமந்த்ர சித்திநிலை
யெய்தினர்கள் கோடிசூழக்
குருமணி யிழைத்திட்ட சிங்கா தனத்தின்மிசை
கொலுவீற் றிருக்கநின்னைக்
கும்பிட் டனந்தமுறை தெண்டனிட் டென்மனக்
குறையெலாந் தீரும்வண்ணம்
மருமல ரெடுத்துனிரு தாளையர்ச் சிக்கவெனை
வாவென் றழைப்பதெந்நாள்
மந்த்ரகுருவே யோக தந்த்ரகுருவே மூலன்
மரபில்வரு **மௌனகுருவே.**

பொழிப்புரை:—முற்றும் வற்றிக் காயப்பெற்ற இலையினையும் தண்ணீரையும் ஆகாரமாகக் கொண்டு ஜீவிப்போர் கோடிப்பேர்களும், இவர்களன்றி சகோர பறவைகளை யொத்து, வெள்ளியதாயுள்ள சந்திர மண்டலத்தினின் றொழுகாநின்ற அமிர்த சீதள நீரை யருந்தி சாகாத நிலைமையை யுடையோர் பல கோடிக்கணக்கானவர்களும், நல்வினை தீவினையெனும் இருவகை வினைகளையும் வேண்டா மென்றொழித்து இராப்பகல் விளங்காது தன்னந் தனிமையோடு ஞானமும் அதன் முத்திரையாகிய மோனமும் வாய்ந்துள்ள சுக நிட்டை கூடிய மகான்கள் கோடிப்பேர்களும், மற்றும் மணிமந்த்ராதிகளால் சித்திகள் வாய்க்கப் பெற்றோர் கோடிப்பேர்களும், மற்றுமுள்ளோரும் ஆக எண்ணிறந்தோர் சூழ்ந்து கொண்டிருக்க, நவரத்னங்க ளிழைக்கப் பெற்ற சிம்மாசனத்தின் மேவி கொலுவாய் வீற்றிருக்கின்ற தேவரீரைப் பன்முறை கை கூப்பித்தொழுது நமஸ்கரித்து எழுந்து என் கோழை மனக்

குறை யனைத்தும் நீங்குமாறதாக மணமலர்கொண்டு உன் திருவடிகளை அருச்சித்து வாழ அடியேனை வா வென்றழைத் தருளல் எக்காலத்திலோ! மந்த்ர குருவே! யோக தந்த்ர குருவே! மூலன் மரபில் வந்த மௌன குருவே!

குறிப்புரை :—கேவலம் சருகாதிகளையுண்டு ஜீவித்துக்கொண்டு கானகத்தில் அரிய தவமியற்றுவார் பலரும், மற்றும் சகோரபக்ஷிகளை யொத்து மதி மண்டலச் செழுந்தேன் மடை திறந்துண்டுளங் தேக்கிட்டு அடற் பெரும் பசி நீக்கி அழிவுறாத் தன்மைவாய்ந்து நிட்டை புரிவார் பலரும், இன்னும் மணிமந்திராதிகளால் அநேக சித்திகள் பெற்று வாழுபவர்கள் பலரும், இன்னும் பக்தி மார்க்கத்தில் நின்று பாமாலை சூட்டிப் பரவி வாழ்வார் பலரும் ஆகவே இவ்வாறாகப் பக்த சித்தயோக ஞானியர்கள் பல்கோடியர்களும் நின்னைச் சூழ்ந்து தரிசித்துப் பெருவாழ்வுகொண்டு பேரானந்த பராளா யிருக்கிறபோது, ஏழைமதியுடைய எளியனை மலர்கொண்டு நின்பாத தாமரையை அர்ச்சித்து வாழவாவது வாவென்றழைப்ப தென்று கொலோ வென்று வேண்டுவாராயினமை காண்க.

சகோரபக்ஷி யென்பது ஓர் உயர்தரப் பறவையாம். இது ஆகாய வாசியா யிருந்து கொண்டு, ஆங்கு நிலவும் நிலவின்சீதளாமிர்த பானம்பண்ணி உயிர் வாழ்வதா யுள்ளது.

குருமணி யென்றது நவமணிகளிற் சிறந்த மாணிக்கத்தை யென்றுணர்க. மருமலர் என்றது மொட்டவிழாத மலரை யென்க.

இரவு, பகல் என்பதை கேவலம் சகலம் என்று வேதாந்தியர் கூறுவர். (8)

கூ. ஆங்கார மானகுல வேடவெம் பேய்பாழ்த்த
வாணவத் தினும்வலிதுகாண்
அறிவினை மயக்கிடும் நடுவறிய வொட்டாதி
யாதொன்று தொடினுமதுவாய்த்
தாங்காது மொழிபேசு மரிகரப் பிரமாதி
தம்மொடு சமானமென்னுந்
தடையற்ற தேரிலஞ் சுருவாணி போலவே
தன்னிலசை யாதுநிற்கும்
ஈங்கா ரெனக்குநிக ரென்னப்ர தாபித்
திராவணா காரமாகி
யிதயவெளி யெங்கணுந் தன்னரசு நாடுசெய்
திருக்குமிது வென்றுநேரமும்
வாங்கா நிலாதடிமை போராட முடியுமோ
மௌனோப தேசகுருவே

மந்த்ரகுருவே யோகதந்த்ர குருவே மூலன்
மரபில்வரு மௌனகுருவே.

பொழிப்புரை :—ஆங்காரமாய வேடவெம் பேயானது பாழான ஆணவப் பேயைக்காட்டிலும் மிகவும் வலிமையுடையதாகும்! ஏன்? அதுவானது எனது அறிவை மயக்கிக் கெடுத்து விடுகிறது; அன்றி நடு நிலையாய நியாயத்தை அறிந்தொழுகாது; எந்தப் பொருளினைப் பற்றினதோ அதே வழியில் பிரியாது நின்று அம்மயமாகிவிடும்; இன்னும் பொறுமையாக வார்த்தை பேசுவதில்லை; மற்றும் அரன் அரி பிரமன் முதலியோரையும் ஒப்புடையேன் என்னும்; பின்னும் வேகமாய்ச் செல்லா நின்ற இரதத்தின் அஞ்சுருவாணியொப்ப வசைதலின்றி நிலையுறும், தவிர, இவ் வுலகின்கண் எனக்கு நிகராவார் எவருமில்லை யென்று பிரஸ்தாபம் செய்து இராவணனை யொத்து இறுமாந்து தனது இதயாம்பர விடமெங்கணும் தன்சுயவரசைச் செலுத்திக் கொண்டிருக்கு மாக்கும்; அடிமையான யான் இதோடுகூட எப்போதும் இடையறாது வம்பாடி நிற்க வல்லனல்லேன், மௌனோபதேச குருமணியே! மந்த்ர குருவே! யோக தந்த்ரகுருவே! மூலன் மரபில் வந்த மௌன குருமணியே!

குறிப்புரை :—'அகங்கார' மென்பதுவே ஆங்கார மென மருவியது; இதன் சுபாவம் மிகக் கொடியதாகும். சான்றாக வடலூர் வள்ளலாரும் "அகங்காரக் கொடுங்கிழங்கை அகழ்ந்தெறிய வறியேன்" என்றருளினர். அன்றி 'அகங்காரத்தாலே அழிந்தான் திரியோதரன்' என்றும் ஓர் பழமொழியும் பரவக் கேட்டிருக்கலாம். மற்றும், அவ்வகங்காரத்தை நோக்கி, அகங்காரமெனும் பொல்லா வடவாதிப்பயலே! என்றார் ஓர் பெரியார் தம் அநுபூதி நூலின்கண். இன்னமும் வள்ளலார் :—

ஆங்காரகோட்டைக் க்கந்தைச் சிகரங்க ளாங்கமைத்துச்
சாங்கால மின்றி யறியாமைச் சத்தியைத் தான்றழுவி
நீங்காத வாணவக்கோனு மொளிரு முன்னெற்றிக் கண்ணுற்
போங்காலஞ் செய்வது முண்டோ பொழிற் கச்சியேகம்பனே.

ஆணவ மேலிட வாருயிர் கீழிட்டடங்கிநிற்கும்
ஆணவங் கீழிட வாருயிர் மேலிட்டருளுருவா
மாணவ நீங்கிய வாருயிர் வேறல வென்றறைந்தா
ஞணவ நீங்கிய வன்பர்க்கருள் கச்சியேகம்பனே.

இராவணாகாரம், இருளெனும் கருமைநிறம். இதனால் ஆங்காரம் தமோகுணம், இதன் நிறம் கருமையாம் என்று முணரற்பாலது. (9)

௰. பற்றுவெகு விதமாகி யொன்றைவிட் டொன்றனைப்
பற்றியுழல் கிருமிபோலப்

பாழ்ஞ்சிந்தை பெற்றநான் வெளியாக நின்னருள்
பகர்ந்துமறி யேன்றுவிதமோ
சிற்றறிவ தன்றியு மெவரேனு மொருமொழி
திடுக்கென் றுரைத்தபோது
சிந்தைசெவி யாகவே பறையறைய வுதரவெந்
தீநெஞ்ச மளவளாவ
உற்றுணர வுணர்வற்றுன் மத்தவெறி யினர்போல
வுளறுவேன் முத்திமார்க்கம்
உணர்வதெப் படியின்ப துன்பஞ்ச மானமா
யுறுவதெப் படியாயினு
மற்றெனக் கையநீ சொன்னவொரு வார்த்தையினை
மலையிலக் கெனநம்பினேன்
மந்த்ரகுருவே யோக தந்த்ரகுருவே மூலன்
மரபில்வரு மௌனகுருவே.

பொழிப்புரை :—பற்றுவதாய ஸ்தானம் பற்பல வாதலால் ஏற்கனவே பிடித்துள்ள ஓர் பொருளைவிட்டு மற்றுமோர் பொருளினைப் பிடித்துக் கொண்டு இப்படியே சதா உழன்று திரியும் கேவலம் புன் புழுப்போன்று பாழான மனத்தினை யடைந்த யான், பகிரங்கமாக நினது திவ்ய திருவருளினைப்பற்றிப் புகழ்ந்து கொண்டாடினே னில்லையே! துவித மார்க்க மென்றிடின் அதுவானது கேவலம் சிற்றறிவாகும்; அங்ஙனமின்றியும் எவராவது ஓர் குறை மொழியினைத் திடும்பிரவேசமாகக் கூறுவரேயாயின் அதனைக் கேட்ட செவி மனம்போன்று பிறரறியவும், கொடிய உதராக்கினியானது இருதயஸ்தானம் வரைத்தாவி ஆண்டுள்ள மனத்தினைக் கலங்குமாறு செய்வதினாலே உணர்ச்சியாம் நுண்ணறிவு மாறி பைத்தியங்கொண்ட சாமானிய பித்தனை யொத்து சொற்றடுமாறிக் குழறவும் நேருகின்றது; (இத்தன்மையான நான்) மோக்ஷமார்க்கத்தை நன்கு ஆராய்ந் தறுட்டிப்ப தெவ்வாறும்! அன்றிச் சுகதுக்காதிகளைச் சமாசமாகக் கருதுவது எவ்வாறும்! ஆகவே, என்னையனே! அன்று நீயெனக் கருளிய ஓர் சொல்லினை பெரியதோர் மலைப்பிரமாணமாகக் கருதியுள்ளேன். மந்த்ர குருவே! யோக தந்த்ர குருவே! மூலன் மரபினில் வந்தருளிய மௌன குருவே!

குறிப்புரை :—பிரிதிவியைத் தாயகமாக்கொண்ட கேவலமான புன்புழுவானது சதா ஒன்றினைவிட்டு மற்றொன்றினைத் தாவிக்கொண்டே யிருத்தலை நோக்கி ஈண்டு மனத்தினுக் குவமையாக்கின ரென்க.

இவ்வாறாக, மனமானது நிலைபேறாக நின்றனுட்டியாது சலனப்பட்டே யிருத்தலான் பாழ்மன மென்றும், அப்பாழ் மனத்தினைக் கொண்டு, திரு

வருளினாலே முத்திப் பேற்றினுக்குரிய உத்தம சத்துவகுண பிரவிர்த்தியான் உறுதிப்படாது சஞ்சலிக்கும்போது எவ்வாறு அத்துவித நிலைபெறும் என்ற படி.

பின்னும், அப்பாழ் மனத்தைக்கொண்டு ஒரு பொழுதேனும் நின் திருவருளினைச் சிறிதும் பாராட்டித் துதிசெய்தேனு மில்லையே! அன்றி இருவினை யொப்பாம் சமரசம் வந்திலவே, இவ்வாறாகப் பரிபக்குவ முறுவது மில்லையாயிற்றே! பரிபக்குவ மில்லாதபோது திருவருள் நோக்கம் உண்டாவ தெப்படியாம்! என்றும் ஆசிரியர் விதந்தோதின ரென்க. ஆனாலும், ஐயனே! தேவரீர் எளியேன் மீது கருணை கூர்ந்து மௌனகுருவாய் வந்து அருளிச்செய்த ஓர் ஆப்தமொழி யொன்றினையே உறுதிப்பாடாகக் கொண்டுள்ளேன், உன் சித்தம் எப்படியோ அப்படியாகட்டும், என்று முடித்தன ரென்க. (10)



## கருணாகரக் கடவுள்.

க. நிர்க்குண நிராமய நிரஞ்சன நிராலம்ப
நிர்விஷய கைவல்யமாய்
நிஷ்கள வசங்கசஞ் சலரகித நிர்வசன
நிர்த்தொந்த நித்தமுக்த
தற்பர விஸ்வாதீத வ்யோமபரி பூரண
சதானந்த ஞானபகவ
சம்புசிவ சங்கர சர்வேச வென்றுநான்
சர்வகா லமுநினைவனோ
அற்புத வகோசர நிவர்த்திபெறு மன்பருக்
கானந்த பூர்த்தியான
அத்துவித நிச்சய சொரூபசா க்ஷாத்கார
வனுபூதி யனுகூதமுங்
கற்பனை யறக்காண முக்கணுடன் வடநிழற்
கண்ணூ டிருந்தகுருவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே.

பொழிப்புரை:—குணங் குறியற்றவனும், எந்நோயு மில்லாதவனும், பாதொரு களங்கமு மில்லாதவனும், ஆதார மில்லாதவனும், விஷயமற்றவனும், சித்தி முத்திகளுக்குரிய கடவுளாயும், கூட்டுற வில்லாதவனும், துக்க

மற்றவனும், பேச்சற்றவனும், யாதொரு தொடர்பு மற்றவனும், நித்தியனும், மோக்ஷகாரணனும், தானாகவே பரமார்யுள்ளவனும், லோகங்களுக்கு அப்பாலு மானவனும், பரம ஆகாயத்தில் பொருந்தியவனும், ஞானாகாயத்தில் நிறைந்த வனும், நித்தியானந்தனும், ஞானைஸ்வரிய முடையவனும், அறுவகைவிசேட சக்திகள் பொருந்தியவனும், சுகத்தை யுண்டுபண்ணுபவனும், ஆன்மாக் களுக்குச் சுகதுக்கத்தை யுண்டுபண்ணுபவனும், சகலத்திற்கும் கடவுளாய் விளங்குபவனும் ஆகிய இத்தன்மை வாய்ந்துள்ள நின்னையான் சதாகலமும் சிந்திப்பேனே ? ஆச்சர்யமான வகோசரனே ! துறவு பெற்ற அடியார்களுக்கு ஆனந்தம் நிறைந்த அத்துவித மார்க்க நிலையமாம் சொரூபனே ! பரப்ரம்ம சொரூபமும் அதன் பிரத்தியக்ஷானுபவமும் அதனின் அநுபவ சித்திகளையும் உண்மையாகக் காணுதற்கு முகக் கண்பார்வையாக மூன்று நேத்திரங்களுட னும் வடவால விருக்ஷ நிழலினிடத்தே வீற்றிருந்தருளிய குருவே ! நினைத் தற்குமிக அருமையாயுள்ள ஞான சபையின் கண்ணே நித்யானந்த மயமாக நிர்த்தனஞ் செய்யும் காருணிய சொரூபமான பரதெய்வமே !

குறிப்புரை :—பகவன்=‘ சுத்த சாட்குண்யன் ’ என்பது பொருள். அஃதாவது, குறைவிலா ஐசுவரியம், நித்தியவீரியம், அழியாத கீர்த்தி, ஒப்பி லாச் செல்வம், திரிகால ஞானம், மகாவைராக்கியம் என்பனவாகும்.

தற்பரன்—ஆன்மாக்களுக்குப் பிரியமுள்ளவன் என்பதாம்.

சம்பு—சுகமளிப்போன். சிவன்—மங்களகரத்தை யளிப்பவன் என்பது பொருளாம்.

சங்கரன்—சுகமுண்டாக்குபவன்.

நிவிருத்தி யார்க்கம்—முத்திநெறி யென்க.

ஆநந்த நிர்த்தனம்—ஆன்மகோடிகளுக்குரிய பஞ்சகிருத்தியங்களாகிற சிருஷ்டி, திதி, சம்ஹார, திரோபவ, அநுக்ரகம் என்னும் ஐந்து கிருத்தியங் களாம்.

“ பஞ்சகிர்த்திய சுத்த நிர்த்தத்துவம் ” என்றார் வள்ளற் பெருமான். கருணாகரன்=காருண்யமே சொரூபமாக வுள்ளவன். (1)

உ. மண்ணாதி யைந்தொடு புறத்திலுள கருவியும்
வாக்காதி சுரோத்ராதியும்
வளர்கின்ற சப்தாதி மனமாதி கலையாதி
மன்னுசுத் தாதியுடனே
தொண்ணூற்றொடாறுமற் றுள்ளனவு மௌனியாய்ச்
சொன்னவொரு சொற்கொண்டதே

தூவெளிய தாயகண் டானந்த சுகவாரி
தோற்றுமதை யென்சொல்லுவேன்
பண்ணுரு மிசையினொடு பாடிப் படித்தருட்
பான்மைநெறி நின்றுதவருப்
பக்குவ விசேஷராய் நெக்குநெக் குருகிப்
பணிந்தெழுந் திருகைகூப்பிக்
கண்ணூறு கரைபுரள நின்றவன் பரையெலாங்
கைவிடாக் காட்சியுறவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே.

பொழிப்புரை :—மண் முதல் ஐந்து பூதங்களுடனே வெளிக்கருவிகளும், வாக்கு முதலிய கர்மேந்திரியங்கள் ஐந்தும், சுரோத்திர முதலான ஞானேந்திரியாதிக ளைந்தும், விருத்தியடையாநின்ற சப்த முதல் விஷயாதிகள் ஐந்தும், மற்றும் மனமுதலான அகக்கரணங்கள் நான்கும், கலைமுதலிய வித்யாதத்துவாதிகள் ஏழும், பின்னும் சுத்த தத்துவத்தோடு தொண்ணூற்றாறும் வேறுள்ளனவும் மோன குருவாய்வந்து நீயுரை செய்தருளிய ஓர் வார்த்தையை காதில் கொண்டவுடனே மகா பரிசுத்தாகாயமாய், இடையறாத இன்பக்கடலினிடத்தே தோற்றியதை என்னென்றெடுத் தோதுவேன். நல்ல இசைகள் பொருந்திய பாடல்களைப் பாடிப்பின் பந்தசார்பாம் நெறியிலே நின்று அதிதீவிரப் பக்குவராகி நெகிழ்ந்து நெகிழ்ந்துருகி வணங்கியெழுந்து இருகரங்களையும் சிரசின்மீது கூப்பிக் கண்ணீர் ஆறுபோல் பெருக்கெடுத் தோடச் செய்யடியவர்கள் யாவரையும் கைவிடப்படாது தரிசிக்குமாறு எண்ணுவாய்; அரிய ஞானசபையில் ஆனந்தக் கூத்தாடா நின்ற கருணா சொரூபரான கடவுண்மணியே!

குறிப்புரை :—மண்ணாதி ஐந்தாவன—மண், தண்ணீர், நெருப்பு, காற்று வெளி. வாக்காதியாவது—வாய், கை, கால் ஆண்குறி, உபஸ்தம், என்பன.

சுரோத்திராதியாவது—மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன.

சப்தாதியாவது—சப்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தம் என்பன.

மனமாதியாவது—மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன.

கலையாதியாவது—காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை ஆக இவ்வேழும் வித்யாதத்துவங்களாம்.

சுத்தாதியாவன—சுத்தவிதை, ஈஸ்வரம், சாதாக்கியம், சத்தி, சிவம், ஆக இவ்வைந்தும் சிவதத்துவங்களாம்.

இவைகளும், மற்றுமுள்ள தத்துவங்களோடு 'தொண்ணூற்றாறும்' எனவும் கூறின காண்க. விரிவை சித்தாந்த சாத்திரத்தில் காணத்தகும்.

இதனால், இறைவன் அருள்வழி யொழுகிய அடியவர்கள் தரிசிக்குமாறு ஞானசபையின் கண்ணே அநவரதத் தாண்டவம் புரியும் ஆண்டவனாய தேவரீர் என்மீது கருணைகொண்டு அகண்டானந்த சுகவாரி உதயமாக அருளியதை என்னென்று கருதி எவ்வாறு போற்றுவேன்! என்றபடி பாவின் சாரமாய்க் கூறலாயிற்று. (2)

௩. எல்லாமு னடிமையே யெல்லாமு னுடைமையே
யெல்லாமு னுடையசெயலே
யெங்கணும் வியாபிநீ யென்றுசொலு மியல்பென்
றிருக்காதி வேதமெல்லாஞ்
சொல்லான் முழக்கியது மிக்கவுப காரமாச்
சொல்லிறந் தவரும்விண்டு
சொன்னவையு மிவைநல்ல குருவானபேருந்
தொகுத்தநெறி தானுமிவையே
அல்லாம லில்லையென நன்றா வறிந்தே
னறிந்தபடி நின்றுசுகநான்
ஆகாத வண்ணமே யிவ்வண்ண மாயினே
னதுவுநின தருளென்னவே
கல்லாத வறிஞனுக் குள்ளே யுணர்த்தினை
கதிக்குவகை யேதுபகலாய்
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே.

பொழிப்புரை :—(ஆன்மாக்க ளெல்லோரும்) நினது தொண்டர்களே யாவர்; சமஸ்தமான பண்டு பதார்த்தங்களும் உன்னுடைய சுதந்தர வஸ்துக்களேயாம்; (உலகில் நடைபெறும்) காரியாதிகளனைத்தும் உனது திருவருட் செய்கைகளே யாகும்; எல்லா விடங்களினும் விளக்கமாயுள்ளவன் நீயேயாகும்; எனக்கூறத்தகும் இயல்பினை யுடையதாயிருக்கின்றது என இருக்கு முதலான சதுர்வேதங்களும் தன்னகத்துள்ள மந்திராதிகளால் கோஷிக்கலாயின. மற்றும் பேச்சற்ற ஞானியர்களும் மிகவும் உபகாரார்த்தமாக உன்னி வெளியாக விரித்தோதியனவும் இவைகள் தான்; மற்றும் உத்த மோத்தம ஆசிரியர்களும் முடிவுறக் கூறியனவும் இம்முறையேயன்றி மற்றன்று என்று நன்கு யுணர்ந்தனன்; ஆனாலும், யான் தெரிந்து கொண்ட படியாக சுகப்படாதபடி இவ்வாறு ஆய்விட்டேன்; ஆகவே,

அதுவும் நின்திருவருளே யென்று, கல்வி யறிவில்லாதவனாய் எளியேன்ற னுள்ளகத்தில் இனிது தோற்றுவித்தாய்; இவ்வாறாக முடிய, இப்போது என்கதி எப்படியாகிறது என்பதுதான் (என்கேள்வி.) நினைத்தற்கரிய ஞான சபையின்கண் பேரானந்தப் பெருநட மியற்றும் காருண்ய சொரூபக்கண் ணுதலே!

குறிப்புரை:—ஈசன் எவைக்கும் தலைவனாதல் பற்றி ஈண்டு 'எல்லாம் உன் அடிமை' யென்றார்போலும். மற்றும், எவற்றினுக்கும் உரிமை கொண்ட தன்மையினாலே 'சகலமும் நின்னுடைமை' யென்றனர். 'அவ னன்றி யோரணுவு மசையா' தென்று இவ்வாசிரியரே பிற ஆண்டும் கூறி யுள்ளமையான் 'எவையும் நின்னுடைய செயலே' யென்று இங்கும், பின் னும், சர்வ வியாபகத்துவம் வாய்ந்தவனாதலால் 'எங்கணும் வியாபி நீ' எனவும் சதுர்வேதங்கள் சாற்றியதுமன்றி மெய்ஞ்ஞானியரும் கூறலான் 'இருக்காதிவேத மெல்லாம் சொல்லான் முழக்கியது' என்பதோடு மன்றி மிக்கவுபகாரமாகச் சொல்லிறந்தவரும் விண்டு சொன்னவையு மிவையே யென்றும் விதந்தோதின ரென்க.

இவையனைத்தும் தாம் நன்குணர்ந்தும் உணர்ந்தவாறாக நான் சுகமெய் தாது இவ்வாறானேன், ஆனாலும் இதுவும் நின்செயலே யென்பதையும் நீ யென்னுள்ளிருந் துணர்த்த யானுணர்ந்துள்ளதும் கூறினது மல்லாமல், ஆனாலும் எனக்குக் கதியளிப்பார் நீ யல்லதிங்கு எவரு மில்லை யென்றும் கூறுவாராயினர். (3)

ச. பட்டப் பகற்பொழுதை யிருளென்ற மருளர்தம்
பக்ஷமோ வெனதுபக்ஷம்
பார்த்தவிட மெங்கணுங் கோத்தநிலை குலையாது
பரமவெளி யாகவொருசொற்
றிட்டமுடன் மோனனியா யருள்செய் திருக்கவுஞ்
சேராம லாராகநான்
சிறுவீடு கட்டியதி நடுசோற்றை யுண்டுண்டு
தேக்குசிறி யார்கள்போல
நட்டணைய தாக்கற்ற கல்வியும் விவேகமும்
நன்னிலய மாகவுன்னி
நானென்று நீயென் றிரண்டில்லை யென்னவே
நடுவே முளைத்தமனதைக்
கட்டவறி யாமலே வாடினே னெப்போது
கருணைக் குரித்தாவனோ

கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணு கரக்கடவுளே.

பொழிப்புரை :—நடுப்பகற் காலத்தை இராக்கால மென்னும் மயக்க புத்தியுள்ளார் தம் பக்ஷத்தை யொத்தது தானே என்பக்ஷமும்! பார்வைப்பட்ட விடங்களி லெல்லாம் என்னைச் சூழ்ந்துள்ள நிலைமை மாருது பரமாகாயத்து ஓர் வார்த்தையினை மோன சொரூபமாய்த் தெளிவுபட திருவாய்மலர்ந்தருளியும் யான் அதனைப்பற்றி யொழுகாமல் யாரோபோன்று தெருவின்கண் மணல் வீடுகட்டி விளையாடிவரும் சிறுபிள்ளைகள் அவ்வீட்டில் சோறுசமைத் துண்பது போன்றுள்ள யான் பாரபக்ஷமின்றி கற்றறிந்துள்ள கல்வி கேள்விகள் அனைத்தையும் நிதான ஸ்தானத்திருந்து ஆய்ந்துணர்ந்து, நானென்று நீ யென்று இரண்டில்லை யெனத்தீர்மானித்து இடைவந்த மனத்தினை நிறுத்த வியலாதபடி மெலிவுற்ற அறிவினன் நின்கருணைக்கு எந்தக்காலத்தில் உரிமைப்படுவேனே அறியேன் என்றபடி நினைத்தற்கரிய ஞானசபையிலே ஆனந்த நடம்பயில்கின்ற கருணசொரூபக் கடவுளே! (என்று விண்ணப்பிக்கின்ருர்.)

குறிப்புரை :—“இவ்வாசிரியர் மேற் பாசுரத்தால்,” இறைவன் பரவசத்தராய் எங்கணும் சம்பூரணமாய நிலையினை மௌன குருமணியாய் எழுந்தருளிவந்து தமக்கு உபதேசித்தருளி யிருக்கிறபோது, உண்டு உடுத்தலன்றி மற்ருென்று முணராச் சிறுபாலர்களைப் போன்று கல்வி கேள்விகளால் கலங்கிய மனத்தராய், ஒருவாருகப் பின் அவ் வாராய்ச்சியை நல்ல விஷயமாகக் கருத்திருத்தி நான் நீ யென்கிற பேதமற்று நடுவான மனத்தினைத் தன்வய மாக்காது வருந்துதல் கருதி நடுவே முளைத்த மனதைக் கட்டவறியாது வாடினே னென்றும், “அத்தன்மையனை யான் எவ்வாருகத் தன்னருளுக் குரியனுவேன்” என்றமையாலும், இவரே பிற ஆண்டும்

“சினமிறக்கக் கற்ருலுஞ் சித்தியெல்லாம் பெற்ருலு
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே”—என்றும்

கடறலின், மனத்தினைக்கட்டினு லல்லது ஆனந்தாதீதமாம் அத்துவித முத்தி கைவரப்பெருது எனப் படுகின்றமையால் வாடினேன் என்றும், கருணைக்கு என்றே உரித்தாவதென்றும் கூறலாயினர். சான்ருக பிறநூலாரும் :-

பிரபுலிங்க லீலை

(1) நல்ல செய்து நாரை யுயர்த்தவு
மல்ல செய்தங் களற்றிடை யாழ்ப்பவும்
வல்ல திந்த மன மலதையனே
யில்லை யென்ன வியம்பு மறையெலாம்,

(2) கெடுக்க வல்லதுங் கெட்டவர் தங்களை
யெடுக்க வல்லது மிம்மன மென்றதை
யடக்க வல்லவனைய பவக்கடல்
கடக்க வல்லவனுவன் கடிதரோ (4)

ரு. மெய்விடா நாவுள்ள மெய்யரு ளிருந்துநீ
மெய்யான மெய்யையெல்லாம்
மெய்யென வுணர்த்தியது மெய்யிதற் கையமிலை
மெய்யேது மறியாவெறும்
பொய்விடாப் பொய்யினே னுள்ளத் திருந்துதான்
பொய்யான பொய்யையெல்லாம்
பொய்யெனு வண்ணமே புகலவைத் தாயெனிற்
புன்மையே னென்செய்குவேன்
மைவிடா தெழுநீல கண்டகுரு வேவிஷ்ணு
வடிவான ஞானகுருவே
மலர்மேவி மறையோது நான்முகக் குருவே
மதங்கடொறு நின்றகுருவே
கைவிடா தேயென்ற வன்பருக் கன்பாய்க்
கருத்தூ டுணர்த்துகுருவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணு கரக்கடவுளே.

பொழிப்புரை :—உண்மை யொளியாத நாவை யுடைய உண்மை யாளர்பால் நீயிருந்து கொண்டு உண்மையாகிய உண்மைப் பொருள்களைத் தும் உண்மையாகவே வெளிப்படக் காட்டியது உண்மையேயாம். இதற் குச் சிறிதும் சந்தேகமே கிடையா ; யதார்த்தத்தைச் சற்று முணராத வெறும் பொய்யை நீங்கப்பெறுத பொய்யினே யுடையவனுயுள்ள எனது நெஞ்சகமிருந்து பொய்யாயுள்ள அசத்தியப் பொருள்களைத்தையும் பொய் யாகக் கூறுதபடி, மெய்யென்று கூறுமாறு என்னை ஏற்படுத்தி வைத்தா யானுல் கேவலஸ்தனுன யான் யாது செய்யக்கடவேன் ? கருமையாகி யோங்கும் நீலகண்ட ரூபமாயுள்ள ஆசாரியனே! மகாவிட்டுணு ரூபமான ஞானசிரியனே! தாமரைமலரில் விளங்கி வேதம் ஓதுகின்ற சதுர்முகக் குரு மூர்த்தியே! இன்னும் சமயங்கடோறும் அவரவர் கொள்கையின் பிரகார மாக நிலை பெற்றுள்ள ஆசாரியனே! கைவிடப்படாதென்று வேண்டிக் கொண்ட அடியவர்கட்கு அன்பே உருவகமாய் அவரவர்கள் கருத்தினுள் உசித்து அறிவுறுத்தும் குருவே! மற்றும் தெரிதற் பாலதைத் தெரிவித்த

சற்குருவே! நினைத்தற்கரிய ஞானசபையின் கண்ணே பரமானந்த பாத நாடகம்புரியா நின்ற காருணிய சொரூபா!

குறிப்புரை:—உண்மையகலாத நாவினையும் உள்ளத்தினையு முடைய ராய உண்மையாளர் பால், பொய்யே கலத்தலிலா சுத்த மெய்யான தத்துவ ஞானங்க ளனைத்தையும் மெய்யென உணர்த்தியது மெய்யே! இதற்குச் சந்தேகமில்லை யென்று கூறி, பின்னர், பொய் நிறையப்பெற்ற எனது மனத் திருந்து பொய்யையே யறிவிப்பாயானால் யான் செய்யக்கடவதொன்று மில்லை யென்பது கருதி, 'இந்த புன்மையேன் என்செய்குவேன்' என லாயினர். மெய்யான மெய் என்பது பொய் கலத்தலிலாத மெய்யாம். பொய்யான பொய் என்பது மெய்கலத்தலிலாத சுத்த முழுப் பொய்யென்க. நிற்க, ஈண்டு குரு வென்பார் பரமசிவமும் மகாவிட்டுணுவும் பிரமனு மானது கொண்டே மும்மூர்த்தியையும் குருவே குருவே யென்றோதினர்; அன்றி எச்சமயத்துக்கும் ஓர் பொருளா யிருப்பது காரணமாகவே "மதங்கள் தோறும் நின்றகுருவே" என்றும், அப்பரம் பொருளார் உண்மையடி யார்கட் கெல்லாம் உள்ளக மருவி உணர்த்தி வருதல் நோக்கியே 'கை விடாதே' யென்று வேண்டும் கைவிடா அன்பர்தம் 'கருத்தூடுணர்த்து குருவே' என்றும் அநுவதித்துக் கூறுவாராயின ரென்க. (5)

சா. பண்ணே னுனக்கான பூசையொரு வடிவிலே
பாவித் திறைஞ்சவாங்கே
பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்தியப்
பனிமல ரெடுக்கமனமும்
நண்ணே னலாமலிரு கைதான் குவிக்கவெனின்
நாணுமென் னுளநிற்றநீ
நான்கும் பிடும்போ தரைக்கும்பி டாதலா
நான்பூசை செய்யன்முறையோ
விண்ணே விணுதியாம் பூதமே நாதமே
வேதமே வேதாந்தமே
மேதக்க கேள்வியே கேள்வியாம் பூமிக்குள்
வித்தே யவித்தின்முளையே
கண்ணே கருத்தே யெனெண்ணே யெழுத்தே
கதிக்கான மோனவடிவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே.

பொழிப்புரை:—பிரபுவே! நினக்கான பூசையினைச் செய்யவில்லை. இதன்றியும், நீ ஓர் உருவத்தின்கண் பொருந்தி யிருப்பதாகப் பாவனை செய்து தொழவும் துதிக்கவும் பார்வையிற் படுகின்ற நறுமலர்கள் பலவகையினும் நீயேதான் இடையறாது விளங்கிவருகின்றாய், ஆகையினாலேயே அவ்வித சீதளமண மலர்களைக் கொய்யவும் மனந்துணியேன், ஈதன்றியும் இரண்டு கரங்களையும் சிரமீது அஞ்சலித்து வணங்குவோ மென்றால் மனமானது வெட்கும், ஏன்? நீயோ, என் சித்த மிசையுள்ளாய், ஆகவே மனமொருமைப்படாது என்றால் செய்யப்படாநின்ற பூசனை புரிதலானது அரைகுறைப் பூசையும் கும்பிடுமாகையினாலே அவ்வாறாகப் பூசைபுரிதல் முறையாகுமோ? ஆகா; ஏ பரமாகாய விலாஸனே! அப்பரமாகாய முதலாயுள்ள ஐவகைப் பூதங்களே! நாததத்துவாதிகளே! வேதமாம் நான் மறைகளே! அம்மறையின் முடிவே! மேலாயுள்ள கேள்விகளே! கேள்வியாயுள்ள ஸ்தலத்தில் நிறைந்தோங்கா நின்ற விரைமுதலே! அவ்விரைகளிற் றோன்றும் முளையே! இன்னும் கண்களே! மன உற்பவமே! என் தருக்காதிகளே! இலக்கணம்ஸமே! முத்திக்குரியதான மௌன சொரூபமே! நினைத்தற்கரிய ஞான சபையின்கண் பரமானந்தத் திருநடம்பயிலும் காருணியவடிவ கடவுளே!

குறிப்புரை:—'ஓர் வடிவிலே' யென்றது மண், மரம், கல், செம்பு முதலியவைகளால் அமைக்கப்பெற்ற விக்ரகங்களை யென்க. வெள்ளியென்னும் வெண்பொன் செம்பொன்களிலும் வடிவம் அமைப்பது முண்டு. இன்னும் 'பூதம் நாதம்' என்றது—பூதமுதலாக நாதம் வரையிலுமுள்ள சகல தத்துவாதிகளையும் பொருந்தியுள்ளான் என்பது தோன்ற அங்ஙனங் கூறலாயினர். எவ்வுருவினையும் பார்த்து வணங்கித் துதிபுரிந்து பேறு பெறும் யோக்கிய ஏதுவாதலானும், கண்ணுண்மணியாய் விளங்கலானும் 'கண்ணே' என்றும் கூறினர். இன்னும் மனத்தோற்றங்களில் நல்லன வல்லாத தீயன விலக்கி உள்ளன வுணர்தலான் அவ்வுணர்வா யிருத்தலும் அவனே யாதலால் 'கருத்தே' என்பாரு மாயினர்.

பின்னும் கடவுட் பூசைக்கிரமம் ஆகமாதிகளின் முறையோடும் செய்தல் வேண்டுமாதலானும், அவ்வாறு புரிதல் அருமையாதலானும் 'உனக்கான பூசையினைப் பண்ணேன்' என்றனர் போலும்.

மற்றும், இறைவன் எங்கு நிறை பரிபூரணனாதலின் மலரொடு மணக்கும் பரிமளத்தில் மிக்க பிரியத்துவ முள்ளமையுங் கருதியே 'பனிமலரெடுக்க மனமும் நண்ணேன்' என்றனர்.

மற்றும், சித்தமிசை குடிகொண்டுள்ள அறிவாந் தெய்வ மாதலின் அவ்வறிவினால் சங்கல்பித்து அதன்பின் கரங்கூப்பிக் கும்பிடத் துவக்குவ

தான் அக்கும்பிடு அவர்க்கு மிருத்தல்பற்றி அரைக்கும்பி டாதலால் பூசை செய்தல் தனக்கு முறையென்று தெரியவில்லை யென்றோதினர்.

ஈண்டு நாத மென்றது சப்தார்த்த வொலியானதாலும், அது பிரம் மாம்ஸ மாதலாலுமே அவ்வாறு 'நாதமே' யென்றும் ஓதலானர். (6)

எ. சந்தமும் வேதமொழி யாதொன்று பற்றினது
தான்வந்து முற்றுமெனலாற்
சகமீ திருந்தாலு மரணமுண் டென்பது
சதாநிஷ்டர் நினைவதில்லை
சிந்தையறி யார்க்கிது போதிப்ப தல்லவே
செப்பினும் வெகுதர்க்கமாந்
திவ்யகுண மார்க்கண்டர் சுகராதி முனிவோர்கள்
சித்தாந்த நித்யரலரோ
இந்த்ராதி தேவதைகள் பிரமாதி கடவுள
ரிருக்காதி வேதமுனிவர்
எண்ணரிய கணநாதர் நவநாத சித்தர்க
ளிரவிமதி யாதியோர்கள்
கந்தருவர் கின்னரர்கள் மற்றையர்க ளியாவருங்
கைகுவித் திடுதெய்வமே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே.

பொழிப்புரை :—மனமானது எந்தப் பொருளைச் சதாகாலமும் நினைத்து வருமோ அதுவே முடிவில் வந்தடையு மென்று நான்மறை யாதிகள் நவிலும் ஆகையினாலே பூமியின் மீதிருந்து வாழினும் சர்வகாலமும் நிட்டாநுபூதிகளால் காலங் கடத்துவோர் சாதலை நினைத்தலே செய்யார். இவ்வுண்மையினை மனோ நிச்சய முணராார்க்கு உபதேசிப்பதன்று; ஏன்? அவர்கள் உண்மை யுணரத்தக்க போதிய நுட்பவுணர்வின்றி பலவாறான தர்க்க வாது புரிவார்கள். உத்தம சத்துவகுண பிரவர்த்தராய மார்க்கண்டரும் மற்றும் சுகர் முதலாயுள்ள முனிவரர்களும் முடிவாய சித்தாந்த வழிநின்ற நித்யத்துவம் வாய்ந்தவர்க ளல்லரோ? இன்னும் தேவேந்திரன் முதலாயுள்ள தேவர்களெல்லோரும், பிரமன் முதலாயுள்ள சகல தேவர்களும், இருக்கு முதலாயுள்ள மறைகளும், தபோதர்களான முனீந்திரர்களும், கணக்கற்ற சிவகண நாதராயினோரும், பின்னும் சத்திய நாதர் முதலாய சித்தர் குழாங்களும், சூரிய சந்திரன் முதலான அஷ்ட வசுக்களானவர்களும், காந்தருவ கின்னரானந்தர்களும் இன்னும் ஏனையோரும் கைகூப்பித் தொழுதற் கேற்ற

பர தெய்வமே! எண்ணுதற்கரிதான ஞானசபையில் பரமானந்த நடம்புரியும் காருண்ணிய வடிவ கடவுளே!

குறிப்புரை:—இவ்வுலகம் தோன்றி நின்று அழிவுறுங் காரியமாய தென்பது விகசிதம். இவ்வாறாய உலகின்கண் யாவர் எக்காரியத்தில் சதா சர்வகாலமும் மனஞ் செலுத்தி வருகின்றார்களோ அவை ஈற்றில் முடிந்தே தீருமென்பது ஓர் சித்தாந்தமாகும். இம் முறையாக், மரணத்தையே சதா நினைப்பில் வைத்துளார்க்கு அந்த மரணம் வந்துறுவது நிச்சயமே யாம். இஃதுணர்ந்த சுகராதியோர் அவ்வாறெண்ணாது தேகத்துடனே சின்மய மெய்தலா மென்று எண்ணித் தவமியற்றி ஜீவன் முத்தர்களானமை யாவரறியார்! இம்முறையானே மரண முண்டென்பதைச் 'சதா நிஷ்டர் நினைவதில்லை' யென்றார் ஆசிரியர்.

ஆகவே, இந்நெறி பற்றிய மார்க்கண்டேயர் சுகராதியர்கள் முனீந்திரர்களாய நித்தியத்துவம் பெற்றமையையே ஈண்டு ஆசிரியர் குறிப்பாக "மார்க்கண்டர் சுகராதியர் சித்தாந்த நித்யரலரோ" என்று சித்தாந்தித்தனர் என்க. (7)

அ. துள்ளுமறி யாமனது பலிகொடுத் தேன்கர்ம
துஷ்டதே வதைகளில்லை
துரியநிறை சாந்ததே வதையா முனக்கே
தொழும்பனன் பபிஷேகநீ
ருள்ளுறையி லென்னாவி நைவேத்தி யம்ப்ராண
னோங்குமதி தூபதீப
மொருகால மன்றிது சதாகால பூசையா
வொப்புவித் தேன்கருணைகூர்
தெள்ளிமறை வடியிட்ட வமுதப் பிழம்பே
தெளிந்ததேனே சீனியே
திவ்யரச மியாவுந் திரண்டொழுகு பாகே
தெவிட்டாத வானந்தமே
கள்ளனறி வூடுமே மெள்ளமெள வெளியாய்க்
கலக்கவரு நல்லவுறவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே.

பொழிப்புரை:—துடிக்குந் தன்மையோடும் மடமைவாய்ந்த மனதைப் பலியிட்டேன்; மகா கொடிய பழிபாவ மயமாயுள்ள துட்ட தேவதைகள் என்னை இனி துன்புறுத்தமாட்டா; துரிய வெளியில் நிறைந்து விளங்

கிய பரம சாந்த தேவதையாயுள்ள தேவரீர்க்கே அடியவனாகிய அடிமையின் அன்பானதுவே அபிஷேகத் திருமஞ்சனமாகும்; நீ என்மனப் பிரதேசத்தில் பொருந்தில் என் ஆவியாம் உயிரே நிவேதனமாகும் அன்றிப் பிராணவாயுவோடு அறிவும் தூபதீபங்களே யாகும். இவ்வாறாக அடிமை பூசை புரிதல் ஓர் காலத்தைக் குறித்ததல்ல; சர்வ காலமும் செய்யும் பூசையாக ஈடு செய்துவிட்டேன்; ஆதலின் எனக்கு இரங்கியருள்வாயாக; வேதாகமங்களாலே தெளியப்பட்டு வடிக்கட்டிய தேவாமுதத் தம்பம் போன்றவரே! தெளிவுற்ற மதுரமதுவே! சர்க்கரையே! இவ்வாறான அதிம தூரித ரசமாகிய வனைத்தும் ஒன்றுபட்டு வடிந்துள்ளபாகே! தெவிட்டுதல் செய்யாத பேரின்பமே! அன்றி, கள்வனும் என் புத்தியினிடத்து மிகச் சாவ தானமாக ஒன்றுபட வருகின்ற சிறந்த பந்துவே! நினைத்தற்கரிய ஞான சபையின் கண்ணே பரமானந்த நடம்பயிலும் காருணிய சொரூபனே! கிருபை செய் யென்றார்.

குறிப்புரை:—மனத்தின் தன்மை, மாறி மாறி ஒவ்வொன்றினைப் பற்றும் சுபாவமுடையதாதலால் 'துள்ளும் அறியாமனதை' யென்றனர். மற்றும் அறிவீனத்தன்மையும் உடனிகழ்ச்சியாயிருத்தலின் அறியா மன தெனவுங் கூறலாயினர்.

அம்மனத்தினை ஒடுக்கியதையே 'பலிகொடுத்தேன்' என்றனர்; மனோ நாசனவுபாயம்:—

"ஆயின் மிக்கோ ரரிய செயலெலா
நேய மிக்க மனத்தை நிறுத்தல்காண்
வாயு நிற்க மனமு முடனிற்குந்
தோய நிற்குநினிற்குந் துரும்புமே."—என்றார் பெரியார்.

"பிராணனோங்குமதி தூபதீபம்"—என்றார். ஈண்டு பிராணவாயு தசவாயுக்களுக்கும் தலைமையாயது. அது வாயு அம்சமாய் சதாசஞ்சரித் தலையே இயற்கையாயுடையது; உருவம் வெளுமையாம் புகை நிறம். ஆத லால் இதனைத் தூபமாகவும் உபசரித்தார்.

மதி, தீபமென்றார்:—மதியாம் அறிவினைத் தீபச்சுடரென்றார்; எவ்வா றெனின் அது சோதியுருவானது பற்றியாமென்க. ஆதலாற்றான் அதனைத் தீபமாகக் கற்பித்தோதின ரென்க. (8)

௯. உடல்குழைய வென்பெலா நெக்குருக விழிநீர்க
ளூற்றென வெதும்பியூற்ற
வூசிகாந் தத்தினைக் கண்டணுகல் போலவே
யோருறவு முன்னியுன்னிப்

படபடென நெஞ்சம் பதைத்துண் ணடுக்குறப்
பாடியா டிக்குதித்துப்
பனிமதி முகத்திலே நிலவனைய புன்னகை
பரப்பியார்த் தார்த்தெழுந்து
மடலவிழ் மலரனைய கைவிரித்துக் கூப்பி
வானேய வானிவின்ப
மழையே மழைத்தாரை வெள்ளமே நீடூழி
வாழியென வாழ்த்தியேத்துங்
கடன்மடை திறந்தனைய வன்பரன் புக்கெளியை
கன்னெஞ்ச னுக்கெளியையோ
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே.

பொழிப்புரை:—(இறைவன்பால் பேரன்புகொண்டு யேற்ற தவ மிழைத்து அதனால்) சரீரம் வாட்ட முறவும், எலும்புகள் யாவும் இளகி யுருகவும், (அளவிடப்படா அன்பின் மிகுதியினாலே) கண்களினின்றும் ஆனந்த நீர் ஊற்றெனப் பெருகிவழியவும், இரும்பூசி காந்த சமுகத்தில் அடையுமாறு போன்று தன்னிகரிலாத ஆத்ம சகாயன் ஆகிய நின்னை நினைத்து நினைத்து மனமானது படபடவென்று விதிர் விதிர்த்து அகத்தில் நடுநடுங்கியும், பரவுதல் செய்து ஆநந்தக் கூத்தாடித்துடித்து, குளிர் வீசும் சந்திரன் பால் தோன்றும் பிரகாசம்போன்ற புன்முறுவல் செய்து பல முறையிலும் ஆரவாரத்தோடும் இதழ் விரிந்துள்ள தாமரை மலரனைய கரங்களை விரித்துக் கூப்புதல் செய்தும், சிதாகாயமே! அவ்வாகாயத்திடை நின்றொழுகிவரும் மழையே! அம்மழையாலேற்படும் பெருக்கே! பன்னெடுங் காலமும் வாழ்வாயென்று பல்லாண்டோதித் துதிபுரியா நின்று, கடலின் மடைதிறந்தன்ன மெய்யடியவர்தம் பேரன்புக்கு ஈடுபட்ட நீ இந்த கடிய தான சிலாசித்தம் வாய்ந்த எனக்கும் சாத்திய மாவையோ! ஆகாவென்ற படி. நினைத்தற்கரிய ஞானசபையில் சதாநந்த நடம்புரியும் காருண்ய சொரூபக் கடவுளே!

குறிப்புரை:—இப்பாசுரத்தான், இறைவனை உள்ளன்போடும் எலும் பெல்லாம் நீராளமாயுருகுமாறு பாடிப்பரவுதல் செய்யா நிற்கும் பரமபக்த சிகாமணிகளின் பக்திக்குக் கட்டுப்படுவரேயன்றி எனைக்கன்னெஞ்சினர் தம் கபடாடம்பர கல்விப் புலமைக்குக் கட்டுப்படாரென்பது நன்குபுலனாயது.

சான்றாக மணிவாசகர் தந்திருவாசகத்தில் :—

ஆடுகின்றிலை கூத்துடை யான்கழற் கன்பிலை யென் புருகிப்
பாடுகின்றிலை பதைப்பதுஞ் செய்கிலை பணிகிலை பாத மலர்

சூடுன்றிலை சூட்டுகின்றதுமிலை துணையிலி பிணநெஞ்சே
தேடுகின்றிலை தெருவுதோ றலறிலை செய்வதொன்றறியேனே.

என்று அருளிச்செய்தமை உணரற்பாற்று.

ஆறாத கண்ணீரும டங்காத பேரன்பு
மாறாத வஞ்சலியும் வாய்த்தவருக்—கூறாத
கல்விற் புறப்பட்ட கையுடையா னக்கணமே
மல்லற் பிறப்பகற்று வான்—என்றார் பிறரும். (9)

௰. இங்கற்ற படியங்கு மெனவறியு நல்லறிஞ
ரெக்கால முஞ்முதவுவார்
இன்சொறவ ரூர்பொய்மை யாமிழுக் குரையா
ரிரங்குவார் கொலைகள்பயிலார்
சங்கற்ப சித்தரவ ருள்ளக் கருத்திலுறை
சாக்ஷிநீ யிகபரத்துஞ்
சந்தான கற்பகத் தேவா யிருந்தே
சமஸ்தவின்பமு முதவுவாய்
சிங்கத்தை யொத்தெனைப் பாயவரு வினையினைச்
சேதிக்க வருசிம்புளே
சிந்தா குலத்திமிர மகலவரு பானுவே
தீனனேன் கரையேறவே
கங்கற்ற பேராசை வெள்ளத்தின் வளரருட்
ககனவட் டக்கப்பலே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே.

பொழிப்புரை :—இம்மையிலே அநுபவித்து முடிந்த வாறுகவே மறுமையிலேயும் அப்படியே யாகு மென்றுணரா நிற்கும் அறிவின் மிக்கார், பிறர்க்கு எப்போதும் நன்மை புரிந்தே தீர்வர் ; அன்றி இனிமையான வார்த்தையே பேசுவர் ; பொய்யான குற்றமுள்ள வார்த்தைகளை வாய்கொண்டுரையார் ; ஆன்மாக்களுக் கிரக்கம் பாராட்டுவார். அன்றிக்கொலை செய்யார் ; பிறஜீவனுக்கு இம்சையிழையார் ; இக்கொள்கைச் சித்தம் வாய்ந்தவராகும் அன்னோர், உளக்குறிப்பில் வாசஞ்செய்கின்ற சாக்ஷி பூதனாய் விளங்கு நீ இம்மை மறுமைகளிரண்டினும், சந்தானம், கற்பகம் என்னும் தெய்வீக விருக்ஷங்களாக வமைத்து எல்லாச் சுகங்களையும் அருளுவாய் ; சிங்கம்போன்று என்பால் பாயுமாறு வருகின்ற இருவினைகளை யொழிக்கவரும் சரபமே! மனோவியாகூலம் என்னும் இருளானது நீங்கும்படி வரவிருக்கும் ஆதவனே!

மிகச்சாமானியனாகிய யான் பிறப்பாங் கடலினைத் தாண்டி மோக்ஷமென்னுங் கரையைப் பற்றும்படி அளவிலாத ஆசையாம் பெருக்கின்பால் சஞ்சாரஞ் செய்யும் கிருபாகாய வட்டத்துலவும் மரக்கலமே! நினைத்தற்கரிய ஞான சபையின் கண்ணே பேரானந்தப் பெரு நடம் புரியும் காருணிய வடிவக் கடவுளே!

குறிப்புரை:—சங்கற்ப சித்தராவார்:— "இந்த இம்மையின்கண் நிகழ்ந்த வனுபூதிக் கியையவே அங்கு என்னும் மறுமைக் கண்ணும் பொருந்தும்" என்னும் பொதுவான பேரறிவும் அன்றிச் சத்துவ குணப் பிரவிர்த்திகளான, பிறர்க்குதவி, அவர்க் கினியவுரை, சொற்றவறாமை, அசத்திய மொழியுரையாமை, பிறர் துயர் கண்டிரங்கல், கொலை களவு கட் காமாதிகளாம் தீயன ஒரு சிறிது முனாற்றாமை யென்னுமிவை யிற்றினைச் சிறிதும் சிந்தை கொளாதுள்ளாரேயாவர் என்றுணர்க. ஆயின், இத்தகை யாளர்க்கு ஆசிரியர் சந்தானம், கற்பகாதி விருக்ஷங்களை உவமை கூறியுள்ளார். ஏன்? இந்த தேவதாருக்கள் தன்னை யடையப் பெற்றார்க்கு நன்னயம் பயக் கும் தகுதியுள்ளன வாகலின் என்க.

இந்த தாருக்களான விருக்ஷங்கள், அந்த தேவலோகத்தை யடைந்து அவ்விருக்ஷ நீழற்கண் பொருந்தி நின்று சங்கல்பித்து அக்காலத்து வேண்டி யன நல்கலை உடைத்தாயிருக்கிறது. அது அசாத்தியம்; நம்பரம கருணாலயனே, இம்மையில் இவ்வுலகின்கண்ணிருந்து சரியை கிரியை யோக ஞானானுபவ பக்திவினையங்களால் தொழுவார்கள் வேண்டுவன வெவையோ அப்பதவிகளனைத்தும் அவ்வப்போது அநுக்ரகித்து ஆண்டருளல் முக்கிய மாகக் கொண்டுள்ளார். ஆகவே, இவர் இகபரமிரண்டிடத்தும் "வேண்டு வார் வேண்டுவன ஈவான் கண்டாய்" என்ற மூதுரைக்கிணங்க இருமை யின்பத்தை இங்கேயே பெறற்குரிய தேவதருவாயிருக்கின்றார் என்பதுவும் நன்கு புலனாயதாம்.

இன்னும், சத்துவகுண பிரவிர்த்திகாளான பெரியார் இதயத்தூடும் சர்வகாலமுமிருக்கும் சாக்ஷி நீயாயிருத்தலால் என்னைச் சிம்மம் போன்று வந்து பற்றும் இருவினைகளையும், சிங்கபக்ஷண சீவனாய் சரபம்போன்ற நீ வந்தருளி வினைப்போகத்தில் வீழாமல் அவ்வினையினை யொழிப்பான் "கருணையோடு வந்தருளாநின்ற சிம்புளே" யெனச்சிறப்ப கற்பித்தமை காண்க. சரபம்=எண்கால் கொண்ட ஓர் அரிய சக்திவாய்ந்த பக்ஷியாகும். இது சிங்கத்தைக் கவளீகரம் செய்யக்கூடியதாம். (10)

## சித்தர்கணம்.



க. திக்கொடு திகந்தமும் மனவேக மென்னவே
சென்றோடி யாடிவருவீர்
செம்பொன்மக மேருவொடு குணமேரு வென்னவே
திகழ்* துருவ மளவளாவி
யுக்ரமிகு சக்ரதர னென்னநிற் பீர்கையி
னுழுந்தமிழு மாசமனமா
வோரேழு கடலையும் பருகவல் லீரிந்த்ர
னுலகுமயி ராவதமுமே
கைக்கெளிய பந்தா வெடுத்துவிளை யாடுவீர்
ககனவட் டத்தையெல்லாங்
கடுகிடை யிருத்தியே யஷ்டகுல வெற்பையுங்
காட்டுவீர் மேலுமேலும்
மிக்கசித் திகளெலாம் வல்லநீ ரடிமைமுன்
விளங்கவரு சித்தியிலையோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

பொழிப்புரை :—அட்டதிக்குகளோடு அத்திசைகளின் முடிவு வரையிலும் மனோவேகமாகச் சென்றும் ஓட்டமாக வோடியும் அன்றி விளையாடியும் வருவீர் ; உயர்ந்த செம்பொன் மயமாய் விளங்கும் மகாமேரு பர்வதத்துடனே சர்வ சற்குணமாம் மேருபர்வதம் போன்று விளங்காநின்ற துருவ மண்டலத்தின் உச்சிவரையிலுங் கூடச்சென்று, அதியுக்ரமானவனும், சக்ராயுதத்தினைத் தரித்தவனுமாய திரிவிக்கிரமன் போன்றும் அந்தரமாக நின்று விளங்குவீர் ; தவிர, தமது கரதலத்தே சப்த சமுத்திர சலங்களையும் உழுந்தளவினதாகச் சிறுக வந்தடங்கச்செய்து ஆசமனமாக (உருஞ்சியுண்டுவிடும்) ஆற்றலுள்ளீர் ; மற்றும், தேவலோகமென்ன, ஆண்டுள்ள ஐராவதமென்னும் வெள்ளையானை யென்ன இவைகளைத் தம்கரங்களிலே மிக இலேசாயுள்ள பந்துபோ லெடுத்தும் விளையாடல் செய்வீர் ; பின்னும் ஆகாய விரிவை யெல்லாம் கடுகினைத் துளையிட்டு அதனுள்ளடங்கு மாறமைத்து எண் வகைப் பர்வதங்களையும் தெரியச்செய்வீர் ; இதன்றியும் இன்னமும் அநேக வகையான சித்துகளை யெல்லாம் செய்யவல்ல தமக்கு, தேவரீர்க்கு மெய்யடிமை பூண்டுள்ள இச் சிறியேன் முன்னர் திவ்ய திருவுருவோடும் எழுந்தருளி

*' துருவனளவளாவி ' என்றும் பாடமுண்டு.

வருவதற்கான ஓர் சித்தி மட்டுமில்லையோ? வேதாந்த சித்தாந்த சமரச மானதோர் நல்ல நிலையைப் பெற்றதாலுண்டாம் ஞானத்தைப் பெற்றருளிய வ சித்தாதிகள் நாயகமே!

குறிப்புரை :—இறைவனது சொலற்கரிய பேராற்றலைக் கூறிவந்ததில், 'திகழ்துருவ மளவளாவி யுக்ரமிகு சக்ரதானென்ன நிற்பீர்' என்றதனால் திரிவிக்கிரமனைக் குறிப்பிடலாயிற்று. ஏன்? துருவம் அளவளாவி என்ற தனா லென்க.

ஆசமனித்தலாவது சந்தி யநுட்டான காலத்தில் உழுந்து அமிழும்படி யான அவ்வளவு சொற்ப தண்ணீரை அகங்கைக் கொண்டு உருஞ்சியுட் கொள்ளுதல் என்க.

'உழுந்து' என்பது இலக்கணமொழி, உலகியலார் உளுந்து என்பர்.

ககனவட்டத்தைக் கடுகிடையிருத்தியும், மற்றும், அட்டகுல வெற்பை யுங் காட்டுவீர் என்ற சக்தியினை அட்ட சித்துக்களில் 'அணிமா' என்ற சித்தியென்பர்.

திகழ்துருவ மளவளாவலாம் விராட்டுருவத்தை, 'மகிமா' என்னும் சித்தியாமென்பர்.

மனவேகமாகச் சென்றோடி வருதலையே 'இலகிமா' என்னும் சித் தென்பர். இச்சித்திகளை நமது மகாதவசிரேட்டரான அகத்திய மகாமுனி வரும் செய்தருளியதாகப் புராணங்கள் மிகவும் போற்றுகின்றன. இதனால் இந்த மார்க்கச் சாத்திர உண்மைகளை நன்கு பாராட்டப் பட்டதாகவும் விளங்குகின்றது. ஐராவதம்=பாற்கடலிலே பிறந்த வெள்ளை யானை. (1)

உ. பாட்டளி துதைந்துவளர் கற்பகநீழலைப்
பாரினிடை வரவழைப்பீர்
பத்மநிதி சங்கநிதி யிருபாரி சத்திலும்
பணிசெயுந் தொழிலாளர்போற்
கேட்டது கொடுத்துவர நிற்கவைப் பீர்பிச்சை
கேட்டுப் பிழைப்போரையுங்
கிரீடபதி யாக்குவீர் கற்பாந்த வெள்ளமொரு
கேணியிடை குறுகவைப்பீர்
ஓட்டினை யெடுத்தா யிரத்தெட்டு மாற்றுக
வொளிவிடும் பொன்னாக்குவீர்
உரகனு மிளைப்பாற யோகதண் டத்திலே
யுலகுசுமை யாகவருளான்

மீட்டிடவும் வல்லநீ ரென்மனக் கல்லையனன்
மெழுகாக்கி வைப்பதரிதோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

பொழிப்புரை:—இரீங்கார சப்தத்தோடுங் கூடிய வண்டுகளானவை மிகவும் ஒருங்குற வாழாநின்ற கற்பகவிருக்ஷத்தினது ஒப்பற்ற நிழலினையும் இந்த பூலோகத்தின்கண் வருமாறு செய்யவல்லீர்; செந்தாமரை யெனச் சிவந்த பொன்குவியலும் சங்க மொத்த வெண்பொன் என்றும் வெள்ளி யென்றும் சொல்லக்கூடிய திரவியக்குவியலும் ஆகிய இருநிதிகளையும் நின் இருமருங்கினும் நின் ஏவுதலைச் செய்கின்ற தொழிலடியார்களைப் போன்று கேட்ட வஸ்துக்களைத் தந்தருளுமாறு நிற்கும்படியாகச் செய்வீர்; இன்னும் பிச்சை யேற்றுப் பிழைக்கும் பரதேசிகளையும் முடிசார்ந்த மன்னராகவும் ஆக்குவிப்பீர்; கற்பாந்த காலத்தில் தோன்றும் யுகாந்த பிரளய வெள்ளத் தினை ஓர் சிறியதான கூபத்தினுள் ஒடுங்குமாறு செய்வீர்; ஓர் மண்ணோட் டினைப்பற்றி ஆயிரத்தெட்டு மாற்றுள்ளதாய் சொலிக்கும்படியான அபராஞ் சிப் பொன்னாகச் செய்வீர்; இவ்வுலகைச் சுமக்கும் ஆதிசேடனும் சற்றிளைப் பாறு மாறு யோகதண்டம் என்னும் ஓர் முழத்தடியினை முட்டாகக் கொடுத்து உலகைச் சுமக்கும்படியாகவும் செய்வீர்; மீண்டும் திருவருளி னாலே மீட்கவும் செய்ய வல்லவராய நீர் எனது மனமாங்கடினமாய கல்லினை அக்கினியிற் பட்டமெழுகினைப் போன்று உருகும்படியாகச் செய்வது மட்டும் ஓர் பெரிய காரியமா? வேதாந்த சித்தாந்தமும் சமரசப்பட்ட நிலையுமுள்ள ஞானம் வாய்ந்த சித்தாதி கணநாதனே!

குறிப்புரை:—பாட்டளி = இரீங்காரம் செய்யாநின்ற வண்டுகள்.

கற்பக நீழல் = தேவலோகத்திலுள்ளதாம்.

பத்மநிதி சங்கநிதி = கணிக்கப்பெறாத வெண் பொன் செம்பொன்களாம்.

உரகன் = ஆதிசேடன்; ஆயிரஞ் சிரமுடையவன். அன்றி இவ்வுலகத் தைச் சுமந்திருப்பவன். வேதாந்த சித்தாந்த சமரச நிலையாவது = வேதாந்த நிலையும் சித்தாந்த நிலையும் விசாரணையால் சமரசப்பட்ட ஓர் ஒப்பற்ற நன்னிலையான முடிவென்க.

அன்றுவிட முண்டமரரைக் காத்தெதி ரந்தகனைக்
கொன்றொரு பாலற்குறிக்கொண்டு காத்துக்கொடும் புரத்தைக்
கன்றெறி தாவிடுங்காலொரு மூவரைக் காத்தமையா
லின்றெனைக் காப்பதரி தல்லவே கச்சியேகம்பனே.

என்றார் வள்ளலார். (2)

௩. பாரொடுநன் னீராதி யொன்றொடொன் றுகவே
 பற்றிலய மாம்போதினில்
பரவெளியின் மருவுவீர் கற்பாந்த வெள்ளம்
 பரந்திடி னதற்குமீதே
நீரிலுறை வண்டாய்த் துவண்டுசிவ யோகநிலை
 நிற்பீர் விகற்பமாகி
நெடியமுகி லேழும் பரந்துவரு ஷிக்கிலோ
 நிலவுமதி மண்டலமதே
ஊரென விளங்குவீர் பிரமாதி முடிவில்விடை
 யூர்தியரு ளாலுலவுவீர்
உலகங்கள் கீழ்மேல தாகப் பெருங்காற்
 றுலாவிநற் றாரணையினான்
மேருவென வசையாம னிற்கவல் லீருமது
 மேதக்க சித்தியெளிதோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
 வித்தகச் சித்தர்கணமே.

பொழிப்புரை :—இப்பூமியென்ன, தண்ணீரென்ன இவைகள் முதலாகப் பஞ்சபூதங்களும் ஒன்றுடனே மற்றொன்றுமாய்ச் சேர்ந்துலயிக்கும் போது (அதாவது கற்பாந்த சர்வ சம்மார காலத்திலே) தாம் பரமாகாய மாகிய மகாகாயத்தின்கண் சேர்ந்து விளங்குவீர்; மற்றும், யுகாந்தப்பிரளய சமயம் நேரும்போது அப்பிரளய தண்ணீரின்மீது ஓர் வண்டைப்போன்று மிதந்து சிவராஜயோக நித்திரை செய்வதுபோல் விளங்குவீர்; இன்னும் சப்த மேகங்களும் ஒன்று சேர்ந்து விரோத பான்மையாக எங்கும்பரவி குமுறி பிரசண்டமாய் மழை பெய்யுங்காலத்தும் சந்திரமண்டல ஸ்தானத்தை இருப்பிடமாக்கொண்டு ஆங்கே விளங்குவீர்; பிரம கற்பாந்த காலத்தில் அதாவது பிரமப் பிரளய சம்ஹார காலத்திலே இடபவாகன மூர்த்தியார் தந்திருவருளினாலே எங்கணும் சஞ்சாரஞ் செய்வீர். மற்றும் உலக மனைத்தும் மேல் கீழாய்த் தடுமாறி சண்டமாருதம் வீசும்போதும் விசேஷித்த தாரணையோக பலத்தினாலே மகாமேரு பர்வதம் போன்று யாதொரு அனுக்கமின்றியும் நின்று விளங்குவீர்; தமது மேம்பாடுள்ள மகாசக்தியாகிய சித்துத் தன்மையென்ன சாமானியமோ; மிகப்பெரிய தன்மையாம் சித்திகளை என்றற் கூறத்தக்க தன்றும் வேதாந்த சித்தாந்தமும் சமரசப்பட்ட நிலையுடைய அதிசயத் தன்மை வாய்ந்த சித்தர் கூட்டங்களே!

குறிப்புரை :—மண் கந்தத்திலும், அப்பு இரசத்திலும் அக்னி சொரூபத்திலும், வாயு பரிசத்திலும், ஆகாயம் சப்தத்திலும் ஒடுங்கிவரும் கற்பாந்தகாலமென்பர் மேலோர்.

பிரமன் முதலியவர்கள் ஒடுங்குங்காலத்தையே "பிரமாதி முடிவில்" என்றனர். "நூறுகோடி பிரமரும் நொந்தினர், ஆறுகோடி நாராயணரங்ஙனே" என்றார் பெரியாரும்.

உழிதரு காலுங்கனலும் புனலொடு மண்ணும்விண்ணு
மிழிதரு காலமெக் காலம்வருவது வந்ததற்பி
னுழிதருகாவத்த வுன்னடியேன் செய்தவல்வினையைக்
கழிதரு காலமுமாயவை காத்தெம்மைக் காப்பவனே.

என்றனர் மணிவாசகப் பெருமானும்.

ஆகவே, இத்தகைய மகாசித்துகளெல்லாம் செய்யவல்ல தம்பெருமையை யானோ அறிந்து அளவிடவல்லேன்! அல்லன் என்றபடி. (3)

௪. எண்ணரிய பிறவிதனின் மானிடப் பிறவிதா
னியாதினும் மரிதரிதுகாண்
இப்பிறவி தப்பினா லெப்பிறவி வாய்க்குமோ
வேதுவரு மோவறிகிலேன்
கண்ணகல நிலத்துநா னுள்ளபொழு தேயருட்
ககனவட் டத்தினின்று
காலூன்றி நின்றுபொழி யானந்த முகிலொடு
கலந்துமதி யவசமுறவே
பண்ணுவது நன்மையிந் நிலைபதியு மட்டுமே
பதியா யிருந்ததேகப்
பவுரிகுலை யாமலே கௌரிகுண் டலியாயி
பண்ணவித னருளினாலே
விண்ணிலவு மதியமுத மொழியாது பொழியவே
வேண்டுவே னுமதடிமைநான்
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

பொழிப்புரை :—கணக்கிடற்கு அருமையாகிய ஜனனங்களுள் (இம்) மனிதப்பிறப்பே மற்றெல்லா ஜெனனங்களுள்ளேயும் மிகவும் அருமையாயதாம்.(இத்தகை அதிமேன்மையாகிய) மானிடப்பிறவியாயது (பலன் பெறாது) மாய்ந்தொழியுமேயாயின், பிறகு வேறென்ன ஜென்மம் எடுத்து வருமோ!

அந்த ஜனனங்களிலே எதேது துன்பங்கள் வந்தடையுமோ ! அதை யானறியேன் ; (ஆகையினாலே) விசாலித்துள்ள இவ்வுலகின் கண்ணே இந்த என் ஜென்மத்துள்ளேயே நின் திருவருள் மயமான ஆகாய வட்டத்திருந்து காலிறங்கி ஆனந்த வருஷம் வருஷித்து வரும் மேகபடலத்தோடுங் கலப்புற்று என் புத்தியானது பரவசமாமாறு செய்வதே மிகவும் நன்றாகும் ; இந்நிலையிலே யான் அமிழளவு மாத்திரம் எளியேற் கிடமாயுள்ள சரீரமாயது தனது பவுரிக்கூத்தி னின்றும் மாறாதபடி கௌரியாய குண்டலினிசத்தியாம் பரதேவியாரது கிருபா விசேடத்தினாலே ஞானாகாயத்தின் கண் சாசுவதமாயுள்ள சந்திரன்பால் நிறைந்திருக்கும் அமுதப் பெருக்கானது இடையறாது பெருகி வழியுமாறு அடிமைபூண்ட யான் பிரார்த்திக்கின்றேன் ; வேதாந்த சித்தாந்த மென்னும் இருவகையும் சமரசப்பட்ட நல்ல ஓர் ஞான சித்தர் கணமே !

குறிப்புரை :—மக்களாக்கையிற் பிறத்தலேயரிது மற்றதிலும்
துக்க கூன்குரு டூமையைத் துறத்தலுமரிது
நற்குலத்திடை வருதலுமரிது ஞானத்தான்
முக்கணீ சனுக்காட்படல் முற்றிலு மரிதே.

என்ற வள்ளற் பெருமான்றன் தெள்ளியவுரையானும், இவ்வரும் பிறவியும்,

“ புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லா அ நின்றவித் தாவர சங்கமத்து
ளெல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான் ”

என்று மணிவாசகர் தந்திருவாசகத்திற் கூறியவாறாக இம்மானிடப்பிறவியாயது நால்வகையோனி வழிவந்த துன்பங்களெல்லாஞ் சகித்து வந்த அரும் பிறவியாதலால் இது நீக்கமுறு முன்னதாக மகாப்பிரபுவாய தேவரீர் என் சஞ்சலமகற்றி ஞான,

“ சீதசீதளபூர்ண மதிமண்டலச் செழுந்தேன் மடைதிறந்துண்டுளந்
தேக்கிட்டடற் பெரும் பசி நீக்கி மௌனச் செருக்குற்றுலாவு கரணச்
சேட்டை யற்றருளின்ப வீட்டி நாட்டத்தை யென்சிந்தை குடிவைத்தல்
வேண்டும் ”

என்று ஆசிரியர் விண்ணிலவுமதியமுதம் வேண்டுவாராயினர் என்க. குண்டலிசத்தி=மூல நிலத்தின்கண் சர்ப்பவடிவுற்ற வோர் சத்தியாம். பவுரி= கூத்தின் விகற்பம். (4)

ரு. பொய்திகழு முலகநடை யென்சொல்கே னென்சொல்
பொழுதுபோக் கேதெள்ளிலோ [கேன்
பொய்யுட னிமித்தம் புசிப்புக் கலைந்திடல்
புசித்தபின் கண்ணுறங்கல்
கைதவ மலாமலிது செய்தவம தல்லவே
கண்கெட்ட பேர்க்கும்வெளியாய்க்
கண்டதிது விண்டிதைக் கண்டித்து நிற்றலெக்
காலமோ வதையறிகிலேன்
மைதிகழு முகிலினங் குடைநிழற் றிடவட்ட
வரையினொடு செம்பொன்மேரு
மால்வரையின் முதுகூடும் யோகதண் டக்கோல்
வரைந்துசய விருதுகாட்டி
மெய்திகழு மஷ்டாங்க யோகபூ மிக்குள்வளர்
வேந்தரே குணசாந்தரே
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

பொழிப்புரை :—பொய் மலிந்தோங்கும் இவ்வுலக (ஆன்மாக்களது) நடையினை என்னென்று சொல்வது! என்னென்று சொல்வது!! (ஆனாலும் சில சொல்வேன்) :— இத்தேயத்தவர் காலங்கடத்துவ தெவ்வாறெனிலோ, தத்தம் அநித்திய தேகபோஷணை நிமித்தம் ஆகாரங் கிடைக்கு மிடங்களுக் கேகுதல், அவ்வாறு உண்ட பின்னர் உறங்கிக் கிடத்தல் ஆகிய இவை தீயதாம் பொய் நடப்பன்றிச் (செய்யத்தக்க ஆத்மலாப) மென்பதில்லையே! இவ்வழக்க வொழுக்கமாயது சாமானிய குருடர்களுங்கூட வறிந்ததாகும். ஆதலால் இவ்வஞ்ச நடையை யொழித்துவிடல் எப்பொழுதோ அதுவிளங்கவில்லை. நீருண்ட மேகங்களானவை பெரியதோர் குடையென நிழல் கொடுக்க, எண்வகைப் பர்வதங்களுடனே பொன்மலையா மேருபர்வதத்தின் முதுகினிடமாக யோக தண்டத்தினை யெழுதி ஜெயத்துவசங் காட்டி. உண்மை விளக்கமாய எட்டங்கங்களோடு கூடிய யோகஸ்தானத்துள் தோன்றி விளங்குகின்ற தவராஜரே! சற்குண சாந்த சீலரே! வேதாந்த சித்தாந்த மென்கிற இருநெறியும் சமரசப்பட்ட நல்ல நிலையுற்ற ஞான சித்தி வாய்ந்த கணங்களே!

குறிப்புரை :—சித்தர் குழாத்தினர், பற்பல பர்வதங்க டோறும் முற்காலத்தில் வதிந்து ஒப்பற்ற ஞானயோக தாரணைகள்பயின்று வந்தனரென்பது விளக்குவான் "செம்பொன் மேரு மால்வரையின் முதுகூடும் யோக

தண்டக் கோல் வரைந்து சய விருதுகாட்டி" எனத் தெளிவுறக் கூறினமை செவ்விதி னுணரத்தகும். (5)

சா. கெசதுரக முதலான சதுரங்க மனமாதி
கேள்வியி னிசைந்துநிற்பக்
கெடிகொண்ட தலமாறு மும்மண்ட லத்திலுங்
கிள்ளாக்குச் செல்லமிக்க
தெசவிதம தாய்நின்ற நாதங்க ளோலிடச்
சிங்காச னாதிபர்களாய்த்
திக்குத் திகந்தமும் பூரண மதிக்குடை
திகழ்ந்திட வசந்தகாலம்
இசையமலர் மீதுறை மணம்போல வானந்த
மிதயமேற் கொள்ளும்வண்ணம்
என்றைக்கு மழியாத சிவராச யோகரா
யிந்த்ராதி தேவர்களெலாம்
விஜயஜய ஜயவென்ன வாசிசொல வேகொலு
விருக்குநும் பெருமையெளிதோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

பொழிப்புரை :—யானை, குதிரை முதலாகவுள்ள சதுரங்க சேனைகள் போன்று, மனமுதலான அந்தக் கரணங்க ளானவை பணி செயற்குத் தயாராக விருக்க, அஞ்சத்தக்க ஆறு ஆதார ஸ்தலங்களும் மூவித மண்டலங்களினும் கிள்ளாக்கு என்னும் கைச்சீட்டு செல்லுமாறதாக, மேன்மையான பத்துவிதமாய நாத வொலிகள் சப்தஞ் செய்யவும், சிங்காசனாதிபர்களாய் அட்டதிக்குகளும் அதன் முடிவுகளிலும் பூரணமாயுள்ள சந்த்ரவட்டக் குடை தோன்றி நிற்கவும், அன்றி தென்றல் வீசும் வசந்த காலமும் சந்தித்திருக்க, புஷ்பத்துள்ள நறுமணம் போன்று பரமானந்த மானது இதயாம் பரத்தே பூரித்து நிற்கும் வண்ணமாக எக்காலமும் நீங்காத சிவராஜயோக பானுகி இந்திரன் முதலாகவுள்ள சமஸ்த தேவர்களெல்லாம் விஜய! ஜய ஜய!! என்பதாக மங்களவசனுசி கூறவும் கொலு வீற்றிருக்கா நின்ற நினது அளவு கடந்த பெருமையினைக் கூறவும் சாத்தியமோ! அன்றென்க. வேதாந்த சித்தாந்த சமரச நிலை கொண்டருளிய ஞான சித்தர் கணங்களே!

குறிப்புரை :—"திக் விஜயஞ் செய்து பகைவரை யெல்லாம் வென்று ஜெயக்கொடி நாட்டி இராஜ்யபரிபாலனஞ் செய்யும் சிம்மாசனாதிபர்களுக்கு, சதுர்வித சேனைகளானவை எவ்வாறு பாதுகாத்து வருமோ அதேபோல,

தாங்களும் சிவராஜ யோகத்தினர்களாய் அந்தக்கரணங்களே சேனைசைனியங்களாய், சிரோ நாதங்களானவை தசவாத்தியங்களாய், சந்திரமண்டலத்தை வெள்ளிய கொற்றக் குடையெனவாய், சதானந்த இதயாம் பாத்தராய், தேவேந்திராதியர் ஜெயவிஜயீ பவா வென்று ஆசீர்வதிக்க இராஜயோகக் கொலுவிருந்து மரணமிலாப் பெருவாழ்வு பெற்றுள்ளவர்களாயினீர்கள்" என்று வாழ்த்தல் செய்தமை நன்குணர்க.

கெசம்=யானை. துரகம்=குதிரை. காலாட்படை, குதிரைப்படை இவைகளே சதுர் அங்கசேனை யென்பன. இராஜாங்க மெனவும் ஆம். ஆறு தார ஸ்தலங்கள்=மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை என்பன. மும்மண்டலம்=சூரிய மண்டலம், சந்திர மண்டலம், அக்னி மண்டலம் என்பனவாம்.

நாதம் 10 ஆவன:—மணி, கடல், யானை, சங்கு, குழல், மேகம், வண்டு, தும்பி, யாழ், பேரிகை இவைகளின் தொனிகள் போன்ற ஒலியேயாம். என்றும் அழிவுறாமை=மரணமிலாப் பெருவாழ் வென்பன. கிள்ளாக் கென்பது=கைச்சீட்டு. (6)

எ. ஆணிலே பெண்ணிலே யென்போல வொருபேதை
யகிலத்தின் மிசையுள்ளதோ!
ஆடிய கறங்குபோ லோடியுழல் சிந்தையை
யடக்கியொரு கணமேனும்யான்
காணிலேன் திருவருளை யல்லாது மௌனியாய்க்
கண்மூடி யோடுமூச்சைக்
கட்டிக் கலாமதியை முட்டவே மூலவெங்
கனலினை யெழுப்பநினைவும்
பூணிலே னிற்றைநாட் கற்றதுங் கேட்டதும்
போக்கிலே போகவிட்டுப்
பொய்யுலக நயினே னயினுங் கடையான
புன்மையே யின்னமின்னம்
வீணிலே யலையாமன் மலையிலக் காகநீர்
வெளிப்படத் தோற்றல்வேண்டும்
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

பொழிப்புரை:—ஆண் பாலார், பெண்பாலார் என்னும் இருபாலாருள்ளும் என்னைப் போன்ற ஓர் அறிவிலான் இப் பிரபஞ்சத்திலேயு மிருப்பதுண்டோ! சுழன்றாடும் காற்றாடியை யொத்து விஷயாதிகளிலே அதிதுரித

மாய்ச் சென்றடையா னின்றுழலும் மனத்தினை, அங்ஙனஞ் செல்லவொட் டாது தடைப்படுத்தி ஓர் க்ஷணப்போதேனும் திருவருளைப் பெற்றேனில்லை! அன்றியு மோன முத்திரையோடு, உள்ளிருந்தோடி யுலவும் பிராணவாயு வினைக் கும்பித்து பதினாறு கலைகளோடுங் கூடிய சந்திர மண்டலத்திற்றாக் கிட மூலாதார ஸ்தானத்திருந்து முளைத்தெழுஞ் சோதியை மேனோக்கு மாறு செய்ய எண்ணிலேன்; இவ்வளவு கால பரியந்தம் யான் கற்றறிந்தும் கேட்டறிந்தது மாய கலா விநோதங்களை அதனதன் யதேச்சாவழி செல்ல விட்டு கேவலம் இப்பொய்யுலகத்தனை யொத்தேன்! சுவானத்தினும் இழிந்த கேவலஸ்தனைய யான் இனிமேலும் அவ்வாறாக அவலம்பிக்காமல் தேவரீர் என்முன்பாக மலையை யொத்துப் பிரசன்னமாதல் வேண்டும். வேதாந்த சித்தாந்த சமரச நிலையை யுடைய ஞானசித்தர் கணங்களே!

குறிப்புரை:—தொடுக்கவோ நல்ல சொன்மலரில்லை நான்
றுதிக்கவோ பத்தி சுத்தமுமில்லை யுள்
ளொடுக்கவோ மன மென்வசமில்லை யூழ்
உற்றவாணவ மாதிமலங்களைத்
தடுக்கவோ திடமில்லை யென்மட்டிலே
தயவுதானினக்கில்லை யுயிரையும்
விடுக்கவோ மனமில்லை யென்செய்குவேன்
விளங்குமன்றில் விளங்கியவள்ளலே.

என அருட்பிரகாச வள்ளலாரும், மற்றும்,

நின்னை யறப்பெறுகிற்கிலே னன்னெஞ்சே
பின்னையான் யாரைப் பெறுகிற்பேன்—நின்னை
யறப் பெறுகிற்பேனேற் பெற்றேன்மற் றீண்டே
துறக்கந் திறப்பதோர் தாள்.

என்னும் அறநெறிச் சாரத்தானும் நன்கு புலனாதல் போன்றே நமது தாயுமானாரும் பிற ஆண்டின் "சிந்தையை யடக்கியே சும்மா யிருக்கின்ற திறமரிது" எனக் கூறியுள்ளாராதலானும், சிந்தையை யடக்காவழி திருவருள் கிட்டாதெனவுஞ் சிட்டாசாரம் ஒரு பாலுரைத்த லானும் 'ஆடிய கறங்குபோல் ஓடியுழல் சிந்தையை யடக்கியொரு கண மேனும் யான் காணிலேன் திருவருளை' யெனவும் கூறலாயினர். இதனால் இறைவன் குருமூர்த்தமாய் வந்து அருணோக்கஞ் செய்து பேரின்ப நிட்டை பெற்றால் அதன்மேல் மனமடங்கும் என்பது நன்கு புலனாயது. (7)

அ. கன்னலமு தெனவுமுக் கனியெனவும் வாயூறு
கண்டெனவு மடியெடுத்துக்

கடவுளர் கடந்ததல வழுதழுது பேய்போற்
கருத்திலெழு கின்றதெல்லா
மென்னதறி யாமையறி வென்னுமிரு பகுதியா
லீட்டுதமி ழென்றமிழினுக்
கின்னல்பக ராதுலக மாராமை மேலிட்
டிருக்கலா லித்தமிழையே
சொன்னவ னியாவனவன் முத்திசித் திகளெலாந்
தோய்ந்தநெறி யேபடித்திர்
சொல்லுமென வவர்நீங்கள் சொன்னவவை யிற்சிறிது
தோய்ந்தகுண சாந்தனெனவே
மின்னல்பெற வேசொல்ல வச்சொல்கேட் டடிமைமனம்
விகசிப்ப தெந்தநாளோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

பொழிப்புரை :—மதுரம் வாய்ந்த கரும்பிரசக் கட்டியாகவும், வாழை, பலா, மா வென்று மூன்றுகனிகளின் மதுரமாகவும் வாயில் நீரூறு தற்கேதுவாய கற்கண்டாகவு முள்ள மிக்க மதுரவாக்கானது, இறைவனால் எடுத் தோதப்பட்டதன்று, என்றாலும், பேயினை யொத்தே பன்முறையும் புந்திநைந்தோல மிட்டு என்னெஞ்சகத் துதயமாய தனைத்தையும் என் பேதமை, அறிவுடைமை யென்கின்ற இருவிதபாகு பாட்டால் கூறிய தமி ழலங்கலாகும்; அவ்வாறு யான் கூறியுள்ள சொன்மாலைக்கு மிக்க அன்பு பொருந்தி யுள்ளதாலே உலகம் குறை கூறமாட்டா, நிற்க; மற்று முத்தி சித்தியாதிக ளனைத்தும் பொருந்தி யுள்ளதான நன்னெறியினையே கற்றவர் கள் இத்தமிழ் பாமாலையினையே சொல்லானின்றவனை அவன் யாவ னென்று அவ்வுலகர் சொல்வீர்களாக வென விஞதல் செய்ய, தாங்கள் கூறு னின்ற அம்மொழிகளாலே சற்று சாத்வீககுணம் பொருந்தியவ னென்று, பிரபல்யமாய்ப் புகழ்ந்தோதவும், அடியவன் அம்முறையறிந்து மனஞ்சற்று நன்குற வுணர்ந்து மலர்வது எந்த சமயமோ! வேதாந்த சித்தாந்தம் சமர சப்பட்டுள்ள ஞானச்சித்தர் குழாத்தினர்களே!

குறிப்புரை :—அக்காலத்திலே சேக்கிழார்க்கு, தில்லைக்கண் தாண்டவ மாடிய ஆண்டவராலே பெரியபுராணம் பாடியருளவேண்டி "உலகெலாம்" என்று திருவாய் மலர்ந்து அடியெடுத் தோதினரென்பது விகசிதமாகும். ஏ சித்தர் குழாத்தினர்காள்! இறைவன் எனக்கு அவ்வாறு அருளாவிடினும், இங்கென் சிறு மொழியாம் தமிழ் மாலைகளை உலகோர் தேவரீரை விஞதல் செய்ய, அந்நிமித்தம் தாங்கள் திருவாய் மலர்ந்தருள, அதுகண்டு அறிஞர்

கள் எளியேனைப் பிரபல்யப்படுத்தவும், அம்மொழி யுணர்ந்து அடிமை பாடிக் களிப்புறுவ தெந்தக் காலமோ! வென்பதே முக்கிய முடிவுரை யாமென்க. (8)

கூ. பொற்பினொடு கைகாலில் வள்ளுகிர் படைத்தலாற்
போந்திடை யொடுக்கமுறலால்
பொலிவான வெண்ணீறு பூசியே யருள்கொண்டு
பூரித்த வெண்ணீர்மையால்
எற்பட விளங்குகக னத்திலிமை யாவிழி
யிசைந்துமே நோக்கமுறலால்
இரவுபக லிருளான கனதந்தி படநூறி
யிதயங் களித்திடுதலாற்
பற்பல விதங்கொண்ட புலிகலையி னுரியது
படைத்துப் ப்ரதாபமுறலாற்
பனிவெயில்கள் புகுதாம னெடியவான் றொடர்நெடிய
பருமர வனங்களாரும்
வெற்பினிடை யுறைதலாற் றவராச சிங்கமென
மிக்கோ ருமைப்புகழ்வர்காண்
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

பொழிப்புரை :—(மேலான தவமிழைத்து வந்த அக்காலத்திலே தேவரீர்க்கு) அழகுற காசரணத்தில் அதிகூர்மையுள்ள நகங்கள் வளர்ந்தோங்கியதானும், (அன்றித் தவ அருகமான சருகு கிழங்கு கனியாதி) புசித்தலாலே இடைகள் மிகச்சிறுத்துள்ள தானும், பிரகாசியா நின்ற அதிவெண்மை வாய்ந்த திருநீறணிதலாலே மங்களகர பெருமையோடும் ஏமாப்புற்றதோர் மேதகத் தன்மையானும், சூரியகிரணம் பரவியுள்ள ஞானகாயத்தின்கண் இமையாத நாட்டத் தோடும் பார்வை கொண்டுள்ளதானும், இன்னும் இராப்பகலாக அஞ்ஞானமே யானை சொரூபமாக வுள்ளதை ஒழியுமாறு செய்து மனது யேமாப் படைந்திருப்பதானும் நானாவிதமான வியாக்ராசனமென்ன மான்றோலென்ன இவை முதலியவைகளைத் திவ்யாசனமாக் கொண்டு மாண்புடைத் தாதலாலும், மற்றும் பனியென்ன, வெயிலென்ன மழையென்ன இவைகளால் துன்பெய்தாவாறு அதிவிசாலித்த ஆகாய மளாவப் பெற்ற பருத்துள்ள விருக்ஷாதிகள் நெருங்கி யோங்கப் பெற்றுள்ள வனாந்தர சார்பான பர்வதங்களின் குகை வாசம் புரிதலாலும், தவத்துறையில் மிக்க பெருமைவாய்ந்த தவராஜ சிங்கங்க ளென்று மகா பிரமுகர்கள் தங்களையெல்லாம் அருமையோடும் புகழ்ந்து கொண்டாடா நிற்பர்கள். வேதாந்த

சித்தாந்த சமரச நன்னிலை பெற்ற ஞான சித்தர் குழாத்தினர் களே!

குறிப்புரை :—இப்பாசுரத்திலே மகா தபோ சிரேட்டர்கட்கு சிம்மத்தை உபமானித்திருக்கிறது. அதனால் அத் தவசிகாமணிகளான சித்தர் குழாத்தினர்க்கு ஆகாய நோக்குண்டு; அது போலவே சிங்கத்திற்கும் மேல் நோக்குண்டென்றார். இன்னமும் யானையைச் சிங்கம் கபாலத்தையுடைத்துக் கொல்லுஞ் சுபாவமுடைமையை இங்கு சித்தர்கணங்கட்கு ஏற்றினர்; எவ்வாறெனில், கணங்களின் யானையாவது இருண்ட மேகம்போன்ற இருட்டினை யொழித்து துரிய வெளியாம் பரவொளி வெளியின்கண் அறிவோடிருந்து ஆனந்தித்து வரும் வெற்றி பெற்றுள்ள மாண்பான சந்தோஷத்தினை லென்க. பின்னும், சிங்கத்திற்கும் சிவகண நாதர்கட்கும் காசராஞ்ஞிகளில் கூர்மையான நகம் வளர்ந்துறலானும் உவமையாகக் கூறினமையு முணர்க. (9)

ய. கல்லாத பேர்களே நல்லவர்க ணல்லவர்கள்
கற்றுமறி வில்லாதவென்
கர்மத்தை யென்சொல்கேன் மதியையென் சொல்லு
கைவல்ய ஞானநீதி [கேன்
நல்லோ ருரைக்கிலோ கர்மமுக் கியமென்று
நாட்டுவேன் கர்மமொருவன்
நாட்டினு லோபழைய ஞானமுக் கியமென்று
நவிலுவேன் வடமொழியிலே
வல்லா னொருத்தன்வர வுந்த்ரா விடத்திலே
வந்ததா விவகரிப்பேன்
வல்லதமி ழ்றிஞர்வரி னங்ஙனே வடமொழியின்
வசனங்கள் சிறிதுபுகல்வேன்
வெல்லாமலெவரையு மருட்டிவிட வகைவந்த
வித்தையென் முத்திதருமோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

பொழிப்புரை :—(ஆன்மாக்களுள்ளே) கல்வி பயிலாதுள்ளவர்களே (ஒருவாறு) நல்லோரென்று கூறுவேன்; (ஏன்?) கல்வியினை உள்ளவாறு கற்றறிந்தும் (அதற்குரிய நன்னடக்கையின்றி) தீயனவாய பாழ்த்த கர்ம வினை புரிதலினென்க; அன்றி அவர்கள் செய்யா நின்ற கொடிய காரியாதிகளை யான் யென்னென்று கூறுவது! புத்தியின் போக்கை எங்ஙனங் கூறு

வேன்! (அம்மம்மா வாய்கொண்டுரைக்க வகையின்று!) கைவல்யமாய்ப் பெறற்குரிய உண்மை ஞானமார்க்கத்தை உற்றோர் ஓதுவரேல், (அதற்கெதிரிடையாகக் கல்விக்கடலைப் பருகினவர் போன்று) அந்த ஞானநீதிகளையிழித்துக் கர்மாவையே மிகவுஞ் சிலாக்கியமாக வாதமிட்டு நிலை நாட்டவும் பாடுவேன்! (ஓர் சமயம் ஒருவன்) கர்மாவை விசேடித்துக் கூறிவாதிட்டால் முற்கூறிய ஞானத்தையே சிறப்புறக் கூறுவேன்! இஃதன்றியும், வடமொழியென்னுஞ் சம்ஸ்கிருதபாஷா ஞானங் கைவரப்பெற்ற வொருவன் வந்திடுவனேல் தமிழ்ப் பாஷையில் மிகத்தேறிய ஆராய்ச்சியுள்ளவன் போன்று, யெதிர்த்துப் பேசுவேன்; அன்றி தமிழில் வன்மைபெற்ற விவேகிகள் வந்தால் சம்ஸ்கிருத பாஷையில் சில வார்த்தைகளைப் பிரயோகித்து வெற்றியுறப் பேசிடுவேன்; ஆகவே இவ்வாறெல்லாம் உலகத்தாரோடும் வீணை விதண்டாவாதம் பேசி மருட்டல் செய்யும் அவித்தையைக் கற்றுக்கொண்டதால் சிறிதேனும் முத்தி மோக்ஷமென்பது சித்திக்குமோ! அன்றி மற்றென்ன பயன்தான் தரப்போகிறது! (கொடிய குதர்க்கி யென்ற பெரும்பேர் வேண்டுமானால் பெறலாம்; ஆனாலும் அதில் பெருமையின்றி வறுமைக்கு வித்தாய் விடும்) வேதாந்த சித்தாந்த சமரச நிலைபெற்ற ஞானசித்த கணங்களே!

குறிப்புரை:—இந்நிலவுலகில் சில குதர்க்க உரையாளர் தமது அற்ப அறிவால் கற்ற அற்பக்கல்வி கேள்விகளாலே தக்காரையீர்த்துத் தகவிலமொழிந்து வீண்வாதம் பேசி நாள் முழுதும் போக்கும் விழலராம் புறமதவாதிகளின் பேழ்வாய்ப் பிதற்றல் கேட்டு மனஞ் சகியாராய் அன்னவரைக் கண்டனம் புரியுமாறாகத் தம்மேலேற்றி இப்பாசுர மொழிந்தமையறிக.

ஆகவே, கல்லார் நல்லாரென்று கருதுவதொழிக. "கற்கக்கசடறக் கற்பவை கற்றபின், நிற்க அதற்குத்தக" என்றார் தெய்வப் புலமைத் திருவள்ளுவனார். "கற்ற மேலவர் தங் கருத்தினையோரேன்" என்றார் பெரியார்.

திருமந்திரம்.

1. கல்லாத மூடரைக் காணவு மாகாது
கல்லாத மூடர்சொற் கேட்கக் கடனன்று
கல்லாத மூடர்க்குக் கல்லாதார் நல்லாராங்
கல்லாத மூடர் கருத்தறியாரே.

2. கற்றுஞ் சிவஞான மில்லாக் கலதிகள்
சுற்றமும் வீடார் துரிசறார் மூடர்கண்
மற்றும் பலதிசை காணார் மதியிலோர்
கற்றன்பினிற் போர் கணக்கறிந் தார்களே.

உபதேச காண்டம்.

கற்றிலாய கலை கற்றுணரார் முகந்
முற்று நோக்கின் மயானத்தை யொக்குமால்
பெற்றுளார் பெறும் பேறுதங் காதலர்
சொற்ற கல்வியிற் றூயரென் றோதலே.

முதுமொழி வெண்பா.

மெய்த்த திருவள்ளுவனார் வென்றுயர்ந்தார் கல்விநலம்
துய்த்தசங்கத் தார்தாழ்ந்தார் சோமேசா—வுய்த்தறியின்
மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்றா ரனைத்திலர் பாடு. (10)

---

ஆனந்த மானபரம்.

க. கொல்லாமை யெத்தனை குணக்கேட்டை நீக்குமக்
குணமொன்று மொன்றிலேன்பாற்
கோரமெத் தனைபக்ஷ பாதமெத் தனைவன்
குணங்களெத் தனைகொடியபாழ்ங்
கல்லாமை யெத்தனை யகந்தையெத் தனைமனக்
கள்ளமெத் தனையுள்ளசற்
காரியஞ் சொல்லிடினு மறியாமை யெத்தனை
கதிக்கென்ற மைத்தவருளிற்
செல்லாமை யெத்தனை விர்தாகோஷ்டி யென்னிலோ
செல்வமெத் தனைமுயற்சி
சிந்தையெத் தனைசலன மிந்த்ரஜா லம்போன்ற
தேகத்தில் வாஞ்சைமுதலா
யல்லாமை யெத்தனை யமைத்தனை யுனக்கடிமை
யானேனி வைக்குமாளோ
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே.

பொழிப்புரை:—ஆறறிவு பெற்றுவாழும் ஆன்மகோடிகளுள், ஓர் ஜீவாத்மாவைக் கொலை செய்தலாகிய தீயகாரியத்தைச் செய்தலில்லாத நற்குணமானது ஒருவன்பா லிருக்குமானால் அந்த உத்தம குணமானது எவ்வளவோ பொல்லாக் காரியாதிகளெல்லா வற்றையும் நீக்கிவிடும்.

ஆகவே, அந்த உத்தமமான சத்துவகுணப் பிரவிர்த்தியான சதாசார மானது ஓர் சிறிதும் பொருந்தப் பெறாத என்னிடத்தே எத்தனையோ குரூரமான சுபாவமும் எவ்வளவோ பக்ஷபாதமான நடபடிக்கையும், இன்னும் எவ்வளவோ கொடியதான தீக்குணங்களும், எவ்வளவோ கற்க வேண்டியன வற்றைக் கல்லாது பாழ்ப்பட்ட துர்க்குணங்களும், எவ்வளவோ அகங்கார சேஷ்டிதங்களும், இன்னும், எத்தனையோ நெஞ்சத்தே வஞ்ச கத்தையுடைமையும், யதார்த்தமான உத்தம காரியாதிகளை விவரிக்கின் அதைச்சிறிதும் தெரிந்து கொள்ளாமையும், மோக்ஷார்த்தமா யேற்பட்டுள்ள திருவருட் குணங்களிலே பொருந்தாமையான இராசத குணங்களையும், அப்பிரயோசனமாய கூட்டங்களிலே சென்றலக் கழிதலுமாகிய துர்க்குணத் தையும், அவ்விர்தா காரியாதிகளுக்கு ஊகப்பாடும் யோசனையுமான அவ்வள வும், சதாசலித்தலையுடைய இந்திரசால மொத்த அநித்திய சரீரத்திலே இச்சை முதலிய குணங்களல்லாததான குணங்களத்தனையும் அமைத்தனை ; ஆகவே, இத்தனைக்கும் தமக்கடியவனான யான் ஆளாவதோ! இவ்வண்ட மென்ன இதற்கு அகம் புறங்களென்ன இவ்வளவும் அடங்கு முறையான் ஓர் பரிபூரண சொரூபமாயும் ஆனந்தாநுபவமுமான பரவஸ்துவே!

குறிப்புரை:—ஒருவனிடத்தே ஜீவவதை செய்யாமையாகிய ஓர் நற்குணமிருப்பின், அதுவே வழியாக மற்றை எவ்வித தீயவொழுக்கத்தை யும் போக்கி, நல்லனவெல்லாம் நனிசிறந்தோங்கும் என்பன புலனுயது.

கோரம்=குரூரம். பக்ஷபாதம்=ஓர் சார்பினிற்றல். 'அஹிம்ஸா' தர் மத்தை முதற்கண் கூறியது முறைமையிற் சிறந்தன வாயதென்றுணரற் பாற்று. (1)

உ. தெருளாகி மருளாகி யுழலுமன மாய்மனஞ்
சேர்ந்துவளர் சித்தாகியச்
சித்தெலாஞ் சூழ்ந்தசிவ சித்தாய் விசித்திரமாய்த்
திரமாகி நாளுவிதப்
பொருளாகி யப்பொருளை யறிபொறியு மாகியைம்
புலனுமா யைம்பூதமாய்ப்
புறமுமா யகமுமாய்த் தூரஞ் சமீபமாய்ப்
போக்கொடு வரத்துமாகி
யிருளாகி யொளியாகி நன்மைதீ மையுமாகி
யின்றாகி நாளையாகி
யென்றுமா யொன்றுமாய்ப் பலவுமா யாவுமா
யிவையல்ல வாயநின்னை

யருளாகி நின்றவர்க ளறிவதல் லாலொருவ
ரறிவதற் கெளிதாகுமோ
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே.

பொழிப்புரை :—ஞானமயமாகியும், மயக்க முடையதாகியும், அலக்கழிவுள்ள கலங்கிய மனமானது தான் பொருந்தி வாழா நின்ற அறிவின் வசமாகியும், அந்த அறிவனைத்தும் பொருந்தாநின்ற சிவஞான மயமாகியும், இன்னும் பரமாச்சரிய தன்மையாகியும், பின்னர் ஓர் உறுதிப்பாடாகியும், மற்றும் பல வேறு வகையான திரவியாதிகளாயும், பின்னுமந்தப் பொருளினையறியத் தக்க ஐந்து வகைப் பொறிகளுமாகியும், அவைக்குரிய உணர்ச்சியாகியும், ஐவகையாயுள்ள கர்மேந்திரியங்களாகியும், ஐந்துவகையாயுள்ள பிரிதிவியாதி பூதங்களாகியும், மற்றும் பகிர்முகமாகியும், அந்தர் முகமாகியும், சேண்மை அண்மையுமாகியும், அழிதலும் தோன்றலுமாகியும், அந்தகாரமாயும் பிரகாசமாயும், நல்லன தீயனவுமாகியும், இன்றும், நாளையும் எப்போதுமாகியும், ஏகவத்துவாய் பலவாகவும், எல்லாமாகியும், அனைத்து மல்லனவாகியுள்ள தம்மை ஞானவான்களாயுள்ளார் அறிவரே யன்றி வினையோர் தெரிவதற்கு சுலப சாத்திய மாகாதென்றபடி. இவ்வண்ட பகிரண்டமாதிகளான எல்லாமும் அடங்குவதற்கு அருகமாயுள்ள சுத்தபரிபூரணமாயும் நிரதிசயானந்தமானதுமான பராபரமே!

குறிப்புரை :—நாமரூபப் பிரபஞ்சாதி சர்வமுமா யல்லாதாகியுமான உம்மைத் தமது திருவருள் வாய்க்கப்பெற்ற பேரறிஞர்களான மகத்துக்களாலே அறியத்தக்கனவே யன்றி யேனையரால் ஆகாதென்றது புலனாயிற்றென்க.

தெருள்=ஞானம். மருள்=அஞ்ஞானம். சிவசித்து=சிவஞானம். விசித்திரம்=விநோதம்.

இப்பாசுரமானது, சுத்தாத்துவித நிலையினை நன்கு விகசிதமாகுமாறு வெளிமுகமாய்த் தெளிவுற வோதியருளின ரென்க. (2)

௩. மாறுபடு தர்க்கந் தொடுக்கவறி வார்சாண்
வயிற்றின் பொருட்டாக
மண்டலமும் விண்டலமு மொன்றாகி மனதுழல
மாலாகி நிற்கவறிவார்
வேறுபடு வேடங்கள் கொள்ளவறி வாரொன்றை
மெணமெனென் றகம்வேறதாம்
வித்தையறி வாரெமைப் போலவே சந்தைபோன
மெய்ந்நூல் விரிக்கவறிவார்

சீறுபுலி போற்சீறி மூச்சைப் பிடித்துவிழி
செக்கச் சிவக்கவறிவார்
திரமென்று தந்தம் மதத்தையே தாமதச்
செய்கைகொடு மூளறவறிவார்
ஆறுசம யங்கடொறும் வேறுவே ருகிவிளை
யாடுமுனை யாவரறிவார்
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே.

பொழிப்புரை :—(தெய்வ நிச்சயமாக) மாறுபாடாயுள்ள தார்க்கிக விவகார வாதங்களைச் சிலர் தொடர்பாய்ப்பேச வறிவர்கள்; சாணளவான உதர போஷணார்த்தமாக மண்ணுலகமும் தேவலோகமும் ஒன்றுமாறு மனமானது பேராசைகொண்டு சுற்றிச் சுற்றித் திரிந்துழல்வர்கள்; இன்னும், பலவாறான வேடதாரிகளாகவும் திரிந்துழலுவர்; ஏதோ மந்திரஜபம் செய்பவர் போன்று மிணமிணவென்றும், மனம் வேறுபாடடையும் படியான போலிவித்தைகள் காட்டுவர். மற்றும் என்னைப்போன்று உண்மைச் சாத்திரங்களிற் சிலவற்றை ஓசையுறப் பேசி சந்தைக் கூட்டம்போடவறிவர்; இன்னும் இராஜயோகிகள் போன்றே பிராணவாயுவினைத் தம்பித்து இரேசக பூரக முறையாக நேத்திரங்களைச் சிவக்கச் செய்தலுமறிவர்; மேலும், தந்தன் மதக் கோட்பாடுகளைத் திறம்பட வாய்கொண்டு வீசிப்பேசி மந்தமதியினுளுளாறு நிற்கவுமறிவர்; ஆகவே, அறுவகைத்தான அகச் சமயங்களினும் பல வேறுவகைத் திருவிளையாடல்கள் புரியானின்ற உம்மை யாவரோ அறியவல்லார்! அண்டபுவன சராசரங்களனைத்தையும் தனக்குள்ளடக்கஞ் செய்துள்ள சுத்த பரிபூரணானந்த பரமே!

குறிப்புரை :—யதார்த்தத்திற்கு நேர்மாறாகத் தர்க்கிக்கவும், வயிறு வளர்ப்பு நிமித்தம் பேராசையால் விண்ணகமும் மண்ணகமும் ஒன்றுபட மனங்கிடந்தலையவும், பலபோலிவேடம் பூண்டு புலம்பவும், பொய்யாக ஜெபத்தியானி போன்று மிண மிணத்தலும், சாத்திரவாதிபோல எவையும் வெட்டிப் பேசவும், சிவயோகி போன்று பிராணவாயுவைத் தம்பித்து கண் சிவக்கக்காட்டியும், தந்தன் மதத்தையே நிச்சய மூள்ளதாகப் பேசவும், மற்றுமுள்ள வீணான விதண்டாவாதங்களைப் பேசவும் வல்ல இத்தகைய பொய்த் தொழிலாளரோ ஷண்மத சம்மத தெய்வமாய தம்மை அறிய வல்லவர்! அறியாரென்றபடி யாயிற்று. தம்பித்த பிராணவாயுவை வெளிவிடும்போது சப்தித்தலையே "சீறு புலிபோற் சீறி" யென்றார். பிராணவாயு மூலக்கனலொடு கலந்து மேலே நிலம் நோக்கித் தாக்கலால் விழி சிவத்தலை "செக்கச்சிவந்த விழி" யென்றார்.

அறுசமயங்களாவன :—(அகச்சமயங்கள்) வைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம் ஆக 6. (3)

ச. காயிலை யுதிர்ந்தகனி சருகுபுனன் மண்டிய
கடும்பசி தனக்கடைத்துங்
கார்வரையின் முழையிற் கருங்கல்போ லசையாது
கண்மூடி நெடிதிருந்துந்
தீயினிடை வைகியுந் தோயமதின் மூழ்கியுந்
தேகங்க ளென்பெலும்பாய்த்
தெரியநின் றுஞ்சென்னி மயிர்கள்கூ டாக்குருவி
தெற்றவெயி லூடிருந்தும்
வாயுவை யடக்கியு மனதினை யடக்கியு
மௌனத்தி லேயிருந்து
மதிமண் டலத்திலே கனல்செல்ல வமுதுண்டு
வனமூ டிருந்துமறிஞர்
ஆயுமறை முடிவான வருணாடி ஞரடிமை
யகிலத்தை நாடன்முறையோ
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே.

பொழிப்புரை :—(கானகத்தே) சிந்திக்கிடப்பதான காய்கனிகளென்ன, இலை, சருகு என்ன, குளிர் மதுர நீரென்ன (இவைகளனைத்தையும்) வன்பசி வந்தடுத்தபோது சிறுதருந்தியும், மற்றும் கரிய பர்வத குகைக்குள்ளே கருஞ்சிலை யொத்தசைவின்றி யிருந்து நீண்ட காலங்களாக மூடிய கண்களோடு தவங்கிடந்தும், பஞ்சாக்நி யூடேயிருந்தும், திவ்ய தீர்த்தாடனம் பண்ணியும், மாம்சம்வற்றி என்பெலாம் புலனாகத் தவமிழைத்தும், (மற்றும்) அவர்கள் தலைமயிரைக் குருவிகள் கூடாகக் கட்டிக்குடியிருந்தும், இன்னும் கடு வெயிலிலிருந்து பிராணவாயுவைப் புறஞ் செலாதடக்கியும், அதன்வழியால் மனத்தினை நிறுத்தியும், மோன முத்திரை கொண்டிருந்தும், சந்திர மண்டலத்தின்கண் கனல்வாயு சென்றுதாக்க, மதியமிர்தம் ஊற்றெண சுரந்திழிய வதையுண்டு வனத்திடை வதிந்து அவசமுற்ற மெய்ஞ் ஞானியர்கள் ஆய்ந்துணர்ந்த வேத முடிவான பொருளினை நன்குறமகிழ்ந்து நாடிநல முற்றனர் கள் அடிமையேன் இவ்வுலக வாழ்வில் கிடந்தலைத்தல் தர்மமோ ! அண்ட பகிரண்டங்கள் அடங்கலும் ஒடுங்கிடும் பரிபூரண ஆனந்தமாய பரமே !

குறிப்புரை :—" மெய்யன்பராய் மாதவத்தோர் பலர் வனத்திடை கிடந்தும், மலை குகையிருந்தும் வன்பசி தணிப்பான் கந்தமூல பலாதிகளை யருந்தியும் புண்ய நதிபடிந்தும், அன்றிப் பஞ்சவனலூடிருந்து அருந்தவமிழைத்

தும், வருந்தியுடல் வாடியும், வாயுவையடக்கியும், மாமௌனமாயிருந்தும், மதிமண்டலச் செழுந்தேன் மடைதிறந்துண்டும், சதுர்வேத பொருளாதி யருளே யெனக்கருதியுனை நாடிஞாடியனேன் அகிலத்திருத்த லழகோ" வென்று கூறினர் போலும்.

பஞ்சாக்கி=நாற்புறமும் தீவளர்த்து நடுவிருந்து மேல் வெயில்பட ஐந்தக்கி யாயிற்று.

தாபத்திரங்களாவன:—தான், இதர ஆன்மாக்கள், தெய்வம் என்னும் இம் மூவகையினு மேற்படத்தக்க துன்பங்களென்க.

'மதி மண்டலத்திலே கனல் செல்ல வமுதுண்டு'—என்பது, பிராண வாயுவை மூலக்கனல் வழி சார்ந்து கும்பித்தெழுப்பி கண்டதாரை வழி செலுத்தி சுழிமுனைக்கப்பால் உள்ள சந்திரமண்டலத்தில் தாக்க, அதினின்றும் அமுதவெள்ளம் பெருகிவழிய, அஃதுண்பார்க்குச் சாதல், பிறத்தல், நரை திரையாதல் ஆகிய இவை சிறிதும் உண்டாகா வென்பது நூற்றுணிபு. (4)

ரு. சுத்தமு மசுத்தமுந் துக்கசுக பேதமுந்
தொந்தமுட னிர்த்தொந்தமும்
தூலமொடு சூக்ஷமமு மாசையு நிராசையுஞ்
சொல்லுமொரு சொல்லின்முடிவும்
பெத்தமொடு முத்தியும் பாவமோ டபாவமும்
பேதமோ டபேதநிலையும்
பெருமையொடு சிறுமையு மருமையுட னெளிமையும்
பெண்ணினுட னாணுமற்று
நித்தமு மநித்தமு மஞ்சன நிரஞ்சனமு
நிஷ்களமு நிகழ்சகளமு
நீதியு மநீதியு மாதியொ டநாதியும்
நிர்விஷய விஷயவடிவு
மத்தனையு நீயலதெ ளத்தனையு மில்லையெனின்
யாங்களுனை யன்றியுண்டோ
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே.

பொழிப்புரை:—சுசியுடைமையும் அஃதில்லாமையும், இன்பதுன்ப வேற்றுமைகளும், தொடர்பும் அஃதில்லாமையும், சிறிது பெரிதுகளும், பாசமும் அஃதில்லாமையும், ஓர் வார்த்தையும் அவ்வார்த்தையின் தீர்மான மும், இலயமுத்திகளும், பாவஞுதீதங்களும், வேறுபாடும் அஃதில்லாமையும், மதிப்பொடு அவமதிப்பும், அரியனவும் எளியனவும், பெண்டன்மை ஆண்

டன்மைகளும், இன்னும் நித்திய அநித்தியத்துவங்களும், தெரிவனவும் அஃதில்லாமையும், ரூபா ரூபங்களும், நியாயா நியாயங்களும், மூலமொடு நிர்மூலமும், விஷயாவிஷயங்களும், மற்றுமுள்ள வனைத்தும் தாமன்றி எள்ளத்தனையு மில்லையாதலால் யாங்கள் தம்மையன்றி வேறுவதில்லையே! அண்டத்து அகமும் புறமும் நிறைந்தருளும் நித்யானந்த பரம்பொருளே!

குறிப்புரை :—"உலக நிலை முழுதாகி ஆங்காங்குள்ள வுயிராகி யுயிர்க்குயிரா மொளிதானாகி" என்றும்,

'ஒன்று யுலகனைத்து மானுரென் றப்பமுனி
பொன்று மொழியாற் புகன்றிருக்க'—என்றும்,

'ஓசை யொலியெலா மானாய் நீயே யுலகுக்
கொருவனாய் நின்றாய் நீயே'—என்றும்,

எல்லாஞ் சிவமெனு நான்மறை யாகம மெக்கலையு
மெல்லாஞ் சிவமென் றெழிற்குரு வாய்வந் தெடுத்திசைத்து
மெல்லாஞ் சிவமென வெவ்வெவர் கோட்கு மிசைந்திருந்து
மெல்லாஞ் சிவமென் றுணரகில்லேன் கச்சியேகம்பனே.

என்றிவ்வாறாகப் பல மெய்யன்பருங் கூறிய உண்மை நெறியை நமது ஆசிரியரும் அநுவதித்தமை நன்கு புலனாயது. (5)

சீ. காராரு மாணவக் காட்டைக் களைந்தறக்
கண்டகங் காரமென்னுங்
கல்லைப் பிளந்து நெஞ் சகமான பூமிவெளி
காணத் திருத்திமேன்மேற்
பாராதி யறியாத மோனமாம் வித்தைப்
பதித்தன்பு நீராகவே
பாய்ச்சியது பயிராகு மட்டுமா மாயைவன்
பறவையணு காதவண்ணம்
நேராக நின்றுவிளை போகம் புசித்துய்ந்த
நின்னன்பர் கூட்டமெய்த
நினைவின் படிக்குநீ முன்னின்று காப்பதே
நின்னருட் பாரமென்றும்
ஆராரு மறியாத சூதான வெளியில்வெளி
யாகின்ற துரியமயமே
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே.

பொழிப்புரை :—"காரிருண் மயமாகிய கொர்விதக் காட்டினை அடி யொடும் பறித்தெறிந்து தரைமட்டங்கண்டு, நான் என்கிற அகங்கார முடிப் பென்னுங் கடின கல்லினை உடைத்தெறிந்து, மனமாகிய பூமி வெளிப்படப் பக்குவப்படுத்தி, அன்றியும், ஆன்மாக்களார் அறிய வொண்ணாத மௌன முத்திரையாம் விரைமுதலை யூன்றி, அன்புரிமை யென்கிற தண்ணீரைத் தேக்கி, அவ்விரை முதல் தளிர்த்து ஓங்கும் வரையும், மகா மாயையாம் கொடிய பக்ஷி வந்து பக்ஷியாதபடி தன்னாலானமட்டு முயற்சித்து நலம் பெறக் காவல் புரிந்தும், மேலே ஏற்பட்ட பலனாகிற சிவானுபவம் கைவரப் பெற்ற தமது உண்மை யடியவர்களை யானடைய வேண்டும்" என்று கொண் டுள்ள என்னுடைய அந்தரங்க அபிப்பிராயத்தை யறிந்ததாம் நேரேயுணர்ந்து காத்தருள்வது நின்பாரமாகும். முப்பத்தாறு ஆன்ம தத்துவாதிகளாலும் அறிதற் கியலாது மிக மறைந்துள்ளதான துரிய வெளியாம் ஸ்தானத்தின் கண் இலங்கும் சிவசக்தி சொருபமே! அண்டங்களின் அகம்புற மென்னும் எங்கும் தன்னுள்ளதாகச் செய்து பரிபூரணமா யுள்ளதும், ஞானானந்த மய மாயு முள்ள பரவஸ்துவே!

குறிப்புரை :—நானாவகையான மரஞ்செடி கொடிவகைகள் அடர்ந்து சூரிய ரஸ்மியே சென்றடையாது இருண்ட காட்டினைப் போலவே மன மாகிய பூமியின்மீது விர்த்தியாயுள்ள ஆணவாதி அகங்கார மமகாரங்களும் காம, குரோத, லோப, மோக, மத, மாச்சரிய, கோபம், பயம் முதலா யுள்ள சகல விருக்ஷ செடிகொடிகளை வேரொடு பிடுங்கி யெறிந்த பின்னர் மனமாகிய பூமி சுத்தமாய்த் துலங்கி விளங்கும். இங்ஙனம் பரிசுத்தப் படுத்தியுள்ள பூமியா மனத்தகத்தே மௌன விதையூன்றி அன்பு நீர் பாய்ச்சி சிவாநுபூதியாம் பயிர்வளர்த்து சிவபோகம் புசிக்கும் அன்பர் கூட்டத்தை யடையுங்காறும் மாயா பக்ஷிகள் வந்து இடையூறுசெய்யாதபடிக் காத்தருள வேண்டும் என்பது ஆசிரியர் கூறிய இப்பாவின் கருத்தெனப் புலனாகியது.

ஆணவ வழக்கு.

ஒருமல வழக்கு மிருவினைத் தொடரு
மும்மலச் செருக்கு நால்வித வாக்கு
மைவகைப் புலனு மறுவகைக் குற்றமு
மற்றுலன்றி யறி வாகாயே—என்றும்,

"மாயையே யுடலமாகும் யாவையு மாயை யாமே"—என்றும்,

ஆகையா லிந்தமாயை யறிவினை முழுது மூடித்
தேகமே யான்மா வென்றுஞ் சேயிழை மடவார்தங்கள்
போகமே மோக்ஷமென்றும் புத்தியைத் திரிபுபண்ணுஞ்
சோகம் பாவனையாலித்தைத் தொலைப்பர்கள் சீவன்முத்தர்.

என்னுந் திருவாக்காலும் மாயை யுண்டென்றறிந்து அறிவினை மறையா திருக்குமாறு ஆசிரியர் வேண்டலாயினர் என்க.

எவ்வாறெனில், சான்றாக மணிவாசகரும் :—

"மாயப் பிறப்பறுத் தாண்டானென் வல்வினையின்
வாயிற் பொடியட்டிப் பூவல்லி கொய்யாமோ"—என்றும்,

"ஆணவத்திலே கிடந்த வாருயிர்க்குக் காயமெனுங்
கோணைவிளக்களித்த கோமானே—யாணவமு
மாக்கையும்வந் தென்னைநித மல்லற் படுத்தாமற்
சாக்கிரா தீதத்தைத் தா"—என்றார் பிறரும். (6)

எ. வானாதி பூதமா யகிலாண்ட கோடியாய்
மலையாகி வளைகடலுமாய்
மதியாகி யிரவியாய் மற்றுளவெ லாமாகி
வான்கருணை வெள்ளமாகி
நானாகி நின்றவனு நீயாகி நின்றிடவு
நானென்ப தற்றிடாதே
நானா னெனக்குளறி நானா விகாரியாய்
நானறிந் தறியாமையாய்ப்
போனா லதிட்டவலி வெல்லவெளி தோபகற்
பொழுதுபுகு முன்கண்மூடிப்
பொய்த்துயில்கொள் வான்றனை யெழுப்பவச மோவினிப்
போதிப்ப தெந்தநெறியை
ஆனாலு மென்கொடுமை யனியாய மனியாய
மார்பா லெடுத்துமொழிவேன்
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே.

பொழிப்புரை :—ஆகாய முதலாயுள்ள சகல பூதங்களும், மற்றெல்லா அகிலாண்ட கோடிகளு மாகியும், இன்னும் பலபர்வதங்களாகியும், பூமியைச் சூழ்ந்துள்ளதான சமுத்திரங்களு மாகியும், மற்றும் சந்திர சூரியர்களு மாகியும், இன்று முள்ள யெவையுமாகியும், மேலான காருண்ய பிரவாக மாகியும், யானுயிருந்ததுவும், நீயாக நிலைத்ததுவும், நான் என்கின்ற ஆணவம் நீங்கப் பெறாமலே எவற்றினிலும் நான் நான் என்று முனைத்தெழுந்து பல வாறான விகாராதி தோற்றமாகியும், அதனை யானறிந்திருந்தும், சந்தர்ப் பத்தில் மறந்தொழிந்தவனாகியும், மனஞ் செல்லுழி சென்று விட்டால் அஃது அதிர்ஷ்ட வலிமையாய் முடியும்; ஆதலால் அதனை ஜெயங்கொள்

ளுதலும் சுலப சாத்தியமோ! பட்டப்பகற் போதிலே கண்மூடிக்கொண்டு போலி யுறக்கங்கொள்ளும் அவனை எழுமாறு செய்தலு மியலுமோ! ஆகவே, இனி உபதேசிப்ப தெந்நெறியினை, ஆனபோதிலும் அது எனது கொடுமையும் செய்தீவினையுமாகும்; எடுத்துக் கூறப்புகின் அநியாயமே யாகும்! ஆதலால் யாரிடம் புகல்வது! அண்டத்து அகம்புற மென்னும் இரண்டிடத்தும் முற்றும் வியாபகமாய் நிறையப் பெற்ற ஆனந்தானுபவ பரவஸ்துவே!

குறிப்புரை:—பஞ்சபூத பௌதிகாதிகளாய், மற்றும் ஒப்பற்ற காருணியாகாரமாய் வந்து தோன்றிய காலத்தும், ஆணவ வசப்பட்ட யான் துரிய வெளியூடுலாவும் நின்பரவொளியைப் பார்த்தறிவானந்தமுறும் நீயாதல் வேண்டினனாயினும் நான் எனும் அகங்காரக் கிரந்தி அற்றபாடில்லை; அங்ஙனமாக நான் நான் யென்று மடமையால் பலவாறான விகாரியாய் விட்டனன். அவ்வாணவத்தை வெல்லவும் வலிமையில்லை! இந்த நிலையைக் குறித்து யான் என் செய்வது! யார்பார் கூறுவது! கூறினும் பயனென்? என்று தன்னை நொந்திரங்கும் பான்மையாயிற் றென்க.

வழிதெரிந்தும் சாதனைக்காற்றாது வீணில் அலக்கழிவான் கருதி தனக்குத்தானே ஆற்றாமைக் கிரங்குவான் கூறியது பாசுரக்கருத்தாயின. இக்கருத்தினை வைத்தே "பொய்த்துயில் கொள்வானை யெழுப்பல் வசமோ" யென்றார் போலும்.

ஆகாயந் தனைத்தேடி யவனிதொறு மலைவோருக்
காகாய நீயென்று லலைவொழிய மாட்டுவரோ
மாகாய மாட்டுதற்கு மதிதேடு மனிதர்க்கு
மாகாயத் துள்ளுறையு மதியெனினு மயங்குவரே.

என்றார் பிறரும். ஆணவாதி யொழிபு, மனோ நாசமுறச் சித்தியாகும் என்பது நூலே. மனோநாசம்=யோகச்சித்தியுற வரும். (7)

அ. பொய்யினேன் புலையினேன் கொலையினே னின்னருள்
புலப்பட வறிந்துநிலையாப்
புன்மையேன் கல்லாத தன்மையே னன்மைபோற்
பொருளலாப் பொருளைநாடும்
வெய்யனேன் வெகுளியேன் வெறியனேன் சிறியனேன்
வினையினே னென்றென்னைநீ
விட்டுவிட நினைவையேற் றட்டழிவ தல்லாது
வேறுகதி யேதுபுகலாய்
தூய்யனே மெய்யனே யுயிரினுக் குயிரான
துணைவனே யிணையொன்றிலாத்

துரியனே துரியமுங் காணு வதீதனே
 சுருதிமுடி மீதிருந்த
ஐயனே யப்பனே யெனுமறிஞ ரறிவைவிட்
 டகலாத கருணைவடிவே
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
 யானந்த மானபரமே.

பொழிப்புரை :—பொய்மையாளனு முள்ளவன், புலைத்தன்மையாளன், (அன்றிக்) கொலைபயில் குணத்தன், கருணையால் நினது திருவருள் தோன்ற வலைதறிந்தும் அந்நெறி பற்றாதிழிந்தவன், மற்றும் கல்வியறிவில்லாதவன், மெய்ப் பொருளல்லாத ஏனைய பொருளை விரும்பும் கொடியவன், கோபமே குடிகொண்டவன், அஞ்ஞான பித்தனேன், எவர்க்கும் தாழ்மையேன், தீவினையாளன் என்பதாக நீ கைவிட நினைத்தாயானால், யான் தட்டுக் கெட்டழிவதல்லால் வேறே உற்றதுணை யொருவருண்டோ? சொல்வாய்; மகாப் பரிசுத்தனே! சத்திய குணத்தனே! என்னுயிர்க்கினிய வருந் துணையே! ஒப்புவமை யொரு சிறிது மில்லாத துரிய நிலைகொண்டவா! துரியமு மறியப்படாத எட்டாப் பொருளே! வேத முடிவில் விளங்கும் விழுப் பொருளே! பரமபிதாவே! என்று கொண்டாடும் மெய்யறிவாளர் தம் மெய்ப் போத மகலாத கருணை சொரூபா! அண்டத்தின் அகம் புறமும் வியாபித்துள்ள ஆனந்த பரதெய்வமே!

குறிப்புரை :—மெய்யன்பரது உடல் பொருளாவி யென்னும் மூன்றையுந் தந்தருளப் பெற்று பிறகு தனது அழியாத உடலுயிராதியன தந்தருளும் இயற்கைக் கருணையை மானதால் "உயிரினுக்குயிரான துணைவனே" என்றார் போலும்.

சுருதிமுடி மீதிருந்த ஐயனே யென்றார் ஆசிரியர் :—சான்றாக,

"முன்னை நான்மறை முடிவினில் வீற்றிருப்பவனை
 யன்னை யத்தனுயுல கெலாமமர்ந் திடுபவனை
 யென்னை யாளுடை யிறைவனை யிருண் மலங்கழியப்
 பொன்னினம்பலத் தாடிய புனிதனைத் தொழுவாம்"

என்றார் பிறரும். (8)

கூ. எத்தனை விதங்கடான் கற்கினுங் கேட்கினுமென்
 னிதயமு மொடுங்கவில்லை
யானெனு மகந்தைதா னெள்ளளவு மாறவிலை
 யாதினும் மபிமானமென்

சித்தமிசை குடிகொண்ட தீகையோ டிரக்கமென்
　　சென்மத்து நானறிகிலேன்
சீலமொடு தவவிரத மொருகனவி லாயினுந்
　　தெரிசனஞ் செய்துமறியேன்
பொய்த்தமொழி யல்லான் மருந்துக்கு மெய்ம்மொழி
　　புகன்றிடேன் பிறர்கேட்கவே
போதிப்ப தல்லாது சும்மா விருந்தருள்
　　பொருந்திடாப் பேதைநானே
அத்தனை குணக்கேடர் கண்டதாக் கேட்டதா
　　வவனிமிசை யுண்டோசொலாய்
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
　　யானந்த மானபரமே.

பொழிப்புரை:—(யான்) எத்தனை முறையாகக் கற்றாலும் அன்றிப்பிற பால் பாடங் கேட்கினும் அவைகளாலே சற்றேனும் எனது மனமானது சலனமுறாது ஒடுங்கிவருகிற நிலைமையைக் காணேம்; மனத்தின் விசேஷ தான் இப்படியாயிற்றே, அகங்காரக் கிரந்தியோ வென்றால், அது மெத், கடினமா யிருக்கிறது, எள்ளத்தனைகூட அடக்க வொடுக்கத்தைப் பெற், தாகத் தெரியவில்லை; இவை இப்படியாக, அபிமான மென்கிற விசுவாசமே இன்னதைத்தான் விசுவாசிக்கிற தென்கிற முறையே யில்லாமல் கண் முன் பட்ட அனைத்தினும் போய் புலிபோல் பாய்ந்து வருதலான சுபாவமே கொண்டு என் சித்தத்தை தனக்கு இடமாகக் கொண்டு விட்டது. இது நிற்க; ஈதல், உயிர்கட் கிரங்குதலான நன்மையோ, சொல்லவே வேண் டாம்! சென்ம மெடுத்த இதுகாறும் அப்படி எதுவும் நடந்ததாக எனக்கு ஞாபகமேயில்லை. இனி எப்படியோ! இதுவும் நிற்க; சுசிரமென்ன தவவிரதங்களென்ன இவைகளில் ஏதேனு மொன்று கூட நனவிலன்றிக் கனவிலும் அவ்வாறுள்ள ஓர் உத்தம காரியத்தைச் செய்ததாகத் தெரிந்தே னில்லை; தவிர, பொய்வார்த்தை யென்றால் வாய் மணக்கப் பேசுதலே யன்றி மருந்துக்காவது ஓர் உண்மை மொழி சொல்லினேனில்லை; மற்றும் யாரேனும் கேட்பாருண்டானால் நன்றாய்ப் போதனை செய்வேனே தவிர, நமக்கும் அப்போதனை முறைக்கும் வெகுதூரமாகும்; ஆகவே, இவ்வாறான குணாதிசயமுள்ளவனான யான் வீண் காலங்கழித்து திருவருளுக்கு அருக னாகாத பெரும் பேதையனாயினேன். இவ்வளவு சீர்கேடனாயுள்ள வொருவன் இவ்வுலகத்திலே யாரேனும் கண்டதாகவாவது அல்லது கேழ்விப்பட்டதாக வாவ துண்டானால் சொல்ல வேண்டும்; அண்டத்தின் அகம்புறம் எல்லாம் அடங்குமாறதாக ஓர் பரிபூரணம்சமாயுள்ள ஆனந்த பரம்பொருளே!

குறிப்புரை :—இதனால், மனமாதி அந்தக்கரணங்கள் சர்வசாதாரணமாக அடங்கப் பெறுதல் அசாத்திய மென்றும், அப்படி அடங்க வேண்டுமாயில் ஐம்பொறி யடக்கம் முதற்கண் யேற்பட்டால் அதன்வழியாக அகக் கரணாதிகள் தானே ஓய்ந்துபோம் என்றும், பொறியடக்க முறல் எதனால் முடியுமாறதா மெனில் நிராசை யுறுவதே அவசியமென்றும், அந்த ஆசை யறுதலும் சாது சங்கப்பழக்கமும் இடையறா விசாரணையினாலுமே ஏற்பட வேண்டு மெனவும் பெற்றாம். (9)

ம. எக்கால முந்தனக் கென்னவொரு செயலிலா
வேழைநீ யென்றிருந் திட்
டெனதாவி யுடல்பொருளை மௌனியாய் வந்துகை
யேற்றுநம தென்றவன்றே
பொய்க்கால தேசமும் பொய்ப்பொருளில் வாஞ்சையும்
பொய்யுடலை மெய்யென்னலும்
பொய்யுறவு பற்றலும் பொய்யாகு நானென்னல்
பொய்யினும் பொய்யாகையான்
மைக்கா விருட்டனைய விருளில்லை யிருவினைகள்
வந்தேற வழியுமில்லை
மனமில்லை யம்மனத் தினமில்லை வேறுமொரு
வரவில்லை போக்குமில்லை
அக்கால மிக்கால மென்பதிலை யெல்லா
மதீதமய மானதன்றோ
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே.

பொழிப்புரை :—மகா மௌனகுருவாய்த் தோன்றி "நீ எந்தக் காலத்தும் சுதந்தரயீனனாய ஓர் சாதாரண அறிவிலான்" என்றெனக்கே உபதேசஞ்செய்து வீற்றிருந்தருளி எனது உடல் பொருள் ஆவியென்னு மூன்றையுந் தத்தம் பெற்றுக்கொண்டு இவை நம்முடையது என தேவரீர் கிருபை கூர்ந்தருளிய அஞ்ஞான்றே, கேவல மித்தையாகிய காலதேசாதிகளும், அநித்தியாதி பதார்த்தங்களில் மிக்க பற்றுதலும், மற்றும் அழிவுறும் ஆக்கையில் நம்பிக்கையும், போலியுற்றாரை மெய்யுறவா ரென்றுணர்ந்து அளவளாவலும், எல்லாம் முழுப் பொய்யாகவே ஏற்பட்டுப்போம் ; அன்றி நானென்பதுவோ பெரும் பொய்யாகையினாலே மாரிகாலத்து இருளொப்ப அஞ்ஞானமாம் பேரிருளில்லையாகும் ; அன்றியும், நல்வினை, தீவினைகள் வந்து என்னைத் தொடரவும் நியாயமில்லையாம். மற்றும், மனமு மில்லை யாயிற்று, அன்றி அம்மனவின மென்பது மில்லாமற் போய்விட்டது ; வேறே

யாதாமொரு வரவு செலவுகளு மில்லையாயிற்று, தவிர அந்தக் காலமென்பதும் இந்தக் காலமென்பதுங் கிடையாவாம், சமஸ்தமும் அரூபமாயிற்றன்றோ ? அண்ட பகிரண்ட மடங்கலும் ஒரே பரிபூரண ஆனந்தமாய பராபரமே!

குறிப்புரை :—இறைவன்பால் சற்சீடன் ஞானோபதேசம் பெறுமாறு தனது உடல் பொருளாவிகளைத் தத்தஞ்செய்தலும், அஞ்ஞான்று எம்மான் அன்பொடும் கரதலத்தேந்தி 'அஸ்து' என்றுசி கூறிப் பின்னர் உபதேச முறை யோதியருளும் பான்மையையுமே ஆசிரியர் 'கையேற்' றென்றனர் போலும். சான்றாக மணிவாசகர் :—

இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் றன்மை நினைப்பற நினைந்தேன்
நீயலாற் பிறிதுமற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்து தேய்ந் தொன்றாந்
திருப்பெருந் துறையுறை சிவனே
ஒன்றுநீயல்லை யன்றியொன் றில்லை
யாருன்னை யறிய கிற் பாரே.—என்றார். (10)



## சுகவாரி.

இன்னமுது கனிபாகு கற்கண்டு சீனிதே
னெனருசித் திடவலியவந்
தின்பங் கொடுத்தநினை யென்நேர நின்னன்ப
ரிடைபறா தருகிருடி
யுன்னிய கருத்தவிழ வுரைகுளறி யுடலெங்கு
மோய்ந்தயர்ந் தவசமாகி
யுணர்வரிய பேரின்ப வனுபூதி யுணர்விலே
யுணர்வார்க ளுள்ளபடிகாண்
கன்னிகை யொருத்திசிற் றின்பம்வெம் பென்னினுங்
கைக்கொள்வள் பக்குவத்திற்
கணவனருள் பெறின்முனே சொன்னவா றென்னெ
கருதிநகை யாவளதுபோல் [னக்
சொன்னபடி கேட்குமிப் பேதைக்கு நின்கருணை
தோற்றிற் சுகாரம்பமாம்

சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

பொழிப்புரை :—மிக இனியனவாய தேவாமிர்தத்தை நிகர்த்தும், மூவகைக் கனிகளின் மதுரத்தை யொத்தும், சர்க்கரையின் செம்பாகனை யவும், கற்கண்டென்ன, சீனச்சர்க்கரையென்ன, தேன் என்னு மதுவென்ன ஆகிய இவைகளின் தீஞ்சுவை நிகர்த்தும், உருசிகரமாமாறு தானாகவே எழுந் தருளி வந்து சுகஞ்செய்வித்த தம்மை, நுமதன்பராவார் முப்போதும் நடு நீங்காதுருகிச் சேர்ந்து எண்ணிய நெஞ்சமும் நெகிழ்ந்துருகலால் வார்த்தை கள் தட்டுக்கெட சரீரமெல்லாம் அயர்வுற்றுப் பரவசப்பட்டு அறிதற் கருமை யான பேரின்பானுபவ வுணர்விலே ஆய்ந்தறிந்தனுபவிப்பர்கள்; இது சத்திய நிலைமையாம்; ஓர் கன்னிகைப் பெண்ணாள் தன்னுயகனோ டனுபவிக் கும் ஒற்றுமைச் சுகத்தினை வேம்பொத்ததென்று சொல்லக் கூடியவளா னாலும், தான் பக்குவப்பட்ட அச்சமயத்திலே முற்கூறிய சிறிதான சுகத் தினையே பெரிய சுகமாக நினைத்து உடன்படுவள்; பின்னர் அன்னாள் நாய கனது உரிமைக் கிணங்கி வாழும்போது, நீ கூறிய முறைமை எவ்வாறாயிற் றென்று வினுதல் செய்ய, அம்மொழியினை யெண்ணி புன்னகை புரியா நிற்பள்! அதே போன்று, கூறியவாறு புரியும் அறிவிலியாய எனக்கு தேவரீர் தம் திருவருள் நோக்கிடின், சுகப்ராப்தி யாகுமென்க. பரம சிலத்துவ மகாதேவனே! ஒருதனிச் சுடர்மணியே! பேரின்பக்கடலே!

குறிப்புரை :—உணர்வரிய பேரின்ப வநுபூதியாவது—இறைவன் திருவருள்புரிய, அப்போது உடலெலாமுயிரெலா முள்ளக மெலாந்திதிக்கா னின்ற தோடும் பேரானந்தமும் பிறக்க, அதனாற்றன்னைத் தானறிதலாற்றாத பேருவகை வெள்ளத்தாழ்ந்து பரவசமாய்த் திளைத்தலென்க. அதுவே அறி வானந்த மயமாகும்.

ஈண்டு கணவனருள் பெறுதலாவது :—அன்னான் விருப்புக் கொருப் பட்டு உவகைபூத்து ஒரு தலைக்காமியாய் நிற்றலாம்.

கன்னிகைக்கு இன்பங் கசத்தலும், பூப்புடையாட் கின்பம் பொங்கு தலும் எங்குமியல்பாம். அதுபோலவே, அவனருள் பெருக்கு அருந்துயரும், பெற்றார்க்குக் குன்றாத பேரின்பமுமாகும் என்பர் மேலோர். சான்றாக மணிவாசகரும்—

கூடிக் கூடி யுன்னடியார்
குனிப்பார் சிரிப்பார் களிப்பாரா
வாடி வாடி வழியற்றேன்
வற்றன் மரம்போல் நிற்பேனோ

ஊடி யூடி யுடையாயொடு
கலந்துள் ளுருகிப் பெருகிநெக்
காடி யாடி யானந்த
மதுவே யாக அருள்கலந்தே.—என்பதுணர்க. (1)

உ. அன்பின்வழி யறியாத வென்னைத்தொடர்ந்தென்னை
யறியாத பக்குவத்தே
ஆசைப் பெருக்கைப் பெருக்கிக் கொடுத்துநா
னற்றே னலந்தேனென
என்புலன் மயங்கவே பித்தேற்றி விட்டா
யிரங்கியொரு வழியாயினு
மின்பவெள மாகவந் துள்ளங் களிக்கவே
யெனைநீ கலந்ததுண்டோ
தன்பருவ மலருக்கு மணமுண்டு வண்டுண்டு
தண்முகை தனக்குமுண்டோ
தமியனேற் கிவ்வண்ணந் திருவுள மிரங்காத
தன்மையாற் றனியிருந்து
துன்பமுறி னெங்ஙனே யழியாத நின்னன்பர்
சுகம்வந்து வாய்க்குமுறையாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

பொழிப்புரை :—அன்பு செய்யும் முறைமையே தெரிதலிலா அடியவனைச் சார்ந்து என்னை யான் உணராத அபக்குவ நிலைமையிலே நீ நின்பால் பற்றுதலை விர்த்திசெய்துவிட, அதனால் யான் தீர்ந்துவிட்டேன்! அலமந்தேன்! என்று சொல்லு முறையாக எனது புத்தியானது மயக்கத்திற் சுழலுவண்ணம் அரியவோர் பேராசையைக் கிளப்பிவிட்டனை! இங்ஙனஞ் செய்த நீ ஓர் முறையேனும் என் மீதிரக்கமுற்று பேரின்பப் பிரவாகமாக வந்தருளி என்னிதயம் இனிப்புறுமாறு என்னோடு மிணங்கியதுண்டோ! தனது பக்குவமுற்ற புஷ்பத்திற்கு நறுமணமும் தேனுனும் வண்டுகளு மொய்த்தலு முள்ளதாகும்; ஆனாலும் அப்பரிபக்குவ மணகுஞ்சிகள் குளிர்ந்த அரும்பு பருவத்திலுமுண்டு கொலோ! ஆகவே, அடியேனுக்கு இவ்வாறதாகத் திருவுளம் பற்றாத்தன்மையான் நான் யேகனாயிருந்து வீணே அலக்கழிந்து வாடுவனேல், நின் அடியவர் அநுபூதி செய்யும் அழிவுறாச்சுகமானது எனக்கெவ்வாறு கிடைக்கப்போகிறது! குணங்குறியற்ற மேலாம் பரதெய்வமே! பரம சோதி ஸ்வரூபனே! பேரின்பக்கடலனையாய்!

குறிப்புரை :—அன்பென்பது பலவகையாம் ; இங்கே சொல்ல வேண்டிய அன்பானது, மெய்யன்பர்கள் இறைவன்பாற் செலுத்த வேண்டியதோர் பக்தியோக ஞான மார்க்கங்களுக் கேற்ற வாறுன முத்திமார்க்கப் பாகுபாடானதால் அத்திற வன்பினையே ஈண்டு ஆசிரியர் " அன்பின் வழியறியாத வென்னை " என்று ஓதினர்.

உலகத்திலே மணங்கமழும் நறுமலர்கள் பலவாம்; அவைகளுள் மொட்டுப் பருவங்கழிந்து மலர்ப்பருவ காலத்திலே தான் தேனைப்பருக வண்டுகள் மொய்ப்பது விகசிதம். இதேபோல இங்குயான் பரிபக்குவ முற்றுத் தம்பித்துக்கொண்டு தேடித்திரியும்போது, தாம் சற்று பராமுகமாயொதுங்கி நிற்பது என் அபாக்கியமே யாகும். இம் முறையினையே ஓர் பெரியார் :—

" தனக்கு நிகரிங் கில்லாதுயர்ந்த தம்பமொன்றதே, அதைத்
தாவிப் போக போக நூலின் றரத்தி னின்றதே "—என்றனர்.

இவ்வாறாக, யான் தேவரீரை நெருங்கிவரும்போது, என்பக்குவங் கண்டு பரிதாபங் கொண்டு இணங்கி வந்தருள் புரிந்தாளாயேல் எனக்குச் சுகமென்பதே தெரியாதவனுய்த் தவிக்க வல்லவோ நேர்ந்து விட்டது! என்ற கருத்தோடு தான் பருவகாலத்து புஷ்பத்திற்கு 'மண முண்டு வண்டுண்டு' என்று உவமை கூறி விதந்தோதின ரென்க.

ஈண்டு, இறைவற்கு - வண்டுவமை யாகவும், தம்மைப் பருவ காலத்து புட்பமாகவும் கற்பித்தன ரென்க. (2)

ங. கல்லேனு மையவொரு காலத்தி லுருகுமென்
கன்னெஞ்ச முருகவிலையே
கருணைக் கிணங்காத வன்மையையு நான்முகன்
கற்பிக்க வொருகடவுளோ
வல்லான் வகுத்ததே வாய்க்கா லெனும்பெரு
வழக்குக் கிழுக்குமுண்டோ
வானமாய் நின்றின்ப மழையா யிரங்கியெனை
வாழ்விப்ப துன்பரங்காண்
பொல்லாத சேயெனிற் றாய்தள்ள னீதமோ
புகலிடம் பிறிதுமுண்டோ
பொய்வார்த்தை சொல்லிலோ திருவருட் கயலுமாய்ப்
புன்மையே னுவனந்தோ
சொல்லான் முழக்கிலோ சுகமில்லை மௌனியாய்ச்
சும்மா விருக்கவருளாய்

சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

பொழிப்புரை :—ஐயனே! கல்லா யிருப்பதுவும் ஓர் சந்தர்ப்ப காலம் வர, அப்போது இளகி யுருகுவ துண்டு; எனது கல்லொத்த மனமோ, அவ்வாறான ஓர் சந்தர்ப்பத்தில் கூட இளகினதாகத் தெரியவில்லை; (இந்நெஞ் சழுத்தத்தை யென் சொல்வது!) இத்திட்பமாய நெஞ்சமானது இறைவன் காருணியத்திற்கும் எதிர் நோக்கமில்லாத வலிமையையும் சிருட்டி செய்தற்கு பிரமனும் ஓர் கடவுளா! 'மதிவலான் செய்ததே சட்டம்' என்னும் விவகாரத்திற்குங் குற்ற முண்டோ? (ஆதலால், இனியாவது) தேவரீர் பரவெளித் தோற்றமாகிச் சுகமாரியாய்ப் பெய்து எளியேனை நித்யானந்த வாழ்வில் சேர்ப்பது தம்முடைய கடமையாம்; துர்க்குணப் பிள்ளையானாலும் அதனைப் பெற்ற மாதாவானவள் தள்ளி விடுதலும் ஓர் முறைமையாகுமோ? அங்ஙனம் வெருட்டிவிடின் அப்பாலன் எங்கு சென்றெவரைச் சரணடைவன்? நிற்க; அசத்திய மொழி கூறுவோமாயிடின் தமது திருவருட் பிரசாதத்திற்குப் பாத்தியப்பட சாத்தியப்படாமல் அன்னியனாய் விடுவதோடுங் கீழ்மையாளனாய் விடுவேன்; அந்தோ! வாஜால வார்த்தை பேசுவேனாயின் அதிற் சிறிதும் பயனின்றாம்; ஆகவே இவ்வேழை மதி பேதையேனைச் சுத்தமோன நிலையாளனுக்குவித்துச் சும்மா யிருப்பத் திருவருள் சுரந்தருள்வீர்களாக. குண ரஹித பரதேவதையே! சுவயம் பிரகாசமே! இன்பக்கடலே!

குறிப்புரை :—ஆசிரியர், தன் மனமிளகாமைக்கு மனம் வருந்தி அதனை நெகிழப்பண்ணலும் அவனாலன்றி யாகாதென்றும், இவ்வலிய மனத்தைப் படைத்த பிரமனும் ஓர் கடவுள் தானோவென்று ஐயுற்றும் வியந்தமை நன்கு புலனாகின்றது.

"மெய்யைப் பொய்யென்றான் வெளியை நல்ல வீடென்றான்
சைவத் துறை காழிச் சம்பந்தன்—ஐயமற
நின்போதம் போமிடத்தே நீயே சிவமென்றா
னென்போதத் துள்ளே யிருந்து."

என்ற இவ்வருண்மொழிக் கருத்துணர்ந்தவராய ஆசிரியர், 'மௌனியாய்ச் சும்மா விருக்கவும்' 'வானமாய் நின்றின்ப மழையா யிரங்கியெனை வாழ்விப்ப துன்பரங்காண்' எனவும் வேண்டி அச் சிவபோதத்தினையே யிரந்து நின்றமை இனிது விளங்கலாயிற்று.

இதனால், கடவுள் திருவருளை விரும்புமவர், முதற்கண் தம்மனத்தினை நீராளமாக்கினாலன்றி வியலாதென்பது விகசிதமாயிற்று என்க. (8)

௪. என்பெலா நெக்குடைய ரோமஞ் சிலிர்ப்பவுட
 விளகமன தழலின்மெழுகாய்
இடையரு துருகவரு மழைபோ லிரங்கியே
 யிருவிழிக ணீரிறைப்ப
வன்பினுன் மூர்ச்சித்த வன்பருக் கங்ஙனே
 யமிர்தசஞ் சீவிபோல்வந்
தானந்த மழைபொழிவை யுள்ளன்பி லாதவெனை
 யார்க்காக வடிமைகொண்டாய்
புன்புலான் மயிர்தோ னரம்பென்பு மொய்த்திடு
 புலைக்குடிலி லருவருப்புப்
பொய்யல்ல வேயிதனை மெய்யென்று நம்பியென்
 புந்திசெலு மோபாழிலே
துன்பமா யலையவோ வுலகநடை யையவொரு
 சொப்பனத் தினும்வேண்டிலேன்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
 சோதியே சுகவாரியே.

பொழிப்புரை :—மெய்யன்பாது எலும்புகள் யாவும் இளகி நொருங்கவும், சரீர மயிர்கள் புளகாங்கிதங் கொள்ளவும், சரீரம் உருகவும், நெஞ்சம் அழன் மெழுகொத்து நீராளமாயுருகவும், இரண்டு நேத்திரங்களும் மழை பெய்வதுபோல் தண்ணீரைப் பெருகவிடவும், இவ்வாறுகப் பேரன்பினுலே மூர்ச்சை யடையும் அன்ஞர்க்கு அவ்விடத்திலேயே தேவரீர் தேவாமிர்த சஞ்சீவியைப் போன்று வந்தருளி பரமானந்த மழையினைப் பொழிந்தருளுவாய்; (அது நியாயமே); உள்ளும் புறமும் ஒத்த அன்பிலா பேதையேனை யாரை வேண்டி அடிமையாகக் கொண்டுள்ளாய்? இழிவுள்ள மாம்சம், எலும்பு, தோல், உரோமம், நரம்பு ஆக இக்கேவல வஸ்துக்கள் பொருந்தியதான குடிசையிலே பெரிதும் அருவருப்பே யடைந்துள்ளனன்; இது சற்றும் பொய்மையின்று; என் விவேகமோ, இதனை உண்மையுடலாக் கருதி பாழ்த்தவழி பற்றிச் செலுமோ! ஐயனே! இனி யான் துன்புற்று அலக் கழியவோ! (வேண்டாம்! வேண்டாம்!!) இவ்வுலக வாழ்வைக் கனவினும் விரும்ப மாட்டேன்! குணதீத பரதேவதையே! பரமப் பிரகாசனே! இன்பக்கடலே!

குறிப்புரை :—என்பு=எலும்பு. சஞ்சீவி=உயிர் கொடுக்கு மலை மருந்து. தோல்+நரம்பு, தோனரம்பென வந்தது. குடில்=சிறுவீடு.

சரீராத்யந்தமும் இளகியுருகும் மெய்யன்பர்கட் கருள் சுரந்தருளுதலே விருதமாகக் கொண்ட தேவரீர், அவ்வாறில்லா அன்பிலியை யார்பொருட்டோ அடிமை கொண்டனை ஐயனே! என்றபடியாம்

'நெஞ்சக்கனகல்லு நெகிழ்ந்துருகத்
தஞ்சத் தருள் சண்முகன்'—என்றார் அருணகிரியார்.

(சித்தமொத்துத்துதி, அத்தன் திருவடி) என்றார் மற்றுமோர் பெரியார். (4)

ரு. வெந்நீர் பொறாதெனுடல் காலின்முட் டைக்கவும்
வெடுக்கென் றசைத்தெடுத்தால்
விழியிமைத் தங்ஙனே தண்ணருளை நாடுவேன்
வேறொன்றை யொருவர்கொல்லின்
அந்நேர மையோவென் முகம்வாடி நிற்பதுவும்
ஐயநின் னருளறியுமே
ஆனாலு மெத்தப் பயந்தவ னியானென்னை
யாண்டநீ கைவிடாதே
இந்நேர மென்றிலை யுடற்சுமைய தாகவும்
எடுத்தா லிறக்கவென்றே
யெங்கெங்கு மொருதீர்வை யாயமுண் டாயினும்
இறைஞ்சுசுக ராதியான
தொன்னீர்மை யாளர்க்கு மானிடம் வகுத்தவருள்
துணையென்று நம்புகின்றேன்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

பொழிப்புரை:—எனக்கு வாய்த்த இந்தச்சரீரமானது சுடுவித்த நீர் கொண்டுகழுவப் பொறுப்பதில்லை, அன்றிக் காலிலே ஓர் சமயம் முள்தைத்து விடின், அதனைக்கிளறிப் பிடுங்கும்போது துன்பந் தாங்குறாது அச்சமயமே கண்ணை மூடிக்கொண்டு திருவருளினை நினைவு கொள்வேன்; மற்றும், ஓர் பிராணியை ஒருவன் வதைத்துக் கொல்வனேல் அப்போது எனது முகம் வாடி அந்தோ! சிந்தை கலங்குங் கலக்கத்தை ஐயனே! நின் திருவருளே நன்குணரும்! ஆயினும் யான் மிகவும் அச்சமுள்ளேன்! ஆதல்கொண்டு அடிமையை யாட்கொண்டருளிய தேவரீர் என்னைக் கைவிடேல்! என் காயமானது இந்த நேரந்தான் வியோகமாவதென்பது நிலையன்று. அஃதொருபாலிருக்க, கர்ம சரீரத்தைப் பெற்றால் ஒரு சமயம் அது அழிவதே நிச்சயம் என்கிற ஓர் முடிவு எங்கணும் பெருவழக்காயிருந்து வருகிறது; அன்றி இதற்கோர் ஆதாயமு மிருக்கிறது; அங்ஙன மிருந்த போதிலும் பூர்வீகராய மகா

குணக்குன்களாம் சுகராதியோர்களுக்கு மானிட தேகத்தைக் கொடுத்தருளியது எந்தத் திருவருளோ அந்தத்திருவருளேதான் உற்றதுணையெனக் கொண்டிருக்கின்றேன். பரிசுத்த மானதும் சகுணமானதுமான பரதேவதையே! பரமசோதி சொரூபமே! இன்பமயக்கடலே!

குறிப்புரை :—நூலாசிரியர், தமக்குரிய சரீரமானது வெந்நீர் சுடுகையையே சகிக்கலாற்றுவதில்லை யென்றும், இந்நிலைமையில் தங் காலில் முள் தைத்திடின், அப்போது தாம்படும் மனவேதனையைப்பற்றி அம்மம்ம சொல்லவொண்ணு தென்றனர் ; இதே போன்று பிறஜீவனொன்றை மற்றொருவன் வதைத் துயிர் நீக்குவதைக் கண்டக்கால் அப்போது அந்தோ வென்றலறித் தன்னிதயம் பகீலென்று பதறியும் முகவாட்ட முறுதலையும் யான் கூறவியலாது! இறைவனே யறிவன் என்றுங் கூறினராதலால் ஜீவஹிம்சையை பார்க்கச் சிறிதும் பொறாத காருணிய சீலரென்றும் நன்கு புலனாகின்றது. பிறஜீவ இம்சையைச் சகியார்க்கு கடவுள் இம்சியாது அருளாள்வ ரென்பது மியல்பு ; அதுநோக்கியே சரீரமாகிய சுமையை யெடுத்தவர் ஒரு நேரம் விடுக்கவும் நேரும், அப்படி நேர்ந்துவிடின் செய்வதொன்று மிலையே! விருதா ஜென்மமாய் விடுமே! என்றஞ்சியே பூர்வகாலச் சுகாரதியார்க்குத் திருவருட்டுணை நின்றது போன்று தமக்கு இதுகாறுந் திருவருள் நோக்கமுண்டாகவிலையே யென்ற ஆற்றாமைக் கிரங்கலாயின ரென்பது நன்கு புலனாயது. (5)

சா. பற்றுவன வற்றிடு நிராசையென் றொருபூமி
பற்றிப் பிடிக்குமியோகப்
பாங்கிற் பிராணலய மென்னுமொரு பூமியிவை
பற்றின்மன மறுமென்னவே
கற்றையஞ் சடைமௌனி தானே கனிந்தகனி
கனிவிக்க வந்தகனிபோல்
கண்டதிந் நெறியெனத் திருவுளக் கனிவினொடு
கனிவாய் திறந்துமொன்றைப்
பெற்றவனு மல்லேன் பெறுதவனு மல்லேன்
பெருக்கத் தவித்துளறியே
பெண்ணீர்மை யென்னவிரு கண்ணீ ரிறைத்துநான்
பேய்போ லிருக்கவுலகஞ்
சுற்றிநகை செய்யவே யலையவிட் டாயெனிற்
சொல்லவினி வாயுமுண்டோ
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

பொழிப்புரை :—ஐம்பொறியா னுகரப்படும் விஷயானுபவங்களனைத்தும் ஒழியவேண்டுமேல், அதற்கேதுவாம் ஆசையின்மை யெனப்படும் ஓர் பூமியையும், அங்ஙனங் கட்டுப்பட்டுள்ள மனதை நம் வசப்படுத்துமாறு பிராணவாயுவினைத் தொடர்ந்து பூரித்து அகத்தே நிறுத்தும் யோக தாரணையினாலே வசப்படும் வாயுவை இலயப்படுத்தலாம். ஓர் பூமியாகும், இவ்விரு ஸ்தலத்தையும் கைப்பற்றின் அதன் சார்பாகவே மனோசலனம் அற்றுப்போமென்று கற்றையாயுள்ள அழகுவாய்ந்த சடையினையுடைய மௌனகுரியர் தாமாகவே முற்றிய காயினைக் கனிவிக்குமாறு வந்த ஞானப்பழம் போல் தனக்குற்றவன் போன்று வந்தருளி கண்ணுக்குக் கண்ணாக நேரே கண்டறிந்தது இம் மார்க்கமாகும் எனத் திடம்பெற காருணியமாகக் கனியினையொத்த தமது திருவாய் மலர்ந்தருளியதான ஓர் அரிய உபதேச மொழியைக்கூட உபதேசிக்கப் பெற்றவனுமாயில்லை; அன்றிப் பெறாதவனுமல்லன்; ஆகையினாலே நான் மிகவும் அலமந்துளறிப் பெண்டன்மையைப்போன்று நேத்திரங்க ளிரண்டினும் நீர்வடியப் பேயினை யொத்தே விகாரப்பட்டிருக்கும் தன்மையை யறிந்த இந்தவுலகம் சூழ்ந்து நகைக்குமாறு அலமரும்படிச் செய்தாயானால் எனக்கு இனிக் கூறுமாறுள்ளதோ! பரிசுத்தமான பரதேவதையே! சோதிமயமே! இன்பக்கடலே!

குறிப்புரை :— "தானே கனிந்தகனி, கனிவிக்கவந்த கனிபோல்" இதிலுள்ள மயக்கந் தெளிவுறக் கூறுவாம் :—

ஈண்டு ஆசிரியர்கூற்று, கனியென்பதை வாழைக்கனியாக்கொள்ப; ஓர் வாழைக்காய்த்தாரில் முற்றிய பருவத்திலே காயனைத்தும் ஒருங்குறப் பழாது ஒன்றன்பின் ஒன்றாய்ப் பழுத்து வருதல் இயல்பென்பது விகசிதம்; இவற்றால் ஆசிரியர் எவ்வாறு கற்பனைசெய்துள்ளாரெனின்,

முதன்முதல் பழுத்த ஓர் கனியானது தன்னினமான மற்றைக் காய்களையும் பழுப்பிக்குமாறு வந்து மற்றவைகளைப் பழுக்கச் செய்வதாக வைத்துக்கொண்டு பார்க்கிறபோது முதற்கனி இங்கே அருளிறையாகும். மற்றைய காய்கள் பரிபக்குவம் வாய்ந்த மெய்யன்பர்போலும்; இவ்வித கற்பனையையே நமது தாயுமானார் வைத்துப் பாடியதாகப் பொருள்கோடல் மரபாம். ஆகவே கனிவிக்கவந்தகனி தண்ணருளிறையாகும்; அவரே தன்னினங் காப்பான் வேண்டி மானிடவுருத்தாங்கி வந்தருளின ரென்றனர்.

இதனால், மனோநாசத்திற்கு ஆசையறுதலும், பிராணவாயுவினைக் கும்பித்தலும் அவசியமென்பது தோன்ற நின்றது.

ஓசைபரிச முருவஞ்சுவை மண மோரைந்தையும்
வீசியகமுகமாகி வெறுப்பு விருப்பு மற்று
மாசறு திங்களைப் போன்று சதானந்த வாழ்வையுன்னி
யேசறு முத்தியிலென்றிருப்பேன் கச்சியேகம்பனே. (6)

எ. அரும்பொனே மணியேயெ னன்பேயெ னன்பான
வறிவேயெ னறிவிலூறு
மானந்த வெள்ளமே யென்றென்று பாடினே
னாடினே னாடிநாடி
விரும்பியே கூவினே னுலறினே னலறினேன்
மெய்சிலிர்த் திருகைகூப்பி
விண்மாரி யெனவெனிரு கண்மாரி பெய்யவே
வேசற் றயர்ந்தேனியான்
இரும்புநேர் நெஞ்சகக் கள்வனு னுனுமுனை
யிடைவிட்டு நின்றதுண்டோ
என்றுநீ யன்றுநா னுன்னடிமை யல்லவோ
யாதேனு மறியாவெறுந்
துரும்பனே னென்னினுங் கைவிடுத னீதியோ
தொண்டரொடு கூட்டுகண்டாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

பொழிப்புரை :— அருமைவாய்ந்த சுவர்ணமே ! நவரத்னமே ! அன்றி யென்னன்பு ரூபமே ! எனது ஆசைக்கண் தோன்றியதான பேரறிவே ! அவ்வறிவிலே ஊற்றெழும் ஆனந்தமய பிரவாகமே ! என்று எப்போதும் பலவகையாய்த் தோத்தரித்தேன் ; அன்றி ஆனந்தங் கொண்டாடினேன் ; மற்றும் பலகாலும் நின்னைத் தேடித்தேடி ஆசையோடும் ஓலமிட்டழைத் தனன் ; இவ்வாறெல்லாம் செய்தும் வாராமைகண்டு ஆற்றாமைகொண்டு வருந்தினேன் ; உடலுகை மனங்கசிந்து அழுதலுஞ் செய்தேன் . சரீரம் புளகாங்கிதங் கொண்டு இருகரமும் சிரமேற்கூப்பி ஆகாய மேக மழையாக இருவிழி நீரையும் பெருக்கிப் பின்னர் என்மனம் வருந்தி வாடலானேன் ; கேவலம் இரும்பிற்கு ஒத்த காடின்ய மனத்தையுடைய கள்ளமனமுடையே னாயினும் தேவரீரை நினையாதொருபோது மிருந்தறியேனே ! அன்றியும் தாம் எப்போதுள்ளீரோ அப்போதிருந்தே அடிமையும் இருந்துதான் வரு கிறேன் ; ஆகவே, யான் தம்மடிமையன்றோ ? மற்றும் யாதோர் உத்தம காரிய நுட்பத்தினையும் அறியப்படாத வெறும் திருணத்திற்கு ஒப்பானே னாயினும் என்னைத் தேவரீர் கைவிடல் முறையாகுமோ ? ஆகையால் எளி யேனை நின் அன்பர்களோடும் சேர்த்துக் கொள்வீராக, குணரகித வஸ்து வாகிய பரதேவதையே ! பரமப்பிரகாசமே ! இன்பக்கடலே !

குறிப்புரை :—பொன்போன்று மங்கல், மலங்கல், கொங்கல், கொறுங் கல் முதலிய மலினங்களின்றி இயல்பாகவே என்றுங் குன்றாத் தங்கமாய்த்

துலங்கும் தூயவொளி யாகலானும், பொன்னொளிக்கு முன்னொளியாய் நிற்றலானும் "அரும் பொருளே" என்று இறைவனை அழைத்தமை புலனாயிற்று.

திருமந்திரம்.

என்பே விறகா யிறைச்சி யறுத்திட்டுப்
பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினும்
அன்போ டுருகிய கங்குழை யார்க்கன்றி
என்போன் மணியினை யெய்த வொண்ணாதே.

என்னும் இம்மந்திரத்தில் "அன்போ டுருகி யகங்குழை வார்க்கன்றி" என்று ஓதியருளிய வாற்றானும்,

அன்பும் சிவமு மிரண்டென்ப ரறிவிலார்
அன்பே சிவமாவ தாரு மறிகிலார்
அன்பே சிவமாவ தாரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருந் தாரே.

எனத் திருமூலர் அருளியவண்ணம் ஆசிரியர் "என்அன்பே" யென்றமை யறிக. (மற்றவை வெளி) (7)

அ. பாராதி யண்டங்க ளத்தனையும் வைக்கின்ற
பாவெளியி னுண்மைகாட்டிப்
பற்றுமன வெளிகாட்டி மனவெளியி னிற்றோய்ந்த
பாவியேன் பரிசுகாட்டித்
தாராள மாய்நிற்க நிச்சிந்தை காட்டிச்
சதாகால நிட்டையெனவே
சகசநிலை காட்டினை சுகாதீத நிலயந்
தனைக்காட்ட நாட்செல்லுமோ
காரார வெண்ணாரு மனந்தகோ டிகணின்று
காலூன்றி மழைபொழிதல்போற்
கால்வீசி மின்னிப் படர்ந்துபர வெளியெலாங்
கம்மியா னந்தவெள்ளஞ்
சோராது பொழியவே கருணையின் முழங்கியே
தொண்டரைக் கூவுமுகிலே
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

பொழிப்புரை:—இப் பூமண்டல முதலாயுள்ள சகல அண்டங்களத் தனையும் வரைந்திடற் கேதுவான பரமாகாய உண்மை இரகசியத்தைக்

காண்பித்துப் பின்னர் அதனைத் தொடராநின்ற மனமாகிய ஆகாயத்தையுங் காண்பித்து அதன்கண் பதிந்துள்ள பாவியாமெனது சுபாவத்தினையுங் காண்பித்து, அன்றித் தாராளமாக நிலைபெறுமாறு அம்மனதின் இறப்பையுங் காண்பித்து, உடனுக எப்போதும் இடையறு நிஷ்டையாகிய சகசமாய நிலையினையும் அறிவித்தருளினுய்; ஆனல், ஆனந்த அதீதமாயுள்ள தன்மையை யறிவிப்பான் இன்னும் நாளாகுமோ? நினைத்தற்கரிய கணக்கற்ற மேகக் கூட்டங்களானவை நிலைபெற்று எங்கும் பரவி காலிறங்கி மழையை வருஷிப்பதுபோன்று காற்றலைமோதி வான் மின்னலுறப் பரவி பரமாகாய முற்றிலும் ஒரே மூடலாகக்கம்மி பரானந்த பிரவாகமாகப் பெய்யுமாறு மிக்க காருண்யத்தோடு இடிமுழக்கஞ் செய்து மெய்யன்பரை ஓசையோடழைக்கும்படியான மேகமே! குணரகிதப் பரிசுத்தமான பரதேவதையே! பரமசோதி சொரூபமே! இன்பக்கடலே!

குறிப்புரை :—'பாராதி யண்டமாவது'—பூலோக அண்ட முதலாயுள்ள மற்ற அண்டங்கள்.

'வைக்கின்ற தாவது'—மற்ற சகலாண்டங்களிலுள்ள எல்லாவித நாமரூபாதி பிரபஞ்சத் தோற்றங்களையும் வரைந்திருப்பதுபோல பராகாயத்தின்கண் பிரகாசிக்கக் காட்டுதலாம்.

'கால் வீசி' என்றது—மழைக்காற்று இறங்குவதுபோன்று காற்றை வேகிக்கச் செய்தலாம்.

சுகாதீத நிலயமாவது—மேன்மையாகிய பரசுகானந்தந் தோன்றும் ஸ்தானமாம். (8)

௯. பேதித்த சமயமோ வொன்றுசொன படியொன்று
பேசாது துறவாகியே
பேசாத பெரியோர்க ணிருவிகற் பத்தினுற்
பேசார்கள் பரமகுருவாய்ப்
போதிக்கு முக்கணிறை நேர்மையாய்க் கைக்கொண்டு
போதிப்ப தாச்சறிவிலே
போக்குவர வறவின்ப நீக்கமற வசனமாப்
போதிப்ப தெவரையனே
சாதித்த சாதனமு மியோகியர்க ளமதென்று
சங்கிப்ப ராதலாலே
தன்னிலே தானு யயர்ந்துவிடு வோமெனத்
தனியிருந் திடினங்ஙனே

சோதிக்க மனமாயை தனையேவி னாலடிமை
சுகமாவ தெப்படிசொலாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

பொழிப்புரை :—பலவேறு வகைத்தான மதங்களெல்லாம் பற்பல விதமான கோட்பாடுள்ளதாகக் கூறு கிற்கும் ; ஆதலினாலே முற்றத் துறந்துள்ள முனிவரர்கள் நிருவிகற்ப மென்கின்ற ஓர்யோக நிலையினாலே நிஷ்டானு பூதியுற்று மௌனமாயிருப்பர் ; உபதேசஞ் செய்தற்கருகராம் திரியம்பக மூர்த்தியார் பரமசற்குரு மூர்த்தமாக எழுந்தருளிவந்து, என்னை நன்குறத்திருத்தித் தன்வசஞ்செய்தருளி ஞான முத்திரைகொண்டு உபதேசஞ் செய்தனர் அறிவைநோக்கி ; இனி, சனன மரணமின்றியும் இடைவிடா ஆனந்தப் பெருக்கம் உண்டாகவும் எவர் இனி சொன்மாத்திரமாக உபதேசிப்பரிதனை, எனையனே ! யான் இதுகாறும் அநுபூதி செய்துவந்த சாதனைகளையும் யோகாப்பியாசிகளா யுள்ளவர்கள் இந்த அநுபூதி முறையானது எம்மதாகும் எனச்சங்கிப்பார்கள்; ஆதல்பற்றியே தனக்குத் தானாகவே அயர்ந்து சும்மாயிருக்கலாம் என, யோகமாயிருப்பின், அப்போது பரீக்ஷார்த்தமாக மனத்தகத்துண்டாகும் மாயாதேவியை ஏவுதல் செய்வார்களாயின் நின்னடியவனாய யான் ஆனந்தாதீத மாதல் எவ்விதம் ? கூறுவாயாக. நிர்க்குணவிசேஷமான பரதேவதையே ! பரமசோதி சொரூபனே ! இன்பக் கடலே !

குறிப்புரை :—பலவாறான மதங்கள் எல்லாம் அவையிற்றின் கோட்பாடுகளைக் கூறும் சாத்திரங்கள் ஒரே முறையன்றிப் பல வேறு மார்க்கங்களாக ஒன்றற்கொன்று மாறுபட்டே காணலாலேயே ஆசிரியர் 'பேதித்த சமய' மென்றும், 'ஒன்று சொன்னபடியொன்று பேசாது' என்றுங் கூறலாயினரென்க ; பேசாத பெரியோர்—மௌன நிலைகொண்ட ஞானிகள். நிருவிகற்பம்— மனோ அடக்கமுற்ற நிஷ்டாபரர் கொள்கை.

முக்கணிறை — மூன்று நேத்திரங்கள் கொண்ட சிவபெருமான்.

போக்கு வரவு — சாதல் பிறத்தல்.

நீக்கமற இன்பம் — இடையறா வின்பம்.

சங்கித்தல் — ஆக்ஷேபித்தல் அன்றித் தர்க்கித்தல். (9)

௰. அண்டமுடி தன்னிலோ பகிரண்ட மதனிலோ
அலரிமண் டலநடுவிலோ
வனனடுவி லோவமிர்த மதிநடுவி லோவன்பர்
அகமுருகி மலர்கடுவித்

தெண்டமிட வருமூர்த்தி நிலையிலோ திக்குத்
திகந்தத்தி லோவெளியிலோ
திகழ்விந்து நாதநிலை தன்னிலோ வேதாந்த
சித்தாந்த நிலைதன்னிலோ
கண்டபல பொருளிலோ காணாத நிலையெனக்
கண்டசூ னியமதனிலோ
காலமொரு மூன்றிலோ பிறவிநிலை தன்னிலோ
கருவிகர ணங்களோய்ந்த
தொண்டர்க ளிடத்திலோ நீவீற் றிருப்பது
தொழும்பனேற் குளவுபுகலாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

பொழிப்புரை:— அகிலாண்டத்தின் உச்சியிலோ, அல்லது அண்டத்தின் மேற் பக்கத்திலோ, அல்லது ஆதித்த மண்டலத்தின் மத்திய பாகத்திலோ அக்னிமண்டல மத்தியிலோ, அமிர்தமுள்ள சந்திரமண்டல மத்தியிலோ, மெய்யடியாராவார் தம் மனம் கசிந்துருகிப் பத்ர புட்பங்களைக் கொண்டருச்சித்து வந்தனவழிபாடுகள் செய்யுமாறு எழுந்தருளிவரானின்ற அருச்சா சமயத்திலோ, அன்றித் திக்குகள் எட்டிலும் அதன் முடிவிலுமோ, அல்லது சுத்த வெளியின்கண்ணோ, அன்றி விளங்குகின்றதான மீதானத்திலோ, துரியவெளி தசநாதங்களிலோ, வேதாந்த சித்தாந்தமெனும் உபய நிலைகளின் முடிவான நிலையிலோ, பகிரங்கமாகப் பார்க்கப்படுகிற பலவேறு வகைத்தான பொருள்கள்தன்னிலோ, கண்கூடாகக் காணுதலில்லாத நிலையென்று நிச்சயித்துள்ள சுத்த சூனிய மதனிலோ (அதாவது முப்பாழிலோ,) அன்றி மூவகைக் காலங்களிலுமோ, ஆன்ம உற்பவ காலத்திலோ, அன்றி அகக்கரண புறக்கரணாதிகள் ஓய்வுபெற்ற மெய்யன்பர்க ளிடத்திலோ? நீ எழுந்தருளி யிருந்தருள்வதை, நினது அடியவனாகிய எளியேற்கு உள்ள படியான நிலையைக் கூறுவாயாக. சுத்த நிர்க்குணமான பரதெய்வமே!

குறிப்புரை:—அண்டமுடி = அண்டகோளத்தின் நேரான உச்சிச் சிரப்பாகம். பகிரண்டம்=மற்றுமுள்ள அவ்வண்டப் புறமாய் எப்பக்கமும். அலரிமண்டலம்=சூரியமண்டலம். இப்பாகம்=சதாசிவ அம்சம். (10)

௰௧. எந்தநாள் கருணைக் குரித்தாகு நாளெனவு
மென்னிதய மெனிவாட்டுதே
ஏதென்று சொல்லுவேன் முன்னெடுபின் மலைவறவு
மிற்றைவரை யாதுபெற்றேன்

பந்தமா னதிலிட்ட மெழுகாகி யுள்ளம்
பதைத்துப் பதைத்துருகவோ
பரமசுக மாவது பொறுப்பரிய துயரமாய்ப்
பலகாலு மூர்ச்சிப்பதோ
சிந்தையா னதுமறிவை யென்னறிவி லறிவான
தெய்வநீ யன்றியுளதோ
தேகநிலை யல்லவே யுடைகப்பல் கப்பலாய்த்
திரையாழி யூடுசெலுமோ
சொந்தமா யாண்டநீ யறியார்கள் போலவே
துன்பத்தி லாழ்த்தன்முறையோ
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

பொழிப்புரை:—யான் நினது திருவருட் பிரசாதத்திற்குப் பரிபக்குவமாயுள்ளகாலம் எக்காலமோ வென்று எனது மனமானது என்னைச் சதாகாலமும் துன்புறுத்திக்கொண்டே யிருக்கிறதே! அக்கஷ்டத்தினை என்னென்றெடுத் துரைப்பது! முன் பின் விரோதமின்றி இதுகாறும் யான் ஒன்றும் பெறக்காண்கிலனே! தீப் பந்தத்தில் அகப்பட்ட மெழுகைப் போன்று எனுள்ளம் பதை பதைத்து உருகுதலோ, பேரின்ப முதயமாதல் பொறுக்கமுடியாத கஷ்டமடைந்து பன்முறையும் சோர்ந்து கிடப்பதோ (இவ்விதமாய் பரமானந்தத்திற்குக் காரணமாயிருந்தது என்) மனமென்பதும் நீ தெரிந்துள்ளாய்; ஆகவே, எனது சிற்றறிவிற்குப் பேரறிவாயிருந்தருள்வதும் நீயாயிருக்கின்றனை, உன்னையன்றி வேறோர் தெய்வமுமுளவோ? இவ்வுடலோ, கேவலம் அழிவுள்ளதாயிருக்கிறது! பழுதுபட்ட கப்பலானது நல்ல கப்பல்போன்று அலைகடலில் போய்க்கொண்டிருக்குமோ? என்னைச் சுதந்தரமாக ஆட்கொண்டருளிய நீ, தெரியாய்போன்று என்னை இவ்வித கஷ்டத்திலே உட்படுத்திவிட்டது உனக்கு முறைமையாகுமா? சுத்த நிலைகொண்ட குணாதித பரதேவதையே! பரமசோதி சொரூபமே! இன்பக்கடலே.

குறிப்புரை:—மலை வறவும்=அறியாமை நீங்கவும். இற்றைவரை—இதுகாலபரியந்தம். பந்தம்=தீப்பந்தம். சிந்தையானது மறிவை=சர்வவியாபியாதல் உள்ள முருகலைத் தெரிவாய்.

அடிமை யறிவினுக் கறிவான தெய்வம் நீ=நின்னன்பனுய அடியேனது சிற்றறிவினுக்கு உற்ற துணையாய் உண்ணின்று ஓதுவதாகும். திடபெறுத் தன்னை யிங்கே—ஓட்டைக் கப்பலென்றார். இதனால், திருவருட பிரசாதத்திற்குத் துரிதப்படுகின்றா ரென்பது ஈண்டு தேற்றமாயிற்று. (11

௰உ. எந்நாளு முடலிலே யுயிரா முனைப்போ
லிருக்கவிலை யோமனமெனும்
யானுமென் னட்பாம் பிராணனு மெமைச்சடம
தென்றுனைச் சித்தென்றுமே
அந்நாளி லெவனே பிரித்தா னதைக்கேட்ட
வன்றுமுத லின்றுவரையும்
அநியாய மாயெமை யடக்கிக் குறுக்கே
யடர்ந்தரசு பண்ணியெங்கண்
முன்னாக நீயென்ன கோட்டைகொண் டாயென்று
மூடமன மிகவுமேச
மூண்டெரியு மனலிட்ட மெழுகா யுளங்கருகன்
முறைமையோ பதினாயிரஞ்
சொன்னாலு நின்னரு ளிரங்கவிலை யேயினிச்
சுகம்வருவ தெப்படிசொலாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

பொழிப்புரை :—முக்காலங்களிலேயும் எனது சரீரத்தின்கண் பிராணனுயுள்ள நின்னைப்போன்று மனமாகிய அடியவனும் எனக்கினிய நண்பாயுள்ள ஆன்மாவும் இவ்வுடலி னிருந்திட வில்லையோ? அங்ஙனமாக, யாங்களனைவரையும் அறிவிலாப் பொருளென்றும், தம்மை ஞானப்பொருளென்றும், அக்காலத்திலே யாவனே திட்டமிட்டுள்ளான்; அஃதறிந்த அந்நாள்தொட்டு இன்னாள் பரியந்தம் அக்கிரமமா யெம்மனோரை அடக்குவித்து இடையில் வந்து அரசாக்ஷி புரிந்து எம்மனோர்கள் முன்பே நீ கொண்ட கோட்டையென்னவோ? என்று பேதை மனமானது எம்மனோரை நிந்திக்க எம் மனமானது அக்கினியில் கரைந்தொழுகும் மெழுகை யொத்து கருகி உள்ளகத்தே துன்புறலும் முறைமைதானோ? இது விஷயமாகப் பல ஆயிர முறையும் தேவரீர் முன்பாக குறை முறைகளைக் கூறிவரினும், தமது திருவருளுக்கு இரங்கல் சுபாவத்தைக் காணேமே! இனிமேல் எனக்கு இன்பம் வந்தெய்தல் எவ்வாறு? கூறுவாயாக. குணரகிதரான பரிசுத்த தேவதையே! பரம சோதிவடிவே! இன்பக்கடலே!

குறிப்புரை :—இதனால் ஆசிரியர் தம் மனமாயது அவரை நோக்கிக் கூறுதல் வருமாறு :—ஆன்ம சொரூபமாகிய ஐயனே! நீண்ட காலமாக இவ் வுடலின்கண் நீ வசித்துக் காத்துவருகின்றாய், நீ சர்வாதார பூதன்றான்; அதற் காட்சேபமில்லை; ஆனாலும், இருதயமாகிய யானும், என் நண்பாகிய பிராணதேவரும் இந்தச் சரீரத்திலேதா னிருந்துவருகிறோம்; இதை

நீ யறியாயோ? போகட்டும், அக்காலத்திலே எவனோ எங்களைச் சட பதார்த்த மென்றும், தம்மைச் சித்துப் பொருளாகவும் வேறு பிரித்து விட்டான்; அஃதறிந்துள்ள நீயோ, எங்களை இதுகாறும் அடிமைப்படுத்தி அரசாட்சி செய்துவந்தனை; இவ்வாறு செய்தமையால் இதுவரையில் நீ கைக்கொண்ட கோட்டை இன்னதெனத் தெரியவில்லையே! என்றிவ்வாறு ஏளனஞ் செய்தது. யான் அதுகேட்டு மனந்தாங்காமல் உள்ளுக்குள்ளேயே நொந்தயர்ந்து வருதலும் தருமமாகுமா! என இறைவன்பால் குறை முறை கூறியதாகு மென்க. (12)

---

## எங்குநிறை கின்றபொருள்.



க. "அவனன்றி யோரணுவு மசையா" தெனும்பெரிய
வாய்தர்மொழி யொன்றுகண்டா
லறிவாவ தேதுசில வறியாமை யேதிவை
யறிந்தார்க ளறியார்களார்
மௌனமோ டிருந்ததா ரென்போ லுடம்பெலாம்
வாயாய்ப் பிதற்றுமவரார்
மனதெனவு மொருமாயை யெங்கே யிருந்துவரும்
வன்மையொ டிரக்கமெங்கே
புவனம் படைப்பதென் கர்த்தவிய மெவ்விடம்
பூதபே தங்களெவ்விடம்
பொய்மெயித மகிதமேல் வருநன்மை தீமையொடு
பொறைபொறு மையுமெவ்விடம்
எவர்சிறிய ரெவர்பெரிய ரெவருறவ ரெவர்பகைஞர்
யாதுமுனை யன்றியுண்டோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

பொழிப்புரை.—அந்தப் பரமேசுரன் ஆட்டுவித்தா லல்லாது ஓர் அணுப் பிரமாணமான சீவன்கூட ஆடாதெனக் கூறுநின்ற பெரியோர் கூற்றும் ஓர் ஒப்பற்ற நன்மொழியினை சற்று நிதானித்து அதன் கருத்தினை கருத்திற் கொண்டால், அறிவெனப்படுவது எது? சில அறியப்படாமை யாது? இவ்விரண்டையும் நன்குணர்ந்தாரும் உணராரும் யாவர்? (இவையன்றி) மோன முத்திரையைக் கைக்கொண்டிருந்தவர் யாவர்? தவிர, எனைப் போன்று சரீராத்யந்தமும் 'வாய்' எனக்கொண்டு உளறித் திரிபவர்யாவர்?

மனம் எனும் ஓர் மாயாசக்தியானது யாங்ஙனமிருந்து தோன்றும்? கடுமையோடும் தயையுந் தோன்றுவ தெவ்விடம்? இந்த உலகத்தை தோற்றுவிப்பது எது? சகலகாரிய நிர்வாகியார் எங்குள்ளார்? பலவகைப் பூதாதிகளின் உற்பவம் எங்கே? சத்தியமென்ன அசத்யமென்ன இவையிரண்டும், நன்மை தீமைகளும், மேலும் நல்லன தீயனவுமான குணவிசேஷங்களும், மற்றும் பொறுமையும் மனஞ் சகியாமையுமாகிய இவைகளெல்லாம் எங்கேயிருப்பன? அன்றி, சிறியவர் பெரியார் எவர்? எவர் உறவினர்? எவர் பகைஞர்? இவைகளனைத்தும் ஆஸதானமாகிய தம்மையல்லாது வேறொன்றிருக்கின்றதா? இம்மை அம்மை என்கின்ற உபய நிலையின்கண்ணும் உயிர்கட்கு உள்ளுயிராய் நின்று எங்கணும் பரிபூரணமாய பரம்பொருளே!

குறிப்புரை :—எம்மான்றன் றிருவருண் வன்மையானன்றி ஓர் சிறு சீவனும் தனக்குத்தானே வலிமையுண்டென் றியம்புதல் அமையாதென்பதையே ஈண்டு ஆசிரியர் "அவனன்றி யோரணுவு மசையாதெனும்" பெரிய ஆப்தர் மொழியொன்றைக் கூறியருளினர். சான்றாக:—"ஆட்டுவித்தா லாரொருவ ராடாதாரே, யடக்குவித்தா லாரொருவ ரடங்காதாரே, பாட்டுவித்தா லாரொருவர் பாடாதாரே, பணிவித்தா லாரொருவர் பணியாதாரே" என்பதாதியாக நாவரசர் திருவாய் மலர்ந்தருளினமை காண்க.

ஆப்தராவார் = அறிவினிற் சிறந்தார்.

கர்த்தவ்யம் = எல்லாம்வல்ல இறைவரார் தன்மை.

உயிர்க்குயிராய் = ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவாக உடனிகழ்வாயிருத்தல். (1)

௨. அன்னே யனேயெனுஞ் சிலசமய நின்னையே
ஐயாவை யாவென்னவே
யலறிடுஞ் சிலசமய மல்லாது பேய்போல
வலறியே யொன்றுமிலவாய்ப்
பின்னேது மறியாம லொன்றைவிட் டொன்றைப்
பிதற்றிடுஞ் சிலசமயமேல்
பேசரிய வொளியென்றும் வெளியென்று நாதாதி
பிறவுமே நிலையமென்றுந்
தன்னே ரிலாதகோ ரணுவென்று மூவிதத்
தன்மையாங் காலமென்றுஞ்
சாற்றிடுஞ் சிலசமய மிவையாகி வேறதாய்ச்
சதாஞான வானந்தமாய்
என்னே யெனேகருணை விளையாட் டிருந்தவா
றெம்மனோர் புகல்வெளிதோ

இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

பொழிப்புரை :—பல சமயங்களில் சிலசமயத்தார் உன்னை தாயே தாயேயென்று சக்திதேவதையாகத் துதிப்பர். மற்றுஞ் சில சமயத்தவர் பிதாவே பிதாவேயென்று கூவியழைத்திடுவர் ; இவ்வாறன்றியே சில சமயத்தவர் பிசாசெனக்கூவி முடிவில் ஒரு பிரயோசனமும் பெறுது வேறு வழியுந் தெரியாது அச்சமயத்தைவிட்டு மற்றுமோர் சமயப்பிரவேசமாகி பேயுளறலாய்ப் பிதற்றுவர். பின்னுஞ் சிலசமயத்தவர் மேலும், சொல்லவொண்ணுத பேரொளியென்பர் ; இன்னுஞ் சில சமயத்தவர், வெறும் ஆகாயமெனவும், நாதமாம் சப்த முதலாயுள்ளனவும் மற்றையவும், மேலாயுள்ள நிலைகளாகவும், தனக்கிணையில்லாத ஓர் அணுப்பிரமாணமான தெனவும், மற்றும் மூவகையாயுள்ள காலமெனவுங் கூறுநிற்கும் ; ஆகவே, இவையனைத்துமாகி இவையல்லா வேறாகி நிலைபெற்ற ஞானனந்தமாய் நின் காருணிய திருவிளையாடல் அமைந்த தன்மை என்ன ஆச்சரியம் ! என்ன ஆச்சரியம் !! இவ்வற்புத நிகழ்வின் பேராற்றலை என்போன்ருர் சொல்லவுந் தரமோ ! இம்மை மறுமைகளில் உயிர்க்குள்ளுயிரா யெவ்விடத்தும் பரிபூரணமாய் நிறைந்த பரம்பொருளே. (சமயம்=மதம்.)

குறிப்புரை :—இவ்வுலகின்கண் உண்டாயிருக்கிற சமயங்கள் பலவாதலாலும், அவ்வச்சமயங்களும் கொண்டுள்ள தெய்வக்கொள்கைகள் பலவேருதலாலும், ஒன்றற்கொன்று பேதபாவனையாக உண்மைப் பொருளை யுணராராய் புலம்பித் திரிதலாற்ருன் நமது நூலாசிரியர் இவற்றினை நன்குணர்ந் திங்ஙன் கூறலாயின ரென்றுணரற்பாற்று. (2)

ங. வேதமுட னாகம புராணமிதி காசமுதல்
வேறுமுள கலைகளெல்லா
மிக்காக வந்துவித துவிதமார்க் கத்தையே
விரிவா யெடுத்துரைக்கும்
ஓதரிய துவிதமே யத்துவித ஞானத்தை
யுண்டுபண் ஞானமாகும்
ஊகமனு பவவசன மூன்றுக்கு மொவ்வுமீ
துபயவா திகள்சம்மதம்
ஆதலி னெனக்கினிச் சரியையா திகள்போது
மியாதொன்று பாவிக்கநான்
அதுவாத லாலுன்னை நானென்று பாவிக்கின்
அத்துவித மார்க்கமுறலாம்

ஏதுபா வித்திடினு மதுவாகி வந்தருள்செ
யெந்தைநீ குறையுமுண்டோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

பொழிப்புரை :—நான்மறைகளோடும், தெய்வ தத்துவங் கூறும் ஆகமாதி சாத்திர இதிகாசங்களும், மற்றுமுள்ள சகல சாத்திரங்களனைத்தும் அத்வைதம், துவைதம் என்கின்ற இருமுறைகளைப் பற்றியே மிகவும் சாங்கோப சாங்கங்களாக எடுத்தோதிவருவனவாகும் ; இவ்விருவித முறைகளிலே சொல்லுதற்கு அசாத்தியமான இரண்டென்கின்ற துவிதஞானமே அத்துவித ஞானத்தினை ஸ்திரப்படுத்தும் ஞானமாமென்க ; இந்த உண்மை நிலையினைச் சுருதி யுக்தி அனுபவமென்னும் முத்திற வாயிலாக நன்குணரலாகும். அப்போதுதான் இருவித வாதிகளுக்கும் ஒருவித முறைமை தானென்று நன்கு புலப்படக் கிடக்கும் ; ஆகவே இனி எளியேற்குச் சரியையாதியாம் நிலைகளே இசையும் ; யான் எதனை அந்தரங்கத்தில் பாவனை புரிவனோ, அதுவாகவே ஆய்விடலாலே நின்னை நானாகப் பாவிப்பனேயாயின் அதுவே அத்துவித நிலையினைத் தந்தருளும் என்பது திண்ணம் ; நீ, யாதொன்றைப் பாவனை செய்திடினும் அதுவாகவே தோன்றி வந்தருள் புரிகின்ற எனது பரம பிதாவாதலாலே நின்னைச் சரணடைந்துள்ள எளியேற்கும் இனி குறைபாடுமுளதோ ! இல்லையென்றவாறும். இம்மை மறுமைக் கண்ணும் எனதாவிக்குத் தோன்றாத் துணையாயுள்ள சர்வ பரிபூரணப் பொருளே !

குறிப்புரை :—வேதம் = நான் மறைகள். ஆகமம் = காமிக முதல் வாதுளம் ஈறாகவுள்ள 28-ம் சிவபெருமானது ஐம்முகங்களினின்றுந் தோன்றின. ஆதல்கொண்டே இதனைக் கடவுள் வாக்கென்பர் மேலோர். புராணம் 18-ம், இதிற் சிவபுராணம் 10-ம். இதிகாசம் = பாரத இராமாயணங்களை யென்க.

சுருதி, யுக்தி, அநுபவங்களையே = 'ஊக மனுபவ வசனம்' என்றார். உபயவாதிகளாவார் = ஈண்டு துவிதாத்துவித மென்னும் இருவகையாளரை யென்க. (3)

ச. சொல்லா னதிற்சற்றும் வாராத பிள்ளையைத்
தொட்டில்வைத் தாட்டியாட்டித்
தொடையினைக் கிள்ளல்போற் சங்கற்ப மொன்றிற்
றொடுக்குந் தொடுத்தழிக்கும்
பொல்லாத வாதனை யெனுஞ்சப்த பூமியிடை
போந்துதலை சுற்றியாடும்

புருஷனி லடங்காத பூவைபோற் றானே
புறம்போந்து சஞ்சரிக்குங்
கல்லோ டிரும்புக்கு மிகவன்மை காட்டிடுங்
காணாது கேட்டவெல்லாங்
கண்டதாக் காட்டியே யணுவாச் சுருக்கிடுங்
கபடநா டகசாலமோ
எல்லாமும் வலதிந்த மனமாயை யேழையா
மென்னா லடக்கவசமோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

பொழிப்புரை :—ஓர் பிள்ளையை வாய் வார்த்தையினால் அழைக்கின்ற போது வராவிட்டால், அக்குழந்தையைப் பின்னும் ஏணையிலிட்டு அசைவித்துத் துயிலுறுவண்ணந் தொடையிற் கிள்ளுந் தன்மையையொத்து ஓர் காரியத்தைச் சங்கற்பித்து, பின்னரதனை உடனே மறப்பிக்கும்; அன்றித் தீயனவாகும் வாசனையெனப்படும் எழுவகையாய ஞானசூன்ய பூமியின்கண் வந்து தலை சுழன்றாடும்; இன்னும் கணவன்பால் கட்டுப்படாத பெண்டிர்போன்று சுயேச்சையாக வெளியில் சென்றுலவிவரும்; மற்றும், கல்லினுக்கும் வலிய இரும்பிற்கும் அதிக வலிமையை யெண்பிக்கும்; தான் காணப்பெறாது கேட்டுள்ளவனைத்தையும் கண்கூடாகக் கண்டதைப் போன்று துகள்மாத்திரமாகச் சுருங்கச் செய்துவிடும்; (இவையன்றி) இன்னும், வஞ்சகப் போலிச்சாலங்களாக நடத்துவிக்கும் வலிமையுள்ள இந்த மனத்தகத்து மாயையை சிறிதும் வலிமையற்ற எளியனாலே அடக்குவிக்கு மாற்றலுடையவனோ? இருமையினும் ஆவித்துணையாய் எங்கணும் விளக்க முற்றுள்ள பரம்பொருளே!

குறிப்புரை :—சங்கற்பம் = மனோ நிர்ணயம்.

சப்தபூமி—சாக்கிரம், சொப்பனம், சுழுப்தி, துரியம், துரியாதீதம், விந்து, நாதம் என்பனவாம்.

பூவையர்—புத்தியறிந்த பெண்.

மனமாயை—கல், இரும்பு இவற்றிற்கும் வலிமையுள்ளதென்றார். எவ்வாறெனில், ஈசுரனுக்கே உரியசத்திகளில் ஒருவளாய் இவ்வுலகத்தை விரித்தமையானே நன்கு புலனாகலாம். அன்றிச் சிலபெரியாரும் இம்மனமாயையே கேவலம் குரங்கென்றுங் கூறியுள்ளார். (4)

ரு. கண்ணாரா நீர்மல்கி யுள்ளநெக் குருகாத
கள்ளனே னானுமோ

கைகுவித் தாடியும் பாடியும் விடாமலே
கண்பனித் தாரைகாட்டி
அண்ணு பரஞ்சோதி யப்பா வுனக்கடிமை
யானெனவு மேலெழுந்த
அன்பாகி நாடக நடித்ததோ குறைவில்லை
யகிலமுஞ் சிறிதறியுமேல்
தண்ணாரு நின்னதரு ளறியாத தல்லவே
சற்றேனு மினிதிரங்கிச்
சாசுவத முத்திநிலை யீதென் றுணர்த்தியே
சகசநிலை தந்துவேறொன்
றெண்ணும லுள்ளபடி சுகமா யிருக்கவே
யேழையேற் கருள்செய்கண்டாய்
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

பொழிப்புரை :—கண்ணிறைய நீரூறிவழிய, மனம் இளகி நீர்போல் உருகுதலில்லாத வஞ்சகனுயிடினும் சிரமேற் கரங்குவித்து ஆனந்தமாயாடிப் பாடி வந்தும் நடுநீங்காமல் நேத்திரத்திலே குளிரான நீரை ஊற்றெழச் செய்து, என் மூத்தோனே! என்பிதாவே! பரஞ்சோதீ! எளியன் தமக்கு தொண்டன் என்றும், இன்னும் மிகுதியான பேரன்புடையனுகவும் நடித்ததோ கொஞ்சமல்ல! அவ்வாறுடியதை உலகமும் சுமாராகத் தெரிந்திருக்கும்; அங்ஙனமாக, குளிர்வாய்ந்த நினது திருவருளுக்குத் தெரியாதன வன்றே; ஆகையால், சிறிதாவது மனந்தளர்ந்தருளி அழிவில்லாத நித்திய முத்திநிலை இதுவேயெனக் கைகாட்டிமேலே சகசமாய நிலையினையுமீந்து வேறேது நினையாது நிச்சயமாக ஆனந்தித்திருக்கு வண்ணம் இவ்வேழை மதிப் பேதையேற்குத் திருவுளம் பற்றுவாயாக; இருமையினும் உயிர்க்குற்ற துணையாகி யெங்கணும் விளங்கு பொருளே!

குறிப்புரை :—யான் உண்மையாகவே கண்களில் ஆனந்தநீர் பெருகி, உள்ளம் நெக்கென உருகாவிட்டாலும், சிரசின்மேல் அஞ்சலித்து நடமாடி பாடி கண்ணீர் வழியுமாறும் அண்ணு! பரஞ்சோதியப்பா! வென்று பல வாறுக மேலும் மேலும் அன்பினுலே ஆடிவந்ததும் இவ்வுலகமறியும், அன்றி நின் திருவருளுமறியாததல்ல; ஆகவே, யான்செய்த பக்தியானது கள்ளமோ, உள்ளதோ கடவுணீயாதலால் இனி மனமிரங்கி நிலவரமான சாதனத்தை யெளிய (அதாவது புத்தியில் ஏழையான) எனக்கு இரக்கங்கொண்டருள் புரிகுவாயாக. என்று மன்றுடிஞ ரென்க.

வேறொன்றெண்ணாமல் என்பது, காலந் தாழ்க்காமல் என்றிருக்கலாம். ஏன் ? தேகாநித்தியத்தைக்கருதி விரைந்தனர் போலும்.

ஐய மெடுத்தருந்தி யாடையின்றிச் சென்றாலு
மையந் தவிர்த்த நமதாசானை—ஐயாவென்
றாதரத்தாற் பூசைசெய்யு மன்பினவரே மண்மேல்
மாதருத ரம்மணுகார் வந்து—என்றனர் பெரியார். (5)

சீர். காகமா னவைகோடி கூடிநின் றாலுமொரு
கல்லின்முன் னெதிர்நிற்குமோ
கர்மமா னவைகோடி முன்னேசெய் தாலுநின்
கருணைப்ர வாகவருளைத்
தாகமாய் நாடினரை வாதிக்க வல்லவோ
தமியனேற் கருட்டாகமோ
சற்றுமிலை யென்பதுவும் வெளியாச்சு வினையெலாஞ்
சங்கேத மாய்க்கூடியே
தேகமா னதைமிகவும் வாட்டுதே துன்பங்கள்
சேராம வியோகமார்க்க
சித்தியோ வரவில்லை சகசநிஷ் டைக்குமென்
சிந்தைக்கும் வெகுதூரநான்
ஏகமாய் நின்னோ டிருக்குநா ளெந்தநா
ளிந்நாளின் முற்றாதோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

பொழிப்புரை:—கோடிக்கணக்கான காக்கைகள் ஒருங்கு சேர்ந்திருப்பினும், ஓர் கல்லெறியின் முன்னே எதிர்த்து நிற்கக் கூடியதாக விருக்குமோ ? (அதேபோன்று) கோடிக்கணக்கான தீய கர்மாக்களை முன்னோர் கால் செய்திருப்பினும் அவை, நினது காருணிய வெள்ளமாகிய திருவருளினைத் தாகவிடாயாக் கொண்டுள்ளவர்களையும் துன்புறுத்த வன்மையுடையதோ ? தன்னந்தனியனாகிய சிறியவனேற்குத் திருவருள் விருப்பமானது கொஞ்சமேனு மில்லையென்னும் விஷயமும் பிரசித்தியாயது ; ஆகவே, செய்த வினைகளனைத்தும் ஏற்பாடாகச்சேர்ந்து எனதுடலை மிக்கவருத்துகின்றனவே ! மேலும் துன்பம் வந்தணுகாவண்ணம் யோகசித்தியும் உண்டாகவில்லை ; சாதாரண நிஷ்டைக்கும் என் மனத்திற்கும் எட்டாத் தூரமாயிருக்கிறது ; அடிமையாளனாகிய யான் தன்னோடும் ஒன்றுபட்டிருக்கும் திவ்ய தினம் எந்ததினமோ ! (அவ்வொருமைப் பாடானது) தற்போது முடிவு

பெருதோ ? இம்மை மறுமை யென்னுமிரண்டிடத்தும் உயிர்த் துணையா யுள்ள எவ்விடத்தும் வியாபித்துள்ள பரம்பொருளே !

குறிப்புரை :—நினது கருணைப்பிரவாகமாகிய திருவருளைப் பெறுமாறு மிகவுந்தாகித்து உனைச்சார்ந்தும், என்னைத் துன்புறுத்தலால், இச்சிறிய வனுகிய எனக்கு அவ்வருட்டாகம் சுத்தமாயில்லை யென்பதும் பரிஷ்காரமாய்த் தெரிந்துவிட்டது; வினைகளோ, ஒன்று கூடிவந்து வதைக்கின்றன; யோகமோ, சித்தியாகவில்லை; அன்றிச் சாதாரண நிட்டைக்கும் சாத்தியமில்லை; இப்படியிருக்குமானல் யான் நின்னேடும் ஒருமையுற்று அத்துவித முத்திபெறுதல் எந்தக் காலமாகுமோ! என விஞதல் புரிகின்றார் போலும். (6)

எ. ஒருமைமன தாகியே யல்லலற நின்னருளி
லொருவனுன் வந்திருக்கின்
உலகம் பொருதகோ மாயா விசித்திரமென
வோயுமோ விடமில்லையோ
அருளுடைய நின்னன்பர் சங்கைசெய் திடுவரோ
வலதுகிர்த் தியகர்த்தராய்
அகிலம் படைத்தெம்மை யாள்கின்ற பேர்சில
ரடாதென்ப ரோவகன்ற
பெருமைபெறு பூரணங் குறையுமோ பூதங்கள்
பேய்க்கோல மாய்விதண்டை
பேசுமோ வலதுதான் பரிபாக காலம்
பிறக்கவிலை யோதொல்லையாம்
இருமைசெறி சடவினை யெதிர்த்துவாய் பேசுமோ
வேதுளவு சிறிதுபுகலாய்
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

பொழிப்புரை :—(மிகச் சாமானியனுகிய) யான் ஒருவன் மட்டும் பிறவித் துன்பம் நீங்குமாறு ஓரே நிதானமுடையவனுகி நினது திருவருள் வெளியிலே வந்து கலந்திருப்பனேயாயின் உலகத்தார்க்கு அது சம்மதியிராதோ ? அன்றி, மாயாதேவியின் பிரவிர்த்தியென்ன ஓய்ந்து போய் விடுமோ ? (அன்றியதற்கு) யானன்றி வேறெவரும் கிடைத்திலவோ ? உனது திருவருட்கேற்ற மெய்யன்பர்கள் (ஏதும்) விதண்டை புரிவரோ ? அல்லாமல் உலககாரிய கடவுளாகி இவ்வுலகத்தைச் சிருட்டிசெய்து, அதில் எம்மை யிரக்ஷை செய்பவராகும் சிலவர், யான் சேர்வதடாதென்று தடா நிற்

பரோ ? மிகவும் விரிந்த பெருமைவாய்ந்த நினது பரிபூரணும்ஸத்திற் குறை வேற்பட்டுவிடுமோ ? மற்றும், பூதாதிகள் அலகையுருக்கொண்டு குதர்க்கவுரை கூறுமோ ? அல்லாமல் எனக்குப் பரிபக்குவ காலந்தான் வர வில்லையோ ? பழமையாயுள்ளதும், அறிவிலாததுமாகிய இருவகை வினைகள் வந்தெதிர்வாது புரியுமோ ? இவைகளில் எது உண்மையோ அவ்வுண் மையா முளவினைச் சற்று விவரிப்பாய் ! இருமைக்கண்ணும் என் ஆத்ம சகாயமாகி யெங்கணும் வியாபித்துள்ள பரம்பொருளே !

குறிப்புரை :—நின்னருளில்=நினது தண்ணருள் வெளிக்குளே மாயா விசித்ரமென்ன வோயுமோ=மாயாதேவியார் புரிகின்ற விசித்திரமா கிய உலக காரியாதி நடவடிக்கைகள் ஓய்ந்துபோமோ என்க.

கிர்த்திய கர்த்தர்=படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அரு ளல் என்கின்ற ஐந்தொழிலான் நடப்பிக்கும் பிரமனுதியர்.

விதண்டை=வீண்வாது புரிதல். சடவினை=அறிவிலாப் பொரு ளாம். உளவு=தந்திரம். (7)

அ. நில்லாது தேகமெனு நினைவுண்டு தேகநிலை
நின்றிடவு மௌனியாகி
நேரே யுபாயமொன் றருளினையை யோவிதனை
நின்றனுட் டிக்கவென்ருல்
கல்லாத மனமோ வொடுங்கியுப ரதிபெறக்
காணவிலை யாகையாலே
கையேற் றுணும்புசிப் பொவ்வா தெநாளுமுன்
காட்சியி லிருந்துகொண்டு
வல்லாள ராயியம நியமாதி மேற்கொண்ட
மாதவர்க் கேவல்செய்து
மனதின் படிக்கெலாஞ் சித்திபெற லாஞானம்
வாய்க்குமொரு மனுவெனக்கிங்
கில்லாமை யொன்றினையு மில்லாமை யாக்கவே
யிப்போ திரங்குகண்டாய்
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

பொழிப்புரை :—இந்தச் சரீரமானது நிலையற்ற தென்கிற ஞாபகம் எனக்குண்டு ; (ஆகையால்) இவ்வநித்திய சரீரமானது நிலைபெறுமாறு மௌன ஆசிரியராக எழுந்தருளி வந்து நேர்மையாயதோர் உபாயத்தை யோதிவைத்தீர்கள் ; அந்தோ !

இவ்வுபாயத்தினை ஓர் நிலையாக வருட்டிப்போ மெனின், கல்வி யறிவில்லாத வென் மனமானது அடக்கமாகி வெறுப்புறக் காண்கிலன் ; ஆதலினாலே கைப்பிச்சை யேற்றுண்ணும் ஆகாரம் ஒவ்வவில்லை ; இதனால்,

எந்த நாளும் நின் சந்நிதானத்திருந்து வந்து மிக்க வலிமைபெற்றுள்ளவாளாயும், இயம நியமமாதியாம் அட்டாங்கயோக பராளாயுள்ள மகா தவசிரேட்டர்கட்குப் பணிபுரிந்தொழுகி மனப்பான்மைக் கேற்றவாறுகச் சித்திகளனைத்தும் பெற்றுய்யலாகும் ; அன்றி ஞானசாதனமும் லப்தமாம். ஆனால், ஓர் மனுவொன்று மட்டும் கேட்டருள்க :—அஃதாவது அடிமைக்கு இங்ஙன் நினது திருவருட் செல்வ மொன்று மாத்திரம் இல்லாமையா யிருக்கிற குறையை நிறைவுசெய்து, அஃதில்லாமையாம் வறுமையை யோட்டி யருளுமாறு இந்த சமயம் கிருபை பாலித்தருளப் பிரார்த்திக்கின்றனன். இருமைக் கண்ணும் என் பிராண நாதராய் எங்கும் வியாபித்துள்ள பரம்பொருளே.

குறிப்புரை :—கல்லாத மனம்=தத்துவாராய்ச்சியிற் றேருத நெஞ்சம். உபாதி பெறக் காணவில்லை=வெறுப்புற் ருதுங்குதலாம், நிராசையினை யென்க. இயம நியமாதி யென்பன=நிட்டையோகத்தின் எட்டங்கமென்ப. இல்லாமை யென்பதை இல்லாமை யாக்குதலாவது :—ஆசிரியர்க்கில்லாமையாகிய ஞானைஸ்வரியத்திற் கேற்ற திருவருட் செல்வமாம். இதனை அநுக்ரகித்துவிட்டால், இல்லாமையென்ப தில்லாமையாய் விடும் என்பதாம். (8)

௯. மரவுரி யுடுத்துமலை வனநெற் கொறித்துமுதிர்
வனசருகு வாயில்வந்தால்
வன்பசி தவிர்த்துமனல் வெயிலாதி மழையால்
வருந்தியும் மூலவனலைச்
சிரமளா வெழுப்பியு நீரினிடை மூழ்கியுந்
தேகநம தல்லவென்று
சிற்சுக வபேட்சையாய் நின்னன்பர் யோகஞ்
செலுத்தினு ரியாம்பாவியேம்
விரவுமறு சுவையினெடு வேண்டுவ புசித்தரையில்
வேண்டுவ வெலாமுடுத்து
மேடைமா ளிகையாதி வீட்டினிடை வைகியே
வேறொரு வருத்தமின்றி
யிரவுபக லேழையர்கள் சையோக மாயினே
மெப்படி பிழைப்பதுரையாய்
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

பொழிப்புரை :—மரநாரினு லாக்குவித்த உடைதரித்தும், காடு பர்வ தாதிகளின் தானியங்களைக் கொறித்துக்கொண்டும், மற்றும் தம்பால் சிந்திக்கிடக்கும் சருகாதி தளிர்களைத் தன்னிடமிருந்தே யருந்தி கொடிய உதராக்கினியைத் தணிவித்தும், மற்றும் தீயினுலும் வெயிலாலும் மழை யினுலும் உண்டாந் துன்பங்களை யெல்லாம் சகித்தும், இன்னும், மூலாதார அக்கினியைச் சிரசுபரியந்தம் உண்முகமாகக் கிளப்பியும், அன்றிப் பல விசேட தீர்த்தாடனங்கள் செய்தும், இவ்வுடல் நமக்குச் சொந்தமல்ல வென்று தீர்மானஞ் செய்து மெய்ஞான சுகம்பெற ஆசைகொண்டவராக நினது மெய்யன்பர்களெல்லாம் இராஜ யோகத்தினைப் புரிந்து வந்தனர்கள்.

மகா பாவிகளாய யாங்களோ! ஆறுவகை இரசவர்க்கங்களோடுங் கலந்த இனிய ஆகாராதிகளை வேண்டிய அளவு உண்டு, இடையிலே நானுவித அலங்கார வஸ்திராபரணங்களும் பூண்டு, வசந்தமேடை உப்பரிகை முத லான விடங்களிலெல்லாங் கிடந்து புரண்டும், மற்றும் யாதாமொரு கஷ்டமு மின்றி இராப்பகலாக பெண்டுகளைக் கலந்தணைந்து சுகப்பட்டோம்; இவ்வாறுன நாம் எவ்வாறு கடைத்தேறுவது? கூறுவாய்? இருமைக் கண்ணும் எனது ஆன்ம சகாயனு யெங்கணும் வியாபித்துள்ள பரம் பொருளே!

குறிப்புரை :—மரவுரியாவது=மரப்பட்டை, மரநார் இவைகளால் செய்வித்த ஓர் ஆடையாகும். அறுசுவை=உப்பு, உவர்ப்பு, இனிப்பு, புளிப்பு, கார்ப்பு, துவர்ப்பு என்பனவாம்.

கரும்பினு மின்பங் காண்பான் கட்டறத் துறந்த மேலோர்
அரும்பொனுல் வெள்ளியார் செய் யணிகலன் பூணல் செய்யார்
விரும்பிய கொழுனர் தீர்ந்த மெல்லியள் போல நாளும்
இருந்தவஞ் செய்தி யாக்கை யிளைப்பதே கருமமன்றே. 1.

சூத்திர ராதியாகத் தொழுகுலத் தவரீருக
மூத்திரக்கு ழியிலாழ்ந்து மூழ்கிய பின்னரேனும்
காத்திரத் தானேரின்பங் கடையென விகந்துமூன்று
நேத்திரத் தானைநோக்கி நெடுவனம் புகுதல்வேண்டும். 2.

வையத் தாசையும் வானகத் தாசையுங்
*குய்யத் தாசையுங் கூறையி னுசையு
மெய்யி னுசையும் வேற வீட்டினேர்
ஐய னுசைக் ககப்படு சிந்தையார். 3.

என்றிவ்வாறுகப் "பெரியார் பலரும் பிழையெனப் பேசிய, அரிய நன்மொழியினை யகத்தினிற் கொண்டே, அவத்திற்கழித்தோ மாயுள்போ

*குய்யம் = உபஸ்தம்.

தெல்லாம், தவத்திற் கழியாது தாழ்ந்து போயினமே" என்றன்றே ஆசிரியர் மேற்பாசுரத்தால் கதறுகின்றமை நன்கு புலனாகின்றது. (9)

ய. முத்தனைய மூரலும் பவழவா யின்சொலும்
முகத்திலகு பசுமஞ்சளும்
மூர்ச்சிக்க விரகசன் னதமேற்ற விருகும்ப
முலையின்மணி மாலைநால
வைத்தெமை மயக்கியிரு கண்வலையை வீசியே
மாயா விலாசமோக
வாரிதியி லாழ்த்திடும் பாழான சிற்றிடை
மடந்தையர்கள் சிற்றின்பமோ
புத்தமிர்த போகம் புசித்துவிழி யிமையாத
பொன்னாட்டும் வந்ததென்றால்
போராட்ட மல்லவோ பேரின்ப முத்தியிப்
பூமியி லிருந்துகாண
எத்தனை விகாதம்வரு மென்றுசுகர் சென்றநெறி
யிவ்வுலக மறியாததோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

பொழிப்புரை :—முத்தினைப்போன்ற தந்தபந்திகளும், பவழ இதழ் போன்ற வாயினின்று தோன்றும் தீஞ்சொல்லும், வதனத்தணிந்துள்ள பசுமையான மஞ்சள்மினுக்கும், சொக்குதல் மிக்க காமவிரகத்தை யெழுமாறு தூண்டுதல்போன்று இறுமாந்தெழுந்துள்ள இரண்டு குடமனைய திவ்ய ஸ்தனங்களில் நவரத்ன ஆபரணாதிகள் பூண்டு தொங்கவும், அதுகண்ட எம் மனோ சித்தம் தம்பித்து நிற்கச்செய்தும், அன்றி இருவிழிவலையினை எம்மேல் வீசி வளைத்து மாயாசால கோலாகல சமுத்திரத்தில் மோகத்தால் அழுந்துமாறு செய்தும் வருகின்ற பாழ்ப்படுத்தும் சிறு இடையுடைய மடவார்களது கேவல சுகமோ, புதிய தேவாமிர்தத்தினை யருந்தி கண்ணிமைத்தல் செய்தவிலா நாட்டத்தையுடைய தேவலோகத்திலும் சேர்ந்ததெனின் அது மிக்க சங்கடமான காரியமாயல்லவோ முடிந்துவிடும் ? ஆதலினாலே, பரமானந்த ஆஸ்பதமாகிய முத்தி யின்பத்தினைத் தராநின்ற இம் மண்ணுலகத்திலேயே யிருந்து பெறுவோமெனின், வருமிடையூறுகளனந்த மாதலைக் கருதியே சுகமுனிவரர்கொண்ட கொள்கையினை இந்த உலகத்தார் அறிந்த விஷயமே ! இருமையின்கண்ணும் என் பிராணாதாரமாயுள்ள பரிபூரணமான பரவஸ்துவே !

குறிப்புரை :—மூரல்=பல். பவழவாய்=பவழம்போன்ற அதரத்தை யுடையவாய் என்ப. விரகசந்ததம்=காமவிகார ஆவேசம். நாலல்=தொங் குதல். மாயா விலாச மோகவாரிதி=மாயாதேவியின் சாலமாகிய மயக்கச் சமுத்திரம். உலகத்தார்=இங்கே உயர்ந்தோராவர்.

இந்த உலகத்திலே, மேற்கூறியதான மாயாகாரிய விசேஷடத்தால் தவத்திற்கு இடையூறுகிய மங்கையர்தம் கொங்கையா மலேயேறி விழுந்திறப் பதினும், ஒப்பற்ற தேவலோகஞ் செல்வோமென்றாலோ, ஆண்டும் இம் மாதர் பேயால் மயங்கித் தியங்கி மாயாவடுப்பெற்ற தேவேந்திராதியர்கள் பட்டபாடும் மெத்தவாகும், ஆதலால் ஆண்டுஞ் செல்ல வொண்ணுதென்று அஞ்சியே சுகர் பூர்வ ஞானத்தால் நிராசையுற்று நிட்டமலேக்கேகினர் என் பது வெளியாயது. (1)

௰௧. உன்னிலேயு மென்னிலேயு மொருநிலே யெனக்கிடந்
துளறிடு மவத்தையாகி
யுருவுதான் காட்டாத வாணவமு மொளிகண்
டொளிக்கின்ற விருளென்னவே
தன்னிலேமை காட்டா தொருங்கவிரு வினையினற்
ருவுசுக துக்கவேலே
தட்டழிய முற்றுமில் லாமாயை யகறற்
றடித்தகில பேதமான
முன்னிலே யொழிந்திட வகண்டிதா காரமாய்
மூதறிவு மேலுதிப்ப
முன்பினெடு கீழ்மே னடுப்பக்க மென்னுமன்
முற்றுமா னந்தநிறைவே
என்னிலேமை யாய்நிற்க வியல்புகூ ரருள்வடிவ
மெந்நாளும் வாழிவாழி
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே.

பொழிப்புரை :—உனதியல்பும் எனதியல்பும் ஒரேதன்மை யெனக் கொண்டு உண்மையறியா துளறித் திரிகின்ற கஷ்டத்தையுடையதாய்த் தன் சொரூபத்தைக் காட்டுதலில்லாமலுள்ள ஆணவமாயது, பிரகாசத்தினைக் கண்ணுற்ற வக்கணமே, தன்னம்சத்தையோடி யொளியச்செய்கின்ற காரிரு ளினைய தன்னியல்பைப் பதுங்கச் செய்தகல, நல்வினை தீவினையென்னும் இரு வினையாம் அலேகளுடனே பாய்ந்து பரவுகின்ற கடலானது தனது நிலேமாறு தலடைய, முழுமையும் சூன்யமாகும் மகாமாயையால் திட்பமெய்தி பற்பல

உலகமாறுதலான 'மூற்பட்ட சுட்டிறக்க' பெரியதோர் ஆகிர்தியைப்பெற்று, தன் பழய அறிவாயது மேன்மேலும் தோன்றுநிற்க, முன்னும் பின்னும் எனவும், கீழும்மேலும் இடையுமென்று கூறாத நிலைமுழுமையும் பரமானந்த நிறைவையே எனது நிச்சயமாய்க்கொண்ட அதின்கண் ஊர்ஜிதப்பட்டிருக் குமாறு எனக்கு ஓர் நன்மையான நிலையினைக் காட்டியருளிய திருவருளுரு வமானது எப்போதும் வாழுமாறுக; வாழுமாறுக; இருமைக்கண்ணும் பிராணுதாரமாயுள்ள பரிபூரண பரம்பொருளே!

ஆணவ விலக்கணம் :

ஆணவமல மான்மாவுக் கனுதியியற்கை யென்னின்
மாணவ சங்கின் வெள்ளை போலொருகாலு மாயா
வாணவமல மான்மாவுக் கனுதியிற் செயற்கை யென்னில்
காணும் வெண்மடிக் கழுக்குக் கலத்தல் போற்பினும் வந்தெய்தும்

இதுநிற்க; மாயையோ வென்றால்,

மாயை யிலக்கணம் :

மாயையே யுடலமாகு மாயையே கரணமாகு
மாயையே புவனமாகு மாயையே போகமாகு
மாயையே பொறிகளாகு மாயையே புலன்களாகு
மாயையே யண்டபிண்டம் யாவையு மாயையாமே. 1.

சாயைபோ லொத்த வாழ்வை மெய்யெனச் சந்தோடிக்குந்
தூய மெய்ஞ்ஞான வாழ்வைப் பொய்யெனத் தூடித்திட்கு
மாயவன் பிரமனீசன் யாரையு மயக்கஞ் செய்யுங்
காயமே மாயையானு வியாரிதைக் கடக்கவல்லார். 2.

ஆகையாலிந்த மாயை யறிவினை முழுது மூடித்
தேகமேயான் மாவென்றுஞ் சேயிழை மடவார் தங்கள்
போகமே மோக்கமென்றும் புந்தியைத் திரிவுபண்ணுஞ்
சோகம்பாவனை யாலித்தைத் தொலைப்பர்கள் சீவன் முத்தர். 3.

இங்ஙனம் மாயையைப்பற்றிப் பல பிரபல பெரியாரும் கூறியன போன்றே நம் நூலாசிரியரும் தம்மனுபவ ரீதியாக மாயையைச் சுத்த சூனிய மென்றார் போலும்.

யசுர் வேதம்—கைவல்யோப நிஷத்

அவனே, (அந்த பரமாத்வே) மாயையினுலே மோகிக்கப்பட்ட அந்தக் கரணத்தையுடையவனுய்ச் சரீரத்தையடைந்து சகலத்தையுஞ் செய்கிறுன்.

சுக்கில யசுர்வேதத்தில் நிராலம் போப நிஷத்

பிரம்மமே தன்னுடைய சக்தியாகிற பிரகிருதியினுலே (ஈஸ்வரனென் கிற) பெயரை வகித்து உலகங்களைச் சிருஷ்டித்து அதிலே அந்தரியாமி

யாய்ப் பிரவேசித்து ப்ரம்மா முதலானவர்களுடைய புத்தி இந்திரியங் களுக்கு வியாபகனாயிருப்பதினாலே ஈசுரனாகிறான், என்பவையால் நன்குண ரப்படும். (11)

---

## சச்சிதா னந்தசிவம்.

க. ப்ராரதி ககனப் பரப்புமுண் டோவென்று
படர்வெளிய தாகியெழுநாப்
பரிதிமதி காணச் சுயஞ்சோதி யாயண்ட
பகிரண்ட வுயிரெவைக்கும்
நேராக வறிவா யகண்டமா யேகமாய்
நித்தமாய் நிர்த்தொந்தமாய்
நிர்க்குண விலாசமாய் வாக்குமன மணுகாத
நிர்மலா னந்தமயமாய்ப்
போராது நிற்றிநீ சும்மா விருந்துதான்
பேரின்ப மெய்திடாமல்
பேய்மனதை யண்டியே தாயிலாப் பிள்ளைபோற்
பித்தாக வோமனதைநான்
சாராத படியறிவி னிருவிகற் பாங்கமாஞ்
சாசுவத நிஷ்டையருளாய்
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

பொழிப்புரை :—பூமண்டல முதலாக ஆகாயமண்டலம் வரையுளவோ வெனக்கூறுமாறு விளங்காநின்ற பரமாகாசமயமாய், அக்நியென்ன, சூரிய சந்திரனென்ன இப்பரிவாரங்கள் காண்டற்கியலாச் சுவயம் பிரகாசமாய், அண்டத்தின் எப்பக்கமுமுள்ள சகல ஜீவகோடிகளுக்கும் நன்றாக அறிவு மய மாய், அபின்னமாய், தனிப்பொருளாய், அழிவிலதாய், தொடர்பிலாததாய், குணரகிதனாய், மனவாக்குகளுக் கெட்டாததாய், மலமிலா வானந்த ரூபமாய் நீ அசைவிலாதுள்ளனை, அகக்கரண புறக்கரண செயலற்றிருந்து பேரின்ப முறாது பேயொத்த மனத்தினைப் பின்பற்றித் தாயற்ற தனையனைப் போன்று பைத்தியக்காரனாகவா ? மனதையான் அநுசரியா வண்ணமாகி அறிவைச் சார்ந்தொழுக நிருவி கற்பமாயுள்ள நிலையான நிஷ்டையை யனுக்கிரகிக்க வேண்டும் ; எங்கும் நிறைந்து அகண்டமாயுள்ள உண்மையறிவானந்த பர சிவமே !

குறிப்புரை :—மண்முதல் ஆகாய மீறாகவுள்ள ஐம்பூதங்களும் ஞானாகாயத்திலே சிறு அணுப்போன்று விளங்குமென்றார்; சோமசூரியாக்கினியென்னு மூன்று சுடர்க்கும் பிரகாசத்தினைக் கொடுப்பர் என்றார்; சகல செந்துக்களுக்கும் அறிவளிப்பரென்றார்: எங்கணும் அகண்டாகாரமாயுள்ளவர் என்றார்; அவ்வாறிருப்பினும் தனிப்பொருளென்றார்; சகலத்தினும் பொருந்தியிருந்தாலும் தொந்த மற்றவரென்றார்; தவிர குணரகிதரானவரென்றார்; மனவாக்குகளுக்கு எட்டப்படாத அரும்பொருளென்றார். ககனப் பரப்பு = ஆகாயவிரிவு அதாவது ஆகாயமண்டலம். எழுநா = அக்கி. பரிதி, மதி = சூரிய, சந்திரன். (1)

உ. குடக்கொடு குணக்காதி திக்கினை யுழக்கூடு
கொள்ளல்போ லைந்துபூதங்
கூடுஞ் சுருங்கிலைச் சாலேக மொன்பது
குலாவுநடை மனையைநாறும்
வடக்கயிறு வெண்ணரம் பாவென்பு தசையினுன்
மதவேள் விழாநடத்தி
வைக்கின்ற கைத்தேரை வெண்ணீர்செ நீர்கணீர்
மலநீர்பு ணீரிறைக்கும்
விடக்குத் துருத்தியைக் கருமருந் துக்கூட்டை
வெட்டவெட் டத்தளிர்க்கும்
வேட்கைமர முறுகின்ற சுடுகாட்டை முடிவிலே
மெய்போ லிருந்துபொய்யாஞ்
சடக்கைச் சடக்கெனச் சதமென்று சின்மயந்
தானகி நிற்பதென்றோ
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

பொழிப்புரை :—கிழக்கு மேற்கு முதலான திசைகளை ஓர் உழக்கின் கண்ணே அடங்கச் செய்வதுபோன்று, பஞ்சபூதங்களானவை சேர்ந்துள்ளதான சிறிய குடிசலை, ஒன்பது பலகணி (சன்னல்) கள் விளங்கியுள்ள நடக்கும் வீட்டினை, தோற்றமாகவுள்ள வடக்கயிறு வெண்ணரம்பாகவும் எலும்பு, மாம்சாதிகளாலே மன்மதனுவான் உற்சவாதி செய்விக்கும் சிறிய தேரினை, கோழைநீர், உதிரநீர், நேத்திரநீர், சிறுநீர், புண்ணின்றொழுகு நீர் ஆக இவை முதலியவைகளைச் சிந்துகின்ற தசைத் துருத்தியினை, ஜனனமருந்துக் கூட்டினை, சேதிக்கச் சேதிக்க வளர்ந்தோங்காநின்ற ஆசைப்பெருக்காம் விருக்ஷாதிகள் வளர்கின்ற மயானத்தை, அநித்தியமாக அழிந்துபோகின்ற பொய்யுடலை நித்தியமென்று கருதியும், ஞான அம்சமே உண்மையென்று நிச்சயித்

துணர்ந்து தனிமையாயிருப்பது என்று கொலோ! எங்கும் நிறைந்து அகண்டமாயுள்ள அறிவானந்த பரசிவமே!

குறிப்புரை :—குடக்கு = மேற்கு. குணக்கு = கிழக்கு. சாலேகம் = பலகணி, சன்னல், அல்லது துவாரம். விழா = உற்சவம். கைத்தேர் = சிறு தேர். விடக்கு = தசை. கருமருந்து கூட்டை = கருவாகிய மருந்துள்ள கூட்டினை. வெட்டவெட்டத் தளிர்ப்பது = ஆசையாகிய மரம். சடக்கை = உடம்பை. சடக்கென = பொய்யென்று. சின்மயர்தானுகி = தான் ஞானமயமாகி. நிற்பது = நிலை பெற்றிருப்பது. (2)

ரு. பாகத்தி னற்கவிதை பாடிப் படிக்கவோ
பத்திநெறி யில்லைவேத
பாரா யணப்பனுவன் மூவர்செய் பனுவலது
பகரவோ விசையுமில்லை
யோகத்தி லேசிறிது முயலவென் றற்றேக
மொவ்வாதி லூண்வெறுத்தால்
உயிர்வெறுத் திடலொக்கு மல்லாது கிரியைக
ளுபாயத்தி னற்செய்யவோ
மோகத்தி லேசிறிது மொழியவிலை மெய்ஞ்ஞான
மோனத்தி னிற்கவென்றால்
முற்றாது பரிபாக சத்திக ளனேகநின்
மூதறிவி லேயெழுந்த
தாகத்தி லேவாய்க்கு மமிர்தப்ர வாகமே
தன்னந் தனிப்பெருமையே
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

பொழிப்புரை :—இலக்கணங்களை தெரிந்து துதி செய்யுட்களைப் பாடுதல் செய்வோமென்றால் என்பால் பக்திமார்க்க மென்பதே கிடையாது! போகட்டும், வேத பாராயணங்களாகிற திருவாசகம், திருக்கோவையார், என்ன, திருத்தொண்டர் சிகாமணிகளாகிய மூன்று நாயன்மார்களால் அருளிச்செய்யப் பெற்ற தமிழ்வேத மென்னும் தேவாராதிகள் என்ன இவைகளை நன்றாக ஓதல் செய்வோமென்றால் தகுந்த பண்முறைகள் தெரிந்தோமில்லை; இவையன்றி யோக சாதனை சாதிப்போ மெனிலோ அதற்குரிய இலக்கணமாகிய ஆகார பத்திய வகையால் உணவைக் குறைத் துண்ண வேண்டுதலின் சரீரம் வயப்படாது! அன்றி உணவை வெறுத்துத்

தன்ன, அதனுல் உயிரையும் வெறுக்கவேண்டி வருகிறது! ஆகவே அதுவுங் கூடியதாயில்லை.

இதுவும் போகட்டும்! மற்றும் கிரியா நியமங்கள் செய்வோமென்ருலோ, மாயா மோக போகாதிகள் தணிந்திருக்கவில்லை; இதுவும் நிற்க, உண்மையாம் ஞானமார்க்கமாய மௌனத்தைக் கைக்கொள்வோமென்ருலோ, அது முடிவடைதல் அசாத்தியம்! (அன்றி, அதற்கேற்ற பரிபக்குவ சத்திகளோடு முரண்பட்டுத் துன்புற இயலாதாதலினுலே) ஆகவே, நினது காரியமாய அரிய ஞானமார்க்கத்தால் ஏற்படக்கூடிய முத்தி அவாவில் பொருந்தவரும் அருளமுதப் பெருக்கே! ஒப்பற்ற பெருமைவாய்ந்த பெம்மானே! எங்கும் நிறைந்துள்ள உண்மையறி வானந்த பரசிவமே!

குறிப்புரை:—பாடுங் கணக்கறிந்து பாடித் துதிக்க பத்திமார்க்கமில்லை; தமிழ் வேதமாகிய தேவார திருவாசகாதிகள் ஓத நல்லிசையில்லை; யோகாப்யாசஞ் செய்ய சரீரம் ஒத்து வாரா; ஆகாராதிகளையும் வெறுத்து, அதனுல் ஆன்மாவையும் வெறுக்க நேரும்; கிரியா பூசைகள் புரிய மாயா விருப்பு குறையவில்லை. அன்றி, ஞான வதுவாய மோனத்தைக் கொள்ள முடிவுருது; ஏன்? பரிபாக மூல மாயாசத்திகள் பலர் பலவாறு திரிபு செய்வார்கள்; ஆகையால், என்னறிவிலெழுந்த ஞானதாகத்தில் பொருந்தும் பேரமுதப் பெருக்கே! ஒப்பற்ற ஒரு பெருமையோய்! உண்மையறி வானந்த சிவமே! கிருபை புரிவாயாக என்பது முடிவுரை யென்க.

தமிழ் வேதாசிரியர்கள்=மணிவாசகர், ஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர் என்பார். இசை=ஈண்டு பண்முறை. மோனம்=ஞானமுத்திரை. மௌன மென்பதே மோனமென்பது. (3)

ச. இமையளவு போதையொரு கற்பகா லம்பண்ணு
மிவ்வுலக மெவ்வுலகமோ
என்றெண்ணம் வருவிக்கு மாதர்சிற் றின்பமோ
வென்னின்மக மேருவாக்கிச்
சுமையெடுமி னென்றுதான் சும்மாடு மாயெமைச்
சுமையாளு மாக்கிநாளுந்
தூர்ப்புத்தி பண்ணியுள நற்புத்தி யாவையுஞ்
சூறையிட் டிந்த்ரஜாலம்
அமையவொரு கூத்துஞ் சமைந்தாடு மனமாயை
யம்மம்ம வெல்லவெளிதோ
அருள்பெற்ற பேர்க்கெலா மொளிபெற்று நிற்குமீ
தருளோவ லாதுமருளோ

சமயநெறி காணுத சாக்ஷிநீ சூக்ஷ்மமாத்
தமியனேற் குளவுபுகலாய்
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

பொழிப்புரை:—"மனமாயை என்பது, கண்ணிமைக்கும் அவ்வளவு அற்ப நேரத்தினை ஓர் கற்பாந்த காலமாகத் தோற்றச் செய்யும். அந்தோ! இந்த உலகத்தை என்ன உலகமெனக் கூறுவது!" என்பதான ஓர் ஆச்சரியத்தைத் தோற்றச் செய்து மலைப்பிக்கும்; அன்றி, மங்கையர் சங்கம ஆனந்தமோவென்றால், மகாமேருபர்வத மதனை பெரியதாகுமாறு செய்து அச் சுமையைத் தூக்குங்களென்று எம்மனோரைச் சும்மாடாகவு மாக்குவித்து, அல்லாது அச் சுமையெடுக்கும் ஆளாகவுஞ்செய்து நாடோறும் தீயவறிவினை வளர்ப்பித்து ஏற்கெனவேயுள்ள நல்ல அறிவினையுமழித்து தன்னரசு நாடாக இந்திரஜாலம் போன்றதோர் பேய்க் கூத்துமாடும்படிக்குள்ள அம்மன மாயையின் சுபாவத்தினை அம்ம! என்னென்று சொல்வது! ஆச்சரியம்! அதனைவாய் கொண்டுரைக்க வகையல்ல!

ஆகவே, இத் தன்மையாய மனமாயையை யாவரால் ஜெயம் பெறக் கூடும்! நினது திருவருள் கைவரப் பெற்றவர்கட்கும் இம்மாயை முன்னதாகப் பிரகாசித்துள்ளதாகும்; இது திருவருட் சம்மதமோ! அன்றி அஞ்ஞானமயமாம் மருள்தானோ! அன்றியாதோ! ஆகையால் சமஸ்த சமயங்களுக்கும் அகப்படாத சாக்ஷியாயுள்ள நீ இதன் உண்மையான தன்மையை எளியேற்குத் தயைகூர்ந்தருளிச் செய்யுமாறு வேண்டுகின்றனன். எங்கும் நிறைந்து யாவையுமாய், அறிவானந்தமாயுமுள்ள பரசிவமே.

" மகமா யைகளைந் திடவல் லபிரான்
முகமா றுமொழிந் துமொழிந் திலனே
யகமா டைமடந் தையரென் றயருஞ்
சகமா யையுணின் றுதயங் குவதே."—என்றார் அருணகிரியார்.

இதனால், மாயாமனத்தினை தன் வயமாக்கிக்கொண்டு ஒரு நிமிட நேரத்தைக் கற்பகாலமாச் செய்து இவ்வுலக வாழ்வாம் சாகரத்திலாழ்த்துவதுமாயுள்ள மாயா கற்பித உலகம் என்ன உலகமோ வெற்று பிரமை கொளச் செய்யும் சித்திர விசித்திர கோலாகல ஜால யேதுவாயும், அருளுடையர்க்கு அருட்பெருஞ்சோதியாயும் விளங்கி வருவது மிதுவானதால் இதனை இன்னனவென்ன எண்ணத்தக்க வல்லவென்று இந் நூலாசிரியர் எம்மானையுக்தி பூர்வம் வினுதல் செய்யலாயினரென்க. (4

ரு. இனியேது மெமக்குனருள் வருமோ வெனக்கருதி
யேங்குதே நெஞ்சமையோ

இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்பரென்
றெண்ணவோ திடமில்லையே
அனியாய மாயிந்த வுடலைநா னென்றுவரு
மந்தகற் காளாகவோ
வாடித் திரிந்துநான் கற்றதுங் கேட்டது
மவலமாய்ப் போதல்நன்றோ
கனியேனும் வறியசெங் காயேனு முதிர்சருகு
கந்தமூ லங்களேனுங்
கனல்வாதை வந்தெய்தி னள்ளிப் புசித்துநான்
கண்மூடி மௌனியாகித்
தனியே யிருப்பதற் கெண்ணினே னெண்ணமிது
சாமிநீ யறியாததோ
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

பொழிப்புரை :—(எவ்வளவோ காலமாக என் குறையை அடுத்தடுத்து எடுத்தெடுத்து நின் திருவருட் சமுகத்தில் விண்ணப்பித்தும் திருவருள் நோக்க மின்மையால்), இனியேது! எனக்கு நினது திருவருள் கிடைக்கப் போகிறதா! என்றெண்ணி யென்மனமானது யேங்கி வருந்துகின்றதே! அந்தோ! காலநிலையோ, இன்றிருந்தவரை மறு நாளிருப்பரென எண்ணற்கு ஏதுவாயில்லையே! அதாவது (அவ்வளவு அநித்தியமா யிருக்கிறதே) ஆகை யால் இச் சரீரத்தை (நின் திருவருட் செல்வத்திற்குப் பாத்திரமாக்காது) ஆக் கிரமித்து வருகிற இயமதர்மனுக்கு ஆட்படுமாறோ! யான் (நாலா பக்கங் களிலும்) ஓடியாடி சிரமப்பட்டு கல்வி நூல்களைக் கற்றுங் கேள்விகொண்ட திருந்ததும் பயனடைதலின்றிப் பாழ்பட்டுப் போதல் நீதியோ!

ஆகையால் இனி, (முன்னைய தத்துவ சேஷ்டிதங்களுக் கேதுவாயி ருந்த மிதமற்ற ஆகாராதிகளை யொழித்து) கேவலம் காய்கனியையாவது, அல்லது கந்தமூலங்களையாவது, மற்றும் மாத்தடியிற் சிந்திக்கிடக்கும் சருகு களையாவது பசிநோய்த் தோன்றிய காலத்துச் சேகரித்துண்டு யான் கண் களை மூடிக்கொண்டு ஞானயேதுவாய மோன நிலையடைந்து யேகனுயிருத் தற்கு இச்சைகொண்டுள்ளேன், இந்த என் மனோ நிலையினை சர்வாந்தரியாமி யாயுள்ள கடவுளாம் தமக்குத் தெரியாததல்லவே? எங்கும் நிறைந்து அகண் டமாயும் அறிவானந்தமாயுமுள்ள பரசிவமே!

குறிப்புரை :—ஆசிரியர், தம் காலப்போக்கு அவமே செல்லலானும், அன்றிச் சரீரம் எங்கு நழுவிவிடுமோ என்ற ஐயப்பாட்டாலும், கற்றுக்கேட் டனவனைத்தும் பாழ்பட்டுப் பிராணனை நமனூர்க்கு அர்ப்பணஞ் செய்தற் கஞ்

சியும், இனிச் சத்தாகாரம் புசித்து வருதலை யொழித்துக் கருவிகரணாதிகளை யொடுக்கி வசப்படுத்துவான் கருதி கானகச் சருகுகாய்கனி கிழங்குகளை யருந்தி மனமாதி கரணங்களைத் தன்வசமீர்த் தடக்குவான் கருதியும், இதன் மேல் தான்றனிருத்தலால் எவ்வாற்றானும் மனம் ஒருமைப்பட்டுத் திருவருளுக்குப் பாத்தியப் படலாமென்றுங் கருதியே இங்ஙனம் தம்மநுபூதி கிரமத்தைத் தம் மனோசாக்ஷியாம் பரம்பொருளுக்கு விண்ணப்பித்தன ரெனப் புலனாகின்றதறிக. (5)

சா. மத்தமத கரிமுகிற் குலமென்ன நின்றிலகு
வாயிலுடன் மதியகடுதோய்
மாடகூடச்சிகர மொய்த்தசந் திரகாந்த
மணிமேடை யுச்சிமீது
முத்தமிழ் முழக்கமுடன் முத்தநகை யார்களொடு
முத்துமுத் தாய்க்குலாவி
மோகத் திருந்துமென் யோகத்தி னிலைநின்று
மூச்சைப் பிடித்தடைத்துக்
கைத்தல நகப்படை விரித்தபுலி சிங்கமொடு
கரடிநுழை நூழைகொண்ட
கானமலை யுச்சியிற் குகையூ டிருந்துமென்
கரதலா மலகமென்னச்
சத்தமற மோனநிலை பெற்றவர்க ளுய்வர்காண்
சனகாதி துணிவிதன்றோ
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

பொழிப்புரை :—வெறியினையுடைய மதயானைகள் மேகசாலம் போன்று நிலைபெற்றுள்ள முற்றங்களையுடையதும், சந்திரவிம்ப மத்திய பாகத்தை முட்டுவது போன்றுமுள்ள மாடமாளிகைகளும், சிகரங்களையுமுடையதாகி, சந்திரகாந்தக் கற்களாலாக்குவித்த இரத்னங்கள் பதித்த மேடையினடுவில் மூவகைத் தமிழ்ப் பிரசங்கங்களோடு கூடிய முத்தினைப் பழிக்கும் பற்கள்வாய்ந்த மங்கையரோடு மிக்க அன்யோன்யமா யளவளாவி ஆடல் பாடலோடு மனமோகன சாகரத்தில் ஆழ்ந்து கிடப்பினும், அன்றி, யோகசாதனைசெய்து பிராணவாயுவையடக்கி, கைகளிலே நகமாகிய ஆயுதங்களையுடைய கரடி, புலி, சிங்கமுதலியன தங்குமிடமாய அடர்ந்த கடுங்காட்டிலும், பர்வத சிகரத்திலும், மலைக்குகையின் கண் வசித்திருந்தும் என்னவாகும்? உள்ளங்கையி னெல்லிக்கனியொப்ப நிர்சப்தமாய் மௌன நிலை நின்றோர்களே நித்தியத்துவம் பெற்றோராவர். தவிர, சனகாதியர்களின் முடிவு

இஃதொன்றேயாம் ; எங்கும் நிறைந்து அகண்டமாயும் அறிவானந்தமாயு முள்ள பரசிவமே !

குறிப்புரை :—மோக்ஷாபேக்ஷை கொண்டுள்ளார் எவ் வாச்சிரமிகளா யிருப்பினும் சரியே ; ஆனால் அவர்கள் முக்கியமாகப் பெறவேண்டுவது முத்தி யின்பமே யாகும் ; என்னும் இக் கருத்தினையே சனகாதி நால்வரும் மற்று முள்ளோரும் கொண்டதிதுவே யென்றனர் போலும். நூழை=துவாரம். மத்தம்=வெறி. மதியகடு=சந்திரனது நடுப்பாகம்.

மோனமே ஞானவரம்பாதலின் ஈண்டு அதனையே பிரதானமாகக் கூறி யருளினர்.

பொல்லாத மாதர் மயக்கத்திலாழ்ந்து பொருந்துகினும்
வில்லார் மணிச்சிலம் பேறித்தவங்கள் விரும்புகினு
நல்லார் தொழுமுன்றன் பாதார விந்தத்தினுட்டம் வைத்திட்
டெல்லாமும் நின் செயலென்றிருப்பேன் கச்சியேகம்பனே.—

என்றார் ஓர் பெரியார். (6)

எ. கைத்தலம் விளங்குமொரு நெல்லியங் கனியெனக்
கண்டவே தாகமத்தின்
காட்சிபுரு ஷார்த்தமதின் மாட்சிபெறு முத்தியது
கருதினனு மானமாதி
உத்திபல வாதிரு விகற்பமே யில்லையா
லொன்றோடிரண்டென்னவோ
உரையுமிலை நீயுமிலை நானுமிலை யென்பது
முபாயநீ யுண்டுநானுஞ்
சித்தமுள ஞானில்லை யெனும்வசனம் நீயறிவை
தெரியார்க டெரியவசமோ
செப்புகே வலநீதி யொப்புவமை யல்லவே
சின்முத்தி ராங்கமரபில்
சத்தமற வெனையாண்ட குருமௌனி கையினுற்
றமியனேற் குதவுபொருளே
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

பொழிப்புரை :—கையகத் தேயுள்ள நெல்லிக்கனி செவ்வனே விளங் குமாறு போல, நமது சதுர்வேதாகமங்களின் சாரமாகக் கண்டவை நான்கு வகையான பரமப்ரயோஜனமாம் ; அந் நான்கனுள் மிகச் சிறந்தது வீடு எனும் மோக்ஷமாகும். அத்தகைய மோக்ஷம் என்கின்ற வீட்டின்பத்தைப்

பற்றி யோசிக்க, அனுமான முதலாயுள்ள பிரமாண யுக்திகள் பற்பலவாய் முடியும். ஆகவே, நிருவிகற்பசமாதி யனுபோகத்திலே அந்த யுக்தியானது பயனற்றதாகும்; ஆதலினாலே ஒன்றுடனே இரண்டென்னற்குச் சொன் மாத்திரமுங் கிடையாதாகும்; நீயெனலும் அமையா, அன்றி யான் எனலும் அமைவுறாது; ஆகவே இவ்வாறு கூறுவதும்கூட, தாந்திரீகமேயாம். எவ்வா றெனின், நீயெனலும் உள்ளது, யானுமுள்ளனன், இங்ஙனமாக, யானென்ப தாம் ஓர் பொருளை நீ நன்கறிவாய்; ஆனால், தெரியாதவர்கள் தெரிந்து கொள்ளக் கூடியதாகவில்லை; சொல்லாநின்ற வேதாகமாதிகளாற் கூறப்பட் டுள்ள மோக்ஷமார்க்க நீதிக்கு அது பொருந்து மாறல்லவாகுமே; ஞான முத்திரையை அங்கமாக் கொண்டுள்ள மௌன மரபினராலே சொல்லடங்கு மாற்றால் என்னை யாண்டருளிய மௌனகுருவின் திருக்கரங்களால் எளி யேற்குக் குறிப்பித்து அருளிச்செய்த பொருளே! எங்கும் நிறைந்து அகண் டமாயும் அறிவானந்தமாயுமுள்ள பரசிவமே!

"அதிரகசியத்தான் மேலா மறிவினை விளக்கிவித்தோய்
கதிபிறிதில்லை யென்னைக் காட்டிய கருணைமேரு
பதிகுடிகொண்ட ஞான தேசிகப்பரமாவுன்னை
விதிமுறை பணிவனேக்கி விம்முவனென் செய்கேனே"—

என்றோதினர் பிறரும். (7)

அ. காயாத மரமீது கல்லேறு செல்லுமோ
கடவுணீ யாங்களடியேம்
கர்மபந் தத்தினாற் சன்மபந் தம்பெறக்
கற்பித்த துன்ன தருளே
வாயார வுண்டபேர் வாழ்த்துவது நொந்தபேர்
வைவதுவு மெங்களுலக
வாய்பாடு நிற்கநின் வைதிக வொழுங்குநினை
வாழ்வதினாற் பெறுபேறுதான்
ஓயாது பெறுவரென முறையிட்ட தாற்பின்ன
ருளறுவது கருமமன்றாம்
உபயநெறி யீதென்னி னுசிதநெறி யெந்தநெறி
யுலகிலே பிழைபொறுக்குந்
தாயான கருணையு முனக்குண் டெனக்கினிச்
சஞ்சலங் கெடவருள்செய்வாய்
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

பொழிப்புரை :—காய் காய்த்தலில்லாத விருட்சத்திலே கல்லெறிதலு முண்டோ! தாமோ கடவுளர். யாங்கள் அடிமைகள்; இரு வினைக்கட்டி ஞலே ஜனனக் கட்டுப்பாடுண்டாகக் கற்பனை செய்துள்ளது நினது திருவருளே! வாய் நிறையப் புசித்தவர்கள் கொண்டாடித் துதி செய்வதும், மனநோகப் பெற்றவர்கள் நிந்தை செய்வதும் எங்கள் உலகத்தாரது வழக்கவொழுக்கமாகும். இது நிற்க; தமது வைதிகாசார முறைகளானவை தம்மைப் பெரிதும் வாழ்த்துமாயின் பெறுதற்கான மோக்ஷ சாம்பிராச்சியத்தைச் சிறிதுந் தாழ்க்காது பெறுவரென முறை கூறியதால் அதன்மேல் குறைகூறுதல் நல்லகாரிய மன்றென்க; இது நிற்க;

இருவகையெனு மார்க்கங்கள் இவ்வாறுஞல், இவைகளில் நன்முறையும் தீயமுறையுமாயின் விசேடமார்க்கமானது எதுவோ? இவ்வுலக குற்றங்குறைகளனைத்தையும் தாங்குந் தயாளுவாய தாய்போன்ற கருணைகடாக்ஷமும் நின்பாலுள்ளதென்பது விகசிதம்; ஆகையிஞலே இனி அடியேனுக்குரிய மஞேசலனங் கெடுவதாகத் திருவருள் பாலித்தருளுமாறு வேண்டினன். எங்கும் நிறைந்து அகண்டாகாரமாயுள்ள அறிவானந்த பரசிவமே!

குறிப்புரை :—கன்மமென்னும் பிணிப்புண்ட ஆன்மாக்களுக்கு பிறத்தலிறத்தலாதியளவு முண்டாயிருத்தலால் அதனைச் சேடிக்கச் செய்ததுவும் தம்மருளாதலிஞலே எங்களது உளறல் குளறல்களை யெல்லா மன்னித்துத் திருவருள் சுரத்தல் வேண்டுவது நின் கருணைக்கு இலக்ஷணமெனக் கொண்டு இனியாவது என்மஞேகிலேசத்தை யடக்குவிக்குமாறு பிரார்த்திக்கலாயின னென்பது விளக்குகின்றது. (8)

௯. இன்னம் பிறப்பதற் கிடமென்னி னிவ்வுடல
  மிறவா திருப்பமூலத்
தெழுமங்கி யமிர்தொழுகு மதிமண்ட லத்திலுற
  வென்னம்மை குண்டலினிபால்
பின்னம் பிறக்காது சேயென வளர்த்திடப்
  பேயேனை நல்கவேண்டும்
பிறவாத நெறியெனக் குண்டென்னி னிம்மையே
  பேசுகர்ப் பூரதீபம்
மின்னும் படிக்ககண் டாகார வன்னைபால்
  வினையேனை யொப்புவித்து
வீட்டுநெறி கூட்டிடுதன் மிகவுநன் றிவையன்றி
  விவகார முண்டென்னிலோ

தன்னந் தனிச்சிறிய னாற்றிலேன் போற்றிவளர்
சன்மார்க்க முத்திமுதலே
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

பொழிப்புரை :—இனியும் யான் பிறந்திறத்தற்கு கன்மமுளதென்னில், இவ்வுடல் மாயாதிருக்குமாறாக மூல நிலையில் தோன்றும் அனலானது தேனமிர்தம் சிந்தும் சந்திர மண்டலத்தி லிருக்குமாறு எனது அருளன்னையாராகிய குண்டலி சத்தியார்பால் பேதமுண்டாகா வண்ணம் ஏனைப்பிள்ளை போல் காத்து வளர்த்தற்குப் பேயினை நிகர்த்த அடியவனை ஒப்புவித்தல் வேண்டும். அன்றியும், இனிப் பிறவாத்தன்மை யெனக்குச் சித்திக்குமாயின், இப் பிறப்பிற்றானே சொல்லாநின்ற கர்ப்பூரசோதி போன்று ஒளிசெயுமாறு அகண்டித சொரூபத்தாயினிடத்தே நீயனேனையும் அடைக்கலப்படுத்தி ஒப்பற்ற முத்தி வழியில் செலுத்துமாறதாகச் செய்தல் மாநன்றாமென்க. இவ்வாறின்றி ஏதும் வழக்குண்டென்பிரேல் துணையிலாத்தனிச் சிறியவன் பொறுத்திருக்க வல்லனல்லன்; மிகவும் காத்து வளர்ப்பிக்கின்ற சன்மார்க்க ஏதுவாயமோக்ஷ ஆஸ்பதனே! எங்கும் நிறைந்து அகண்டமாயும் அறிவானந்தமாயுமுள்ள பரசிவமே!

குறிப்புரை :—மூலத்தெழுமங்கி = மூல நிலத்தினில் மூளத்தெழுஞ் சோதியை யென்க. குண்டலினிபால் = குண்டலி சத்தியென்னும் அருளன்னையாரிடத்து. பின்னம் பிறக்காது = பேதபாவனை யுண்டாகாவண்ணம். பிறவாநெறி = இனிப்பிறத்தலிலா ஞானமார்க்கம். வீட்டுநெறி = மோக்ஷ மார்க்கம். அகண்டம் = கண்டமாகாதது. அகண்டாகாரம் = பிரமாண்ட சொரூபம். முத்தி முதல்வன் = மோக்ஷத்திற்கு மூலகாரணன். கர்ப்பூர தீபம்போல் = நித்திய தத்துவ சுத்த சுயஞ்சோதி சொரூபமாக.

வெண்பா.

எல்லாஞ் சிவமென்னு மெண்ண முனக்குண்டே
லெல்லா நலனுமுனக் கெய்துமே—யெல்லாஞ்
சிவமன் றெனுமுணர்வு சிந்தையிடை யுண்டேற்
பவம்வந் தனைவிழுங்கும் பார்.—என்றனர் பிறரும். (9)

ய. வேதாவை யிவ்வணம் விதித்ததே தென்னினுன்
வினைப்பகுதி யென்பனந்த
வினைபேச வறியாது நிற்கவிவை மனதால்
விளைந்ததான் மனதைநாடில்

போதமே நிற்குமப் போதத்தை நாடிலோ
போதமுநி னல்விளக்கம்
பொய்யன்று தெய்வமறை யாவுமே நீயென்று
போக்குவர வறநிகழ்த்தும்
ஆதார வாதேய முழுதுநீ யாதலால்
அகிலமீ தென்னையாட்டி
யாடல்கண் டவனுநீ யாடுகின் றவனுநீ
யருளுநீ மௌனஞான
தாதாவு நீபெற்ற தாய்தந்தை தாமுநீ
தமருநீ யாவுநீகாண்
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

பொழிப்புரை :—பிரமதேவனைப் பார்த்து, (நீ என்னை) இவ்விதமாகச் சிருஷ்டிசெய்தது என்ன காரணமெனிலோ, நின் கர்மாவின் பயனே யென்று கூறுவன்; (அவ்வினையினைக் கேட்கலா மென்றாலோ) அதற்குப் பதில் கூற வாயிலாச் சொன்மாத்திரமாயுள்ளது; அது நிற்க; (அவ்வினையும்) மனத்தினாலே ஏற்பட்டதாதலால், அம்மனத்தினை நோக்கின் ஆண்டு அறிவே காரணமாயுள்ளது; ஆகவே அவ்வறிவினை நோக்கிடின், அந்த வறிவானதும் நின்னாலேற்பட்டதாக விளங்குகின்றது; ஆகவே, அது பொய்மையல்ல; பரமேசுரனால் அருளிச் செய்யப்பெற்ற நான்கு வேதங்கள் அனைத்தும் தாமேயெனச் சந்தேகம் நீங்க நிலை நாட்டும்; ஆதாரமும் ஆதேயமும் நீயே யாகலான் இவ்வுலகத்தின்மீது யென்னையாடுமாறு செய்து அவ்வாடலாம் வாழ்க்கை நிகழ்வைப் பார்ப்பவனும் நீயாயிருக்கின்றனை; அன்றி யாடுவோனும் நீயாயே யுள்ளனை; அன்றித் திருவருட்சத்தியும் நீயாயுள்ளாய்; மௌனமாயுள்ள ஞானவள்ளலானவனும் நீயேதான்; மற்றும் என்னைப் பெற்று வளர்த்த மாதாபிதாவும் நீயேயாம்; இன்னும் உற்றார்களும் நீயே யாகும், பின்னும் எனக்கினிய எல்லாமும் நீயாகவேயுள்ளாய். எங்கணு நிறைந்து அகண்டமாயுள்ள அறிவானந்த பரசிவமே !

குறிப்புரை :—வேதத்திற் குரியவனாதலால் பிரமனை வேதா வெனலாயிற்று. வினைப்பகுதி=கர்மாவின்பலப் பங்கு.

வினையானது ஈண்டு சடமாகையாலே பேசவியலா தென்றனர்.

ஆதாரம்=எவற்றினுக்கும் ஸ்தானம். ஆதேயம்=அவ்விடத்திலே நடவாநின்ற காரியம். ஞானதாதா=ஞானைஸ்வரியமளிக்கும் வள்ளற் பெருமான் என்க.

எங்குஞ் சிவமயமா யெங்குஞ் சுகவடிவா
யெங்குஞ் சிவலோகத் தெல்லையா—யெங்குஞ்
சிவனையே கண்டு தெரிசித்தன் மாறு
சிவரூப மென்றே தெளி.—என்றனர் பிறரும். (10)

௰௧. கொந்தவிழ் மலர்ச்சோலை நன்னீழல் வைகினுங்
குளிர்தீம் புனற்கையள்ளிக்
கொள்ளுகினு மந்நீ ரிடைக்கிளைத் தாடினுங்
குளிர்சந்த வாடைமடவார்
வந்துலவு கின்றதென முன்றிலிடை யுலவவே
வசதிபெறு போதும்வெள்ளை
வட்டமதி பட்டப் பகற்போல நிலவுதர
மகிழ்போதும் வேலையமுதம்
விந்தைபெற வறுசுவையில் வந்ததென் வமுதுண்ணும்
வேளையினு மாலைகந்தம்
வெள்ளிலை யடைக்காய் விரும்பிவேண் டியவண்ணம்
விளையாடி விழிதுயிலினுஞ்
சந்ததமு நின்னருளை மறவா வரந்தந்து
தமியேனை ரக்ஷைபுரிவாய்
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

பொழிப்புரை:—கொத்துக்கள் அலர்ந்த மலர்ச் சோலைகளின் நல்ல நிழலின்கண் வதிந்திருந்தாலும், குளிர்ச்சியாகிய மதுரமுள்ள தண்ணீரைக் கரங்கொண்டு எடுத்தருந்துகினும், அன்றி அத் தண்ணீரிலே துளைந்து ஜலக்கிரீடை செய்யினும், குளிர்ந்ததான சந்தன மணங் கமழும் வசந்த காற்றானது, மாதர்கள் உல்லாசமாக வந்துலவுவது போல முற்றத்திலே யுலவா நிற்கத்தக்க அதியுன்னத மாடமாளிகைகளை யுடைத்தா யிருக்கும்போதும், தாவள்ய மானதும் வட்டமானதுமான சந்திரன் நண்பகலனைய நிலவொளி வீசுங்கால் மனங்களித்தும், மற்றும் கடலிற் பிறந்த அமிர்தமானது அதிசயிக்குமாறு அறுவகைச் சுவைகளோடுங் கூடிவந்த தென்னுமாறு போனக மருந்து போழ்தும், பின்னர், புஷ்பமாலையென்ன, சந்தனமென்ன, வெற்றிலைப் பாக்கு முதலியவைகளை விரும்பி யுண்டும், இன்னும் மனம்போனவாறு விளையாடியும், அன்றி நித்திரை செய்யினும், எப்போதும் நினது திருவருளினை மறவாதபடி திருவருள் சுரந்தருளி இவ் வெளியவனைக் காத்தருள்வாயாக. எங்கும் நிறைந்து அகண்டமாயுள்ள அறிவானந்த பரசிவமே!

குறிப்புரை :—கொத்து, கொங்கெனத் திரிந்தது; சந்தன வாடையாவது பொதிகையின்கணின்று வீசும் காற்றென்க.

இதனால், எவ்வித போகபோக்கியங்களை யனுபவிக்கினும் நினது திருவருளினை மறவாதிருக்கும் வரத்தை எதிர்நோக்கமா யிருத்தல் வேண்டுவது தான் எனக்கு வேண்டிய வரமாகும் என்றது தோன்ற நின்றது.

இல்லறம் பொருளென விருது காமிய
வல்லல்சேர் வாழ்க்கையி னமிழ்ந்தி நிற்பினு
மெல்லையில் ஞானவின் பத்தை யெய்தியே
புல்லியும் புல்விடாதிருப்பர் புண்ணியோர்.

என்றார் பிறரும். (11)



## தேசோ மயானந்தம்

—o—

க. மருமலர்ச் சோலைசெறி நன்னீழன் மலையாதி
மன்னுமுனி வர்க்கேவலாய்
மந்த்ரமா லிகைசொல்லு மியமநிய மாதியா
மார்க்கத்தி னின்றுகொண்டு
கருமருவு காயத்தை நிர்மலம தாகவே
கமலாச னுதிசேர்த்துக்
காலைப் பிடித்தனலை யம்மைகுண் டலியடிக்
கலைமதியி னூடுதாக்கி
உருகிவரு மமிர்தத்தை யுண்டுண் டுறங்காம
லுணர்வான விழியைநாடி
ஒன்றோ டிரண்டெனுஞ் சமரச சொரூபசுக
முற்றிடவென் மனதின்வண்ணம்
திருவருண் முடிக்கவித் தேகமொடு காண்பனோ
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

பொழிப்புரை :—நறுமணஞ் சுலவும் பூங்காவனமிலங்கி நல்ல நிழலினைக் கொடுக்கும் பர்வத முதலிய பக்கங்களிலே வாசஞ் செய்யும் தபோசிரேட்டர்கட்குப் பணிசெய்து, 'மந்த்ர மாலிகை' என்னும் நூலிற்கூறும் இயம நியமாதி அஷ்டாங்கயோக மார்க்கத்தைக் கைக்கொண்டு, கற்போர் பவ

யேதுவாய இச்சரீரத்தினை மிக்க மேன்மையுறுமாறாக பத்மாசன முதலிய எண்வகை ஆசனாதிகளுடனே பிராணவாயுவினை யடக்கி மேலெழுமாறு கண்டதாரையாலூதி மூலக்கனலைத் தாயாம் குண்டலியின் திருப்பாதமாயுள்ள பதினாறுகலைகளோடுங் கூடிய சந்திரன்பால் தாக்குவித்து அதனின்றொழுகானின்ற அமிர்தஜலத்தை அருந்தி கேவலமான சகச சுழுத்தியுறாது உண்மை யறிவாலுற்று நோக்கி ஒன்று அல்லது இரண்டென்னாது சமரசமாயுள்ள நிரதிசயானந்த மெய்துமாறுள்ள என் மனோபீஷ்டத்தைத் திருவருட் சத்தியார் பூர்த்தி செய்திடுவதை இத்தேக முள்ளபோதே மனங்குளிரக் காண்குவனோ! தேடக் கிடைக்காத திரவியமாய், என் இதயமீது வீற்றிருந்தருளும் ஞானமய கடவுளே! பிரகாசமயமாயுள்ள நித்யானந்தமே!

குறிப்புரை :—மரு - நறு மணம். மந்த்ர மாலிகை - ஓர்யோக நூல். இயமநியமாதி - யோகாசனமாம். காலைப் பிடித்து - பிராணவாயுவைப் பூரித்து. உணர்வான விழி - அறிவான நேத்திரம். சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வம் - அந்தக்கரணம் நான்கனுள் ஒன்றாய சித்த ஸ்தானத்தின்கண் மேவிய புத்தியென்னும் அறிவே சிவமென்பதாம். இது கொண்டே "அறிவே சிவமென் றறிந்திலாய் கொல்லோ" என்றார் பெரியார். (1)

உ. இப்பிறவி யெனுமோ ரிருட்கடலின் மூழ்கிநா
னென்னுமொரு மகரவாய்பட்
டிருவினை யெனுந்திரையி னெற்றுண்டு புற்புத
மெனக்கொங்கை வரிசைகாட்டுந்
துப்பிதழ் மடந்தையர் மயற்சண்ட மாருதச்
சுழல்வந்து வந்தடிப்பச்
சோராத வாசையாங் காணாறு வானதி
சுரந்ததெனன மேலுமார்ப்பக்
கைப்பரிசு காரர்போ லறிவான வங்கமுங்
கைவிட்டு மதிமயங்கிக்
கள்ளவங் கக்காலர் வருவரென் றஞ்சியே
கண்ணருவி காட்டுமெளியேன்
செப்பரிய முக்தியாங் கரைசேர வுங்கருணை
செய்வையோ சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

பொழிப்புரை :—இம் மானிடப் பிறப்பாகிற ஓர் இருண்ட சமுத்திரத்திலே 'நான்' என்கின்ற ஓர் முதலை வாயிலகப்பட்டு, நல்வினை தீவினை

யெனும் அலைகளினாலே மோதப்பட்டு, நீர்க்குமிழியொத்த தனபாரங்களின் அழகைக் காட்டாநின்ற, பவழமொத்த அதர மாதர்தம் மையலாம் சுழற் பெருங்காற்றானது மேலும் மேலும் வந்துமோத, குறைதலிலா ஆசையெனும் காட்டாறானது, ஆகாய கங்கைபொழிந்த தொக்க அடுத்தடுத்து வந்து தாக்க, கைத்தோணியாளர் போன்ற ஞானதோணியுமொழிந்து அறிவு கலங்கிய (அச்சமயம்) திருடுந்தோணியாளரை யொத்த எமகிங்கரர்கள் வந்துறுவரோ வெனப் பயமெய்திக் கண்களில் நீரொழுக்கங் கொண்டுள்ள எளியேன், சொலற்கரிய மோட்சக்கரையினைப் பற்றிநிற்கு மாறாகக் கருணைபுரிவையோ! நித்தியவஸ்துவா யெனது சித்தத்திலே வீற்றிருந்தருளும் ஞானஸ்வரூபமாய பரதெய்வமே! சோதி சொரூபானந்தமே!

குறிப்புரை :—பிறவியைக் கடலென்றும், அகங்காரத்தை முதலையென்றும், நல்வினை தீவினைகளை அலைகளெனவும், மங்கையர் மயக்கைச் சுழற்காற்றெனவும், ஆசையைக் காட்டாறு என்றும், ஞானத்தை மரக்கலமாகவும், யமதூதரை வஞ்சப் படகெனவும், மோட்சத்தைக் கரையெனவும் கற்பித்தனர் போலும்.

புற்புதம் - நீர்க்குமிழி. துப்பு இதழ் - பவழம் போன்ற அதரம். வானதி - ஆகாய கங்கை. கைப்பரிசுக்காரர் - கைத்தோணியாளர். (2)

௩. தந்தைதாய் தமர்தார மகவென்னு மிவையெலாஞ்
சந்தையிற் கூட்டமிதிலோ
சந்தேக மில்லைமணி மாடமா ளிகைமேடை
சதுரங்க சேனையுடனே
வந்ததோர் வாழ்வுமோ ரிந்த்ரசா லக்கோலம்
வஞ்சனை பொறாமைலோபம்
வைத்தமன மாங்கிருமி சேர்ந்தமல பாண்டமோ
வாஞ்சனை யிலாதகனவே
யெந்தநா ளுஞ்சரி யெனத்தேர்ந்து தேர்ந்துமே
யிரவுபக லில்லாவிடத்
தேகமாய் நின்றநின் னருள்வெள்ள மீதிலே
யானென்ப தறவுமூழ்கிச்
சிந்தைதான் றெளியாது சுழலும்வகை யென்கொலோ
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

பொழிப்புரை :—பிதா, மாதா, உறவினர், மனைவி, மைந்தன் முதலாகிய இவர்களெல்லாம் சந்தையிற் கூடியோடுங் கூட்டத்தை நிகர்க்குமென்க; சற்றுமிதிற் சந்தேகம் வேண்டாம்; நவமணி யொளிசெய் நவ நவ மாட மாளிகை வீடுகளும் உத்யான மேடைகளும், மற்றும் நால்வகைச் சேனை சைனியங்களென்னு மிவைகளோடுங் கூடி சர்வ சௌபாக்கிய வாழ்க்கையும் இந்திர ஜாலத்தின் தன்மையை நிகர்க்கு மென்க.

வஞ்சம், அழுக்காறு உலோபித்தனம் முதலானவைகளோடும் அமையப் பெற்றுள்ள நெஞ்சமாங் கிருமியையுடைய மலஜல பாத்திரமாய இவ்வுடலோ, விருப்பில்லாச் சொப்பனமேயாகும்; ஆகவே இவைகளை நன்காய்ந்துணர்ந்து எந்த நாளும் சமத்துவமா யுணர்ந்து இராப்பகலற்ற பரவெளி வீட்டுக்குள்ளே தனிப்பர வத்துவாய் விளங்கியுள்ள தனது திருவருட் பிரவாகத்தின்கண் நானெனலொழியுமாறு முயற்சித்தும் மனந்தெளிவுறாது மயங்குங் காரணமென்னே! தேடிக்காண்டற் கருமையாயும் நித்தியவத்துவாயும், எனது சித்தத்திலே வீற்றிருந்தருளும் ஞானமயத் தெய்வமே! சோதி சுவரூபமே!

குறிப்புரை :—பிதா, மாதா, பந்து, மித்திராதிகளனைவரும் சந்தைக் கூட்டம்போன்று ஒருங்கிருந்து அதிவிரைவாகக் கலைதலையொக்கும் என்றும், பலவகைச் சைனியங்களோடுங் கூடிய பெரியதோர் வாழ்க்கை இந்திரசால கோலாகலமாகு மென்றும், கேவலம், வஞ்சம், அழுக்காறு முதலான துர்க்குணாதிகளுக்கு ஸ்தானமாகிய இந்த மனித சரீரமானது சாமான்ய கனவெனவும், ஆகவே, மேலே கூறிப் போந்தவைகட் கேற்ப நடப்பனவாய யெவையும் நல்லன, அல்லனவாக் கொண்டுவக்காது சகசமாய அபேதமாய்க் கொண்டு தேர்ந்து முடிவில் மனமானது ஓர் வழிப்பட்டு நிலைபெறாது கவலைக்கிடமாய்ச் சுழன்று சலிப்பதன் யேதுயாதோ வென்றையுற்றனர் போலும்.

தமர் - பந்துக்கள். சதுரங்கம் - இராஜாங்கத் தார்க்குரிய யானை, குதிரை, தேர், காலாள் என்பனவாகும். (3)

ச. ஆடாம லோய்ந்திட்ட பம்பரம் போல்விசை
யடங்கிமனம் வீழநேரே
யறியாமை யாகின்ற விருளகல விருளொளியு
மல்லாதிருந்த வெளிபோற்
கோடா தெனைக்கண் டெனக்குணிறை சாந்தவெளி
கூடியின் பாதீதமுங்
கூடினே ஞெசரியை கிரியையின் முயன்றுநெறி
கூடினேஞே வல்லனியா

னீடாக வேயாறு வீட்டினி னிரம்பியே
யிலகிவளர் பிராணனென்னு
மிருநிதி யினைக்கட்டி யோகபர னுகாம
லேழைக் குடும்பனுகித்
தேடா தழிக்கவொரு மதிவந்த தென்கொலோ
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

பொழிப்புரை :—சுற்றுதலின்றி நின்று போன பம்பரத்தை யொத்த வேகமிலா மனமானது விழுந்துவிட, மற்றும் நேராக மடமையாகிய இருளானது ஒழியவும், அந்த இருளும் பிரகாசங்களிரண்டும் அல்லனவாய் பரம வெளியேபோன்று எனைநோக்கிப் பேதுருமல் என்னகத்தில் பொருந்தி யுள்ள உபசாந்த வாகாயத்தை மருவி யிருந்து சுகானுபவப் பேற்றினையும் பெற்றேனே! சரியை கிரியா மார்க்கத்திலே ஊக்கங்கொண்டு உத்தமமான சன்மார்க்க நெறியில் நிலைபெற்றேனே! அவ்வாறில்லாத யான் மிகப் பெருமையோடும் அறுவகை யாதார தலத்தினும் பூரணமாய்ப் பிரகாசித்து வளரா நின்ற பிராணவாயு வென்னும் பெருஞ் செல்வத்தை யுண்ணிறுத்தி யோகானந்த னுகாதபடி சாமானிய குடும்பஸ்தனுகித் தேடாது செலவிட ஓர் புத்தி யுண்டாகியது என்ன காரணமோ? கிடைத்தற்கரிய நித்திய வத்துவாகி யெனது சித்தத்திலே வீற்றிருந்தருளும் ஞானமாம் தேவனே! சோதிமய ஆனந்தமே!

குறிப்புரை :—ஆடும் பம்பர மானது ஆட்டமின்றி அமர்ந்தாற்போல என் மனமானது அலையாதபடியும், மேல் மிச்சமாயுள்ள அறியாமை யொழியவும், பரமஞான வெளியடைந்து ஆண்டுள்ள பரமசுகாதீதனு யிருப்பவும் பெற்றேனில்லை; ஈதன்றி சரியை கிரியா யோக ஞான மார்க்கங்களினின்று யாதொரு சித்தியையும் பெறக் காண்கிலேன்; மற்றும் ஆதாரமாறினையும் பற்றிச் செல்லும் பிராணவாயுவை யடக்கி யோக சித்தியையும் அடையாது போயினேன்; என் செய்வேன்! இவ்வாறுய ஏழைமதிப் பேதையேற்குத் தேட்டமின்றிச் செலவிடும் ஓர் மார்க்கம் என்பால் உதயமாயது, இது தோன்றுவதற்கு ஏது யாதோவென்று ஐயுற்றனர் போலும்.

இரண்டு வொளியு மற்றதான வெளியாவது - ஜெகஜோதியா யுள்ளதோர் பரம ஞானுகாயமாகும்; யோகபரனுவது - யோகசித்தி பெற்ற பரம யோகி.

மனதை இலயப்டுத்துவான் கொண்ட யோக சாதனம் கைவரப் பெறு தலே போதிய பரம் சாதனமாதலால் அதனை ஈண்டு 'இரு நிதி' யென் றுங் கூறினரென்க. (4)

ரு. பாடாது பாடிப் படித்தளவில் சமயமும்
பஞ்சுபடு சொல்லனிவனைப்
பார்மினோ பார்மினோ வென்றுசபை கூடவும்
பரமார்த்த மிதுவென்னவே
ஆடாது மாடிநெஞ் சுருகிநெக் காடவே
யமலமே யேகமேயெம்
மாதியே சோதியே யெங்குநிறை கடவுளே
யரசே யெனக்கூவிநான்
வாடாது வாடுமென் முகவாட்ட முங்கண்டு
வாடா வெனக்கருணைநீ
வைத்திடா வண்ணமே சங்கேத மாவிந்த
வன்மையை வளர்ப்பித்ததார்
தேடாது தேடுவோர் தேட்டற்ற தேட்டமே
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

பொழிப்புரை:—பாடற்கு அருக மற்றவைகளை யெல்லாம் பாடி வாசித்து அறிந்துள்ள கணக்கில்லாச் சமயத்தவர்கள், பஞ்சைப்போன்று பறக்கக்கூடிய சொற்களைக்கூறும் இன்னவனைப் பாருங்கள் பாருங்களென்று சொல்லாநின்ற கூட்டங்கள் கூடவும், இதுவே மிக மேம்பாடுடையன வென்று அறிவோடு கூடிய ஆனந்தக் கூத்தாடியும், இன்னும் மனம் நீராள மாக வுருகி யிளகியாடவும், ஏ, மலமற்ற பரிசுத்தமாய பரவத்துவே! பல வகையற்ற ஒரே வத்துவே! எனக்கினிய மூலப்பொருளே! பரவொளியே, ஏ, சர்வ வியாபகா! அரசனே! என்று பலவாறாகக் கூவியழைப்பித்து யான், எவரும் வாடுவது போன்று வாட்டமுறுகின்ற எனது முகவாட் டத்தை நோக்கிக் கருணையோடும் 'வாடா' வென்று நீ கிருபை செய்யாதது நியாயமோ? அன்றி இந்த ஓர் தன்மையை விர்த்தியாக்கினவர் யாவரோ? உலகத்தார் தேடும் அநித்தியத்துவத்தைத் தேடாது நித்திய ஞானைஸ்வரி யத்தைத் தேடி நிற்கும் விவேகியர்க்கும் தேடப்பெறாத திரவியமே! தேடற்கரிய நித்திய வத்துவாகி என் சித்தத்தின்கண் வீற்றிருக்கும் ஞானே ஸ்வரனே! சோதிசொரூபானந்தமே!

குறிப்புரை :—தேடாது தேடுவோர் தேட்டமாவது - தான் என்னுந் தற் போதமாய ஜீவபோதத்தை யொழித்து சிவபோதமாய திருவருட் பேற்றினைத் தேடுவாராவார் உண்மை ஞானவான்களாவார் என்பதாம்.

மற்றும், பற்பல மதத்தவர்கள் எளியனைப் பார்த்து இன்னோன் பஞ்சனைய வார்த்தையைப் பகரும் சாமானியன், இன்னவனைப் பாருங்களென்று பலரும் ஒருங்குறப்பேச, அஃதுணர்ந்த யான் சகிப்புறுவகையால் மனவாட்டத்தோடு முகவாட்டம் பெற, அஃதறியாதும் இரங்கி யருளாதுமுள்ள மன வலிமையை நினக்கூட்டியவர் யாவரென்பதும் புலனுயதென்க. தேடாது தேடுவோர் தேட்டமாவது - திருவருட் பிரசாதமா மென்க. (5)

சூ. பிரியாத தண்ணருட் சிவஞானி யாய்வந்து
பேசரிய வாசியாலே
பேரின்ப வுண்மையை யளித்தனையென் மனதறப்
பேரம்ப லக்கடவுளா
யறிவா யிருந்திடு நாதவொலி காட்டியே
யமிர்தப்பிர வாகசித்தி
யருளினை யலாதுதிரு வம்பலமு மாகியெனை
யாண்டனைபி னெய்திநெறியாய்க்
குறிகா னளித்தனைநன் மரவுரிகொ ளந்தணக்
கோலமா யஜபாநலங்
கூறினபின் மௌனியாய்ச் சும்மா விருக்கநெறி
கூட்டினை யெலாமிருக்கச்
சிறியேன் மயங்கிமிக வறிவின்மை யாவனோ
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

பொழிப்புரை :—குளிர்ச்சியாய திருவருட் சிவஞான பரனாய் என்முன் தோன்றி நின்று சொல்லுதற்கருமையாயுள்ள பிராணவாயுதாரண யோகத்தினாலே பிரமானந்த யேதுவாம் நிச்சயப் பொருளினை தயவோடும் அநுக்ரகித்தனை ; அன்றியும், என்னெஞ்சமானது நிலைபெறுமாறு ஞானகாசக் கடவுளராகி ஞானசொரூபமாயுள்ள நாதவோசையினைக் காண்பித்து தேவாமிர்தப் பெருக்காம் பரமபிரயோசனத்தினையும் அளித்தருளினீர் ; அல்லாமலும், அழகுறும் ஞானகாச ரூபமுமாய் வந்தெனக் கனுக்கிரகித்தாய் ; பின்னும் தோன்றியருளி முறையாகவுள்ள ஓர் இலக்கினையுங் குறித் தருளினீர் ; இன்னும் அழகிய மரவுரியுடுத்துள்ள வேதியர்போன்று வந்தருளி 'அசபா'

மந்திரோபதேசத்தை யநுக்ரகித்த பின்னர் தேவரீரே மோனமயமாய்ச் சும்மா யிருந்திடவேண்டிய ஓர் நன்மார்க்கத்தை யடையச் செய்தீர்; இவையனைத்தும் அருளிச்செய்தும், மிகச் சிறுவனாய அடியேன் மிக மயக் குற்று அதி அவிவேகியாய் விடுவனோ? தேடக்கிட்டாத நித்தியவத்து வாகி எனது சித்தத்திலே வீற்றிருந்தருளும் ஞானவுருவாளா!

குறிப்புரை:—பேசரிய வாசி - கூறுதற்கருமையாயுள்ள பிராணவாயு வாம். பேரின்ப வுண்மை - மோக்ஷ நிச்சயம். அமிர்தப்ரவாகசித்தி - சீதள மதிமண்டலத்தேன் உண்ணப் பெறுதல். அஜபாமந்திரம் - உன்னாமல் உன்னும் உரைமந்திரம். இதன் சக்தி:—உடலினின்று வெளிப் போந்தவுயி ரினை மீண்டும் வருவித்து உடலை எழச் செய்வதாம்.

தேவரீர், எளியவன் பொருட்டதாக முன்னம் மெய்யன்பர் வேடமாய் வந்து பல முறைகளில் ஆண்டருளினமையை யானுணர்ந்து மிருக்கிறபோது இனியும் யான் அஞ்ஞான முற்றொழிவதோ! என்பது முடிவுரை யென்க. (6)

எ. ஆரா ரெனக்கென்ன போதித்து மென்னவென்
 னறிவினை மயக்கவசமோ
அண்ட கோடிக ளெலாங் கருப்பவறை போலவு
 மடுக்கடுக் காவமைத்துப்
பேராம னின்றபர வெளியிலே மனவெளி
 பிறங்குவத லாதொன்றினும்
பின்னமுற மருவாது நன்னயத் தானினப்
 பேரின்ப முத்திநிலையுந்
தாராது தள்ளவும் போகாது ளுலது
 தள்ளினும் போகேனியான்
றடையேது மில்லையாண் டவனடிமை யென்னுமிரு
 தன்மையிலு மென்வழக்குத்
தீராது விடுவதிலை நடுவான கடவுளே
 தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
 தேசோ மயானந்தமே.

பொழிப்புரை:—இவ்வடியவனுக்கு யார் யார் என்ன போதனை செய் யினும் என்னவாகும்! என் அறிவைச் சிறிதேனும் மாற்றுதற்கியலுமோ! கோடானு கோடி அண்டங்களனைத்தும், கர்ப்பச்சிற்றுள் போன்று வரிசை வரிசையாகக் கற்பித்து நிலைப்படாநிற்க, பரமாகாயத்தின்கண் மனாகாயம் விளங்குவதன்றி, வேறொன்றினும் பேதமாக நிலைபெறாது தேர்ந்த விசுவாசத்

திலைலே இனிமேல் பெறற்கரிய மோக்ஷ நிலைமையைக் கொடுத்தருளாது நீக்கவுங் கூடாது; நின்றல் அது நீக்கப்படினும் யான் செல்லேன்; இதிற் சிறிதுந் தடையின்றும்; அன்றி, ஆண்டான் அடிமையென்னும் இரு முறையினும் என் விவகாரம் தீர்வதில்லையாம். (அங்ஙனம் தீராதாகவே) யானும் விடற்கிசையேன், நடு நிலையாய எம்மானே! பெறுதற்கருமையா கிய நித்தியவத்துவாய்ச் சித்தத்தின்மீது அமர்ந்துள்ள ஞானமயதேவே! சோதி சொரூப ஆனந்த நிலயமே!

குறிப்புரை :—'யாரார் எனக்கென்ன போதித்துமென்ன, என் அறி வினை மயக்கவசமோ!' என்பது;—எந்தெந்த மதத்தினராவது, அல்லது எவ்வெம்மதச் சாத்திர முறையாலாவது தன் தன் போத சக்தியினைக் கொண்டு எனது சுத்தாத்துவித சித்தாந்த நெறியின் பற்றினை ஓர் சிறிதும் விட்டு நீக்கிடச் செய்யவியலாதாகும், அன்றி ஆண்டான், அடிமை யென்னும் இவ்விருபாற் சுதந்தர திட்டத்தினலே எவ்வாற்றனும் நீங்குதலில்லாத வழக்க முறையினை யாவரே மாற்றற்குரியார்? அவ்வாறு எவரேனு மிருப் பினும் யான் விடற்கிசையேன் என்றனர்.

நடுநிற்றல் - சிருஷ்டியாதி ஐந்தொழிற்கும் நடுநிற்றல். (7)

அ. கந்துக மதக்கரியை வசமா நடத்தலாங்
கரடிவெம் புலிவாயையுங்
கட்டலா மொருசிங்க முதுகின்மேற் கொள்ளலாங்
கட்செவி யெடுத்தாட்டலாம்
வெந்தழலி னிரதம்வைத் தைந்துலோ கத்தையும்
வேதித்து விற்றுண்ணலாம்
வேறொருவர் காணம லுலகத் துலாவலாம்
விண்ணவரை யேவல்கொளலாஞ்
சந்ததமு மிளமையொ டிருக்கலா மற்றொரு
சரீரத்தினும் புகுதலாஞ்
சலமே னடக்கலாங் கனன்மே லிருக்கலாந்
தன்னிகரில் சித்திபெறலாஞ்
சிந்தையை யடக்கியே சும்மா விருக்கின்ற
திறமரிது சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

பொழிப்புரை :—(கொழுத்த) குதிரைகளென்ன, மதங்கொண்ட யானை களென்ன இவைகளை நம் வசமாகச் செலுத்துதல் கூடும்; அன்றி, கரடி

யென்ன, வெவ்விய புலியென்ன இம்மிருகங்களையும் வாய்கட்டி விடலாம்; ஓர் சிம்மத்தை வசப்படுத்தி வாகனமாக் கொண்டு அதன் மேலேறிச் சவாரி செய்யலாம். கொடிய விடப்பாம்பினைக் கையிலெடுத் தாட்டி வைக்கலாம். வெவ்விதாகிய அக்னியிலே இரசத்தினைவிட்டு ஐவகையதான செம்பு பித்தளை முதலான சரக்குகளைச் சுட்டு எடுத்து விற்பனை செய்து உண்டுவரலாம்; மற்றும் வேறெவரு மறியாதபடி அஞ்சனத்தினாலே நாடெங்கு மிருந்து வரலாம்; தேவராதியரைப் பணியாளராகக் கொள்ளலாம்; எப்போதும் இளமைப் பருவமாயே யிருந்து வரலாம்; இவ்வுடலைவிட்டு வேறோர் சரீரத்திலும் பிரவேசிக்கச் செய்யலாம்; தண்ணீரிலே உலாவலாம்; அன்றி அக்னியிலும் வீற்றிருக்கலாம்; தனக்கு ஒப்பற்றதாயுள்ள பல இஷ்ட சித்திகளையு மடையலாம்; (ஆனாலும்) மனத்தின் சலனத்தை நிறுத்தி நிர்ச்சிந்தையாக விருக்கும் தன்மை மிகவும் அருமையாகும். நித்திய வத்துவாகி, என் இதயத்தின்கண் வீற்றிருக்கும் ஞான சுவரூபதேவே! சோதிமய ஆனந்தமே!

குறிப்புரை :—கந்துகம் - குதிரை. கரி - யானை. கட்செவி - சர்ப்பம்; கண்ணே செவியாயிருந்து சப்தத்தைக் கேட்கலான் இதற்குக் கட்செவியென்னும் பெயர் கிடைத்துள்ளது.

இரஸம், என்பது ஈண்டு பாதரஸத்தினை யென்க. இந்த இரஸத்தையே வெள்ளியாகவுஞ் செய்வர்கள். அன்றி வெள்ளி செம்பாதிகளைப் பச்சிலை சேர்த்துச் சுட்டு தங்கமாகச் செய்வதுமுண்டு; இதுவே இரஸவாதமென்பர். மறைவு மையைக் கொண்டு எவர்கள் கண்ணுக்கும் தெரியப்படாது நிற்கலாம் என்றும், இன்னும் இவைபோன்ற பல அரிய செயல்களுஞ் செய்து முடிக்கலாம். ஆனாலும் மனத்தினை மட்டும் அடங்கச் செய்தல் மிகவும் அருமையெனக் கூறினர் ஆசிரியர். இக்கருத்தினையே பிற ஆண்டும் "எல்லாமும் வலதிந்த மனமாயை யேழையா மென்னாலடக்க வசமோ" என்றும் கூறியுள்ளமை காண்க. சான்றாக :

பிரபுலிங்க லீலை

"ஆயின் மிக் கோரரிய செயலெலாம்
நேயமிக்க மனத்தை நிறுத்தல் காண்"—என்றூர். (8)

கூ. எல்லா மறிந்தவரு மேதுமறி யாதவரு
மில்லையெனு மிவ்வுலகமீ
தேதுமறி யாதவ னெனப்பெயர் தரித்துமிக
வேழைக்கு ளேழையாகிக்
கல்லாத வறிவிற் கடைப்பட்ட நானன்று
கையினா லுண்மைஞானங்

கற்பித்த நின்னருளி னுக்கென்ன கைம்மாறு
காட்டுவேன் குற்றேவலன்
அல்லார்ந்த மேனியொடு குண்டுகட் பிறையெயிற்
றுபாச வடிவமான
அந்தகா நீயொரு பகட்டாற் பகட்டுவ
தடாதடா காசுநம்பாற்
செல்லா தடாவென்று பேசவா யதுதந்த
செல்வமே சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

பொழிப்புரை :—இவ் வுலகத்திின்கண்ணே சகலத்தையு முணர்ந்தாரும் அன்றி, யாதொரு விஷயமுந் தெரிந்திடாதாரும் இல்லையெனக் கூறு முறையிலே, யாதாமோர் விஷயமுந் தெரிந்திடாதவனென்று பேர் பெற்றும், ஏழைமதியினர்க்குள்ளே தாழ்ந்துள்ள மதியினனும், மற்றும் கற்றற் குரிய நூல்களைக் கல்லாத புன்மதியேன் முன்காலத்தில் கைக்குறிப்பினால் காட்டுவித்த உண்மைஞான சூட்சியினையுணர்ந்த அற்ப தொண்டனாகிய யான் அதற்கீடாக என்ன பிரதிப்பிரயோசனத்தை யளித்தனன்? இருண்டதாயுள்ள கறுத்த தேகத்தோடும் நீட்சியற்ற உருண்ட கண்களையும், (மூன்றும் பிறை யொத்த) கொடூர சிங்கப் பற்களோடுங் கூடியதும், மகாவிகார பயங்கர யேதுவாயுள்ள சொரூபத்தையுங் கொண்டுள்ள ஏ எமதர்மனே! நீ ஓர் எருமைக்கடாவி லேறிவந்து மருட்டுதல் தக்கதல்லவடா! அன்றி நின்காசும் நம்மிடத்திலே நடவாதாகும்! எனக் கெர்ஜித்து உரைப்பதற்கு வாய்கொடுத் துள்ள அரும் பொருளே! நித்திய வத்துவாகி எனது மனோப்பீடத்தில் வீற்றிருந்தருளும் ஞான சொரூபமாகிய சோதிவடிவாம் ஆனந்தமே!

குறிப்புரை :—சர்வசாமானிய தொண்டனாகிய இச் சிறியேன், அன்று கையினாலுண்மை ஞானங்காட்டியருளியதற்கு யான் உபகாரம் செய்ய வொன்றுந் தோன்றவில்லையே! யென்றமையால் அவ்வரிய குறிப்புரை காட்சியானது, கைம்மாறு வேண்டாத காட்சியென்று புலப்படலால் ஈண்டு அதற்கு யான் என் கைமாறு செய்வேன் என்றார் போலும்.

‘குண்டுகண்’ என்பது குண்டுகட் எனச் சந்திநோக்கி வந்தது. அதாவது நேத்திரங்களுக்குரிய நீட்சியின்றி குண்டென உருட்சியாயிருத்தல் எமனுக் குரிமையாதலால் அங்ஙனங் கூறலாயினர். பகடு - எருமைக்கிடா. பகட்டுதல் - மிரட்டுதல். (9)

௰. மின்போலு மிடையொடியு மொடியுமென மொழிதல்
மென்சிலம் பொலிகளார்ப்ப [போன்

வீங்கிப் புடைத்துவிழு சுமையன்ன கொங்கைமட
மின்னார்கள் * பின்னாவலாய்
என்போ லலைந்தவர்கள் கற்றார்கள் கல்லார்க
ளிருவர்களி லொருவருண்டோ
என்செய்கே னம்மம்ம வென்பாவ மென்கொடுமை
யேதென் றெடுத்துமொழிவேன்
அன்பால் வியந்துருகி யடியற்ற மரமென்ன
வடியிலே வீழ்ந்துவீழ்ந்தெம்
அடிகளே யுமதடிமை யாங்களெனு நால்வருக்
கறமாதி பொருளுரைப்பத்
தென்பாலின் முகமாகி வடவா லிருக்கின்ற
செல்வமே சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

பொழிப்புரை :—வான மின்னலொத்த மாதரார் நுண்ணிடையானது ஒடியும்! ஒடியும்!! என்று அந்நல்லார் காற்சிலம்புகள் சப்திக்கவும், தோன்றி விம்மிதமாய்ப் பருத்துத் திமிர்ந்து வட்டமிட்டுப் பின்சாய்ந்து தளர்வுறும் பெரிய பாரமாகியுள்ள தனங்களோடுங் கூடிய மடமாதர்களின் பின்னே மிக்க ஆசையோடும் என்னைப்போன்று சுற்றித் திரிந்தார், கற்றறிந்தார், கல்லாதவர் என்னு மிருபாலாருள்ளும் ஒருவராவ திருக்கமாட்டார்கள்! என்ன செய்வேன்! அம்மம்ம! எனது பாவச் செயலையும், எனது கொடுமையையும் என்னவென்று கூறியாற்றுவேன்! நிற்க ;

பேரன்பினைக் கொண்டு துதிசெய்து மனமிளகி வேரறுந்த விருக்ஷம் போல நினது அழகிய அடிமலர்களில் நமஸ்கரித்தெழுந்து எம் மடிகளே! தேவரீர்தம் அடிமைகளாகிய எங்கள் நான்கு பேர்களுக்கும் தருமார்த்த காம மோக்ஷமெனும் புருஷார்த்தங்கள் நான்கினைப்பற்றிய அர்த்தபாகங்களை அநுக்ரகித் தருளத் தென்றிசைநோக்கி வடவால விருக்ஷ நீழலின்கண் எழுந்தருளியுள்ள அருட்பெருஞ் செல்வமே! என் இதயாம்பரத்தில் வீற்றிருந்தருளும் ஞானகாரத் தெய்வமே! சோதிவடிவானந்தமே!

குறிப்புரை :—மடமின்னார் - மடமையோடுங் கூடிய மின்னற் கொடியிடையுடைய மாதர்கள். அம்மம்ம - ஆச்சரிய வொலியடுக்கு. நால்வர் - சனக, சனந்தன, சனாதன சனற் குமாரர் என்னும் மகத்துக்கள் ; இவர்கட்கு தக்ஷிணாமூர்த்தி குருவா யெழுந்தருளி ஓதா துணர்த்தினர். (10)

* ஏவலாய்—என்றும் பாடமுண்டு.

௰க. புத்தமிர்த போகமுங் கற்பகந நீழலிற்
பொலிவுற விருக்குமியல்பும்
பொன்னுலகி லயிரா வதத்தேறு வரிசையும்
பூமண்ட லாதிக்கமு
மத்தவெறி யினர்வேண்டு மாலென்று தள்ளவுமெ
மாலுமொரு சுட்டுமறவே
வைக்கின்ற வைப்பாளன் மௌன தேசிகனென்ன
வந்தநின் னருள்வாழிகாண்
சுத்தபரி பூரண வகண்டமே யேகமே
சுருதிமுடி வானபொருளே
சொல்லரிய வுயிரினிடை யங்கங்கு நின்றருள்
சுரந்துபொழி கருணைமுகிலே
சித்திநிலை முத்திநிலை விளைகின்ற பூமியே
தேடரிய சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

பொழிப்புரை :—நூதன தேவாமிர்தானு பவாதிகளும், கற்பகவிருக்ஷ நீழலின்கண் பிரகாசமாக வீற்றிருந்தருளுதலும், தேவலோகத்திலே ஐராவதமென்னும் வெள்ளையானையினால் ஆரோகணித்துள்ள சிறப்பும், அன்றிப் பூமண்டலாக்ஷிபெறும், உலகமாயா மயக்குற்ற வெறியினர்தம் ஆசாவிவகாரமெனத் துணிந்து ஒதுக்கிவிடவும், எங்களாலே ஓர் குறிப்பிடலானது நீங்கவும், அன்றி எங்களை மோனநிலைப்படுத்தும் நன்னிலையாளன் மௌனதேசிகரென்று கூறுமாறு தோன்றியெனை யடைந்தருளிய நினது பேரருட் செல்வமும் வாழி வாழி! பரிசுத்தமாயும், முழு நிறைவுமானதுமாய அகண்டிதாகாரமே, தனிப்பெரும் பொருளே, மறை முடிவான வஸ்துவே, பேசற்கரிய தான ஆத்மகோடிகளிடத்திலேயும் விளங்காநின்று திருவருளைச் சொரியாநின்ற காருணிய மாமாரியே, அட்டமாசித்தி நிலை மோக்ஷநிலையென்னும் பயிர்கள் வளர்ந்தோங்கா நின்ற புநித பூமியே, தேட்டத்திற் கிட்டாத நித்திய வத்துவாகியெனது இதய வெளியூடு வீற்றிருந்தருளும் ஞானமயமாஞ் சோதிமயானந்த வத்துவே!

குறிப்புரை :—தேவாமிர்தமும், இந்திராதி தேவ போகானுபவங்களும் அன்றி இம்மண்ணுலக போகானுபவமும், உன்மத்தராதியோர் விரும்புவனவென அவைகளின் தன்மையை நீக்கியும், மோனநிலையில் எளியனையும் ஸ்திரப்படுத்துமாறு மகா மவுனரூபந்தாங்கி வந்தருளிய தமது பேரருள் வாழ்க!

என்பது சாரமாம். தேவாமிர்தம் என்றும் சுடுகையாயேயுள்ள தத்துவ முள்ளதாம். யேகமே - தனிப்பரம் பொருளே! (11)

---

## சிற்சுகோதய விலாசம்.

### பதினன்குசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

க. காக மோடுகழு கலகை நாய்நரிகள்
சுற்று சோறிடு துருத்தியைக்
காலி ரண்டுநவ வாசல் பெற்றுவளர்
காமவே ளடன சாலையை
மோக வாசைமுறி யிட்ட பெட்டியைமு
மலமிகுந் தொழுகு கேணியை
மொய்த்து வெங்கிருமி தத்து கும்பியை
முடங்க லார்கிடை சரக்கினை
மாக விந்த்ர தனு மின்னை யொத்திலகு
வேத மோதிய குலாலனார்
வனைய வெய்யதடி காரனை யமன்
வந்த டிக்குமொரு மட்கலத்
தேக மானபொயை மெய்யெனக் கருதி
யைய வையமிசை வாடவோ
தெரிவ தற்கரிய பிரமமே யமல
சிற்சு கோதய விலாசமே.

பொழிப்புரை :—காக்கையோடு கழுகு என்ன, பேயென்ன, நாய்களென்ன, நரிகளென்ன, இன்னுமுள்ள பக்ஷிகளெல்லாம் சுற்றிப் பிடுங்கித் தின்னற்கு யோக்கியமாயதும், சோற்றினை நிறப்பியுள்ளதுமான தோல்பையினை, இருபாதங்களையும், ஒன்பது வாயில்களையும் கொண்டு வளர்ந்தோங்குகின்ற காமத் தலைவனாய மன்மதனது நாட்டிய சாலையும், மனமோகத்தையும் பலதிறப்பட்ட ஆசாபாசங்களை யெல்லாம் முறிசெய்துள்ள சீட்டுப் பொதிந்துள்ள பேழையும், மலஜலாதிகள் அதிகரித் தொழுகும் படியான கூபத்தையும், கொடிய புழுக்கூட்டங்கள் அடர்ந்து நெளிந்துள்ள மலச் சேற்றையும், குற்றமுள்ள கட்டுக்கடைச் சரக்கையும், ஆகாயத்திற் றோன்றுனின்ற இந்திர வில்லையும், மின்னலையும் போன்று விளங்கும் படியாக வேதத்தினை யோதானின்ற பிரமதேவனார் உண்டுபண்ண, இயமனும் கொடியதோர் கடைத்தடி

யன் வந்து நொருக்கற் கேதுவாய மண்பாண்டம் போன்ற சரீரமாகிய பொய்ச்சரக்கினை, உண்மையாயுள்ள பொருளெனக் கருதி ஏ! என் ஐயனே! இப் பூமியின்மீது யான் வாடிக்கிடக்கவோ! கட்புலனுக் கருமையாயுள்ள பரப்ரம்மப்பொருளே! பரிசுத்தமாயுள்ள ஞான சுகானந்த முதயமாகும் ஸ்தானமே!

குறிப்புரை :—துருத்தி - தோற்பை. நவவாசல் - ஒன்பது வோட்டை. காமவேள் - காமியங்கட்கு மூலனான மன்மதன். மும்மலம் - ஈண்டு சிறுநீர், பவ்வீ, விந்து ஆக மூன்று. முடங்கலார் கிடை சரக்கு - வியாதி மிகுந்த கட்டுக்கடைச் சரக்கு என்க (அதாவது உடலை). குலாலனார் - பிரமதேவர். பொய்யை - என்பது பொயை என இடைக்குறையாய் வந்தது.

செவ்வந்திப் புராணம்

புழுச்சுமை மலக்குவை புலவு நாறிய
வழுக்குடலீரல் சீவழியுஞ் செய்யாக
முழுக்குட லுதிர நீர் மூளையின் பொதி
யழுக்குடலதைப் பொருளாக வெண்ணுமோ.

உழு நரிக்கணங்களுக் குதவு மொண்பொருள்
கழுகினுக்குணவு காட்டிய களஞ்சியந்
தழலினுக்கிந்தன மான சட்டக
மெழிலுறப்புனையினு மிருப்பதல்லவே.

சேது புராணம்

பழித்திடுங் கோழை மூளை பற்றியவழுக்கு மற்றை
யொழித்திடு மலநீர் வெண்ணீருவை யிற்றினுலகத்தொன்று
மிழிப்புறு பண்டமில்லை யிவற்றினுக் கிடமாயென்று
மழிப்புறு மியாக்கை காப்பாரறிவுளா ராகுவாரோ.

என்றார் பிற நூலாரும்.

அருளுடைய ஐய! காக்கை முதலாய பல இழிந்த பறவைகளெல்லாம் விருந்தா வருந்தானின்ற இக் கேவலமான அனித்தியவுடம்பை மெய்யென்று அஞ்ஞானத்தாற்கொண்டு அலக்கழிந்து அவலமா யின்னும் இவ்வுலகத்திலே அலைந்து திரியவோ! என்பது சாரமாயிற்று. (1)

உ. குறிக ளோடுகுண மேது மின்றியன
லொழுக நின்றிடு மிரும்பனல்
கூட லின்றியது வாயி ருந்தபடி
கொடிய வாணவ வறைக்குளே
அறிவ தேதுமற வறிவி லாமைமய
மாயி ருக்குமெனை யருளினல்

அளவி லாததனு கரண மாதியை
யளித்த போதுனை யறிந்துநான்
பிறவிலா தவனா நின்றி டாதபடி
பலநிறங் கவரு முமலமாய்ப்
பெரிய மாயையி லழுந்தி நின்னது
ப்ரசாத நல்லருண் மறந்திடுஞ்
சிறிய னேனுமுனை வந்தணைந்துசுக
மாயி ருப்பதினி யென்றுகாண்
தெரிவ தற்கரிய பிரமமே யமல
சிற்சு கோதய விலாசமே.

பொழிப்புரை :—குறிப்பொடும் குணஞ் சிறிதுமின்றி அக்னி சிந்துமாறுள்ள இரும்பானது, அக்னியோடு பொருந்தாது அந்த இரும்பாகவே யிருந்தபடி, மிகக் கொடியதாம் ஆணவாதி வீட்டினுள்ளாக அறிவாந் தன்மையற்றபடி அறிவற்றதே உருக்கொண்டுள்ள எளியவனே, கிருபையோடும் கணக்கற்றதனுகரண புவன போகாதிகளை யனுக்கிரகித்த காலத்து நின்னையறிந்து இவ்வடிமை பிறிவுறுதபடி நில்லாது பலவாயுள்ள வர்ணபேதங்களைக் கொள்ளும் சுபாவமாய பளிங்கினைப் போன்று மகாமாயாவாரிதியிலாழ்ந்து நின் கிருபா பிரசாதமாயுள்ள ஒப்பற்ற திருவருளை மறந்துபோம் சிறுவனாகிய யானும் நின்னைச் சார்ந்து இன்புற்றிருப்பது இனியென்று கொலோ! பார்வைக் கெட்டாபரப்பிரமமே! மலமற்ற ஞானச் சுகானந்த முதயமாம் மூலஸ்தானமே!

குறிப்புரை :—தநு கரண புவன போகம்=தநு - உடம்பு, கரணம் - அந்தக்கரணம், புவனம் - உலகம், போகம் - அநுபவவிருத்தி. உபலம் - சிலை, இங்கே பலவாறுன வர்ணுதிகளையியக்கு மாறதால் பளிங்கைக் கூறலாலாயிற்று, "ஆணவமாதிய வ்ரப்பையாவி, தானவிழ்க்கறியா தானேய விழா, கரணமொடுக்கிக் கருதிய காலைச், சங்கரனவிழ்க்குந் தயைக்கையாலே" என்றனர் மேலோர். (2)

ங. ஐந்து பூதமொரு கான னீரென
வடங்க வந்தபெரு வானமே
ஆதி யந்தநடு வேது மின்றியரு
ளாய்நி றைந்திலகு சோதியே
தொந்த ரூபமுட னரூப மாதிகுறி
குணமி றந்துவளர் வஸ்துவே

துரியமே துரிய வுயிரி னுக்குணர்வு
தோன்ற நின்றருள் சுபாவமே
எந்த நாளுநடு வாகி நின்றொளிரு
மாதியே கருணை நீதியே
எந்தை யேயென விடைந்திடைந் துருகு
மெளிய னேன்கவலை தீரவும்
சிந்தை யானதை யறிந்து நீயுனருள்
செய்ய நானுமினி யுய்வனோ
தெரிவ தற்கரிய பிரமமே யமல
சிற்சு கோதய விலாசமே.

பொழிப்புரை :—ஐவகையதான பூதங்களெல்லாம் ஓர் கானல் தண்ணீரைப் போன்றடங்குமாறு விரிந்த ஆகாயமே! தலையுங்கடையும் இடையுமில்லாததாக திருவருளாய் நிறையப்பட்டு விளங்கும்படிக்குள்ள சோதிமயமே! ரூபாரூபங்கடந்து குணங்குறிகளற்று வளர்ந்தோங்கா நின்ற பரம்பொருளே! அன்றித் துரிய பூமி நிலயமே! அவற்றிற்கறிவு விளங்குமாறு நின்றருளாளும் இயற்கை விளக்கமே! எப்போதும் சமத்துவமாயிருந்து தோன்றுமாதியே! அன்றிக் காருணியமே சொரூபமாக் கொண்டுள்ள நியாயமுறையே! எந்தந்தையே! என்றிவ்வாறாக நெகிழ்ந்து நெகிழ்ந்துருகுகின்ற ஏழையேனது மனக்கவலையொழியவும் நீ எனது உளக் குறிப்பறிந்து நின்றிருவருளைப் பாலிப்பாயோ! அதுகொண்டடியவனும் இனி கடைத்தேறுவனோ! பார்த்தற்கு அருமையான பிரம சொரூபமே! மலமில்லா ஞான சுகானந்தந் தோன்றும் பூர்வ நிலயமே!

குறிப்புரை :—

மண்ணை விழுங்கிப் புனல்கனலை விழுங்கி வாயுதனை விழுங்கி
விண்ணை விழுங்கி வெண்மதியை விழுங்கி வெய்யோன்றனை விழுங்கி
மொண்ணையிய மானையும் விழுங்கி முற்றும் விழுங்கிப் பற்பலவா
மெண்ணை விழுங்கி யிருந்ததனை நின்னாற் கண்டேனிறையோனே.

என்னுமிப்பாசுர சாரமாக, சர்வமும் தன்னுட் கொண்டருளும் தனிப் பரசிவத்தைக் காண்பான் தன்னுளே தானே காணத்தக்கதா மாற்றலில்லாத தாலே முன்வினைவயத்தால் வந்த முதற் குரவன் கால்வீழ்ந்து மன்னிய பாச மொழித்து மௌனமாயிருந்து பின்னொன்று மெண்ணலின்றி யிறைவனைக் காண்டற்கென்றே திருவருட் குரவனை தினந்தினம் போற்றுவாராய நம் ஆசிரியர் மேற்போந்தவாறு கூவிக் கூவிக் குறையிரந் தேற்றுதல் செய்தல் புலனாயது. (3)

ச. ஐவ ரென்றபுல வேடர் கொட்டம
அடங்க மர்க்கடவன் முட்டியாய்
அடவி நின்றுமலே யருகி னின்றுசரு
காதி தின்றுபனி வெயிலினன்
மெய்வ ருந்துதவ மில்லை நற்சரியை
கிரியை யோகமெனு மூன்றதாய்
மேவு கின்றசவு பான நன்னெறி
விரும்ப வில்லையுல கத்திலே
பொய் முடங்குதொழில் யாத தற்குநல
சார திக்தொழி னடத்திடும்
புத்தி யூகமறி வற்ற மூகமிவை
பொருளெனக் கருது மருளன்யான்
றெய்வ நல்லருள் படைத்த வன்பரொடு
சேர வுங்கருணை கூர்வையோ
தெரிவ தற்கரிய பிரமமே யமல
சிற்சு கோதய விலாசமே.

பொழிப்புரை :—ஐந்து வகையாயுள்ள புலன்களாம் வேட்டுவர்களது ...ர்ச் செயலொடுங்குமாறு, (கேவலம்) குரங்கின் கெட்டியான பிடிப்பை யொத்து வனாந்தரங்களிற் றங்கியும், அன்றி பர்வத சார்பிலிருந்தும், சருகு காய்கனி முதலியவைகளை யருந்தியும், பனியென்ன, வெயிலென்ன இவைக ளால் வருத்தமுற்று அரியதவம் புரியவுமில்லை ; உத்தமமான சரியை கிரியா யோக மென்கின்ற மூவகைப் படிகளாலே ஏற்படக் கூடிய புதவியையும் பெற்றேனில்லை ; ஆகவே, இவ்வுலகின்கண்ணே அப்பிரயோஜனமாய அபத்த கிரியா கர்மமாய கேவலத் தொழில் புரிதற்குயேற்ற சாரதிக்காரன் புத்தி யுத்திகளும், அறிவழிந்துள்ள பித்துடையவனுமா யிருக்கிற ஓர் தன்மையை மேன்மையாக் கருதியுள்ள மந்தமதி யாளனாய எளியேன், பர மப் பிரசாதமாகிய திருவருள் கைவரப் பெற்றுள்ள மகா பாக்கியவான்க ளான நின் மெய்யன்பரோடுங் கூடி இன்புறக் கிருபை செய்வையோ ! கட் புலனுக்கெட்டாத பிரம சொரூபமே ! மலமில்லாத ஞானானந்த முதயமா கும் படியான ஸ்தானமே !

குறிப்புரை :—புலன் - பஞ்சேந்திரிய உணர்ச்சி. கொட்டம் - கொடுவினை. மர்க்கடவன் முட்டி - குரங்கினது வலிய பிடிப்பு. சோபான மென்னும் வடமொழிப்பதம் சவுபானமென வந்தது. அதாவது மேற் செல் லற்குரிய படியென்க. மூகம் - பித்துத்தன்மை. மருள் - மயக்கம் அல்லது உன்மத்தம்.

வெண்பா

ஐம்பொறியு மைம்புலனு, மைம்பூ தமுமகற்றி
யின்பசிவ நீயென்று லேலாதோ—வன்பனே
முத்திமுடி வீதென்றான் முன்னாலும் பின்னாலு
மற்றநா லெல்லா மற........................என்றார் பிறரும். (4)

ரு. ஏக மானவுரு வான நீயருளி
னால னேகவுரு வாகியே
எந்தநா ளகில கோடி சிர்ஷ்டிசெய
விசையு நாள்வரைய நான்முத
லாக நாளது வரைக்கு முன்னடிமை
கூடவே சனன மானதோ
வனந்த முண்டுநல சனன மீதிதனு
ளறிய வேண்டுவன யறியலா
மோக மாதிதரு பாச மானதை
யறிந்து விட்டுனையு மெனையுமே
முழுது ணர்ந்துபர மான வின்பவெள
மூழ்க வேண்டுமிது வின்றியே
தேக மேநழுவி நானுமோ நழுவிற்
பின்னை யுய்யும்வகை யுள்ளதோ
தெரிவ தற்கரிய பிரமமே யமல
சிற்சு கோதய விலாசமே.

பொழிப்புரை :—ஒப்பற்ற ஒரே உருவமாயுள்ள நீர் தமது திருவருட் சத்தியினாலே அனந்த அம்சங்களாகி பிரபஞ்சாதிகளை யெல்லாம் படைத்தல் செய்துவரத்துவக்கிய அந்நாள் முதலாக இதுகாறும் நின் பேரன்புடையே னாகிய யான் பிறந்துவந்திருக்கிறதோ கணக்கில்லாதனவாயின; ஆனால், இப்போதுள்ள இம் மனிதப் பிறவி (எவ்வகையினும்) அதிமேன்மையதா கும்; இந்த நற் பிறப்பிலேயே தெரிந்துகொள்ள வேண்டியனவாய புரு ஷார்த்தாதி சகல (சமரச ஞான அநுபவ முறைகளை யெல்லாம் சந்தேக விப ரீதமற) வறிந்து கொள்ளலாகும்; மோகாதி உட்பகையை விளைவிக்கும் பந்தபாச முணர்ந்து அதை யொழித்து, ஆளற்குரிய நின்னையும், அடியவனா யுள்ள எளியனையும் நன்கறிந்து ஒப்பற்ற பரானந்தப்ரவாகத்திலே மூழ்ந்த வேண்டுவதவசியம்; ஆகவே, இப்பரம சாம்பிராச்சியத்தைப் பெறாத லின்றி, ஆதார சரீரமானது நீங்கி, யானும் அதனை யொழிப்பேனானால், கடைத்தேறு மார்க்கமில்லாமற் போகிறதே! கட்புலனறிதற்கில்லா கட வுளே! மலரகித ஞான ஆனந்த முதயமாம் ஸ்தானமே!

ஒன்றாயும் பலவாயு முருவாயு மருவாயுங்
குன்றாயு மணுவாயுங் குணமாயுங் குணியாயு
நன்றாயுந் தீதாயு நானாயுந் தானாயு
மின்றாயு முளதாயு மிருக்கு மந்தப் பரமசிவம்.

என்றிவ்வாறாக அவ்வொரு பொருளே எல்லாமாய் விளங்கலான், யான் என் சரீரமுள்ளபோதே பெறவேண்டுவன வற்றைப் பெற்று ஒழிவனேல் பின்னரடைதலொன்று மிலவாதலால் பேரானந்தப் பெருவாழ்வை யெய்து மாறே திருவருள்புரிய வேண்டினராக புலனாதலறிதற் பாற்று.

மோக மாதி - காமக், குரோத, லோப, மோக, மத, மாற்சரியங்களாம். ஆன்மாக்கள் முக்கியமா யெய்தற்பாலன - அறம், பொரு, ளின்பம், வீடென நான்கு மாதலின், ஈண்டு அறிந்தடைதல் அஃதேயென்று குறித்துணர்த்த லாயினர். (5)

சீர். நியம லக்ஷணமு மியம லக்ஷணமு
மாச னாதிவித பேதமு
நெடிது ணர்ந்திதய பத்ம பீடமிசை
நின்றி லங்குமஜ பாநலத்
தியல றிந்துவளர் மூல குண்டலியை
யினிதி றைஞ்சியவ ளருளினா
லெல்லை யற்றுவளர் சோதி மூலவன
லெங்கண் மோனமனு முறையிலே
வயமி குந்துவரு மமிர்த மண்டல
மதிக்கு ளேமதியை வைத்துநான்
வாய்ம டுத்தமிர்த வாரி யைப்பருகி
மன்னு மாரமிர்த வடிவமாய்ச்
செயமி குந்துவரு சித்த யோகநிலை
பெற்று ஞானநெறி யடைவனோ
தெரிவ தற்கரிய பிரமமே யமல
சிற்சு கோதய விலாசமே.

பொழிப்புரை:—நியம மென்பதின் தன்மையையும், இயம மென்பதின் தன்மையையும், யோகாசன முதலியவைகளின் விவரணங்களையும், ஆராய்ந் தறிந்து இருதய கமலமென்கின்ற ஆசனத்தின்கண் பொருந்தி காணப்படும் அஜபா காயத்ரீ மந்திரத்தின் இலக்ஷணமுணர்ந்து, மேற்போ மூல குண்ட லினி சத்தியை நன்கு வழிபட்டுத் துதிசெய்து, அவ்வம்மையின் கிருபா பிர சாதம் பெற்று, அளவிலா தோங்கும் ஒளியினையுடைய மூலக்கனலோடுங் கூடி எங்களது மௌன மந்திராதி இலக்ஷணத்தினாலே செயங்கொண்

டோங்கா நின்ற திவ்யாமிர்தம் வாய்ந்துள்ள மதிமண்டலத்தூடே புத்தியைப் புகுத்தி யான் வாய்கொண்டு அவ்வமுத தாரையினை யருந்தி உறுதிகொண்ட அருமையோடுங் கூடிய அமிர்த சொரூபமாகி கைவரப்பெற்ற சித்தாதிகளின் யோகாப்யாசஞ் செய்து அதிற்றேறி ஒப்பற்ற மெய்ஞ்ஞான மார்க்கத்தை யடைந்துய்வனோ! கட்புலாதிகளுக்கரிய கடவுளே! மலரகித ஞானனந்த முதயமாம் நிலைக்களமே!

குறிப்புரை :—நியம லக்ஷணம்=இஃது அட்டாங்க யோகியர்தம் அநுட்டானங்களி லொன்றும் :—அதாவது; மெய்த்தவம், சுசியுடைமை, தத்துவ சாத்திரமாய்தல், பெற்றதுகொண்டு மகிழ்தல், தெய்வ வழிபாடு என்பனவாம். இயம லக்ஷணம்=இதுவும், மேற்கூறிப் போந்த யோகாங்க அநுட்டானுதிகளி லொன்றுகும், அதாவது பொய், கொலை, களவு, காமம், பொருளாசை ஆக இவ்வைந்தையு மடக்கி நிற்றலாம். ஆசனபேதம்= ஆசனம், ப்ராணயாமம், பிரத்தியாகாரம், தியானம், தாரணை, சமாதி என்பனவைகளாம்.

## (அஜபா மந்திர விளக்கம்)

"அஜபா நலத்திய லறிந்து" என்றது :—அஜபா காயத்ரீ என்னும் ஓர் அரிய மந்திரமாகும்; இது, மந்திரங்க ளெல்லாவற்றினும் மிகவும் விசேடித்ததாம்; இது ஹம்சம், ஸோஹம் என்னும் இருவகைத்தாய் விளங்கும். அசபா காயத்ரி யெனினும், அசபை யெனினும், சீவ மந்திரம் எனினும், அங்குச மந்திரம் எனினும் பொருந்தும். இது முதற்கண் சிவ பெருமானிட மிருந்து நந்திதேவரும், அவரிடமிருந்து பிரமதேவனும், அவரிடமிருந்து சுக்கிரனும், அவரிடமிருந்து கஜ முனிவரும், அவர்பால் வியாழ பகவானும், அவர்பால் அகத்திய முனிவரும் பெற்றுப் பூமியின்கண் பரந்தது. இதனை அன்பொடும் செபிக்கின் இறந்தவர் துயிலினின்றும் எழுவார்போல் எழுந்திருப்பர்; அன்றி, நினைந்தன வனைத்தும் கைவல்யமாகும். அன்றி முத்தியுஞ் சித்திக்கும்; இதற்கு அதிதேவதை சிவபெருமானே. தேவதை, விநாயகக் கடவுளாகிய பரமாங்குசனே. பீசம்-ஹம் சத்தி - சுவாஹா என்பதாம். கீலகம் - ஸோகம் ஆகும். கரநியாசஞ் செய்து, உரிய பல்லவத்தால் அங்க நியாசஞ் செய்து, அருணோதய காலத்திற் செபிக்கத் தொடங்கி, அஸ்தமயனத்திற்குள் இருபதினாயிரத்து அறுநூறு உருச்செபிக்கவும். கணபதிக்கு 600, பிரமாவுக்கும் விட்டுணுவுக்கும் அவ்வளவு. உமாபதிக்கு 6000 சீவான்மாவிற்கு 1000. பரமான்மாவிற்கு 1000. ஞானசாரியனுக்கு 1000. ஆக "அசபா காயத்ரி மந்திர செபம் நீ வேதியாமி" என்று செபிக்க. இதனை மௌனமாகவே யிருந்து செபிக்க. "உன்னும வுன்னுமுறை மந்திரம்" என்று வில்லிபுத்தூரார் பாரதத்தினுங் கூறுவது காண்க.

எ. எறிதி ரைக்கட னிகர்த்த செல்வமிக
வல்ல லென்றொருவர் பின்செலா
தில்லை யென்னுமுரை பேசிடா துலகி
லெவரு மாமென மதிக்கவே
நெறியின் வைகிவளர் செல்வ மும்முதவி
நோய்க ளற்றசுக வாழ்க்கையாய்
நியம மாதிநிலை நின்று ஞானநெறி
நிஷ்டை கூடவுமெந் நாளுமே
யறிவி னின்றுகுரு வாயு ணர்த்தியது
மன்றி மோனகுரு வாகியே
யகில மீதுவர வந்த சீரருளை
யைய வையவினி யென்சொல்கேன்
சிறிய னேழைநம தடிமை யென்றுனது
திருவு ளத்தினி லிருந்ததோ
தெரிவ தற்கரிய பிரமமே யமல
சிற்சு கோதய விலாசமே.

பொழிப்புரை :—கடல்மேற் புரளும் அலைகளை நிகர்த்த பொருட் செல்வமானது மிக்க துன்பந் தருவதாகு மென (அதற்காக) எவர் பின்னும் போகாதும், இரப்பவர்கட்கு இல்லையென்றுரையாதும், உலகத்தார்க்கு ஒப்புதலாக நல்லொழுக்கத்தை யனுசரித்து அவ்வழி விருத்தியாதற்குக் காரணமாகிய சம்பத்தையுந் தந்து, நோயற்ற வாழ்வினை யுடைத்தாகி விதிமுறையாயிருந்து மெய்ஞ்ஞான வழி நின்று நிட்டை புரிந்து சுவாநுபூதி யெய்தவும், எப்போதும் எனது அறிவின் வழியனுசரித்து சற்குரு மூர்த்தமாய் உபதேசித்தது மல்லாது மௌனகுருவாய் பூமியில் தோன்றிவந்து அருளுமாறு ஏற்பட்டமேலாகிய நினது திருவருளின் பிரபாவத்தை ஐயனே! ஐயனே! இனி என்னென்று கருதி யெவ்வாறு புகழ்வேன்! மிகச் சிறியேனாகிய இவ்வேழை மதியேனை 'நமது அடிமை' யென்று நின் திருவுள்ளத்தும் அமைந்திருந்ததோ! கட்புலனுக்கரிய கடவுளே! மலரகித ஞானானந்த மூதயமாம் நிலைக்களமே!

குறிப்புரை :—அநி யநித்தியமாகிய பொருட் செல்வம் கடற்றிரை யொப்பாமென்று பெரியார் பலரும் கூறியுள்ளமை நன்கு புலனும்.

நீர் மேற்கு மிழி யிளமை நிறை செல்வம்
நீர் மேற் சுருட்டு நெடுந்திரைகள்—நீர்மே
லெழுத்தாகு மியாக்கை நமரங்கா ளென்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று"—என்று குமரகுருபரரும் கூறினதறிக.

சமஸ்த ஆன்மகோடிகளும் பொருட் செல்வத்தையே தத்தமக் குற்ற துணையெனக் கொண்டு தேடி, புருஷார்த்தத்தினைப் போற்றுமைக் காற்று மையால் முத்திக்குரிய உத்தம நெறியாம் இயம நியமாதிகளை யநுட்டித்து மெய்ஞ்ஞானயோக பானுதல் வேண்டுமென்று தன்னறிவூடு இடையறு துணர்த்தியும், அன்றித்தான் நேரே சாக்ஷாதா யுணருமாறு மௌனகுருவாயு ருக்கொண்டு வந்தமையும் பற்றி யெளியேன் யென்னென்று கூறி யெவ்வாறு துதிப்பேன்! மற்று மென்னை, "இவன் மிகச் சாமானியனும் நல்லறிவில்லானு மாயினும் நமக்கு அடிமைபூண்டவ னென்னும் தம் திருவுளத்தினுந் தோன்றி யதோ!" என்றும் வியந்து ஓதியருளிய ஆசிரியர் ஏனையோர்க்காமாறு தம் மேலேற்றியது எவரும் பாராட்டற் குரியதாம்.

இதனால், இறைவன் ஆன்மாக்களது பரிபக்குவம் நோக்கி அருவமாயும் உருவமாயும் தோன்றியருள் புரிவது இனிது விளங்கலுமாம். இயமநிய பாதி - அட்டாங்கயோக லக்ஷணம். (7)

அ. எவ்வுயிர்த் திரளு மூலகி லென்னுயி
ரெனக்கு ழைந்துருகி நன்மையா
யிதமு ரைப்பவென தென்ற யாவையு
மெடுத்தெ றிந்துமத யானைபோற்
கவ்வை யற்றநடை பயில வன்பரடி
கண்டதே யருளின் வடிவமாக்
கண்ட யாவையு மகண்ட மென்னவிரு
கைகுவித்துமலர் தூவியே
பவ்வ வெண்டிரை கொடுக்க தண்டரளம்
விழியு திர்ப்பமொழி குளறியே
பாடி யாடியு ளுடைந்துடைந் தெழுது
பாவையொத் தசைத லின்றியே
திவ்ய வன்புருவ மாகி யன்பரொடு
மின்ப வீட்டினி லிருப்பனோ
தெரிவ தற்கரிய பிரமமே யமல
சிற்சு கோதய விலாசமே.

பொழிப்புரை :—இவ் வுலகத்தின்கண் காணப்படுகின்ற ஜெகஜீவ பரங்களியாவும் தன்னுயிர் போன்று கருதியிரங்கி, (அவைக் கிடுக்கண் நேர்ந்துழி) மனம் வருந்தி நலந்திகழும் கருணைமொழி கூறிவரவும், என தென தென்னும் சகல பதார்த்த அபிமானத்தையும், மதங்கொண்டுள்ள யானை போன்று யெடுத்து வீசி, துன்பந் தொலையுமாறதாக நன்மார்க்கத்தி

னைப் பின்பற்றி, மெய்யன்பர்தம் அடிமலர்காண்டலைத் திருவருட் சொரூபமாகப் பாவனை செய்து, (தன்னால்) பார்க்கப்படுவன யெவையும் அகண்டாகாரமென்று சங்கற்பித்துத் தன்னிரு கரங்களையுஞ் சிரங் கூப்பி பூக்கொண்டருச்சித்து ஆழியினின்றும் அலைகளால் வீசிவந் தொதுங்கும் தண்ணிய முத்தொத்த கண்ணீர்த்திவலை சிந்த, உரை பிறழ்ந்து ஆனந்தமாகப் பாடலாடல்கள் புரிந்து, மனமானது யிளகி யிளகி, சுவற்றி லெழுதப்பட்டுள்ள சித்திரம் போன்று அசைவுறாது தெய்வதத்துவம் வாய்ந்ததோ ரன்புருக்கொண்டு நினது மெய்யன்பர்களோடுங் கூடிப் பரசுகானந்த பரம பதத்திங்கண் நிலையுறுவனோ! கட்புலனுக்கரிய கடவுளே! மாயா மலரஹித ஞானானந்த முதயமாம் நிலைக்களமே!

குறிப்புரை:—இப்பாசுரத்தால், சில சன்மார்க்க சாதனங்களை நன்கு விளக்கியருளினர். அஃதாவது, சகல ஜீவராசிகளிடத்தும் நிரம்பிய காருணியமும், பரமேஸ்வர பக்தியும், ஆசாபாச நாசமும், பிரமஞானப்பேறும் பெற்று வாழ்தலே பெருவாழ் வென்பதும் இனிது புலனாகின்றன.

"நல்லா ரிணக்கமு நின்பூசை நேசமு ஞானமுமே
யல்லாது வேறுகதியுளதோ"—என்றார் முற்றத் துறந்த பெரியார்.

கவ்வை - பழிச்சொல். (8)

கூ. மத்தர் பேயரொடு பாலர் தன்மையது
மருவியே துரிய வடிவமாய்
மன்னு தேசமொடு கால மாதியை
மறந்து நின்னடிய ரடியிலே
பத்தி யாய்நெடிது நம்பு மென்னையொரு
மையறந் தகில மாயையைப்
பாரு பாரென நடத்த வந்ததெனை
பாரதத் தினுமி துள்ளதோ
சுத்த நித்தவியல் பாருமோ வுனது
விசுவ மாயைநடு வாகவே
சொல்ல வேணும்வகை நல்ல காதிகதை
சொல்லு மாயையினு மில்லையென்
சித்த மிப்படி மயங்குமோ வருளை
நம்பி னோர்கள்பெறு பேறிதோ
தெரிவ தற்கரிய பிரமமே யமல
சிற்சு கோதய விலாசமே.

பொழிப்புரை :—பைத்தியக்காரர், பசாசையொத்தார், சிறுர் ஆக இவர்களது குணத்தைத் தழுவி பரிசுத்த நிலையுற்று பொருந்துகின்ற கால தேச வர்த்தமானங்களை மறந்து தம்மடியவர்களது திருவடித் தாமரைகளில் மெய்யன்பு கொண்டுள்ளவனுக மதிக்கத் தகுந்த எளியனை, ஒருவிதமாக மாயா மயக்கிலாழ்த்தி பிரபஞ்ச மாயா விசித்திரத்தைப் பார் பாரென்று நடத்துமாறு முற்பட்டது எது, இது பாரதாதி இதிகாசங்களில் இருப் பதோ ? இத்தன்மைச் சுத்தமாயுள்ள இயல்புதானே ? நினது மாயா சத்தி யின் சாக்ஷியாகப் பதிலுரைத்தல் வேண்டும். அதியழகான காதியின் கதையில் கூறத்தகும் மாயாதேவியின் பிரபாவங்களிலும் இப்படிக்கின்றென் னலாமே ! எனது நெஞ்சம் இவ்விதமாய் மயக்கத்திலாழ்வ தழகோ ! நினது திருவருட் செல்வத்தை அபேக்ஷித்தவர்கள் பெறுதற்குரிய பிரயோசன மிதுதானே ? கட்புலனுக்கரிய கடவுளே ! மாயா மலரகித ஞானனந்த முதயமாம் நிலைக்களமே !

குறிப்புரை :—தேசமொடு காலமாதியை - காலதேச வர்த்தமானம் ; கால, தேசவியற்கை யென்ப. நின்னுல் செய்யப்படுகிற மாயா கோலஜால வேலைகள் பாரதமாயிருக்கிறதே ! இத்தகைய கிரியா விசேடத்தால் என் மனம் மயங்கிவிட்டதே ! இப்படியும் நின்னருளை யாசிப்பவரைப் பரீக்ஷிக்க லாகுமா ? என்று இரங்கி வாது புரிதல் போன்று விளங்குவதறிக. காதி யின் காதை வாசிட்டத்திற் காண்க. (9)

௰. பன்மு கச்சமய நெறிப டைத்தவரு
மியாங்க ளேகடவு ளென்றிடும்
பாத கத்தவரும் வாத தர்க்கமிடு
படிற ருந்தலை வணங்கிடத்
தன்மு கத்திலுயிர் வரவ ழைக்குமெம
தருமனும் பகடு மேய்க்கியாய்த்
தனியி ருப்பவட நீழ லூடுவளர்
சனக னதிமுனி வோர்கடஞ்
சொன்ம யக்கமது தீர் வங்கைகொடு
மோன ஞானமது ணர்த்தியே
சுத்த நித்தவரு ளியல்ப தாகவுள
சோம சேகரகிர் பானுவாய்த்
தென்மு கத்தின்முக மாயிருந்த கொனு
வெம்மு கத்திலும் வணங்குவேன்
றெரிவ தற்கரிய பிரமமே யமல
சிற்சு கோதய விலாசமே,

பொழிப்புரை :—பலவேறு வகைப்பட்ட மதக் கோட்பாடுடையவர்களும், தெய்வம் எங்களைத்தவிர வேறொன்றில்லை என்கின்ற அதிமூட பாவிகளும், இன்னும், வீணானகுதர்க்கிகளாய கபடர்களும், சிரந்தாழ்த்தி வணங்கவும், சீவகோடிகளைத் தன்பால் வரச்செய்யாநின்ற அந்தகனும் எருமைக் கடாவை மேய்க்கின்றவனாகத் தனியிருக்கவும், கல்லாலவிருக்ஷத்தினீழலிலே எழுந்தருளியுள்ள சனகன், சனந்தனன், சனாதனன், சனற்குமாரனென்கின்ற சதுர் வித முனிவர்களது திருவார்த்தைகளிலுள்ள சந்தேக விபரீதாதிக ளொழியு மாறதாய்த் தம் அழகான திருக்கரங் கொண்டு மௌன முத்திரா உபதேசத்தினை யறிவித்து, நித்தியமான பரிசுத்த திருவருளைத் தம்பால் இயல்பாக வுடைத்தாயிருக்கிற சந்திரசேகரனென்னும் தயா நிதியனாய்த் தென் பாரிசத்தின்கண் தெற்கு நோக்கி யெழுந்தருளியிருக்கும் கொலுவினை எண்டிசைக் கண்ணும் வணங்குவேன்; கட்புலனுக்கரியதான கடவுளே! மலரகித ஞானானந்த முதயமாம் நிலைக்களமே!

குறிப்புரை :—சத்து மசத்துஞ் சதசத்து நீயல்ல
சுத்தசிவ நீயென்று சொல்லினான்—மொய்த்தெழுந்த
கல்லாலின் கீழிருந்து கதிகாண நால்வர்க்குஞ்
சொல்லாமற் சொன்ன துரை.

என்ற இப்பாசுர சாரமாக, புறமத வாதிகளெல்லாம் போராடிக் கிடப்ப, உண்மையான வொரு தனிப் பரமன் சனகாதியர்க்கு உணர்த்தி யருளிய கைகாட்டிற் குறிப்பினை யுணர்ந்து யாண்டும் எப்போதும் வணங்குவோமென்றறி வுறுத்தலாயினர். சோமசேகர கிருபாளு - சந்திரசேகர தயாநிதி. மோன ஞானமாவது - ஞானத்திற் காஸ்பதமாயுள்ள மௌன முத்திரையைக் கவசமாகக் கொண்டிருப்பதாம். (10)

---

## ஆகார புவனம்.

---

## சிதம்பர இரகசியம்.

எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

க. ஆகார புவனமின்பா கார மாக
வங்ஙனே யொருமொழியா லகண்டா கார
யோகானு பூதிபெற்ற வன்ப ராவிக்
குறுதுணையே யென்னளவு முகந்த நட்பே
வாகாரும் படிக்கிசைகின் கிணிவா யென்ன
மலர்ந்தமல ரிடைவாசம் வயங்கு மாபோற்

றேகாதி யுலகமெங்குங் கலந்து தானே
திகழனந்தா னந்தமயத் தெய்வக்குன்றே.

பொழிப்புரை:—மிக விரிவாய்க் காணப்படுகிற இவ்வுலக சொரூப மாயது, பேரின்ப மயமாய்த் தோன்றற்கு, அப்போது ஓர் ஒப்பற்ற அமிர்த மொழியினாலே விரிவாய் விளங்கும் யோகத்தினாலே அனுபூதியடைந்துள்ள மெய்யடியவர்களது உயிர்க்கு உற்றதோர் அருந்துணையேயாம். (அஃதன்றியும்,) என்பாலும் மனமகிழ்ந்தருளிய சிநேகமேயாம், அழகு பொருந்திய தோடும் மெல்லிசை யொலி செய்கின்ற சதங்கை வாய்போல் விரிந்துள்ள புஷ்பத்திடை மணங்கமழுமாறு போல, நாமரூபப் பிரபஞ்சாதிகளிலெங்குந் தன்னந் தனியானதானே கலந்து விளங்கா நின்று முடிவிலா வானந்த சொரூபமாய மலை போன்ற பரதெய்வமே!

வெண்பா

குறிப்புரை:—சருவபரி பூரணமாய்ச் சதானந்த தேசாய்
சருவபுவ னங்களுந்தா னுமிறைவன்—மருவிலருட்
டிருமேனி கொண்டுவந்து திருநோக்கத் தாலுன்
கருமேனி பொன்றுவிக்குங் காண்.

என்ற பெரியார்தம் பெரு மொழிப்படியே, இறைவன் சர்வாண்ட புவன நாமரூபப் பிரபஞ்சங்களோடு சக்கியமாயிருப்பினும், யோகானுபவ மெய்ஞ்ஞான பராளைக் கருதிப் பரசிவானந்த குருமணியா யெழுந்தருளி வந்து உபதேச முறையால் ஆண்டருளுவனென்றும் இனிது கூறினராக. மற்றும், "எல்லாமா யல்லதுமா யிருந்ததனை யிருந்தபடி யிருந்துகாட்டி" என்ற திருவாக்கானும் நன்கு பெறப்பட்ட துணர்க. (1)

௨. அனந்தபத வுயிர்கடோறு முயிரா யென்று
மானந்த நிலையாகி யளவைக் கெட்டாத்
தனந்தனிச்சின் மாத்திரமாய்க் கீழ்மேல் காட்டாச்
சதசத்தா யருட்கோயிற் றழைத்த தேவே
யினம்பிரிந்த மான்போனு னிடையா வண்ண
மின்பமுற வன்பர்பக்க லிருத்தி வைத்துக்
கனந்தருமா கனமேதண் ணருளிற் றானே
கனிபலித்த வானந்தக் கட்டிப் பேறே.

பொழிப்புரை:—அநேக விதமான பதவிகளுக் காட்பட்டுள்ள ஆன்மாக்கடோறும் உயிர்க்குயிராகியும், எஞ்ஞான்றும் மனோரம்யமாகியும், அளவு கடந்ததாகியும், தன்னந்தனிமையாகியும், ஞான சொரூப மாத்திரமாகியும், உயர்வு தாழ்வு காட்டாத நித்தியா நித்தியமாகியுமுள்ள திருவருள் வெளிக்

குள் செழித்தோங்கிய தெய்வமே! யான், தனக்குரிய மானைப் பிரிந்துள்ள மற்றமான்போன்று மனம் வருந்தாது இன்பவாழ் வெய்துமாறு மெய்யடியவர்களது கூட்டத்திற் சேர்த்து மேன்மை பெறவைத்த பெரிய பெருமானே! குளிர்ச்சி வாய்ந்த திருவருளாம் விருக்ஷத்திலே பழம்போன்று பழுத்துள்ள இனிய மதுரக் கட்டி யென்று கூறத்தகும் பரமப் பிரயோசனமே!

குறிப்புரை :—கனந்தரு மாகனமே - ஆன்மாக்களுக்குப் பக்குவ நோக்கி பதவிகளருளும் பெருமானென்றபடி. அனந்த பதவுயிர்கள் - அருவச் சித்தி, உருவச் சித்தி, அருவுருவச்சித்திஎன்றபேதவகை கொண்டே அங்ஙனம் அனந்த பதவுயிர்க ளென்றனர்போலும். அருட்கோயில் - திருவருட் சத்தியை நிலைக்களமாக்கொண்டமையால் கோயிலென்றனர். சத்து+அசத்து - சதசத்து என வந்தது. (2)

௩. பேறனைத்து மணுவெனவே யுதறித் தள்ளப்
பேரின்ப மாகவந்த பெருக்கே பேசா
வீறனைத்து மிந்நெறிக்கே யென்ன வென்னை
மேவென்ற வரத்தேபாழ் வெய்ய மாயைக்
கூறனைத்துங் கடந்தவெல்லைச் சேடமாகிக்
குறைவறநின் றிடுநிறைவே குலவா நின்ற
ஆறனைத்தும் புகுங்கடல்போற் சமய கோடி
யத்தனையுந் தொடர்ந்துபுகு மாதி நட்பே.

பொழிப்புரை :—(ஆன்மாக்கள்) பெறுதற்கான சகல பிரயோசனங்களையும் கேவலமா யுந்தி யெறியுமாறு வந்தருளிய பேரானந்த வெள்ளமே! வாய்திறவாது மோன நிலைபெற்ற பெருமையாவும் இத்தகைய மார்க்கத்தின் பொருட்டாகவே யென்று அடிமையைப் பார்த்து இம் மார்க்கத்தில் பொருந்து மாறதாக நிச்சயித்த அழிவில்லா வூதியமே, சுத்த சூன்யமாகிய கொடிய மாயா பகுதிகளெவற்றையுங் கடந்தேறிய எல்லைச் சேஷமாய்க் குறைவின்றி யிருக்கும் எங்கு நிறை பூரணப் பொருளே! சொல்லாநின்ற நதிகளியாவும் கதியாக் கொண்டிடும் வாரிபோன்று, மத வாதியரனைவரும் பின்பற்றி நிற்றற்கு ஆஸ்பத மாகியுள்ள பிரதம உரிமையே!

குறிப்புரை :—மனிதர் வாழ்வுக் கேற்ற பதினாறுவகைப் பேறுகளையும், பேரின்பவெள்ளந் தேக்குதல் நோக்கி, அணுவென உதறித்தள்ளி யென்றார். ஏன்? பேரின்பத்தின் மேலான வேறின்பமொன்று மிலவாதல் நோக்கியென்க. இன்னும் அவ்வின்பம் நித்யானந்த மாதலானு மென்கின்றோம்.

"கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுட் டேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கு மெங்கள் பெருமான்"

என்றிவ்வாருகத் தமது திருவாசகச் சிவபுராணத்துள் வாதவூரானர் ஓதியவாறு, பேரின்ப வெள்ளமாய்த் தேனூறி நிற்க, "பேறனைத்து மனு வெனவே யுதறித் தள்ளப் பேரின்ப மாகவந்த பெருக்கே" என்றார் நம் தாயுமானுரும்.

பேறு பதினாறவன

மிக்கபுகழ் கல்விவலி வெற்றி யறிவழகு
மக்கள் பொன்னெல் நல்லூழ் மனத்துணிவு—தக்கநுகர்
வீறிளமையாயுள் வியாதியின்மை யாமிவையே
பேறுபதி, னாறென்னப், பேசு.

இதனையே உலகியலார் "பதினாறும் பெற்றுப் பெருவாழ்வுறுவா" யென்றாசி கூறுவதறிக.

இவ்வுண்மை யறியாச் சிலவுலுத்தர், பதினாறு பிள்ளை பெறுதலெனக் கொண்டு மயங்கிக் கூறா நிற்பர்.

உடலெலா முயிரெலா முள்ளகமெலாந் தித்திக்க வுத்தமன் வந்துளம்புக லும், மேற்கூறிப் போந்தபேறு பதினாறும் அணுமாத்திரமாய்த் தோன்று வதியல்பாகலான் 'உதறித்தள்ள' வென்றோதலானார் எனக் கோடல் மரபாம்.

தொன்று தொட்டு உயிர்க்குயிராய் நின்று வருதலின் 'ஆதி நட்பே' யென்று அளவளாவினர் போலும். (3)

ச. ஆதியந்த மெனுமெழுவா யீறற் றோங்கி
யருமறையின் னமுங்காணு தரற்ற நானு
பேதமதங் களுமலைய மலைபோல் வாதப்
பெற்றியரும் வாய்வாதப் பேய ராகச்
சாதகமோ னத்திலென்ன வடவா னீழல்
தண்ணருட்சந் திரமௌலி தடக்கைக் கேற்க
வேதகசின் மாத்திரமா யெம்ம னோர்க்கும்
வெளியாக வந்தவொன்றே விமல வாழ்வே.

பொழிப்புரை:—உற்பத்தி லயமென்று சொல்லா நின்ற தோன்றல் மறைதல்களில்லா தோங்கப் பெற்றதென்று மேலாய நான்கு வேதங்களும் தேடியிதுகாறுங் காண்டற் கின்றி யலறியோய, பலவேறு வகையான சமயங்க

ளெல்லாம் ஒன்ரேடு மற்ருென்ருக வாததர்க்கமிட, பர்வதத்தைப் போன்று சலித்தலின்றிய வீண்வாத வம்பர்களும் வாசாவிவகாரப் பேயா யலமந்தொழிய, மோக்ஷ யேதுக்களாயுள்ள நன்மை மௌனத்தின் கண்ணுள வென்று (எம்மனோர்க்கு நன்கு புலனுகு மாறு) கல்லால நீழலின்கண் அன்று வீற்றிருந்தருளிய தணிவாய திருவருள் கொண்ட சந்திரசடாதரனே! விசாலித்த ஞான முத்திரையாகியுள்ள நின் திருக்கரங்களுக் கேற்ப எம்மனோர் இயல்பினை மாற்றுவான் கருதி கொண்டருளிய சின் மாத்திர ரூபந்தாங்கி எம் போன்ருர்க்கும் வெளிப்பட வந்தருளிய பரவஸ்துவே! நிர்மல தெய்வீக வாழ்வே! (இது தோத்திர மாத்திரமா யுள்ளதாகும்.)

குறிப்புரை:—அரற்றல் - கதறுதல். மலைதல் - வம்பியற்றல். சாதகம் மோனத்தில் - ஆன்மாக்களுக்கான ஞான மோக்கமாயது மௌன நிலையி னின்றுண்டா மென்றதாம். (4)

௫. விமலமுதற் குணமாகி நூற்றெட்டாதி
வேதமெடுத் தெடுத்துரைத்த விருத்திக் கேற்க
அமையுமிலக் கணவடிவா யதுவும் போதா
தப்பாலுக் கப்பாலா யருட்கண் ணுகிச்
சமமுமுடன் கலப்புமவிழ் தலுமியாங் காணத்
தண்ணருடந் தெமைக்காக்குஞ் சாட்சிப் பேறே
இமையளவு முபகார மல்லால் வேறொன்
றியக்காநிர்க் குணக்கடலா யிருந்த வொன்றே.

பொழிப்புரை:—நான் மறைகளும் நூற்றெட்டு உபநிஷத்துக்களாக வெளிவந்து விரிவாக எடுத்துக் கூறுகின்ற விஷயவிளக்கத்திற் கொத்த நிர்மலமாய குணமுதலாகவுள்ள குணவிசேடங்களை யுடையதாய் அமையப் பெற்றுள்ள இலக்ஷணங்களோடுங் கூடியும், அன்றியும் அப்புறத்திற் கப்புறமாய், சமத்துவமும் மற்றும் உடனுகவொன்று சேர்ந்தும், பின்பிரிதலுமாக அடியேங்கள் காணுமாறு தணிவாய திருவருள் புரிந்து எம்மனோரைக் காத்தருள் புரியும் சாக்ஷிபூதமாகிய ஊதியமே! இமைகொட்டும் நேரமாவது எவர்க்கும் நலம்புரிதலன்றி மற்றொன்றும் புரிதலிலா குணரகிதச் சமுத்திரமாயதோர் உவமையிலா பரம்பொருளே!

குறிப்புரை:—விமலம் - மலமற்றது. நூற்றெட்டாதி - நூற்றெட்டு உபநிடதங்களைக் குறித்தாரென்க. அப்பாலுக் கப்பாலாய் - வெறு வெளிக் கப்பாலுள்ள துரிய வெளியூடிருப்பதாம். இதுவும் பெரும்பாலுந் துதியே யாயதாம்.

"ஒருவனு யுலகேத்த நின்றநாளோ
ஓருருவே மூவுருவமான நாளோ"

என்று அப்பரோதியவாறு ஆசிரியரும் "குணக்கடலாயிருந்த வொன்றே" என்றனர். (5)

சா. ஒன்றாகிப் பலவாகிப் பலவாக் கண்ட
வொளியாகி வெளியாகி யுருவு மாகி
நன்றாகித் தீதாகி மற்று மாகி
நாசமுட னுற்பத்தி நண்ணு தாகி
இன்றாகி நாளையுமாய் மேலு மான
வெந்தையே யெம்மானே யென்றென் றேங்கிக்
கன்றாகிக் கதறினர்க்குச் சேதா வாகிக்
கடிதினில்வந் தருள்கூருங் கருணைவின்னே.

பொழிப்புரை:—ஒப்பற்ற ஒரே தனிப் பொருளாகி, அன்றிப் பல வேறு பொருள்களாகியும், பற்பலவாறாய்க் காணப்பட்ட பிரகாசங்களோடுங் கூடிய பொருள்களாகியும், அன்றி அவைகள் தங்கற் கேதுவாகிய வெளியாகி யும், மற்றும் சொரூபமாயும், நலமுடையதாகியும், தீயனவுமாகியும், இன்னும் இவையல்லா வேறதாகியும், இன்னும் தோன்றல் அழிதலில்லாதாகியும், இன் றையதினமும் நாளையதினமுமாகியும், இதன் மேற்பட்ட காலங்களாகியு முள்ள எந்தந்தையே! எம்பெருமானே! என்றிவ்வாறாகப் பலமுறை யினுங் கூறிபேக்கங் கொண்டு கன்றுக்குட்டியை யொத்துக் கதறியோர் கட்கு அன்றீன்ற பசுவினை யொத்தே அதிவிரைவாக வந்தருளித் திருவருள் புரிகின்ற கருணை சொரூபமாய பரவெளியே!

குறிப்புரை:—
சிவனே சிவனே சிவனே யென்பார் பின்
சிவனுமையா ளோடுந் திரிவன்—சிவனருளாற்
பெற்றவிளங் கன்றைப் பிரியாமற் பின்னோடிச்
சுற்றும் பசுப்போற் றொடர்ந்து.

என்னுமிச் செய்யுட் கருத்திற்கிணங்க, அன்றீன்ற கன்றின் தாய்ப் பசுவானது தன் சேங்கன்றின் சப்தங் கேட்டபோதே தானும் அம்மா அம்மா வென்றலறிக்கொண்டு தன் கன்றை யணைந்து பாலூட்டல்போல உன்னைப் பல நாமங்களால் கூவிக் கதறுவோர்க்கு மிக விரைவாக வந்தருளி அவர் கள் குறை கேட்டருளும் கருணையாள னென்று துதி புரிந்தார் போலும். (6)

எ. அருள்பழுத்த பழச்சுவையே கரும்பே தேனே
யாரமுதே யென்கண்ணே யரிய வான
பொருளனைத்துந் தரும்பொருளே கருணை நீங்காப்
பூரணமாய் நின்றவொன்றே புனிதவாழ்வே

கருதரிய கருத்ததனுட் கருத்தாய் மேவிக்
காலமுந்தே சமும்வருத்துங் கருவி யாதி
யிருவினையுங் கூட்டியுயிர்த் திரளை யாட்டும்
மிழுப்பொருளே யான்சொலும்விண் ணப்பங்கேளே.

பொழிப்புரை:—திருவருளை பழமாகப் பழுத்த அப்பழத்தினது மதுரமே! கரும்பே! அக்கரும்பின் இனிய இரசமே! மதுவே! அரிய தேவாமிர்தமே! எனது கண்களுக் கொப்பானவனே! அரியதாயுள்ள மேலாம் பொருள்கள் எவையும் தந்தருள்கின்ற முதற்பொருளே! காருணியம் நீங்கப் பெறாத பரிபூரண வஸ்துவாய் நிறைந்த வொருதனிப் பொருளே! பரிசுத்த தேவ வாழ்வே! எண்ணுதற்கரிய நினைப்பதனில் உண்ணினைவா யிருந்தருளி காலதேச வர்த்தமானங்களையு முண்டுபண்ணிக் கருவி கரணங்கள் முதலாயுள்ள வினை யிரண்டினையுஞ் சேர்ப்பித்து ஆன்ம கோடிகளை யாட்டுவிக்கின்ற மேலாம் பரம்பொருளே! இச் சிறியவன் சொல்லா நின்ற குறை முறைகளைக் கேட்டருள்வாயாக.

குறிப்புரை:—'அருள் பழுத்த பழச்சுவையே' என்றார். இதனால், சுத்த சன்மார்க்கச் சுசீலர்களான மெய்யன்பர்கள்மீது அவர்கள் பரிபக்குவ நோக்கிக் கருணை கடாக்ஷ வீட்சண்யமுற, அப்போது அம்மெய்யன்பன் அங்கமெலா மின்பமா யமைந்து உடலுருகத் தித்திக்கும் பான்மையாதலால் ஈண்டு ஆசிரியர் அருள் பழுத்த பழச்சுவையை முன்கூறிப் பின்னர் கரும்பே தேனே யென்ற நாச்சுவையைக் கூறினார்; இதனால் நித்திய சுவையை முன்னரும் அநித்திய சுவையைப் பின்னரும் கூறினரென்பது புலனாயது. (7)

அ. விண்ணவரிந் திரன்முதலோர் நார தாதி
விளங்குசப்த ரிஷிகள்கன வீணை வல்லோர்
எண்ணரிய சித்தர்மனு வாதி வேந்தர்
இருக்காதி மறைமுனிவ ரெல்லா மிந்தக்
கண்ணகன்ஞா லம்மதிக்கத் தானே யுள்ளங்
கையினெல்லிக் கனிபோலக் காட்சி யாகத்
திண்ணியநல் லறிவாலிச் சமயத் தன்றோ
செப்பரிய சித்திமுத்தி சேர்ந்தா ரென்றும்.

பொழிப்புரை:—இந்திராதி தேவர்களென்ன, நாரதர் முதலாயுள்ள சப்த ரிஷிகளென்ன, மற்றும் தும்புரு முதலாயுள்ள வீணாகானர்களென்ன, கணக்கற்ற சித்தர் கணங்களென்ன, இன்னும் மநுச் சக்கரவர்த்தி முதலாயுள்ள அநேக முடிமன்னர்களென்ன, இருக்கு முதலாயுள்ள நான்கு வேத பாராயண பராளான முனீந்திராதியர்களென்ன ஆகிய இத்தகையோ

ரனைவர்களும், மட்டற்ற விசாலமாயுள்ள உலகத்தோர்களெல்லாம் மெச்சிக் கொண்டாட, உள்ளங்கை நெல்லிக்கனிபோன்று பிரத்தியக்ஷ மாத்திர மாய் மேலான ஆழ்ந்த மெய்யறிவினாலே இந்த சமயத்தி லிருந்தல்லவா சொல்லற்கரிய அட்டமா சித்திகளும் மோட்ச சாம்பிராச்சி யாதிகளும் பெற்றுய்ந்தார்களென்றும்,

குறிப்புரை :—இந்திராதி தேவ கூட்டங்கள் முப்பத்து முக்கோடிக்கு மேலதிகமாவர். நாற்பத் தெண்ணாயிர ரிஷிகள், மற்றும் சிரஞ்சீவிகளான சப்த ரிஷிகள், இவர்களோடும் கின்னரர் கிம்புருடர் கருடர் காந்தருவர் சித்தர் வித்யாதரர் மற்றுமுள்ள பக்த கோடிகள் ஆகிய இவ்வகையோ ரெல்லாம் வைதிக சைவ சமயிகளே யாவர்கள். சிரஞ்சீவிகளான சப்த ரிஷிகளாவார் :—அகத்தியர், ஆங்கீரசர், காசிபர், கௌதமர், மார்க்கண்டர், புலத்தியர், வசிட்டர் ஆகிய இவர்களாம். இவர்களைவிட்டு வேறு சிலரைக் கூறுவாருமுளர். (8)

௯. செப்பரிய சமயநெறி யெல்லாந் தந்தந்
தெய்வமே தெய்வமெனுஞ் செயற்கை யான
வப்பரிசா ளருமஃதே பிடித்தா லிப்பா
லடுத்ததந்நூல் களும்விரித்தே யனுமா னாதி
யொப்பவிரித் துரைப்பரிங்ஙன் பொய்மெய் யென்ன
வொன்றிலையொன் றெனப்பார்ப்ப தொவ்வா தார்
மிப்பரிசாஞ் சமயமுமா யல்ல வாகி [க்கு
யாதுசம யமும்வணங்கு மியல்ப தாகி.

பொழிப்புரை :—சொல்லரிய எல்லாச் சமயப் போக்குகளும் தத்தம் கடவுளையே கடவுளாகச் சித்தாந்தித்துப் பேசும் ; அவ்வாறு பேசாநின்ற வர்களாய அம்மதத்தினர்களும் அம்முடிபினையே கடைப்பிடியாக் கொண்டுள ரேல், இதன்மேல் தங்கட்குரியனவாகிய சமய சாத்திராதிகளை விவரித்து அநுமானப் பிரமாணங்களைக் கூறிப்பொருந்துமாறு பேசி வருவார்கள் ; ஆகவே, இவ்வாறு ஒன்று பொய் மற்றொன்று மெய்யென்றும், ஒன்றுண்டு, இன்னொன்றில்லை யென்றும் ஆராய்ந்தறிதல் எவர்க்கும் ஒத்துவாரா. இவ் வகையாயுள்ள சமயங்களாயும், அவையல்லனவாயு மிருக்க, எந்தச் சமயத்த வர்களும் வணங்கக் கூடியதான தன்மையை யுடைத்தானதாகி.

குறிப்புரை :—உலகினர்க்குப் பிரமாணங்களாயுள்ளன வேதாகம சாத் திரங்களேயாம். இவைகளைப் பிரதான பிரமாணங்களாகக் கொண் டநுஷ் டித்து வரும் ஆன்மாக்களார், தத்தம் மதாசார கிரமா கிரமங்களையும் கட வுள் தத்துவாதி நிர்மாணாதிகளையும் உய்த்துணரும்போது அவைகட்குரிய

காரணகாரிய சுருதியுக்தி யனுபவங்களை போதிய ஆதாரவாய் முடியும். ஆதியில் எந்த சமயம் எந்த ஆசிரியரால் நிருமிக்கப் பெற்றதோ அஞ்ஞான்றே அதற்கு வேண்டிய ஆதாரவோடும் அமைந்தே யிருத்தல் இயல்பாதலால் ஓர் சமயத்தார் மற்ற சமயத்தவரை வாது செய்து கண்டித்தற்கு மிக்க அவசியமான ஏது விருத்தல் வேண்டும்; அன்றி அச்சமய கடவுளரும் சமயம் நேர்ந்துழி முன்வந்தனுக்கிரகித்தல் வேண்டும்; இங்ஙனமில்லாது தம்மத மேம் பாடொன்றை மட்டும் அபிமானித்து விதண்டை செய்தல் எவ்விதத்து மடாதாகுமாதல் கொண்டே நந்தாயுமானாரும் நூற்றுவக்கு முதற்பாவிலேயே "சமய கோடிகளெலாந் தந்தெய்வ மென்றெய்வ மென்றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதெது அது நம் கருத்திற் கிசைந்தது" என்றருளினமையே சான்றும்.

வேறு வேறாகியோடும் விரிநதிக் குலங்களெல்லாங்
கூறு முன்னீரிலொன்றாங் கொள்கைய தாகுமாபோல்
வேறு வேறாகி நின்ற விதிவழிச் சமயமெல்லாங்
கூறு முத்தியினி லொன்றாங் கொள்கைய தாகுமன்றே.

என்னுமிப் பெரியார் கூற்றைத் தழுவியதாமென்க. அநுமானாதிப் பிரமாணங்களை மற்றோர் பால் காண்க. முன்னீர் - சமுத்திரம். (9)

௰. இயல்பென்றுந் திரியாம லியம மாதி
யெண்குணமுங் காட்டியன்பா லின்ப மாகிப்
பயனருளப் பொருள்கள்பரி வார மாகிப்
பண்புறவுஞ் சௌபான பக்ஷங் காட்டி
மயலறுமந் திரஞ்சிக்ஷை சோதி டாதி
மற்றங்க நூல்வணங்க மௌன மோலி
யயர்வறச்சென் னியில்வைத்து ராசாங் கத்தி
லமர்ந்ததுவை திகசைவ *மழகி தன்றே.

பொழிப்புரை:—எக்காலத்தினும் தன்னியர்க்கையாஞ் சுபாவம் மாறுபடாது இயமநியமங்களான எண்வகைக் குணங்களையுங் காண்பித்து அன்பு மீதுற பேரானந்த மெய்திப் பதமருள்வான் கருதி, பொருள்களென்ன, பரிவாராதிகளென்ன ஆகிய இவ்வகைக் குறிகளெல்லாம் பொருந்துமாறு படித்தரமான நிலையினையு மறிவித்துப் பின்னர் மனமயக்கறும் வகைக்குக் காரணமாய மந்திரங்களென்ன, சிக்ஷையென்ன சோதிட முதலாகிய இதர அங்க சாத்திரங்களென்ன இவைகளெல்லாந் தொழுமாறதாய் மௌன முத்திரையான கிரீடத்தினை வெகு வீரமாய்ச் சிரஞ் சூட்டி இராஜ கோல

* 'அழகி தன்றோ' என்றும் பாடமுண்டு.

மாயமர்ந்துள்ளது வேத சாத்திரோக்தமாய வைதீக சைவசமய அழகிது வன்றோ !

குறிப்புரை :—இயம மாதி எண்குணமாவது :—இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி யென்பன. இவற்றின் விரிவை நூல்வழியறிக. மந்திரம், சிட்சை, சோதிடாதியாவது :—வேதாங்கங்களாகும். இவை வடநூற்பிரிவாம் ; அஃதாவது மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம் என்பன அறுநூன் முடிபென்பர். இவை வடநூலாராய்ச்சியிற் காண்பது.

ஞான யேதுவாம் மோன நிலை பெறுதலையே மோக்ஷ மார்க்கானுகூலமாதலால் அதற் காதார பூதமாய சைவ சமயத்தையே முடியாகக் கற்பித்தன ரென்க ; அன்றி இச்சைவ சமயமே மற்றெச்சமயங் கட்கும் விசேடித்த தாகலின் " வைதிக சைவ மழகிதன்றோ " என்றார் ஆசிரியர்.

ஊன்மறை போலாது, தேன் மறையாம் நான் மறைகட்குப் புறமாய உலகாயத மாதியா மற்றைச் சமயங்களைக் கடத்தற்கான படியன்ன சரியை கிரியா யோக ஞானமார்க்கங்களை மிக்க விகசிதமா யோதலின் வைதிக சைவத்தினை நன்கு பாராட்டலாயிற்றென்க. (10)

௰க. அந்தோவீ ததிசயமிச் சமயம் போலின்
றறிஞரெல்லா நடுவறிய வணிமா வாதி
வந்தாடித் திரிபவர்க்கும் பேசா மோனம்
வைத்திருந்த மாதவர்க்கு மற்று மற்றும்
இந்த்ராதி போகநலம் பெற்ற பேர்க்கும்
இதுவன்றித் தாயகம்வே றில்லை யில்லை
சந்தான கற்பகம்போ லருளைக் காட்டத்
தக்கநெறி யிந்நெறியே தான்சன் மார்க்கம்.

பொழிப்புரை :—அந்தோ ! இது மெத்த ஆச்சரியமாகும், ஆகையினாலே இவ்வைதிக சைவம் போன்று வேறோர் சமயமும் இல்லையாகும். ஞானஸ்தரெல்லாம் நடு நிலையாயிருந்து ஆராய்ந்தறிந்த மட்டில், அணிமா முதலிய சித்திகள் கைவரப் பெற்று விளையாடுபவர்க்கும், வாய்திறவா மோனங் கொண்டு ஞான மார்க்கத்தில் பற்றுக் கோடாயிருந்து வந்த மகாதவ சிரேட்டர்களுக்கும், மேன்மேலும் இந்திர போகானுபவங்களை யடைந்துள்ள தெய்வீகர்கட்கும் இவ்வைதிக சமய மல்லாது, வேறு தற் சுதந்தர மான சமயநிலை கிடையாவாம் ; சந்தானம், கற்பகம் என்னும் தேவ தாருக்களைப் போன்று திருவருட்டிறம் வெளிவந்தருளு மார்க்கம் இச்

சைவமேயாம். ஆதல் கொண்டே இம்மார்க்கத்தினைச் 'சன் மார்க்க' மென்றனர் மேலோர்.

குறிப்புரை :—அந்தோ - இஃது ஓர் ஆச்சரிய குறிப்புரையாம். அணிமா - அட்ட சித்துகளி லொன்றாகும். இது சித்தர்க்குரிய தொழில்.

கற்பகம், சந்தானம் அரிச்சந்தனம், பாரிசாதம், மந்தாரம் இவ்வைந்து விருக்ஷங்களும் தேவலோகத்துள்ள தேவதாரு வென்னும் பெயர் பெற்றுள்ளன. (11)

௰௨. சன்மார்க்க ஞானமதின் பொருளும் வீறும்
சமயசங்கே தப்பொருளுந் தானொன் றாகப்
பன்மார்க்க நெறியினிலுங் கண்ட தில்லை
பகர்வரிய தில்லைமன் றுட் பார்த்த போதங்
கென்மார்க்க மிருக்குதெல்லாம் வெளியே யென்ன
எச்சமயத் தவர்களும்வந் திறைஞ்சா நிற்பர்
கன்மார்க்க நெஞ்சமுள வெனக்குந் தானே
கண்டவுட னானந்தங் காண்ட லாகும்.

பொழிப்புரை :—சன்மார்க்கமான சைவ மார்க்கமும், அதன் சார்பாயுள்ள மெய்ஞ்ஞானப் பொருள்களும், மற்றும் தம்மார்க்கமே மிகு நன்மார்க்கமென்று இறுமாப்பு வார்த்தைப் பேசும் இதர சமய சாத்திரங்களால் நிச்சயித்துள்ள அருத்த வாதமும் ஓர் நிலை கொண்டிருப்ப பலவேறு சமயக் கொள்கைகளிலுங் கண்டாயில்லை; சொலற் கரியதாயுள்ள தில்லைச் சிற்சபையின் கண்ணே போய்ப் பார்த்த அக்கணத்தே அவ்விடத்து என்ன மார்க்கந் தெரிகின்றது! அனைத்தும் பராகாயமே யென்று எந்த சமயத்தார்களும் ஆண்டு வந்து வாழ்த்தா நிற்பர்; கல்லொத்த திட்பமான மனத்தினனுய அடிமையேற்கும் தரிசித்த போதே பரமானந்தப் பரவச மாயிற்றன்றே.

குறிப்புரை :—பஞ்சபூத ஸ்தலங்கள் ஐந்தனுள்ளே சிதம்பரம் ஞானாகாய தலமாதலான் ஆண்டு மெய்யடியார்க்குப் பரஞான வெளியாய்த் தோற்றுவித்தல் மரபாதலின் ஆசிரியர் தரிசித்தவப்போது பராகாயமாய்த் தோற்றலின், அதுகொண்டே ஆண்டு சர்வமும் வெளியே யென்றும், அதோடு நில்லாது "எச்சமயத்தோர்களும் வந்திறைஞ்சா நிற்பர்" என்றும், "பன்மார்க்க நெறியினிலுங் கண்டதில்லை" என்றும், அந் நடராஜவள்ளலைக் "கண்டவுடன் ஆனந்தங் காண்டலாகும்" என்றும் உள்ளமுவந்தருளினதறிக.

சங்கேதம்=சமய நியமம். (12)

௰௩. காண்டல்பெறப் புறத்தினுள்ள படியே யுள்ளுங்
காட்சிமெய்ந்நூல் சொலும்பதியாங் கடவு ளேநீ
நீண்டநெடு மையுமகலக் குறுக்குங் காட்டா
நிறைபரிபூ ரணவறிவாய் நித்த மாகி
வேண்டுவிருப் பொடுவெறுப்புச் சமீபந் தூரம்
விலகலணு குதன்முதலாம் விவகா ரங்கள்
பூண்டவளவைகண்மனவாக் காதி யெல்லாம்
பொருந்தாம லகம்புறமும் புணர்க்கை யாகி.

பொழிப்புரை :—எவர்க்கும் நிதரிசனமாக பகிர்முகத்துள்ள வாறு கவே அகமுகத்தும் தோன்றி நிற்கும் என்று மெய் நூல்கள் கூறு நிற்கும் பதியாகிய பரதெய்வமே! நீயோ, நீட்சியான நெடுக்கும் அகலமானதும் குறுக்கிடமும் (அமையப் பெற்று) விளங்காது எங்கணும் வியாபித்துள்ள ஞானகாரமாயும், அழிவிலாச் சத்துவமாயும், யாரும் அபேட்சிதமான ஆசையோடு துவேஷமு மாகியும், சேய்மை அண்மை யாகியும், பொருந்தல் பிரிதல்களுமாகிய பலவாறான நிலைமைகளும், மற்றும் அளவைக் கணக்குகளும், மனத்தினும் வாக்கினும் அமையாதும் உள்ளும் புறமும் பொருந்தியதாய்.

குறிப்புரை :—

'சிவனுருவருவு மல்லன் சித்தினோ டசித்து மல்லன்'—என்றும்,
'ஆணல்லார் பெண்ணுமல்லார் அதிகை வீரட்டனாரே'—என்றும்,
'பெண்ணோ டாணென்று பேசற்கரியவன்'—என்றும்,
'ஒருநாம மோருருவ மொன்றுமிலார்'—என்றும்,

இங்ஙனம் அநேக உவமைகளால் யாதொரு அம்சமும் தனக்கென அமையைப் பெறாத அமலன் யென்ற அநந்த வாக்கியங்களுள வாதலால் ஆசிரியரும் ஒருருவு நிலையாக் கொண்டிலா னென்றமையை ஈண்டு விரித்துத் துதித்தனரென்க.

ஆகவே, எல்லாமா யல்லதுமா யெங்கு நிறைந்தவனுயிற் றென்பாம். (13)

௰௪. ஆகியசற் காரியவூ கத்துக் கேற்ற
வமலமாய் நடுவாகி யனந்த சத்தி
யோகமுறு மானந்த மயம தாகி
யுயிர்க்குயிரா யென்நாளு மோங்கா நிற்ப
மோகவிருண் மாயைவினை யுயிர்கட் கெல்லா
மொய்த்ததென்கொ லுபகார முயற்சி யாகப்

பாகமிக வருளவொரு சத்தி வந்து [கொல்
பதிந்ததென்கொ லுனெனுமப் பான்மை யென்.

பொழிப்புரை :—இவ்வாறாய நித்திய கிருத்தியங்கட்குரிய யுக்திக்குப் பொருத்தமாயுள்ள மல மில்லாததாய், நடுநிலைமை யுடையதாகி, கணக்கற்ற சக்தி தேவதைகளின் சம்யோகானந்த சொரூபமாய், மற்றும் உயிர்களுக்கு டன்றுயிராகி யெக்காலங்களிலும் விருத்தி பெற்றிருப்ப, கேவலம் அவித்தையாம் அவிவேகமாய விருளும் அதற்கிசைந்த மகா மாயையும், இதனா லேற்படும் இருவினையாதிகளும் சகலமான ஆன்மாக்களுக்கும் வந்துற்றது யாதுகாரணமோ? பின்னும் அம்மாயையால் நிகழ்த்தா நின்ற உபகார காரியமே ஆன்மாக்களது முயற்சியாகப் பரிபாக நிலையினை யருளுமாறு ஓர் சத்தி தேவதை வந்து அடுத்ததற்குக் காரணமென்ன? இவையன்றி, நானெனக் கூறும் அச் சுபாவம் ஏற்பட்டதற்குக் காரணமும் யாதோ?

குறிப்புரை :—

பிரமகீதை கேனோபநிடதம்.

எப்பொருளு மாயையினா லெனச்சிலவறியம் புவர்கள்
மெய்ப்பரமன் றனையொழிய வேறொரு மாயையுமில்லை
ஒப்பரிய பரனொழிய வொருமாயை யுண்டாகில்
அப்பரமன் றன்பெருமைக்கது நேரேயழிவன்றோ.

என்னும் இவ்வமிர்த மொழியின் தாற்பரியத்திற் கிணங்க இறைவனும், அநாதி கேவல மாயா பந்த ஆன்மாக்களது அஞ்ஞான வழுக்கினைத் துலைப்பித்து சுத்தாத்தும பரிபக்குவர்களாக்குமாறு தன் ஒப்பற்ற சக்தியையேவேறு பிரித்து மாயாவனிதையாய்க் கற்பித்துக் கொண்டு வண்ணான் வேஷ்டியின் அழுக்கை நீக்குமாறு முதற்கண் வேறோர் அழுக்கான சாணத்திற் கலந்து பின்னர் துல்யமாக்குவது போல ஆன்மாக்களது அஞ்ஞான வழுக்கைத் துலைப்பித்துப் பரிபக்குவர்களாக்கு வித்து முடிவில் அன்பால் தன்பால் அடைக்கலப் படுத்து கின்றானென்பது துலங்க ஆசிரியர் ஒவ்வொரு முறையையும் பக்த கோடிகள் நன்குய்த் துணருமாறு சங்கை யுத்தர ரீதியாக அருளியுள்ளாரென நன்கு புலனாகின்றது. (14)

டு. நானென்னு மோரகந்தை யெவர்க்கும் வந்து
நலிந்தவுடன் சகமாயை நானா வாகித்
தான்வந்து தொடருமித்தால் வளருந் துன்பச்
சாகரத்தின் பெருமையெவர் சாற்ற வல்லா
ரூனென்று முடலென்றுங் கரண மென்று
முள்ளென்றும் புறமென்று மொழியா நின்ற

வானென்றுங் காலென்றுந் தீநீ ரென்று
மண்ணென்று மலையென்றும் வனமதென்றும்.

பொழிப்புரை :—எதனிலும் நான் நான் என்று சொல்லுகின்ற ஓர் கெர்வித வார்த்தையானது எல்லோர்பாலு மிருந்து வந்து அவர் தம்மைத் துன்புறுத்திய பின்னர் உலகமகாமாயையானது பல வேறு வகைத்தாய் வந்து பின்னும் சேர்ந்துவிடும் ; ஆகவே இம்மாயையால் உண்டாகின்ற துக்கமானது கடலினும் விரிந்து விடுவதை சொல்ல வல்லவர் யாவரோ! இன்னும், மாம்சாதி யெனவும், இதனுற் சமைந்துள்ள சரீரமென்றும், இதனுள் வியாபித்துள்ள கருவிகரணுதிகளென்றும், இன்னும் அகம்புறமென்றும், நீங்குதலில்லாத ஆகாயவெளியென்றும், அதனுள் உலவும் காற்றெனவும், அக்னி, தண்ணீரெனவும், பூமியெனவும், பர்வத மெனவும், காடு எனவும்.

குறிப்புரை :—இதனுல், மாயா சித்ரம் மா விசித்திர மென்பதாயிற்று. இந்த வுலகமே மாயையின் கற்பிதமென்றால் அதன் விசித்ரம் இவ்வளவென்று சொல்லவும் படுமோ என்னுங் கருத்தானே " துன்பசாகரத்தின் பெருமையை எவர் சாற்றவல்லார் " என்றார் ஆசிரியர். (15)

மசா. மலைமலையாங் காட்சிகண்கா ணுமை யாகி
மறப்பென்று நினைப்பென்று மாயா வாரி
யலைபலையா யடிக்குமின்ப துன்ப மென்று
மதைவிளைக்கும் வினைகளென்று மதனைத் தீர்க்கத்
தலைபலவாஞ் சமயமென்றுந் தெய்வ மென்றுஞ்
சாதகரென் றும்மதற்குச் சாக்ஷி யாகக்
கலைபலவா நெறியென்றுந் தர்க்க மென்றுங்
கடலுறுநுல் மணலெண்ணிக் காணும் போதும்.

பொழிப்புரை :—இவ்வுலகத்தின் கண்ணே மலையிலக்காகக் காண்கின்றதான கண்காக்ஷிகளும், கண்களுக்கு அகப்படாதுள்ளதும், இவை முதலாய நினைத்தல் மறத்தலாதிகளும் மாயையாங் கடலினிடத்து அலையலையாக வீசாநின்ற சுககஷ்டாதிகளென்றும், இவற்றினைத் தோற்று விக்கின்ற நல்வினை தீவினையென்றும், இவைகளை யொழிப்பான் காரணமாய் பற்பல மத மார்க்கங்களென்றும், இச்சமயக் கொள்கையாந் தெய்வங்களென்றும், மற்றும் பழக்கமுளாரென்றும், இவர்க்கு பிரத்தியக்ஷ சாக்ஷியர்களாகப் பற்பல சாத்திராதிகளாற் கூறத்தக்க மார்க்கங்களெனவும், மற்றும் நியாய நீதிமுறைகளென்றும், சமுத்திரத்திலுள்ள நுட்ப மணலை யெண்ணிய தன்னைக் கைக்காண்கின்ற காலத்திலே.

குறிப்புரை :—ஆன்மாக்களது வாழ்க்கையிலுள்ள மட்டற்ற இன்ப துன்ப முதலியவைகளைச் சீர்தூக்கிப் பார்க்கும்போது முடிவாகப் பலவிதத் தும் விளைவது கஷ்ட நிஷ்டூரமென்றும், இவை கணக்கிட வியலாதென்ப தோடு நிறுத்தாது கடல் மணலெண்ணியறிதற் பான்மையதென்றும் கூறு கின்றனர் என்க.

தணிகைப் புராணம்

தேவ ராயினு ரின்பமே நரகினிற் றிளைக்கும்
பாவ ராயினுர் துன்பமே படரிரு பயனும்
பூவ ராயின ரேநுகர் வாரெனப் புகல்வார்
காவ ளுன்முக னிடும்பைநோய் கண்டிலார் போலும்.

என்றார் பெரியார். (16)

௰எ. காணரிய வல்லலெல்லாந் தானே கட்டுக்
கட்டாக விளையுமதைக் கட்டோ டேதான்
வீணினிற்கர்ப் பூரமலை படுதீப் பட்ட
விந்தையெனக் காணவொரு விவேகங் காட்ட
ஊணுறக்க மின்பதுன்பம் பேரூ ராதி
யொவ்விடவு மெனைப்போல வுருவங் காட்டிக்
கோணறவோர் மான்காட்டி மானை யீர்க்குங்
கொள்கையென வருமௌன குருவாய் வந்து.

பொழிப்புரை :—அளவிடற் கரிதான கஷ்டங்களனைத்தும் அடுக்கடுக் காக உண்டாவதாகும்; இவ்வித துன்ப வுற்பவத்தை அப்படியே பயனற்ற தாக, கர்ப்பூரமய பர்வதமாயது நெருப்புப் பற்றி யெறிந்து சூன்யமான ஆச்சரியத்தை யொத்த ஓர் நல்லறிவூட்ட வேண்டி ஆகார நித்திரையும் சுகதுக்காதிகளும் மற்றும் ஊர் பேராதிகளும் பொருந்த வியலாதும், என்னை யொத்த மானிடவுருக்கொண்டு மான் விட்டு மற்றோர் மானை யிழுப் பது போன்று திருவருட் சகித மோன குருமூர்த்தியாக வந்து.

குறிப்புரை :—ஆசிரியர், கணக்கற்ற துன்பங்களினின்றும் நீங்கி இன் புற்றுய்யுமாறு இறைவன் மானிட வுருவோடு மௌனகுரு மூர்த்தமா யெழுந் தருளி வந்தமையை விளக்கினராக. (17)

௰அ. வந்தெனுடல் பொருளாவி மூன்றுந் தன்கை
வசமெனவே யத்துவா மார்க்க நோக்கி
யைந்துபுல னைம்பூதங் கரண மாதி
யடுத்தகுண மத்தனையு மல்லை யல்லை

யிந்தவுட லறிவறியா மையுநீ யல்லை
யாதொன்று பற்றினத னியல்பாய் நின்று
பந்தமறும் பளிங்கனைய சித்து நீயுன்
பக்குவங்கண் டறிவிக்கும் பான்மை யேம்யாம்.

பொழிப்புரை :—மௌனகுரு மூர்த்தமா எழுந்தருளிவந்து எனது சரீரம், திரவியம், ஆத்மா என்னும் இம்மூன்றையும் தனது உரிமையாகக் கொண்டருளி அத்துவித மார்க்கத்தினைப் பற்றி ஐவகைப் புலாதிகளும், பஞ்சபூதப் பொருள்களும், மற்றும் அந்தக் கரணங்களாகிற மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்பது முதற்கொண்டு மற்றுமுள்ள குணங்கள் யாவும் நீயல்ல; இந்த சரீரமும், அறிவும், அறியாமை யென்னும் அஞ்ஞானமும் நீயாகமாட்டாய்; யாதாமோர் பொருளினை பற்றி, அதே மயமாயிருந்தால் அதனது சம்பந்தம் நினைக்கின்றி, ஸ்படிகக் கல்லொத்த ஞானப் பொருளாக நீ யிருக்கின்றாய்; நின் படித்தர மறிந்து உபதேசிக்கும் சுபாவமுடையேம்யாம்.

குறிப்புரை :—"உன் உடலும் அதிற் பொருந்திய தத்துவாதிகளும் நீயாகமாட்டாய்; ஆனால் பின்னெது வெனில், உன் உயிர்க்கு உறுதி பயக்கும் சித்துப் பொருளே யென்றுணர்வாய். யாமோ நின் பரிபக்குவங் கண்டோதுவிப்பாம்" என்றனர் குருநாதர். அத்துவா மார்க்கம் - இரண்டும் ஒன்றா யிருப்பது. (18)

கசு. அறிவாகி யானந்த மயமாய் யென்று
மழியாத நிலைபாகி யாதின் பாலும்
பிறியாமற் றண்ணருளே கோயி லான
பெரியபரம் பதியதனைப் பெறவே வேண்டி
னெறியாகக் கூறுவன்கே ளெந்த நாளு
நிர்க்குணநிற் குளம்வாய்த்து நீடு வாழ்க
செறிவான வறியாமை யெல்லா நீங்க
சிற்சுகம்பெற் றிடுகபந்தந் தீர்க வென்றே.

பொழிப்புரை :—ஞானமாகி, ஆனந்த சொரூபமாகி, என்று முள்ளதாகி எதன்பாலும் விலகுதலன்றி தண்மையான திருவருளையே ஆலயமாக் கொண்ட பெருமையதாகிய பரமபதியை அடைய ஆசைப்படுவையே யானால் கிரமமா யுரைப்பேன் அதனைச் செவிகொடுப்பாயாக :—எப்போதும் குணரகிதப் பொருளானது நினது மனதிற்கொண்டு வெகுகாலம் வாழ்வாயாக; மற்ற மடமையாயுள்ள எவையும் விலக ஞானனந்தத்தைப் பெற்றுய்வாய்; பிறப்பிறப்பு பந்த மறுக; எனக் கூறி. (19)

உ௰. பந்தமறு மெய்ஞ்ஞான மான மோனப்
பண்போன்றை யருளியந்தப் பண்புக் கேதான்
சிந்தையில்லை நானென்னும் பான்மை யில்லை
தேசமில்லை காலமில்லை திக்கு மில்லை
தொந்தமில்லை நீக்கமில்லை பிரிவு மில்லை
சொல்லுமில்லை யிராப்பகலாந் தோற்ற மில்லை
யந்தமில்லை யாதியில்லை நடுவு மில்லை
யகமுமில்லை புறமுமில்லை யனைத்து மில்லை.

பொழிப்புரை :—பாசபந்த மொழிதற் கேதுவான உண்மை ஞானமாயுள்ள மௌன நிலையாயுள்ள உயர் வொப்பில்லாப் பொருளினையருளி, அந்நிலைமைக்கு நினைவில்லை, நானென்கின்ற சுபாவமு மில்லையாகும்; அன்றி காலமும் இடமுமில்லையாகும்; திக்குதிசையில்லை; தொடர்புமில்லை; ஒழிபில்லை; இவைக்கு அன்னியமேது மில்லையாகும்; வசனிப்பில்லை; இரவு பகலென்கின்ற தன்மையு மில்லையாகும்; அடி நடு முடியென்பது மில்லையாம்; உள்ளுமில்லை வெளியுமில்லை; எவையுமில்லை.

குறிப்புரை :—சற்குருநாதன் அருளியதை ஒருவாறு, சொல்லாது சொல்லிக் குறிப்பிக்கின்றார். (20)

உக. இல்லையில்லை யென்னினொன்று மில்லா தல்ல
வியல்பாகி யென்றுமுள்ள வியற்கை யாகிச்
சொல்லரிய தன்மையதா யான்று னென்னத்
தோன்றுமெல் லாம்விழுங்குஞ் சொரூபமாகி
யல்லையுண்ட பகல்போல வவித்தை யெல்லா
மடையவுண்டு தடையறவுன் னறிவைத் தானே
வெல்லவுண்டிங் குன்னையுந்தா னாகக் கொண்டு
வேதக மாய்ப் பேசாமை விளக்குந் தானே.

பொழிப்புரை :—இல்லையில்லையென்று கூறுவதால் யாதும் இல்லாமையாகா, (செயர்க்கையினாலே மத்தியில் வந்ததேயல்லாது) எப்போது மிருந்த வியர்க்கையாகி, கூறரிய சுபாவமுள்ளதாய், யான்தான் என்று விவரிக்க வொண்ணாது அனைத்தையும் தன்னுள்ளாக்கு விக்கின்ற பெரியதோர் சொருபமாகி, இருளையொதுக்கும் ஆதவன் போன்று அவிவேக மனைத்தையும் முற்றிலும் போக்கி, யாதொரு தடங்கலுமில்லாது போக, நின் விவேகத்தினை வெற்றிகொண்டு விழுங்கி இவ்விடத்தே (விவகரிப்பான் காரணமாக) துவந்தப் பொருளாம் நின்னைத் தற்பத மென்றுந் தானாக்கொண்டு, மௌன

நிலையாயது நினது தன்மையை பிரித்தறிவதாய் நினக்கு நன்குறத் தெரிவிக்கும்.

குறிப்புரை :—அவித்தை - அஞ்ஞானம். வேதகம் - பிரிவுசெய்தல். தடைகளாவது - அவிவேகம், ஐயப்பாடு, விபரீதம் என்பவையாகும். ஈண்டு பரப்ரம்ம பாவமொழிதல் அவிவேகமாம். குருமொழியில் ஐயம் சந்தேகமாகும் ; உலகம் மெய்யெனவும் தேகம் தானெனவுங் கோடலே விபரீதமாகும்.

கைவல்ய நவநீதம்

பிரமபா வனையை மூடிப் பேதங் காட்டுவதஞ்ஞானம்
குரவன் வாக்கிய நம்பாமற் குழம்பினமனஞ் சந்தேகந்
திரமறு சகமெய்யென்றுந் தேகநானென்று முன்னே
விரவிய மோகந்தானே விபரீத மென்பர் மேலோர். (21)

உ௨. தானான தன்மயமே யல்லா லொன்றைத்
தலையெடுக்க வொட்டாது தலைப்பட் டாங்கே
போனாலுங் கர்ப்பூர தீபம் போலப்
போயொளிப்ப தல்லாது புலம்பவே நின்று
ஞானகா ரத்தினொடு ஞேய மற்ற
ஞாதுருவு நழுவாம னழுவி நிற்கு
மானாலு மிதன்பெருமை யெவர்க்கார் சொல்வா
ரதுவானா லதுவாவ ரதுவே சொல்லும்.

பொழிப்புரை :—சகல பதார்த்தங்களும் தானேயாகிய தனது சொரூபமேயல்லாது வேறெவற்றினையு முன்வரச் செய்யாது ; முன்வந்து ஆங்கே போனபோதிலும் கர்ப்பூரச் சுடரையொப்ப ஒன்று சேர்ந்து மறைந்தொழிவதன்றி நின்விவேகம் வேறதாகிய ஓர் பொருள் இல்லாமற்போம் ; மற்றும், ஞான சொரூபத்துடனே ஞேயமும் ஞாதுருவும் நீங்குதலின்றியே நீங்கிப் போம் ; இதன் தத்துவத்தை யார்க்கு எவர் சொல்லுதற்கு வல்லவராவர் ? ஆகவே அதுவாகிவிட்டால்தான் முன்னுள்ள தன்மை விளங்காதபடி அதுவாகவே ஆகிவிடுவர் ; (அப்போது) அந்தப் பொருளே அதன் பெருமிதத்தைப் பற்றி எடுத்தோதும்.

குறிப்புரை :—தன்மயம் - தன் சுபாவம். ஞாதுரு, ஞான, ஞேயம் இம் மூன்றற்கும் பொதுப்பட திரிபுடி யென்பர். அஃதாவது காண்பான், காக்ஷி, அறியப்படும் பொருள் என்ப. (22)

உ௩. அதுவென்று லெதுவெனவொன் றடுக்குஞ் சங்கை
யாதலினா லதுவெனலு மறவே விட்டு

மதுவுண்ட வண்டெனவுஞ் சனக ஞாதி
மன்னவர்கள் சுகர்முதலோர் வாழ்ந்தா ரென்றும்
பதியிந்த நிலையெனவு மென்னை யாண்ட
படிக்குநிரு விகற்பத்தாற் பரமானந்தக்
கதிகண்டு கொள்ளவுநின் னருள்கூ ரிந்தக்
கதியன்றி யுறங்கேன்மேற் கருமம் பாரேன்.

பொழிப்புரை :—அதுவேயென்று சொல்வோமாயின், அது எதுவென் னுங் கேள்வியொன்று தோன்றும்; ஆகையால் அதுவென்று கூறுவதும் முற்றிலுமே யொழித்து மதுவருந்தியுள்ள வண்டைப் போலவும் சனகன் முதலாகிய அரசர்கள் என்ன, சுகாதி முனிவர்களென்ன இவர்களெல்லாம் வாழ்ந்தன ரெனவும், ஆகவே 'இந்த நிலையிலேயே பற்றி நிற்பா' யென்று கட்டளையிட்டு ஆட்கொண் டருளியவாறு நிர்விகற்ப சமாதிகொண்டு அதி விசேடமாகிய பேரின்ப கதியினைப் பெற்றுய்யும்படியாகவும் தமது மேலாகிய திருவருளைப் பாலிப்பாயாக. இக் கதியினைப் பெற்றாலன்றி நித்திரை செய் யேன், அன்றிவேறு காரியாதிகளையும் கவனியேன் என்றபடி.

குறிப்புரை :—மது - தேன். சனகனாதி மன்னராவார் - சனகன், பகீ ரதன், மாபலி, சிகித்துவசன் என்க. மற்றும் சுகராதியர்க்குச் சமய நேர்ந் துழி நேர்ந்த சந்தேக விபரீதாதிகளைத் தெளிவித்தோதி வந்தமையின் அவ்ராதியரை முன்னுரைத்துப் பின்னர் சுகாராதியரைக் கூறினராக.

இப் பாசுரத்தால் நிருவிகற்ப சமாதியினாலேயே சகல பதவிகளையும் பெறலா மென்பது சாரமாகத் தெரிந்தனர் போலும்.

1. கண்ணே விருங்கதிரோ காரிருளோ யானுவன்
மண்மிசையி லென்போல வந்தருளி—வண்ணமலர்க்
கைத்தலத்தா லென்னுடைய காயமுயிர் பொருளுந்
தத்தமென வாங்கினாய் சாற்று.

2. சனகர் சனற்குமார் சனந்தரர் சனாதர்
முனிவரர்க்கு ஞான மொழிந்த—முனைவனே
என்போல வந்திங்கே யென்னை யெனக்குமறை
பொன்போலத் தந்தார் பொருள்.—என்றார் பிறரும். (23)

உச. பாராதி விண்ணனைத்து நீயாச் சிந்தை
பரியமட லாவெழுதிப் பார்த்துப் பார்த்து
வாராயோ வென்ப்ராண நாதா வென்பேன்
வளைத்துவளைத் தெனைநீயா வைத்துக் கொண்டு

பூராய மாமேலொன் றறியா வண்ணம்
புண்ணூளர் போனெஞ்சம் புலம்பி யுள்ளே
நீராள மாயுருகிக் கண்ணீர் சோர [பேன்
நெட்டுயிர்த்து மெய்ம்மறந்தோர் நிலையாய் நிற்

பொழிப்புரை :—மண்முதலாக ஆகாயம்வரை யுள்ள ஐம்பூதங்களும், இவைகளா லாகியுள்ள பஞ்சீகரண இயர்க்கைச் செயர்க்கை பௌதிகங் களும் தானேயாகப் பாவித்து யென் னெஞ்சத்தைப் பெரிய பனையேடாகக் கொண்டு அதிலே யீதெல்லா மெழுதிப் பலமுறையும் பார்த்து, எனது ஆவித்துணையே! என்பால் (கிருபை கூர்ந்து) எழுந்தருளாயோ வெனக் கூறுவேன்; பின்னும் நீ யெளியனை அடிக்கடி தாமே தம்வசமாக்கிக் கொள்வையேயாயின் இதன்மேல் யாதாமோர் காரியங்களும் ஆதியோடந்த மாக மனதிற் கொள்ளா வண்ணம் யோசியாதபடி கேவலம் புண்ணுளியரை யொத்து மனம் வருந்தி யுருகி கண்களிலே நீர் சொரிய பெருமூச்சு விட்டு இச் சரீரத்தையு மறந்து ஒரே நிதானமாக யிருந்து வருவேன்.

குறிப்புரை :—இதனால் ஆசிரியர் தம் சுவானுபவத்தை, அகண்டா கார பரமாம்சராம் பரமபதிக்கு மீண்டும் மீண்டுந் தமக்குரிய வேண்டுகோ ளைச் சாந்தமாகக் கூறலாயின ரென்பாம். இறைவன் தன்னுயிர்க் குயிராத லான் உரிமை நோக்கி 'நாதா வென்பேன்' என்றனர் போலும்.

பெரிய, அதாவது இடங்கொண்ட மடலையே பரிய மடலென்று தேச பாஷையாகக் கூறலாயினர். (24)

உரு. ஆயுமறி வாகியுன்னைப் பிரியா வண்ணம்
அணைந்துசுகம் பெற்றவன்ப ரையோ வென்னத்
தீயகோலச் சமயத்துஞ் செல்லச் சிந்தை
தெளிந்திடவுஞ் சமாதானஞ் செய்வேன் வாழ்வான்
காயிலைபுன் சருகாதி யருந்தக் கானங்
கடன்மலையெங் கேயெனவுங் கவலை யாவேன்
வாயில்கும்பம் போற்கிடந்து புரள்வேன் வானின்
மதிகதிரை முன்னிலையா வைத்து நேரே.

பொழிப்புரை :—தேவரீரைத் தேற விசாரித்தறியும் பேறறிவைப் பெற்றுப் பிரிதலாற்றாது தம்மை யண்டி, நிரதிசயானந்தந் தேக்கப் பெற் றுள்ள தமது மெய்யடியவர்,' அந்தோவென்று மனமுருக மிகக் கொடிய தான ஜீவவதை புரியும் சமய மார்க்கங்களிலேயும் மனம் பதியும்போது அம் மனமானது அந்த மத மார்க்கத்தைப் பற்றாது வெறுப்புற்று நிற்க, (அதற்குத் தக்கவாறாக) இதமகிதம் விவரித்து வருவேன்; (இதுவன்றியும்)

உடலோம்பற்காக சாமானிய இலை காய் சருகு முதலியவைகளை யருந்து வான் வேண்டி, காடு மலை சமுத்திர மிவை யுள்ளவிடம் நாடிடுவேன்; இதுவுமன்றி, ஆகாயத்திலுள்ள சந்திர சூரியர்களை சாக்ஷியாக்கொண்டு அவர்கள் பார்வையில் வாசற்குடம் புரளுமாறதாக படிந்து புரண்டுவருவேன். என்றபடி.

குறிப்புரை :—சுவாநுபவங் கூறல் என்க. (25)

உசு. நேரேதா னிரவுபகல் கோடா வண்ணம்
நித்தம்வர வுங்களையிந் நிலைக்கே வைத்தார்
ஆரேயங் கவர்பெருமை யென்னே யென்பே
னடிக்கின்ற காற்றேநீ யாரா லேதான்
பேராதே சுழல்கின்று யென்பேன் வந்து
பெய்கின்ற முகில்காளெம் பெருமா னும்போற்
றாராள மாக்கருணை பொழியச் செய்யும்
சாதகமென் னேகருதிச் சாற்று மென்பேன்.

பொழிப்புரை:—இராக்காலம் பகற்காலம் என்னுமிவை இரண்டும் மாருதபடி நிததினமும் வந்துகொண்டிருக்க (அச் சூரிய சந்திரர்களை நோக்கி) உங்களை இந்தவிதமாகத் திட்டஞ் செய்துள்ளவர் யார்? அன்னவர் பெருமையினை ஆங்கு எத்தன்மைய தென்று (மிகவும்) வியந்தோதுவேன்; (மற்றும்,) வீசுகின்ற வாயுவே! நீ எவர் உத்தரவின் பேரில் எப்போதும் சுழன்றுகொண்டே வருகின்றாய் எனக் கூறுநிற்பேன்; (இதன்றி) வருஷிக்கின்ற மேகங்காள்! எமது இறைவனுர் தங்களைப் போன்று மிக்க கருணையாளராய்த் திருவருண் மழைபோல் பெய்யுமாறு கூறுங்கள்; நீங்கள் செய்யக்கூடிய உதவியாவது வேறென்ன? யோசித்துச் சொல்லுங்கள் என்று கூறுவேன்.

குறிப்புரை :—இதுவு மவ்வாறே யென்க. என்றாலும், இரவில் சந்திரன் என்னும் தமது இடது நேத்திர திருஷ்டியானும், பகலில் சூரியன் என்னும் தமது வலது நேத்திர திருஷ்டியானும் பார்த்து காத்து உலகத்தை இரக்ஷிக்கின்றார் இறைவர் என்பது தோன்ற நின்றது. அன்றி, இவை போன்றே பிறவுமென்க. (26)

உஎ. கருதரிய விண்ணேநீ யெங்குமாகிக்
கலந்தனையே யுன்முடிவின் காட்சி யாக
வருபொருளைப் படியிருக்குஞ் சொல்லா யென்பேன்
மண்ணேயுன் முடிவிலெது வயங்கு மாங்கே

துரியவறி வுடைச்சேட னீற்றி னுண்மை
சொல்லாதோ சொல்லென்பேன் சுருதி யேநீ
யொருவரைப்போ லனைவருக்கு மூலமை யாமுன்
னுரையன்றோ வுன்முடிவை யுரைநீ யென்பேன்.

பொழிப்புரை :—எண்ணற் கருமையாகிய வெறு வெளியே! நீயோ, எங்கணும் பொருந்தி கலந்துள்ளா யல்லவா, (ஆகையால்) நின் கணக்கின் படிக்குள்ள ஸ்தானம்வரை வரக்கூடிய காண்டற் பொருளானது எத்தகைய விலக்கண முறையாக விருக்கலாம் சொல்வாயாக என்பேன்; இதன்றி, ஏ மண்டலமே! நினக்குரியதான எல்லைக்கண் வந்துறுவது எந்த வஸ்து வாகும்? அங்கே யுள்ளதான கூர்த்த மெய்யறிவினையுடைய ஆதிசேடன் திட்பமான பொருளினது எதார்த்த நிலையினைக் கூறாதோ? சொல்லென் பேன்; இன்னும், ஏ வேதமே! நீயோ, ஒருத்தரைப்போன்றே அனைவர்க் கும் எதார்த்த பாவமா யிருந்து வருகின்ற முதல் நூலல்லவா? ஆதலால் நீ நினது அபிப்பிராயக் கருத்தைக் கூறுவாயாக, என்று சொல்லிடுவேன்.

குறிப்புரை :—இப்பாசுரத்தால், முதற்கண் சர்வாதார நியமமாயுள்ள ஆகாய வெளியைக் கூறிப் பின்னர் முறையாக மண்ணையும், அதன்பின் ஆதி சேடனையும் கூறி இறைவன் தன்மையைக் குறித்து வினவுவகை வினவினர் போலும். என், பிண்டத்துள் மண்ணாதி பூதமுதல் நாத மீறாகவும், அண் டத்துள் சர்வமுமாயுமுள்ள காரணம்பற்றியே யென்க.

"கூர்த்த மெய்ஞ்ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தி, னோக் கரிய நோக்கே, நுணுக்கரிய நுண்ணுணர்வே" என்ற வாதவூராளியர் வாக்கியத்தைத் தழீஇ உசாவினர் போலும். (27)

உஅ. உரையிறந்து பெருமைபெற்றுத் திரைக்கை நீட்டி
யொலிக்கின்ற கடலேயிவ் வுலகஞ் சூழக்
கரையுமின்றி யுன்னைவைத்தா ரியாரே யென்பேன்
கானகத்திற் பைங்கிளிகாள் கமல மேவும்
வரிசிறைவண் டினங்காளோ திமங்கா ளேது
மார்க்கமன்றோ நீங்களிது வரையி லேயும்
பெரியபரி பூரணமாம் பொருளைக் கண்டு
பேசியதுண் டோவொருகாற் பேசு மென்பேன்.

பொழிப்புரை :—மௌனமுற்று மதிப்பு வாய்ந்து அலையென்னுங் கரங்கள்கொண்டு ஓசையிடும் வாரிதியே! நீ, இந்த பூமண்டலத்தைச் சுற்றி யிருக்குமாறு (இலவலேசமுங்) கரையில்லாது நின்னை நிலை நாட்டினவர் யாவரோவென்று கேட்பேன்; வனத்தில் வாழும்படியான பசுமையாகிய

கிள்ளைகளே! செந்தாமரை மலரில் வாழும் சிறுவரி வண்டினங்களே! மற்றுமுள்ள அன்னப்பக்ஷிகளே! உங்கள் உரிமைத்தொழில் தூதுபோலன்றோ? இதுகாறும் நீங்கள் யாரும் பரிபூரண வஸ்துவென்னும் ஓர் பொருளாம் பரமபதியைப் பார்த்து ஏதேனும் வார்த்தையாடியிருக்கலாமா? ஓர் வார்த்தையாய்க் கூறுங்கள் என்று கேட்பேன்.

குறிப்புரை:—ஈண்டு ஆசிரியர் தூது முறையாக வண்டு, அன்னம், கிள்ளை முதலியவைகளைக் குறித்து இறைவன் நிலைமையைப்பற்றி யினிது வினவினரென்க. (28)

௨௯. ஒருவனவன் யானைகெடக் குடத்துட் செங்கை
யோட்டுதல்போ லான்பேதை யுப்போ டப்பை
மருவவிட்டுங் கர்ப்பூர மதனிற் றீபம்
வயங்கவிட்டு மைக்கிய முன்னி வருந்தி நிற்பே
னருளுடைய பரமென்றோ வன்று தானே
யானுளனென் றும்மெனக்கே யாண வாதி
பெருகுவினைக் கட்டென்று மென்னுற் கட்டிப்
பேசியதன் றேயருணூல் பேசிற் றன்றே.

பொழிப்புரை:—ஓர் வேடன், தன் யானை தன்னிருப்பைவிட்டு வெளிப்போய்விட, அதனை அவ்வேடன் தேடுவான் கருதி ஓர் மட்பாண்டத்துள்ளே தன்கைவிட்டுத் துழாவுதலை யொப்ப அறிவிழந்த யான், லவணத்தோடும் தண்ணீரைக் கலந்துவைத்தும், தீபம் பிரகாசிக்கக் கர்ப்பூரத்தைச் சேர்த்துவைத்தும், உடனாக ஒற்றுமையைக் கருதி மனதுவருந்தி எதிர்பார்த்திருப்பன். திருவருட் சத்தியினைத் தனக்கெனக் கொண்டருளும் பரமபதியார், என்று முதலாக விளங்கி வருகின்றாரோ அன்று முதலாக யானும் இருந்தே வருகின்றேன் எனவும், ஆணவ முதலாயுள்ளன விருத்திக்கு வினைப் பந்தமானது இருப்பதெனவும், யானாக வொன்றுங் கற்பித்தேனில்லை; அது ஆதியிற்றானே திருவருட் சார்பான வேதவாக்காற் பிறந்துள்ளதாம்.

குறிப்புரை:—ஆசிரியர், அதி தீவிரதரமாக ஐக்கியத்தைக் கருதி அப்பும் உப்பும், கர்ப்பூரமும் தீபமும் போன்று உடன் ஒற்றுமையாயிருந்து வந்தும் பேதபுத்தியால் இதன்றி வேறோர் ஐக்கியமுண்டெனக் கருதி மருளடைந்தேன். தற்போதெனது சுபாவமானது, யானையை யிழந்தவன் பானையுட்டேடிய தொத்துள்ளதாம் என்றுணர புரிந்தனராக. (29)

௩௰. அன்றுமுத லின்றைவரைச் சனன கோடி
யடைந்தடைந்திங் கியாதனையா லழிந்த தல்லா

லின்றைவரை மூக்தியின்றே யெடுத்த தேக
மெப்போதோ தெரியாதே யிப்போ தேதான்
றன்றுமனக் கவலைகெடப் புலோ யேனைத்
தொழும்புகொளச் சீகாழித் துரையே தூது
சென்றிடவே பொருளைவைத்த நாவ லோய்நஞ்
சிவனப்பா வென்றவருட் செல்வத் தேவே.

பொழிப்புரை :—சிருஷ்டியாதியாம் அக்காலந்தொட்டு இக்காலம் வரையிலும் யான் யெடுத்துள்ள பிறவிகளாலே இவ் வுலகத்தின்கண்ணே அல்லற்பட்டு அலைந்தேனன்றி இக்காலம் வரையிலும் மோக்ஷமென்பதே யில்லையாகும். (இதன்றி) யான் செய்வினைப்பயன் காரணமாக கிடைத்துள்ள இம்மானிட சரீரமானது நீங்குவது எந்த சமயமோ தெரியவில்லை, ஆதலினாலே, இந்த சமயமே கணக்கற்ற மனோ வேதனை நீங்குமாறதாக இழிவான நாயினேனை அடிமைகொள்ளுமாறு, சீகாழி க்ஷேத்திர சம்பதப் பிரபுவே! எம்மிறைவனுர் தூது செல்லவும், திரவியத்தை ஆற்றிட்டுமுள்ள திருநாவலூரரான சுந்தரமூர்த்தியே! இன்னும், நம் பரமேச்சுரன் (அன்று) அப்பா யென்றழைக்கப் பெற்றுத் திருவருட் செல்வம் பெற்ற என்னப்பனை அப்பர் எனும் மூர்த்தியே! யாதனை - மண்ணுலகிலேயே நரக வாதனையாந் துன்பமனுபவித்தல்.

குறிப்புரை :—இப்பாசுரத்தால், இந்நூலாசிரியர் இறைவர் முன்னிலையாகப் பலகாலும் பல முறை குறைகளைக் கூறித் திருவருளை யாசித்தும் மனமிரங்காமை கண்டு, ஏற்கெனவே இறைவன் பால் ஊன்றிய பக்தி கொண்டு பாடியாடித் திருவருள் வழங்கப் பெற்றுள்ள மெய்யன்பராம் சம்மந்தர், சுந்தரர், அப்பர் மூர்த்திகள் ஆகிய இவர்களை நோக்கித் தன்தேகம் நீங்கற் குள்ளாக அவனடிக்கு ஆட்படத் தயவு கூர்ந்தருளப் பிரார்த்தனை முறையாக வோதியருளினர் போலும். (30)

௩௧. தேவர்தொழும் வாதவூர்த் தேவே யென்பேன்
திருமூலத் தேவேயிச் சகத்தோர் மூக்திக்
காவலுறச் சிவவென்வாக் குடனே வந்த
வரசேசும் மாவிருந்துன் னருளைச் சாரப்
பூவுலகில் வளரருணை கிரியே மற்றைப்
புண்ணியர்கா ளோவென்பேன் புரையொன் றில்லா
வோவியம்போ லசைவறவுந் தானே நிற்பே
ஞெதரிய துயர்கெடவே யுரைக்கு முன்னே,

பொழிப்புரை:—அரிய தேவராதியரும் வழிபடத்தக்க திருவாதவூர் வாழுந் தெய்வமே! என்று வாதவூரரைக் கூவுவேன்; திருமூலர் என்னுந் திவ்ய திருநாமம் வாய்க்கப் பெற்ற தெய்வமே இவ்வுலகமாக்கள் மோக்ஷ மெய்தற்கான ஆசை பெருகும்படி சிவ வென்னும் வார்த்தையோடுந் தோன்றிய இறைவா! சீவகோடிகள் வெறுமனே யிருந்து வந்து நின்திருவருளைப் பெறுமாறு இம்மண்ணுலகில் வாழ்ந்துவரும் எ அருணகிரியப்பா! இன்னுமுள்ள புண்ணிய புருஷர்களே! ஓ வென்று முறைசெய்வேன், சிறிதேனும் குற்றமற்ற சித்திரப் பதுமையை யொத்தே (சாதாரணமாக) தம்பித்து நின்றுவிடுவேன்; இன்னும் சொல்லுதற் கருமையாம் துயரமானது நீங்குமாறதாக்க் கூறு முன்னரே.

குறிப்புரை:—வாதவூர்த் தேவே யென்றது ஈண்டு மணிவாசகரை யென்க. ஜனன காலத்திலே சிவ, என்ற வார்த்தையோடும் வந்தவர் சிவவாக்கியராவார் என்க. திருமூலத்தேவே என்றவர் கைலாய கிரியிலுள்ள சிவகணத்தவர்களி லொருவர். இவர் தமிழ் நாடுய்யுமாறு இங்கு வந்தருளி 3000 மந்திர பாசுரங்கள் செய்தருளி திருமந்திரம் என்னும் பெயர் சூட்டிய ஓர் அதியற்புத சகலாகம சாத்திரத்தினைக் கருணையோடுந் தந்தருளிய திவ்ய ஞானேந்திரர். 'சும்மாயிரு' என்றவோர் திருவார்த்தை பெற்று அதுகொண்டே அநேக முருகர் தோத்திரமாய திருப்புகழ் பிரபந்தம் பாடியருளி அருள் பெற்றுய்ந்தவ ராதலின் இவரைச் சும்மாயிருந்து அருள் பெற்ற அருணகிரியே யென்றனர்போலும்.

சும்மா யிருத்தல் - ஈண்டு கருவி கரணாதிகளை அததன்வழி செல்லா தடக்கித் திருவருளைச் சிந்தித்தல். (31)

௩௨. ஓதரிய சுகர்போல வேனோ னென்ன
வொருவரிலை யோவெனவு முரைப்பேன் றானே
பேதமபே தங்கெடவு மொருபே சாமை
பிறவாதோ வாலடியிற் பெரிய மோன
நாதனொரு தரமுலகம் பார்க்க விச்சை
நண்ணாதோ வென்றென்றே நாணு வாகிக்
காதன்மிகு மணியிழையா ளெனவா டுற்றேன்
கருத்தறிந்து புரப்பதுன்மேற் கடன்முக் காலும்.

பொழிப்புரை:—தவத்தினருமையை எடுத்துக் கூறுவதற் கியலாத அவ்வளவு பெருமை பிறங்கிய சுகமுனீந்திரரை யொத்து என் எனென்ன ஒத்துரை யோத வெவரு மில்லையாவென்றுங் கூறுவேன்; தன்மாட்டே பேதா பேதங்க ளொழியுமாறு ஒப்பிலா மோனத்தன்மையாயது உண்டாகாதோ! வடவால மரத்தடியின்கண் வீற்றிருந்தருளும் மகா மௌன சொரூபந் தாங்கியுள்ள சற்குருநாதன் ஓர் முறை இவ்வுலகத்தார் தரிசித் துய்யு

மாறதாகக் கருணை வீக்ஷண்யத்தோடும் விரும்பி வெளிவாராஞே வென்னப் பன்முறையுங் கூறிப் பலவிதமாகக் கல்க்கமுற்று, மையல்பெருகி நாயகனைக் காணுது கூடற்கின்றிக் கலங்கும் மாதரையொத்து வாட்டமுற்றுள்ளே ஞதலால், இக்கருத்தினை நன்குணர்ந்து வந்தருள் தந்திடுவது உன்மேல் மும்முறைக் கடனும்.

குறிப்புரை :—சுகர் மகா பிராக்ஞரென்பது ஜெகத் பிரசித்தமாகும்; இந்த ஞான முனீந்திரர் அவதாரஞ் செய்த அஞ்ஞான்று உலகமாயைக் கஞ்சி யோட்டம் பிடிக்குங்கால் பிதாவான வியாசரும் பின்னேடி ஓ! ஓ! பிள்ளாயென்று கூவிக்கொண்டோட, அப்போது சுகர், சர்வ வியாபகம் பெற்றுள்ளவரானதால் அங்ஙன் விளங்கிய விருக்ஷாதியனைத்தும் ஏன், ஏன் என்று எதிர் வார்த்தை யோதினவென்ற முறையைக் கொண்டே ஈண்டு ஆசிரியர் சுகரைப்போன்று ஏனேனென்ன எவருமிலையோ வென்றனர் போலு மென்க.

இங்ஙனம் பிரதி வார்த்தையாக நமக்கென எத்தனையோ திருவருட் செல்வரையெலாம் விளித்தும், எவரும் ஏனென்னுமைகொண்டு பரிபக்குவ மிலையோவெனக் கண்டு நமக்கு இனி மௌன நிலைச் சித்தியாதோவென ஐயுற்றே 'பேசாமை பிறவாதோ' என்றோதினரென்க. அருள் அவா விரைவுபற்றி முக்காலுங் கடன் உன்மேலென் றேதினர் போலும். (32)

௩௩. காலமொடு தேசவர்த்த மானமாதி
கலந்துநின்ற நிலைவாழி கருணை வாழி
மாலறவுஞ் சைவமுதன் மதங்க ளாகி
மதாதீத மானவருண் மரபு வாழி
சாலமிகு மெளியேனிவ் வழக்குப் பேசத்
தயவுவைத்து வளர்த்தவருட் டன்மை வாழி
யாலடியிற் பரமகுரு வாழி வாழி
யகண்டிதா காரவரு ளடியார் வாழி.

பொழிப்புரை :—காலதேச நிலவரமாய வர்த்தமான மென்னும் இயற்கையினைச் சக்கியமாக் கொண்டொழுகும் தன்மையான பெருநிலைப் பொருள் வாழ்க; இன்னும், அப்பொருட் டன்மைப்பற்றிப் பிரியாது ஒன்று பட்டுள்ள அருட்டிறம் வாழ்க; மற்றும் மயக்கொழியவும், சைவமுதற் பலபட விரிந்துள மார்க்கங்களாகத் துலங்கிப் பின்னர் அம்மார்க்கங்களுக்கு அப்பாற் பட்டதாகிய திருவருண் மரபும் வாழ்க; மாயாகோல மிகுத்துள்ள ஏழைமதிப் பேதையேன் இந்த விவகாரம் பேசுமாறு கிருபைசெய்து காத் தருளிய திருவருட்டன்மையும் வாழ்க; அன்றி, வடவாலின்கீழ் வீற்றிருந் தருளிய பரம சற்குரு நாதனும் வாழ்க, வாழ்க; கண்டனைக்ககப்படாத திரு

மேனி தாங்கியருளிய நின் ஒப்பற்ற திருவருள் வாய்க்கப்பெற்ற தொண்டர்களும் வாழ்க.

குறிப்புரை :—திருவருட் செல்வம் பெறுமாறு, ஆசிரியர் தனக்குரிய அல்லலாங் குறைமுறை யனைத்துமோதி, முடிவாக ஏற்கெனவே இறைவனால் ஆட்கொண்டருளப்பெற்றுள்ள பழவடியார்களையுங் குறித்து, நீங்களெல்லீரும் அப்பன் திருவருட் காட்பட்டு என்றுங் குன்றா வியற்கைத்தாய பரமானந்தப் பெருவாழ் வெய்தி வலது கொழிக்கின்றீர்களே! நீங்களாவது என் விஷயமாக இறைவற்கோதித் திருவருளைத் திருப்பலாகாதா வென்ற குறிப்பினைக் கொண்டவராய் அவ்வரிய பெரியாரையும் வாழ்த்துதல் புரிந்தார் போலும்,

மால் அறவும் - மனத்தக மயக்கமாஞ் சந்தேக விபரீத மொழிய. சைவ முதன் மதங்களாகி - வைதிக சைவ சமய முதலாக அகச்சமயங்கள் ஆறனையுமாம்.

திருவருட் சத்தியார் மதச்சார்புக் ககப்படாது அப்பாற்பட்டதான அதீதநிலை யுற்றதாதலான் 'மதாதீதமான வருண்மரபு வாழி' யெனலாயினரென்க.

ஆலடிப் பரமகுரு வென்றது, தக்ஷிணாமூர்த்தத் தண்ணருளாளனை யென்க.

வெண்பா

"என்றைக்கோ வீசனரு ளென்றைக்கோ முத்திநெறி
யென்றைக்கோ யேமாந் திருக்குநிலை—யென்றைக்கோ
வென்னும்பா சண்டமதத் தெய்தா தளித்தாரை
யென்னென்று வாழ்த்துகேனி யான்."

என்ற நிலை கொண்டிருந்தனராக. (33)

இனி

நான்முகப் பிரமனை நாடுகின்றனர்

## தேன்முகம்

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

க. தேன்முகம் பிலிற்றும் பைந்தாட்
செய்யபங் கயத்தின் மேவும்
நான்முகத் தேவே நின்னு
ளூட்டிய வகில மாயை
கான்முயற் கொம்பே யென்கோ
கானலம் புனலே யென்கோ
வான்முக முளரி யென்கோ
மற்றென்கோ விளம்பல் வேண்டும்.

பொழிப்புரை :—தன்னகத்துள்ளதான மதுவைச் சிந்தா நின்றதும், பசுமையாகிய தண்டினை யுடையதுமான சிவந்த தாமரை மலரில் வீற்றிருந்தருளும் நான்கு முகங்களோடுங் கூடிய பிரமதேவா! தம்மால் சிருட்டித்துள்ளதான இம்மண்ணுலகத்தை யாக்குவித்த மாயா சக்தியாயது, காட்டினிடத்தே வசிக்கின்ற முயலினது கொம்பொத்ததென்று சொல்லக் கூடியதா? அன்றி, (கோடையிற்றோன்றும்) கானலாம் தண்ணீரென்று தான் சொல்லக்கூடியதா? அன்றி, ஆகாயத்திற் றோன்றியதான தாமரை மலரொன்றுதான் சொல்லக்கூடியதா? அல்லது, வேறே யாதெனச் சொல்லக் கூடியதோ? நீ அதனை விவரித் துரைப்பாயாக.

குறிப்புரை :—இதனால், கான் முயற் கொம்பு, கானலம் புனல், வான் முக முளரி யென்னும் இம் மூவகைய உவமைகளும் யெதார்த்தத்தில் பொருளின்றிப் பெயர் மாத்திரம் உளவாய கற்பனை யேதுவாம். ஆகவே, இவ்வில் பொருளுவமையைக் கொண்டு தோன்றி நின்றழியுந் தன்மையதாயுள்ள இவ்வுலக லெக்ஷணம் பரிஷ்கார மாமாறு அதிஷ்டான கர்த்தனை பிரமனை வினுதல் செய்த தன்மையான் கூறினரென்க.

அதிட்டான கர்த்தன் - காரணக் கடவுள்

வேத முணர்ந்த வேதா வானதாலும், விரிந்த இவ்வுலகத்தைப் படைத்தற் கர்த்தா வானதாலும் ஆசிரியர் இவனை உசாவினரென்க. (1)
(இவர்க்கு வேத மருளினவர் சிவபெருமான்).

உ. வேண்டுவ படைத்தாய் நுந்தை
விதிப்படி புரந்தா னத்தைக்
காண்டக வழித்தான் முக்கட்
கடவுடா னினைய வாற்று
லாண்டவ னெவனோ வென்ன
வறிகிலா தகில நீயே
யீண்டிய வல்ல றீர
வெம்மனோர்க் கியம்பு கண்டாய்.

பொழிப்புரை :—ஆன்மாக்களார் விரும்பப் படுவனவாய போக்கியப் பொருள்களை யெல்லாம் நீயே சிருட்டி செய்துள்ளாய்; நின் பிதாவாகிய திருமாலானவர் அவற்றை யெல்லாம் முறைப்படி இரக்ஷை செய்தார்; அவைகளை யெல்லாம் மூன்று நேத்திரதாரியாம் உருத்திர மூர்த்திதான் சகலரும் அறியுமாற்றால் அழித்தனன்; ஆகவே, இவ்வகையில் இவ்வுலக தலைவன் யாவனென ஆன்மகோடிகள் அறிய வியலா. ஆதலால் நீதானே இந்தச் சந்தேகத்தினை எம்போன்றார்க்குத் தெளிவிப்பாயாக.

குறிப்புரை :—இவ்வகில கோடியை நீ தோற்றுவித்தாய், நின் பிதா காத்துவந்தார், உருத்திரன் அழித்தல் செய்தான், சரி, ஆனாலும் இம் மூவர் களில் முதற் கடவுட்டன்மை வாய்ந்தவ னின்னானென்பதை இவ்வுலகறிந் தில வாதலால் அதனை நீ யுரையாயென்பது கருத்தாம். அத்தை யென்ற பதம் உலகியல் வழக்காம்; அவைகளை யென்பது பொருள். நுந்தை - நின் பிதா.

இப் பாசுரத்தால் இறை மாட்சி இனிது விளங்கச் செய்தன ரென்பது தோன்றி நின்றது. (2)

ங. கண்டன வல்ல வென்றே
கழித்திடு மிறுதிக் கண்ணே
கொண்டது பரமா னந்தக்
கோதிலா முத்தி யத்தாற்
பண்டையிற் படைப்புங் காப்பும்
பறந்தன மாயை யோடே
வெண்டலை விழிகை காலில்
விளங்கிட நின்றான் யாவன்.

பொழிப்புரை :—இவ்வுலகில் கண் கூடாகக் காணக் கூடிய பண்ட பதார்த்தங்கள் யாவும் ஒப்பற்றவோர் தெய்வ மன்றென்று ஆராய்ந்தறியும் போது சித்தாந்தித்துள்ள பரவத்துவென நிர்ணயித்துக் கொண்டது

எதுவோ, அப் பரவஸ்துவே அதி மேன்மைய தாயுள்ள பரானந்தத்தை யளித்ததற்குரிய குறைவற்ற மோக்ஷாநுபவமாம். அதனாலேயேமுன்னேற் பட்டுள்ள சிருட்டியும் காத்தலும் மாயா சத்தியோடு மொழிந்து போயின வாகும்; வெண்மையாந் தலையோடு, கரத்தின் கண்ணும் விழி காலினிடத் தும் தோன்றுமாறதாகச் சர்வ சம்ஹார காலத்திலே சுடலையாடியாக எஞ்சி நின்றவனெவன் என்பது.

குறிப்புரை :—

காண்பதும் பொய் கேட்பதும் பொய் காரியம்போலே யிதமாய்ப்,
பூண்பதும் பொய் யெவ்விடத்தும் போகமும் பொய்.

என்று பெரியார் கூறியவாறு முழுமுதற் கடவுள் உருவுமல்லன், அருவுமல் லன், அருவுருவமல்லன், ஆணுமல்லன், பெண்ணுமல்லன், அலியுமல்லன், என்பதையே ஈண்டு ஆசிரியர் "கண்டனவல்ல வென்றே கழித்திடு மிறுதிக் கண்ணே" யென்று கூறலாயினர்போலும். சான்றோர் மணிவாசகர் தந் திருவாசகத்தில்,

பங்கய மாயிரம் பூவினிலோர் பூக்குறையத்
தங்கணிடந்தரன் சேவடிமேற் சாத்தலுமே
சங்கர னெம்பிரான் சக்கர மாற் கருளியவா
றெங்கும் பரவிநாந் தோணோக்க மாடாமோ.

என்றருளினமை காண்க. இன்னும் :—

"சிவமேவம் பரந்தெய்வஞ் சிகாராய நமோ நம:"—என்றும்,
"சிவனென யாவுந் தேறினன் காண்க"—எனவும்,
"ஈசனை யொப்பவர் தேவக ணத்திடை யாரேயோ"—என்றும்,
"ஈசனையன்றி யிணையொரு தேவில்லை
பூசனையன்றிப் புறம்பொரு நோன்பில்லை"—என்பதும் ஆகிய

இவையும் சாலச் சிறந்த சான்றாகும் என்க. (3)

௪. விளங்கவெண் ணீறு பூசி
விரிசடைக் கங்கை தாங்கித்
துளங்குநன் னுதற்கண் டோன்றச்
சுழல்வளி நெடுமூச் சாகக்
களங்கமி லுருவந் தானே
ககனமாய்ப் பொலியப் பூமி
வளர்ந்ததா ளென்ன வுள்ள
மன்றெனு மறையொன் றின்றி.

பொழிப்புரை :—நன்கு புலனாகும்படி வெள்ளிய திருநீறணிந்து, விசாலித்துள்ள சடைக்கண்ணே கங்கை சூடி, பிரகாசியா நின்ற அழகு

வாய்ந்த நெற்றிக்கண் விளங்கவும், சுழன்றுவரும் வாயு பெருமூச்செனவும், ஆகாயமே மாசற்ற சொரூபமாகத் தோன்றவும், பூமியே நீண்டகால்களாகவும், சிற்சபையே இருதய கமலமாகவும் கொண்டு சிறிதேனும் மறைப்பில்லாது.

குறிப்புரை :—கங்கைமிகப் பரந்ததாகலின் விரிந்த சடையென்றார்; தாவள்ய நீறாகலின் விளங்க வெண்ணீறு என்றனர்; நெற்றிக்கழகு செய் திலகஸ்தான மாதலின் நன்னுதற் கண் என்று அழகுறக் கூறினார். தில்லைத் தலம் விராட்புருடனும் பூமண்டலத்திற்கு இருதய கமலஸ்தானமாகலின் மன்றென்றோதினர்; மன்று - சபை. இதனால் இறைவனது அகண்டாகார சொரூப நிரூபகமாய்க் கூறினர் போலும். (4)

ரு. மறைமுழக் கொலிப்பத் தானே
வரதமோ டபயக் கைகள்
முறைமையி னோங்க நாத
முரசெனக் கறங்க வெங்குங்
குறைவிலா வண நிறைந்து
கோதிலா நடனஞ் செய்வா
னிறையவ னெனலா மியார்க்கு
மிதயசம் மதமீ தல்லால்.

பொழிப்புரை :—வேதகோஷமாயது முழங்கவும், அபய வரதமாகிய உபய அஸ்தங்களும் அதனதன் முறைமையாக விளங்கவும், நாத தத்துவம் பேரிகையொத்து சப்தஞ் செய்யவும், யாண்டும் குறைவற நிறைந்து அதி யுன்னத பரத கிரம ஆனந்த நிருத்தம் புரிபவன் எவனோ அவனே யெல்லாம் வல்ல யிறைவனெனக் கூறத்தகும்; எத்தகையோர்களுக்கும் மனத்திருப்தி கரமானது இதுவே யல்லாது,

குறிப்புரை :—மறை முழக்கு - வேதபாராயண கோஷம். வரத கரம் - அன்பர்கட்கு வரமருளுந் திருக்கையாம். அபயகரம் - தஞ்சமென்று வந்து தாள் பணிந்தோரை அஞ்சலென்று அமர்த்தும் அஸ்தமாகும். ஆக விந்த உபய அஸ்தங்களும் எந்த குறிப்பினதாக விருக்கவேண்டுமோ அந்த முறைமையாக விருத்தலையே 'கைகள் முறைமையினோங்க' என்றார்.

கோதிலா நடனஞ் செய்வான் என்றது - ஞானிகளாடுந் திருக்கூத்தைப் போன்று நானுமாடுகிறேன் பேய்க்கூத்தென்று உலகராடும் வயிற்றுப் பிழைப்புத் திண்டாட்டத்தைப் போலாது, ஆன்மாக்களது பஞ்சகிர்த்திய சுத்த நிர்த்தத்துவமாம் பரமானந்தத் திருநடமாதலால் ஆசிரியர் 'கோதிலா நடனஞ்செய்வான்' என்றனர் போலும். "தில்லைமூதூராடிய திருவடி, பல்லுயிரெல்லாம் பயின்றனனாகி" என்று மணிவாசகர் தந் திருவாசகத்திற் றெரித்தமையானு முணர்க. (5)

சா. அல்லலாந் தொழில் படைத்தே
யடிக்கடி யுருவெடுத்தே
மல்லன்மா ஞாலங் காக்க
வருபவர் கடவு ளென்னில்
தொல்லையாம் பிறவி வேலை
தொலைந்திடா திருணீங் காது
நல்லது மாயை தானு
நானென வந்து நிற்கும்.

பொழிப்புரை :—துயர ஏதுவாயுள்ள பிரவிருத்திகொண்டு, உடனுக்குடன் ஜனிதமாகி, வளப்பம் வாய்ந்து விரிந்த வுலகத்தை இரக்ஷைசெய்ய வருவோர் கடவுளரே யென்னின், பூர்வமாய் வந்த பிறப் பிறப்பென்னும் சமுத்திரமாயது வரளாது, அன்றி அவிவேகமாய் இருளும் ஒழிந்திடாது; சீவர்கட்கு நலம்போல் தோன்றி வந்துள்ள மகாமாயா விகாரமும் நானே யென்று சொல்லி எதிர் வந்துறும்.

குறிப்புரை :—படைத்தல் காத்தலாதி துக்காஸ்பத விவகாரமாகப் பலமுறை பிறந்து வருதலும் போதலுமாக ஓர் வளமையாய் முடிந்து மாயைக்குட்பட்டு அஞ்ஞானம் பெருகிக்கொண்டே வரலான் அவர்கள் கடவுட்டன்மைக்கு ஏற்றவராகா ரென்பது தேற்றமாயது. இதற்குச் சான்றாக, யேனுளிலே திருவருணைக்கண் அயனுந் திருமாலும் ஈசனது அடிமுடி காண்பான் வேண்டிச்சென்று சாத்தியமின்றி அவலம்பித்ததே போதுமான தென்று நன்கு விளங்குகின்றது. ஏற்றவாறு ஓர் பெரியாரும் :—

வெண்பா

ஆறு ணிலேயே யயனுந் திருமாலுங்
காணு ரடிமுடிமுன் காண்பதற்கு—மேனுள்
இரவுதிரு வாளூரி லெந்தைபிரான் சென்ற
பரவைதிரு வாயிற் படி.—என்று பாடியுள்ள தறிக. (6)

எ. நானென நிற்கு ஞான
ஞானமன் றந்த ஞான
மோனமா யிருக்க வொட்டா
மோனமின் றாக வேதான்
தேனென ருசிக்கு மன்பாற்
சிந்தைதைந் துருகும் வண்ணம்
வானென நிறைந்தா னந்த
மாகடல் வளைவ தின்றே.

பொழிப்புரை :—எதன்கண்ணும் நான் நான் என்று விவகாரஞ் செய்ய முற்படும் அகங்கார ஞானமானது மெய்ஞ்ஞானமாகமாட்டா, (எதனாலெனின்) அந்த அகங்கார ஞானமானது புலாதிகளை யொடுக்கி மௌன நிலையி லிருக்கவிடாது, ஆகவே, அம்மோன மில்லாமற் போகவே, தேனை யொத்தினிக்கும் அன்பினாலே மனமாயது நைய்வுற்று கசிந்துருகுமாறு சுகப் பெருங் கடலானது மேகங்கனென்ன நிறைய வளைவதில்லையாம்.

குறிப்புரை :—எதன்பாலும் நான் என்று முனைத்தல் அகங்கார அஞ்ஞானமே யாம், இதனால் மௌனம், மனமுருக்கம், பரானந்தம் இவை யுண்டாகா வென்பது நிச்சயம்.

யானென தென்னு மிருசெருக்கா லாருயிர்கள்
யோனிபே தத்துழலு முற்று.—என்றார் பெரியார். (7)

அ. இன்றெனை விருப்போமென்னி
னென்றுஞ்சூ னியமா முத்தி
நன்றொடு தீது மன்றி
நாமுன்னே பெறுமவித்தை
நின்றது பெத்தந்தானே
நிரந்தர முத்தி யென்னி
னொன்றொரு வரைநான் கேட்க
வுணர்வில்லை குருவுமில்லை.

பொழிப்புரை :—அப்பரமானந்தம் இல்லையென்றிருந்து விடுவோமாயின், எந்தக் காலத்தினும் மோக்ஷமெனல் கொஞ்சமேனு மில்லையாய் விடும்; அக்காலத்திலே நல்லது கெட்டது என்பதில்லாமல் முன்னே பெற்றிருந்த அஞ்ஞானமே மிச்சமாயிற்று; அந்த அஞ்ஞான நிலையே எப்போது முள்ளதாயின. மோக்ஷமென்று நான் ஒருத்தரைக் கேட்பதற்கு அறிவு மின்று, அன்றிக் குருபரனு மில்லையாகும்.

குறிப்புரை :—அவித்தை - அஞ்ஞானம். இந்த அவிவேகமே மெய் யறிவுக்கு விரோதியாயமையும். ஆகவே, அறிவு மங்கிப்போக குருவுபதேசம் நன்கு புலனாவதின்றாம்; மேலே ஆசானோதியது வியர்த்தமாகலின் உணர்விலை குருவுமில்லை யென்றனர். (8)

கூ. இல்லையென் றிடினிப் பூமி
யிருந்தவா றிருப்போ மென்னில்
நல்லவன் சாரு வாக
னன்சொலு நெறிக்கு வீணில்

தொல்லையே யாக மாதி
　　தொடுப்பதேன் மயக்க மேதிங்
கொல்லவந் திருமி னென்ன
　　வுறவுசெய் திடுவ னந்தோ.

பொழிப்புரை:—முற்கூறிய அறிவும் குருவும் இல்லாமற் போகவே இவ்வுலகமானது இருப்பதுபோல நாமிருந்து வருவோமெனின், இதசத்துருவான நிரீச்சுரவாதி, நான் சொல்லு மார்க்கத்தைக் கைக்கொள்வதற்கு உடன்படாது வீணே ஏன் துன்புறுகின்றீர்கள்? பூர்வநிலை எதற்காக? ஆகம முதலாய பல கலைகொள்வதும் எதற்காக? ஏன் இவைகளில் பிராந்தி கொள்ளவேண்டும்? நம்பால் சீக்கிரமாய் வந்துவிடுங்கள் சேர்ந்திருக்கலாமென்று சிநேகித்துவிடுவன்.

குறிப்புரை:—ஆகமாதி தொகுப்பது என்றது ஆகமவாக்கியங்களால் தர்க்கித்தலாதியவைகளை யென்க. சாருவாகராவார் நிரீச்சுரவாதியரை நல்லன்போன்று தீயன புரிதலால் இதசத்துருவென்று கூறலாயிற்று. ஆஸ்திக வாதத்தையே தொல்லையென்றபடி யாயிற்று. இது சாருவாகன் கூற்று. (9)

கய. அந்தணர் நால்வர் காண
　　வருட்குரு வாகிவந்த
எந்தையே யெல்லாந் தானென்
　　றியம்பின னமைப்ப டைத்த
தந்தைநீ யெம்மைக் காக்குந்
　　தலைவனே நுந்தை யன்றோ
பந்தமில் சித்தி முத்தி
　　படைக்கநின் னருள்பா லிப்பாய்.

பொழிப்புரை:—சனகாதி வேதியர்கள் நான்குபேர்களுந் தரிசித்துய்யுமாறு ஆசிரியரான அருள்வடிவத் திருமேனிதாங்கி எழுந்தருளிவந்த எம்பிதாவாயுள்ள சாம்ப மூர்த்தியே! நாமரூபப் பிரபஞ்சாதியனைத்தும் தாமேயென்று கூறினன்; ஆகவே, எங்களைச் சிருட்டிசெய்த தகப்பன் நீயே; எங்களைக் காத்திடும் முதற்கடவுளும் நீயேயாம்; பாசத் தொடர்பில்லாது அட்டமா சித்திகளும் மோக்ஷபதவியும் அநுக்கிரகிக்குமாறு நினது திருவருட் பிரசாதத்தைத் தந்தருளுவாயாக.

குறிப்புரை:—அந்தணர் நால்வராவார் - சனகர், சனந்தனர், சநாதனர், சனற்குமாரர்.

சித்தி முத்தியாவது - அணிமாவாதிய அட்டசித்தியை இம்மைக் கண்ணும், மறுமைக்கு மோக்ஷபதவியுமாம். (10)

---

## பன்மாலைத்திரள்

### எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

க. பன்மாலைத் திரளிருக்கத் தமையு ணர்ந்தோர்
பாமாலைக் கேநீதான் பக்ஷமென்று
நன்மாலை யாவெடுத்துச் சொன்னார் நல்லோர்
நலமறிந்து கல்லாத நானுஞ் சொன்னேன்
சொன்மாலை மாலையாக் கண்ணீர் சோரத்
தொண்டனே னெந்நாளுந் துதித்து நிற்பே
னென்மாலை யறிந்திங்கே வாவா வென்றே
யெனைக்கலப்பாய் திருக்கருணை யெம்பி ரானே.

பொழிப்புரை :—பலவேறு வகையாயுள்ள புஷ்பமாலைக் கொத்துகள் நிரம்பியிருக்கிறபோது அம்மாலைகளில் பற்றின்றித் தேவரீரை அகமுக முணர்ந்த உண்மையன்பர்களது துதிமாலைகளில் மிக்க விருப்புடையீரென்று நல்ல கவியாகிய தோத்திரமாலையாகக் கற்பித்து உத்தம பக்தர்கள் தம் திருவடியிற் சூட்டியுள்ளார்கள். நன்மையீதெனத் தெரிந்து கற்க வேண்டிய ஞான நூல்களைக் கற்றறியாத அடியேனும் சில தோத்திரப் பாமாலையைச் சூட்டினேன்; அவ்வாறு சொல்லியுள்ள பாமாலை, மாலைபோன்று கண்ணீர் சொரிய நினது அடிமைபூண்ட தொண்டனுயுள்ள யான் இதுபோன்றே எப்போதும் வாழ்த்தி வருவேன்; மேலாகிய கருணைகொண்டருளிய எமது தலைவனே! ஆதலால் என் விருப்புணர்ந்து இங்கு 'வருவாய், வருவா' யென்று சொல்லியருளி என்னைத் தம்முடன் சேர்த்தாள்வாயாக.

குறிப்புரை :—பன்மாலைத்திரள் - நறுமணங் கமழும் பலவகைப் புஷ்ப ஜாதிகள்கொண்டு பலவகை மாலைகளாகத் தயாரிக்கப்பட்டனவாம், இம்மாலைப் புட்பங்களும் நால்வகைத்தாகும், அதாவது கொம்பின் புஷ்பம், கொடியின் புஷ்பம், நிலப்புஷ்பம், நீர்ப்புஷ்பம் என்பன. ஈண்டு, தம்மை யுணர்ந்த மெய்ஞ்ஞானியராவர்கள், தான் அறிவாகாரமாயும் தலைவனுக் கென்றும் நீங்காத் தொண்டனுயுங்கொண்ட நிச்சய புத்தியுள்ள உத்தம பத்திமான்களென்க.

பன்மாலை நானாவகையாயது போன்று பாமாலையாஞ் சொன்மாலையும் நானாவித சொற்களாலாக்குவித்த அன்புமாலையாகும். அதில் நறுமணங் கமழும், இதில் அன்புமணங் கமழும். அது வாடுதல் செய்யும், இது வாடாது பாடுதல் செய்யும், அது உஷ்ணத்தால் கருகும், இது அன்பால் உருகும். அன்றி, அது நிர்மாலியமாம், இது என்றும் புதுமாலையாகவே யிருக்கும். ஆகவே, இம்மாலை, எம்மாலையுமொழித்து அம்மாலையாக்கு மென்பாம்.

இறைவனை உரிமை பாராட்டித் 'திருக்கருணை யெம்பிரான்' என்றார். அன்றியும், அன்பும், அடிமையும், பத்திமையும், பணியும் ஆகிய உரிமையோடுமல்லாது, பதிப்பொருளுக்குப் பசுப்பொருளாம் ஆன்மாக்கள், நாயக நாயகி தத்துவ முறையானும் வாவா வென்று எனைக் கலப்பாயென லாயினர் போலும்.

> இன்றைக்கோ நாளைக்கோ வின்னமரை நாழிகைக்கோ
> வென்றைக்கோ வாவி யிழப்பென்று—சென்றிறைஞ்சி
> யாசா ரியனுக் கனுகூல சித்தனாய்ப்
> பாசாதியைக் கழற்றப் பார்.

—என்ற பாட்டின் கருத்தொக்க பரமாசாரியரைப் பரிந்து வருந்துவாராயினர். (1)

> உ. கருணைமொழி சிறிதில்லே னீத லில்லேன்
> கண்ணீர்கம் பலையென்றன் கருத்துக் கேற்க
> வொருபொழுதும் பெற்றறியே னென்னை யாளு
> மொருவாவுன் னடிமைநா னொருத்த னுக்கோ
> விருவினையு முக்குணமுங் கரண நான்கு
> மிடர்செயுமைம் புலனுங்கா மாதி யாறும்
> வரவரவு மேழைக்கோ ரெட்ட தான
> மதத்தொடும்வந் தெதிர்த்தகவ வடிவ மன்றே.

பொழிப்புரை:—யானோ! என்மூற் பட்டார்பால் இனிய காருணிய வார்த்தை யென்பது சிறிதுஞ் சொல்லியறியேன்; இதுமட்டுமோ, யெவர்க்கும் யெதுவுங் கொடாதவன்; எனது மனோபாவ பிரகாரமாக அன்புமீதுற சொரியும் கண்ணீரும் கம்பிதமுமாய தன்மையை ஒருபோதும் பெறவே யில்லை! அடியேனை யாண்டருளும் ஒப்புவமையற்ற ஒருவனே! நினது மெய்யடியனாகிய யானொருத்தனுக்கு மட்டுமோ இருவித வினைகளும், மூவகையான குணபேதங்களும், நான்குவகையான அந்தக்கரணங்களான மனம், புத்தி, சித்தம் அகங்கார மென்பனவும் துன்புறுத்தாநின்ற ஐவகைப் புலாதிகளும், காமக்குரோதாதிக ளென்றும் அறுவகை உட்பகைகளும்,

வரவர அறிவற்ற இவ்வேழைமதிப் பேதைக்கு ஒரு எட்டாயுள்ள அகங் காரங்களோடும் வந்து ஏற்பட்டுள்ளது. நவந்தரு பேதமாயிருக்கிற அதாவது ஒன்பது பிரிவாய ஞானகாரப் பொற்சபையே!

குறிப்புரை :—அன்பின் மிகுதிகொடு அறிவானந்தத்தால் கண்களில் நின்று சொரியும் அருவியாங் கண்ணீர் ஆகும். கம்பிதம் - சரீரம் உதறுதல். இருவினைகளாவன - நல்லன தீயனவாம். முக்குணங்கள் - இராசத, தாமத, சாத்துவிகம் என்பன. கரணம் நான்காவன, மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பவை. புலன்கள் ஐந்தாவன - சுவை, யொளி, யூறு, ஓசை, நாற்றம் என்பன. காமாதி ஆறாவன - காம, குரோத, லோப, மதம், மாச்சரியம், மோகம் என்பன. இவ்வாறும் உடற்பகையாயுள்ளன. மதம் எட்டாவன - வருணம், உருவம், யவ்வனம், கல்வி, செல்வம், கௌரவம், உதவி, சுபாவம் என்னு மிவைகளால் சமயம் நேர்ந்துழி தோன்றுவதான ஓர் இறுமாப்புத் தன்மையாகும்.

நவவடிவாவன - பிரமன், விட்டுணு, உருத்திரன், மகேசுரன், சதாசிவன், சத்தி, சிவம், விந்து, நாதம் என்பவையாம். (2)

௩. வடிவனைத்துந் தந்தவடி வில்லாச் சுத்த
வான்பொருளே யெளியனேன் மனமா மாயைக்
குடிகெடுக்கத் துசங்கட்டிக் கொண்ட மோன
குருவேயென் றெய்வமே கோதி லாத
படியெனக்கா னந்தவெள்ளம் வந்து தேக்கும்
படியெனக்குன் றிருக்கருணை பற்று மாறே
அடியெடுத்தென் முடியிலின்னம் வைக்கவேண்டு
மடிமுடியொன் றில்லாத வகண்ட வாழ்வே.

பொழிப்புரை :—நாமரூபப் பிரபஞ்சாதிகளைச் சிருஷ்டிசெய்த அரூபமாய பரிசுத்த அரியபெரிய பரம்பொருளே! அறிவிலா ஏழையேன் மனமாகிற மாயா சக்தியின் வன்மையைத் தொலைபிக்குமாறு விருது பூண்டருளிய மௌன குருநாதனே! எனக்குரிய பரதெய்வமே! இவ்வடிமைக்கு குற்றமற்ற பரானந்த வாரியானது பெருகிவந்து நிறையுமாறதாகவும், நின் மேலான திருவருளானது உண்டாகவும், மற்றும் (முன்போன்றே) தேவரீர் தம் திருவடித் தாமரையை எளியேன்றன் சிரசின்மீது சூட்டியருளவும் வேண்டுவன். ஆதிநடுவந்தமில்லாத அகண்டாகாரப் பெரிய வாழ்வே.

குறிப்புரை :—சராசர வடிவங்க ளனைத்தையும், தான் உருவுடலின்றி அரூபமாயிருந்து ஆக்குவித்தலான ஆற்றலுடைமை கண்டே வடிவனைத்துந் தந்த வடிவில்லாச் சுத்த வான்பொருளென்றார். "தொண்டர் குடி கெடுக்

கவே துசங்கட்டிக் கொண்டவர்க்கு" என்றோர் பெரியார் கூறியவாறே இவ்வாசிரியரும் 'மனமாயைக் குடிகெடுக்கத் துசங்கட்டிக் கொண்டமோன குருவே' யென்றார்.

இதனால், அன்பாது குடிகெடுத்தலாவது:—அவர்கள் பாலுள்ள தத்துவ சேட்டைகளையும் அகங்கார மமகாராதிகளையும் மற்றும் ஆசாபாசங்களையும் அடியோடுந் துலைப்பித்தலாம். ஆகவே, அடிமையாளர் தங்கரணுதி சுத்தி செய்து பரிபக்குவர்களாக்குத லென்க. (3)

ச. வாழ்வனைத்து மயக்கமெனத் தேர்ந்தேன் றேர்ந்த
வாறேநா னப்பாலோர் வழிபா ராமற்
றாழ்வுபெற்றிங் கிருந்தேனீ தென்ன மாயந்
தடையுற்றான் மேற்கதியுந் தடைய தாமே
ஊழ்வலியோ வல்லதுன்றன் றிருக்கூத் தோவிங் [னம்
கொருதமியேன் மேற்குறையோ வுணர்த்தா யின்
பாழவதிப் படவெனக்கு முடியா தெல்லாம்
படைத்தளித்துத் துடைக்கவல்ல பரிசினானே.

பொழிப்புரை:—இவ்வுலக வாழ்க்கை யனைத்தும் கேவலம் மாயா ஜால கோலாகலமானதே யென்று ஒருவாறு தெளிவுற்றனன். அங்ஙனந் தெளிவடைந்தபடி மேன்மேலும் யான் யேதும் ஆன்மலாபத்திற் கேதுவான ஓர் தவநெறியினைச் சாராது இவ்வுலகியலிலேயே சில காலம் கடத்திவிட்டேன்; இதுவும் மாயா காரியமேயாகும்; இப்படியே நின்றுபோமேல் யாதாமோர் கதியும் ஏற்படாமல் ஆயுள்காலம் அதோகதியாய்ப் போய் விடுமே! இவ்வாறு நிகழ்வதற்கு ஏது ஊழ்வினையா யிருக்கலாமோ! அன்றி நினது திருவிளையாடல்தானோ! இல்லாமல், இங்கே என்மேலேதுங் குறைபாடிருக்குமோ? யாதும் தெரிந்திலனே! ஆகவே, நீயே இதன் மர்மத்தை தெரிவிப்பாயாக சகல ஜீவா ஜீவராசிகளையும் சிருஷ்டி செய்து காப்பாற்றிப் பின்னர் காலக்கிரமமாக அழித்தலும் செய்யவல்ல சக்திவாய்ந்தவன் நீயல்லவா? இனியும் பாழுந்துன்பத்திற் கிடந்தவதிப்பட என்னாலாகாதே!

குறிப்புரை:—"வாழ்வாவது மாயமிது மண்ணாவது திண்ணம்" என்று தேவாரச் செல்வர் கூறியவாறே நமது ஆசிரியரும் "வாழ்வனைத்தும் மயக்க மெனத் தேர்ந்தேன்" என்றார். (4)

ரு. நானாநிங் கெனுமகந்தை யெனக்கேன் வைத்தாய்
நல்வினைதீ வினையெனவே நடுவே நாட்டி

யூனரு முடற்சுமையென் மீதேன் வைத்தா
யுயிரெனவு மென்னையொன்ற வுள்ளேன் வைத்தா
யானமை யாயகில நிகில பேத
மனைத்தினுள்ளுந் தானகி யறிவா னந்தத்
தேனுகிப் பாலாகிக் கனியாய்க் கன்னற் [றே.
செழும்பாகாய்க் கற்கண்டாய்த் திகழ்ந்த வொன்

பொழிப்புரை :—நான் நான் என்கின்றதான அகங்கார சேஷ்டி தத்தை என்பால் வைத்ததேனோ? நல்வினையென்றும் தீவினையென்றும் இவ்விருவினையையும் மத்தியிலேற் படுத்தி மாம்சம் பொருந்தியுள்ள இந்த சரீர பளுவினை என்மேல் வைத்ததுமேனோ? அடியவனை உயிராகக் கூற வும் சரீரத்துள்ளே ஓர் பொருளாக ஏன் அமைத்தனை? நீங்கப்பெறாது இவ்வுலகத்துள்ள பேதா பேத உருவங்களெல்லாவற்றினும் நீயே நிறைந்து நின்று ஞானனந்தத் தேனமிர்தமாகி மற்றும் பால் என்ன, பல பழவகை களென்ன, சர்க்கரைப் பாகென்ன, கற்கண்டென்ன இவைகளின் மதுரம் போன் றினிப்பைத்தரா நின்று விளங்கும் ஒப்புவமை யில்லாத வொரு தனிப்பொருளே!

குறிப்புரை :—ஆனமை - எதனினும் நீங்குதலில்லாமையாம். நிகில பேதமனைத்தினுள்ளும் என்பது - உலக நாமரூபங்களான பேதப் பொருள்க ளெல்லாவற்றினும் உள்ள உயிர்க்குப் பரமான்ம வுத்துவாய் விளங்கி யென் பது பொருளாம்.

இங்ஙனம் சர்வத்தினும் வியாபித்துள்ள நீ என்னகத்துமுள்ளனை, அவ் வாறிருப்ப, என் உடலாகிய பெரிய துக்காஸ்பதமாயுள்ள சுமையினையான் வெறுத்து, அது நீக்கியருளவேண்டிய என் எண்ணம் நீ அறிந்திருந்தும் அறியார்போல் நீக்காமையாயது நியாயமாகாதே! இது நினக்கு அழகு மன்றே என்பது.

இறைவன் திருவருள் வாய்க்கப்பெற்று, யோக சாதனைகொண்டு மதி மண்டலச் செழுந்தேனருந்தித் தேக்கிட்டு அடற்பெரும் பசி நீங்கி உடல், உயிர், உள்ளகமெலாந் தித்தித்து ஆனந்தித்தல் மெய்ஞ்ஞானியர்க்குரிய பரமானந்த அநுபவமாதலால், அதனை விளைத்த அப்பரம்பொருளினை வாழ்த்துமுறையில் மதுர மொன்றினைமட்டுங் குறித்து சாமானிய சடப் பொருளாம் கனி, தேன், கற்கண்டு, சர்க்கரை, பாகு முதலிய இரஸ வஸ் துக்களை உவமை கூறுதல் முறையாக்கொண்டு மாணிக்கவாசகர், தம் சிவ புராணத்தில் "கறந்தபால் கன்னலொடும் நெய்கலந்தாற் போலச் சிறந்து, அடியார் சிந்தனையுட் டேனூறி நின்று, பிறந்த பிறப்பறுக்கும் எங்கள்

பெருமான்" என்று அருளினதுபோன்றே ஆசிரியரும் பால்தேனுதிகளை உவமை கூறினர்போலு மென்க.

இம்மட்டோ, ஏனையரும் இங்ஙனம் இறைவனைத் துதி புரியுங்கால் சமய நேர்ந்துழி கூறியிருப்பது பலநூல்களிலும் பரந்துள்ளன காண்க. ஒன்றே - ஈண்டு 'ஏகம் சிவம்' என்றபடி. (5)

சா. ஒன்றியொன்றி நின்றுநின்று மென்னை யென்னை
யுன்னியுன்னும் பொருளலைநீ யுன்பா லன்பா
னின்றதன்மைக் கிரங்குமவை ராக்கிய னல்லே
னிவர்த்தியவை வேண்டுமிந்த நீல னுக்கே
யென்றுமென்று மிந்நெறியோர் குணமு மில்லை
யிடுக்குவார் கைப்பிள்ளை யேதோ வேதோ
கன்றுமனத் துடனாடு தழைதின் றாற்போற்
கல்வியுங்கேள் வியுமாகிக் கலக்குற் றேனே.

பொழிப்புரை:—விஷயாதிகள் ஒவ்வொன்றிலும் பொருந்தி பொருந்தி அந்தந்த விஷயாதிகளி லெல்லாம் கொஞ்சநேரம்வரை ஊன்றி யிருந்து காலம் போக்குவதில் பிரயோசன மென்ன? நீயோ, எளியேனைக் கருதி எண்ணப்படும் பொருளாயில்லை; ஆகையினாலே, நின்னிடத் தன் புற்றிருந்து வந்த மெய்யன்பர்தம் குணாதிசயங்களைப் பெறுமாறு தம்மைத் தரிசிக்க முன் போகக்கூடிய உலக வைராக்கியத்தைக் கைக்கொண்டே னல்லன்; ஆகவே, இவ்வித போலியான மனப் பான்மையேனுக்கு அப் போலி நடையற வேண்டும்; என்றும் இவ்வித நன்மார்க்கமுற்று வருதற் கான நற்குணாதிகளைக் காணோம்; இவ்வாறு யிருக்கிறபோது, எடுப்பார் கைப்பிள்ளையாதற்குக் காரணமென்னவோ? மனம் வருந்தி ஆடு தழை தின் பதுபோன்று, பலவாறான கல்வி யாராய்ச்சியைக் கொண்டு கலங்காநின்ற என் பாவ மென்னே!

குறிப்புரை:—" ஒன்று யுலகனைத்து மாணுமென் றப்பமுனி
பொற்று மொழியாற் புகன்றிருக்க"—வென்ற திரு வருண்மொழியனைய, ஆசிரியர் ஒன்றி யொன்றி நின்று நின்றும் என்றார். அன்றி யென்னை யுன்னி யுன்னும் பொருளலையென்று மோதினர். இதனாற் சிவபோத முறுங்காறும் இறைவன் தோன்றப்படானென்பது. தம்பால் தேறிய விசாரத்தால் மேற்போகாது கொண்டு பின்னிடைதல் கண்டு, 'இன் நெறியோர் குணமுமில்லை, யிடுக்குவார் கைப்பிள்ளை யேதோ யேதோ' வென்றனர். தேற விசாரித்துத் தெளிவுறு மயக்கத்தான் ஆட்டுவமை கூறினர்போலும். இக்கருத்தினைக் கண்டிப்பான் கொண்டே மணிவாசகர்

"கூர்த்த மெய்ஞ்ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தில், நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே" என்று ஓதி யருளினர் போலும். (6)

எ. உற்றதுணை நீயல்லாற் பற்று வேறொன்
றுன்னேனென் பன்னாளு லகத் தோடி யாடிக்
கற்றதுங்கேட் டதுமிதனுக் கேது வாகுங்
கற்பதுங்கேட் பதுமமையுங் காணு நீத
நற்றுணையே யருட்டாயே யின்ப மான
நாதாந்த பரம்பொருளே நாரா ணாதி
சுற்றமுமாய் நல்லன்பர் தமைச்சே யாகத்
தொழும்புகொள்ளுங் கனகனமே சோதிக் குன்றே.

பொழிப்புரை:—எனக் கருமையாக வாய்த்தருளிய உயிர்த்துணை யாக நின்னை யன்றி பிடிப்பாக மற்றொரு பொருளையும் எண்ணிலேன்; பற்பல தினமும் இவ்வுலகத்திலே விரைந்தும் கட்டமுற்றும் கற்றுக் கேட்டறிந்தன வனைத்தும் இதற்கே காரணமாய் முடிந்தது; இனி, மேலே கற்பனவும், கேட்பனவும் பொருந்தா நிற்கும்; எவரும் காண்டற்கரிய நியதமாய மேலாய அருந்துணையே! கிருபை கூர்ந்த அன்னாய்! ஆனந்த மயமாயுள்ள நாத தத்துவ மீறாயுள்ள அரிய பெரும்பொருளே! நாராயணன் முதலாயினோர் உறவானவருமாய், மெய்யன்பர்களைப் புத்திரர்களாகவும் அடிமையாகக் கொள்ளக்கூடிய மிகுதியும் கனம்பொருந்திய பொருளே! சுடர்மய மாமலையே!

குறிப்புரை:—

மக்களு மனையு நீத்து மாதரா ராசை நீத்து
சொர்க்கமே லாசை நீத்துச் சுத்தனாய்ப் பற்றொன் றின்றிக்
கற்க வேண்டியது நீத்து கருதிரு வினையு நீத்து
நிர்க்குண சிவந்தானாகி நிற்பது ஞான நிட்டை.

என்னும் இச்சுருதிப் பிரமாணப்படி ஆசிரியர் கற்றது போக இனிக் கல்வி கேள்விகளை விட்டு நீயே அரிய துணையாக்கொண்டு நம்பி, வேறொன்றை யும் கனவினு நினையாதுள்ளேன் திருவருள் தேவே! என்று வேண்டுதல் செய்தனர் போலும். (7)

அ. குன்றாக மூவுருவா யருவாய் ஞானக்
கொழுந்தாகி யறுசமயக் கூத்து மாடி
நின்றாயே மாயையெனுந் திரையை நீக்கி
நின்னையா ரறியவல்லார் நினைப்போர் நெஞ்ச

மன்றாக வின்பக்கூத் தாடவல்ல
மணியேயென் கண்ணேமா மருந்தே நால்வர்க்
கன்றாலின் கீழிருந்து மோன ஞான
மமைத்தசின்முத் திரைக்கடலே யமர ரேறே.

பொழிப்புரை :—குறைவுறாத மூவகை யுருவங்களாகி, அன்றி அருவமு மாகியும், மெய்ஞ்ஞானத்து உச்சியாகி, ஆறு மதங்களிலும் அவ்வவ்வித மூகூர்த்தமாய் நின்று திருவிளையாடல் புரிந்தும், அமர்ந்தாயே! நின்னை மறைத்துள்ள மாயா திரையை விலக்குவித்து நின்னை உள்ளவா றுணர வல்லவர் யாவரோ! தம்மைத் தியானஞ் செய்வோரது இதய கமலமே நிர்த்தன சபையெனக் கொண்டு பரமானந்தத் திருநடம் புரியவல்ல நடன சிகாமணியே! எனது இருகண்மணியே! பெருமை வாய்ந்த தேவாமிர் தமே! முன்னோர்கால் சனகர் ஆதியாக்கொண்ட நான்கு தவமணிகளுக்கும் ஆலவிருக்ஷத்தடியில் வீற்றிருந்தருளி மௌனமா யிருந்து ஞானத்தைக் குறித்துணர்த்தி யருளிச் சின்முத்திரை காட்டிய சாகரமனையாய்! தெய்வத் திருமணியே!

குறிப்புரை :—குன்றாத மூவுருவாய் - யாதொரு குறைபாடுமற்ற மூன்று உருவ மூர்த்திகளா யென்றார்; ஏன்? ஒருருவே மூவுருவமான தாலே யென்க. அகச் சமயங்களாகிற அறுவகை மதங்களுக்கும் உரிய பெரியார்க்காகும் திருக்கூத் தாகந்தாடியவராகலின் 'அறுசமயக் கூத்து மாடி' யென்றனர்.

ஒருகண மிருப்பன் றெய்வ வுருவினி லீசன்றன்மற்
றிருகணஞ் செங்கோ லோச்சு மிறைவர் பாலிருப்ப
னருமறை யவர்குழாத்து ளம்புவீ ழளவிருப்பன்
றுரிய யோகிக ளுளத்திற் றூங்குவனிருந் தெப்போதும்.

என்ற பெரியார் கட்டளைப்படியே நூலாசிரியரும், "நினைப்போர் நெஞ்ச மன்றாக வின்பக் கூத்தாட வல்லமணியே" என்றருளினர். (8)

௯. திரையில்லாக் கடல்போலச் சலனந் தீர்ந்து [லாங்
தெளிந்துருகும் பொன்போலச் செகத்தை யெல்
கரையவே கனிந்துருக்கு முகத்தி லேநீ
கனிந்தபர மானந்தக் கட்டி யிந்நாள்
வரையிலே வரக்காணே னென்றாற் கட்டி
வார்த்தைசொன்னாற் சுகம்வருமோ வஞ்ச னேனை
யிரையிலே யிருத்திநிரு விகற்ப மான
வின்பநிஷ்டை கொடுப்பதையா வெந்த நாளோ.

பொழிப்புரை :—அலைகளோய்ந்த சமுத்திரம்போன்று மனோ சலன மின்றி, தெளிவுபெற்று நீராளமா யுருகாநின்ற குகைப்பொன் போன்றும் நாமரூபப் பிரபஞ்சங்க ளனைத்தையும் மிகவு மிளகிக் கரையுமாறுருக்கி, அவ்வுருக்கு முகத்தில் சொலித்துருகியுள்ளதும், பரபோகந் தருவதா யுள்ளதுமான தங்கக் கட்டிபோ லிருக்கின்றாய் நீ; ஆயினும், இது போதளவு நீயென் முன்தோன்றி யருளினுயில்லை; அன்றி, யான் யேதும் நிர்ப்பந்தமாகக் கட்டுப்பாடாயுள்ள வார்த்தை பேசுவனேயாயின், அதனால் ஏதும் இன்பப் பயனுளதோ, இல்லை; ஆகையினாலே கொடிய வஞ்ச நெஞ்சனை எளியனேனை இச்சரீரத்திலேயே (இன்ப நிட்டை பெறுமளவும்) இருத்தி வைத்து, யாதொரு விகற்பாதிகள் வாராவண்ணங் காத்துப் பரானந்த நிட்டானுபூதி யெய்துமாறு அநுக்கிரகிப்பது யெச்சமயமோ, (தெரியேன்!) எனையா!

குறிப்புரை :—எவ்வுயிர்க்கு மிறைவனே! இனியென் வார்த்தையா லேதும் பயன்படாதெனத் தெரிந்தேன்; ஆதலால் தேவரீரே கருணைபூத்து இவ்வுடலையும் நிறுத்தி எத்தடையு மில்லாத பரமானந்த நிட்டையினை எதிர் பார்த்துள்ளேன்; அது எப்போது கிடைக்குமோ! என்பது தீவிரதர முறை யீடா மென்க. இரையிலே இருத்தியென்பது,—இவ்வுடலிலேயே நிறுத்தி யென்பதாம். என்? சான்றாக :—

நிட்டையிலே யிருந்துமனத் துறவடைந்த பெரியோர்கள்
நிமலன் றனைக்
கிட்டையிலே தொடுத்துமுத்தி பெறுமளவும் பெரியசுகங்
கிடைக்குங் காம
வெட்டையிலே மதிமயங்கிச் சிறுவருக்கு மணம்பேசி
விரும்பித் தாலிக்
கட்டையிலே தொடுத்துநடுக் கட்டையிலே கிடத்துமட்டும்
கவலை தானே.

என்ற ஆப்தர் வாக்கியப்பிரகாரமும், ஜென்மமுள்ளவரை கவலையே யென்பது நிராடங்க தீர்மானமானதாலும், சரீரம் எங்கு இடையே போய் விடுமோ என்ற ஐயப் பாட்டினாலுமே யென்க. (9)

ம. எந்தநா ளுனக்கடிமை யான நாளோ
வெந்நாளோ கதிவருநா ளெளிய னேன்றன்
சிந்தைநா ளதுவரைக்கு மயங்கிற் றல்லாற் [சொல்
றெளிந்ததுண்டோ மௌனியாய்த் தெளிய வோர்
தந்தநாண் முதலின்பக் கால்சற் றல்லாற்
றடையறவா னந்தவெள்ளந் தானே பொங்கி

வந்தநா ளில்லையெத்த வலைந்தே னுன்னை
மறவாவின் பத்தாலே வாழ்கின் றேனே.

பொழிப்புரை:—எம்மானே! தேவரீர்க்கு அடியேன் ஆட்படுங்காலம் எக்காலமோ! அடியேற்குப் பரகதி கிடைக்குங்காலம் எந்தக் காலமோ! இது விஷயமாக என் மனமானது இது நாள்வரை மயக்கமுற்றிருக்கிறதே யன்றி ஓர்போதுந் தெளிவடைந்ததேயில்லை; நிற்க; தேவரீர் மௌன குருவா யெழுந்தருளிவந்து, யான் திடப்படுமாறு ஓர் வார்த்தை உபதேசித்தது முதலாக பரானந்தக் கால்வாய் சொற்பமாக பெருகினதல்லாது, இடையறாது பிரம்மானந்தக் கடல் பொங்கி வழிந்தநாள் கிடையாது; யானும் பல முறையாக நின்பால் அலைந்து வந்தேன்! ஆனாலும் நின்னை என்றும் சிந்தை கொண்டே மறத்தலிலா வின்பத்தால் காலங்கழித்து வருகின்றேன்.

குறிப்புரை:—காலென்பது, ஈண்டு இன்பமாய ஓடுகாலெனப் பொருள் கொண்டு நின்றது. தடையற - இடையறாமல். கதி - பரகதியாம். (10)

---

## நினைவொன்று

### ஞானிகளிடம் பொருளேவல்



க. நினைவொன்று நினையாம னிற்கினக மென்பார்
நிற்குமிட மேயருளா நிஷ்டையரு ளொட்டுந்
தனையென்று மறந்திருப்ப வருள்வடிவா னதுமேல்
தட்டியெழுந் திருக்குமின்பந் தன்மயமே யதுவாம்
பினையொன்று மிலையந்த வின்பமெனும் நிலயம்
பெற்றாரே பிறவாமை பெற்றார்மற் றுந்தான்
மனையென்று மகவென்றுஞ் சுற்றமென்று மசுத்த
வாதனையா மாசையொழி மன்னொருசொற் கொண்டே.

பொழிப்புரை:—யாதேனும் ஓர் சிறிய எண்ணமுங் கொள்ளாது சலனமற்று மனம் ஓய்ந்திருத்தலையே மேலோர், அழிவற்ற சுத்தநிலை யென்பர்; அவ்வாறு மனமிறந்து நிற்கும் நிலையே திருவருணிலையாகும்; இவ்வாறு சித்தம் யேகாக்கிரமாக, பரானந்த நிட்டைக்கு ஏதுவாகிய திருவருளும் உண்டாகும்; இங்ஙனமாகத் தன்னைத்தானே சிலகாலம்வரை மறந்திருந்து வரின், இதன்மேல் திருவருளே ஓர் உருக்கொண்டு தட்டி யெழுந்திருக்கு மென்க; ஆகவே, இவ்வாறாகத் தன்மயமாய் நிற்கின் பரமானந்தம் வந்துறும்; வேறே ஏதுவுமில்லையாம். இவ்விதமா யின்பநிலையினைக் கொண்டவரெவரோ அவரே பிறந்திறவாதவோர் அரிய சம்பத்தைப் பெற்றவ

ராவர் ; இதன்மேல், வீடுவாசல் மக்கள் மனைவி உற்றார் மற்றாராகிய இந்த அஞ்ஞான வாசனையாயுள்ள வாஞ்சையை மௌனி யுரைத்தவோர் வார்த்தை கொண்டு அறவே யொழித்துவிடுவாய்.

குறிப்புரை :—அகமென்பர் - அழிவற்ற நிலயமாம் வீடு என்பர், தன்னினைவொழிய, தற்போதமாம் ஜீவபோதமறும். அது அறவே ஆண்டுத் திருவருளாம் சிவபோதம் தானே தட்டி யெழுப்புமென்க.

இக்கருத்தினையே ஓர் பெரியார்—

"தன்னைமறந் தின்பமுற வெண்ணிலாவே வொரு
தந்திரம்நீ சொல்லவேண்டும் வெண்ணிலாவே" என்றுங் கூறினர். மன்னொருசொல் - மௌனாசிரியர் கூறியருளியவோர் உபதேசம். (1)

உ. ஒருமொழியே பலமொழிக்கு மிடங்கொடுக்கு மந்த
வொருமொழியே மலமொழிக்கு மொழிக்குமென மொழிந்த
குருமொழியே மலையிலக்கு மற்றைமொழியெல்லாங்
கோடின்றி வட்டாடல் கொள்வதொக்குங் கண்டாய்
கருமொழியிங் குனக்கில்லை மொழிக்குமொழி ருசிக்கக்
கரும்பனைய சொற்கொடுனைக் காட்டவுங்கண் டனைமேல்
தருமொழியிங் குனக்கில்லை யுன்னைவிட்டு நீங்காத்
தற்பரமா யானந்தப் பொற்பொதுவாய் நில்லே.

பொழிப்புரை :—அவ்வொரு சொல்லே பலவார்த்தைகட்கும் அர்த்தப் பட நிலவும் ; மற்றும் அச் சொல்லானது மும்மலாதிகளையும் போக்கடிக்கும் போக்கும் எனக் கூறியருளிய ஆசிரியன் வார்த்தையே ஈண்டு மலையிலக்காக (அதாவது மலைப்பிரமாணமாகக்) கொள்ளல் வேண்டுவதாம் ; இஃதன்றி வேறாயுள்ள வார்த்தைகளையும் ஓர் வரையிலாது சில்லாடலையொப்ப பயன்பெறாதொழியும் ; இவ்வகையாயுள்ள நினக்கு இதன்மேல் கருப்பொறை யமைப்பே கிடையாவாம் ; கணுவுக்குமேல் கணுக்களில் உருசி அதிகப்படும் கரும்புபோல் வார்த்தைக்கு வார்த்தை இனிக்கக்கூடிய சொற்களைக்கொண்டு உன்னை யுனக்குக் காட்டித்தரவுங் கண்டுகொண்டாய் விசாரணையினாலே. இனி யிவ்வாறாய பின்னர், வேறாகப் போதித்தற்கேற்ற வார்த்தை யுனக்கு யேதுமில்லையாகும் ; ஆதலினாலே நின்னைவிட்டகலாத தற்பரமாயும், பேரின்பப் பொற்சபை யொத்தும் ஒரே நிலையாயும் நிற்பாயாக.

குறிப்புரை :—தற்பரமாய் - தான் பரம்பொருள்போன்று மனம் ஓய்வுற்றிருத்தலாம். அதாவது, தானே பரவஸ்துவாய்க் கொள்ளல்.

இதனால், சற்குரு கடாக்ஷமின்றி முக்தி சித்தியாதென்பது புலனாயது.

நின்னைவிட்டு நீங்காத் தற்பரமாய் - உன் கருவி கரணங்களானவை நின்குறியைவிட்டு வேறெவற்றினும் பற்றிச் செல்லாமை யென்க. (2)

௩. நில்லாத வாக்கைநிலை யன்றெனவே கண்டாய்
நேயவருள் மெய்யன்றோ நிலையமதா நிற்கக்
கல்லாதே யென்படித்தாய் கற்றதெல்லா மூடங்
கற்றதெல்லா மூடமென்றே கண்டனையு மன்று
சொல்லாலே பயனில்லை சொன்முடிவைத் தானே
தொடர்ந்துபிடி மர்க்கடம்போற் றொட்டதுபற் றுநில்
எல்லாரு மறிந்திடவே வாய்ப்பறைகொண் டடிநீ
யிராப்பகலில் லாவிடமே யெமக்கிடமென் றறிந்தே.

பொழிப்புரை :—கேவலம் அழிவுள்ளதான இவ்வுடலை அநித்திய மானதாகவே யுணர்ந்துள்ளாய்; (ஆன்மாக்களிடத்து அன்புற்றுக் காக்கும்) திருவருட் சத்தியானது நித்தியவஸ்துவல்லவா? ஆகையால் நீ அத்திருவருட் சத்தியையே தாயகமாக்கொண்டு அதையொட்டி நிற்கத் தெரிந்து கொள்ளாமல் இதர விஷயாதிகளைக் கற்றறிந்ததேனோ? இதனால், நீ கற்றுக் கேட்டவனைத்தும் பயனற்றதாயிற்று; ஆனாலும், கற்றவனைத்தும் மூடமாகக் கண்டித்தலுமல்ல; பின்னை யாதோவெனின், பலவாறாகச் சொல்லிக்கொண்டிருத்தலாற் சிறிதும் பயன்பெறுதலின்றாகும் என்று குரு சொல்லியருளிய வார்த்தையின் கருத்தினை (அதாவது முடிவை) யே கடைப்பிடியாய்ப் பிடித்துக்கொள், அப்பற்றுதலும் குரங்குப்பிடியா யிருத்தல் வேண்டும்; இதன்மேல் இரவும் பகலுமிலா யேகாந்தஸ்தானமே நினக்கிடமாமெனத் தெரிந்து யாவருமுணருமாறதாக அவ்வநுபூதியினைப் பற்றி நீ வாய்கொண்டு உரைத்தலாம் பறை சாற்றுவாயாக.

குறிப்புரை :—அதி யநித்தியத்துவமாய இச்சரீரம் நூன்முகத்தானும் கேள்வியானும் பிரத்தியக்ஷக் காக்ஷியானும் நன்குணர்ந்தவாறாக 'நில்லாத வாக்கைநிலை யன்றெனவே கண்டாய்' எனக் கூறினாராக, மற்றைப் பெரியாரும் சான்றாக—

நடலைவாழ்வு கொண்டென் செய்தீர் நாணிலீர்
சுடலை சேர்வது சொற்பிர மாணமே
கடலி நஞ்சமு துண்டவர் கைவிட்டால்
உடலி னார்கிடந் தூர்முனி பண்டமே. —யென்றார் தேவாரச்செல்வரும். பற்றுநில், பற்றிநில்லென்பது. செய்யா யெனும் வாய்பாடு, நடவா நின்றான் என்பது போன்று.

'இராப்பக லில்லா விடமே யெமக்கிடமென்று' என்றார், - இராப்பக லற்றவிடம் - நினைத்தலு மறத்தலு மற்ற விடமாம்.

௪. இடம்பொருளே வலைக்குறித்து மடம்புகுநா யெனவே
யெங்கேநீ யகப்பட்டா யிங்கேநீ வாடா
மடம்பெறுபாழ் நெஞ்சாலே யஞ்சாதே நிராசை
மன்னிடமே யிடமந்த மாநிலத்தே பொருளுந்
திடம்பெறவே நிற்கினெல்லா வுலகமும்வந் தேவல்
செய்யுமிந்த நிலைநின்றோர் சனகன்முதன் முனிவர்
கடம்பெறுமா மதயானை யென்னவுநீ பாசக்
கட்டான நிகளபந்தக் கட்டவிழப் பாரே.

பொழிப்புரை :—வீடுவாசல், திரவியம், பணியாளர் ஆகிய இவை களைப்பெறுமாறு விருப்புற்று, மடத்தினுள்ளே (சமயம் பார்த்து) நுழை கின்ற சுவானம்போல நீ எங்குபோயகப்பட்டுக் கொண்டனை? நீ இவ்விட மாய் வருவாயடா, மடமையையே உருவாக்கொண்டு வந்துள்ள பாழும் மனத்தினாலே நீ சிறிதும் அஞ்சற்க; ஆசையற்று நிற்பதே உறுதி நிலை யாக்கொண்டு நிற்பாய். அந்த மேலான ஸ்தானத்தே சிவாநுபூதிச் செல்வ மாய சகல பதார்த்தங்களும் உளவாகும்; இடம் பொருளேவலாதி நிச்சய முள்ளதாக விருப்பின் சகல உலகத்தாரும் நின்பால்வந்து பணிவிடை புரி வார்கள்; ஆகவே இந்நிலைக்கண் நிலைத்து நின்றவர்கள் சனகன் முதலாயுள்ள முனிவர்களாகும்; மதங்கொண்டு பெரிதாயுள்ள யானையைப்போன்றும் நீ பாசபந்தமாகிய விலங்காம் பந்தத்திற்குக் காரணமாயுள்ள தளையானது தானு கவே விலக்குற்று நீங்குமாறு ஓர் உபாயத்தை ஆராய்ந்தறிந்துகொள்.

குறிப்புரை :—நினக்கு இடமும் பொருளும் பணியாளரும் அவசிய மாங் காலத்தில், இவ்வுலக மன்றி மற்றெல்லா வுலகமும் வந்து ஏவல் புரி யும்; ஆனால் நீ நிராசையை மட்டும் அத்தியாவசியமாகக் கொண்டுவிடல் வேண்டும்.

"ஆசையறு மின்களாசை யறுமின்கள்
ஈசனோடாயினு மாசையறுமின்கள்
ஆசைபடப்படவாய் வருந்துன்பமே
ஆசைவிடவிட வாய்வரு மின்பமே"—என்றார் திருமூலரும்.

'ஆசையற்றக்கால் அகிலமே கைகூடப்பும்,' என்றும்,

'பேராசையெனும் பிணியிற் பிணிபட், டோராவினையே னுழலத் தகுமோ' என்றார் அருணகிரியாரும்.

௫. பாராதி யண்டமெல்லாம் படர்கானற் சலம்போற்
பார்த்தனையே முடிவினின்று பாரெதுதா னின்ற

தாரானு மறியாத சத்தன்றோ வதுவா
யங்கிருநீ யெங்கிருந்து மதுவாகை கண்டாய்
பூராய மாகநீ மற்றொன்றை விரித்துப்
புலம்பாதே சஞ்சலமாப் புத்தியைநாட் டாதே
ஓராதே யொன்றையுநீ முன்னிலைவை யாதே
யுள்ளபடி முடியுமெலா முள்ளபடி காணே.

பொழிப்புரை :—இப்பூமி முதலாயுள்ள சகல லோகங்களும் பாவி யிருக்கும் கானல் நீரைப்போன்று பாழ்பட் டொழிவதனை நீ நேரே பார்த் திருந்தாய்; இனியும் முற்று முற்றுப்பார் ஆங்கு எது மிச்சமாயுள்ளது, அது எவரானு முணரக்கூடாத நித்திய வத்துவல்லவா? ஆகவே, நீ அந் நித்தியத்தோடு மருவி யாங்கிருந் துவருவாய்; (அங்ஙன மிருந்திடின்) யாண் டிருந்திடினும் நீ அதுவேயாவாய்; நீ பழங்கதையாக வேறெதனையுங் கூறிப் புந்தி நையாதே! நின்திடமாயுள்ள அறிவினை சலனமுற எவற்றினும் பதித்து விடாதே; மற்றும் எதையும் எதிரிடையாக வுணரற்க; அன்றி யெவையும் முன்னிலையாகச் சாட்சிப்படுத்தாதே; யாவும் யதார்த்தமாகவே நடை பெறும்; இது உண்மையேயாம்.

குறிப்புரை :—

ஒருபொருளை நீத்தங் கொருபொருளைப்பற்றி
யிருபொருளும் போக்கி யிடையே—யொருபொருளு
மற்றநிலையேதோ வஃதுன் னிலையென்றான்
குற்றமற்ற ஞான குரு.—என்றும்,

ஆரா வியற்கை யவா நீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தருமென்றல்—பேராசை
நீக்கத்தி லீசனிறையா நிறைவாதல்
ருக்கத்தின் மோக்கத் துறை.—எனவும்,

இவ்வாறாகப் பூர்வாசிரியர்கள் கூறிய பரம ஆப்த மொழிப்படியே ஒருவனாய் வந்து உபதேசித்த ஓர்மொழியைப்பற்றி, மற்றன மனங்கொண் டாழாது, வீணிலலையாது, எல்லாம் வல்லானருளால் எல்லா நலனுமெய்தலா மென்றெங்குறினும், அங்கேயவனாய் வந்தருள்வனென்ற உறுதி கொண்டு நிராசா வேசனாய்ச் சும்மாயிருந்திடச் சுகமுதயமாமென்று ஓர் நிலையே நிற்பாயென்பதாம். கானற்சலம்=கானலே தண்ணீரெனத் தோற்றமாத் திரமாய்க் காண்டல் ஆகவே, பொருள் சூன்யமாம். (5)

சா. உள்ளபடி யென்னவுநீ மற்றொன்றைத் தொடர்ந்திட்
டுளங்கருத வேண்டாநிஷ் களங்கமதி யாகிக்

கள்ளமனத் துறவைவிட்டெல் லாந்துறந்த துறவோர்
கற்பித்த மொழிப்படியே கங்குல்பக லற்ற
வெள்ளவெளிக் கடன்மூழ்கி யின்பமயப் பொருளாய்
விரவியெடுக் கெடுக்கெடுத்து விள்ளவும்வா யின்றிக்
கொள்ளைகொண்ட கண்ணீருங் கம்பலையுமாகிக்
கும்பிட்டுச் சகம்பொயெனத் தம்பட்ட மடியே.

பொழிப்புரை :—நான் எல்லாம் உள்ளவாறே யாமெனக்கூற, நீ அதற்குச் செவியேற்றுக் கொள்ளாது, ஏ மனமே ! வேறே எதையோ மனம் பற்றி உள்ளத்திற் கவலை கொள்ளற்க ; பரிசுத்தமான புத்தியினை யுடையாய் ! கபட மனத்தினையுடைய நீ போலித்தனமாயுள்ள வெளித்துறவை யகற்றி, உண்மையாகவே சமஸ்தமானதையுந் துறந்துள்ள எதார்த்த துறவுடையார் நியமித்த மெய்மொழிப் பிரகாரம் இரவும் பகலுமொழிந்த விடத்திலே பரஞ்சோதி மயமான சமுத்திரத்தின்கண் படிந்து சுகானந்தப் பொருளாய் நின்ற வதன்பாற் பேதமின்றி யொன்றுபட்டு மும்முறை யெடுத்தோதற்கும் வாய்வாராது பெருகிவழியும் கண்ணருவியும் உடல் நடுக்கமுமாய் கரண மூன்றையுங் குவித்து நாமரூபப் பிரபஞ்சம் அசத்தியமெனக் கூறிப் பறைசாற்று வாயாக.

குறிப்புரை :—எல்லாந் துறத்தலாவது, தேகாதி சகல பண்டுபதார்த்த, போகபோக்கியாதிய வனைத்து மென்க. இதனை வேதாந்த சாத்திரங் கள் சர்வ சங்கப் பரித்தியாக மென்று ஓதுவர். இது வடமொழியாம். இத்துறவையே முற்றத்துறத்த லெனவும் வழங்குவர் தமிழர். அதாவது உள்ளும் புறமும் ஒப்பத்துறத்தலாம். வெண்காடர் துறவே சாட்சியாம். (6)

எ. அடிமுடியு நடுவுமற்ற பரவெளிமேற் கொண்டா
லத்துவித வானந்த சித்தமுண்டா நமது
குடிமுழுதும் பிழைக்குமொரு குறையுமில்லை யெடுத்த
கோலமெல்லா நன்றாகுங் குறைவுநிறை வறவே
விடியுமுத யம்போல வருளுதயம் பெற்ற
வித்தகரோ டுங்கூடி விளையாட லாகும்
படிமுழுதும் விண்முழுதுந் தந்தாலும் களியாப்
பாலருட னுன்மத்தர் பிசாசர்குண மருமே.

பொழிப்புரை :—ஆதிமத்யாந்த ரஹிதமாய பராகாயத்தினை அடையப் பெற்றால், ஒப்பற்ற பரானந்த மனமாயமையும் ; நம் மூதாதையோரனைவர்களும் கரைசேர்வர்கள் ; (அதன் மேல்) யாதொரு குறைபாடும் வாராது ; கொண்டுள்ள காரியாதியனைத்தும் அதாவது சுவானுபூதிக ளெல்லாம் அநு

பவசித்தியாகவே கைகூடும்; கூடுதல் குறைதலின்றி இரவு நீங்கி சூரி யோதய காலத்தை ஒப்பதிருவருட் பிரசாதத்தைத் தன்பாலடைந்துள்ள மெய்ஞ்ஞானிகளோடுங் கூடிக்கலந்து விளையாட நேரும்; இம்மண்ணுலக மும் தேவலோகமும் கொடுத்தபோதும் மனத்திருப்தியடையாது, பாலி யர், பித்தினர், பேய்க்கோலங்கொண்டார் ஆகிய இத்தகையாளர்களது குணம்போல் திரிபடைவர்.

குறிப்புரை :—

கரையின் மெய்ஞானவின்பப் பிரமமாங் கடலினுள்ளே
யொருவனதுள்ளமொன்றி யொடுங்குமே லவனைப் பெற்றோர்
பெரியபேறெல்லாம்பெற்றார் பேணுமுக்குலமுந் தூயதாம்
பொருவிலானிருந்ததேயம் புண்ணிய பூமியாமே.

பரன், பரைவாழும் பரவெளிவீடுற்றார் மேற்கூறிய பெரும்பே றெலாம் பெற்றுவாழும் பெருவாழ்வுற்றுத் தம் பிதிராதியரை யெல்லாம் மோக்ஷலோக மடையச்செய்வரென்பது விகசிதமாயிற்றென்க. (7)

அ. வரும்போமென் பனவுமின்றி யென்றுமொரு படித்தாய்
வானாதி தத்துவத்தை வளைந்தருந்தி வெளியாம்
இரும்போகல் லோமரமோ வென்னுநெஞ்சைக்கனன்மே
விட்டமெழு காவுருக்கு மின்பவெள்ள மாகிக்
கரும்போகண் டோசீனி சருக்கரையோ தேனோ
கனியமிர்தோ வெனருசிக்குங் கருத்தவிழ்ந்தோருணர்வா
ரரும்போதன் மணங்காட்டுங் காமரசங்கன்னி
யறிவாளோ வபக்குவர்க்கோ வந்நலந்தான் விளங்கும்.

பொழிப்புரை :—வரத்துப்போக்குகளற்று யெப்போழ்தும் ஒரே விதானமாய் ஆகாயாதிய தத்துவ கூட்டங்களை யெல்லாம் சேர்த்துத் தன் பாற் கொண்டு மேல்தோன்றும் மனத்தினை, (அதன் வலிமையினாலே) கெட்டியான இரும்போ, அன்றிச்சிலையோ, மற்றும் கேவலமரமோ வென்று கூறத்தகுமாயுள்ளதால் அக்கினியின் பால் வெதும்பிய மெழுகென வுருகச் செய்யும் சுகவாரியாய், பின்னர், கரும்பினது இரசமோ, கற்கண்டுதானோ, சீனச்சர்கரைதானோ, மதுவாயிருக்குமோ, மூன்றுவித பழவகைகளோ, தேவாமிர்தமோவெனப் பிரமிக்கும்படியாக மதுரிக்கும் (அப்பரபோகத்தை) இதயமலர் மலரப்பெற்றார்களே நன்குணர்வர்கள். இதுநிற்க; கேவலம் மலர்தலில்லா பூமொட்டானது எவ்வாறு மணம் வீசாதே, அதேபோன் றும், கன்னிப்பெண்ணாள் எவ்வாறு கணவன் சுகம் தெரியாளோ அது

போலவும் பக்குவமீனர்களாயுள்ள சாமானியர்களா உணர்வர் அந்த இன்பத்தை! உணரா றென்றபடி.

குறிப்புரை :—

வெண்பா

1. பக்குவமிலார்க்கருளல் பாவிக்கறமோதல்
மட்கலத்தைப் பொன்னுக்க வாஞ்சை கொளல்—சொக்கமிலா
கன்னிக்குக் காமநூல் கட்டுரைத்தல் கண்ணிலர்க்குப்
பொன்னூரம் பூட்டுதல்போலும்

2. ஒருகோடி சூரியர்களொக்க வுதித்தாலுங்
குருடர்க் கிருளகலாக் கோட்போல்—மருடீர
வாசானு ரைத்தாலு மஞ்ஞானச் சித்தர்க்குப்
பாசாதி நீங்காது பார்.

என்றருளினர் பிற நூலாரும். (8)

௯. தானேயு மிவ்வுலக மொருமுதலு மாகாத்
தன்மையினாற் படைத்தளிக்குந் தலைமையது வான
கோனாக வொருமுதலிங் குண்டெனவும் யூகங்
கூட்டியதுஞ் சகமுடிவிற் குலவுறுமெய்ஞ் ஞான
வானாக வம்முதலே நிற்குநிலை நம்மான்
மதிப்பரிதா மௌனமோனம் வைத்ததுமுன் மனமே
யானாலு மனஞ்சடமென் றழுங்காதே யுண்மை
யறிவித்த விடங்குருவா மருளிலதொன் றிலையே.

பொழிப்புரை :—இந்த பெரிய வுலகானது தானாகவும், ஓர் ஆதிப் பொருளாகாத தன்மையினாலேயும் இதனைச் சிருட்டி செய்து அளித்து வருந் தன்மைத்தாயும், இறைமை பெற்றுள்ள ஓர் மூலப்பொருள் இங்கே யிருப்பதாகவும் யுக்தியைத் தந்தருளியதுமன்றி யிவ்வுலக அந்தத்திலே விளக்கமுறும் யதார்த்தமான ஞானவெளியாயும், அந்த முதற்பொருளுனே தன்னிகரில்லாது துலங்குவதால் அத்தற் பரத்தை நம்மாலே அளவிடற் பாலதரிதாமென மௌன நிலையினை அதிட்டித்ததும் நின்மனமேயாகும்; ஆயினும் அம்மனமானது கேவலம் சடபதார்த்தந்தானே யென்று நலிவுருதே! யதார்த்தத்தை யறிவுறுத்திய ஸ்தானத்தையே குருவாய்க்கொள்ளுக; திருவருளற்றதான ஓர்வத்துவு மின்றும்.

குறிப்புரை :—"யதார்த்த தத்துவாதிகளுட் சில சடவத்து வென்றுலும் திருவருட் சன்னிதானத்து ஒவ்வொன்றும் சித்தாதலு முளவாதலால், அது விஷயமாக மயக்கமுறுது அதையே சற்குருவாய்க் கருதுவாயாக"

வென்பது தோன்றக் கிடக்கின்றது. அன்றி சேதனுசேதன நாமரூபப் பிரபஞ்சாதிகளனைத்தும் அருண்மயமாயே யிருத்தலால் சடமும் சமயம் நேர்ந்துழி திருவருட்சத்தியின் பிரேரணையால் சித்துருவெய்து மென்பது முறையாம். (9)

---

## பொன்னை மாதரை.

(கலிவிருத்தம்)

க. பொன்னை மாதரைப் பூமியை நாடிடேன்
என்னை நாடிய வென்னுயிர் நாதனே
யுன்னை நாடுவ னுன்னருட் டூவெளி
தன்னை நாடுவன் றன்னந் தனியனே.

பொழிப்புரை :—பொன் பொருளாதிகளென்ன, மயக்குறு மங்கையரென்ன, நிலபலாதிகளென்ன இவைகளையும், இவையாதிய ஏனைய பண்ட பதார்த்தாதிகளையும் சிறிதும் விரும்பலே செய்யேன்; கேவலம் இவ்வெளியனைப் பொருந்தியுள்ள எனது பிராணசகாயா! யான் நின்னையும் நினது திருவருளாம் பரவெளி வீட்டினையும் அவாவி நிற்பேன் துணை யொன்றில்லாத யேகனுய யான். என்றும்.

குறிப்புரை :—'ஒன்ரு யநேகவித சத்தியா யுன்மனையாய்,
நின்றுடன் பாதம் நினை'—என்ற பெரியார் கூற்றுக் கிணங்க நின்னையும் நின்னருட்சத்தியையு மன்றி வேறொன்றையும் விரும்பே னென்றருளினர் ஏன்? தன்னுயிர்க்குத் துணைவனுதலினென்க. (1)

உ. தன்ன தென்றுரை சாற்று வனவெலாம்
நின்ன தென்றனை நின்னிடத் தேதந்தே
னின்ன மென்னை யிடருறக் கூட்டினுற்
பின்னை யுய்கிலன் பேதைய னுவியே.

பொழிப்புரை :—தனது தனதென்று சொல்லக்கூடியனவனைத்தும் நின்னதென்றே யருளினுய்; ஆகையினுலே அவைகளை நின்பாலே யொப்புவித்தேன்; இனி இவ்வடியவனைத் துன்புறுமாறு ஆக்கினையாயின், அதி பேதமைத்தன்மையுள்ள இச்சிறியேன் பின்னர்என்னுடலின் கண் உயிர் வைத்து வாழேன் என்றபடி.

குறிப்புரை :—முன்னர் ஆசிரியர்பால் மௌன குருவாய் வந்து உடல் பொருளாவியைத் தந்தருள யேற்றமை கொண்டு தற்சுதந்தரமின்று என்

றும், எளியேற்கு மின்னும் துன்புற நேரின் துறப்பேனுவியை யென்றும் துணிவுரை கூறினராக. (2)

ந. ஆவி யேயுனை யானறிவாய் நின்று
சேவி யேன்களச் சிந்தை திறை கொடேன்
பாவி யேனுள பான்மையைக் கண்டுநீ
கூவி யாளொனை யாட்கொண்ட கோலமே.

பொழிப்புரை :—எனது பிராணதேவே! அறிவினுக்குள்ளறிவாய் விளங்கிய நின்னை, யான் அப்பேரறிவுருவா யமைந்து வழிபாடு செய்யேன்; அன்றியும் என் வஞ்சமாம் நெஞ்சினை யுனக்குத்திறையாக் கொடுத்திலேன்; ஆகவே, மிகவும் தீமையனுகிய வென் சித்தசுபாவ முணர்ந்து என்னை யழைத்து ஆட்கொண்டருள்வாய்; எளியேனைத் தொழும்பு கொண்ட திருவருட்டேவே!

குறிப்புரை :—ஆவித்துணையாம் அரும்பொருளை அறிவாமகக் கண் கொண்டறிதற் காற்றுமையான் 'சேவியே' னென்றனர்போலும். கள்ளச் சிந்தை—களச்சிந்தையென இடைக்குறையாய் வந்தது. பரமான்மாவுக்குத் திறையாவது ஈண்டு ஜீவபோதத்தை யொழித்தலைக் குறித்தென்க. (3)

ச. கோல மின்றிக் குணமின்றி நின்னருட்
சீல மின்றிச் சிறியன் பிழைப்பனே
ஆல முண்டு மமிர்துரு வாய்வந்த
கால மெந்தை கதிநிலை காண்பதே.

பொழிப்புரை :—எனது பிதாவே! நினது அடையாள மில்லாதும், அவை தரித்தற்கேற்ற உத்தம சீலத்துவங் கிடையாதும், நினது திருவருள் பெறுதற்கான பரிபக்குவ மில்லாதும் உள்ள இச்சிறியவன் உஜ்ஜீவிப்பனே! ஆகவே, யான் உய்யுமாறு ஆலகால விஷத்தினை யருந்தினும், தேவாமிர்த ரூபங்கொண்டு வந்தபோது தான் நின் பரசிவ கதியினை யான் பார்க்கப் படுவதாம்.

குறிப்புரை :—இதனல், சிவ சின்னங்களாகிற விபூதி ருத்திராக்ஷ ஜெப தபாதிகள் இல்லையேல் கதிபெறுத லரிதெனக் கூறினர். ஆனாலும் நின் அருண்முறை கொண்டொழுகின் அங்ஙனே நஞ்சும் அமுதாய்க் காக்குமென் றறிந்தனர் போலும். (4)

ரு. காணுங் கண்ணிற் கலந்தகண் ணேயுனைச்
சேணும் பாருந் திரிபவர் காண்பரோ
ஆணும் பெண்ணு மதுவெனும் பான்மையும்
பூணுங் கோலம் பொருந்தியு ணிற்கவே.

பொழிப்புரை :—அகமுகத்தே பேரறிவால் அறிதற்குரிய கண்ணுண் மணிப்பாவையே! விண்ணகத்தும் மண்ணுலகத்தும் சஞ்சரிப்பவர்கள் நின்னைக் காணப்போகார்கள், நீயோ, ஆணாகவும் பெண்ணாகவும் அன்றி அதுவெனும் வர்க்கங்களையும் சேர்ந்து நிலைபெற்றுள்ளத்திடையே விளங்காநின்ற கோலமாய அழகினையுடையான்.

குறிப்புரை :—ஊனக் கண்ணார்க் கொளித்து முட்புறம்பு மொன்றாய
ஞானக்கண் ணார்க்கருள்வ னுடு.

என்ற பெரியார் பெருமொழிக் கிணங்க இறைவனது காட்சியை யறிவார் முற்றத்துறந்த மோனபராளன்றி மற்றையோர்க் கறிதாமென்றே ஆசிரியர் கூறிய

'பூணுங் கோலம் பொருந்தியு ணிற்கவே
சேணும் பாருந் திரிபவர் காண்பரோ'—வென்றறைந்தனர்.

மற்றுந் திருவாசகத்தில் 'ஆணும் பெண்ணு மல்லதையுணர்ந்து' என்றுங் காண்பதறிக. (5)

சா. நிற்கு நன்னிலை நிற்கப்பெற் றாரருள்
வர்க்க மன்றி மனிதரன் றேயையா
நூர்க்கு ணக்கடற் சோங்கன்ன பாவியேற்
கெற்கு ணங்கண் டென்பெயர் சொல்வதே.

பொழிப்புரை :—என்னிலைக்கண் நிலைபெற வேண்டுமோ அந்நிலையாகிய நின்னருணிலையில் நின்றுள்ளார் திருவருள் வகுப்பாரென அழைக்கப் பெறுதலல்லாது சர்வசாதாரண மானிடராகார் என்க ; என் ஐயனே! தீய குணக்கடலாழ்ந்து அதின்மேவும் மரக்கலம்போன்றுள்ள இம் மகாபாவிக்கு எந்த நற்குணநிசயங்கண்டு எப்பெயர் கொண்டழைப்பது.

குறிப்புரை :—சித்தஞ் சிவத்தோ டொருக்கிச் சிவமான
முத்தன் சிவமென மொழிந்திடு மாகமம்
சத்தியஞ் சீவன் சங்கர னென்றே
குற்றமி லுன்மறை கூறும் வகுத்தே.

என்றிவ்வாறு பிறநூற் சான்றாக விளங்கலின் நம்மாசிரியர் மேற்கூறியது சித்தாந்தமாயிற்றென்க. ஈண்டு நன்னிலையென்பது திருவருட்சார்பினின்றாரென்க. சோங்கு - மரக்கலம். இதனையே தனக்குவமை கூறினர் ஆசிரியர். என்? மரக்கலம் கடன்மீது அலைகொண்டலை மோதுமாற்றால், தம்மனமும் அவ்வாறலக்கழிவான் காரணம் பற்றியே யாமென்க. திருவருளைப் பெற்றவனுமல்லேன் அன்றிப் பெறுதவனு மல்லேன் என்னும் நியாய நிகாரணமாகவே "யென்குணங்கண் டென்பெயர் சொல்வதே" என்றனர்

போலும். 'தாழ்ந்தார் வாழ்ந்தா' ரெனலால், தன்னைத் துர்க்குணக் கடலென்றனர். (6)

எ. சொல்லை யுன்னித் துடித்த தலாலருள்
யெல்லை யுன்னி யெனையங்கு வைத்திலேன்
வல்லை நீயென்னை வாவென் றிடாவிடிற்
கல்லை யாமிக் கருமி நடக்கையே.

பொழிப்புரை :— அன்று மௌனியாகவந்து கூறிய அரியதோர் வேதோக்தமாய வார்த்தையை யெண்ணி நெஞ்சந் துடிப்புற்றதல்லாது, திருவருளி னெல்லையைக் கருதி எளியனை ஆங்கே யிருத்திலே னல்லேன்; இனியெளியேனை ஆங்கு வருதி யென்றழைத்திலையேல் இந்தக் கொடியனேன் கொள்கையானது பொய்ப்பட்டதாகு மென்க.

குறிப்புரை :—அன்று ஆசானுரைத்த அம்மெய்ம்மொழி கொண்டு ஆனந்தக் கூத்தாடினனேயன்றி அவ்வருணிலைக் கெதிர்நிலையா யங்குற்றே னில்லையே! என்று மனம்வருந்தி இனியேனும் நீ என்னை அத்திருவருணிலையாம் பரவெளியதனிற் சேர்ப்பிப்பான் கருதி வா வென்றங்கே வகுத்தா லெனில் உலகோரால் யான் மெத்த அவமதிப்புறுவேனென்று மன்றாடுவ தறிக. இதனால், சுவானுபவம் வரவேண்டு மென்பது தோன்ற நின்றது. (7)

அ. கையு மெய்யுங் கருத்துக் கிசையவே
யைய தந்ததற் கைய மினியுண்டோ
பொய்யனேன் சிந்தைப் பொய்கெடப் பூரண
மெய்யதா மின்ப மென்று விளைவதே.

பொழிப்புரை :—ஐயனே! எனது இருகரங்களையும், உடலினையும் கருத்திற்கேற்றவாறாக நினக்கு ஈடுபடுத்தியதின் பின்னரும் சந்தேக மினி யுண்டாமோ? பொய் மயமான என் மனத்துள்ள அபத்தங்கள் கெடுமாறு பரிபூரணமான யதார்த்த இன்பமானது விளைவதெக்காலத்திலோ வறியேன் என்றபடி.

குறிப்புரை :—'பொய்யாயின வெல்லாம் போயகல வந்தருளி மெய்ஞ்
ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே" என்ற வாதவூராளியார் வாக்கிய சிலாக்கியத்தை யொத்தே ஆசிரியர் பொய்ச்சிந்தையும் பொய்யுடற் கரணங்களும் மெய்ச்சிந்தை மெய்யுடலமாயதன் பின்னரே பேரின்பம் விளைவதென்றால் அது எக்காலமோ வென்று விரைகின்றனர் போலுமென்க. 'மனவாக்குக் காயத்தால் வல்வினைமூளும்,
மனவாக்கு நேர்நிற்கில் வல்வினைமன்று' வென்ற திருமந்திரவாக்கான் மனமொழிமெய்களைச் சுத்திகரித்து நிற்றலே தன்னைத்

தான் காத்தலாதலான் அவ்வாறமையப்பெறல் என்று கொலோவென்றும், அம்மூன்றும் நினக்கு அர்ப்பணமான பின்னர் நின்கடனே யாமென்றும், ஆசிரியர் கொள்கையாதல் விளங்குவதறிக. (8)

கூ. என்று முன்னை யிதய வெளிக்குளே
துன்ற வைத்தன னேயருட் சோதிநீ
நின்ற தன்மை நிலைக்கென்னை நேர்மையாம்
நன்று தீதற வைத்த நடுவதே.

பொழிப்புரை :—நல்வினை தீவினை யென்பவை யெனக்கமையா வண்ணம் அநுக்ரகித்து திருவருட் சத்தியிற் சேர்ப்பித்தருளிய பொது நிலைப் புண்ணியமே! சதா சர்வகாலமும் உன்னை என் இதயாம்பரத்திலே யெழுந்தருளியிருக்குமாறு செய்தனனே! திருவருட் சோதியாகியுள்ள நீ அதன் பொருட்டாக என்ன ஒப்புறவாம் நினது திருவருண் முறையினுக்கே.

குறிப்புரை :—இதனால், பஞ்சகிர்த்திய சுத்த நிர்த்தத்துவம் புரிகின்ற பரமானந்தப் பரமபதியாம் தம் பெருமையோராது நாயிற் கடையாயுள்ள அடியவன் இதயத் தமர்ந்தருளிய நின்பேரருட்டன்மைக்கு யான் செய்யும் கைம்மாறு ஒன்று மறியேனே! என்பது கருத்தாம். (9)

ய. வைத்த தேகம் வருந்த வருந்திடும்
பித்த னனருள் பெற்றுந் திடமிலேன்
சித்த மோன சிவசின்ம யானந்தம்
வைத்த வைய வருட்செம்பொற் சோதியே.

பொழிப்புரை :—சித்தத்தின் றன்மையான மௌன முத்திரையை யறிவுறுத்தியவா! மங்களாம்சம் வாய்ந்தவனே! மெய்ஞ்ஞானானந்தம் பொருந்துமா றருளிய என் ஐயனே! திருவருளோடும் விளங்கும் சிவந்த பொன்னொளிபோன்றவனே! அமைந்துள்ள இவ்வுடல் மிகவும் துன்புறலால் வருந்திவரும் உன்மத்தனாகிய நான் நினது திருவருட் செல்வத்தை யடைந்தேனாயினும் ஓர் நிலையாயிருக்கும் திடத்தன்மையைப் பெற்றவனாகேன்.

குறிப்புரை :—எனக்குரிய இச்சரீரத்தை வைத்துக்கொண்டு யான் எய்தும் உபாதை அளவில்லையாகும்; ஆகவே, நின்னருள் வாய்ந்துள்ள அடியேற்கு தக்கதல்லவே! மனோதிடம் வாராமையாலே தன்னை உன்மத்தனெனலாயின ரென்க. (10)

யக. செம்பொன் மேனிச் செழுஞ்சுட ரேமுழு
வம்ப னேனுனை வாழ்த்து மதியின்றி

யிம்பர் வாழ்வினுக் கிச்சைவைத் தேன்மனம்
நம்பி வாவெனி னென்கொல் செய்வதே.

பொழிப்புரை :— சிவந்த பொன்னினையொத்த அழகுவாய்ந்த மேலாயுள்ள வொளிமயமே! முற்றும் மூடத்துவம் வாய்ந்துள்ள யான் தேவரீரைத் தோத்திரத்தற்குரிய சக்தியற்று இம்மண்ணுலக வாழ்வினைக் கருதி ஆசைகொண்ட மனமுடையேனாயினன்; பரிபூரணவஸ்துவே! நீ, எளியேனை வாவென்று அழைப்பாயானால் யான் வேறென் சொல்லப்போகிறேன்!

குறிப்புரை :—நீ சர்வ பரிபூரணம்சம் வாய்ந்த பரமபதி ஆகையினாலே எளியேனை வலிந்தழைத்து ஆண்டருளுவையே யானால் நின்னை யாவரோ தடைசெயற் பாலவர்! எவருமில்லை யென்பதாம்.

'பொன்னார் மேனியனே' என்றும், 'பொன்செய்தமேனியினீர்' என்றும் வினைமெய்யன்பர் கூறியருளினமையானே ஆசிரியரும் 'செம் பொன்மேனிச் செழுஞ்சுடர்' ரென்றனர். இம்பர் - இவ்வுலக வாழ்வை. ஆகவே, தேவரீர்தம் திருவுளமிரங்காமைக்கு யாவர் யென் செய்வதென் பது விகசிதம். (11)

௰௨. செய்யுஞ் செய்கையுஞ் சிந்திக்குஞ் சிந்தையும்
ஐய நின்னதென் றெண்ணு மறிவின்றி
வெய்ய காம வெகுளி மயக்கமாம்
பொய்யி லேசுழன் றேனென்ன புன்மையே.

பொழிப்புரை :—கருவி கரணாதிகளால் நிகழும் காரியாதிகளும், நெஞ்சம் நினைவுகொள்ளும் நினைப்பும், ஐயனே! இவை நின் செயலென்று அறியத்தக்க மெய்யறிவில்லாது, மிகக்கொடியதாயுள்ள காமக்குரோதாதி மயக்கங்களென்னும் பொய்யனுபவங்களிலே மனஞ்செலுத்தி அதிலேயே சுழன்றழுந்திய அற்பமதியாளனாயினேன்! என் செய்வேன்!

குறிப்புரை :—"என் செயலாவது யாதொன்றுமில்லை யினித் தெய்வமே, உன்செயலே செயலென் றுணரப்பெற்றேன்" என்றருளிச்செய்த முற்றத்துறந்த பெரியாரும் மற்றும், "நானுரைக்கும் வார்த்தையெலாம் நாயகன்சொல் வார்த்தையன்றி, நானுரைக்கும் வார்த்தையன்று நாட்டீர் நா—னேனுரைப்பேன், நானெனக்கெனவோர் ஞானவுணர்வேது சிவம், ஊனாடி நில்லாவழி." என்றருளிய வள்ளலாரும் மற்றும் வினையோரும் ஓதியருளிய தறிக. (12)

௰௩. புன்பு லானரம் பென்புடைப் பொய்யுடல்
அன்பர் யார்க்கு மருவருப் பல்லவோ
என்பொ லாமணி யேயிறை யேயித்தால்
துன்ப மன்றிச் சுகமொன் றுமில்லையே.

பொழிப்புரை :—கேவலம் மாமிசம், நரம்பு, எலும்பு முதலிய இழிந்த பதார்த்தங்களைக் கொண்டுள்ள அநித்திய சரீரமானது மெய்யன்பர்களுக்கு மிகவும் வெறுப்புள்ளதன்றோ? எனக்கினிய முழுமணியே! என் தலைவனே! இத்தன்மையாயுள்ள உடலினாலே யான் பெறுவது துன்பமே யல்லாது பரம சுகம் பெறுவது கிடையாவாம்.

குறிப்புரை :—பொல்லாமணி, பொலாமணியென இடைகுறையாய் வந்து துவாரமில்லா முழுமணியே யெனப்பொருள் தாராநின்றது.

பொல்லாத புலையுடலைப் புழுப்பொதிந்த போர்வைதனை
நில்லாத நீரெழுத்தை நிகரிலிதன் றிருவாக்கைக்
கல்லாதார் பொருளெனவே காண்பதனைக் கலந்தறிந்து
நல்லார்கள் பொருளெனவே யொருகணமு நாடாரே.

என்று சிவதருமோத்தரம் கூறலான் ஆசிரியர், "புன்புலானரம் பென் புடைப் பொய்யுடல், அன்பர் யார்க்கு மருவருப் பென்றனர்" போலும். இதோடும் நில்லாது, 'துன்பமன்றிச் சுகமொன்றுமில்லையே' என்று மருளினர். (13)

௰௪. இல்லை யுண்டென் றெவர்பக்க மாயினுஞ்
சொல்ல வோவறி யாத தொழும்பன்யான்
செல்ல வேறொரு திக்கறி யேனெலாம்
வல்ல நீயெனை வாழ்விக்க வேண்டுமே.

பொழிப்புரை :—நினது அடிமையாளாகிய யான், யெவர்பாலுஞ் சென்றடுத்து எனது இல்லாத் தன்மையைப்பற்றி 'என்பால் உண்டில்லை' யென்னுங் குறையைச் சொல்லத் தெரியாத சர்வசாமானியன்; அன்றி வேறே யாதொரு கெதியுமற்றவ னுயுமுள்ளேன்; ஆகையால் எல்லா வன்மையும் பொருந்தியுள்ளவனாதலால் நீதான் இவ்வெளியனை வாழுமாறருளல் வேண்டும்.

குறிப்புரை :—இதனால், 'திக்கற்றவனுக்குத் தெய்வமே கதி' யென்ற படி முடிவிலாற்றலுள்ள நீயே காத்தாள வேண்டுமென்று வேண்டியருளினர் போலும். (14)

௧௫. வேண்டுஞ் சீருண் மெய்யன்பர்க் கேயன்பு
பூண்ட நானென் புலமறி யாததோ
ஆண்ட நீயுன் னடியவா னானென்று
தூண்டுவே னன்றித் தொண்டனென் சொல்வதே.

பொழிப்புரை :—ஒப்பற்றோங்கிய நின்றிருவருளினை எளியவனாய என்னால் விரும்பத்தக்கதாகும்; நினது உண்மை யன்பர்க்கே அன்புற்ற யான்; ஆக, எனதுளமறியாது, எளியனை ஆண்டருளியவன் நீயேயாகும்; நினது தொழும்பன் யானாவன் என அடுத்து எச்சரித்து வருதலன்றிச் சொல்லக்கூடிய தொன்றுமின்றாம்.

குறிப்புரை :—யான் நினது உண்மைத் தொண்டர்க்குத் தொண் டுரிமையுமுடையேன்; ஆகவே, நினது குடியடிமை யானாகி யுள்ளவ னென்பதைக் குறித்து நின்பால் அடுத்து எடுத்துரைப்பே னன்றி வேறென் செய்யவல்லேன்!

வான்மா றினுமொழி மாறாத மாறன் மனங்களிக்கக்
கான்மாறி யாடிய கற்பக மேநின் கருணையென்மேற்
றான்மாறி னும்விட்டு நான்மாறி டேன்பெற்ற தாய்க்குழலைப்
பான்மாறி னும்பிள்ளை பான்மாறு மோவதிற் பல்லிடுமே.

என்றார் வள்ளற் பெரியாரும். (15)

௧௬. எனக்கு ளேயுயி ரென்ன விருந்தநீ
மனக்கி லேசத்தை மாற்றல் வழக்கன்றோ
கனத்த சீரருட் காட்சி யலாதொன்றை
நினைக்க வோவறி யாதென்ற நெஞ்சமே.

பொழிப்புரை :—எளியேன்ற னகத்திலே யென்னாவிக் குரியதோர் ஆவியாயிருந்துவரும் நீ, ஆண்டுள்ள எனது நெஞ்சகக் குறையை வஞ்சகமின்றி நீக்குதல் முறையல்லவோ? ஆனால், என் மனமோ, மேன்மையதாயுள்ள சிறந்த நின்னருட் டரிசனமல்லாது வேறெவற்றையும் எண்ணுதலே செய்யாதென்பதாம்!

குறிப்புரை :—என் கடனை யான் யெண்ணி முயல்வதுபோன்றே நின் கடனாய நின்னடியர்குறை யொழித்தலையன்றோ செலுத்தன் முறையாமென்று விவகரித்தனர் போலும்.

'நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை'—என்றார் நாயனாரும். (16)

௧௭. நெஞ்சு கந்துனை நேசித்த மார்க்கண்டர்க்
கஞ்ச லென்ற வருளறிந் தேயையா

தஞ்ச மென்றுன் சரணடைந்தே னெங்குஞ்
செஞ்செவே நின்ற சிற்சுக வாரியே.

பொழிப்புரை :—தேவரீரை அன்பொடும் பூசித்து நேசித்துவந்த மார்க்கண்டேய முனிவர்க்காக, அன்று பயப்படாதேயென்று அருள்புரிந் தாண்டமையை நோக்கி இன்று எனையனே! நின்றிருவடித் தாமரையே அடைக்கலமாக் கொண்டடைந்தேன், யாண்டும் பூரண நிறைவாயுள்ள ஞான ஆனந்தக் கடலே!

குறிப்புரை :—'மார்க்கண்டர்க் காக மறலிபட்ட பாட்டையுன்னிப்
பார்க்கினன்பர்க் கென்ன பயங்காண் பராபரமே.'

என்றார் ஆசிரியர் பிறண்டும். அன்றியும், தஞ்சமென்று தாள்பணிந் தோரை, அஞ்சலென்று அபயஞ்செய்யும் அருட்கடலானமை கொண்டே அடிமையும் நின்னடிக்கண் அபய மென்றடைந்தன னென்பதானார்போலும். (17)

௰அ. வாரி யேழு மலையும் பிறவுந்தான்
சீரி தானநின் சின்மயத் தேயென்று
லாரி லேயுள தாவித் திரளதை
யோரி லேனெனை யாண்ட வொருவனே.

பொழிப்புரை :—இவ்வெளியனேனையு மாண்டருள்செய்த ஒப்புயர் வற்ற வொருமுதலே! எழுவகை யாழிகளும் அட்டகுல பர்வதங்களும், மற்றையனவும் நிலையுற்றிருத்தல் நினது ஞானகாரவகண்ட சொரூபத்திலே யெனின், நாலுவகை ஆன்ம சொரூபங்களனைத்தும் நின்னகத்தே தானேயுள்ளது! ஆனால் இவ்வுண்மையை யான் உணர்ந்தேனில்லை.

குறிப்புரை :—கடலென்ன, மலைகளென்ன, மற்ற சரவசராதிகளென்ன இவைகளெல்லாம் நின் அருட்டிறங்கொண்டுயிர் வாழ்ந்திருக்க, யான், அதற்கும் புறம்பாதலுமுண்டோ வென்றபடி. (18)

௰௯. ஒருவ ரென்னுளத் துள்ளுங் குறிப்பறிந்
தருள்வ ரோவெனை யாளுடை யண்ணலே
மருள னேன்பட்ட வாதை விரிக்கினோ
பெருகு நாளினிப் பேச விதியின்றே.

பொழிப்புரை :—தாமன்றி வேறுயாரேனும் என் மனத்தின்கணுள்ள குறிப்பினைத்தெரிந்து திருவருள் புரிவரோ! எளியனை அடிமைத்திறங் கொண்டருளிய பெருந்தெய்வமே! மாயா மயக்குற்ற அடியேன் அடைந்து வந்த கட்டத்தினை விரித்தெடுத்துரைக்கின் பெருகும்காலம், இனி அதைக் குறித்து வசனிப்பதென்றால் முறையின்றாம்.

குறிப்புரை :—உள்ளத்தி னுள்ளேநின்ற கருவே " யென்று தேவாரச் செல்வர் திருவாய் மலர்ந்தருளியவாறு என் சித்தமிசை குடிகொண்டிருக்கும் தேவரீரையன்றி என்னுளக் குறிப்பறிந்தருள்வா ரொருவருமில்லை யென்றபடி. சான்றாக.

"தோற்றுவதெல்லா நின்னிடத்தோற்றம்
தோற்றம் பிரிதிற் றோற்றச்சுடர்முனே" என்றும்.

"மன்னுமா லயனோடு வானும் வையமும்
பின்னமு மபினமும் பெருகிச் சீவனும்
பன்னுமா ணவமுதற் பாசமி யாவையு
முன்னுமிச் சிவத்திடை யுதித்தொ டுங்குமால்" எனவும் வருவனவற்றால் காண்க. (19)

உ0. இன்று னக்கன் பிழைத்தில னென்றே
யன்று தொட்டெனை யாளரசே யென்று
நின்ற ரற்றிய நீலனைக் கைவிட்டான்
மன்ற மெப்படி நின்னருள் வாழ்த்துமே.

பொழிப்புரை :—இப்போது யான் நின்பால் அன்புற்றிலே னென்று முன்னே முதலாக ஏ இறைவா! எனையாண்டருள்வாயெனக் கதறியுள்ள இவ்வஞ்சனேனை நீ கைநெகிழ விட்டு விடின் ஞானவான்கள் நினது திருவருளினை எவ்வாறு தோத்திரிப்பார்கள்? கூறுவாய்.

குறிப்புரை :—நின் அடிமையாகிய என் குறைமுறை யறிந்து திருவருள் புரியாக்கால் மற்றைத் தொண்டர்கள் நின்னை எவ்வாறு வாழ்த்துவரென்றபடி. நீலி—என்னும் பெண்பாற்குறி ஈண்டு ஆண்பாலுக்கு மேற்றமாயிற்று. ஆகவே வஞ்சன் என்று பொருள் கொண்டதாம். (20)

உக. வாழ்த்து நின்னருள் வாரம்வைத் தாலன்றிப்
பாழ்த்த சிந்தைப் பதகனு முய்வனோ
சூழ்த்து நின்ற தொழும்பரை யானந்தத்
தாழ்த்து முக்க ணருட்செம்பொற் சோதியே.

பொழிப்புரை: —நின்பால் சுற்றியுள்ள மெய்யடியவரை பரமானந்த சாகரத்தில் மூழ்குமாறு செய்யும் திரிநேத்திரதாரியும் சகல ஜீவதயா நிதியாயுமுள்ள செவ்விய பொன்போன்ற பிரகாசரூபனே! அடியார்கள் துதிக்கும் நினது திருவருள் என்பால் உரிமைகொண்டா லல்லாது, கேவல தீய நெஞ்சங்கொண்டுள்ள இப்பாதகனும் கரையேற முடியுமோ! முடியாதென்றபடி.

குறிப்புரை :—

" எப்போதுலையுமிந்த துன்பம்

ஈசனருளி ருந்தாலல்லவோ யின்பம்" என்ற பழவடியார் பாடலை யொத்தே நமது ஆசிரியரும், துன்பந் துலைந்து இன்பம்விளைய திருவருள் வேண்டும் என்றனர். அவற்றோடு நில்லாது முக்கணருளென்றார், எப்படி ? கடாக்ஷவீக்ஷண்யம் அவசியமாதலின் அங்ஙனங் கூறலாயினரென்க. கடாக்ஷம் - கடைக்கண். வீக்ஷண்யம் - பார்வை. (21)

உஉ. சோதி யேசுட ரேசுக மேதுணை
நீதி யேநிச மேநிறை வேநிலை
ஆதி யேயுனை யானடைந் தேனகம்
வாதி யாதருள் வாயருள் வானையே.

பொழிப்புரை :—பரஞ்சோதியாயும்,பிரகாசயேதுவாம் தீபமயமாயும், பேரின்பமயமாயும், மெய்யடியவர்தம் அருந்துணையாயும், நியாய நிலையமாயும், பரிபூரணமாயும், நித்தியவத்துவாயும், முக்காலங்களிலும் சாஸ்வதமாய் விளங்கும் முழுமுதற் பொருளாயுமுள்ளவனே! தேவரீரை அடியேன் நமஸ்கரித்தேன் ; ஆகையால் என் நெஞ்சம் என்னைத் துன்புறுத்தா வண்ணம் திருவருட் பரவெளிக்கண் வியாபித்திடும் இறையே! கருணை புரிவாயாக.

குறிப்புரை :—நின்னை அடைக்கலமாகக் கொண்டது நின்திருவருட் டுணைக்கே யென்பதாம். நித்தியம், நீதி, துணை, முதலாய பல நாமங்கள் கொண்டுள்ளதற்கேற்ப அவைக்குரிய தத்துவம் நிறைந்திருத்தல் இயல்பாதலின் அங்ஙனம் வேண்டுதல் புரிந்தேனென்றவாறும். அருள்வா யருள் வானையே யென்றது. கிருபை செய்வாய் அருள் வெளியாம் ஞானாகாயத் தினையென்று கூறினும் அமையும். ஏன், " வான் கலந்த மாணிக்கவாசக" வென்றதுபோன்று பராகாயத்தை யருள்வாயென்றார் எனலுமாம். (22)

உ௩. வானைப்போல வளைந்துகொண் டானந்தத்
தேனைத் தந்தெனைச் சேர்ந்து கலந்தமெய்ஞ்
ஞானத் தெய்வத்தை நாடுவ னொனும்
ஈனப் பாழ்கெட வென்று மிருப்பனே.

பொழிப்புரை :—விரிந்த ஆகாயவெளியை கார்கால மேகபடலங்களானவைச்சூழ்ந்து நிறம்பியதுபோன்றே, பரானந்தத்தேனும் திருவமுதினை யருளொடும் பாலித்து எனைச்சேர்த்தருளிய சத்தியஞானானந்தப் பரம் பொருளைத்தேடி யுடையேன் ; இதனால் நான் நான் என்று எதனினுமுனைத்

தெழா நின்ற பாழ்படும் தீயகுணங் கெடுமாயின், அதன்மேல் எப்போழ்தும் ஓர் படித்தாயிருந்து வருவேன் என்றபடி.

இதனால், எம்மானை யிடையறாதடைந்து சிந்தை கொண்டு ஆணவ மொழிந்து என்றும் ஒரே தன்மைபெற்றுய்வேன் என்றது தோன்ற நின்றது. (23)

உச. இரும்பைக் காந்த மிழுக்கின்ற வாறெனைத்
திரும்பிப் பார்க்கவொட் டாமற் றிருவடிக்
கரும்பைத் தந்து கண்ணீர்கம் பலையெலா
மரும்பச் செய்யென தன்னையொப் பாமனே.

பொழிப்புரை :—இரும்பினைக் காந்தம் இயக்கு மாறதாக அடிமையாளனு மென்னையான் திரும்பிப் பாராவகையாய் நினது கமலபாதங்களாய கரும்பினைத்தந்து கண்ணீர், நாத்தழுதழுத்தல், சரீர நடுக்கம் ஆகிய பரபோகதாகக் குறிகளெல்லாம் என்பாலதாக உண்டுபண்ணுவாய், எனது அருந்தாயனைய இறைவா !

குறிப்புரை :—இரும்பினைக் காந்தமிழுத்துக் கொள்வதுபோன்று, மீண்டும் என்வழி சாராதவகைக்குத் தன்வசம் நிற்பான் கிருபைசெய்ய வேண்டு மென்பதான கருத்தாம். (24)

உரு. அன்னை யப்பனென் றுயிர்த் துணையெனுந்
தன்னை யொப்பற்ற சற்குரு வென்பதென்
னென்னைப் பூரண வின்ப வெளிக்குளே
துன்ன வைத்த சுடரெனத் தக்கதே.

பொழிப்புரை :—மாதா, பிதா, எனதுயிர்க்குரிய அரியதுணையாளர் என்று கூறத்தகும் தன்னை, ஒப்புயர்வில்லாத உத்தமாசிரிய னென்று கூறுவது என்ன, எளியனை பரிபூரணனந்த பரவெளியிலே பொருந்துமாறு செய்த பரஞ்சோதி சொரூபமென்று கூறக்கிடந்ததாம்.

குறிப்புரை :—இப் பாசுரத்தால், காருணிய சொரூபமாயும், மௌனகுரியராயும் வந்தருளிய சற்குருநாதனை சாக்ஷாத்காரமாகிய பரசிவானந்தரென்றே கொள்ளற்பாற் றென்பதாயிற்று. (25)

உசா. தக்க கேள்வியிற் சார்ந்தநற் பூமியின்
மிக்க தாக விளங்கு முதலொன்றே
யெக்க ணுந்தொழ யாவையும் பூத்துக்காய்த்
தொக்க நின்றுமொன் றுய்நிறை வானதே.

பொழிப்புரை :—மேலான கேள்வி யென்கின்றதாயுள்ள ஓர் சிறந்த மேனிலத்தில் சிலாக்கியமாய்த் துலங்காநின்ற பீஜமெனு முதல் பூமி யொன்று மட்டும் எண்டிசாமுகமும் வந்திக்குமாறு லெவற்றையும் பூக்குமா றுகச் செய்து, அவையொடும் பொருந்தியிருந்து, ஓர் பொருளாய் யாவற்றி னும் உள்ளும் புறம்பும் கலந்திருந்து வந்தது.

குறிப்புரை :—இப் பாசுரத்திற் கூறியுள்ள "தக்க கேள்வியிற் சார்ந்த நற்பூமியின் மிக்கதாக விளங்கு முதலொன்றே" என்றது,—கைவல்யம் முதல் காப்புச் செய்யுளில், "எந்நிலங்களினு மிக்க வெழுநில மவற்றின் மேலாம் நன்னிலமருவு மேக நாயகன்" என்ற அந்த யேக நாயகனையே கண்டு ஆசிரியர் குறித்தமை புலனாகின்றது ; அவைகளில் மிக்கதாக விளங்கு முதலொன்று என்றது,—எழாம் பூமியாந் துரிய நிலையில் விளங்காநின்ற முதற்பொருளாம் என்க. இதனையே "கேள்வியாம் பூமிக்குள் வித்தே அவ்வித்தின் முளையே" யென்றும் பிறவிடத்து இவரே கூறியதறிக. எழு நிலம் :—1-சுபேட்சை, 2-விசாரணை, 3-தநுமானசி, 4-சத்துவாபத்தி, 5-அசம்சத்தி, 6-பதார்த்தபாவனை, 7-துரியம். (26)

உஎ. ஆன மான சமயங்க ளாறுக்குந்
தான மாய்நின்று தன்மயங் காட்டிய
ஞான பூரண நாதனை நாடியே
தீன னேனின்பந் தேக்கித் திளைப்பனே.

பொழிப்புரை :—மிகவு மேன்மை பெற்றுள்ள அறுவகை அகச் சமயங் களுக்கும் தாயகமாயிருந்து தனது யதார்த்த சொரூபங் காட்டியருளிய ஞானானந்த மயமாயுள்ள எம்பெருமானைச் சார்ந்து இவ்வேழையேன் பெறற் கரிய பேரின்ப சுகத்தைப் பெரிதும் பெற்றுப் பெருவாழ் வெய்துவேன் என்பதாம்.

குறிப்புரை :—அறு சமயம் - ஏற்கனவே கூறியுள்ளன. இதனையே அகச் சமயங்கள் என்பர். தன்மயம் - தனது யதார்த்த சொரூபமென்க. நிரதிசயம் - தன்னின் மேம்பாடுடையன வன்றித் தானே தானுயறிந்து நிற்றலாம். (27)

உஅ. தேக்கி யின்பந் திளைக்கத் திளைக்கவே
யாக்க மாயெனக் கானந்த மாகியே
போக்கி னோடு வரவற்ற பூரணந்
தாக்கி நின்றவா தன்மய மாமதே.

பொழிப்புரை:—மேற்கூறிய நிரதிசயானந்தத்தினை முடிய வெய்தி அநுபூதி செய்யு மாறவும் மேன்மேலும் பெருகிய சுகானந்தமாய்.ஒழிதல் வருதலின்றிய பரிபூரண வத்துவானது வந்தருளிய வாறுக என்னை ? ஆங்கதுவே தற்சொரூபமாய் விளங்கி நிற்கு மென்க.

குறிப்புரை :—மணிவாசகர் தந் திருவாசகத்திலே 'போக்கும் வரவும் புணர்வு மிலாப்புண்ணியன்' என்று சிவபுராணத் தெல்லைக்கண் விரித்தனராகும். அதாவது பூரண நித்தியனும்.

ஆக்கமாய் - பெரியபொருளாகி யெனவுமாம். (28)

உக. அதுவென் றுன்னு மதாவு மறநின்ற
முதிய ஞானிகள் மோனப் பொருளது
எதுவென் றெண்ணி யிறைஞ்சுவ னேழையேன்
மதியு ணின்றின்ப வாரி வழங்குமே

பொழிப்புரை :—அது, இது என்று நினைக்கும் எண்ணமென்பதேயில்லாத ஒப்பற்ற பரம ஞானியர்களுடைய மௌனானந்த நன்னிலைக் கண்டோன்று மப்பொருள் எதுவெனக்கருதி இவ்வேழை மதியினன் வணங்குவன் ! ஆய்ந்துணருங்கால் மெய்யறிவின்யாற் பொருந்தி பேரானந்தப் பெருக்கினை வளர்விக்கும் கடலினையதாம்.

குறிப்புரை :—ஈண்டு இறைவன், எனது பேரறிவினுக்குள் அரிய திருவருளாயமர்ந்து அதாவது அறிவிக்கும் அறிவு மயமாய்ப் பொருந்தி யறிவித்தலாலே எத்தன்மைத்தா யறிந்து யீடேறுவேன் என்றபடியாம். சான்றுக கைவல்யமும்:—

"அறிவுக்கு மறிவுசெய்யு மறிவுவே றுண்டென்றெண் ணும்
அறிவற்ற குதர்க்கமூடர்க் கனவத்தை பலமாய்த்தீரும்
அறிபடும் பொருணீயல்ல வறிபடாப்பொருணீயல்ல
அறிபொருளாகு முன்னை யநுபவித்தறிவாய் நீயே."—என்று கூறுவதறிதல் மரபாம். தன்னறிவுக்கு முன்னறிவாதலால் 'எதுவென்றிறைஞ்சுவே' எனலாயினர்.

(29)

ஙய. வாரிக் கொண்டெனை வாய்மடுத் தின்பமாய்ப்
பாரிற் கண்டவை யாவும் பருகினை
ஓரிற் கண்டிடு மூமன் கனவென
யாருக் குஞ்சொல வாயிலை யையனே.

பொழிப்புரை :—என் இறைவனே! எளியனேக் கவர்ச்சிசெய்து வாயிலிடமாகச் செலுத்தி சுகவடிவினுய் இவ்வுலகத்துள் பார்த்தனவனேத் தும் நின்பாற் கொண்டனே; ஆய்ந்தறியின், ஊமையன்கண்ட கனவினைப் போன்று யார்பாலும் உரைத்தற்கேதுவாயில்லை யென்க.

குறிப்புரை :—இதனுல், இறைவன் தன்னைக் காட்டாது என்னைத் தன் வசம் ஈர்த்தடக்கியது யாரிடமுங் கூறமுடியாது ஊமையன் கண்ட கனவை யொத்து உரைத்தற்கின்றி முடிந்தது போலுமென்பாம். 'சொல்லுதற்கரிய மோனன் சூழ்ச்சியை யுரைக்கப்போமோ' யென்ற பெரியாருரை யொத்ததாம். (30)

௩௧. ஐய மற்ற வறிவரு ணர்க்கெலாங்
கையி லாமல கக்கனி யாகிய
மெய்ய னேயிந்த மேதினி மீதுழல்
பொய்ய னேற்குப் புகலிட மெங்ஙனே.

பொழிப்புரை :—சுவாநுபூதியிற் சந்தேக விபரீதங்களொழிந்த மெய்ஞ்ஞானியர்களனைவர்க்கும் தத்தம் அகங்கையின் கண்ணுள்ள நெல்லிக்கனி யொப்ப தரிசனமானவனே! இப்பூமியிலே எங்கணுஞ் சுற்றித்திரியும் மிக்க அசத்தியனுகிய இவ்வீனனுக்குச் சரணுகதிக் கிடமெங்குள்ளதோ!

குறிப்புரை :—சுவாநுபூதிச் சந்தேதாதிகள் மெய்ஞ்ஞான சம்பன்னராம் அறிவன்ஞச் சிரமிகளுக்குச் சிறிதும் தோன்றுதென்பது விகசிதம். ஆகவே, அன்னேர்க்குப் புலனுகும் நின்றரிசனம் நேராக இவ்வசத்தியனுக்கும் புலனுவையோ வென்றபடி. (31)

௩௨. எங்ங னேயுய்ய யானென தென்பதற்
றங்ங னேயுன் னருண்மய மாகிலேன்
திங்கள் பாதி திகழப் பணியணி
கங்கை வார்சடைக் கண்ணுத லெந்தையே.

பொழிப்புரை :—சந்திரன் குறையுருவாய்ப் பிரகாசித்திலங்கவும், சர்ப்பத்தை யணிந்தும், மற்றும் கங்காதேவி விளங்கும் நீட்சியுள்ள சடாமுடியையும் பொருந்திய நெற்றிக்கண் தந்தையே! யான், நான் எனது என்னும் செறுக்காதி நீத்து அவ்வாறு அறவொழிந்தவக்கணமே நின் திருவருட்டன்மை பெற்றுய்ந்தேனில்லையே! எவ்வாறு அடியவன் உய்வேன்!

குறிப்புரை :—அரவம் இராகு கேது வென்னும் கோளுருவாய்வந்து சந்திரனம்சம் குறைவுறக் காண்டலாலேயே சந்திரன் அம்சத்திற் குறைந் தஞ்சியொடுங்கினரென்பது தோன்ற 'பாதித்திங்க' ளெனலாயினர் என்பது சிலர் கருத்தாக வெளியிடுவர் ; அது பொருந்துமா றென்றோ ! (32)

௩௩. கண்ணிற் காண்பதுன் காட்சிகை யாற்றொழில்
பண்ணல் பூசை பகர்வது மந்திரம்
மண்ணொ டைந்தும் வழங்குயிர் யாவுமே
அண்ண லேநின் னருள்வடி வாகுமே.

பொழிப்புரை :—என்னிரு கண்களாலேயும் பார்ப்பது நின் திவ்யமங் கள சொரூபதரிசனமேயாம் ; எனது கைகளினாலே செய்யுங்காரியம் நினக் குரிய பூசா கைங்கரியமேயாகும் ; மற்றும் வாயினாற் பேசுவது நினது மகா மந்திராக்ஷரமேயாகும் ; மண்முதலாகிய ஐந்து பூதாதிகளும் சேர்த்துண்டாம் பௌதிகமாம் உயிர்ப் பொருள்களெல்லாம் ஏ ! எவ்வுயிர்க்கு மூத்தோய் ! நினது திருவருள்வடிவே யாமென்க.

குறிப்புரை :—'அவனருளாலே யவன்றாள் வணங்கி' யென்று வாத வூராளியார் வகுத்தபடி, சேதனாசேதனப் பொருள்களும் சீவகோடி களும் எல்லாமும் இறையருள் கொண்டு எவ்வகைக் கிரியா சேட்டிதங்களும் இயங்கியலும் நடைபெறுவதாகு மென்பதாம். (33)

௩௪. வடிவெ லாநின் வடிவென வாழ்த்திடாக்
கடிய னேனுமுன் கார ணங் காண்பனோ
நெடிய வானென வெங்கு நிறைந்தொளி
ரடிக ளேபர சேயரு ளத்தனே.

பொழிப்புரை :—சேதனாசேதன நாம ரூபப் பிரபஞ்சங்க ளெல்லாம் தேவரீர்தம் திருமேனியாகக் கொண்டு போற்றுதல் செய்யா கிஞ்சிக்ஞனா யுள்ள யானும் தம் தத்துவத்தினைக் காணப் பெறுவேனோ ! மிகப்பெரிய ஆகாயம் போன்று எங்கணும் பொருந்திவாழா நின்ற இறையவனே ! எவற் றிற்கு மாசுசிரிமை பூண்டோய் ! தயாசொரூப பிதாவே !

குறிப்புரை :—சர்வாண்ட புவனமும் நீயே வியாபித்துள்ள உன் தத் துவ காட்சியை யானோவறிபவன் ! ஆகையால் தாமே இவ்வெளியேற் கருளு தல் வேண்டும்.

நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றா
னுலகே ழெனத்திசை பத்தெனத்தா னொருவனுமே
பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ.—என்றார் மணிவாசகர் தந் திருவாசகத்திலும். (34)

௩௫. அத்த னேயக லானந்த னேயருட்
சுத்த னேயென வுன்னைத் தொடர்ந்திலேன்
மத்த னேன்பெறு மாமல மாயவான்
கத்த னேகல்வி யாதது கற்கவே.

பொழிப்புரை :—பரமபிதாவே ! பரமானந்த சொரூபனே ! காருண்யம் வாய்ந்த மகாசீல சிகாமணியே ! எனத் தோத்திரித்து நின்னையடைந்தேனில்லை ; கேவலம் பித்தனாகிய சிறியேன் பெற்றுள்ள மகாமாயா மலமாகவை நாசமுறுமாறு மேன்மைவாய்ந்த பரம சத்தியுள்ளோய் ! யான் எக்கல்வி கற்பதோ ? அருள்வாய் !

குறிப்புரை :—மும்மலாதிகளையும் தமது திருவருட்டுனை கொண்டு போக்க வகையறியாது வேறே யான் எந்த வித்தையைப்பயின்று போக்கிக்கொள்வேன் என்ற தாற்பரியமாம்.

இருவினையொப்பா லிருண்மலபாகம், மலபாகத்தின் மருவும்
பாதம், பாதப்பதிவாற் பயிலுங்குரவன், குரவன் வரலும்
கொடும்பவமேழுந் தனித்தனியோடுந் தலைகெட்டன்றே.
என்றார் பிறநூலாரும். (35)

௩௬. கற்று மென்பலன் கற்றிடு நூன்முறை
சொற்ற சொற்கள் சுகாரம்ப மோநெறி
நிற்றல் வேண்டு நிருவிகற் பச்சுகம்
பெற்ற பேர்பெற்ற பேசாப் பெருமையே.

பொழிப்புரை :—யாதாமோர் விகற்பமுமில்லாத சமாதி சுகத்தினை யடையப் பெற்றோர் பெற்றது மோன யேதுவாம் பரம மாக்ஷியேயாம் ; பற்பலவாயுள்ள கல்வி கேள்விகளை நன்கு ஆராய்ந்தறிந்தும் பலனென்னோ ? கற்கு முறையான் கற்கவேண்டுவன மட்டும் கற்று அவ்வழி நிற்பினன்றிச் சுகாரம்ப உதயம் பெறப்படுமோ பெறலாகாதென்றபடி.

குறிப்புரை :—கற்க வேண்டுவனறிந்து அவை கல்லாதும், கற்றன வாக அந்நெறி நில்லாதும் மற்றன கற்றலால் சொற்ற சுகாரம்பம் தோற் றாதென்பதே சாரமென்க ;

> கற்க கசடறக் கற்பவை கற்றபி
> னிற்க வதற்குத் தக.—என்றார் பெருநாவலர். (36)

௩௭. பெருமைக் கேயிறு மாந்து பிதற்றிய
கருமிக் கைய கதியுமுண் டாங்கொலோ
அருமைச் சீரன்பர்க் கன்னையொப் பாகவே
வருமப் பேரொளி யேயுன்ம னந்தமே.

பொழிப்புரை :—அருமையாயுள்ள சிறப்புவாய்ந்த மெய்யன்பர்கட்கு நற்றா யொத்துவராநின்ற அப்பரஞ்சோதியே! நினது உன்மனி சத்தியார்க் குரிய தாயகமே! பெருமைக்காக வீராப்புடன் உளறிவரும் இந்த பாவிக் கும், ஐயனே! ஓர் நல்லகதி மோக்ஷ முண்டாவதோ!

குறிப்புரை :—மண்ணுலகத்தில் பெருமை பாராட்டி பாடியாடித்திரி யும் இத்தீயவனுக்குக் கதியுங் கைகூடுமோ, கூடாதென்பது தோன்ற நின்ற தாம். (37)

௩௮. உன்ம னிக்கு ளொளிர்பரஞ் சோதியாம்
சின்ம யப்பொரு ளேபழஞ் செல்வமே
புன்ம லத்துப் புழுவன்ன பாவியேன்
கன்ம னத்தைக் கரைக்கக் கடவதே.

பொழிப்புரை :—உன்மனி சத்திக்குள்ளாக வியாபகமாயுள்ள பர வொளியாகிய ஞானசொரூப வத்துவே! பழம்பொருட்கும் பழம்பொருளே! கேவலமாய மலத்தின்கண் உதிக்கும் புழுவினைப்போன்ற கொடிய பாபியாய என் கல்லினைய மனத்தினை உருகுமாறு செய்வாயாக. கன்மனங்கணப்ப வல்லவ இறைவனென்பது.

குறிப்புரை :—

> "கற்போலு நெஞ்சங் கசிந்துருகக் கருணையினால்
> நிற்பானைப் போலவென் னெஞ்சினுள்ளே புகுந்தருளி
> நற்பாற் படுத்தென்னை நாடறியத் தானிங்ஙன்
> சொற்பால தானவா தோணோக்க மாடாமோ."—எனத்திருவாத

ஆருந் திருவாசகத்தில் தெரித்தமை கொண்டே ஆசிரியரும் 'கன்மனத்தைக் கரைக்கக் கடவதே' என்றனர் போலும். (38)

௩௯. கரையி லின்பக் கடலமு தேயிது
வரையி னுனை வந்து கலந்திலேன்
உரையி லாவின்ப முள்ளவர் போலவித்
தரையி லேநடித் தேனென்ன தன்மையே.

பொழிப்புரை :—கங்கு கரையற்ற பரமானந்தக் கடற் கண்டோன்றியருளிய பரம அமுதமே! இதுகாறும் இவ்வடிமை நின்னடிக்கண் வந்து சேராதொழிந்தேன்; சொலற்கரிய பேரின்பம் எய்தப் பெற்றார் போன்று இவ்வுலகிடை நடித்துத் திரிந்தனன்; இதுவும் என் பேதமைத்தே.

குறிப்புரை :—"ஞானக் கரும்பின்றெளிவைப் பாகை நாடற்கரிய நலத்தை நந்தாத், தேனைப் பழச்சுவையாயினானை" என மணிவாசகர் ஓதிய வாறு ஆசிரியரும், "கரையிலின்பக் கடலமுதே" பென்று அகமிக மகிழ வாழ்த்தியருளினர் போலும். (39)

௪௰. மையு லாம்விழி மாதர்க டோதகப்
பொய்யி லாழும் புலையினிப் போதுகாண்
கையிலா மலகக்கனி போன்றவென்
ஐய னேயெனை யாளுடை யண்ணலே.

பொழிப்புரை :—மைதீட்டப்பெற்ற கண்கள் வாய்ந்த மங்கையரது வஞ்சப் பொய் யின்பானுபவத்தில் அழுந்திக்கிடக்கும் அதிகேவலத் தன்மை யானது போதுமானதாம்; இனிக் கையகத்துள்ள நெல்லிக்கனியை யொத்த எனது பரம பிதாவே! எளியனை அடிமை கொண்டருளிய முழுமுதலே!

குறிப்புரை :—யான் இதுகாறும் மாதர் மயலிலாழ்ந்தது போதுமானதாம்; என்றும், இனிக்கிருபை கூர்ந்தருளும் பரமபிதாவே யென்று வேண்டுவாராயினர். (40)

௪௧. அன்ன லேயுன் னடியவர் போலருட்
கன்னி னுனைக் காணவும் வாவெனப்
பண்ணி னுலென் பசுத்துவம் போயுயும்
வண்ண மாக மனோலயம் வாய்க்குமே.

பொழிப்புரை :—எவ்வுயிர்க்கு முன்னோனே! நின்னன்பர் போன்று நினைந்து திருவருளாம் கண்ணைக் கொண்டு தம்மைத் தரிசிப்பான் வேண்டி வருவாயென்று கிருபை செய்வாயாயின், எனது ஜீவபோதம் நீங்கப்பெற்று மெய்க்கதியடையுமாறதாக மனோரகித முண்டாம்.

குறிப்புரை :—அன்புடையண்ணல்! என்னை நின்னன்பரைப்போன்று பாவித் தழைப்பின் தற்போதமற்று, மேலே மனமும் இறக்கும் என வேண்டு வாராயினர். இதனால், மனோலயமாமேல் பிறந்திறத்தலுமறும் என்க. இம்மனோ நாசமோ நினைத்தல் மறத்த லொழித்தலால் உண்டா மென்பாம்.

(41)

சஉ. வாய்க்குங் கைக்கு மௌன மௌனமென்
றேய்க்குஞ் சொற்கொண் டிராப்பக லற்றிடா
நாய்க்கு மின்பமுண் டோநல் லடியரைத்
தோய்க்கு மானந்தத் தூவெளி வெள்ளமே.

பொழிப்புரை :—வாக்கிற்கும் கையிற்கும் மோனம் மோனமென்று சொல்லிக்கொண்டு ஏமாற்றும் தன்மையைமட்டுங் கொண்டு இராப்பகல் நீங்கப்பெறாத நாயினேற்கும் சுகோதய முண்டாமோ? மெய்யடியவரை ஆழ்த்துவிக்கும் பரம சுகமாகிய ஆகாய கங்காப்பிரவாகமே!

குறிப்புரை :—கையினால் வாய் பொத்திக் காட்டுகின்ற ஓர் சமிக்ஞை அதாவது ஜாடையென்பதுவே 'வாய்க்கும் கைக்கும் மௌனம் மௌன மென்று' 'ஏமாற்றல் என்பதாகும்' என்றனர் ஏன்? இராப்பகலற்றிடாமை யால். (அதாவது சகல கேவலமாகிய இராப்பகலாம் நினைத்தல் மறத்தலை யென்க.)

(42)

சங. தூய ஞான துரிய வறிவெனுந்
தாயுநீ யின்பத் தந்தையு நீயென்றால்
சேயதா மிந்தச் சிவத் திரளன்றோ
ஆயும் பேரொளி யான வகண்டமே.

பொழிப்புரை :—தத்துவ விசாரணையில் ஏற்படும் பரமசோதி சொரூப மாயுள்ள அகண்டாகாரச் செம்பொருளே! மிக்க சீலமாம் துரியபரஞான அறியமாதாவும் நீயாகும்; மற்றும் சுகவேதுவாய பரம பிதாவும் நீயே யென்றுகூறின், இவ்வான்ம கோடிகளனைத்தும் பிள்ளைகளன்றோ?

குறிப்புரை :—

"எந்தையெந் தாய் சுற்றமற்று மெல்லா மென்னுடைய
பந்த மறுத்தென்னை யாண்டுகொண்ட பாண்டிப்பிரான்
அந்த விடைமருதி லானந்தத் தேனிருந்த
பொந்தைப் பரவிநாம் பூவல்லி கொய்யாமோ."—என்ற மணி வாசகர் திருவாசகத்தின் பாசுரத்திற்கிணங்கவே ஆசிரியரும் "தாயும் நீ யின்பத் தந்தையுநீ யென்றால் சேயதாமிந்தச் சீவத்திரள்" என்றருளினர் போலும். (43)

சுச. அகண்ட மென்ன வருமறை யாகமம்
புகன்ற நின்றன்மை போதத் தடங்குமோ
செகங்க ளெங்குந் திரிந்துநன் மோனத்தை
யுகந்த பேருனை யொன்று வரையேன்.

பொழிப்புரை :—அகண்டாகார மென்று நான்கு வேதங்களும் ஆகமாதிகளும் கூறியுள்ள நினது இயற்கை ஆன்மாக்களது தற்போதமென்னும் சீவபோதத்தினு மடங்கற்பாற்றோ? நாடுநகரமெங்கணு மோடித்திரிந்து மேலாய மௌன நிலையினைக் கைக்கொண்டவர்கள் நின் சிவபோதம் பெற்று நிற்பர் எனையனே!

குறிப்புரை :—சீவபோதம் கழன்று சிவபோதத்துற்ற பரம மோன ஞானியர்களே வேதாகமாதிகளால் அளவறிந்துள்ள நின் அகண்டாகார சொரூபத்தை நன்காய்ந்தறிவர்கள்; அன்னவரே யன்றிப் பின்னெவரு மறிந்தடையா ரென்பது கருத்து. (44)

சரு. ஐய னேயுனை யன்றி யொருதெய்வம்
கையி னாற்றொழ வுங்கரு தேன்கண்டாய்
பொய்ய னாகிலும் பொய்யுரை யேன்சுத்த
மெய்ய னாமுனக் கேவெளி யாகுமே.

பொழிப்புரை :—என் தலைவனே! மனம் வாக்குக் காயமென்கின்ற திரிகரணங்களாலேயும் தம்மைத் தொழுதேத்த நினைப்பதல்லாது வேறெத் தெய்வத்தையும் கையெடுத்துத் தோத்திரித்தற்கும் மனமொவ்வுமோ! யான் மெய்யிலாப் பொய்யனேனாகிலும் மெய்யன்றிப் பொய்ம்மொழியுரையேன்; இவ்வுண்மை மகாப் பரிசுத்தனும் தமக்கே நன்கு விளங்கும்.

குறிப்புரை :—தேவரீரை மனவாக்குக் காயங்களால் வணங்கிவாழ்த்துவது முறையாயிருக்க, அவ்வாறன்றி கையொன்றினாலேனும் தொழுதேத்தக்

கருதேன் என்று தேற்றமாகக் கூறினர் போலும். அதனாலே "கையினூற் றொழவுங் கருதேன் கண்டா" யென்றார். சுத்த மெய்யனும் என்றது உண்மையான ஞானதேக மென்பதாம். இதனால் இறைவனுக்கு ஞானதேகமும் ஆன்மாக்களுக்கு ஊனதேகமு மென்றேற்பட்டதாம். ஆகவே, ஊனதேகம் நசிக்கும், ஞானதேகம் என்றும் அழியாது சுகிக்குமென்க. (45)

சசுஅ. வெளியி னின்ற வெளியாய் விளங்கிய
வொளியி னின்ற வொளியாமுன் றன்னைநான்
தெளிவு தந்தகல் லாலடித் தேவென்று
களிபொ ருந்தவன் றோகற்ற கல்வியே.

பொழிப்புரை :—மெய்யடியவர் தம் இருதய வெளிக்கண் வியாபித்துள்ள பராகாயமாக விளங்கிய ஒளிக்குள் உள்ளொளியாம் பரவொளியான தேவரீரை, அடியவனுக்குத் தெள்ளிய அறிவுதந்த கல்லாலின்கீழ் வீற்றிருந்தருளிய தெய்வமென மனங்களி கொளவன்றோ இவ்வடியவன் கல்வி கற்றது. ஏ—ஈற்றசை.

குறிப்புரை :—உடலின்கண் உயிர் வியாபித்திருத்தல் போன்றே உயிரின்கண் இறைவனும் கலந்துள்ளான்; கண்ணொளிவேறும் கதிரொளி வேறுமாயிருந்து கலத்தல் போன்றே ஆன்மாவோடும் இறைவனும் கலந்துள்ளான்; கண்ணொளியில் ஆன்மபோதம்போல இறைவனும் ஆன்ம சையோகியாய் நிற்பன், ஆதல்கொண்டே ஆசிரியர் ஒளிக்குள் உள்ளொளி யென்றார்.

ஆகாயத்துள் சூக்ஷ்ம ஆகாயமிருக்கிறது. அதிலேயே ஒளி பிரகாசித்துள்ளதாம். இதனையே இறைவனென்றனர் போலும். (46)

சஎ. கல்லை யுற்ற கருத்தினர் கார்நிறத்
தல்லை யொத்த குழலின ராசையால்
எல்லை யற்ற மயல்கொள வோவெழில்
தில்லை யிற்றிக ழுந்திருப் பாதனே.

பொழிப்புரை :—பேரழகு வாய்ந்த திருத்தில்லை மன்றுள் நடம்பயின்றொளிரும் திவ்ய திருவடிகளையுடையாய்! கேவலம் கருங்கல்லொத்த மனமுடையாரும், கரிய மேகத்தை நிகர்த்த இருளைப்போன்ற கூந்தல் வாய்ந்துள்ளவர்களுமாகிய பெண்களது பேராசையினாலே கணக்கற்ற மையலுறவோ அடிமை இங்குற்றது ?

குறிப்புரை :—வேதத்திற் கெட்டா விழுப்பொருளாம் திருநட நாதன் அன்பர்களை யாட்கொளற்கென்றே மன்று நின்றாடல்புரிய, யான் கல்லொத்த

மனமும் காரொத்த கூந்தலுமுடைய மாதர்மயக்காழவோ, வென்றனர் போலும். மனத்திற்கு இட்டபங்கருதி கல்லுவமை செய்தனர். கார், அல் இவ்விரு மொழியும் மாதர் குழலுக்குவமை. (47)

சஅ. திருவருட் டெய்வச் செல்வி மலைமகள்
உருவிருக் கின்ற மேனி யொருபராங்
குருவை முக்கணங் கோவைப் பணிநெஞ்சே
கருவிருக் கின்ற கன்மமிங் கில்லையே.

பொழிப்புரை :—திருவருளாந்தெய்வ சம்பத்தைக் கைக்கொண்டருளிய பார்வதியம்மையார் உருவம் பொருந்தியிருக்கும் திவ்ய திருமேனி கொண்டருளிய ஒப்புவமையில்லா பரமாசிரியனும், திரிநேத்திரதாரியுமாகிய எமது அரசை மனமே, வழிபடுவாய் ; அவ்வாறு வணங்குவையேல் நீ கருப்பவரை பொருந்தி வருந்த வேதுவாம் கன்மவினையுண்டாகாதென்க.

குறிப்புரை :—பார்வதி=பர்வத புத்திரி. அதாவது இமகிரி குமாரியாம். இதனையே மலைமகளெனக் கூறினரென்க. இவ்வம்மையை இறைவராம் சிவபெருமான் தம்மிடப்பாகச் சரீரத்தின்கண் வைத்தருளினமை கொண்டே "உருவிருக்கின்ற மேனி யொருபராங்குருவை" யென்றார் ஆசிரியரும். (48)

சகூ. கன்ம மேது கடுநர கேதுமேற்
சென்ம மேதெனைத் தீண்டக் கடவதோ
வென்ம னோரத மெய்தும் படிக்கருள்
நன்மை கூர்முக்க ணாத னிருக்கவே.

பொழிப்புரை :—எனது மனோபீஷ்டங்களனைத்தும் பெறுமாறு திருவருள் புரிகின்றதான நலமிக்க திரிநேத்திரதாரியாகிய எம்பெருமான் என்னகத் திருக்கிறபோது, செய்தீவினையேது ? அன்றித் தீய நரகமென்பதேது ? ஆகவே இதன்மேல் பிறவியுண்டாவது மில்லையாகும் ; இவையொன்றும் என்னைச் சாராதாகும் என்பதாம். சான்றாக.

குறிப்புரை :—

கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம்பல மேய
முற்றா வெண்டிங்கண் முதல்வன் பாதமே
பற்றா நின்றாரைப் பற்றா பாவமே.

எனத் திருஞானசம்பந்த சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளியனவுங் காண்க. ஈண்டு 'பற்றாநின்றாரை' யென்ற விடத்துப் பற்றி நின்றாரை

யெனக் கோடல்வேண்டும். எப்படியெனில், 'நடவாநின்றான் நடக்கின்றான் என்றும், செய்யாநின்றான் செய்கின்றான்' என்னும் வாய்பாட்டிலக்கண முறைகொண்டுணர்க. இதனால் மெய்யன்பரை மேவா பவப்பிணி என்பதாயிற்று. (49)

ருய. நாத கீதனென் னாதன்முக் கட்பிரான்
வேத வேதியன் வெள்விடை யூர்திமெய்ப்
போத மாய்நின்ற புண்ணியன் பூந்திருப்
பாத மேகதி மற்றிலை பாழ்நெஞ்சே.

பொழிப்புரை :—சாமவேத நாதகீதப் பிரியனும், எனது இறைவனும், மூன்று கண்களோடுங்கூடிய தலைவனும், சதுர்வேதங்களையும் திருவாய் மலர்ந்தருளியவனான அறவாழியந்தணனும், வெண்மையாய இடபவாகனமுடனும், மெய்ஞ்ஞான மயமாய்வந்த தருமதேவதையும் ஆகிய இன்னோனது செந்தாமரை மலர்போன்ற மிருதுவாகிய திருவடிகளே எம்மனோர்க்குத் தாயகமாகும்; பாழானமனமே! வேறே யாதுமில்லையாகும் என்பதாம்.

பிரான் - பெரியோன்.

குறிப்புரை :—

எல்லையில் காலமெல்லா மேழைமார் வலையுட்பட்டுக்
கல்வியுங் கருத்துமின்றிக் கலக்க நானலக்கணுற்றேன்
அல்லுநண்பகலு முன்ற னடியின்கீழிருத்தல் வேண்டுஞ்
செல்வமுஞ் சிறப்பும் வேண்டேன் திருப்புலி வனத்துளானே.

என்ற மெய்ந்நூன் முறைக்கிணங்க இந்நூன் முதல்வராம் தகைமையானரும் "பூந்திருப்பாத மேகதி மற்றிலை பாழ்நெஞ்சே" யென்றனர் போலும். பிரான் என்பதற்கு, மூவர்க்கு முதல்வன் என்பாருமுளர். (50)

ருக. மற்று னக்கு மயக்கமென் வன்நெஞ்சே
கற்றை வார்சடைக் கண்ணுத லோனருள்
பெற்ற பேரவ ரேபெரி யோரெலா
முற்று மோர்ந்தவர் மூதுரை யர்த்தமே.

பொழிப்புரை:—கொடிய மனமே! நினக்கு இன்னமும் மயக்கமுறல் எதற்காகவோ! கத்தையாக் கொண்டருளிய சடாபாரத்தையுடைய நெற்றிக் கண்ணெணத்தையார் பேரருள் பெற்றவரே பெரியராவர்; இன்னோர் ஆவாரே பழமையாகிய வேதார்த்தப் பொருள்களனைத்தையும் நன்குணர்ந்தோராவர், ஆதலின் இனி ஐயமொழிக.

குறிப்புரை :—இறைவனருள்கொண்ட பெரியாரே பெரியோராவாரா கலானும், அன்னார் உரையே மூதுரையாகலானும், அச்சான்றோர் கூறிய வவே போதிய சான்றாகலானும் "மற்றுனக்கு மயக்கமென்வன் னெஞ்சே" என்றார் ஆசிரியர். மேற்கூறிய இருகவிகளும் மனதை நோக்கிக் கூறியதாகும். ஏன்? ஐயக்குழியி லாழ்ந்து கிடந்ததா லென்க. (51)

ருஉ. உரையி றந்துளத் துள்ள விகாரமாந்
திரைக டந்தவர் தேடுமுக் கட்பிரான்
பரைநி றைந்த பரப்பெங்ங னங்ஙனே
கரைக டந்தின்ப மாகக் கலப்பனே.

பொழிப்புரை :—வாய் வார்த்தை யொழிந்து நெஞ்சகமேவிய பலவித மாறான கருத்துகளாந் தடையினைக் கடந்தவர்கள் விசாரித்தறிகின்ற மூன்று நேத்திரங்களோடுங்கூடிய தலைவனது அருட்சத்தியாம் பராபரியின் ஸ்தானம் எங்கோ அங்கேயே எல்லை கடந்து ஆனந்தவடிவாகக் கலந்திருப் பேன்.

குறிப்புரை :—வாக்கு மனமும் ஒடுங்கி மௌன முற்றிருக்கும் மெய்ஞ் ஞானியர் தேடுகின்ற தேட்டமாம் எம்மான்றன் பரகுடிலைத் துரிய வெளி யூடமர்ந்துள்ள திருவருட் சத்தியோடும் அபேதமாய்க் கலந்தானந்திப்பன் என்பது தோன்ற நின்றது.

பரைகுடிலத்துரிய வெளி - ஞானவெளியாம், அதாவது ஞானாகாய மென்பர். (52)

ருங. கலந்த முத்தி கருதினுங் கேட்பினும்
நிலங்க ளாதியு நின்றெனைப் போலவே
யலந்து போயின மென்னு மருமறை
மலர்ந்த வாய்முக்கண் மாணிக்கச் சோதியே.

பொழிப்புரை :—அருமைவாய்ந்த நான்கு வேதங்களையும் திருவாய் மலர்ந்த திரிநேத்திர தாரியா மணிச்சுடரோய்! ஒன்றுபட்ட மோக்ஷதன்மை யினை நினைப்போமாயினும் கேட்போமாயினும், மண்ணுலகோர் முதல் எண்ணிலாதவர்களும் மண்முதல் நாதமீறாயுள்ளனவும் எம்போன்றே பிர மிப்படைந்து அலமந்தோமென்று கூறிநிற்கும்.

குறிப்புரை :—

பூதமுத லாதமீறாகப் பொலிகின்ற
வீதெல்லா நாமல்ல வென்றறியும்—போதமே

தத்துவரு பம்மிதனைச் சங்கையற்ற மாணவக
புத்தியிடை நன்றாய்ப் புதை.

என்ற மெய்நூல் விளம்பியதற்கிசைய, இந்நூலாசிரியரும் "நிலங்களாதியு நின்றெறமைப்போலவே யலர்ந்து போயினமென்னும்" என்றோதி யருளினர். (53)

ருச. சோதி யாதெனைத் தொண்டருட் கூட்டியே
போதி யாதவெல் லாமெளப் போதிக்க
ஆதி காலத்தி லுன்னடிக் காந்தவம்
ஏது நான்புரியன் றேன்றுக்க ணெந்தையே.

பொழிப்புரை :—மூன்று கண்கள் கொண்டருளிய எம்பிதாவே! தேவரீர் அடியேனை அளர்ந்தறியாது, நின் மெய்யடியாரோடும் சேர்த்தருளி, உபதேசிக்கவொண்ணு அரும்பொருளனைத்தையும் பைய உபதேசித்தற்கு, பண்டைக்காலத்தில் தேவரீர் தம் திருவடித் தொழும்புக்குரிய எந்த நோன்பைச் செய்தனனோ வறியேன்!

குறிப்புரை :—'சோதியாதெனை' என்பது நின்வன்மைக்கு யான் ஈடுபடேனென்பது. தொண்டர்பாற் கூட்டியென்றது,—தான் பக்குவனல்லனென்றதையும், 'போதியாதவெல்லாம் மௌ்ளபோதிக்க' வென்றது, போதிக்க வேண்டுவனவற்றைத் தயவுகூர்ந்து விளங்க வுரைத்தல் வேண்டுமென்பதையும், 'நின்னடிக்காந் தவம் ஏதுபுரிந்தனனோ, வென்றதால், தான் தவமிழையாதவ னென்பதையும் நன்கு விளக்குமா றுணர்க. (54)

ருரு. எந்த நாளைக்கு மீன்றரு டாயென
வந்த சீரருள் வாழ்கவென் றுன்னுவேன்
சிந்தை நோக்கந் தெரிந்து குறிப்பெலாந்
தந்து காக்குந் தயாமுக்க ணாதியே.

பொழிப்புரை :—மெய்யன்பர் மனநோக்கத்தினை நன்காய்ந்தறிந்து அன்னார்தம் அகமுக முணர்ந்து அவையனைத்து மளித்துதவுகின்ற காருணிய கண் மூன்றுள்ள பூர்வமாய புண்ய மூர்த்தியே! என்னைப்பெற்று வளர்த்த மாதாவை யொத்துக் காத்துவரும் நற்றாயின் திருவருளானது நாளும் நனிசிறந்து வாழுமாறு வேண்டி நின்றேன், என்பது.

குறிப்புரை :—"சத்தியாவதும் முடற்றயங்கு சீவனுட்சிவம்
பித்தர்கா ளிதற்குமேற் பிதற்றலாவ தில்லையே"
என்ற பெரியார் தம் பெருமொழி கொண்டே ஆசிரியரும் முதற்கண் 'எந்த

நாளைக்கு மீன்றருடாயென, வந்த சீரருள் வாழ்க வென்றுன்னுவேன்' என்ன, திருவருட்டா யென்றெடுத்து 'முக்கணுதியே' யென்று முடித் தமை யுணர்க. சிந்தை நோக்க முணர்ந்து காத்தற்றமையானே சண்டு 'தயா முக்கணுதியே' யென்றனர்போலும். (55)

ருகூ. கண்ணா கன்றவிக் காசினி யூடெங்கும்
பெண்ணொ டாண்முத லாமென் பிறவியை
யெண்ணா வோவரி தேழை கதிபெறும்
வண்ணா முக்கண் மணிவந்து காக்குமே.

பொழிப்புரை :—மிகவும் விசாலித்துள்ள இந்த பூமண்டல முற்றி னிலும் பெண்மை யாண்மை யென்றுகூறும் இருவிதமாய் வந்து கொண் டிருந்த எனது செனனங்களின் தொகுதியினை கணக்கிடல் மிகவும் அசாத் தியமானவையாம்; ஆகவே, மிக்க பேதையனுய யான் உய்யுமாறதாக மூவிதங்களான சுடர்மணிக்கண்ணர் வந்தெனைக்காப்பாற்றுவர், என்பது.

குறிப்புரை :—யான், இவ்விரிவான உலகினில் ஆண்பெண்ணென்னும் இருவகையானுந் தோன்றி யழிந்தமை சர்வவியாபகப் பொருளறிந்துள்ள தாலும், அது காருணியமே சொரூபமாய்க் கொண்டருளியதானும் என் னைக்காக்குமென்று துணிவுரையாக் கூறினரென்க. முச்சத்திகளையும் உடன் கொண்டருளியது நோக்கியே முக்கண் கொண்டதை அடுத்துக் கூறுவாராயின ரென்க. (56)

ருஎ. காக்கு நின்னருட் காட்சியல் லாலொரு
போக்கு மில்லையென் புந்திக் கிலேசத்தை
நீக்கி யாளுகை நின்பர மன்பினர்
ஆக்கமே முக்க ணானந்த மூர்த்தியே.

பொழிப்புரை :—உண்மை யன்பர்க் குறுதுணைச் செல்வமே! திரிநேத் திரங்கள்கொண்ட நின்மலானந்த திருவருண்மூர்த்தியே; காத்தருளுவதே சுபாவமாக் கொண்டருளிய நினது திவ்ய திருவருட் காட்சியினையன்றி இவ்வடிமைக்கு வேறெக்கதியு மில்லையாகும்; ஆதல் கொண்டு எனது புத் தியின் சஞ்சலத்தை யொழித்து இரக்ஷித்தருளுதல் நினது திருவருட்பர மாகும். வேறுதிக்கிலன் என்றபடி.

குறிப்புரை :—மெய்யன்பர்தம் அரிய திருவருட் செல்வமும், நித்தியா னந்த முக்கண் மூர்த்தியுமானது கொண்டு, வேறோர் இதரகாட்சியும் கதியு மில்லாதவென்னைக் காத்தான்வது நின்மேலுள்ள பொறுப்பென்று முடி வுரையாக் கூறினர் போலும். சான்றாக :—

" ஆக்க மளவிறுதி யில்லா யனைத்துலகும்
ஆக்குவாய் காப்பா யழிப்பா யருட்டருவாய்
போக்குவா யென்னைப் புகுவிப்பாய் நின்றொழும்பில் "—என்று
மணிவாசகரும் தந்திருவாசகத்துள் கூறியருளினமை காண்க. (57)

ருஅ. ஆனந் தங்கதி யென்னவென் ஞனந்த
மோனஞ் சொன்ன முறைபெற முக்கணெங்
கோனிங் கீந்த குறிப்பத னல்வெறுந்
தீனன் செய்கை திருவருட் செய்கையே.

பொழிப்புரை:—பெறற்கரிய பரமானந்தமே தாயகமாகக் கொண்டுண ரவும், இங்கு எளியேற்கு நித்யானந்த நிலையமாயுள்ள மௌனத்தினை யநுக்ர கித்தருளிய முறைமையைப் பெற்றுய்யவும், மூன்று கண்களுடைய முழு முதன் மூர்த்தியான தலைவன் இங்ஙன மருளிய குறிப்பினாலே மிக விழிந்தவ னுயுள்ள எனது செயல்யாவும் திருவருளின் செயற்கையே யாகும், என்பது.

குறிப்புரை —

" அறிவுக்கறிவா யறிவிப்பான் சில்லோர்க்
கறிவுருவுகொண் டருளுவான் "—என்றும்,

ஆட்டுவித்தா லாரொருவ ராடாதாரே
காட்டுவித்தா லாரொருவர் காணாதாரே
காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்காலே "—என்றும்

மெய்யன்பர்கூறிய நூன்முறையான் பேதமொழிந்து தன்னுரை யெவை யும் திருவருட்செய்கையே யென்று அபேதமுறை கொண்டு உரிமையாற் கூறி யருளினர் போலும். மற்றும் தமக்கு இன்றியமையாது வேண்டற் பாலன பரானந்தமாதலின், அந்நித்யானந்த நிர்மல மூர்த்தியார் திருத்தில்லை ஆனந்தத் தாண்டவராதல் கொண்டே அம்முக்கணெந்தையை அடுத்தடுத் தோதி வேண்டினராக. (58)

ருகூ. கையி னற்றொழு தேத்திக் கசிந்துள
மெய்யி னுனைக் காண விரும்பினேன்
ஐய னேயர சேயரு ளேயருள்
தைய லோர்புறம் வாழ்சக நாதனே.

பொழிப்புரை :—என்னையனே! அரசனே! காருண்ய சொரூபனே! திருவருட் சத்தியாம் உமையம்மையை இடப்பாகங் கொண்டருளிய சகதீ சனே! (தேவரீரை) அடிமை என் இருகரங்களாலும் கும்பிட்டு வணங்கி,

வாய்கொண்டு வாழ்த்தி, மனம் நெக்கு நெக்காயுருக, உண்மை யன்பு கொண்டே தரிசிப்பான் மிகவும் விரும்பினேன்.

குறிப்புரை :—என்னரும் பரம பிதாவே! யான் நின் திருவருட் சாட்சிக்கென, வேறு யாதொரு கைமாறும் செய்தற்கியலாது மனவாக்குக் காயங்களைக்கொண்டு உண்மை வழிபாடு செய்யவே ஆசை மிக்குடையேன் என்றபடியாம்.

இதனால், எம்மான்றன் திருவரு ளுணர்க்கிற்கு ஈடாக உடல் பொரு ளாவி யென்னும் மூவகையானும் ஈடுபடுதலே உண்மை யன்பர்க்குற்ற சரணாகதியா மெனப்பதாயிற்று. (59)

௬0. சகத்தின் வாழ்வைச் சதமென வெண்ணியே
மிருத்த தீமை விளைய விளைக்கின்றேன்
அகத்து ளாரமு தாமைய நின்முத்தி
சுகத்தி னுள்வந்து தோய்வதெக் காலமே.

பொழிப்புரை :—யான் இவ்வுலக பொய் வாழ்வினை நித்தியமாக நினைந்து, பலவாறான கொடுமைகள் உண்டாகுமாறு செய்து வருகின்றேன்; மெய்யடியவர் தம் மனத்தின்கண் இனிய தேவாமிர்தம்போன்று உருசிகாஞ் செய்கின்ற ஐயனே! தேவரீரது மோக்ஷ சுகானந்தக் கடலில் யான் வந்து மூழ்குதல் இனி யெக்காலத்திலோ வறியேன்.

குறிப்புரை :—இவ்வனித்திய மாயா போக போக்கியத்தில் ஆழ்ந்து தீவினை விளைவித்துவரும் பேதையேன் இனி நின் பரமானந்த சாகரத்தி லாழ்ந்து பதவி யடைவதும் எக்காலமோ வென்று விரைவு பற்றியோத லறிக. (60)

௬௧. கால மூன்றுங் கடந்தொளி ராநின்ற
சீல மேநின் திருவரு ளாலிந்த்ர
சால மாமிச் சகமென வெண்ணிநின்
கோல நாடுத லென்று கொடியனே.

பொழிப்புரை :—முக்கால மென்னும் எக்காலங்களினும் இடையறு தொளிரும் நின்மல குணத்தோய்! நினது திருவருட் சக்தியைக்கொண்டு இவ்வுலக நிலை கேவலம் இந்திரசால கோலாகலமெனக் கருதி, தேவரீர்தம் திருக்கோல வழகினை இக்கொடும் பாவியாய யான் கண்டடைதல் எப் போதோ!

குறிப்புரை :—முக்காலங் கடந்து எக்காலும் விளங்காநின்ற இறை வனே! இப்புவன போகம் மித்தையாயிற்றே! ஆதலின் நித்தியமான பரமா

னந்த வாழ்வினை பெற்றுய்ய நின் பேரருள் வடிவை நாடுவதும் உண்டோ வென்று வேண்டினரென்க. (61)

சஉ. கொடிய வெவ்வினைக் கூற்றைத் துரந்திடும்
அடிக ளாம்பொரு ளேநினைக் கன்பின்றிப்
படியி லேழைமை பற்றுகின் றேன்வெறு
மிடியி னேன்கதி மேவும் விதியின்றே.

பொழிப்புரை :—மிகவுங் கொடுமையான தீவினையாளனும் இயமனை அகலச் செய்யும் பரம சக்திவாய்ந்த பரசிவமே! அதி ஏழையாகிய யான் ஒப்பற்ற பரகதி பெறுமாறதான யாதாமோர் ஊழ்வினையு மின்மையினாலே நின்பா லன்பே யில்லாமையால் யான் இப்பவத்தில் மிகவும் மெய்யறி வின்மையையே பலனாகப் பற்றியுள்ளேன்.

குறிப்புரை :—பரசிவமே! ஆன்மகோடிகளி னுயிரைக்கவரும் கொடுங் கூற்றுவனை யன்றியும், அவ்வான்மாக்களது தீவினையாம் கூற்றையு மாற்றி யருளுவனென்க; (இதனால் இறைவனது மெய்யடியார் வினையை யென்று பொருள்கோடல் மரபாம்) சான்றாக :—

"இருவினை யீட்டி யீட்டா வியல்புங், கருவியிற் றோய்ந்துந் தோயாக் கலப்புஞ், சிவனவனாகியுஞ் சிவனாந்தராமுங், காட்டி மீட்டன கருணைக் கையே" என்று மேலோர் கூறுவதறிக. (62)

சங. விதியை யும்விதித் தென்னை விதித்திட்ட
மதியை யும்விதித் தம்மதி மாயையிற்
பதிய வைத்த பசுபதி நின்னருட்
கதியை யெப்படிக் கண்டு களிப்பதே.

பொழிப்புரை:—(ஆன்மாக்களுக்குரிய நெறிமுறையாம்) கட்டளையை யுண்டுபண்ணி, அக்கட்டளை திட்டத்திற்குட் படுத்தி என்னையும் உற்பவித்து இதன்மேல் என்னிலைமைக் கான புத்தியையும் கொடுத்து, அந்த புத்தியைக் கொண்டு என்னை மாயா பந்தத்தில் தொந்தித்துள்ள ஏ ஆன்ம நாயகனே! (இவ்வாறாக மாயா சகிதனாயுள்ள யான்) நின் திருவருட் பயனைக் கொண் டுய்வது எவ்வாறாம்!

குறிப்புரை :—சகலமான உலககாரியாதிகளுக்கெல்லாம் நீயே காரண பூதனாயிருந்துகொண்டும், நீயே நாமரூபப் பிரபஞ்சங்களா யமைந்திருந்தும், நின் கட்டளைக்கு யான் உட்பட்டிருக்கிறபோது, நின்னையன்றி யான் உய்வ தெங்ஙன்?

பசுபதி - பசு - சீவான்மா. பதி—பரமான்மா - ஆக, ஆன்ம நாயகன் என்றாயிற்று. அதாவது இறைவன் என்க. (63)

௬௪. கண்ட கண்ணுக்குக் காட்டுங் கதிரெனப்
பண்டு மின்றுமென் பானின் றுணர்த்திடும்
அண்ட னேயுனக் கோர்பதி னாயிரந்
தெண்டமென் பொய்மை தீர்த்திடல் வேண்டுமே.

பொழிப்புரை:—நோக்கும் கண்களுக்குச் சகலத்தையும் விளக்குவிக்கின்ற ஆதித்தனைப் போன்று முக்காலத்தும் இக்காலத்தும் என்கண் பொருந்தி, (அதாவது என்னைச் சார்ந்து) அறிவித்துவரும் தேவதேவனே ! நின்னடிக்கு ஓர் பதினாயிர நமஸ்காரங்கள் செய்கின்றேன்; நீ தயவு கூர்ந்து எனது பொய்ச் சார்பனைத்தையும் போக்கி நின்சார்பில் நிலைநாட்டுவாயாக.

குறிப்புரை:—பொய்ச்சார்பாவது,—அநித்திய மாயா போகபோக்கியங்களும், அதற்கேதுவாயுள்ள கருவி கரணச் சேஷ்டிதங்களுமாம். பண்டு மின்று மென்றமையால் முக்காலமுமென்றதாம். அண்டனே! என்றார், அதாவது தேவனென்பதுமன்றி அண்டகோளாம்சனே யெனினுமாம். இதனால், என் அநித்தியாதிகளை யொழித்து நின் நித்தியத்துவத்தைக் கொடுத்தருள்வா யென்பது சாரமாக வுள்ளது.

பொய்யை யொழித்துப் புறப்பட்டேன் மன்றாடும்
ஐயரைக் கண்டேனடி—அக்கச்சி (ஐயரைக் கண்டேனடி)

என்றார் ஓர் பெரியார். (64)

௬௫. வேண்டும் யாவு மிறந்து வெளியிடைத்
தூண்டு வாரற்ற சோதிப் பிரானின்பாற்
பூண்ட வன்பர்தம் பொற்பணி வாய்க்குமேல்
ஈண்டு சன்ம மெடுப்ப னனந்தமே.

பொழிப்புரை:—விரும்பப்படுமவை யனைத்தையு மொழித்துப் பரவெளியெனும் ஞானாகாய நிலயத்தின்கண், தூண்டுதலில்லாது தானே துலங்கியுள்ள சிற்சொலித சீலத்வனே! நின்பால் மெய்யன்பினால் தொண்டு புரிந்துவரும் அடியவர்க்கு அடிமைகொண்டு ஊழியனாயிடின், இங்கேயிருந்து அன்னார் பணியைக்குறித்து அனேக சனனங்கள் கொண்டுவாழ விருப்புடையேனவன்.

குறிப்புரை:—உலகிடையே உண்மைநூன் முடிவாயும், அஃதுணர்ந்த ஆன்றோர் மாட்டுக் கற்றுக் கேட்டுத் தெளிந்தது மெய்யறிவாளராய்ச் சுத்த

சன்மார்க்கராம் சுஞ்ஞான மிலங்கப் பெற்றோர் எவரும், கன்மமும், சென்மமும் கட்டோடொழித்து, சனனமரண மற்ற நின்மல பெருவாழ்வு பெற பேறுவப்பெய்தி அதற்குரிய தவநிலை பொருந்தியுள்ளமை யுணர்ந்தும், நூலாசிரியர், அன்னோர் கருத்துக்கு மாறாகச் சென்மம் பலப்பல வேண்டுவது விருத்தமாய் விளங்கும்; அற்றன்று. ஆசிரியர் உட்கிடை, தற்போதமாம் ஜீவபோத மொழிந்து சிவபோதமாய நின் அடியார்பணியொன்றை மட்டும் யெமக்கமைப்பின் அதற்கென யெத்தனை முறைவேண்டுமானாலும் பிறந்திறத்தல் எனக்கின்றியமையாத அரிய பதவியாக் கொண்டு வாழ்வேன் என்பது அவர் கருத்தெனல் ஈண்டு நன்கு புலனுதல் அறிக.

ஆகவே, அன்பர் பணியாம் யேணியைக் கொண்டால் அதுகொண்டு அரண் பணிக்காட்பட்டு பேரின்ப நிலையினை மெள்ளபெறலா மென்பதவர் மனோ நிலையாகும். இதற்குச் சான்று:—இவ்வாசிரியர் பிறண்டும் "அன்பர்பணி செய்யவெனை யாளாக்கி விட்டுவிட்டால், இன்பநிலை தானேவந் தெய்தும் பாரா பரமே" யென்றருளினமையான் இனிது விளங்கும். (65)

௬௬. எடுத்த தேக மிறக்குமு னேயெனைக்
கொடுத்து நின்னையுங் கூடவுங் காண்பனோ
அடுத்த பேரறி வாயறி யாமையைக்
கெடுத்த வின்பக் கிளர்மணிக் குன்றமே.

பொழிப்புரை:—தேவரீரை விரும்பித் தொழும்பரா யண்டி நின்றவர்கள், தம்மைத் தம்முள் அறிவு மயமாய் வியாபித்துள்ள அருந்துணையென்றறிந்து கொள்ளாதுள்ள அறிவீன சுபாவத்தினைப் போக்கியாண்டருளி பேரின்பமயமாங் கிளர்ச்சியோடுங் கூடிய நவரத்ன கசித பர்வத மனையாய்! யான் கொண்டுள்ள இம் மனித சரீரமானது மாய்வதற்கு முன்னுகவே என்னை யான் தமக்கு ஈடுபடுத்தி தம் திருவுருவாம் திருவருட்சோதி சொரூபத்தினை யுண்முகமாகத் தரிசித்துய்யவும் நேருமோ!

குறிப்புரை:—இப்பாசுரத்தில், "இறக்குமுனே எனைக்கொடுத்து" என்றூர், அதாவது உடல் பொருள் ஆவி மூன்றையுங் கொடுத்தென்பது. ஈதன்றித் தற்போதமாம் ஜீவபோதங் கொடுத்தென்றுங் கூறுனருளர். மற்றும் "உன்னையுங்கூடவுங் காண்பனோ" என்றருளியுள்ளார்—ஈண்டு அத்துவித நியாயங்கொண்டு சாயுச்யம் பெறக்காண்பனோ வென்ற கருத்தாமென்க.

இன்னும் ஈற்றடிக்கண் 'கிளர்மணிக் குன்றமே,' என்றருளியுள்ளார். ஈது நவமணிக்குன்று யுருவகித்த அணியுவமையாம். சான்றாக அப்பர் சுவாமிகள் பாடிய க்ஷேத்திரத் திருத்தாண்டகம் வருமாறு காண்க.

## திருத்தாண்டகம்

விற்றா ளொன்றில்லாத நல்கூர்ந்தான் காண்
வியன்கச்சிக் கம்பன்காண் பிச்சையல்லான்
மற்றா ளொன்றில்லாத மாசதுரன்காண்
மயானத்து மைந்தன்காண் மாசொன்றில்லாப்
பொற்றூண்காண் "மாமணிநற் குன்றொப்பான்காண்"
பொய்யாது பொழிலேழுந் தாங்கிநின்ற
கற்றூண்காண் காளத்தி காணப்பட்ட கணநாதன்காண்
அவன் என் கண்ணுளானே. (66)

சுஎ. குன்றி டாத கொழுஞ்சுட ரேமணி
மன்று ளாடிய மாணிக்க மேயுனை
யன்றி யார்துணை யாருற வார்கதி
என்று நீயெனக் கின்னருள் செய்வதே.

பொழிப்புரை :—சிறுத்தல் பெருத்தலாம் விகாரங்களற்ற செழுமை வாய்ந்த செஞ்சுடரே! இரத்ன கசிதமாயொளிரும் சிற் சபையின்கண் ஞான நிர்த்தனம் செய்கின்ற செஞ்சுடர் மணியே! இவ் வெளியேற்குத் தம்மையன்றி வேறு துணையாவ ரொருவருமின்றே! அன்றிச் சுற்றத்தார் யாவர், மற்றும் அடைக்கலம் பெறுபவர் யாவர், யெவருமில்லையே! ஆகையால் நீயே எற்கு இன்றியமையாத் திருவருள் பாலித்தருள வேண்டும், ஆயினது கிடைப்பதென்றோ! அறியேனென்றபடி.

குறிப்புரை :—மணிமன்று—ஞானசபை. சிற்சபை யெனினுமஃதே. எம்மானன்றித் துணையாக யெவரையும் கொள்ளாததால், திக்கற்றவர்க்குத் தெய்வந்துணை யென்பதுகொண்டு "நீ யெனக்கின்னருள் செய்" யென்றனர் போலும். (67)

சுஅ. அருளெ லாந்திரண் டோர்வடி வாகிய
பொருளெலாம் வல்ல பொற்பொது நாதவென்
மருளெ லாங்கெடுத் தேயுள மன்னலால்
இருளெ லாமிரிந் தெங்கொளித் திட்டதே.

பொழிப்புரை :—திருவருளே திருமேனியாக் கொண்டருளி சர்வத்தையும் சிருட்டித்துக் காத்தருளுவதில் பரம சக்திவாய்ந்த பொற்சபா நாதனே! என்பாலுள்ள அஞ்ஞானதிகளனைத்தையும் போக்கியென் சித்தமிசை குடி கொண்டிருத்தலால் அம்மனமாசெனும் அந்தகாரங்கள் யாவும் என்னை விட்டெங்கோ வொளித்தனவே.

குறிப்புரை :—சிற்சபாநாதன் சிந்தை குடிவந்ததால் ஞானவொளி வீசியதின்முன் அஞ்ஞானவிருள் போனவழி தெரியா தகலவே 'இருளொலா மிரிந் தெங்கொளித்திட்டதே' யென்றனர் போலும் ஏன்? ஒளியின்முன் இருள் எங்குமிலவாதலா லென்க. (68)

சூக. எங்கு மென்னை யிகலுற வாட்டியே
பங்கஞ் செய்த பழவினை பற்றற்றால்
அங்க ணாவுன் னடியிணை யன்றியே
தங்க வேறிட முண்டோ சகத்திலே.

பொழிப்புரை :—உலகாதாரம் வொழித்து நின்னுதரவு கொண்டு நின் றாட்டுணைபற்றி நிற்கும் என்னைப் பகைவரைப்போற் கொண்டு எவ்விடத்தும் வாட்டமுறக் கீழ்மை படுத்திய முன்செய தீவினையானது விட்டுத் தொலை யுங்காலத்து ஏ கருணைக்கண்ணா? நினது திவ்ய திருவடிக் கமலங்களன்றி இவ்வுலகத்தில் பொருந்தி வாழ்தற்கு வேறிடமெங்கு மில்லையே!

குறிப்புரை :—'வினைப்பற் றொழிந்தால் உனைப்பற்றி நிற்பேன்' என்பது தோன்ற, பழவினை பற்றற்றால் அங்கணா நின்னடியிணை யன்றியே 'தங்க வேறிடமில்லை' யென்றனர் போலும். 'தொந்த பந்தத் தொலைந் திடவே யெனக், கெந்தை பாத வீணைமலர்ச் சொந்தமாம்' என்ற பேருரைக் கிணங்க இவருங் கூறியருளினாராக. (69)

எ0. உண்ட வர்க்கன்றி யுட்பசி யோயுமோ
கண்ட வர்க்கன்றிக் காத லடங்குமோ
தொண்ட ருக்கெளி யானென்று தோன்றுவான்
வண்ட மிழ்க்கிசை வாக மதிக்கவே.

பொழிப்புரை :—புசித்தார்க்கன்றி மற்றையர்க்குப் பசியடங்காது; அதுபோல, காணவேண்டிய வொன்றைப் பார்த்தாலன்றி அவ்வாசை யடங்கா; என்னுற் கூறியுள்ள தமிழ்ப்பாட்டிற்கு யேற்றதாக எவரும் அங்கீகரிக்குமாறு அன்பர்க்கன்பனை இறைவன் என்னுசை யடங்க எப் போது என்முன் வெளிப்படுவனோ! மற்றும், மேன்மை வாய்ந்த (நால்வர் தமிழ்வேதத் துதியாம் தேவார திருவாசகாதி யவைகட்கு) யேற்றதாக என் பாமாலையையுந் தரிப்பான் வேண்டியும், தொண்டர்க்குத் தொண்ட னென்று எவருங் கொண்டாடித் துதிசெய்யும் எனக்குப் பிரத்தியக்ஷ மாவதும் விரும்புவன் எனக் கூறலு மமையும். (70)

எக. மதியுங் கங்கையுங் கொன்றையு மத்தமும்
பொதியுஞ் சென்னிப் புனிதநின் பொன்னடிக்

கதியை விட்டிந்தக் காமத்தி லாழ்ந்தவென்
விதியை யெண்ணி விழிதுயி லாதன்றே.

பொழிப்புரை :—முப்பிறைச் சந்திரனென்ன, கங்கா தேவியென்ன, கொன்றை மாலை மத்தமாலை யென்ன இவைகளையெல்லாந் தரித்த கற்றைச் சடைமுடி யுடைய சர்வோத்தமா! நினது அழகொழுகுந் திருவடிக் கதியினைக் கண்டடையப் பெறாது இந்த தீய காமக் கடற்கண் சதா குளித்தெழும் விதிவசத்தையுன்னி என்னிரு விழிகளு நித்திரை நீத்தனவே! அன்று, ஏ. அசை.

குறிப்புரை :—பலவித மலர்மாலைகளைச் சூடிய பரம பரிசுத்தனும் ஏ என்னுயிர்த்துணைவ? நின் திருவடியாங் கதிபெறாது கேவலந் துச்சமாய காமாதி விஷயங்களிலாழ்ந்து பரதவிக்கும் தன்மையால் என் கண்கள் உறங்குவ தில்லையே! என்செய்வேன் என்பது முடிபாம். பொன்னடி - திருவருட் சத்தியார் பொருந்திய வாற்றால் அங்ஙனங் கூறலாயினரென்க. (71)

எஉ. அன்றெ னச்சொல வாமென வற்புதம்
நன்றெ னச்சொல நண்ணிய நன்மையை
ஒன்றெ னச்சொன வொண்பொரு ளேயொளி
இன்றெ னக்கருள் வாயிரு ளேகவே.

பொழிப்புரை :—ஒருவர் அல்ல வென்னவும், மற்றொருவர் அது ஆகுமெனவும், இன்னொருவர் இஃதோர் ஆச்சரியமாகும் நல்ல வார்த்தையெனவும் பொருந்தாநின்ற ஓர் மேலாகிய வத்துவை இவையாவும் ஓர் பொருளேயென வோதியருளி என் சந்தேக விபரீதத்தைப் போக்கின பிரகாசமய வத்துவே! எனது அஞ்ஞானவிருள் நீங்குமாறு இப்போது மெய்ஞ்ஞானப் பிரகாசத்தை யென்கண் ஏற்றுவாய்.

குறிப்புரை :—அடிமைக்குள்ள அஞ்ஞான விருளகலுமாறு மெய்ஞ்ஞானதீப மேற்றியருள்வா யென்பது சாரமாம். சான்றாக மணிவாசகரும்,—" கூர்த்த மெய்ஞ்ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தி, நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே" என்று தம் திருவாசக சிவபுராணத்திற் கூறின தறிக. (72)

எங. இருவ ரேபுகழ்ந் தேத்தற் கினியராம்
ஒருவ ரேதுணை யென்றுண ராய்நெஞ்சே
வருவ ரேகொடுங் காலர்கள் வந்தெதிர்
பொருவ ரேயவர்க் கென்கொல் புகல்வதே.

பொழிப்புரை :—நாரணர், பிரமர் என்னும் இவ்விருவர்களே நம் பரமனைத் துதிசெய்து வாழ்வோராவர் ; ஆதலின் அம்முழுதலாயுள்ள ஒப்பற்ற ஒருவரையே நம்முயிர்க்குற்ற துணையாளராவாரென நன்கறிவாய் மனமே! நாளைக் கொடுமை செய்யும் இயம கிங்கிலியர்கள் வந்து இம்சிப்பது மன்றி உபத்திரவம் செய்து வம்பியற்றுவரே, அவர்க்கு என்ன சொல்வது ?

குறிப்புரை :—' இப்பாசுரத்தில்,—இருவரே புகழ்ந்தேத்தற் கினிய ராம் ஒருவரே ' என்றமை.—செக்கச் சிவந்த செஞ்சுடர் வண்ணனை யென்க. சான்றாக.—மணிவாசகரும் :—

(திருவாசகம் - திருச்சாழலில்)

1. அலரவனு மாலவனு மறியாமே யழலுருவாய்
நிலமுதற்கீ ழண்டமுற நின்றதுதா னென்னேடீ ?
நிலமுதற்கீ ழண்டமுற நின்றிலனே லிருவருந்தஞ்
சலமுகத்தா லாங்காரந் தவிரார்காண் சாழலோ.

(திருத்தோணோக்கம்)

2. பிரமனரி யென்றிரு வருந்தம் பேதைமையாற்
பரமமியாம் பரம மென்றவர்கள் பதைப்பொடுங்க
வரனா ரழலுருவா யங்கே யளவிறந்து
பரமாகி நின்றவா தோணோக்க மாடாமோ.

என்ற இவ்விரு பாசுரத்தாலும் நன்கு விளங்கும். (73)

எச. புகழுங் கல்வியும் போதமும் பொய்யிலா
வகமும் வாய்மையு மன்பு மளித்தவே
சுகவி லாசத் துணைப்பொரு ளோற்றமாங்
ககன மேனியைக் கண்டன கண்களே.

பொழிப்புரை :—மோக்ஷ சுகமளித்தற் கேதுவான இலீலா விநோத மாம் உயிர்க்குறுதித் துணையாகிய சிவபரஞ்சுடரார் தம் அந்திவண்ணத் தழகார்ந்த திருமேனியினைக் கண்ட நேத்திரங்கள் களிப்பெய்தன ; அன்றி யும், கியாதியையும், கல்விச் செல்வத்தையும் ஞானமென்ன, பரிசுத்த இரு தயமென்ன, உண்மை நெறியென்ன, அன்பென்ன இவைகளையுந் தந் தருளியதாம்.

குறிப்புரை :—சிவபிரானார் தம் யதார்த்த அந்திப்போதைய செவ் வானச்சுடர் மேனியினைச் செவ்வனே கண்டு களித்தார்க்கு புகழ், ஞானம், கல்வி, சுத்த விருதயம், உண்மையும், தெய்வ பக்தியும், மற்றும் வான் பொருளும் வந்து பொருந்துமென்பது புலனாயது. (74)

எரு. கண்ணு ணின்ற வொளியைக் கருத்தினை
விண்ணு ணின்று விளங்கிய மெய்யினை
எண்ணி யெண்ணி யிரவும் பகலுமே
நண்ணு கின்றவர் நான்றொழுந் தெய்வமே.

பொழிப்புரை :—என்னிரு கண்களிற் பொருந்தியுள்ள பிரகாசத்தையும் என்பாலதான நுண்ணறிவாயதையும் பராகாயத்திற் றோன்றியருளும் உண்மைப்பொருளேயும் பன்முறையினுந் தியானித்து தியானித்து இராப் பகலாக நாட்டமுற்றிருப்பார் யான் வணங்கற்கு அருகமாகிய பரதெய்வமாவர்.

குறிப்புரை: —உண்மைப் பக்தர்களே தாம் சிவமாய்க்கொண்டு வணங்குவதென்னும் உண்மைச் சித்தாந்தத்தினை நன்கு அறுவுறுத்தினராக. ஏன்? இறைவன் அன்பர்க்கன்பனுனது கொண்டென்க. அன்றியும் அவ்வன்பர் அகமே ஈசன் ஆலயமாக்கொண்டு சதா குடியிருத்தலானும் அடியவரைத் தான் றொழுந் தெய்வமெனலானுர் போலும். சான்றாக :—

மித்தையா முடலமென்ன விவேகமே விடுதலாலே
நித்தனு னெனும்விவேக நேர்ந்திடும் நேர்ந்த காலே
முத்தர்பே ரவைகிடைக்குங் கிடைத்தலான் முதிர்ந்தஞானஞ்
சித்தியா மன்றே சீவன் முத்தனுய்ச் சிவனுமாவன்.

எனப்பிற நூலார் கூறலானு மென்க. (75)

எசு. தெய்வம் வேறுள தென்பவர் சிந்தனை
நைவ ரென்பது நற்பர தற்பர
சைவ சிற்சிவ னேயுனைச் சார்ந்தவர்
உய்வ ரென்பதும் யானுணர்ந் தேனுற்றேன்.

பொழிப்புரை :—பரசிவத்தைத் தவிர வேறாகவோர் தெய்வமுண்டு எனக் கூறுபவர், மனவருத்தமே யடைவார். சுத்த பரத்துவம் வாய்ந்த தற்பரசிவனே! சைவ சமயப் பிரதியக்ஷனுய் வந்து மெய்ஞ்ஞான வின்பத்தைப் பாலித்தருளும் சர்வமங்கள சொரூபனே! தம்மைக் கதியாக வடைந்தவர்கள் நித்தியத்துவ மெய்துவ ரென்பதையும் யான் நன்கு ஆய்ந்தறிந்து கொண்டு தேவரீரை யடைந்தேன் என்பது.

குறிப்புரை :—சிவதத்வ முணராத சிதாபாசர், கூர்த்த மெய்ஞ்ஞானமின்றிச் சிவபரஞ்சுடர்க்கு அன்னியமாய் வேறோர் தெய்வமுண்டென்பாராதலால் அன்னோர் பின்னோர் கதியுமின்றி வியாகூலச் சித்தமே யுடையராவரென்றும், உள்ளபடி சைவசமயமும், அச்சமய கடவுளருமே உலகிற் கின்றி

யமையாத தனிப்பர முழுமுதற் கடவுளெனக் கொண்டொழுகுவார் எவரோ அவரே பரகதிபெற்றுய்வரெனவும் கூறித், தாமும் நன்காய்ந்தறிந்தே அப் பரம் பொருளைச் சரணடைந்தேனென்றும் ஏனையோரும் உணர்ந்துய்யு மாறாகத் தெரித்தன ரென்க.

புற்றில் வாளரவு மஞ்சேன் பொய்யர்தம் மெய்யு மஞ்சேன்
கற்றைவார் சடையெம்மண்ணல் கண்ணுதல் பாதம் நண்ணி
மற்றுமோர் தெய்வந்தன்னை யுண்டென நினைந்தெம்பெம்மாற்
கற்றிலாதவரைக் கண்டாலம்மநா மஞ்சுமாறே.—(வாதவூரர்). (76)

எஎ. உற்ற வேளைக் குறுதுணை யாயிந்தச்
சுற்ற மோநமைக் காக்குஞ் சொலாய்நெஞ்சே
கற்றை வார்சடைக் கண்ணுதல் பாதமே
பற்ற தாயிற் பரசுகம் பற்றுமே.

பொழிப்புரை :—நன்னெஞ்சே! துன்பம் நேர்ந்த காலத்திலே இப் போதுள்ள பந்துக்களா உறுதுணையாய் வந்து காப்பவர்? சொல்லாய்; திரண்டு நீண்டு வளர்ந்து கற்றையாயுள்ள சடையையும் நெற்றி நடுக்கண்ணை யுங் கொண்ட நீறணிக்கடவுளார் தம் திருமலரடிகளையே இன்றியமையாப் பெரும் பற்றாகக் கொண்டு வணங்குவோ மாயின், ஒப்பற்ற அப்பரானந்த பேறானது நம்மைத்தானே வந்தடையும் என்க.

குறிப்புரை :—'உற்றாராருளரோ வுயிர் கொண்டு போம்பொழுது குற்றாலத்துறை கூத்தனல்லால் நமக்கு' (உற்றார்) எனத் தேவாரச் செல்வரும் கூறியருளினமை யறிக. மற்றும்,

'உடன்பிறந்தார் சுற்றத்தா ரென்றிருக்க வேண்டா
உடன் பிறந்தே கொல்லும் வியாதி' யென்றார் (ஔவையாரும்)

'ஒரு குலமும் சுற்றமும் ஒருரும்நீ' என்று எம்மானையே சர்வ பந்து வாகவும் அப்பர் கொண்டமை யறிக. (77)

எஅ. பற்ற லாம்பொரு ளேபரம் பற்றினால்
உற்ற மாதவர்க் குண்மையை நல்குமே
மற்றும் வேறுள மார்க்க மெலாமெடுத்
தெற்று வாய்மன மேகதி யெய்தவே.

பொழிப்புரை :—ஒப்பற்ற பரசிவத்தை விரும்பித் தொழுதால் தவ சிரேட்டர்களுக்கு மேலான சிவலோக ஆக்கியைத் தந்தருளும். ஆகவே, அப்பரம் பொருளானது நம்பி வழிபடற்கினிய முழுமுதற் பொருளை

யாகும் ; ஏ நெஞ்சே! நீ மோக்ஷாநுபவமெய்த வேண்டில் இன்னும் வேறு யுள்ள பொய்ச் சமயங்களெவற்றையும் சாராது ஒதுக்கித் தள்ளுவாயாக.

குறிப்புரை :—உலகோர் கொண்டொழுகும் பலவேறு மார்க்கங்களினும் இச் சைவசமயமே மெய்ச்சமயமென்றும், இச்சமய கடவுளாம் பரசிவமே தம்மை யடைந்தார்க்குச் சகல பதவிகளையும் தந்தருளும் முடிவிலாற்றலுடையா ரென்றும், ஆனால் ஆன்மாக்கள் உண்மையன்பு செய்து வழிபடல் வேண்டுமென்றும், மற்றும் தவசியர்கட்குத் தவத்தளவுக் கேற்பத் தண்ணருள் சுரந்தருளுவனென்றும் எம்மான்றன் பரத்துவம் விளக்கலாயின ரென்க.

இடையறு அன்பின்வழி கொண்டு, "வேண்டுவார் வேண்டுவன ஈவான் கண்டாய்" என்றருளினர் பெரியாரும். (78)

## ஆரணம்

### எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்



க. ஆரண மார்க்கத் தாகம வாசி
யற்புத மாய்நடந் தருளுங்
காரண முணர்த்துங் கையுநின் மெய்யுங்
கண்கண்மூன் றுடையவென் கண்ணே
பூரண வறிவிற் கண்டில மதனாற்
போற்றியிப் புந்தியோ டிருந்து
தாரணி யுள்ள மட்டுமே வணங்கத்
தமியனேன் வேண்டிடத் தகுமே.

பொழிப்புரை :—திரிநேத்திரங்கள் கொண்டருளிய எனது கண்மணியோய்! நான்மறை வழியாக ஆகமமாங் குதிரையானது மிகவும் விநோதமாகச் செல்லுங் காரண தத்துவத்தைத் தெரிவிக்கும் நினது கரங்களும் சரீரமும் என்னறிவினாலே காணத்தக்கதா யில்லை; ஆகவே, இவ்வுலகமுள்ளளவும் வாய்கொண்டு தோத்திரித்து இந்த விவேகத்தோடு மிருந்து தியானஞ் செய்து வழிபட இச்சிறியவன் விரும்பத் தக்கதாகும்.

குறிப்புரை :—வேதநெறியாக ஆகம வசப்பட்டோர் அநுபூதி செய்யும் ஓர் புதுமையாகிய ஏதுவைத் தெரிவிக்கும் கரமும் சரீரமும் என் அறிவைக்கொண்டு அறிதற்பாலதாக வில்லை; ஏன்? நிறைந்த போத நிட்டாநுபூதியில் அறியத்தக்கனவாதலா லென்க. ஆகவே, எம்மான்றன்

சகள வடிவைத் தரிசித் துய்தலே தக்கதெனக் கொண்டமையான், "போற்றி யுய்ந்திட" வென்பதாதியாய்.........தாரணி யுள்ளமட்டுந் தமியனேன் வணங்கத் தகுமெனவுங் கூறியுள்ளார். நிற்க; ஆரண மார்க்கத்தில் ஆகமவாசி நடந்தருளுதலாவது: சதுர்வேத நெறிக்கண் ஆகம சித்தாந்தம் உள்ளீடாய்க் கொண்டுள்ளதும், ஆகமாதி கூறு மார்க்கம் மிக்க சுலபசாத்தியமாய தென்பதும் கூறினமை புலனாகியது.

இவற்றுள் ஆகமம் என்பது,—பாசஜீவ பதிப்பொருள்களை விவரித் தோதற்பாலன வென்பதும், மற்றும் உண்மை யறிவானந்தமெனும் மூவித சித்தாந்த பொருளினைச் சிறப்ப ஆசிரயித்த வண்ணமும் கைக்கொண்டனர் போலும். வேதம் நான்கும், ஆகமம் 28-ம் முன்னம் விவரித்துள்ளன. அஃதாவது காமிகம் முதல் வாதுளம் ஈறாகவுள்ளன. (1)

உ. இடமொரு மடவா ளுலகனைத் தீந்திட்
டெவ்வுல கத்தையு மீன்றுந்
தடமுறு மகில மடங்குநா ளம்மை
தன்னையு மொழித்துவின் னெனவே
படருறு சோதிக் கருணையங் கடலே
பாயிருட் படுகரிற் கிடக்கக்
கடனதோ நினைப்பு மறப்பெனுந் திரையைக்
கவர்ந்தெனை வளர்ப்பதுன் கடனே.

பொழிப்புரை :—இறைவனது வாமபாகத்தை சர்வ சீவதாயகமாயுள்ள உமையவளுக்கு ஆக்குவித்தருளி பின்னர் சர்வலோகங்களையும் சிருட்டித்தும், விசாலமாயுள்ள அவ்வுலகங்களெல்லாம் ஒடுங்கும்போது அவ்வருளன்னையாரையும் தம் வயப்படுத்தி பரவெளிபோன்று எங்கணும் நிறைந்ததான பரவொளியாங் கருணை சமுத்திரமே! பரவப்பட்டுள்ள அவிவேகமாமிருட் பிறவிக் கடலின்கண் யான் விழுந்து பாதவித்தல் முறையோ? மற்றும் எண்ணுதல் மறுத்தல்களான அலையினைத் தம்பாணிறுத்தி அடிமையைக் காத்தருளுவது நின் பரமாம்.

குறிப்புரை :—ஆசிரியர் விரும்பி வேண்டியது பரவொளியானமையான் ஈண்டு 'பாயிருட் படுகரிற் கிடக்கக் கடனதோ' வென வருந்தியோதினரென்க; இருட் படுகர் - அஞ்ஞானக் கடலின்கண். கருதலும் மறத்தலும் சகல கேவலமெனப்படும். இவை முன்னுங் கூறப்பட்டுள்ளன. அலையெனும் பொருள் தரும் திரை எனும் சப்தம் இங்கே கடலினைக் குறித்தது. (2)

ங. வளம்பெறு ஞான வாரிவாய் மடுத்து
மண்ணையும் விண்ணையுந் தெரியா

தளம்பெறுந் துரும்பொத் தாவியோ டாக்கை
யானந் தமாகவே யலந்தேன்
களம்பெறு வஞ்ச நெஞ்சினர் காணுக்
காட்சியே சாக்ஷியே யறிஞர்
உளம்பெறுந் துணையே பொதுவினி னடிக்கு
முண்மையே யுள்ளவா றிதுவே.

பொழிப்புரை :—மிக்க வளப்பத்தோடுங் கூடிய மெய்ஞ்ஞானமெனும் பெருக்கினை வாய்கொண்டு பருகி பூமி யென்றும் ஆகாயமென்று மறிதலின்றிக், கடற்றிரைப் பட்ட துரும்பைப் போன்று உயிருமுடம்புமாகி சுகமாயிருந்து பின் வாட்டமுற்றேன்; கள்ளத்தனமாயுள்ள வஞ்ச நெஞ்சகத்தோர் தரிசித்தற் கியலாத சேவையே! அன்றிச் சர்வசாட்சி பூதமாயுள்ளானே! உண்மை ஞான பராளது இருதய கமல ஸ்தானத்தைத் தமக்கின்றியமையா இடமாக் கொண்டமர்ந்துள்ள எனது ஆவிக்கருந்துணைவா! ஞானுகாய சபையின்கண் சதா பஞ்ச கிருத்தியானந்த நடம்பயிலும் நித்தியானந்த நின்மல சொரூபனே! என் உள்ளத் துறுவதிதுவே யாம்.

குறிப்புரை :—பகர்தற்கரிய பரமானந்த சொரூபராங் குஞ்சித சரணுலய பிரபுவை, வஞ்சக நெஞ்சினர் காணப்பெறுதவரெனவும், பேரறிஞராய மெய்ஞ்ஞானியர் உளமே தனக்குற்ற விடமாயுங் கொண்டருளியவர் ஞான சபைத் தலைவனே யென்றும், அன்னுர் மெய்ப்பொருளே யெனவுங் கூறினதறிக.

கள்ளம், எனுஞ் சொல் எதுகை நோக்கிக் களமென இடைக்குறையாயது. (3)

ச. உள்ளமே நீங்கா வென்னைவா வாவென்
றுலப்பிலா வானந்த மான
வெள்ளமே பொழியுங் கருணைவான் முகிலே
வெப்பிலாத் தண்ணருள் விளக்கே
கள்ளமே துரக்குந் தூவெளிப் பரப்பே
கருவெனக் கிடந்தபாழ் மாயப்
பள்ளமே விழா தெனைக்கரை யேற்றிப்
பாலிப்ப துன்னருட் பரமே.

பொழிப்புரை :—எளியேன்றன் னெஞ்சகலாதமர்ந்து என்னை வருவாய் வருவாயென்றழைத்து இடையறுவானந்த பிரவாகமே பெருகப் பொழியும் ஒப்பற்ற காருணிய மேக படலமே! உஷ்ணமற்ற தண்ணிய

குளிர்ச்சியோடுங்கூடிய திருவருளாந் தீபச்சுடரே! வஞ்சவிருள் நீக்கும் பரிசுத்தாகாயப் பரப்பே! கர்ப்பமென்று கூறுகின்ற பாழான மாயையாங் கடல்படிந் தழிந்தொழியாதபடி அடிமையினை மோக்ஷமாங் கரைசேர்த்து ஆண்டருள்வது நினது திருவருட் செல்வியின் பாரமாகும்.

குறிப்புரை :—திருவருட் செல்வத்தை ஒப்பிலாத் தண்ணருட்டீப மென்றார்; ஏன்? மற்றைத்தீபங்கள் வெப்ப சகிதமானதால் அவ்வாறின்றி, அன்பாது கரண வொருப்பா லேற்படும் விடாய்தீர்க்கும் திருவருளானதால் ஒப்பிலாத் தண்ணருட்டீப மெனலானார்.

மாயப்பள்ளம் - பிறத்தற்கேதுவாம் கருப்பொறை யிருட்டறையென்ப. கரை - பிறவிக்கடல் கடந்து கரையேறுதல் அதாவது மோக்ஷமாம். முத்தி யென்பது விடுகையேயாகும். அதாவது ஜனன மரணவாதனையை. இதனையே மேலோர் வீடெனவுங் கழறுவார். (4)

ரு. பரம்பர மாகிப் பக்குவம் பழுத்த
பழவடி யார்க்கருள் பழுத்துச்
சுரந்தினி திரங்குந் தான கற்பகமே
சோதியே தொண்டனே னின்னை
யிரந்துநெஞ் சுடைந்து கண்டுயில் பெறும
லிருந்தது மென்கணி லிருட்டைக்
கரந்துநின் கண்ணுற் றுயில்பெறல் வேண்டிக்
கருதினேன் கருத்திது தானே.

பொழிப்புரை :—அதி மேன்மையோடுங்கூடிய பரிபக்குவம் நிறைந்த பண்டைய தொண்டர்கட்கு திருவருட்கனி பழுத்து, அதினின்றும் பேரின் பத்தேனானது கசிந்து ஒழுகுகின்ற கற்பகத்தருவே! பரவொளியே! நின் அடிமையாட்பட்ட சிறியேன் தேவரீரை மிகவும் யாசித்து, அது கண்டரு ளாமைகண்டு மனம் கலக்குற்று நித்திரை செய்யாது வருந்தியதையும், அன்றி, என் கண்ணின் இருட்டினையு மறையப்பண்ணி நினது அருட் கண் ணைக்கொண்டு தூங்காமற் றூங்குவதை விருப்புற் றெண்ணினேன்; இதுவே எனது மனக்கொள்கையாகும்.

குறிப்புரை :—வாழையடி வாழையாய் ஜென்ம ஜென்மங்களினும் பரி பக்குவ மீதுறவோங்கிய பண்டைத்தொண்டரை யீடேற்றுவான் 'அருள் பழுத்து' என்று பழவடியவரைப் பாராட்டினர் என்க; பக்குவம் பழுத்த லாவது, ஈண்டு அதிதீவிர பக்குவத்தை யென்க. (5)

சா. கருத்தினுட் கருத்தா யிருந்துநீ யுணர்த்துங்
காரணங் கண்டுசும் மாதான்

வருத்தமற் றிருந்து சுகம்பெறு வண்ணம்
வருந்தினேன் மதியின்மை தீர்ப்பாய்
ஒருத்தரா ருளப்பா டுணர்பவர் யாவ
ருலகவர் பன்னெறி யெனக்குப்
பொருத்தமோ சொல்லாய் மௌன சற்குருவே
போற்றிநின் பொன்னடிப் போதே.

பொழிப்புரை:—எனது அறிவூடு நீ பேரறிவாயிருந்து தெரிவிக்கா நின்ற மூல காரணத்தை யறிந்து யாதாமோர் கிலேசமுமின்றியமர்ந்து பேரின்பமெய்தாத முறையாக மனநொந்தயர்ந்தனன்; ஆதலால் எனது அஞ்ஞானத்தை யொழிப்பார் யாவரொருவரோ? அன்றி எனது மனவியாகூலத்தினை அறிந்தாற்றுவார் யாவரோ? மற்றும் இவ்வுலக ஆன்மாக்கள் கொள்கையாம் பன் மார்க்கங்களும். எற்குப் பிரியமானவையோ கூறுவாய், மோனமுத்திரை கொண்டருளிய பரமசற்குருவே! தேவரீர் தம் திவ்ய திருத்தாண் மலர்கட்கு நமஸ்காரம்.

குறிப்புரை:—இவ்வுலகோர் பற்றிச்செல்லா நின்ற பற்பல மார்க்கங்களும் யான் பற்றற் குரித்தன்று; ஆகவே என் பேதமையை யொழித்தாள் வாரையுங்காணேன், ஆதலால் இனியேனும் எங்களைப்பறிந்து பேரறிவளித் தருள நமஸ்கரிக்கின்றேன் என்பது.

"எஞ்ஞான மில்லாதே னின்பப் பெருமானே
யஞ்ஞானந் தன்னைய கல்விக்கு நல்லறிவே"—என்றார் திருவாதவூரரும். (6)

எ. அடியெனு மதுவு மருளெனு மதுவு
மறிந்திடி னிர்க்குண நிறைவு
முடியெனு மதுவும் பொருளெனு மதுவு
மொழிந்திடிற் சுகமன மாயைக்
குடிகெட வேண்டிற் பணியற நிற்றல்
குணமெனப் புன்னகை காட்டிப்
படிமிசை மௌனி யாகிநீ யாளப்
பாக்கிய மென்செய்தேன் பரனே.

பொழிப்புரை:—எவற்றிற்கு மாதியாய ஒப்பரும் அப்பொருளும், திருவருளென்கின்ற அப்பொருளும் எண்ணிப்பார்க்கின், நிர்க்குணத்துவ நிறைவாம்பரம்பொருளும், முடிவாம் பரம்பொருளும், இன்னும் இவை யொழிந்த விடத்தே கோசரமாயுள்ள பரம்பொருள் எனக் கூறத்தகும் அந்

தப்பொருளும் கூறுங்கால் இன்பானுபவ மெய்தவே யாகுமென்க; அன்றி, மாயாசொரூபம் மாயவேண்டின், பிரவிருத்திவிட்டு விடலே நன்மையாகு மென்று கூறிப் புன்னகை புரிந்து பூமிசை மௌனசிரியராய்த் தோன்றிவந்து என்னைத் தடுத்தாட் கொள்ளுமாறு யான் முன்னே யென்ன பாக்கியஞ் செய்தனனோ பரதெய்வமே !

குறிப்புரை :—பணியற நிற்றல், ஈண்டு மனோசங்கல்ப மின்றி நிர்ச்சலனமாய் நிற்றலாம்; அங்ஙன மிருப்பின் அதுவே மனோநாச மென்னும் சும்மாயிருத்தலாம்; இவ்வாறு சும்மாவிருப்பதே சுகமென்றார் ஆசிரியர் பிற ஆண்டும். அதோடும் நில்லாது சுகமுதயமாமெனவுங்கூறினமை கொண்டே ஈண்டும் 'குணமிதே' யென்றனர்போலும். புன்னகை - சமிக்ஞை. அதாவது குறிப்பு ஜாடையென்ப. (

அ. என்செய லின்றி யாவுநின் செயலென்
றெண்ணுவே னொவ்வொரு காலம்
புன்செயன் மாயை மயக்கினென் செயலாப்
பொருந்துவே னஃதொரு காலம்
பின்செயல் யாது நினைவின்றிக் கிடப்பேன்
பித்தனே னன்னிலை பெறநின்
றன்செய லாக முடித்திடல் வேண்டுஞ்
சச்சிதா னந்தசற் குருவே.

பொழிப்புரை :—யான் சிற்சிலபோது, நடைபெறும் காரியாதிகளெல்லாம் என் செய்கையாக் கொள்ளாது நின்செயலேயெனக் கொள்வேன்; மற்றோர் சமயத்தில் (மாயாமயக்கிலாழ்ந்துள்ளபோது எவையும் என்செயலே) யென்று கருதிநிற்பேன்; இதன்பின்னர் ஓர்சமயம் இன்னோர் செயலென்றே தெரிதராதயர்ந்து விடுவேன்; ஆகையால் இவ்வாறுய பித்தனைய புத்தியேன், யதார்த்தமான நின்செயலென்பதை உறுதியாக்கொண்டு, பித்தினன் எனும் பேர்கெடு மாறதாய் நீ ஆட்கொள்ளும் பொருட்டதாகச் சீர்படுத்தல் வேண்டும்; சத்து சித்தானந்த சொரூபியாஞ் சற்குரு மூர்த்தியே!

குறிப்புரை :—இதனால், தன்னிலையோர் முடிவுமெய்தாது மனநிகழ்வையே பின்பற்றிக் கிடந்து நன்னிலை பெறுமாறதாக இறைவனையே யெதிர்நோக்கித் திருவருண்முறையை வேண்டுவாராயினர் போலுமென்க. (இதனால் தன் சுவானுபவ வேறுபாட்டினைக் குறித்துக் கவலுறல் தோன்ற நின்றது.) (8)

கூ. குருவுரு வாகி மௌனியாய் மௌனக்
கொள்கையை யுணர்த்தினை யதனாற்

கருவுரு வாவ தெனக்கிலை யிந்தக்
காயமோ பொய்யெனக் கண்ட
திருவுரு வாள ரனுபவ நிலையுஞ்
சேருமோ வாவலோ மெத்த
அருவுரு வாகி யல்லவாய்ச் சமய
மளவிடா வானந்த வடிவே.

பொழிப்புரை :—பரமாசாரிய சொரூபமாய்த் தோன்றிவந்து, மகா மௌனமாயும், அம்மௌன நிலையின் விசேட தன்மையையும் நன்குறவிளக்கி யருளினை ; அவ்விசேடத்தினாலே அடியேற்கு இனிக்கருப்பொறை மேவுத லில்லையாகும் ; ஆனாலும், இவ்வுடலோ அநித்தியமென்று நிச்சயமா யுணர்ந்துள்ள சிவாநுபவப் பெருந்தகையாளரது அநுபூதி முறையும் எளி யேனுக்குக் கிடைக்கற்பாலதோ ! ஆனால், அது விஷயமாயுள்ள விருப்பமோ மிக்கதாயிருக்கின்றது ; அரூபமாகியும், அதுவல்லாததாகியும், அன்றியும் பல சமயங்களால் அளவறிந்தோதற் கியலாததாயுமுள்ள பேரின்ப சொரூ பமே !

குறிப்புரை :—குருவுருவம், மௌனம், அம்மௌன நிலையின் தத்வம் ஆகிய இம் மூவகைத்தாய தன்மையினை முறையே சோபானமாகிய மேன்மை யினைக் குறித்தனவாதலால் "சமயமளவிடாவானந்த வடிவே" யென்றனர் போலும்.

'சாதிச் சமயச் சழக்கை விட்டேனருட்
சோதியைக் கண்டேனடி'—யென்றும்,
'சமயாதீதப் பழம்பொரு' ளென்றும்,
'சமயகோடிகள் எதிர்வழக் கிடவும் நின்றது'

என்றும் பலவிடத்தும் கூறலான் சமயாதீதன் என்பது நன்கு புலப் படலாயிற்று. (9)

ய. வடிவிலா வடிவாய் மனநினை வணுகா
மார்க்கமாய் நீக்கருஞ் சுகமாய்
முடிவிலா வீட்டின் வாழ்க்கைவேண் டினர்க்குன்
மோனமல் லால்வழி யுண்டோ
படியிரு ளகலச் சின்மயம் பூத்த
பசுங்கொம்பை யடக்கியோர் கல்லா
லடியிலே யிருந்த வானந்த வரசே
யன்பரைப் பருகுமா ரமுதே.

பொழிப்புரை :—அரூப விலக்கணமாயும், மனக் கோட்பாட்டிற்ககப் படாத நெறியினதாயும், இடையறாத பேரின்ப மயமாகியும், நாசமற்ற தாகி

யும், மற்றும் மோக்ஷாபேக்ஷையினைக் கொண்டார்க்கு இனியனுமாய நினது மௌன முத்திரா மார்க்கமே நேர்வழியன்றி இதர மார்க்கமேதுமுண்டோ? இவ்வகில ஆன்மகோடிகளின் அஞ்ஞானாந்தகாரம் நீங்க மெய்ஞ்ஞானமாய மலர்கள் புஷ்பித்த பச்சைப் பசுங்கொடியினளை நின்பால் மறைத்தருளி ஓர் கல்லால விருக்ஷத்தின் கீழ் குருமூர்த்தமாய் அமர்ந்தருளி பரானந்த மருளும் திருவருட் செல்வத் தேவராஜனே! நின்பால் அன்பு பூண்டொழுகுவாரை ஆட்கொள்கின்ற அரும்பெருந் தேவாமிர்தமே!

குறிப்புரை:—ஈண்டு இறைவனை 'வடிவிலா வடிவாகி' யென்றது,—அவரது சகளத் திருவுருவன்றி நிர்க்குணப் பரஞ்சுடரினையாகும். 'மன நினைவணுகா மார்க்கமாய்' என்றது, மனத்தினால் நினைத்தற்கரிய அகோசரப் பொருளென்பதாம். 'நீக்கருஞ் சுகமாய்' என்றது,—இடையறாத பேரின்பமயமாயே நிற்றலாம். 'முடிவிலா வீட்டின் வாழ்க்கை' ஆன்மாக்கள் உலகத்திடை வாழும் இல்லமாம் வீடு ஓர் கால் முடிவடைதல் சுபாவமாகிய காரணமாதலான் இறைவனால், மெய்யன்பிற் குகந்து அருளும் ஒப்பற்ற நித்திய மோக்ஷத்தையே முடிவிலா வீடென்றனர் போலும்.

'படியிருளகலச் சின்மயம் பூத்த பசுங்கொம்பை' யென்றது,—உலகர்பால் பொருந்தியுள்ள அஞ்ஞான விருளொதுக்கி அவர்களைக் காத்தருளளிக்கும் பரமதயாளுவான பராசத்தியாம் பார்வதியாரை யென்ப. 'அவ்வம்மையை யடக்கி' யென்றது,—ஞானோபதேச வேடமாம் தக்ஷிணாமூர்த்தமாதற் பொருட்டு அப்பரம மாதாவைத் தன்பால் லயமாக்கியதை யென்ப. 'அன்பரைப் பருகு மாரமுது' என்றார்,—அன்பின் மேலீட்டினால் என்பெலாம் நெக்கு நெக்காய்க் கரைந்துருகும் மெய்யடியவரைத் தமது திருவருள் வெளியில் கூட்டியாளுதலாகும். இக் கருத்தினையே ஓர் பெரியார்:—

"பற்றறியா முத்தர்தமை யெல்லாம் வாழைப் பழம்போல
விழுங்குகின்ற பரமே"—யென்றார். இதற்கு வேறதாய பொருள் கூறுவாறுமுளர். (10)

## சொல்லற்கரிய பரம்பொருள்

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

க. சொல்லற் கரிய பரம்பொருளே
சுகவா ரிதியே சுடர்க்கொழுந்தே
வெல்லற் கரிய மயலிலெனை
விட்டெங் கொளித்தா யாகெட்டேன்
கல்லிற் பசிய நாருரித்துக்
கடுகிற் பெரிய கடலடைக்கும்

அல்லிற் கரிய வந்தகனுர்க்
காளாக் கினையோ வறியேனே !

பொழிப்புரை :—(இறைவனே,) இத்தன்மையன் என்று எடுத்தோதற் கிசையாத ஏக பராபரவஸ்துவே! பரானந்தக் கடலே! பரஞ்சோதித் துளிரே ! நின்னருளன்றி வெற்றி கொள்வாற்ருத மையலின்கண் எளியனைத் துன்புறவிட்டு நீ, யாண்டு மறைந்தனையோ! கெட்டியதாய சிலையிலே பசுமையான நாரினை யுரித்தெடுப்போனும், சிறிய கடுகில் மிகப் பெரியதான சமுத்திரத்தை யடக்குதலில் வன்மையுள்ளவனும், இருட்காலத்தினும் கருமை பெற்றவனுமாய இயமதர்மனுக்கும் என்னை அடிமை படுத்தினையோ! தெரியேனே, என்பதாம்.

குறிப்புரை :—“சொல்லற்கரிய பரம்பொருளே” யென்ருர் முதற்கண் ஆசிரியர்; ஆகவே, அத்தகைய முடிவி லாற்றலுடைய நம் பரம கருணாநிதியின் வன்மையின் ஓர் சிறுபாகத்தை எண்டெடுத்துக் காட்டல் அவசியமேயன்றி மிகையாகாதாகலின் கூறுவாம் :—நஞ் சிவபிரான் முடிவி லாற்றலுடைமைக்குச் சான்ருக, கொடியவரக்கனும் இராவணனைச் சிறு விரலால் ஊன்றியபடியாலும், விட்டுணு மேகமாய்த் தாங்கிப் பொறுக்க வியலாது வெட்குற்றுப் போனதாலும், அன்றுமுதல் அவர் மேகவாகன கர்ப்பமானதாலும், அன்றி, ஊழிக்காலத்தில் சர்வ சங்கார கர்த்தவ்யம் பூண்டமையானும், அன்றிச் சர்வத்தையும் தகிக்குந் தன்மையானும், பூமியைச் சேடனும், சேடனைக் கூர்மமும், கூர்மத்தைக் காலாக்கினி ருத்திரனும் தாங்குகிறபடியானும் அளவு கடந்த வன்மையாள னென்பதற்கு ஐய முண்டோ, இல்லையாம். உதாரணமாக :—

அரக்கனை மிதித்தலாலு மரிவெட்கிப் போனதாலு
முருக்கன லாகியண்டம் யாவையு மொருக்கலாலுஞ்
சுருக்கமிற் புவியைத் தாங்கித் தூலமாயிருத்தலாலுஞ்
செருக்கள வாற்றலுள்ளான் றிருப்புலி வனத்துளானே.

என வருவனவற்ருல் வன்மை நன்கு புலனுகும்.

இன்னும் வரம்பிலின்ப முடைமையாவது :—பரமேச்சுரன் என்றும் இடையரு வின்ப மயனேயாம்; எங்ஙனமெனில், வேதம், வேத்தியம், ஆத்மா, அனுத்மா, திருக்கு, திரிசியம், இவற்றை யறியாது சச்சிதானந்த மானபடியாலும், ஞாதுரு ஞான ஞேயங்களுக் கப்பாற்பட்டவ னனதாலும், இன்பமனைத்தும் உதயமாகிற பூமியானபடியால் சம்பு என்ற நாமம் ஏற்பட்டுள்ளதானும்,

“சட்டோ நினைக்க மனத்தமுதாஞ் சங்கரனை” என்றமையானும்,
“நினைத்தோறுங் காண்டோறும் பேசுந்தோ றெப்போது
மனைத்தெலும் புண்ணெக வானந்தத் தேன்சொரியும்.”

என்றமையாலும், முடிவிலின்ப னென்பதற்கு ஐயப்பாடின்றாம். அன்றி, அரிஹரப் பிரமாதி, நாரதாதி யிருடிகள், முனிவர்கள், மனிதர், தேவர்கள் முதலிய சர்வர்களுந் தியானித்து வருதலினால் சிவபிரான் பேரின்பமயனே யாவன்; இன்ப மூட்டுவோன் சிவனென்பதே வேதாகமச் சித்தாந்தமாம்; இதற்கு உபமானங் காண்க.

எல்லா வுயிர்கட்கு மின்பங்கொ டுத்தலினால்
எல்லாஞ் சிவனையே யெண்ணலால்—எல்லாஞ்
சிவனுருவே யாமாற் றெவிட்டாத வின்பஞ்
சிவன்பா லிருக்குமெனத் தேர்.—என்றும்,

இன்பத்து ளின்பமாய் நின்னடி யெய்தும் வண்ணந்
துன்பத்துட் டுன்பநீங்கித் துறவிக டுங்கி நிற்பார்
பொன்பது மத்தோன்மாயன் புண்ணிய தவங்க ளேற்பார்
செம்பது மத்தாள் காட்டாய்த் திருப்புலி வனத்து ளானே.

எனவும் வருவனவற்றா லறிக.

ஆ, கெட்டேன் என்றார்; இது தன்வினை கண்டிரங்கலாம். கல்நாருரித்தலாவது,—ஈண்டு வன்மை விளங்கும் தன்மைய தென்க. மயலிற்குத் தாயகம் மாயாதேவி யாதலின் ஈண்டு "வெல்லற்கரிய மயலிலெனை விட்டெங் கொளித்தனையோ" வென்றார். (1)

உ. அறிவிற் கறிவு தாரகமென்
றறிந்தே யறிவோ டறியாமை
நெறியிற் புகுதா தோர்படித்தாய்
நின்ற நிலையுந் தெரியாது
குறியற் றகண்டா தீதமயக்
கோதி லமுதே யெனைக்குறுகிப்
பிரிவற் றிருக்க வேண்டாவோ
பேயேற் கினிநீ பேசாயே.

பொழிப்புரை:—என் தற்போதத்திற்குச் சிவபோதமே தாயகமெனத் தெளிவுற்று, அறிவும் அறியாமையுமாகிய வழியிலே பற்றிச் செல்லுத லொழிந்து ஒரே நிலைமையதாய் நின்ற தன்மையையும் அறிதலின்றி, யாதாமோர் அடையாளமு மின்றி, அகண்டாதீத சொரூபமாகிய மாசிலா வமுதனையாய்! யான் தம்மைப்பற்றி பின்னர் பிரிவுறாதிருக்க வேண்டாமா? ஆகவே, இந்த பேயொத்தோனுக்கு இனியேனும் நீ திருவாய் மலர்ந்தருளுவாயாக.

குறிப்புரை:—சீவர்களறிவின் உண்ணின் றுணர்த்தல் சிவபோதத்திற்கியல்பாதலின் அதைத் தாரக மென்றார் போலும். இறைவற்கு நீங்காத

விலாத் தொண்டன்மை கொண்ட உரிமையானே இனியேனும் தன்னைக் கலந்தே யிருக்குமாறு "பேயேற்கு இனி நீ பேசல்வேண்டும்" என்று வேண்டினரென்க.

திருவருட் சத்தியார் இனி தன்பால் இடைவிடாது பொருந்தி யிருத்தல் வேண்டுமென்பதைக் குறித்து வேண்டுவாராயின ரென்பது தோன்ற நின்றது. (2)

ங. பேசா வனுபூ தியையடியேன்
பெற்றுப் பிழைக்கப் பேரருளால்
தேசோ மயந்தந் தினியொருகால்
சித்தத் திருளுந் தீர்ப்பாயோ
பாசா டவியைக் கடந்தவன்பர்
பற்று மகண்டப் பரப்பான
ஈசா பொதுவில் நடமாடும்
இறைவா குறையா வின்னமுதே.

பொழிப்புரை :—ஆசாபாசமாங் காட்டைக் கடந்த மெய்யன்பர்களது பிடிப்பில் அகப்பட்டுள்ள கண்டதன்மையில்லா விசாலமாயுள்ள பெரிய பொருளாகிய ஈசனே! தில்லைச் சிற்சபையின்கண் திருநடம் புரியும் தலைமைத் தெய்வமே! கொள்வதிற் சிறிதும் குறைவுபடா இனிமை வாய்ந்த தேவாமிர்தமே! மௌன நிலைக்கு ஏதுவாய சிவானுபூதியினை இவ்வேழையேன் பெற்றுய்தற் பொருட்டாக தம் பெருமைவாய்ந்த காருணியத்தினாலே தந் தேஜஸ் தன்மையை யீந்தருளி இன்னுமோர் முறை என் மனத்தகத்துள்ள அஞ்ஞான அந்தகாரத்தையு மகற்றி யருளாயோ!

குறிப்புரை :—"சித்தமல மறிவித்துச் சிவமாக்கி யெனையாண்ட அத்தன்" என மணிவாசகர் அருளியவாறு, இன்னும் ஓர்முறை "சித்தத் திருளுந் தீர்ப்பா" யென்று வேண்டினர்; இதோடு நில்லாது சித்தத் திருள் நீங்குவான் பேசா வநுபூதியாய மௌன ஞான முத்திரையும் பெறுமாறு நின் தேசோன்மய தரிசனமுந் தந்து இரக்ஷிப்பா யென்றனர்.

"ஆசா நிகளந் துகள் ஆயினபின், பேசா வநுபூதி பிறந்தது" என்றார் அருணகிரியார் கந்தரநுபூதியில்.

ஆசா நிகளம்=ஆசையாம் இருப்பு விலங்கு. சங்கிலியெனினும் பொருந்தும். தேசோமயம் - சிற்சொலிதம். (3)

ச. இன்பக் கடலிற் புகுந்திடுவா
னிரவும் பகலுந் தோற்றாமல்

அன்பிற் கரைந்து கரைந்துருகி
யண்ணு வரசே யெனக்கூவிப்
பின்புற் றழுஞ்சே யெனவிழிநீர்
பெருக்கிப் பெருக்கிப் பித்தாகித்
துன்பக் கடல்விட் டகல்வேனே
சொரூபா னந்தச் சுடர்க்கொழுந்தே.

பொழிப்புரை :—நித்ய ஞான சொரூபானந்தத்தோடுங் கூடியருளிய சோதி மயத்துளிரே ! நின்மலானந்தக் கடலின்கண் பொருந்தி வாழுமாறு இராப்பக லறியாமல் ஆசைப்பெருக்கால் மனங் கரைந்துருகி, அதனால் உடல் குழைந்து, "எவைக்கு மூத்தோய் !, தந்தையே !, மகாராஜனே !" எனப் பலவாறாக வருந்தி யழைத்து நின்னையே அடைந்து பின்பற்றி யோலமிடும் பிள்ளையெனக் கதறிக் கண்ணீர் துளும்பிப் பித்தன்போன்று திரிந்துழலும் துன்ப சாகரந் தாண்டிச் சென்றிடுவேனோ !

குறிப்புரை :—பலவாறான துன்பத்திற் கிடந்துழலும் அடியேன், பேரின்பக்கரை கண்டேறி சுகானந்த மடையப் பெறுவேனோ வென்று ஐயமகலத்தேற விசாரிக்கின்றமை இனிது விளங்கின. (4)

ரு. கொழுந்து திகழ்வெண் பிறைச்சடிலக்
கோவே மன்றிற் கூத்தாடற்
கெழுந்த சுடரே யிமயவரை
யென்றாய் கண்ணுக் கினியானே
தொழுந்தெய் வமுநீ குருவுநீ
துணைநீ தந்தை தாயும்நீ
யழுந்தும் பவநீ நன்மையுநீ
யாவி யாக்கை நீதானே.

பொழிப்புரை :—வெண்மதிக் கொழுந்தெனத் தோற்றும் மூன்றாம் பிறையைச் சூடிய கற்றைச்சடைகொண்ட இறைவா ! பொற்சபைக் கண்ணே நடஞ் செய்தற்காக எழுந்தருளிப் பரமானந்த சாகரத்தில் தோன்றிய ஞான திவாகர ! இமகிரி மன்னன் பயந்த என்னற்றாயாம் பார்வதி தேவியின் அருள் விழிக்குப்பிரிய நாதனே ! இந்த அடிமையால் வணங்கப் பெறும் இறையவனும் நீயேயாம் ! சற்குருவும் நீயே ! ஆன்ம சகாயனும் நீயாயேயுள்ளாய் ! பிதாமாதாவும் நீயேயாகும் ; எளியேன் ஆழ்ந்தியுள்ள பிறப்புருவமும் நீயேயாகும் ; அன்றி இன்னலமும் நீயே ; என்னுயிரும் நீயே ; அன்றி என் சரீரமும் நீயேயாம்.

குறிப்புரை :—இப் பாசுரத்தால், 'திருச்சிற்சபை யப்பனே' யென்று கூவி, எனக்குரிமையாளரும், உயிரும், உடலும், குருவும், எல்லாமுமாயுள்ளவ நீயே யாதலால் 'என்முறை கேட்டருள்வா' யென்பது விளங்கலாயின. (5)

சு. தானே யகண்டா கார மயந்
தன்னி லெழுந்து பொதுநடஞ்செய்
வானே மாயப் பிறப்பறுப்பான்
வந்துன் னடிக்கே கரங்கூப்பித்
தேனே யென்னைப் பருகவல்ல
தெள்ளா ரமுதே சிவலோகக்
கோனே யெனுஞ்சொன் னினதுசெவி
கொள்ளா தென்னோ கூறுயே.

பொழிப்புரை :—தானேயே அகண்ட சொரூபமாய்த் தோன்றி சிற்சபைக்கண் திருநடனம் பயில்பவனே! எனது மாயா காரியமாய பிறவி வேரறுத்தற் காரணமாக, அடியேன், தேவரீர் முன்வந்து திருவடியைக் கைகூப்பி வணங்கி, தேனே! எளியனை யாட்கொளவல்ல தெள்ளிதான அரிய தேவாமிர்தமே! சிவலோகத்தின் இறைவா! என்றே யான் ஓலமிடும் வார்த்தையினைத் தமது திருச் செவியிலே வாங்காதிருத்தல் எக்காரணமோ சொல்வாய்.

குறிப்புரை :—ஸ்ரீ தில்லைச் சிற்சபா நாதனைக் குறித்து பலவாறாக ஓலமிட்டழைத்துக் கதறியும் திருச்செவிக் கொள்ளாதென்னையோ வென்றுரையைக் கேழ்க்கின்றார் போலும். (6)

எ. கூறு நின்ற விடர்க்கவலைக்
குடும்பக் கூத்துட் டுளைந்துதடு
மாறு நின்ற பாவியைநீ
வாவென் றழைத்தா லாகாதோ
நீறார் மேனி முக்கணுடை
நிமலா வடியார் நினைவினிடை
யாறாய்ப் பெருகும் பெருங்கருணை
யரசே யென்னை யாள்வானே.

பொழிப்புரை:—திரு நீறணிந்தருளிய திவ்ய திருவடிவையும், திரிநேத்திரங்களையும் கொண்டருளிய நின்மல சொரூபனே! நின்மெய்யடியா

ரது நெஞ்சினிடத்து உதித்து ஆறுபோல் பெருக்கெடுத்து வழியச்செய் காருணியமுள்ள அரசனே! எளியனை யாட்கொண்டருள் பவனே! பல வாறுள்ள பிறவிநோய்க் கவலையை யுண்டுபண்ணும் சம்சார நாடக நடு நின்று திண்டாடும் இப்பாவியேனையும் கருணையினால் வாவென்று எனைச் சேர்த்துக் கொள்ளின் அது குற்றமாமோ.

குறிப்புரை:—எளியேன் இப்பிறவி யெடுத்தறிவு துலங்கியது முதலாக பலவாய்க் குடும்ப துன்பத்திலாழ்ந்தும் அவையிற்றினைப் பொருட்படுத்தாது மிக்க அல்லற்பட்டும் தம்மையே பொருட்படுத்திப் பாராட்டி இராப் பகலறியாது நின் தாட்டுணை பிடித்தலறியும், வாவென்றழைத்து சேர்த்துக் கொள்ளினாகாதோ? என்பது கருத்தாம். (7)

அ. வானே முதலாம் பெரும்பூதம்
வகுத்துப் புரந்து மாற்றவல்ல
கோனே யென்னைப் புரக்குநெறி
குறித்தா யிலையே கொடியேனைத்
தானே படைத்திங் கென்னபலன்
றன்னைப் படைத்தா யுன்கருத்தை
நானே தென்றிங் கறியேனே
நம்பி னேன்கண் டருள்வாயே.

பொழிப்புரை:—ஆகாய முதலாகவுள்ள பஞ்ச பெரும்பூதங்களையும் தோற்றுவித்துக் காத்துப் பின்னர் மறைக்கவல்ல இறைவனே! எளியனைக் காத்தருளுமாறு திருவுளத் தெண்ணினாயில்லையே! இக் கொடுமையானை மட்டும் சிருட்டிசெய்து இங்கே எப்பயன் பெற்றனையோ வறியேன்; ஆகவே தேவரீர்தம் திருவுளக் கருத்தினை இவ் வெளியவன் என்னென்று இங்கே விளங்கிலேன் கண்டாய்; ஆனாலும், எளியனை எவ்விதத்தும் காத்தருள்வா யென்று நின்னையே நம்பியுள்ளேன்; இக் கருத்தினை நீ நின் பேரறிவாலுணர்ந்து கடைக்கணிப்பாயாக.

குறிப்புரை:—இறைவனே! நீயோ ஐவகைப் பூதாதி பௌதிகங்களெல்லாம் படைத்து, காத்து, அழிக்கவும் வல்லமையுள்ள பரம புருஷன்; அவ்வாறாக, எளியனைக் காத்தருளும் வழி செய்தாயில்லை; ஆகவே என்னைப் படைத்தென்ன பலன்? நின் உள்ளமறிய வன்மையில்லேன்; ஆயினும் தம்மை மிகவும் நம்பியிருக்கின்றேன்; எல்லா முணர்ந்து என்னை நல்வழிப் படுத்துவாயாக.

"மாயப் பிறப்பறுக்கு மன்னனடி போற்றி"

" ஆராதவின்ப மருளுமலை போற்றி " என்று இங்ஙன மணிவாசகர் அருளிய பேருரை கண்ட இவ்வாசிரியர், தம் பிறப்பிறப் பொழிந்து, திருவருட் பயனும் பேரின்பமருள வேண்டினரென்பது விகசிதமாம். புரத்தல் - காத்தல். மாற்றல் - அழித்தருளல். (8)

கூ. கண்டார் கண்ட காட்சியுநீ
காணார் காணுக் கள்வனுநீ
பண்டா ருயிர்நீ யாக்கையுநீ
பலவாஞ் சமயப் பகுதியுநீ
எண்டோண் முக்கட் செம்மேனி
யெந்தாய் நினக்கே யெவ்வாறு
தொண்டாய்ப் பணிவ ரவர்பணிநீ
கூட்டிக் கொள்வ தெவ்வாறே.



பொழிப்புரை :—உண்மைப் பொருளினை யுள்ளபடியாக வுணர்ந்தருளிய ஞானவான்கள் கண்டுகொண்ட பரமப் பிரசாதமான திருவருட் செல்வ தரிசனமும் நீயேயாம். இவ்வாறாகக் கண்டறியாப் பொய்யினர்கள் காணப் பெறாத மறைபொருளும் நீயேயாம் ; முன்னைப் போழ்தில் ஆன்மாவாய் வந்து பொருந்தியுள்ள பிராணனும் நீயே யாம் ; அன்றியப் பிராணாதார உடலும் நீயேயாகும் ; மற்றும் அவ் வான்மாக்கள் பின்பற்றிச் செல்லற்குரிய பலபாகமாகிய மார்க்கங்களும் நீயேயாம் ; ஆகையினாலே, எட்டு புஜங்களென்ன, திருநேத்திரங்களென்ன, சிவந்த திருவுருவமென்ன, இவைகளையும் பொருந்தி யருளிய என்னை யீன்றாயே ! நினக்கு அன்பர்கள் எவ்வகையால் தொண்டிழைத்து வருவர் ? அன்றியவர்கள் புரியும் பணியினையும் அங்கீகரிப்பதும் எவ்வாறோ ?

குறிப்புரை :—எல்லாமாய் அல்லதுமா யிருந்தருளும் நின் பேரருளாற்றல் கண்டு தொண்டு செய்யாத புல்லனேனாதலால், நின் கருணைக்கின்னும் காத்துளேன், காண்பாயே யென்பது கருத்து. (9)

ய. கூட்டி யெனதென் றிடுஞ்சுமையைச்
சுமத்தி யெனையுஞ் சுமையாளாக்
கூட்டிப் பிடித்து வினைவழியே
கூத்தாட் டினையே நினதருளால்
வீட்டைக் கருது மப்போது
வெளியா முலக வியப்பனைத்தும்

ஏட்டுக் கடங்காச் சொப்பனம்போ
லெந்தா யிருந்த தென்சொல்வேன்.

பொழிப்புரை :—பெற்றுக்கொண்டு என்னுடையதல்லாத இந்தச் சரீரமாகிய சுமையை யெனதாகவே பாவித்து அதனால் மமதாங்கார முற்று சுமக்குமா றுக்குவித்து, என்னைச் சுமையெடுப்பாளாயு மாக்கிக்கொண்டு வலிய வினையிரண்டைக் கொண்டு என்னைப் பதுமையாக்கி கூத்தாட்டி வைத்தாயே! நின் பேரருளாலே, முக்திப் பேற்றினைக் கருதிய முற்போதிலே செவ்வனே விளங்காநின்ற லோக நடபடிக்கைகளான சகலவிஷயச் செயல்களும், பனை மடலிலெழுதுவதற்கு இயலாத கனவெனத் தோன்ற நின்றதை, எனைப் பெற்றோயே! யான் எத்தன்மைத் தெனக் கூறுவேன்!

குறிப்புரை:—இவ்வுலகிடையே யென்னைக் கேவலம் சுமையாளாக்கிப் பின் பதுமையென வென்னைப் பாசமாம் வினைக்கயிர் கொண்டாட்டி யலக்கழிவு செய்தமை போதும் என்பது தோன்ற நின்றது. (10)

---

## வம்பனேன்

௧. வம்பனேன் கள்ளங் கண்டு
மன்னருள் வெள்ள ராய
உம்பர்பா லேவல் செய்யென்
றுணர்த்தினை யோகோ வானோர்
தம்பிரா னேநீ செய்த
தயவுக்குங் கைம்மா றுண்டோ
எம்பிரா னுய்ந்தே னுய்ந்தே
னினியொன்றுங் குறைவி லேனே.

பொழிப்புரை :—இந்த வம்புக்காரனாய எனது வஞ்ச நெஞ்சங் கண்டிருந்தும், நிலைபெற்றதாகிய திருவருட் கடலனையராம் தேவர்களிடத்தே பணி புரிவாயென்று தெரிவித்தனை, ஓஹோ! தேவாதியர்க்கும் தேவனே! தேவரீர் புரிந்தருளிய திருவருட் பணியாம் பேருதவிக்கு இவ்வடிமையால் செய்தற்கான நன்றியாம் பிரதியுபகாரமு முளதேயோ! எனது தலைவா! இன்றே பிழைத்தனன்! பிழைத்தனன்!! இதன்மேல் குறைவேது மெய்தேன்!

குறிப்புரை :—

கூவிளமாலையுங் கொன்றையுந் தும்பையுங் கூரருகு
மாவலொடு மெடுத்தர்ச்சனை செய்தங் ககங்குழைந்து
நாவினிற் ருேத்திரஞ் சொல்லி நலந்தெரி ஞானிகளுக்
கேவல் செய்தாலன்றி முத்திகொடான் கச்சியேகம்பனே.

என்றிவ்வாருகிய மெய்ந்நூல் முழக்கியதற் கிணங்க மௌனசிரியராய் வந்து "மன் அருள் வெள்ளராய உம்பர்பால் ஏவல்செய் என்றுணர்த்தினை" என்ருர் ஆசிரியர்; இதனுல் 'மெய்ஞ்ஞானிக்கு பணிசெய்யக் கடவ' தென்றமை விளக்கினர் போலும்; எவ்வாறு எனில், ஈண்டு உம்பர்பால் என்றதற்கு தேவர் என்று பொருள்கோடல் மரபன்று; ஏன்? ஞானியே கடவுளாகும் என்றமைகொண்டும், அருள்வெள்ளராய உம்பர் என்றது உலகிடையுள்ள ஞானியானவரையே யென்றும், ஆசிரியர் உள்ளது இம்மண்ணுலகே யானதாலும், தேவர்க்குத் திருவருள் கிடையாமையாலும் ஞானியையே உம்பர்யென் றகங்குறித்துக் கூறினராதல் நன்கு புலனுதல் கொண்டுணரற்பாற்று. வம்பனேன் என்று தன்னை இழிவுறக் கூறினரேனும், மீண்டுமீண்டும் தம்பரமாசிரியரை வசைகூறித் தூண்டி வினுதல் செய்தலையுங் குறித்து இங்ஙனம் இழித்தனரென்க. (1)

உ. குறைவிலா நிறைவாய் ஞானக்
கோதிலா னந்த வெள்ளத்
துறையிலே படிந்து மூழ்கித்
துளைந்து நான்ருேன்ரு வாறுள்
ளுறையிலே யுணர்த்தி மோன
வொண்சுடர் வைவா டந்த
விறைவனே யுனைப் பிரிந்திங்
கிருக்கிலே னிருக்கி லேனே.

பொழிப்புரை :—யாதாமோர் சிறிய குறைவுமில்லாத பரிபூரணமாகி, மாசிலாத மெய்ஞ்ஞானனந்தமாம் பெருக்கினில் மூழ்கி யழுந்தி, நான் என்பது வெளியாகா வண்ணம் என் உள்ளே அந்தர்ப்பூதமாய் நின்று அறிவித்து, ஒளிவீசும் ஞானப்பிரகாசமாய சூரிய மௌன நிலைகொண்ட வாளாயுதத்தை யீந்தருளின யென்னரசே! இனி தம்மைவிட்டு துன்பத்திற் காஸ்பதமாகியுள்ள இம்மண்ணகத்து வாழ்கிலேன்! வாழ்கிலேன்!!

குறைவிலா நிறைவு - என்றும் பரிபூரணமான நிலை.

குறிப்புரை :—மனக்கிலேச மொழித்திட்டு ஒப்பற்ற மோனமெனும் ஞானவொளிவாளினைக் கொடுத்தருளினமைக்கு 'இனிப்பிரியேன்' என்று இரட்டுறக் கூறினர். (2)

௩. இருநில மாதி நாத
மீறதா மிவை கடந்த
பெருநில மாய தூய
பேரொளிப் பிழம்பாய் நின்றுங்
கருதரு மகண்டா னந்தக்
கடவுணின் காட்சி காண
வருகவென் றழைக்கா லன்றி
வாழ்வுண்டோ வஞ்ச னேற்கே.

பொழிப்புரை :—இப்பெரிய பிருதிவியாந் தத்துவ முதற்கொண்டு நாததத்துவம் வரையுள்ள வெல்லாங் கடந்தேயுள்ள மேலாம் நிலமாயதின் கண் மாசற்ற மகாசுடர்மயமாய்ப் பிரகாசித்தும், எண்ணுதற் கருமையான அகண்டமாம் ஆனந்த சொரூபமாகிய இறைவனே! ஒப்பற்றொளிரும் தம் பேரருட் காட்சி கண்டுய்வான் வேண்டி அடிமையை வாவென்று அழைப்பி னன்றி இக்கொடுமையாளனாகிய எனக்கும் பேரின்பப் பெருவாழ் வென்பது முளவாமோ!

குறிப்புரை :—தேவரீர் பூதாதி தத்துவங்களனைத்தையுங் கடந்து ஞானச்சுடர் மயமாம் பேரொளிப் பிழம்பாம் சோதித் தன்மையைத் தந்தருளினும், தம் திருவாயான் 'வா' வென்றோர் சொல் வழங்கின் அதற்குப் பதினாயிரந் தண்டம் பணிகுவேன்; என்? அப்போதுதான் இன்ப வாழ் வெய்தலாம் என்னுங் கருத்தென்க. (3)

௪. வஞ்சனை யழுக்கா றாதி
வைத்திடும் பாண்ட மான
நெஞ்சனை வலிதின் மேன்மேல்
நெக்குநெக் குருகப் பண்ணி
அஞ்சலி செய்யுங் கையு
மருவிநீர் விழியு மாகத்
தஞ்சமென் றிரங்கிக் காக்கத்
தற்பரா பரமு னக்கே.

பொழிப்புரை :—ஏ! தற்பர சிவமே! கபடமென்ன, பொறாமை முதலாய பல தீய குணங்களென்ன இவைகட்கு இடமாயுள்ள நெஞ்சினையுடைய எளியனை வலியவந்து மேன்மேலும் நெக்கு நெக்காயுருகுமாறு செய்து கும்பிடும்படியான கையும், அருவியாகவும் நீரொழுகி ஆறுபோற் பெருகுங் கண்களாகச் செய்தும், என்னைத் தஞ்சமாக்கித் தாமே சர்வாதாரமாய்க் கொண்

டிரக்கமுற்று காத்தருள நின் பேரருளுக்கே பரமெனக் கொண்டருள் புரிவாயாக.

குறிப்புரை :—என்பாலுள்ள தீய குணங்களை விலக்கி, மனங்கரைந் துருகுமாறு செய்து காப்பாற்றி யருளுவதுன் பரமாகும் என்பது இப் பாசுர முடிபாம். தற்பரன் - தானாகவே பரமாயுள்ளவன். (4)

ரு. உனக்குநா னடித்தொண் டாகி
யுன்னடிக் கன்பு செய்ய
எனக்குநீ தோற்றி யஞ்சே
லென்னுநா ளெந்த நாளோ
மனக்கிலே சங்க டீர்ந்த
மாதவர்க் கிரண்டற் றோங்குந்
தனக்குநே ரில்லா வொன்றே
சச்சிதா னந்த வாழ்வே.

பொழிப்புரை :—மனத்தகத் தூறும் மாசென்பவை யனைத்து மொழித் தருளிய மகா தவசிரேட்டர்கட்குத் துவிதமாய்க் காணப்பெறு துள்ளதும், தனக்குவமை யில்லாததுமான தனிப்பரம் பொருளே! உண்மையறி வானந்தமாய பெருவாழ்வுடையோய்! தேவரீர்க்கு, நின் அடிமையாகிய எளியேன் நின் திருவடித் தொண்டனாய் நின் பொன்னடிக்கே ஆசையோ டும் நேசிக்குமாறு எளியேற்கு தாம் பகிர்முகத் தரிசனந் தந்து, பயப் படாதே யென்று அபயஞ் செய்தருளும் நாளெந்த நாளோ!

குறிப்புரை :—தேவரீர்க்கு யான் பழமையான தொண்டுரிமையனாய், தம் திருவடிக் கன்பொடும் திருத்தொண்டு செய்துய்ய என்முன் கருணை யோடும் பகிர்முகப்பட்டு வந்து தஞ்சமென்று அடைந்த என்னை அஞ்ச லென்று அபயஸ்தம் செய்து ஆசி கூறவேண்டு மென்பதே கருத்தென்க.

"மோகமுறு பெத்தத்துண் மூடர்க் கிரண்டாகும்
ஏகமே முத்தர்க் கீசன்."—என்ற பெரியார் கொள்கையையே ஈண்டு ஆசிரியா 'மாதவர்க் கிரண்டற்றோங்கும் தனக்கு' என்றருளினர் போலும். (5)

சா. வாழ்வென வயங்கி யென்னை
வசஞ்செய்து மருட்டும் பாழ்த்த
ஊழ்வினைப் பகுதி கெட்டிங்
குன்னையுங் கிட்டு வேனோ

தாழ்வெனுஞ் சமய நீங்கித்
தமையுணர்ந் தோர்கட் கெல்லாஞ்
சூழ்வெளிப் பொருளே முக்கட்
சோதியே யமர ரேறே.

பொழிப்புரை :—(கல்வி கேள்விகளிற் சிறந்த சான்றோர்களாலே) வெறுப்பெய்தக்கூடிய மதப்பற்றுக் கோடகன்று தம்மை யறிந்த சத்துவ குணப் பிரவர்த்தகர்க ளனைவோர்க்கும் எவ்வகையானும் ஆய்ந்தறியத்தக்க பிரத்தியக்ஷ காட்சி யநுபவ வஸ்துவே! திரிநேத்திர தாரியே! தேவ சிங்கமே! நல்வாழ்வென்று எனக்கறிவித்துத் தன்வசப்படுத்தி மயக்கி பிரமைகொள்ளும் பாழான ஊழ்வினையாம் பாகுபாடு கெட்டு, இந்தப் பிறவியிலேயே தம் திருவடிக்கண் சேர்ந்துய்வேனே!

குறிப்புரை :—ஆசிரியர், இந்நூலின் முதற்காப் புரிமைப் பாவாம் 'அங்கிங் கெனாதபடி' யென்னுஞ் செய்யுளிடையே, "சமய கோடிக ளெலாந் தந்தெய்வ மெந்தெய்வமென்று எங்குந் தொடர்ந் தெதிர் வழக்கிடவும்" என்று அருளியவாறு எம்மதத்தினரும் வாதிக்கத் தக்கதான தாழ்வையே ஈண்டும் 'தாழ்வாஞ் சமய நீங்கி' யென்று கூறினரே யன்றி மற்றன்று. அன்றியும், இறைவன் சமயாதீதப்பட்டவரானதும் ஓர் காரணமாகும். முக்கட்சோதி - மூன்று கண்ணும் சோதியாதல் கொண்டே இவ்வாசிரியர் அடுத்தடுத்து முக்கட்சோதி யெனலாயின ரென்க. (6)

எ. ஏறுவாம் பரியா வாடை
யிருங்கலை யுரியா வென்று
நாறுநற் சாந்த நீறு
நஞ்சமே யமுதாக் கொண்ட
கூறருங் குணத்தோ யுன்றன்
குரை கழல் குறுகி னல்லால்
ஆறுமோ தாப சோபம்
அகலுமோ வல்ல ருனே.

பொழிப்புரை :—இடபம் என்ன, பாய்ந்தேகும் குதிரை யென்ன இவை வாகனமாகவும், பெரிய மான்றோலே ஆடையாகவும், வெண்ணீறு புண்டரமாகவும், என்றுங் குன்றா மணங்கமழும் சிறந்த சந்தனமாகவும், விஷத்தினை அமிர்தம்போலும் விரும்பிக் கொண்டருளிய சொல்லொணா குணவானே! தமது ஒலிசெய் வீரக்கழலணிந்த குஞ்சித பாதத்தை அடையப் பெற்றாலன்றி எனக்கு மூவகைத் தாபங்களாலேயும் யேற்பட்டுள்ள விடாயானது தணியுமோ! அன்றி துன்பமும் நீங்குமோ!

குறிப்புரை :—இறைவர் இணையடி சார்ந்தாலன்றி தாபத்திரயங்களும் பலவித மயக்கங்களும் துன்பங்களு மிவையெலாம் நீங்காதென்றனர். இவற்றில் தாபத்திரயம் இன்னவை யென்பது விளக்கல் வேண்டும். இத்தாபத்திரயம் மூவகையாம்; அதாவது :—ஆதியாத்மீகம், ஆதிபௌதீகம், ஆதிதெய்வீகம் என்பனவாம்.

ஆதி யாத்மீகமாவது.—இச்சரீரத்தை யதிட்டித்து வராநின்ற க்ஷயம், சுரம், குன்மம், அதிசாரம், வெப்பம், சூலை முதலான ரோகங்களால் பீடிக்கப்பட்டுத் துன்புறுதலாம். இவையன்றி, மனிதர், மிருகம், பேய், திருடர், இராக்கதர், முதலானவர்களால் உண்டாகிற துன்பங்களுமாம்.

ஆதி பௌதீகமாவது :—தண்ணீர், வெயில், மழை, காற்று, இடி, மின்னல், பனி, கோவில், கோபுரங்கள், மண்டபம், சுவர் இவை முதலானவைகளால் ஏற்படக்கூடிய துக்கங்களாம்.

ஆதி தெய்வீகமாவது.—கர்ப்பந் தரித்தல், உண்டாதல், வளர்தல், நரை, திரை, அஞ்ஞானம், துர்மரணம், நாசம், ஜனன முதலாயுள்ள துக்கங்களாம்.

ஆகிய இத்தாபத்திரய துக்கங்கள் சரீர திரயத்துக்கே யல்லாது சாட்சியாகிய ஆத்மாவுக் கில்லையாகும்; இவ்வாறான தாபத்திரய சொரூபத்தை, அருளே திருமேனியாக் கொண்டுள்ள சதாச்சாரியர் முன்னிலையாக விசாரித்தறிந்து, இத் தாபத்திரயங்கள் தேகேந்திரியாதிகளுக்கே யல்லாது சாட்சியாகிய எனக்கில்லையென்று சந்தேக விபரீதமற எவன் அறிகின்றானோ அவனே சீவன் முத்தனென்று சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணாகமங்களிற் சொல்லப்படுகின்றன. விரிக்கிற் பெருகுமென இம்மட்டோடு நிறுத்தி விடலாயிற் றென்க. (7)

அ. தானமுந் தவமும் யோகத்
  தன்மையு முணரா வென்பால்
ஞானமுந் தெவிட்டா வின்ப
  நன்மையு நல்கு வாயோ
பானலங் கவர்ந்த தீஞ்சொற்
  பச்சிளங் கிள்ளை காணா
வானவ ரிறைஞ்ச மன்றுள்
  வயங்கிய நடத்தி னானே.

பொழிப்புரை:—பாலின் சுவையினைக் கவர்ந்துண்டு மாதுர்யதீஞ் சொற் பேசாநின்ற பசுமைவாய்ந்த இளங்கிளிகளை யொத்த உமாதேவியார்

பார்த்தானந்திக்கவும், தேவராதியர் துதிசெய்யவும் ஞானப் பொற்சபைக் கண் (பஞ்சகிருத்திய சுத்த) நிர்த்தத்துவம் புரிகின்றவனே! கொடை கொடுத்தலையும், அரிய தவத்தினையும் தெரிதலிலா என்மாட்டு மெய்ஞ் ஞானமும், தெவிட்டலிலாத பேரின்பமும் ஆகிய இந் நலங்களையும் அளித்த ருள்வாயோ!

குறிப்புரை :—தானத்தாற் காருண்யமும், தவத்தால் முத்திப்பேறும், யோகத்தால் நின்மல சித்தமும் சித்தியாதலுமாகிய இவை தெரிதலில்லா தேனுக்கு ஞானானந்த நன்னிலை நண்ணுதல் அரிதென்பாராயினர். உமா தேவியார்க்குப் பசுமையாகிய கிளியினை உவமித்தது, தேவியார் பசுமை யாந் திருமேனிகொண் டருளினமையா னென்க. பஞ்சகிர்த்திய சுத்த நிர்த்தத்துவம் புரியும் பான்மையினைப் பார்வதியாரோடும் தேவர்களும் கண்டு துதி செய்தனரென்பதால் அந்நிருத்த தரிசனம் கிடைத்தல் பெரிய தோர் பேறுமாதலி னென்க. அடுத்தடுத்து பொற்சபை யப்பனைக் கோறு தல் தலைமைத் தெய்வ நோக்கி யென்க.

"பச்சைப் பசுங்கொடியை மருவு பெருந்தருவே" என்ற பெரியார் கூறியதொக்க இவரும் "பச்சிளங்கிள்ளை காண" வென்றனர்போலும். (8)

௯. நடத்தியிவ் வுலகை யெல்லாம்
நாதநீ நிறைந்த தன்மை
திடத்துட னறிந்தா னந்தத்
தெள்ளமு தருந்திடாதே
விடத்திர ளனைய காம
வேட்கையி லழுந்தி மாயைச்
சடத்தினை மெய்யென் றெண்ணித்
தளரவோ தனிய னேனே.

பொழிப்புரை :—ஏ இறைவா! இவ்வுலகங்க ளனைத்தையும் இயக்கஞ் செய்து அவை யனைத்துள்ளும் நீ பொருந்தியுள்ள விசேஷத்தை நன்குறத் தெரிந்து பேரானந்தத் தெளிவாம் பேரமுதருந்தாது, விஷமெனுந் திர ளினை யொத்துள்ள காமிய விச்சையிலே மூழ்கி மாயா மயமாயுள்ள இப் பொய்யுடலை நிச்சயமாக்கொண்டு யேகாங்கியாகிய எளியேன் மனக் கிலேச மடையவோ!

குறிப்புரை :—இந்த உலக ஆன்மகோடிகளை யெல்லாம் நின் திருவருட் சத்தியைக்கொண்டு பரிபாலித்துவந்து, நீயும் அவற்றோடும் பேதமின்றி அபேதமாய், (அதாவது அத்துவித நிலையாய்) நின் றுள்ளமை யான் தெரியா

வாறு, பேரானந்தப் பேரமு தருந்தலின்றி, விஷத்தொகுதி யொத்த காமியத்தாழ்ந்தி மாயமாம் உடற்சடத்தை சத்தியமாக்கொண்டு இவ்வனுதை தளர்தலு முறையோ! வென்பது முடிபாம்.

வேட்கையி லழுந்தி - காமப்பெருக்கி லாழ்ந்து. (9)

ல. தனிவளர் பொருளே மாறுத்
தண்ணருங் கருணை பூத்த
இனிய கற்பகமே முக்க
ணெந்தையே நினைக்கன் பின்றி
நனிபெருங் குடிலங் காட்டு
நயனவேற் கரிய கூந்தல்
வனிதையர் மயக்கி லாழ்ந்து
வருந்தவோ வம்பனேனே.

பொழிப்புரை :—தற்பர வத்துவா யோங்கிய தனிப்பரம் பொருளே! மாறுபாடில்லாக் குளிர்ச்சி வாய்ந்த அருமையாம் கருணை மலர்கள் புஷ்பித்துள்ள இனிய கற்பக விருக்ஷமே! மூன்று நேத்திரதாரியாம் பரம பிதாவே! வம்பிற் காஸ்பதனுய எளியன் நின்பா லன்பிலாது மிக்க பெரிய தான கொடுஞ்செயல் செய்யா நின்ற, வேலொத்த விழிகளொன்ன கருங் கூந்தலாம் உரோமமென்ன இவையிற்றினையுடைய மாதரார் மையலிற் சிக்கி யழுந்தி மனவாட்ட முறவோ!

குறிப்புரை :—தான்றோன்றி யானதால், தனிவளர்பொருளே யென்றனர். கைம்மாறுவேண்டா காருணியத்தால் வேண்டுவார் வேண்டுவன வளித்தருளல் நோக்கி, "மாறுத்தண்ணருங் கருணைபூத்த இனிய கற்பகமே" யென்றார்.

மிக்கதான வஞ்சத்தையே கொண்ட நெஞ்சத்தினராதலானும், வேலாயுத மொத்த கொடுமையைப் புரிதலானும், நனிபெருங் குடிலங்காட்டும் நயனவேல் வனிதையர் என்றார். நயனவேல் என்பதை, வேல் நயனம் என்று அன்வயப்படுத்தவும். "கூர்த்த நயனக் கொள்ளையிற் பிழைத்தும்" என்றார் வாதவூராளியார்.

நயனம் - கண். குடிலம் - வஞ்சம்.

## சிவன்செயல்

௧. சிவன்செய லாலே யாதும்
வருமெனத் தேறே னூளும்
அவந்தரு நினைவை யெல்லா
மகற்றிலே னுசை வெள்ளங்
கவர்ந்துகொண் டிழுப்ப வந்தக்
கட்டிலே யகப்பட் டையோ
பவந்தனை யீட்டி யீட்டிப்
பதைக்கின்றேன் பாவி யேனே.

**பொழிப்புரை** :—எளியேற்கு வந்தடையா நின்ற இன்ப துன்பாதிகளனைத்தும் ஸ்ரீ சிவபெருமான் றிருவருளாலேயே வந்துறும் என்பதைச் சிறிதேனு முணரமாட்டேன்; தினமானமும் நெஞ்சகமாக வருந்திய வெண்ணங்கள் யாவையும் நீக்கமாட்டேன்; ஆகவே, என்னை ஆசாபாசமாம் பெருக்கானது வசப்படுத்திக் கொண்டிழுப்ப, அந்த பந்தத்தில் கட்டுண்டு ஐயோ! பிறப்பிறப்பிலகப்பட்டு அகப்பட்டு மகா பாவியாகிய யான் மனம் பதைத்துருகு கின்றேன்.

குறிப்புரை :—நாம் அநுபூதி செய்துவரும் சுகதுக்காதிகளை மனப் பூர்வமாக "இவையெலாம் எம்மான்றன் ஆணையாலேயே வருவதாக" க்களிப்பும் துக்கமு மிலாது சமநிலையாக் கோடல் வேண்டுமென்பதே கருத்தாம்;

இதனால், இன்ப துன்பாதிய வனைத்தும் சரீரத்தைச் சார்ந்ததே யன்றி ஆன்மாவுக் கில்லையென்று வெறுத் தொதுக்கவே அறிவுளோர் கடனும். அங்ஙனம் சமாதானஞ் செய்யின் அதனாலுறும் பந்தம் நம்மைத் தொந்தியா தாதலினாலென்க. இதுகொண்டே பட்டினத்தடிகளும் "என் செயலாவது யாதொன்று மில்லை யினித் தெய்வமே, உன் செயலே செயலென் றுணரப் பெற்றேன்" என்றருளினர். (1)

௨. பாவி யேனினியென் செய்கேன்
பரமனே பணிந்துன் பாதஞ்
சேவியேன் விழிநீர் மல்கச்
சிவசிவ வென்று தேம்பி
ஆவியே நிறைய வந்த
வமுதமே யென்னே னந்தோ

சாவிபோஞ் சமயத் தாழ்ந்து
சகத்திடைத் தவிக்கின் றேனே.

பொழிப்புரை :—மகா பாபாத்மாவா யுள்ள யான் இனி யாது செய்வேன்! ஏ பரமேஸ்வரா? நினது திருவடித் தாமரைகளை வணக்கஞ் செய்து தரிசனமுஞ் செய்யேன்! அன்றியும், கண்களிலே தண்ணீர் பெருகுமாறு சிவசிவவென் றுச்சரித்துக்கொண்டு மனவாட்டமுற்று, என் உயிரே! பரிபூரணமாய் வந்துற்ற தேவாமிர்தமே! என்று வாழ்த்தேன்! அந்தோ! வீணுகச் சமயமென்னும் பள்ளத்து ளாழ்ந்து இவ்வுலகத்துப் பரதவிப்புறுகின்றேன்.

குறிப்புரை :—சமயாதீதப் பரம்பொருளார் தம் திருவருள் கைவரப் பார்க்கும் நோக்கங்கொண்டுள்ள இவர், சமயக் கோட்பாட்டினைக் கருதி, "சாவிபோஞ் சமயத்தாழ்ந்து தவிக்கின்றேன்" என்றனர்.

நினக்கான நெறி நில்லா தெனக்கான நெறியா மனம்போன நெறி போகுமியானும் நின்னருள் காணுது பரதவிக்கின்றேன் என்பது முடிவுரையாம். (2)

௩. இடைந் திடைந் தேங்கி மெய்புளகிப்ப
வெழுந்தெழுந் தைய நின்சரண
மடைந்தன னினிநீ கைவிடே லுனக்கே
யபயமென் றஞ்சலி செய்துள்
ளுடைந்துடைந் தெழுது சித்திரப்பாவை
யொத்துநா னசைவற நிற்பத்
தொடர்ந்துநீ யெனையாட் கொள்ளுநா ளென்றோ
சோதியே யாதிநா யகனே.

பொழிப்புரை :—செஞ்சுடர் சொரூபனுகிய மூலாதார முதல்வனே; (நின்னைச் சாராது) பின்னடைந்து பின்னடைந்து துக்கமுற்று, உடல்புளகாங்கிதங்கொள்ள பலமுறையும் எழுந்து ஐயனே! நினது திருவடிப் போதைப் பற்றினேன்; இனி நீ எனைக் கைவிட்டு விடாதருள்வாய்; நினக்கே அடைக்கலமாகச் சிரமீது கரங்கூப்பி உள்ளமுருகி, எழுதாநின்ற சித்திராகாரம் போன்று யான் அசைவற்று நிற்க, நீ அடியேனைச் சார்ந்து ஆண்டருள்புரியும் காலம் எப்போதோ!

குறிப்புரை :—அருள் மிகுந்த அப்பனே! மிகவும் வருந்தி நின் திருவடிகளுக்கு நமஸ்கரித்தேன். அன்றி உனக்கே அடைக்கலமும் புகுந்தேன்! இனி நீ என்னைக் கைவிடற்க; யான் காண வொழுக்கமாய்த் தனி நிற்

பன்; ஆதலால் நீ என்னை ஆண்டருள்வது எந்நாளோ வென்பது முடிவுரை. (3)

ச. ஆதியாய் நடுவா யந்தமாய்ப் பந்த
மியாவுமற் றகம்புற நிறைந்த
சோதியாய்ச் சுகமா யிருந்தவெம் பெருமான்
றொண்டனேன் சுகத்திலே யிருக்கப்
போதியா வண்ணங் கைவிடன் முறையோ
புன்மையே னென்செய்கேன் மனமோ
வாதியா நின்ற தன்றியும் புலன்சேர்
வாயிலோ தீயினுங் கொடிதே.

பொழிப்புரை:—ஆதிமத்யாந்த ரகித பரம்பொருளாய், பிரதிபந்தமில்லாது உள்ளும் புறமும் வியாபித்து சிற்சொலிதமாயும், பரம சுகாகாரமாயும் விளங்கியுள்ள வெம்மான்றன் அடித்தொண் டுரிமையனுய யான் பரசுகவாழ்வி லிருப்ப, எனக்கு (ஞான மார்க்கத்தை) உபதேசியாது விட்டுவிடுதலும் நியாயமோ! (அப்படி விட்டிடினும்) இவ்வெளியேன் யாது செயக்கடவேன்! என்னெஞ்சமோ, மிகவும் வாதைப்படுகின்றதே! அல்லாமலும் ஐம்புலாதிகளோ, அக்னியினுங் கொடுமை செய்கின்றனவே!

குறிப்புரை:—எம்மான்றன் திருவடித் தொண்டனேனையும் மேலான நினது சுகவாழ் வெய்தற்கான ஞான மார்க்கங்களை உபதேசியாது கைவிடல் தமக்கு தருமமாகுமோ வென்பது சாரமா மென்க.

"ஐம்புலன் வென்றுலன்றி யரன்பதிக் கேகாரென்றே
நம்புறு மறை முழங்கும்"—என்றார் மேலோர். (4)

ரு. வாயிலோ ரைந்திற் புலனெனும் வேடர்
வந்தெனை யீர்த்துவெங் காமத்
தீயிலே வெதுப்பி யுயிரொடுந் தின்னச்
சிந்தைநைந் துருகிமெய்ம் மறந்து
தாயிலாச் சேய்போ லலைந்தலைப் பட்டேன்
றாயினுங் கருணையா மன்றுள்
நாயகமாகி யொளிவிடு மணியே
நாதனே ஞானவா ரிதியே.

பொழிப்புரை:—பெற்ற அன்னையினும் சாலக் கருணைபூத்து சிற்சபையாம் கனகசபையின் கண்ணே இறையவனுய்ப் பிரகாசிக்கின்ற ஞானனந்த

நவமணியே! தலைவனே! மெய்ஞ்ஞானக் கடலனையாய்! ஐவகைப் பொறி வழியாய்ப் புலனும் வேட்டுவர்கள் தோன்றி வந்தெனைத் தன்வசமாயிழுத்து வெப்பமாய காமாக்கினியினாலே தகிப்பித்து உயிரோடும் புசிக்க, மனம் வருந்தி யிளகி தன்னை மறந்து அன்னையிலாப் பாலனைப்போ லலைக் கழிந்து வாடி வருந்தலாயினேன்.

குறிப்புரை :—"நாலாயிரந் தாயி னற்றாய் காண்" என்று இறைவனை யேத்திய மெய்யடியார்தம் மெய்ம்மொழிக் கிணங்க ஈண்டு ஆசிரியரும் 'தாயினுங் கருணையா மன்றுள் நாயகமாகி' யென்றோதி யருளினர்.

உள்ளினுஞ் சுட்டிடு முணருங் கேள்வியிற்
கொள்ளினுஞ் சுட்டிடுங் குறுகி மற்றதைத்
தள்ளினுஞ் சுட்டிடுந் தன்மை யீதினாற்
கள்ளினுங் கொடியது காமத்தீய தே.—என்றோர் பெரியார் கூறினதொப்ப, 'வெங்காமத் தீயிலே வெதுப்பி' யென்றார் ஆசிரியரும். (5)

சு. ஞானமே வடிவாய்த் தேடுவார் தேடு
நாட்டமே நட்டத்து ணிறைந்த
வானமே யெனக்கு வந்துவந் தோங்கு
மார்க்கமே மருளர்தா மறியா
மோனமே முதலே முத்திநல் வித்தே
முடிவிலா வின்பமே செய்யுந்
தானமே தவமே நின்னைநா னினைந்தேன்
தமியனேன் றனைமறப் பதற்கே.

பொழிப்புரை :—மெய்யறிவாகாரமாய் நின்று தேடுவார்கள் தேடிய டைதற்குரிய தேட்டமாம் பரம்பொருளே! எனது கண்களில் பொருந்தியுள்ள பரவெளியே! எளியேற்கு அடுத்துவந்தருளி மேன்மேலுந் தெரிதரும் நன்மார்க்கமே! மயக்குறு மனத்தினர் தெரியப்படாத மௌன நிறைவே! எவற்றிற்கு முன்னவனே! மோக்ஷயேதுவாம் சிறந்த விதை முதலே! அளவிலாவானந்த நிலயமே! (யெவரும் இருமையின்ப நோக்கிச்) செய்யாநின்ற கொடைநிகழ்வே! தபோமுடிவே! யான் யெனை மறத்தற்காகவே நினைத்தியானஞ் செய்யலாயினேன்.

குறிப்புரை :—என்னிலை மறப்பான் வேண்டியே நின்னிலை நினைந்தேன், கிருபை செய்வாய் என்பதும், தானுதிகள் பிறவிக்கேதுவே யென்பதும் புலனாயது.

மெய்ஞ்ஞானியர் தேடும் தேட்டமாவது பரம்பொருளே யென்றும் குறிப்பிட ஞானசொரூபர் தேடு நாட்டம் என்றருளினரெனலும் நன்கு விளங்கும். (6)

எ. மறமலி யுலக வாழ்க்கையே வேண்டும்
வந்துநின் னன்பர்தம் பணியாம்
அறமது கிடைக்கி னன்றி யானந்த
வற்புத நிட்டையி னிமித்தம்
துறவது வேண்டு மௌனியா யெனக்குத்
தூயநல் லருடரி னின்னம்
பிறவியும் வேண்டும் யாமெனைதிறக்கப்
பெற்றவர் பெற்றிடும் பேறே.

பொழிப்புரை :—தேவரீர்தம் திருத்தொண்டர்களது உத்தமமாகிய நற்றொண்டு கிடைக்கப் பெற்றால் தீயபாவ யேதுவாம் இம் மண்ணகப் பிறவியே யெனக்கு அபேக்ஷையாம். இல்லையாயின், பரபோகங்கருதி ஆச்சரியமான ஞானநிஷ்டையைப் பெறுவான் வேண்டி முழுத்துறவு அபேக்ஷையாகும் ; இல்லையேல், மோனகுசிரியராய் வந்தருளி அடிமைக்கு மேலான திருவருளினைத் தந்தருள்வதா யிருந்தால் இன்னமும் எனக்கு ஜெனனம் அவசியந்தான் ; மற்றும், அகங்கார மமகாரங்க ளொழியப் பெற்றார் அடைதற்குரிய பெரிய இலாபகரமே !

குறிப்புரை :—உண்மையன்பர்க் குறும்பணி கிடைப்பின் இன்னுமெனக்கு இவ்வுலக வாழ்விச்சையே : அன்றி, அற்புத நிட்டை யமைந்திடுமாயின் மெய்த்துறவென்பது மேவப் பெறுவேன் ; மௌனகுசிரியர் வந்தாணருள் புரிவரேல் புவனசனன போகமும் பெறுவன் என்பது கருத்தாம். (7).

அ. பெற்றவர் பெற்ற பெருந்தவக் குன்றே
பெருகிய கருணைவா ரிதியே
நற்றவத் துணையே யானந்தக் கடலே
ஞாதுரு ஞானஞே யங்கள்
அற்றவர்க் கருத நட்புடைக் கலப்பே
யநேகமாய் நின்னடிக் கன்பு
கற்றதுங் கேள்வி கேட்டது நின்னைக்
கண்டிடும் பொருட்டன்றோ காணே.

பொழிப்புரை :—தத்வாராய்ச்சியில் சிறக்கப் பெற்றூர்யெய்தற்பாலன வாகிய மகா தவமலேயே! கருணைபெருக்குடைய கடலே! மெய்த்தவத் திற் குற்றதுணைவா! பரானந்த சாகரமே! காண்பான், காட்சி, காணப் படுபொருள் என்பன ஒழித்தவர்க்கு பிரிவற்ற நண்புடைக் கூட்டுறவே! யான் வெகுவாக கற்றறிந்ததும் கேள்வியாலுணர்ந்ததும் நினது பொன்ன டிக்கன்பு செய்து நின் தரிசனார்த்தமாகவு மல்லவா?

குறிப்புரை :—ஞாதுரு, ஞானம், ஞேயம், இங்கே ஞாதுரு—காண்ப வன். ஞானம் - காக்ஷி. ஞேயம் - காக்ஷிப்பொருளென்ப. யான் இதுகாறும் கற்றுக் கேட்டுத் தெளிந்ததெல்லாம் நின்பா லன்புசெய்யவும், நின்னை அடை தற்காகவுமேயாம். என்பது இப்பாவின் முடிபு. இம் முறையாப் பன் முறையுங் கூறிவருதல் மீண்டும் வேண்டுதலாகும். ஏன்? தம்பாலன்பாய கருணைபூத்து திருவருட் செல்வம் அருளுமாறென்பதாம். (8)

கூ. அன்றுநால் வருக்கு மொளிநெறி காட்டு
மன்புடைச் சோதியே செம்பொன்
மன்றுண்முக் கண்ணுங் காளகண்டமுமாய்
வயங்கிய வானமே யென்னுள்
துன்றுகூரிருளைத் துறந்திடு மதியே
துன்பமு மின்பமு மாகி
நின்றவாதனையைக் கடந்தவர் நினைவே
நேசமே நின்பரம் யானே.

பொழிப்புரை :—அக்காலத்திலே சனகாதியர்களான நான்மறை யவர்க் கும் சுயஞ்சோதி மார்க்கமருளிச்செய்த பேரன்புள்ள தேசோமயானந்தமே! ஏமசபாமத்தியின்கண் திரிநேத்திரம், நீலகண்டம் என்றனவோடு தோன்றி யருளிய ஞானகாயமே! எளியேனிடத்து பொருந்தியிருக்கும் அஞ்ஞான மென்னும் பேரிருளினை அகற்றுவிக்கும் சந்திரனே! துக்க சுகாதிகளோ டும் கூடிய கஷ்டத்தைத் தாண்டிய பெரியார் நண்பும் நினைவுமாயுள்ள இறை வனே! நின்னடைக்கலம் யான், என்பதாம்.

குறிப்புரை :—முக்கண் - சோம சூரியாக்கினி யென்ப. காளகண் டம் - ஆலகால விஷந்தங்கிய காரணத்தால் நீலகண்டமாயது. மேலே குறித்துள்ள கோலத்தோடும் பொருந்தி ஏமசபைக்கண் திருநடங் கொண் டோய்! யான் தம்மடைக்கல மென்றனர். ஏமம் - பொன். பொன் மன்று - கனகசபை. பொன் - கனகம். ஞானகாய ஸ்தலமாதலால் வானமே யென்றனர் போலும். (9)

ம. யானெனல் காணேன் பூரணநிறைவில்
யாதினும் மிருந்தபே ரொளிநீ
தானெனநிற்குஞ் சமத்துற வென்னைத்
தன்னவ னுக்கவுந் தருங்காண்
வானெனவயங்கி யொன்றிரண் டென்று
மார்க்கமா நெறிதந்து மாறுத்
தேனெனருசித்து ளன்பரைக் கலந்த
செல்வமே சிற்பர சிவமே.

பொழிப்புரை:—பிரதிப் பிரயோஜனம் பெறுதலை எதிர்பாராத மேகமெனத் தோன்றி, ஒரு பொருள் அல்லது பலபொருள் என வாதிக்கும் சமயநெறி யின்றிச் சென்னெறி யருளி மாறுதலில்லாது உள்ளே தேனென்ன உரிசிகரித்து மெய்யன்பர்களைக் கலந்து வரும் திருவருட் செல்வமே ஞானமயமான பரசிவமே! எல்லாமாய்க் கலந்தருளிய பரிபூரணமாயுள்ள பேரருணிலையில் யானென்பதைக் காண்கின்றிலேன்; நீயோ, எல்லாமாயிருந்தொளிரும் பூரணனாகும்; நீயே தனிப்பரம் பொருளொன்று சலனமற்றுள்ள சமரச நிலையிற் பொருந்து மாறதாக இவ்வடியவனை நின்னன்டனாகும்படி செய்தருளவும் நின்னாலாகும்.

குறிப்புரை:—மாறு வென்பது, அன்பருளத்திடை இடையறு வின்பம் நுகர்வித்தலாம். இறைவா? நீயே, 'எல்லாமா யல்லதுமா யுள்ளா' யென்னும் பேருணர்வானதை எனக்குள் பொருந்துமாறதாக எளியனை நினது பிரிவுறுத் தொழும்பனுகக் கொள்ளல் வேண்டுவன் என்பது சாரமென்க துவிதாத்துவித மென்னும் மார்க்கத்தவ னுக்காது சமரச நிலைதந்து என்பதையே "ஒன்றிரண்டென்று மார்க்கமா நெறிதந்து" என்றார்போலும். நாமரூபப் பிரபஞ்சாதிகளனைத்தினும் ஒளிமயமாய் மருவி நிற்றலின் "யாதினு மிருந்த பேரொளி நீ" யென்றனர். பரிபூரணமாய் நிறை தோங்கலின், தான், அப்பூரணமாய நிறைவிலே லீனப்பட்டமையான் யானெனல் காணேன் என்றார். (10

## தன்னை யொருவர்

க. தன்னை யொருவர்க் கறிவரிதாய்த்
தானே தானு யெங்குநிறைந்
துன்னற் கரிய பரவெளியா
யுலவா வமுதா யொளிவிளக்கா
யென்னுட் கலந்தா யானறியா
திருந்தா யிறைவா வினியேனும்
நின்னைப் பெறுமா றெனக்கருளா
நிலையைக் கொடுக்க நினையாயோ.

பொழிப்புரை :—இறைவன், தன்னை யெவரொருவரும் தெரிதல் மிகவும் அசாத்தியமாகியும், தானே தனியவனுயும், எங்கணும் விளக்க முற்று எண்ணுதற் கருமையான பராகாய விரிவாய், அழிவிலாமைக் கேது வாகிய தேவாமிர்தமாகியும், பிரகாசமாய தீப ஜோதியாயும் என்னுள் ளகத்தே பொருந்தியுள்ளாய்; ஆனாலும், யான் நின்னைத் தெரிதற்கில்லாத வாறாக விருந்து வந்தாய்; (ஆகையால்) ஏ இறைவனே! இனியாவது ஏழைமீது (கருணை பூத்து) தேவரீரை யடைந்துய்யுமாறு இவ்வடியவனுக்கு நினது பேரருளாம் பரமப் பிரசாதத்தைத் தந்தருள கிருபை செய்தருள் வாயோ!

குறிப்புரை :—இறைவனைப் பலவாறாக விதந்தோதி முடிவில் இறைவா வென்று விளித்து, இதுகாறும் என்னுள் நீ மறைந்தே யிருந்தாய், இனி யாவது பரங்கருணைத் தடங்கடலாய நின் பேருருவை எனக்கு சாக்ஷாத் காரமாய்க் காண்பித் தருளாயென்று வேண்டலாயினர். உலவா வமுது - ஆறாவமுது. அதாவது தேவாமிர்தம் எப்போதும் குடு ஆறாதிருத் தலாம். (1)

உ. நினையு நினைவுக் கெட்டாத
நெறிபெற் றுணர்ந்த நெறியாளர்
வினையைக் கரைக்கும் பரமவின்ப
வெள்ளப் பெருக்கே நினதருளால்
மனைவி புதல்வ ரன்னை பிதா
மாடு வீடென் றிடுமயக்கந்
தனையு மறந்திங் குனைமறவாத்
தன்மை வருமோ தமியேற்கே.

பொழிப்புரை :—எண்ணுகின்ற எண்ணத்திற் கெட்டப்படாது, மௌன வழியைக்கொண்டு அதனால் தம்மைத் தெரிந்த சமரச மார்க்கரது பாசபந்த வினைகளைக் கருணையாற் கரைத்தருளும் அதி மேன்மையான ஆனந்த பிரவாகமே! நின் திருவருளைப் போறிவாக்கொண்டு தாய், தகப்பன், பெண்டு, பிள்ளை, மாடு, மனை என்கின்ற பற்றுதல் அனைத்தையு மொழித்து, இவ்விடத்தே நின்னை யெப்போதும் மறத்தலில்லாத வருங் குணமானது இவ் வேழையேற்கு முண்டாகுமோ!

குறிப்புரை :—'எத்தாயர் எத்தந்தை யெச்சுற்றத்தார் எம்மாடு சும்மாடா மேவர் நல்லா ரென்றுார்' தேவாரச் செல்வர்; இவ்வாறாக ஆசிரியரும் மனைவி மக்கள், மாதா, பிதா, மாடு, வீடென்னு மிவையிற்றின் மயக்க மறந்தென்றார். என், இப்பாச வொழிபானே பரமனது நேசத்திலன்பு அழுந்துமாறதாக வென்க.

வாசனைக்ஷய மற்றவர்க்கே இறைவனருள் கிட்டுமென்று மேலோர் நூலால் விளக்கியுள்ளமை கொண்டே இங்கு ஆசிரியரும் சகலத்தையு மறந்தும் வெறுத்தும், மீண்டும் ஐயப்பாடு தோன்றியே "மனைவி, புதல்வர், அன்னை, பிதா, மாடு, வீடென்றிடு மயக்கந் தனையு மறந்திங் குனை மறவாத் தன்மை வருமோ தமியேற்கே" யென்று முடித்தருளினர் போலும். (2)

௩. வரும்போ மென்னு மிருநிலைமை
மன்னு தொருதன் மைத்தாகிக்
கரும்போ தேனோ முக்கனியோ
வென்ன வென்னுட் கலந்துநலந்
தரும்பே ரின்பப் பொருளேநின்
றன்னை நினைந்து நெக்குருகேன்
இரும்போ கல்லோ மரமோவென்
னிதய மியாதென் றறியேனே.

பொழிப்புரை :—வருதல் போதலென்னும் இருவகையான தன்மையைப் பொருத்தது இயல்பே யென்று கருதி ஓரே சகச நிலையாம் சம நிலை பெற்று, கரும்பின் ரசமோ, மதுதானோ! மூவகைக் கனிவர்க்கச்சுவையோ! என்று எண்ணுமாறதாக என்னகம் பொருந்தி, இனிமை பயக்கும் பரமானந்த வத்துவே! என்று உன்னை யெண்ணி நெகிழ்ந் துருகினேனில்லை ஆகவே, என்னெஞ்சமானது ஒருக்கால், இரும்பாமோ! அன்றி கடினமான கல்லாயிருக்குமோ! இவ்விரண்டுமன்றி கேவலம் ஓரறிவுள்ள மரமாகுமோ! யாதெனத் தெரிகிலனே!

குறிப்புரை :—(கிடைத்தற்கரிய) பரமானந்த வஸ்துவே ! நின்னை யான் கருத்தகத்தே நினைவு கொண்டுருகா துள்ளதை ஆராயுமிடத்து, என் னெஞ்சம், கல் மரம் இரும்பு என்கின்ற இக்கடின பொருளாயிருக்கலாமோ வெனச் சந்தேகிக்கின்றேன் என்பது புலனாகின்றன. (3)

௪. அறியுந் தரமோ யானுன்னை
அறிவுக் கறிவாய் நிற்கையினால்
பிரியுந் தரமோ நீயென்னைப்
பெம்மா னேபே ரின்பமதாய்ச்
செறியும் பொருணீ நின்னையன்றிச்
செறியாப் பொருளான் பெறும்பேற்றை
நெறிநின் றுழுக விசாரித்தால்
நினக்கோ வில்லை யெனக்காமே.

பொழிப்புரை :—புத்திக்குப் புத்தியாக விருத்தலினாலே யான் நின்னை தெரியத் தக்கவனாவேனோ ? எம்பெருமானே ! நீயோ, பரமானந்த நிலை யாய் நிறைந்துள்ள பரம்பொருளாகும் ; ஆகையால் நீ எளியனைப் பற்றாது பிரிவுற்றிருக்குந் தன்மையுமுண்டோ ? நின்னைவிட்டு வேறோரிடமும் சேரத்தகாத பொருளாயுள்ள யான் அடையவிருக்கும் பரமப் பிரசாதத்தை உள்ளபடியான மார்க்கமிருந்து நடத்தற்கு ஆராயின், நின்றனக்கின்றாகும் ; எனக்கேயாகு மென்க.

குறிப்புரை :—இம்முறையன்றி வேறு பிராகாரமாகவும் பொருள்படும் அதாவது :—யான் நின்னை அறியுந்தரமோ, அறிவுக்கறிவாய் நிற்கையினால் ; நீயென்னைப் பிரியுந்தரமோ ? பேரின்பமதாய்ச் செறியும் பொருளாயிருக் கின்றாய் நீ ; நின்னையன்றிச் செறியப்படாத பொருளாயுள்ளவன் யான் என் றிவ்வாறாம். ஆகவே இவ்வாறு கூறுவோரும் உளராவர்.
செறிதல் - கலத்தல், சேர்தல். (4)

ரு. எனதென் பதும்பொய் யானெனல்பொய்
யெல்லா மிறந்த விடங்காட்டும்
நினதென் பதும்பொய் நீயெனல்பொய்
நிற்கு நிலைக்கே நேசித்தேன்
மனதென் பதுமோ வென்வசமாய்
வாரா தைய நின்னருளோ
தனதென் பதுக்கு மிடங்காணேன்
றமியே னெவ்வா றுய்வேனே.

பொழிப்புரை :—எனதெனதென்று கூறலும் பொய்யேயாம்; யான் யான் என்று எவற்றினும் விவகாரஞ் செய்தலும் பொய்யாகும்; இவையெல்லா விவகாரங்களு மொழிந்த ஸ்தானத்தைத் தெரிவிக்கா நின்ற நின்னது என வாதிடுவதும் பொய்யேயாகும்; (ஆதல்கொண்டு) இவையல்லாத நிலைக்கே யான் ஆசைகொண்டுள்ளேன் (இவையிவ்வாறாக) மனமென்னும் பொருளோ, என்னோடும் ஒத்துவருவதில்லை; ஆகவே, இறைவா! நின்னதான திருவருட் சத்தியோ தன்னதெனக் கூறுவதற்கும் வழியோவில்லை; ஆனதுபற்றி இச்சிறியவன் பிழைப்பதினி யெவ்வாறோ, வறிகிலேன்.

குறிப்புரை :—எனது, யான் இவ்விரண்டும் அகங்கார மமகாரமாகும்; ஆகவே இவை திருவருட் சத்தியார் சமூகத்திலே நிலைபெறாதன; அதனால் பொய்யெனல் பொய்யல்ல, மெய்யேயாம். ஆதலால், எவையு மொழியத் தக்க வழியைக் காட்டும் நின்னது என்கின்றதற்கும் நியாயமின்றாம்; அன்றி நீயே இவைகட்குக் காரணபூதன் என்பதற்கு மிடமின்றாம்; யானோ, இவையற்று தனித்து நிற்கும் தனி நிலைக்கே நின்னை விசுவாசித்து வருகின்றேன்; இடையே என்மனமோ என் வசம் வாராமல் தன்வசமா யீர்க்கின்றது; ஆகவே, இத்தத்துவ சேஷ்டிதங்களை யடக்குவதான திருவருட் சத்தி தன் திருநோக்கமு மில்லையானால் யான் கரைசேருவ தெவ்வாறாம் என்பது புலனாயது. (5)

சா. உய்யும் படிக்குன் றிருக்கருணை
யொன்றைக் கொடுத்தா லுடையாய்பாழ்ம்
பொய்யு மவாவு மழுக்காறும்
புடைபட் டோடு நன்னெறியா
மெய்யு மறிவும் பெறும்பேறும்
விளங்கு மெனக்கு னடியார்பாற்
செய்யும் பணியுங் கைகூடும்
சிந்தைத் துயருந் தீர்ந்திடுமே.

பொழிப்புரை :—இக்கடையேன் கடைத்தேறுமாறு ஏ, இறைவா! நினது மேலான காருணியத்தை மட்டும் என்பாற் செலுத்துவையேயாயின், என்னை யாளுடையாய்! பாழ்படுத்தும் (ஆசை காரணமாய்த் தோன்றும்) அசத்தியமென்ன, பேராசையென்ன, பொறாமையென்ன, ஆகிய இவையெல்லாம் அடிப்பட்டோடுமே! சன்மார்க்கத்திற்கு ஆஸ்பதமாகிய உண்மையும், மெய்யறிவினாலே பெறுதற்கான பலப்ராப்திகளும், அடிமைக்கே நன்கு உளவாகும்; இவையன்றியும், இன்னும் நினது மெய்யடியவர்க்காக புரியும் தொண்டும் செய்ய வாய்த்திடும், மற்றும் மனோவியாகூலாதிகளும் மாய்ந்திடு மாக்கும்.

குறிப்புரை :—கருணை, திருக்கருணை, கருணா கடாக்ஷம், கிருபை இவை ஒருபொருட் சொற்களாம். நினது ஒப்பற்ற பேரருள் கிடைக்கப் பெறுவேனாயின், அதனால் சகலமான சத்வாம்சங்களும் பெறுதலோடு தாங் கொணா மனோவிகாராதிகளனைத்து மொழிந்து அன்பர் பணிக்கும் ஆட்பட் டிடுவே னென்பது முடிபுரையாம் (6)

எ. சிந்தைத் துயரென் றொருபாவி
சினந்து சினந்து போர்முயங்க
நிந்தைக் கிடமாய்ச் சகவாழ்வை
நிலையென் றுணர்ந்தே நிற்கின்றேன்
எந்தப் படியுன் னருள்வாய்க்கு
மெனக்கெப் படிநீ யருள்செய்வாய்
பந்தத் துயரற் றவர்க்கெளிய
பரமா னந்தப் பழம்பொருளே.

பொழிப்புரை :—பிறப்பிறப்பிற் கேதுவாகிய பாசபந்த மொழித் தார்க்கு மிகவும் சுலப சாத்தியனான சச்சிதானந்தத் தொன்மைப் பொருளே! மனக்கிலேச மென்னும் ஓர் கொடியன் வெறித்து வெறித்து வம்பியற்ற, இதனால் (பலவாறான) தூஷணைக் கேதுவாய் பொய்வாழ்வினை நிச்சயமாக் கொண்டே அவ்வழியில் ஆழ்ந்துள்ளேன்; ஆகவே, நினது மேன்மை வாய்ந்த திருவருட் செல்வம் எவ்வாறு கிடைக்கப் பெறுவனோ! இவ் வடிமைக்கும் நீ எவ்வாறு அநுக்ரகிப்பையோ!

குறிப்புரை :—பந்தபாச மொழிந்த பரம ஞானியர்க் கெளியனாய பரங்கருணைத் தடங்கடலே! ஆசாபாச ஆபாசாதியில் அழுந்தி துளைந்து கிடக்கும் பொய்யறிவினனுக்கும் நினது அதி மேன்மைவாய்ந்துள்ள திரு வருள் எவ்வாறு கிடைக்கப்போகிறது! (7)

அ. பொருளைப் பூவைப் பூவையரைப்
பொருளென் றெண்ணு மொருபாவி
இருளைத் துறந்திட் டொளிநெறியை
யென்னுட் பதிப்ப தென்றுகொலோ
தெருளத் தெருள வன்பர்நெஞ்சந்
தித்தித் துருகத் தெவிட்டாத
அருளைப் பொழியுங் குணமுகிலே
யறிவா னந்தத் தாரமுதே.

பொழிப்புரை :—மெய்யன்பாது சித்தம் தெளிய தெளிய மதுரித் தருகுமாறு தெவிட்டலிலாத் திருவருண் மாரியைப் பெய்யாநின்ற யெண் குணமேகமே! மெய்ஞ்ஞானனந்தத்தை விளைவிக்கும் அருமையான தேவாமிர்தமே! பொருள், பெண், பூமி யென்பவற்றை நிலையுள்ள தென்றெண்ணி யழுங்கும் ஓர் பாவகாரியாம் அஞ்ஞான விருட்டினை வெருட்டிப் பிரகாச மார்க்கத்தினை, அதாவது (சமரஸ சன்மார்க்கத்தை) எளியேன்றன் னெஞ்சகத்தே நிறுத்துவது எப்போதோ தெரிகிலேன்!

குறிப்புரை :—மண், பெண், பொன் என்கின்ற மூவகை ஆசையாம் மூடமான புத்தியெனு மந்தகாரத்தை யகற்றி, நித்தியமாகிய அருட் சோதியின் சன்மார்க்கத்தினை நெஞ்சகத்தே நிலைபெறச் செய்வ தெக்காலமோ யென்பது முடிபு. அநித்திய மறுத்து, நித்தியம் நிறுத்தல் வேண்டுவாராயினர். (8)

கூ. ஆரா வமிர்தம் விரும்பினர்க
ளறிய விடத்தை யமிர்தாக்கும்
பேரா னந்தச் சித்தனெனும்
பெரியோ யாவிக் குரியோய்கேள்
காரார் கிரக வலையினிடைக்
கட்டுண் டிருந்த கலைகளெல்லாம்
ஊரா லொருநாள் கையுணவேற்
றுண்டா லெனக்கிங் கொழிந்திடுமே.

பொழிப்புரை :—என்றும் ஆராத தேவாமிர்தம் அருந்திய தேவர்கள், ஸ்ரீ சிவபெருமான் தம் மாற்றலை யறியுமாறும், தேவர்களைக் காக்குமாறும் விஷத்தினை அமுதம்போன் றுண்டு கண்டத் திருத்தியருளிய பெருமை வாய்ந்த சித்தரென்று சொல்லத்தகும் இறைவனே! அன்றி யென்னுயிர்க் குயிரா யுள்ளவனே! கேட்பாய், கரியதாய குடும்ப வலைக்குள் கட்டுப்பட்டிருந்த கட்டங்களனைத்தும் ஊர் ஒன்றுக்கு ஒவ்வொரு நாளாகக் கையேந்திப் பிச்சையேற் றுண்டுவரின் ஒழிந்துபோகும் என்றவாறு.

குறிப்புரை :—ஆராவமுது - என்றும் சுடுகையாகவே யுள்ள தேவாமிர்தம், சாவா மருந்தெனினும் பொருந்தும். தேவர்களுக்காக பாற்கடலில் கடைந்தெடுத்து ஈய்ந்ததால் ஆராவமிர்தம் விரும்பினர்களென்று தேவர்க்காயிற்று. கொல்லுதல் செய்யும் நஞ்சினைக் காருணியார்த்தமாக அமுதம் போல வுண்டு கண்டத்திருத்தினதாலும், பேரானந்தம் விளைத்தல் காரணமாகவும் அப்பெயர் வழங்கப்பட்டதாம். சம்சார கட்டங்களனைத்தும்

ஊருக்கொரு நாளாகக் கைப்பிச்சை யேற்றுண்டால் என்னை விட்டகலும் என்பதாம். (9)

௰. எனக்கென் றிருந்த வுடல்பொருளும்
யானு நினவென் றீந்தவண்ணம்
அனைத்து மிருந்து மிலதாக
வருளாய் நில்லா தழிவழக்காய்
மனத்துட் புகுந்து மயங்கவுமென்
மதிக்குட் களங்கம் வந்ததென்னோ
தனக்கோன் றுவமை யறநிறைந்த
தனியே தன்னந் தனிமுதலே.

பொழிப்புரை :—தனக்கு ஓர் ஒப்புவமை யில்லாதுயர்ந்த ஏக வத்துவே! தான் றனியனுய தனிமுதற் பொருளாயுள்ளோய்! எனக்காக வென்று யெண்ணியிருந்த இச்சரீரமும் திரவியமும், நானும், உன்னுடையன வென்று கொடுத்தபடியாக யாவுமிருந்தும், இன்மையாக திருவருட் சொரூபமாய் நிலைபெறாமல் தீய வழக்காய் மனத்தின்பால் சேர்ந்து கலக்கமுறவும் என் புத்திக் குள்ளாக குற்றம் ஏற்பட்டதற்குக் காரணம் யாதோ வறியேன்.

குறிப்புரை :—என் உடல் பொருளாவி யென்னு மூன்றனையும் நினக்கு தத்தம் செய்தும் நின் திருவருளினைச் சார்தலிலாத் தன்மையா மயக்கத்திற்குக் காரணம் யென்ன யென்பது சாரமாம். உடல் பொருளாவியையே, உடல் பொருள் யான் என்றனர். தன்னைப்பற்றின தொன்று மில்லாமையைத் தன்னந்தனி யென்றார்.

தன்னதாய உடல் பொருளாவி மூன்றும் இறைவற் கர்ப்பித்து அவர் உடல் பொருளாவியைத் தனதாகக் கொண்ட உரிமையான் அவர் பொருள் இவர் பொருளா யுரிமைப்பட்டமை நோக்கியே, 'அனைத்து மிருந்தும் இலதாக வருளாய் நில்லா தழிவழக்காய்' என்றார் போலும். (10)

---

## ஆசையெனும்.

---

௧. ஆசையெனும் பெருங்காற்றூ டிலவம்பஞ்
செனவுமன தலையுங் காலம்

மோசம்வரு மிதனுலே கற்றதுங்கேட்
டதுந் தூர்ந்து முத்திக்கான
நேசமுநல் வாசமும்போய்ப் புலனுயிற்
கொடுமைபற்றி நிற்பரந் தோ
தேசுபழுத் தருள்பழுத்த பராபரமே
நிராசை யின்றேற் றெய்வமுண்டோ.

பொழிப்புரை :—ஆசையாம் பெரிய காற்றினுள்ளே சிக்குண்ட இலவம் பஞ்சை யொத்து மனம் அலக்கணுறும்போது விபத்து வந்துசேரும்; இவ்வாறுறும்போது யோர்க்கனவே கற்றுக் கேட்டுத் தெளிந்தன வனைத்தும் மறந்துபோய் மோக்ஷாபேட்சை, சாதுசங்கப் பழக்கமாகிய இவையும் நீங்கப்பெற்றுப் பின், புலாதிகள் வழிநின்று வெறுமையால் பலவாறாய் கலங்கி நின்றொழிவர்; ஐயோ! ஆகவே, சோதிமிக்குற திருவருள் மிக்குடையதான பராபரமே! ஒருவர்க்கு சர்வ வெறுப்புண்டாக வில்லையேல் (அன்னார்க்கு) தெய்வத் திருவருளு முண்டாமோ! உண்டாகா தென்றபடி.

குறிப்புரை :—ஆசை மூவகையாம். அதாவது மண், மாதர், பொருள் என்பனவாம். இம்மூன்றைக் கொண்டனுபவிப்பது கேவலம் பிறவித் துன்பத்திற்கே ஏதுவாகும். ஆதல்கொண்டே இந்நூலாசிரியர் ஆசையாம் பெருங்காற்றி லகப்பட்ட மனமாகிய இலவம் பஞ்சானது அலையுமென்றனர். அதுமட்டுமல்ல; மோசம் வருமென்றுங் கூறினர்; காரணம் வருமாறு :—

காசி இரகசியம்

மனைவியர் மக்களில் வாஞ்சை யுண்மையே
புனைதரு நலமெலாம் போக்கித் தாழ்த்திடு
மனைவியர் மக்களில் வாஞ்சை யின்மையே
புனைதரு பரகதி பொருந்த வுய்க்குமே.

சேது புராணம்

எவ்வரையும் மனந்திரிப்பது மீன்றவர் தமக்குத்
தவறிழைத்திடப் புரிவதுந் தையலார் தங்கள்
கவரில் கற்பினை யழிப்பதுங் கற்கு நூற்கலைக
ளவையெலாங் கெடக் கெடுப்பதும் பொருள்விருப் பன்றே.

வாசிட்டம்

வெங்காதற் பெரும்பாம்பு செளிபுற்றுங் குடும்பபரம்
வெறும்பொய் யென்றே

*யிங்காசை யறநீக்கி யெல்லையிலாப் பரமபதத்*
*திருந்து வாழ்வாய்*
*சிங்காரக் கந்தர்ப்ப நகரிருந் தென்*
*சிதைவுற்றென் றீதோ நன்றே*
*பங்கான மனைமக்கள் வாழ்ந்தாலென் கெட்டாலென்*
*பாச மாயை.*

ஒழிவி லொடுக்கம்

வெண்பா

*நாடுநகர் வீடுடையா டாய்தந்தை நட்புமக்கண்*
*மாடுகுலம் பொன்னுடம்பின் வாதனைகள்—கூடத்*
*தொடுத்தவலைக் கண்ணித் தொடக்கிதனை யிப்போ*
*விடப்பெறுவா ரேன்பிறப்பார் மேல்.*

குசேலோ பாக்கியானம்

*மைந்தர்க டம்மைப் போற்ற வளநிதி வேண்டு மென்றாய்*
*நந்திய பறவை கான நயந்துறை விலங்கு முன்னா*
*வந்தபல் லுயிர்க்குச் சேம வைப்புண்டோ வருவா யுண்டோ*
*எந்திடத் தேனும் போயொன் றிரப்பது தானு முண்டோ.*

காசிரகசியம்

*ஆசையில் லார்களே யறவர் மேலவ*
*ராசை யில்லார்களே யருந்த வத்தின*
*ராசை யில்லார்களே யருட் கலப்பின*
*ராசை யில்லார்களே யரிய முத்தர்கள்.*

*ஆசையுட் பட்டவ ரல்லற் பட்டவ*
*ராசையுட் பட்டவ ரளற்றிற் பட்டவ*
*ராசையுட் பட்டவ ரயர்விற் பட்டவ*
*ராசையுட் பட்டவ ரரங்கப் பட்டவர்.*

திருக்குறள்

*அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்*
*தவாஅப் பிறப்பீனும் வித்து.*

*வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை*
*யாண்டு மஃதொப்ப தில்*

**வள்ளலார்**

ஆசையாற் சந்திர னங்கந் தேய்ந்தனன்
ஆசையாற் சவுபரி யறிவை நீங்கினான்
ஆசையா னராசுர னாவி போக்கினான்
ஆசையால் வாலியு மழிந்து போயினான்.—இங்ஙனம் பலவா

றாக விற்பன நூல்களைக் கற்பனையறக் கற்ற கேட்ட பெரியோர் கூறிய வாக்கியங்களைத் தூக்கி யுணர்தல் சாலச் சிறப்பாம். (1)

உ. இரப்பானங் கொருவனவன் வேண்டுவகேட்
டருள்செயென வேசற் றேதான்
புரப்பான்ற னருணாடி யிருப்பதுபோ
லெங்கு நிறை பொருளேகேளாய்
மரப்பான்மை நெஞ்சினன்யான் வேண்டுவகேட்
டிரங்கெனவே மௌனத் தோடந்
தரப்பான்மை யருணிறைவி லிருப்பதுவோ
பராபரமே சகச நிட்டை.

பொழிப்புரை:—ஆங்கே யொருவன் பிச்சை கேட்பான், அவன் விரும்புவதைக் காதுகொண்டு கேட்டுக் கொடுத்தருள்வாயாக வென்று பழிப்புச் சொல்லன்றி ஈவோனது காருணிய நிலைமையை நோக்கி நிற்ட தொக்க, எங்கணும் விலகலிலாது நிறைந்துள்ள பரவத்துவே! கேட்டருள் வாயாக. யானோ, மரத்தினை யொத்த மனத்தினையுடையவன், ஆதலால் இரக்கத்தோடும் விரும்பியவற்றைச் செவிக்கொண் டருள்வாயென்றே னாதலான் மௌன முத்திரையோடு பராகாயச் சுபாவமுள்ள நின்றிருவரு ளாம் பரிபூரணமான நிலையின்கண் ணிற்றல்தானோ எற்குச் சகச நிட்டை யென்று சொல்வது? பரமானந்த வஸ்துவே!

குறிப்புரை:—ஈண்டு ஆசிரியர் தம்மை மரப்பான்மை யுள்ளவன் என் றருளினர்; அதாவது அசரமாய் நிற்றலைக் குறித்தென்க. யாசிப்பான் கொடுப்பவனது குறிப் பெதிர்நோக்கி நிற்றலேபோல திருவருணோக்கங் கண்டு அந்நிறைவாய் நிற்பதுவோ எனக்கு வேண்டிய சகச நிட்டை யென் பது? கருத்தாம். (2)

ங. சாட்டையிற் பம்பரசாலம் போலெல்லாம்
ஆட்டுவா னிறையென வறிந்து நெஞ்சமே
கேட்டமொன் றறவருட் செயலி னிற்றியேல்
வீட்டறக் [illegible]

பொழிப்புரை :—ஏ, மனமே! ஒருவன், சாட்டை கொண்டாட்டா நின்ற பம்பரங்கள்போல, சமஸ்தமான ஆன்மாக்களையும் தனக்குவமையில் லாத் தலைவன் ஆட்டிடுவானெனப் பிரமாண மூலமாக நன்குணர்ந்து, சம்பா திக்கும் வேறு பொருள் யாதுமில்லாமை கண்டு, அவ்வருணெறியில் நிற் பையே யானால், இல்லறம் துறவரம், என்பனவாய இரு நெறிகளும் மேலா னவையேயாம்.

குறிப்புரை :—இறைவன் இருவினைக் கயிற்றால் ஆன்மாக்களை யாட்டி வருவதற்குச் சாட்டைப் பம்பரத்தை யுவமை கூறினர். இதனால் எவை யும் அவன் செயலேயன்றி நஞ்செயலன்று என்று கோடல் நூற்றுணிபாம். ஏதுவாக, ‘ ஆட்டுவித்தா லாரொருவ ராடா தாரே ’ என்பதொன்றே போதிய சான்றாம். (3)

ச. தன்னெஞ்ச நினைப்பொழியா தறிவிலிநான்
ஞானமெனுந் தன்மை பேச
உன்னெஞ்ச மகிழ்ந்தொருசொல் லுரைத்தனையே
யதனையுன்னி யுருகே னையா
வன்னெஞ்சோ விரங்காத மரநெஞ்சோ
விருப்பு நெஞ்சோ வைரமான
கன்னெஞ்சோ வலது மண்ணாங்கட்டிநெஞ்சோ
வெனது நெஞ்சங் கருதிற்றேனே.

பொழிப்புரை :—தனது நெஞ்ச நினைவை யொழித்தல் அறியப்படாத சாமானிய பேதையேனாய யான், மேலாகிய ஞான விவகாரத்தைப் பற்றி விவகரிக்குமாறு தமது திருவுள மகிழ்ந்தோர் அருமருந்தன்ன வருண் மொழி புகன்றனையே! அத்திருமொழியாம் பெருமொழியின் ஆழமறிந் துருகாத அவலனாதலால் ஏ ஐயனே! என் மனத்தினை நினைத்தால், வலிய மனமோ! அல்லது இரக்கமென்ப தறியாத மரமன்ன மனமோ! அன்றி இரும்பு நெஞ்சந்தானோ! மற்றும் வைரமுள்ள கல்மனமோ! யாதோ வறிகிலனே.

குறிப்புரை :—சத்திய ஞான சமரச நிலையினைப்பற்றி விசாரஞ் செய் தல், அந்நூற் கற்றறிந்த தெள்ளிய பேரறிவாளர்க்கன்றி வேறறிவாளராம் என்போன்ற பேதைக்கு மியலுமோ! அசாத்தியம்! ஆயினும் அடியவன் மீது கருணைகூர்ந்து கூறிய ஓர் அரிதினு மரிய திருமொழியைக் கருதி யகங்குழைந்தேனு மில்லையே! இதனால் என் மனம் எத்தன்மை யுடையதோ வென்றும், இறைவன் கருணை யிருந்தவாறென்னே யென்று மிகவும் பாராட்டலாயினர். (4)

ரு. வாழி சோபனம் வாழிநல் லன்பர்கள்
சூழ வந்தரு டோற்றமுஞ் சோபனம்
ஆழி போலரு ளையன் மௌனத்தால்
ஏழை யேன்பெற்ற வின்பமுஞ் சோபனம்.

பொழிப்புரை :—யான் கூறிய சோபனமானது வாழி வாழியே; அஃதாவது, மெய்யன்பர்களானோர் என்னைச் சூழ வந்தருளற்கு யோக்கிய மற்ற வென்னைத் தக்கவனாகச் செய்த மௌன சற்குருவின் பகிர்முக தரிசனமும் சோபனமேயாம். கடலனைய வருளுடைய அருளிறைவன் மௌன முத்திரையினாலே இவ்வடியவன் பெற்ற ஒப்புயர்வற்ற பேரானந்தமும் சோபனமேயாக.

குறிப்புரை :—கருணாகரன்றன் அருண் மிகுதியை வியந்தோதுவான் வேண்டி ஈண்டு ஆசிரியர் விரிந்த கடலை உவமித்தனர்போலும். சோபனம் - மங்களவாசி, சுபம். (5)

சா. கொடுக்கின் றோர்கள்பாற் குறைவையா
தியா னெனும் குதர்க்கம்
விடுக்கின் றோர்கள்பாற் பிரிகிலா
துள் ளன்பு விடாதே
அடுக்கின் றோர்களுக் கிரங்கிடுந்
தண் டமிழலங் கல்
தொடுக்கின் றோர்களைச் சோதியா
தது பரஞ் சோதி.

பொழிப்புரை :—தன்மை வாய்ந்த தமிழ்மொழி மாலையினைத் தொடுத்துச் சாத்தும் உண்மை யடியவரை பரீக்ஷை செய்யாததான பரஞ்சுடரார், கொடை கொடுப்பவரிடத்தே யாதாமோர் குறைபாடும் வைத்தருளார்; (எதனினும்) யான் என்கிற முனைப்புரையை விட்டொழித்தவரிடத்தே பொருந்தி பின் பிரிவுறாது; மற்றும், உள்ளன்பு கொண்டபற்றுள்ளோர்க்கு ?ருணை புரிந்தாளும் என்றவாறு.

குறிப்புரை :—இனிய செந்தமிழ்ப் பாமாலை சூட்டுவோர் பால் குற்றம் பார்த்தன்மையாளனு மிறைவன்; வரையாதளிக்கும் வள்ளன்மையார்க்குக் குறையாதளிக்குங் குணவான்; அகங்கார மமகாரங்களை யொழித்தாரைக் கைவிடான்; அகம்புற மிரண்டு மொத்து அடைக்கலப் பட்டவரை மன மிரங்கி யாண்டருளுவன் என்க. சான்றாகக் கைவல்யம், சந்தேகந் தெளி தற்படலம்.

மனை விலங்கறு மைந்தனே கற்பக மரங்கனல் புனல் மூன்றுந்
தனையடைந்தவர் வறுமையுஞ் சீதமூந்தாங் மூர்தவிர்த்தாளும்
அனையவீசநு மடைந்தவர்க்கருள் செய்வா ரகன்றவர்க்கருள் செய்யார்
இனைய குற்றங்க ளவர்குற்ற மாகுமென் றெண்ணிநீயறிவாயே.

இச்செய்யுளான் நன்கு புலனாகும்.

எ. உலகமாயையி லேயெளி யேன்றனை
யுழல விட்டனை யேயுடையாயருள்
இலகுபேரின்ப வீட்டினி லென்னையும்
இருத்தி வைப்பதெக்காலஞ்சொ லாயெழில்
திலகவாணுதற் பைந்தொடி கண்ணிணை
நோக்கநாடகஞ் செய்தடி யார்க்கெலா
மலகிலாவினை தீர்க்கத் துசங்கட்டு
மப்பனே யருளானந்த சோதியே.

பொழிப்புரை :—அழகிய பொட்டிட்ட பிரகாசமாயுள்ள நெற்றியென்ன, பசுமையான வளையலென்ன இவைகளோடும் பிரகாசியா நின்ற உமை யம்மையார்தம் இரு விழிகளும் நோக்கத் திரு நடஞ்செய்து மெய்யன்பர்க்கெல்லாம் வினை தொலைத்தாள்வான் வேண்டி விருது பூண்டருளிய பொன்னப்பா! திருவருள் சகிதமான பரமானந்த பரஞ்சுடரே! இந்த நிராதியா மேழையேனைக் கொடிய இவ்வகிலமாயா பாசத்திற் கிடந்து தத்தளிக்கச் செய்தனையே! நினது திருவருள் வலத்தால் பிரகாசியாநின்ற பரமானந்தயேதுவா முத்தியின்கண் நிலை நாட்டி வைப்பதும் எந்தக் காலமோ, உரைப்பாய்!

குறிப்புரை :—பரமாத்மனே! இவ்வெளியனை இவ்வஞ்சவுலக மாயா கோலா கலத்திலே கிடந்து பரதவிக்குமாறு செய்துவிட்டாய்! இனி யான் கரையேறுங்கால மெப்போதோ தெரிவித்தருள்வா யென்பது முழுவுரை.

அன்று விடமுண் டமரரைக்காத்தெதி ரந்தகனைக்
கொன்றொரு பாலற்குறிக் கொண்டுகாத் துக் கொடும்புரத்தைக்
கன்றெரிதாவிடுங் காலொரு மூவரைக் காத்தமையா
லின்றெனைக் காப்பதரி தல்லவே கச்சியேகம்பனே.—என்றருளினர்
சிவஞான முனிவரும். (7)

அ. முன்னிலைச்சுட் டொழுதியெனப் பலகாலுநெஞ்சேசநான்
மொழிந் தேனே நின்

றன்னிலையைக் காட்டாதே யென்னை யொன்றாய்ச் சூட்
சரணன் போந்த [டாதே
அந்நிலையே நிலையந்த நிலையிலே சித்திமுத்தி
யனைத்துந் தோன்றும்
நன்னிலையீ தன்றியிலை சுகமென்றே சுகர்முதலோர்
நாடி னாரே.

பொழிப்புரை :—ஏ மனமே! நீ யெப்போதும் நின்கண் முற்பட்ட தைச் சுட்டிப்பேசுவதை யொழித்திடுவா யெனப் பலமுறையும் யான் நினக் குக் கூறியுள்ளேனல்லவா ? ஆதலால், நீ உன்னிலையினை யென்பால் காண்பி யாதும், அடியேனை ஓர் பொருட்டா யெண்ணுதும், யான் சரணாகதியடைந்த அந்தவோர் நிலையே ஒப்பற்ற நன்னிலையாகு மென்றும், அந்த நிலையிற்றான் சித்திமுத்தியாதிகளெல்லாம் பெறலாகுமென்றும், இவையல்லாது வேறே மேலாயதோர் நிலையின்றெனவும், பரமசுக மிஃதேயெனத் தேறித்தெளிந்தே சுகாதிய பரமபிராக்ஞாளெல்லாம் கைப்பற்றின ரென்பது,

குறிப்புரை :—தன்னிலையன்றி முன்னிலையை யொழிப்பான் வேண்டு மென்றதனோடு தன் சரணாகதி நிலையினைக்கொண்டே அட்டமாசித்தி, மோக்ஷாநுபவம் இவை ஸ்திரமாமெனவே சுகாதியரும் கைக்கொண்டு நிற்ற உதாரணமுங்கூறின ரென்க.

சித்தி - அட்டமாசித்துகள். இவையிற்றினை முன் ஓர் பாற் கூறப்பட் டது. முத்தி-சகலமும் விடுபட்டுத் தனிப்பட்ட பரம நிலையாம்.

பாவனாதீதந்தன்னி னொடொறும் பதிந்து நிற்பாய்
பாவனாதீதக் தன்னி னெஞ்சகம் பதியாதாயின்
பாவனைதனிலே நெஞ்சைப்பழக்கிடு பழுத்த காலைப்
பாவனாதீதம் வந்து பதிந்திடும் பான்மையோடே.—என்று

மேலோரும் கூறினமை யறிக. இதனால் அத்துவிதம் சித்தித்த தென்க. (8)

கூ. அத்துவிதம் பெறும்பேறென் றறியாமல் யானெனும்பே
யகந்தை யோடு
மத்தமதி யினர்போல மனங்கிடப்ப வின்னமின்னம்
வருந்து வேனோ
சுத்தபரி பூரணமாய் நின்மலமா யகண்டிதமாய்ச்
சொரூபா னந்தச்
சத்திகணீங் காதவனந் தன்மயமா யருள்பழுத்துத்
தழைத்த வொன்றே.

பொழிப்புரை :—மிகப் பரிசுத்த நிலையமாய் சர்வபரிபூரணாகாரமாய், மலமிலாதாகி, கண்டனமில்லாதாகி, சொரூபானந்தச் சத்திகளார் அகலாமே தன்மய சொரூபமேயாகி, திருவருள் கனிவெய்திய செழுமையான வோர் பொருளே ! மிக்க விருப்பத்தோடும் பெறப்படும் பேறானது அத்துவிதமே யென ஆய்ந்தறியாமே, நானெனும் பேய்த்தனமாய அகங்காரக் கிரந்தியைச் சார்ந்து மதியிலான்போன்று மனம் விஷய போக்கியத்திலாழ்ந்தி கிடக்குமாறாக இனியும் வருந்தே னென்பது.

குறிப்புரை :—எம்பெருமானே ! யான் பழய வகங்காராதி வாசனையால் கேவலம் பைத்தியக்காரன் போன்று, அத்துவிதமே நன்னிலை யெனக் கோடாது எனது மனம் விஷயாதிகளி லாழ்த்தி இனிமேலும் துன்புறுவதோ ! என்பது முடிபாம்.

சொரூபானந்த சத்திகளென்பது ஈண்டு, ஆன்மானந்த யேதுவாய சத்திகளை யென்க.

காரிருளோ மைக்குழம்போ காரோவெனக் கலுழ்ந்து
பேரிருளா மாணவத்தைப் பின்னிட்டே—யோர்வரிய
மன்னுருவே நாமென்று வள்ளலரு ளாலறிதல்
நின்னுருவ மாணு நினை.—என்றார் மேலோர். (9)

ய. தந்தைதாயுநீ யென்னுயிர்த் துணையுநீ
சஞ்சல மதுதீர்க்க
வந்ததேசிக வடிவுநீ யுனையலான்
மற்றொரு துணைகாணேன்
அந்தமாதியு மளப்பருஞ் சோதியே
யாதியே யடியார்தஞ்
சிந்தைமேவிய தாயுமா னவனெனுஞ்
சிரகிரிப் பெருமானே.

பொழிப்புரை :—மூலமும் முடிவும் காணற்கில்லாத முழுமுதற் சுடரோய் ! யெப்பொருட்கு முன்னவனே ! மெய்யன்பர்களது சித்தமிசை குடி கொண்டவனே ! தாயுமானவனென்னும் பெயர் பூண்டருளி திரிசிரகிரியின் கண் மேவிய எம்பெருமானே ; எளியேற்குரிய பிதா மாதாக்களும் தேவரீரேயாம் ; அன்றி எனது ஆன்ம சகாயனும் தாமேயாகும் ; என் மனத்தில் நிலவும் வியாகுலாதிகளை யொழித்திடுவான் கருணைகூர்ந்து வந்தருளிய சற்குருநாதனும் நீயேயாம் ; ஆகலான் தேவரீரை யல்லாது பின்னோர் ஆதரிப்பாரையும் காண்கிலன் ; என்பது.

குறிப்புரை :—பிரமனும் மாலும் முன்னே சிவபரஞ் சுடரார் தம் திருவடிமுடி காண்பான் வேண்டி மிக வருந்தி அன்னமும் பன்றியுமாய் பாதலமும் மேல் வெளியுந் தேடிக் காணப்பெறாது மீண்டமைமையை ஈண்டு, 'அந்த மாதியும் அளப்பருஞ் சோதியே' யென்று அழகுபெற வழைத்தமை யென்க.

திரிசிரகிரி மேவிய மாதுர்பூதேசுரனையே தாயுமானவன் என்றனராகும். 'தொண்டருளத்துறை தூமணி' யாதலின், அடியார்தஞ் சிந்தை மேவிய தாயுமானவ னென்றனர். (10)

௰௧. காதிலோலையை வரைந்துமேற் குமிழையுங்
கறுவி வேள் கருநீலப்
போதுபோன்றிடுங் கண்ணியர் மயக்கிலெப்
போதுமே தளரா மல்
மாதுகாதலி பங்கனை யபங்கனை
மாட மாளிகை சூழும்
சேதுமேவிய ராமநாயகன் றனைச்
சிந்தை செய்மட நெஞ்சே.

பொழிப்புரை :—அறியாமையோடுங் கூடியுள்ள எனது மனமே! காதின்க ணணிந்துள்ள ஓலையெனும் பொற்பணியை துளைசெய்து பின் பாகத்துள்ள குமிழையும் வெறுத்து, மன்மதனுடைய கருமைவாய்ந்த கரிய நீலோற்பலத்தைப் போன்றுள்ள கண்கள் வாய்ந்த பெண்களது மயக்கிற் சிக்குண்டு நீண்ட நாளாகத் தளர்வுறாமல், (அதாவது கட்டுமுறாமல்), அன்பு மிக்குடையாளாம் உமாதேவியாரை இடப்பாகங் கொண்டவனும், அழிவிலாதவனும், மாடகூடங்கள் பொலியும் வீடுகள் சூழப்பட்டுள்ள இராமநாதேச்சுரனுமான எம் பரம கருணாநிதியைச் சதா சிந்திப்பாயாக.

குறிப்புரை :—அறியாமையா மனத்திற் கறிவுறுத்தலாக, பொற்பணி கொண்டு மயக்குறும் மங்கையர் மையல்பட் டழியாது சேது ஸ்தலமேவிய இராமநாதனைச் சிந்தித் துய்வாயென்பது முடிபு.

"மட்டூர் குழன்மங் கையர்மை யல்வலைப்
பட்டூ சல்படும் பரிசென் றொழிவேன்"—என்றார் அருணகிரியாரும் (11)

௰௨. அண்டமுமாய்ப் பிண்டமுமா யளவிலாத
வாருயிருக்கோருயிரா யமர்ந்தா யானுற்

கண்டவரார் கேட்டவரா ருன்னாலுன்னைக்
காண்பதல்லா லென்னறிவாற் காணப் போமோ
வண்டுளப மணிமார்பன் புதல்வனோடு
மனைவியொடுங் குடியிருந்து வணங்கிப் போற்றும்
புண்டரிக புரத்தினிநு தாந்தமௌன
போதாந்த நடம்புரியும் புனித வாழ்வே.

பொழிப்புரை :—வளமாயுள்ள துளசிமாலை சூட்டிய மார்பினனாய விண்டு தேவர் தமது குமாரராய பிரமனோடும் மனைவியாம் இலக்குமியுடனும் வாசமாயிருந்து கொண்டு வணக்கமுடன் தோத்தரித்து வந்துள்ள, ஸ்ரீ சிதம்பர க்ஷேத்திர சிற்சபா மண்டபத்திலே நாதாந்த மௌனமாகிய ஞான நிர்த்தனம் புரிந்தருள்கின்ற மேலாம் பரிசுத்த வாழ்வே ! அண்ட பிண்டங்களொன்று மிருவகையுமாகி அளவிடக் கூடாததான எல்லா வான்மாக்களுக்கும் உயிருக்குயிராகி நீ யெழுந்தருளி யிருப்பாயாயின், நின்னைக் கண்டுணர்ந்தார் யாவர் ? அன்றிக் கேட்டவர் யாவர் ? உன்னால் உன்னைக் காணப்பட்டாலல்லது என் புல்லறிவைக் கொண்டு காணவியலுமோ ! இயலாதென்றபடி.

குறிப்புரை :—ஸ்ரீதில்லைச் சிதம்பர க்ஷேத்திர பெரிய கோவிலின்கண் விளங்கும் ஸ்ரீ சிற்சபையிலே ஸ்ரீமதானந்த நடராஜ மூர்த்தியார் புரியும் அநவரத பரமானந்தத் திருநடனக் காக்ஷியானது எவர்க்கும் எளிதாய்க் கிடைக்கக் கூடியதன்றாம். அவ்வாறு யார்க்குங் கிடைக்கப்பெறின் அதுபூர்வ ஜென்ம தவப்பயனே யென்பது நிராடங்க சித்தாந்தமாகும். ஏன் ? அது சாமானிய ஊன நடனமன்று, ஞான நடனமாகும். அன்றி பூமண்டலமாம் விராட் புருடன்றன் இருதய கமல ஸ்தானமாதலி னென்க.

இன்னும், அவர் புரிந்தருளும் நடனம், பஞ்சகிர்த்திய சுத்த பரமானந்தத் திருநடனமாதலானும், நாத தத்துவ முடிவாகிய மகாதீதமாய்ச் சுட்டுணர்வாலன்றிச் சித்துணர்வாலறியத் தக்கதானும் என்க. இதுகொண்டே நமது மணிவாசகப் பெருமானும் தம் திருவாசகச் சிவபுராணத்திலே “ அவனருளாலே யவன்றாள் வணங்கி ” யென்றருளியும், “ காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக்காலே ” என்று பிறரும், “ கூர்த்த மெய்ஞ்ஞானத்தாற் கொண்டுணர்வார்தங் கருத்தி, னோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே ” யென்று அவரே மீண்டும் கூறலானும், இவ்வாசிரியர் ‘ உன்னாலுன்னைக் காண்பதல்லா லென்னறிவாற் காணப்போமோ ’ எனலாயினர்.

புண்டரிகம் - புலியாம். இதனாலேயே காரணப் பெயராக புண்டரிகபுரம் என வழங்கலாயிற்று. அன்றி வியாக்ரபாத மகரிஷியார் புலிக்கால் புலிக்கைகளோடும் அத்தலத்தே ஐயன் ஆநந்தத் தாண்டவ தரிசனார்த்த

மாக நெடுநாள் காத்திருந்த காரணத்தானும் அப்பெயர் வந்ததெனவுங் கூறுவதுண்டு. (12)

௰௩. பொறியிற் செறியைம் புலக்கனியைப்
புந்திக் கவராற் புகுந்திழுத்து
மறுகிச் சுழலு மனக்குரங்கு
மாள வாளா விருப்பேனோ
அறிவுக் கறிவாய்ப் பூரணமா
யகண்டா னந்த மயமாகிப்
பிறிவற் றிருக்கும் பெருங்கருணைப்
பெம்மா னேயெம் பெருமானே.

பொழிப்புரை :—என்னுணர்வுக்கு உள்ளுணர்வாகியும், எங்கணும் பரிபூரணமாகியும், கண்டிக்கப்பெறாத பரமானந்த சொரூபமாகியும் நீக்கமறும் நிறைவாகியுமுள்ள பெரிய காருணியமுள்ள பெருமானே! எமதிறையவனே! எனது ஐம்பொறிகளிற் சேர்ந்துள்ள ஐந்து புலன்களான பழங்களை எனது புத்தியாம் மரக்கிளையில் ஏறி நின்றிழுத்து, மயக்கமுற்றுச் சுழலாநின்ற மனமெனுமோர் குரங்கானது மாயும் படியாக வெறுமனே யிருந்து வருவேனோ!

குறிப்புரை :—உணர்விற்கு உள்ளுணர்வாயிருந்து உணருந் தன்மையாயிருத்தலானே அவ்விறைவனை 'அறிவுக்கறிவா' யென்றனர் போலும். சும்மாயிருத்தல் - மனஞ்சலனமற்றிருத்தல். அதாவது எதுவு மெண்ணாதோய்தல் என்க. ஆனால் இம்மனம் ஓர்கால் சஞ்சல புத்தியால் குரங்கையொக்கும். அதனாலே ஆசிரியர் மனக்குரங்கென்றார் மேற்பாசுரத்தால், இறைவனை முன்னிட்டு, இனியென் மனமானது சஞ்சலத்தினின்றும் விலகி சும்மாயிருக்கும் நிலையைப் பெற்றிடுவேனோ என்பது சாரமாயிற்று. (13)

௰௪. உரையுணர் விறந்து தம்மை யுணர்பவ ருணர்வி னூடே
கரையிலா வின்ப வெள்ளங் காட்டிடு முகிலே மாறாப்
பரையெனுங் கிரணஞ் சூழ்ந்த பானுவே நின்னைப் பற்றித்
திரையிலா நீர்போற் சித்தந் தெளிவனோ சிறியனேனே.

பொழிப்புரை :—சொல்லாநின்ற சொற்களின் எதுவாம் உணர்ச்சியுமாயும்படியாயுள்ள தம்மைத் தாமறிபவராகிய மேலோரது அறிவூடே கரையிலாத இன்பப் பெருக்கத்தை விளைவிக்கின்ற மேகமனையாய்! நீங்கப்பெறாத பரையென்பதாய கிரணங்கள் சூழ்ந்துள்ளதாம் சூரியனே! உன்

னைப் பற்றிய யான் அலையிலாத சமுத்திரம்போல மனமிகத் தெளிவு படுவேனோ !

குறிப்புரை :—கைம்மாறுகவாக் கருணையாளனுனதால் இறைவனை முகிலெனலாயினர். சூரியனுக்கு கிரணமெவ்வாறு உரிமையோ அவ்வாறு கவே இறைவர்க்குப் பரையென்பாள் உரிமையாளெனவறிக. (இறைவனெங்கோ பரையுமங்காம்.) இதனாலேயே 'பரையெனும்கிரணஞ் சூழ்ந்த பானு' வென்றனர் போலும். சிவன்,—சிவை யென்பதுபோல பரன்—பரை யென்பதாயிற்று. (14)

௰௫. கேவல சகல மின்றிக் கிழொடு மேலா யெங்கு
மேவிய வருளின் கண்ணாய் மேவிட மேலா யின்பந்
தாவிட வின்பா தீதத் தனியிடை யிருத்தி வைத்த
தேவெனு மௌனி செம்பொற் சேவடி சிந்தை செய்வாம்.

பொழிப்புரை :—நினைத்தல் மறத்தல்களில்லாது கீழ்மே லெங்கணும் பொருந்தியுள்ள திருவருட் சத்தியின் கண்களாகி அடியவன் அமைந்திடவும், பரானந்த மேற்கொண்டு சிறப்புறவும், ஆனந்தாதீதமாயுள்ள யேகாந்த நிலையில் எளியேனை நிலைபெறச் செய்த தெய்வமாகிய மௌனானந்த பரம குருவினது செம்பொற் கழல்தரித்துள்ள திருப்பாத மலர்களைத் தியானஞ் செய்வோம்.

இன்பாதீதமாயுள்ள ஓர் ஒப்பற்ற தனி நிலைக்கண் இருத்தியருளிய கருணாகர மௌனாசிரியர் தம் திருவடிக் கமலங்களைச் சிந்தித் துய்வாமென்பது முடிபுரையாகும்.

குறிப்புரை :—கேவலம், சகலம் - நினைத்தல், மறத்தல் என்க. இதனையே இராப்பகலென்பதாகவும் வழங்குவது. ஆகவே நினைத்தல் மறத்தலாதியவற்ற நெஞ்சகத்தில்தான் இறைவன் வசிப்பன் என்க. (15)

௰௬. நேற்றுளா ரின்று மாளா நின்றன ரதனைக் கண்டும்
போற்றிலே நின்னை யந்தோ போக்கினேன் வீணே காலம்
ஆற்றிலே னகண்டானந்த வண்ணலே யளவின் மாயைச்
சேற்றிலே யின்னம் வீழ்ந்து திளைக்கவோ சிறியனேனே.

பொழிப்புரை :—நேற்றைய தினம் ஜீவதசையிலுள்ளார் இன்று சவ்திசை யடைந்தனர் என்பதைக் கண்கூடாகப் பார்த்தும், (முக்காலமு முள்ளவனாய தம்மைத்) துதிசெய்து வணங்கினேனில்லை ; ஐயோ ! என் காலத்தை அவமாகக் கழித்துவிட்டேனே ! இனி இவ்வாறான துன்பங்

களைப் பொறுக்க வல்லேனல்லன்! பேரானந்தப் பெருந்தகையோய்! இச்சிறியனேன், அளவிடற்கரிய மாயா சேற்றின்கண் அழுந்திக் கிடந்து இன்னமும் துன்ப மனுபவிக்கவோ வந்தவாறு!

குறிப்புரை:—சான்றாகத் திருவள்ளுவரும் தேகானித்தியத்தைப் பற்றி,—

'நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு'—என் றருளினர்.

நெருனல்—நேற்று. 'வருகணத்து வாழ்ந்திடுமோ வீழுமோ விம்மலக் கூடென் றறிஞரெலாம் வருந்தக் கேட்டும்' என்றார் பிறரும். ஆகவே தேகவியற்கை இவ்வாறாயிருக்கிறபோது, காலமெலாம் துன்பத்திற்கே யாட் பட்டேனாயின் பரம வின்பத்தினைப் பெற பாடுபடுவது எக்காலமோ வென்று இறைவன் முன்னிலையாய் வருந்தி முறையிடலாயினர். (16)

௰எ. போதமென்பதே விளக்கொவ்வு மவித்தை பொய்யிருளா
தீதி லாவிளக் கெடுத்திரு டேடவுஞ் சிக்கா [ம்
காத லாலறி வாய்நின்ற விடத்தறி யாமை
யேது மில்லையென் றெம்பிரான் சுருதியே யியம்பும்.

பொழிப்புரை:—இங்கே, அறிவென்பது தீபத்தையொக்கும்; அறிவிலா வஞ்ஞானம் பொய்யாகிய இருளினை நிகர்க்கும்; ஆகவே, குற்றமற்ற தீபங்கொண்டு இருளைத்தேட, அது காணப்பெறுவதின்றாம்; அதுபோலவே ஞானமயமாய் விளங்கியுள்ளபோது அஞ்ஞானமென்பதே கிடையாதென்று எம்பெருமானால் ஆக்குவித்துள்ள வேத சாஸ்திரங்களே விகசிதமாக் கூறுமென்க.

குறிப்புரை:—'ஒளியின்முன் இருள் எங்குமில்லை' என்பதொக்க மெஞ்ஞானத்தின் நிலையில் அஞ்ஞானம் நிலைபெறாதென்பது கருத்தாம். ஆசிரியர் சரீர அநித்தியத்துவத்தைக் கருதி திருவருட் சத்தியின் கிருபா பிரசாதம் பெற்று மெஞ்ஞானானந்த முறுமாறு இறைவன்பால் மன்றாடுகின்றார் என்பது பெறப்பட்ட தென்க. (17)

௰அ. சுருதி யேசிவாக மங்களே யுங்களாற் சொல்லும்
ஒருத னிப்பொரு ளளவைவீ தென்னவா யுண்டோ
பொருதி ரைக்கட னுண்மணலெண்ணினும் புகலக்
கருத வெட்டிடா நிறைபொரு ளளவையார் காண்பார்.

பொழிப்புரை :—வேதங்களே! சைவாகமங்களே! உங்களிருவர்களாலும் விசேடமாக முழக்கப்படும் ஒப்புவமையற்ற ஒரு தனிப்பரம் பொருளினது கணக்கு இவ்வளவினதென்று நிச்சயமாக்கூற உங்களுக்கு வாயுண்டேயோ? இருகரையையுந் தாக்கிக் கெடச்செய்யும் அலைகளைக் கொண்ட கடலின் கண்ணுளவாய சிறுமணல் களம் மட்டையும் எண்ணித் தொகைசெயினும், இத்தகைமைத்தெனவாய் கொண்டுரைக்கவும், மனத்தால் கருதவும் சாத்தியமல்லாத எங்கு நிறை பூரணப் பொருளின் தத்வ அளவினை யாவரோ காணத்தக்கார்!

குறிப்புரை :—சுருதியே ஆகமங்களே யென்றது :—வேதாகமங்களை விளித்தலாகும். இவைகளை நோக்கி உங்களால் அளவறிந்துரைக்கற் பாலதோ வென்றதால், சாத்திய மன்றென்றும் பொருள்தரா நின்றதென்க.

> "எண்ணுதற்கெட்டா வெழிலார் கழலிறைஞ்சி
> விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியா
> யெண்ணிறந்தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
> பொல்லாவினையேன் புகழுமா றொன்றறியேன்."—என்ற வாதவூராளியார் வாக்கானும் அவரளவை கூறவியலாமையே போதிய சான்றுமென்க. (18)

௰௯. மின்னைப் போன்றன வகிலமென் றறிந்துமெய்ப் பொருளாம்
உன்னைப் போன்றநற் பரம்பொரு ளில்லையென் றோர்ந்து
பொன்னைப் போன்றநின் போதங்கொண் டுன்பணி பொருந்தா
வென்னைப் போன்றுள வேழைய ரையவிங் கெவரே.

பொழிப்புரை :—அண்டபிண்டாதி சகல பிரபஞ்சங்களும், வானமின்னலைப்போலவே நிலையுள்ளனவல்ல வென்றறிந்து நித்திய பொருளாகிய நின்னை யொத்த உத்தமோத்தமமான பரம்பொருள் வேறில்லையென்று நன்காய்ந்தறிந்து, பொன்போற் சிறப்புற்ற நீயளித்தருளிய ஞானப்பிரசாதத்தால் நினக்குரிய அரிய திருத்தொண்டினை செய்ய முற்படாத என்னை யொத்த பேதையர்கள் ஐயனே! இங்கே அதாவது இந்நிலவுலகின்கண் யாவர்? (எவருமில்லை யென்பது.)

குறிப்புரை—மிகப்பரந்து காணப்படுகின்ற நாமரூபப் பிரபஞ்சாதிகளனைத்தும் மின்னல் போன்றழிவன வென்றார். ஏன்? இத்தன்மையுணர்ந்து அதிவிரைவாய் ஆத்துமலாபத்தி வீடுபடவேண்டு மென்பது கொண்டே தோன்றி மறையு மின்னலை யுவமை கூறினரென்க.

பொய்யினும் பொய் பிரபஞ்சமென்றும், மெய்யினு மெய் இறைவனே யென்றும் தெள்ளிதிற் புலப்படக்கூறினர் இதனால், 'விரைவாக பொய்யை விட்டு மெய்யைத்தழுவு' என்பது தோன்ற நின்றது. சான்றாக :—

கேவலச்சனகன் முன்னாள் கேள்பகையிரண்டுமின்றி
மேவிய சுத்தமென்று மெல்லணை மீதிருந்து
சாவுயர் பிறப்புமில்லாத் தத்துவச் செங்கோலோச்சிப்
பாவனையிலாத கானம்படர்ந்தரு மாறினானே.—எனச் சிவ ஞான முனிவர்கள் கூறிய தறிக. (19)

உ௰. தாயுந் தந்தையு மெனக்குற வாவதுஞ் சாற்றின்
ஆயு நீயுநின் னருளுநின் னடியரு மன்றோ
பேய னேன்றிரு வடியிணைத் தாமரை பிடித்தேன்
நாய னேயெனை யாளுடை முக்கணு யகனே.

பொழிப்புரை :—அன்னையும் பிதாவும் எளியேற்கு மேலாகிய சுற்றத்தினரும் சொல்வேனாயின், அறிவு நூல்களாலாய்ந்தறிய, நீயும் நினது பேரருளும் நின் மெய்யடியவர்களுமன்றோ வாவர்; இவ்வாறுயுணர்ந்தே, நினது ஒப்பற்றதாயுள்ள திருவடித்தாமரைகளை இந்தபேயை யொத்தேனும் (மர்க்கடபிடியாக்) கொண்டு பற்றியுள்ளேன்; சர்வான்ம கோடிகட்கு மிறைவனே! எளியேனை யாண்டருள் செய்யு முரிமை கொண்டருளிய திரிநேத்திர பரனே!

குறிப்புரை :—

அப்பனீ யம்மைநீ யையனுநீ
யன்புடைய மாமனு மாமியுநீ
யொப்புடைய மாதருமொண் பொருளுநீ
யொருகுல்முஞ் சுற்றமு மோரூரு நீ,—யென்றார், அப்பர் சுவாமிகளும்; இந்நூற்கு இறைவர், இறைவனை பிதாவாயும், அருட்சத்தியை மாதாவாகவு மாக்கிக்கொண்டனர். 'எந்தாயுமெனக் கருடந்தையுநீ' யென்றார் அருணகிரியாரும். (20)

உக. காந்தமதை யெதிர்க்காணிற் கருந்தாது செல்லுமந்தக்
காந்தத் தொன்று
தேய்ந்தவிட மெங்கேதா னங்கேதான் சலிப்பறவு
மிருக்குமா போல்
சாந்தபதப் பரம்பொருளே பற்றுபொரு ளிருக்குமத்தா
சலிக்குஞ் சித்தம்

வாய்ந்தபொரு ளில்லையெனிற் பேசாமை நின்றநிலை
வாய்க்கு மன்றே.

பொழிப்புரை:—காந்த முற்பட்ட இரும்பானது தானே சென்று அக்காந்தத்தினை யடையுமாறு போலாயினும், அதனோ டொன்று படலின்றாம். அவ்வாறாக, மனத்திற்கு விஷய எதிரீடுளவாயின் சலன முற்றதாகும்; எதிரீடின்றாயின் சலனமற்றிருக்கும் என்க, அது போன்றே, பரமசாந்தமாயிரா நின்ற பரம வஸ்துவே! பற்றற்கானபொருள் இருப்பதால் மனமானது அசைவிலாது நின்று விடுமென்க; பொருந்தாநின்று பொருளிலதாயின் பேசாத மௌன நிலை வந்தமையு மென்க.

குறிப்புரை:—இதனைக் கைவல்யகாரரும் விளக்கினதறிக.—

செய்கையுஞ் செய்விக்கையு மற்றிருக்குங் காந்தச்
சிலைமலை முன்னிரும்புகள் சேட்டிக்குமாபோல்
செய்கையுஞ் செய்விக்கையு மற்றிருக்கு மென்முன்
செடமானவுலக மெலாஞ் சேட்டை செய்யும்
மெய்கலந்தவிந்திரிய விகாரரூப விவகார
விருத்திக்கும் விருத்தி தானாய்
மெய்கலந்த சமாதிக்குஞ் சாட்சியே நான்
வெயில்போ லென்றுரைத்தவனே விபுமாகர்த்தன்—என்பதால் நன்கு புலனாவதறிக. (பஞ்சலோகப் பொதுப்பெயர் - தாதுவென்க. (21)

உஉ. பொற்பு றுங்கருத் தேபக மாயதிற் பொருந்தக்
கற்பின் மங்கைய ரெனவிழி கதவுபோற் கவினச்
சொற்ப னத்தினுஞ் சோர்வின்றி யிருந்தநான் சோர்ந்து
நிற்ப தற்கிந்த வினைவந்த வாறென்கொ னிமலா.

பொழிப்புரை:—நிர்மலப்பொருளே! கற்புநிலை வாய்ந்த மங்கை போலும் அழகுள்ள சித்தமே வீடெனக்கொண்டும், நேத்திரங்கள் கபாடம் போன்று வனப்புறவும், கனவிலும் சிறிதேனும் பின்னிடையாதுள்ள யான், சோர்வெய்தற்கு இத்தீய வினையானது ஏற்பட்ட காரணம் என்னோ! கண்டிலேன்.

குறிப்புரை:—ஏ, இறைவ! நினக்கு என்றும் இடைவிடாத் தொண்டனாயிருக்கும் இவ்வேழை யடிமைக்கும் இவ்வாறாக வினைத்திட்பம் வந்துறலும் நியாயமோ! என்றபடி. (22)

உங. வந்தவா றிந்த வினைவழி யிதுவென மதிக்கத்
தந்தவா றுண்டோ வுள்ளுணர் வின்றித் தமியேன்
நொந்த வாறுகண் டிரங்கவு மிலைகற்ற நூலால்
எந்த வாறினித் தற்பரா வுய்குவே னேழை.

பொழிப்புரை:—இவ்வினைப்பயனானது வந்தவிதம் இன்னதென்று கண்டுணர்தற்குரியதாய அகத்துணர்வெனக் களித்தது முண்டோ, இல்லையே, தவிர, இவ்வடிமையாய யான் துன்புற்ற தன்மையையறிந்து சற்றேனும் இரக்கமுற்று திருவருள் சுரந்தாயுமில்லை! தற்பர மூர்த்தியே! அறியாமை மிக்குடைய இவ்வேழையேன், கற்றநூற் கல்வி கேள்வியைக் கொண்டு எவ்வாறு இனி பிழைக்கப்போகிறேன்!

குறிப்புரை:—இறையவனே! நினது அரிய திருவருட் போதத்தைத் தந்தருளாவிடின், என் கற்றநூற் கருத்து கொண்டே எவ்வாறு கடைத்தேறப் போகிறே னென்பது கருத்தாம்.

சான்றாக அப்பர் சுவாமிகளும்.

'எண்ணுகே னென்சொல்லி யெண்ணுகேனோ
வெம்பெருமான் றிருவடியே யெண்ணினல்லால்'—என்றனர். (23)

உச. சொல்லாலும் பொருளாலு மளவையாலும் [நாடி
தொடரவொண்ணு வருநெறியைத் தொடர்ந்து
நல்லார்க ளவையகத்தே யிருக்கவைத்தாய்
நன்னர்நெஞ்சந் தன்னலமு நணுகுவேனோ
இல்லாளி யாயுலகோ டுயிரை யீன்றிட்
டெண்ணரிய யோகினுக்கு மிவனே யென்னக்
கல்லாலின் கீழிருந்த செக்கர் மேனிக்
கற்பகமே பராபரமே கயிலை வாழ்வே.

பொழிப்புரை:—சகலமான அண்ட புவனங்களும், அவற்றிலுள்ள எல்லா ஆன்மாக்களையும் சம்சாரிகளாய்த் தோன்றியிருக்கச் செய்தும், நினைத்தற்கு மியலரிதாய இராஜயோக மார்க்கத்திற்கும் ஆதாரபூதனைச் சிறந்தோன் இவனேயென்று கூறத்தக்கதாக கல்லால விருக்ஷத்தடியில் எழுந்தருளியுள்ள செவ்வானத் தன்மைவாய்ந்த கற்பக விருக்ஷம் போன்றவனே! பராபரப் பொருளே! கயிலை மலையில் மேவியுள்ளோய்! வசனத்தாலும், அதன் அர்த்தத்தினாலும், மற்றும் பிற அளவைகளாலும் பற்றுதற்கியலாத திருவருள் மார்க்கத்தினைப் பற்றிச் சென்று உத்தமோத்தமர்களது

கூட்டத்தின்கண் சேர்ந்திருக்குமாறு செய்தாயே! நலமிக்க மனத்தினலாய பலனையும் அடையப் பெறுவேனே!

குறிப்புரை :—திருவருண் முறைமையினை வாய் வார்த்தையினலும், மற்றும் அவ்வாறன வார்த்தைக்குரிய அர்த்த வாதங்களானும், ஓர் அளவையால் கணிதத்தானும் தொடர்ந் தறிதற்கியலா தென்றனர்; ஆனலும் அத்தகைய ஒப்புவமை யில்லாத பெருமை வாய்ந்த நன்னெறியினைத் தமியேன் பற்றச் சென்று மெய்யடியவர் கூட்டத்திலிருக்குமாறு மருளினை! இது நின் பேரருளேயாம்.

மெய்யன்பர் வேண்டுவன வளிக்குங் கருணையாளனனது கொண்டே கற்பகமெனக் கற்பனைசெய்தும், அதோடும் நில்லாது, தேவலோக கற்பகத்தை யெண்ணுமையாகக் கல்லாலின் கீழிருந்த செக்கர்லான் கற்பகமென்று தக்ஷிணமூர்த்தமாய பரம குருநாதனைக் குறித்துரைத்தன ரென்க.

இல்லாளியாய் என்பது,—இல்வாழ்வான் போன்று உலகையும் உயிர்களையும் படைத்துக் காத்து வந்தவென்று பொருள் கொள்ளினும் அமையும். "கயிலாயகிரியின் தென்பாரிச அடிவாரத்துள்ள கல்லாலவிருக்ஷ நீழலி லமர்ந்துள்ளதால் கயிலை வாழ்வே" யென்று இறைவனை யேத்தின ரென்க. (24)

உரு. சாக்கிரமா நுதலினிலிந் திரியம் பத்தும்
சத்தாதி வசனதி வாயுபத்தும்
நீக்கமிலந் தக்கரணம் புருடனேடு
நின்றதுமுப் பானைந்து நிலவுங்கண்டத்
தாக்கியசொப் பனமதனில் வாயுபத்தும்
அடுத்தனசத் தாதிவச னதியாக
நோக்குகர ணம்புருட னுடனே கூட
நுவல்விரு பத்தைந்தா நுண்ணி யோரே

பொழிப்புரை :—பத்திந்திரியங்களும், சத்தாதி வசனதிகளான விஷயங்கள் பத்தும், தச வாயுக்களும், நீங்கப் பெறுத அந்தக் கரணங்கள் நான்கும், ஆன்மாவுடனே முப்பத்தைந்தும் லலாடத்தில் பொருந்தியுள்ள அவத்தை சாக்கிர மாகவும், விளங்காநின்ற கண்டஸ்தானத்தில் அமைந்துள்ள சொப்னவஸ்த்தையில் தசவாயுக்களும், அடுத்துள்ளனவாய சத்தாதி வசனதிகளாகிய பத்து விஷயங்களாகப் பார்க்கப்படுகிற அந்தக் கரணங்களானவை நான்கும் ஆன்மாவுடனே சேர்ந்திருக்க இருபத்தைந்து தத்துவங்களாகவும் நுண்ணிய வறிவினர்கள் கூறுவர்கள்.

குறிப்புரை :—இந்திரியாதிகள் பத்தாவன :—மெய், வாய், கண், மூக்கு, செவி யெனும் ஞானேந்திரியங்கள் 5. வாக்கு, பாதம், பாணி பாயுரு, உபத்தம் என்னும் கர்மேந்திரியங்கள் 5 ஆக பத்தாகும். சத்தாதி வசனுதிகளான விஷயங்கள் பத்தாம். அவை : சப்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தம் என்னும் ஞானேந்திரிய விஷயங்கள் ஐந்தும், வசன, கமன, தான, விசர்க்க, ஆனந்தம் ஆகிய கர்மேந்திரிய விஷங்கள் ஐந்தும் ஆக பத்துமாம். பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் என்னும் தசவாயுக்களாம். மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக்கரணங்கள் நான்காம். (25)

உகூ. சுழுத்தியிதயந்தனிற்பி ராணன் சித்தம்
சொல்லரிய புருடனுடன் மூன்றதாகும்
வழுத்தியநா பியிற்றுரியம் பிராணனோடு
மன்னுபுரு டனுங்கூட வயங்காநிற்கும்
அழுத்திடுமூ லந்தன்னிற் றுரியாதீதம்
அதனிடையே புருடனொன்றி யமருஞானம்
பழுத்திடும்பக் குவரறிவ ரவத்தை யைந்திற்
பாங்குபெறக் கருவிநிற்கும் பரிசுதானே.

பொழிப்புரை :—இருதய ஸ்தானத்தின்கண் சுழுத்தி யவத்தை நிகழும் ; ஆங்குள்ள கருவிகளாவன :—பிராணவாயு, சித்தம், சொலற்கு அரிதாய ஆன்மா, ஆக மூன்றுமாம். சொல்லாநின்ற நாபி ஸ்தானத்தில், துரியாவத்தையாகும் ; ஆங்கேயுள்ளன.—பிராணவாயு, நிலையுற்றதான ஆன்மாவும் கூடியே விளங்கும் ; அழுத்தல் செய்யும் குத்மெனும் கடைவாய் ஸ்தானத்தில் துரியாதீத அவத்தையுள்ளன ; அதோடுங்கூட ஆன்மாவானது தன்னந் தனியே வியாபித்துள்ளதாம் ; இவ்விதமாக ஐந்தவத்தையின் கண்ணும் கிரமமாக கருவி நிற்கின்ற தன்மையினை முதிர்ந்த ஞான பராளாயுள்ள பெரியார்கள் நன்குணர்ந் திருப்பார்கள்.

குறிப்புரை :—இவ்வாறுன பஞ்சாவஸ்த்தைகளினும் கருவி கரணங்கள் பொருந்தியுள்ள நிலவரத்தை உண்மை மோனியர் உணர்வரேயன்றி ஏனையோ ரேது முணரா ரென்க. (26)

உஎ. இடத்தைக் காத்திட்ட சுவாமெனப் புன்புலா விறைச்சிச்
சடத்தைக் காத்திட்ட நாயினே னுன்னன்பர் தயங்கு
மடத்தைக் காத்திட்ட சேடத்தால் விசேடமாய் வாழ [ம்.
விடத்தைக் காத்திட்ட கண்டத்தோய் நின்னருள் வேண்டு

பொழிப்புரை :—தன்னையாதரித்து வரும் ஆவலாளர்க்குக் காவல் செய்து வரும் நாய்போன்று கேவலமான மாமிசவாடை வீசத்தக்க தசையுருவாகிய உடலைக் காத்து வந்த நாயேன் நின் மெய்யடியவர் வசிக்கும் மடாலயத்தைக் காவல் செய்து கிடந்து அன்னூர் கழித்துள்ள போசனமிச்சமான உச்சிட்ட விசேஷத்தினாலே (யான் திருப்தி யடைந்து) விசேடித்து வாழ்வான் வேண்டி, (அந்நாளில்) ஆலகால விடத்தினையுண்டு கண்டத்திருத்தியருளிய நீல கண்டத்தோய், தேவரீர்தம் திருவருட் பிரசாதத்தினை மீளா அடிமை விரும்புவன்.

குறிப்புரை :—மடம் - தவசியர் தங்குமிடம். நின்னன்பரென்றமை கொண்டு, தான் தன்னை விலக்கிக் கொண்டதாயின ரென்க ; ஆகவே, அவனருள் கொண்டே அவனன்பராதல் வேண்டு மென்னும் உட்கிடை தோன்ற நின்ற தென்க.

இன்னும், உண்டற்குரியதாகா விடத்தை யுண்டற்குரியதாக் கொண்டற்குரிய முறையான், பரிபக்குவ னல்லானேனுக்கும் பரிபக்குவம் வரிக்க அருள் புரிதலியையு மென்று வேண்டுதல் பொருந்து மாறுணர்க. சுவா - நாய். சுவானம், வடமொழியாகும். 'நாயினுங் கடையேன், பேயினு மிழிந்தேன்' என்றூர் பெரியார் பலரும். பெரியார் உச்சிட்டம் உண்டார், பெரியாராதல் பெரிதாகா. உச்சிட்டம் - எச்சில். (27)

உஅ. வாத னைப்பழக் கத்தினன் மனமந்த மனத்தால்
ஓத வந்திடு முறையுரைப் படிதொழி லுளவா
மேத மம்மன மாயையென் றிடிற்கண்ட வெல்லாம்
ஆத ரஞ்செயாப் பொய்யதற் கையமுண் டாமோ.

பொழிப்புரை :—மனமானது இயல்பாய வாசனைப் பழக்கத்தினாலே ஓர் வகைப்பட்டிருக்கும் ; கூறுங்கால், அம்மனத்தினாலே வார்த்தை தோன்றுமாம் ; அவ்வார்த்தையின் பிரகாரமாக வினை இயையுமென்க ; ஆகவே, குற்றமாய அம்மனமானது மாயையே யென்று போறிஞர் பேசுவாரானல், காண்பதனைத்தும் விருப்ப முறுதபடி பொய்யேயாகும்; அவ்வாறு கூறுவதற்குச் சந்தேகங்கூட எவர்க்குந் தோன்றப்படுமோ !

குறிப்புரை :—மாயா காரியமாயுள்ள இந்த நாமரூபப் பிரபஞ்சாதிகளனைத்தும் மனோவிகாரத்தான் தோன்றுவ தென்றற்கே இங்ஙனங் கூறி வந்தனர் போலும். மனப்போக்கே வார்த்தையும், அவ்வார்த்தையின் போக்கே வினை நிகழ்வும் ஆகுமென்க ; ஆகவே, பார்க்கப்படு பொருளனைத்தும் அன்பு கொளப் பெறுத கேவல மித்தை என்றனர் போலும், (28)

உக. ஐய வாதனைப் பழக்கமே மனநினை வதுதான்
வைய மீதினிற் பரம்பரை யாதினு மருவும்
மெய்யி னின்றொளிர் பெரியவர் சார்வுற்று விளங்கிப்
பொய்ய தென்பதை யொருவிமெய் யுணருதல் போதம்.

பொழிப்புரை :—ஐயனே! வாசனைப் பழக்கமாய தெதுவோ அதுவே மனத்திற் பிரதி பலிக்கும் எண்ண மாகும்; அந்த வாசனையே இவ்வுலகின் கண் வாழையடி வாழையாய்ப் பற்றி வருவதாகும்; சகல பதார்த்தங்களி னும் பொருந்தி யுள்ளதாகிய எதார்த்தப் பொருளின்கண் ணிலையுற்று, அது கொண்டு தோன்றா நின்ற மகான்களாது நேசங் கொண்டறிந்து மித்தை யெனக் கூறுவதை விலக்கி நின்று உண்மையை யுணர்தலே ஞானமென் பாம். சான்றாகக் கைவல்யக்காரரும் :—

குறிப்புரை :—"பொய்யை மெய்யென்ற மூடர் புண்ணியரென்று புராணங் கூப்பிடுமானால், மெய்யை மெய்யென்ற ஞானிக்குக் குற்றங்கள் விதித்த சாத்திரமுண்டோ, பொய்யதே தெனினும ரூபங்களாம் பூதமாகிய மாயை, மெய்யதேதெனிற் சச்சிதானந்தமாய் வியாபிக்கும் ஆன்மாவே"

சான்றாக மணிவாசகரும்

"பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெஞ்ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே"—என்றார்.
'பொய்யை யொழித்துப் புறப்பட்டேன் மன்றாடும்
ஐயரைக் கண்டேனடி'—என்றார் மற்றுமோர் பெரியாரும். இத னால், பொய்யுள்ளகாறும் புனிதன் றிருவருள் பொருந்தாவாகலானே, இங்கு ஆசிரியரும் 'பொய்யதென்பதை யொருவி, மெய்யுணர்தல் வேண்டு' மெனலாயின ரென்க. (29)

கூ௰. குலமி லான்குணங் குறியிலான் குறைவிலான் கொடிதாம்
புலமி லான்றனக் கென்னவோர் பற்றிலான் பொருந்தும்
இலமி லான்மைந்தர் மனைவியில் லானென வனவன்சஞ்
சலமி லான்முத்தி தரும்பர சிவனெனத் தகுமே.

பொழிப்புரை :—தனக்கோர் குலங்குறியாதும், மற்றும் குணங் குறி யென்கின்ற நாம ரூபாதிகளற்றும், எதனானும் சிறிதுங் கீழ்மை யுறாதவ னும், தீய விஷயானுபவங்க ளொழிந்தும், இன்னும் தனக்காக எவ்வித தொடர்பு மில்லாதும் மேவி வாழும் மனை முதலியன வின்றியும், பெண்டு பிள்ளைக ளற்றவனும், ஆகிய இத்தன்மையுள்ளான் எவனோ அவன் மனோச

லனங்க ளொழித்தும், மோக்ஷ மளித்தற் கேதுவாய பரமேசானு மாவ னெனக் கூறத்தக்கவனும்,

குறிப்புரை —'ஒருநாம மோருவ மொன்றுமில்லாற் காயிரந்
திருநாமம் பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமோ'
யென்று வாதவூரார் அருளியவாறாகவும்,

வெண்பா.

அதுவேநீ யானுயென் றருமறைகள் சொல்லு
மெதிர்சிவனே நீயானு யென்னு—முது நூலும்
வேறுவே றன்றேசொல் வேதியனே விண்விசும்பும்
வேறுவே றன்று விளம்பு.—என்றவாறு ஈசனுக் கொப்பான்
ஞானியே யென்று வேதாகமாதிகள் விளம்பும். (30)

௩௧. கடத்தை மண்ணென வுடைந்தபோ தோவிந்தக் கருமச்
சடத்தைப் பொய்யென விறந்தபோ தோசொலத் தருமம்
விடத்தை நல்லமிர் தாவுண்டு பொற்பொது வெளிக்கே
நடத்தைக் காட்டியெவ் வுயிரையு நடப்பிக்கு நலத்தோய்.

பொழிப்புரை:—கொடிய நஞ்சினை மேலாகிய சாவாமிர்தமாகக் கொண்டருந்தி பொன்னம்பல மெனும் ஞானகாயச் சபைக்கண் நிருத்தஞ் செய்து உலகான்மகோடிகளை யெலாம் ஆடுமாறு செய்து வாராநின்ற நன்னலங் கொண்டோய்! மட்பாண்டத்தினை உடைபட்டுப்போன அந்த சமயத்திற்றானே மண்ணென்றுரைக்க மனமொவ்வும்! இருவினை காரணமாய்த் தோன்றி வந்திருக்கிற இவ்வுடலை இறந்துபோன அச்சமயத்தில் தானே பொய்யுடலென்று கூறுதல் தருமமாகும்?

குறிப்புரை:—மட்குடம் உடையாதுள்ளபோதே மண்ணெனல் நன்கு புலனுதல் போன்று இந்தவுடலும் மாய்வதற்கு முன்னரே கேவலம் பொய் யுடலெனத் தெரிந்து கொள்ளலே முறையாகு மல்லவா? யென்பதுவே சாரமாக் கொள்க. ஒருவன் ஓர் காரிய மியற்றி அதில் வெற்றி கண்ட போது அவன் மனம் களிப்புற்று களியாடல் புரிதல் இயர்க்கையாமாறு போல எம்மானும், மாயுங் குணம் வகித்த நஞ்சயிற்று, அதனுல் துன்புறாது அதை மாய்த்தமையால் அகங்களிகொள்ள ஆநந்த நடமாடின ரென்க. வியாதியை யொழிக்கும் மருந்தென்னும் அமிர்தப்பெயர், சாவாதிருக்குங் குணத்தை யுடைமையால் அதை 'நல்லமிர்தாவுண்டு' என்றூர் போலும். இறைவன் ஆன்மாக்களுக்குரிய படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் பஞ்சம் கிருத்தியங்களைக் கொண்டு நடிக்கும் நடனமாதலாலும், அந்நடனம் பொற்பொதுவில் நடத்தி வரலானும் 'பொதுவில் நடிக்கும்

நலத்தோய்' என்று விசேடித்தன வென்க. பொது - ஈண்டு சபையாம் பொற்பொது, பொற் சபை யெனவும், அழகார்ந்த சபையெனவுங் கொள்ளற் பாலது. சடம் - உயிர் நீங்கிய சரீரத்தை யென்க. (31)

௩௨. நானெனவு நீயெனவு மிருதன்மை நாடாம
 னடுவே சும்மா
தானமரு நிலையெனவே சத்தியஞ்சத் தியமெனநீ
 தமிய னேற்கு
மோனகுரு வாகியுங்கை காட்டினையே திரும்பவுநான்
 முளைத்துத் தோன்றி
மானதமார்க் கம்புரிந்திங் கலைந்தேனே பரந்தேனே
 வஞ்ச னேனே.

பொழிப்புரை:—யான் என்றும், நீ யென்றும், இருதன்மையாக வேறுபட்டுப் பாராமல் இடையில் சர்வமும் அடக்கி நிற்கின்ற பெருநிலை இதுவேயாகும், உண்மை! உண்மை!! யென்றே நீ இவ்வெளியனுக்கு மௌனகுருவாசிரியனாக வந்தருளி கையினை யமைத்து உண்மையாகிய தத்துவ நிலையினைக் காட்டி யருளினையே! அங்ஙனங் காட்டியருளியும், மீண்டும் யான் ஜெனனமாய்வந்து மனதாலாகும் வழியினையே அன்புற்று இவ்விடத்திலே அலக்கணுற்று விஷயாதிகளிலே பரவி வந்தேனே! இப்பாபிஷ்டனேனாதலால் என்பது.

குறிப்புரை:—மானத மார்க்கமாவது, மனத்தின் வழியே பின் பற்றி நடத்தல் என்க. இது பிசகு. அறிவின் வசம் செல்லல் வேண்டு மென்க.

இறைவனை நோக்கி, நீ எளியன் முன்பதாக மௌனகுருவாசிரியனாய் வந்தருளி சிறிதும் பேத பாவனையன்றி சும்மாயிருப்பதுவே யதார்த்த நிலையா மென்று திருக்கரங் கொண்டருளினை; யான் மிகவும் பாபிஷ்டனாதலினாலே அந்நிலைகொண்டு தெளிவுறாது, இன்னும் என் மனம் போன போக்கிலேயே சென்று வருகின்றேன் என்பது கருத்துரையா மென்க. (32)

௩௩. தன்மயஞ் சுபாவஞ் சுத்தந் தண்ணருள் வடிவஞ் சாந்தம்
மின்மய மான வண்ட வெளியுரு வான பூர்த்தி
என்மய மெனக்குக் காட்டா தெனையப கரிக்க வந்த
சின்மய மகண்டா காரந் தக்ஷிணா திக்க மூர்த்தம்.

பொழிப்புரை:—தக்ஷிணாமூர்த்த சொரூபமானது, சகலமுந் தானாகவே யிருந்தருளும் சுபாவமும், செயற்கையின்றி யியற்கையாயுள்ள சுபா

வமும், ஆன்மாக்களது மாயாமல வழக்கினை யொழித்தலாகிய சுத்தமும், தண்ணருள் சொரூப மாயும், தாபந்தீர்ந்து விசிராந்தி யடையும் ஸ்தான மாகிய சாந்தமும், மின்னொளிவான அண்ட வெளியிலே சொரூபமாய் நிறைந்தும் உள்ள எனது வடிவத்தினை எனக்கு மறைத்து என்னைக்கவரு மாறு வந்த ஞான சொரூபமும் அகண்டாகாரமுமாகும் என்ப.

குறிப்புரை :—பிரகிருதி வசமாயிருந்து வந்த அஞ்ஞான ரூபத்தையே என் மயமென்றதாம் ; ஞானாகாயத்தின்கண் தேசு நிறமாய் விளங்குவதையே 'மின்மயமான வண்டவெளியுரு வென்றேதினர். என் மயமெனக்குக் காட்டாதெனை யபகரிக்கவந்த சின்மய மென்றது,—தற்போத நிலையை அறவே கெடுத்தலை யென்க ; மற்றும் கண்டிக்கப் படாமையால் அகண்டாகார மென்றும் கூறினா ரென்க. (33)

௩௪. சிற்ற ரும்பன சிற்றறி வாளனே தெளிந்தால்
மற்ற ரும்பென மலரெனப் பேரறி வாகிக்
கற்ற ரும்பிய கேள்வியான் மதித்திடக் கதிச்சீர்
முற்ற ரும்பிய மௌனியாய்ப் பரத்திடை முளைப்பான்.

பொழிப்புரை:—சிறிய அரும்பினை யொத்ததான சிற்றறிவனுய ஜீவாத்மனே தெளிவுறுவானாயின், பெரிய அரும்பினைப் போன்றும், புஷ்பம் போன்றும் பேரறிவுடையோனாய்க் கற்கவேண்டும். அறிவு நூல்களெல்லாமுங் கற்றறிந்த கேள்வியினாலே அனைவரும் பாராட்டும்படியாக நற்கதிக்குரிய சிறப்பு வாய்ந்த குணங்களனைத்தும் உளனாகிய மௌன குருவாகி மோக்ஷ நிலையில் பிரகாசிப்பன் என்பது.

குறிப்புரை :—சிற்றறிவுடையோனே மெய்நூற் பழக்கத்தினாலும் கேள்வியாலும் திடப்பட்டு நாளடைவில் மேலான சிற்குணகாரனாய் ஞான மோக்ஷநிலை நிற்பன் என்க. (34)

௩௫. மயக்கு சிந்தனை தெளிவென விருநெறி வகுப்பால்
நயக்கு மொன்றன்பா லொன்றிலை யெனனல வழக்கே
இயக்க முற்றிடு மயக்கத்திற் றெளிவுற லினிதாம்
பயக்க வல்லதோர் தெளிவுடை யவர்க்கெய்தல் பண்போ.

பொழிப்புரை :—மயக்குற்ற நெஞ்சமென்றும் அம்மனத் தெளிவென்றும், இருவகையான ஏற்பாட்டில் விரும்பத்தக்கதான ஒன்றின்கண் ஒன்றில்லையாக் கூறுதல் உத்தமமான வழக்கமே யாகும் ; சஞ்சரிக்கும் மயக்கத்தினும் தேறத்தெளிவு பெறல் மிகவும் நன்றாகும். பயனுதலில் வல்லதாம் ஒப்பிலாத் தெளிவுடையவர்க்கு மயக்கம் வந்துறுதல் நலமாமோ ?

குறிப்புரை :—மயக்கத் தன்மையும், தெளிவுடைத்தன்மையும் மாறுபட்ட தன்மைத்தாதலின் தெளி நிலையாரிடத்தே மயக்குறுதலானது பொருந்துமா றன்றென்பது நன்கு புலனாகும் என்ப. (35)

௩௬. அருள்வடி வேழு மூர்த்த
மவைகள்சோ பான மென்றே
சுருதிசொல் லியவாற் றாலே
தொழுந்தெய்வ மெல்லா மொன்றே
மருளெனக் கில்லை முன்பின்
வருநெறிக் கிவ்வ ழக்குத்
தெருளின்முன் னிலையா முன்னைச்
சேர்ந்தியான் றெளிகின் றேனே.

பொழிப்புரை :—நின்னருட் டிருமேனியானது எழுவகை மூர்த்தமாயுள்ள தெனவும், அம் மூர்த்தங்களும் (நின்னைச் சார்ந்துய்தற்குப் படிகள் போன்றன வெனவும் வேதாதிகள் கூறியருளிய வாறாகவே (சகல சமயத்தவர்களும்) வ்ணங்கக் கூடியதான தெய்வம் ஒன்றேயாகும் ; முன்பின் வந்துள்ளதும் இனி வரவிருக்கும் சமயங்களுக்கு என்மட்டுக்கு மயக்க மின்றும், தெளிவாக, எனக்குப் பிரத்தியக்ஷமாகியுள்ள தேவரீரைச் சார்ந்து இவ்வழக்கைப்பற்றி யான் தெரிந்து கொண்டேன்.

குறிப்புரை :—அருண்மய சொரூபங்களாயுள்ள சப்த மூர்த்தங்களும் முறையான படித்தர ரீதியாயுள்ளன வென்பதாக சுருதியாதிகள் கூறிவருகின்றனவாம் ; இதுவிஷயமாக எமக்குச் சிறிதும் மயக்கமின்று ; ஆனாலும் இறந்தகால எதிர்காலத்தின்கணும் வருநெறிகளுக்கு தெருளின் முன்னிலையாயுள்ள நின்னைப் பின்பற்றித் தெரிந்துகொள்வேன், என்பது.

சப்த மூர்த்தங்களாவன :—விட்டுணு, இந்திரன், பிரமன், உபமந்யு, சூரியன், நந்தி, சுப்ரமண்யன் என்பன, இவை ஓர் சாரார்கூற்றும். மற்றோர்சாரார்.— சதாசிவன், அநந்தன், ஸ்ரீகண்டன், அம்பிகை, முருகன், திருமால், பிரமன் என்பாரைக் கூறுவர். (36)

௩௭. எத்தனைப் பிறப்போ வெத்தனை யிறப்போ
வெளியனேற் கிதுவரை யமைத்த
தத்தனை யெல்லா மறிந்தநீ யறிவை
யறிவிலி யறிகிலே னந்தோ

சித்தமும் வாக்குந் தேகமு நினவே
சென்மமு மினியெனு லாற்று
வைத்திடுங் கென்னை நின்னடிக் குடியா
மறைமுடி யிருந்தவான் பொருளே.

பொழிப்புரை :—இவ் வேழைக்கு இதுகாறும் அமைத்துள்ளது எத்தனை சனனமோ ? எத்தனை மரணமோ ? அவ்வளவையும் சர்வவியாபகனுய நீ யறிந்திருப்பாய் ; கேவலம் கிஞ்சிக்ஞனுயபாஞே தெரிவன் ? ஐயோ ! மனவாக்குக் காய மிம்மூன்றும் நின்னதாயுள்ளன ; இனிப் பிறத்தலும் எளியேனுல் முடியா ; (ஆகையினுலே) இங்ஙனம் எளியவனை நினது அடிமைக் குடியாக் கொண்டருளுவாயாக ; வேத சிரசாகக் கொண்டாடியுள்ள ஒப்பற்ற ஒரு தனிப்பொருளே !

குறிப்புரை :—மறையவனுந் தொழும் மகாதேவனே ! இதுவரையில் எளியேனுக்கு ஏற்பட்ட பிறப்பிறப்புக்களுக்குக் கணக்கின்றும், இனி அப்பிறத்தல் இறத்தல்களுக்கு ஈடுபட என்னுலாகா. மனமாதி உடல் பொருளாவிகளைத் தமக்கர்ப்பித்தும் விட்டேன். யான் யேகனுய்த் தம் திருவடி மலர்க்கே அடைக்கலப்பட்டு விட்டேன் ; இனி யென்னை நல் வழிப் படுத்த வேண்டுவது தேவரீர்தம் திருக்கருணைக்குரிய பாரமாகும்.

யானேதும் பிறப்பஞ்சே னிறப்பதனுக் கென்கடவேன்
வானேயும் பெறில் வேண்டேன் மண்ணுள் வான்மதித்துமிரேன்
றேனேயு மலர்க் கொன்றைச் சிவனேயெம் பெருமானெம்
மானேயுன் னருள்பெறு நாளென்றென்றே வருந்துவனே.

என்று மணிவாசகர் குறையிரந்தோதியவாருகவே 'சென்மமு மினியெனுலாற்று' என்றும், " வைத்திடுங் கென்னை நின்னடிக்குடியா " என்றும் வேண்டியருளின தறிக. (37)

௩அ. வான்பொரு ளாகி யெங்குநீயிருப்ப
வந்தெனைக் கொடுத்துநீ யாகா
தேன்பொருள் போலக் கிடக்கின்றேன் முன்னை
யிருவினை வாதனை யன்றே
தீன்பொரு ளான வமிர்தமே நின்னைச்
சிந்தையிற் பாவனை செய்யும்
நான்பொரு ளானே னல்லனல் லரசே
நானிறந் திருப்பது நாட்டம்.

பொழிப்புரை :—நீ சர்வாந்தரியாமியாகி யெவ்விடத்தும் பொருந்தி யிருத்தலை யறிந்தே யான் யென்னுடல் பொருளாவியை நின்பால் தத்தஞ் செய்தும், யான் நீயாகாமல் கேவலம் அசேதனப் பொருளென விளங்கிக் கிடப்பதிலென்னே ! ஆனால், காரணம் முன் வினையேயாகும் ; பருகி யுண்டற்கான தேவாமிர்தமே ! தேவரீரைச் சிந்தித்துக் கிடக்குமியான் பெரிய பொருட்போலாயினேன், மிகமேலாகிய மன்னவா ! என் குறிப் பெல்லாம் நானெனு மாணவங் கெட்டிருப்பதற்கே என்பதாம்.

குறிப்புரை :—நீ எங்குநிறை பரம்பொருள் ; யான் அஃதுணர்ந்தே யென் உடல் பொருளாவியை நினக்குத் தத்தஞ் செய்தனன் ; ஆனால் உன்னில் ஒன்றுபடாது ஜடவத்துவா யுள்ளேன் ; இவ்வாறானதற்கேது முன்செய் யிருவினை வாசனையாகும் ; ஆனாலும் என்பாலுள்ள நான் என் னும் கொடிய அகங்கார சேட்டையைத் துலைத்துச் சுத்த னாதலிலேயே என் இலக்ஷிய மெல்லாம் வைத்து, நின் சிவபோதத்தை யெதிர் நோக்கமே கொண்டுளே னென்பது தோன்ற நின்றது. (துவிதந் தொலைந்து அத்து வித மாதல் வேண்டுவராயின ரென்க.) (38)

௩௯. நாட்டமூன் றுடைய செந்நிற மணியே
நடுவுறு நாயக விளக்கே
கோட்டமில் குணத்தோர்க் கெளியநிர்க் குணமே
கோதிலா வமிர்தமே நின்னை
வாட்டமி னெஞ்சங் கிண்ணமாச் சேர்த்து
வாய்மடுத் தருந்தின னுங்கே
பாட்டளி நறவ முண்டயர்ந் ததுபோற்
பற்றயர்ந் திருப்பதெந் நாளோ.

பொழிப்புரை :—முக்கண்கள் கொண்டருளிய சிவந்த வர்ணமுள்ள இரத்னமே ! நடுவணை யென்னுமீதான மாடமிசைத் துலங்கும் தீபசோ தியே ! குற்றமிலா வுத்தம குணக்யர்கட்கு இலேசான சற்குணமே ! கெடு மையிலா தேவாமிர்தமே ! தேவரீரை அயர்வற்ற மனமாகியதைக் கிண்ண மாக்கொண்டு வாயாற்பருகி யங்ஙனே, ரீங்காரஞ் செய்கின்ற வண்டுகள் மதுவுண்டு மயக்குற்றாப் போல யான் ஆசையற்றிருப்பது எந்தக் காலத் திலோ !

குறிப்புரை :—ஈண்டு இறைவனைக், 'கோதிலாவமிர்தை' யென் றது, மெய்யடியார்களை நித்திய ஞானதேகிகளாக்குவித்து என்றும் நித்திய ராயிருந்து பேரின்பத்திற் காஸ்பதர்களாகச் செய்வதாலேயே அவ்வாறோ தினரென்க ; பற்று அயர்ந்து இருத்தல் - [illegible]

ருத்த லெலன்க. ஆகவே, பற்றொழிவு எக்கால மென்றெதிர் நோக்கி நிற்றல் புலனுயது.

திரிகரணங்கள் அசைவற்று நின்றக்கால் கர்மம் வந்து சாராதென்பது சித்தாந்தமாம் ; எப்படியெனில் சான்ருக :—

விருப்பு வெறுப்பற்று வேத மொழிப்படி மெய்யுணர்ந்து
மரிப்பைச் சனிப்பையு மற்றொளியாகிய மாதவர்பாற்
கருப்புச் சிலையனும் காலனும் வந்தென் செயக்கடவர்
நெருப்பைப் புழுப்பற்றுங் கொல்லோ நெடுங்கச்சியேகம்பனே.

என்றார் பெரியோர். (39)

சய. என்னுடை யுயிரே யென்னுளத் தறிவே
யென்னுடை யன்பெனு நெறியாய்
கன்னன்முக் கனிதேன் கண்டமிர் தென்னக்
கலந்தெனை மேவிடக் கருணை
மன்னிய வுறவே யுன்னைநான் பிரியா
வண்ணமென் மனமெனுங் கருவி
தன்னது வழியற் றென்னுழைக் கிடப்பத்
தண்ணருள் வரமது வேண்டும்.

பொழிப்புரை :—எனது ஆவியே ! எனது சித்தத் துணர்வே ! என் அன்பாம் நன்னெறி பெற்றோய் ! கரும்பி ரசமும், மூவகைக் கனிகளும், தேனும், கற்கண்டும், தேவாமிர்தமும் ஆகிய இவைபோன்று எளியேனைக் கூட்டி வாழுமாருகவுள்ள கிருபை கொண்டருளிய சுற்றமே ! தேவரீரை யான் பிரிவுருமே எனது மனமாகிய சாதனமென்பது தன் போக்கிற் போவதை யொழித்து என்பாலே கட்டுண் டிருக்கத் தண்ணருளாகிய நினது திருவர மொன்றே யான் விரும்புவதாம்.

குறிப்புரை .—ஒப்புயர் வற்ற ஒரு தனிப்பரம்பொருளாம் இறைவனை மேல் மூன்று பாசுரங்களினும் வான் பொருளென்னும் வழக்கால் துதித்துள்ளார். தமக்கு அழிவுருப்பதவி யீந்து காத்தருளுபவன் என்னுங் கருத்தமைத்தே, எனது மனமானது யென் வசமாகும் பொருட்டு நினது பேரருள் புரியும் ஓர் வரந்தந்தருளுதலை வேண்டின னென்பதுவே இதன் சாரமாகும். இதற்குச் சாமியம்.

'அவனருளாலே யவன்றாள் வணங்கி' யென்பதே போதரும். 'சித்திசை குடிகொண்ட வறிவான தெய்வமே' யென்ற வாசக மாற்றமே 'என்னுளத்தறிவே' யென்றது. உயிர்க் குயிராதலின் இறைவனை யென்னுடை யுயிரே யென்றார்.

'அன்பே சிவமாதலின்' 'யென்னுடை யன்பெனு நெறியாய்' எனலாயினர் என்க. (40)

---

## எனக்கெனச் செயல்

க. எனக்கெ னச்செயல் வேறிலை யாவுமிங் கொருநின்
தனக்கெ னத்தகு முடல்பொரு ளாவியுந் தந்தேன்
மனத்த கத்துள வழுக்கெலா மாற்றியெம் பிரானீ
நினைத்த தெப்படி யப்படி யருளுத னீதம்.

பொழிப்புரை:—எனக்குரிய செயலாகக் கூற வேறொன்றுமில்லை; இனி இவ்விடத்தே யாகவேண்டிய வனைத்தும் ஒப்புயர்வில்லா நின்தனக்கே யுரியனவென்று சொல்லலாகும்; ஆகவே, என்னுடல் பொருளாவி யென்கின்ற மூவகையு முனக்குத் தத்தஞ் செய்தும் விட்டேன்; இனியென் நெஞ்சகமுள்ள நீண்டகால வாசனையாமழுக்குக ளனைத்தையு மொழித்து, என்னையுடையானே! தேவரீர்தம் திருவுள நோக்கம் போலவே ஆண்டருள் செய்தலே நியமமாகும்.

குறிப்புரை:—என்னுவிக்காவியா மரும்பொருளே! இனி யெவையும் எனக்கான தொரு காரியமு மின்றாகும்; ஆதல் கொண்டு உடல் பொருளாவியை நின்னதாகவு மொப்படைத்து விட்டேன்; ஆக இனி வீணவத்தைக்கான ஆணவத்தையும் மனக்கோணலையு மொழித்து தேவரீர் உள்ளம்போல் நடத்தியருள் வீராக. (1)

உ. உளவ றிந்தெலா நின்செய லாமென வுணர்ந்தோர்க்
களவி லானந்த மளித்தனை யறிவிலாப் புன்மைக்
களவு நாயினேற் கிவ்வண மமைத்தனை கருத்துக்
களருந் தன்மையிங் காரொடும் புகலுவேன் தக்கோய்.

பொழிப்புரை:—தேவரீர்தம் திருவுள்ளக் கிடையாம் அனைத்து முணர்ந்து, முடிவில் யாவும் தம் நியமப் பிரகாரமாகவே ஆகுமென் றறிந்துள்ளார்க்கு கணக்கிலா இன்பநிலையைத் தந்தாண்டாய்; சிறிதேனும் போறிவில்லாதவனும், அற்பனும், வஞ்ச நெஞ்சமுமுள்ள நாயொத்தேனுக்கு இத்தவிதமாக நியமித்தருளினை; காரணம்,—வினையூழேயாம்; மேலோருந் தொழுமேலோனே! எளியேன்றன் நெஞ்சமானது தயங்குந் தன்மையினை இங்கே யாவர்பாற் கூறுவேன்!

குறிப்புரை :—நின் குறிப்புணர்ந்துள்ள பெரியார்க் கெல்லாம் பேரின்பப் பிரசாதமளித்தாண்டு கொண்டாய் ; பேதமை யென்றன்னைப் பெருந் துன்பத்திற் காட்படுத்தினை, என் மனக்கவலை கூறியாற்ற யெவரையுங் காணேன், என்பது முடிவுரை. (2)

௩. என்னைத் தானின்ன வண்ணமென் றறிகிலா வேழை
தன்னைத் தானறிந் திடவருள் புரிதியேற் றக்கோய்
பின்னைத் தானின்ற னருள்பெற்ற மாதவப் பெரியோர்
நின்னைத் தானிக ராரென வாழ்த்துவர் நெறியால்.

பொழிப்புரை :—என்னை இத்தன்மை யுடையவனென வறிதற் கில்லாத வனுய இவ்வெளியனைத் தன்னையறியுந் தாரத்தவனுக்கிட நீ திருவருள் கூர்வையாஞல், தக்கோர்க்கெல்லா மிக்கோய் ! பின்னர், நின்திருவருள் கிடைக்கப்பெற்ற மகாதவ சிரேட்டர்களான நித்திய முக்தர்கள், நின்திரு நெறி முறைகொண்டும், நினக்கொப்பாவரு முளரோ வென்றும், நின்திருக் கருணையிருந்தவா றென்னே யென்று மிகவும் துதிசெய்து கொண்டுவருவர் களென்பதும் சாரமாம்.

குறிப்புரை :—என்னை யின்னுனென்றுணரற் கில்லாத மந்தமதியினனை, நீ யென் கீழ்மையைப் பாராட்டாது கிருபை கூர்வையேல் நின் அருட்பிரசாதம் பெற்றருளிய மகாதவசியராம் பெரியோர்க ளெவரும் மிகவுமதித்துத் துதித்து, நின்னை யொப்பாரு முளராவரோவென்று புகழ்ந்து கொண்டாடுவார்கள். (3)

௪. ஏத மின்றித்தன் னடியிணைக் கன்புறா னீட்டுங்
காத லன்பர்க்குக் கதிநிலை யீதெனக் காட்டும்
போத நித்திய புண்ணிய வெண்ணரும் புவன
நாத தற்பர நானெவ்வா றுய்குவே னவிலாய்.

பொழிப்புரை :—குற்றமென்பதே சிறிதுமற்று, நின் திருவடிக்கமலங் களுக்கு பக்திசெய்து வருகின்ற ஆசைமிக்குள்ள மெய்யடியவர்களுக்கு மோக்ஷநிலையினை இஃதென்று எடுத்துக்காட்டுகின்ற நித்தியதத்துவனே ! மகா தருமதேவனே ! கணக்கிடற் கருமையாயுள்ள உலகங்களுக்கெல்லாம் தலைவனே ! தானுன பரதத்துவனே ! யான் எந்தவிதமாகக் கடைத்தேறு வேன் கூறுவாய் !

குறிப்புரை :—நின் திருவடித் தொண்டர்களுக்கு, மோக்ஷநிலையினை விவரித்து அருளுகின்ற சர்வ விபோ ! அங்ஙனம் உண்மையன்பு கொள் ளாத யானெவ்விதமாகக் கரையேறுவனே ! என்பதாம். (4)

ரு. வேத மெத்தனை யத்தனை சிரத்தினும் விளங்கும்
பாத நித்திய பரம்பர நிரந்தர பரம
நாத தற்பர சிற்பர வடிவமாய் நடிக்கும்
நீத நிர்க்குண நினையன்றி யொன்றுநா நினையேன்.

பொழிப்புரை :—வேதங்கள் எத்தனையுண்டோ அத்தனைகளின் சிரத்தினும் விளங்கிவருகின்றதான திருப்பாத மலர்களை யுடையானே! நிலை பெற்றவனே! பரம்பரமாயுள்ளவனே! சகலத்திற்கும் ஏஜமானனாயினவனே! எக்காலமுமுள்ளானே! மேன்மையான தலைவனே! தானாகவே பரத்துவமுடையவனே! ஞான சொரூபமாகி, நிர்த்தனஞ் செய்தருள்கின்ற நீதி மன்றத்தோய், குணரஹிதனே! தேவரீரை யல்லாது வேறெவற்றையும் எண்ணுதல் செய்யேன்! சகலவேத சாரமானது முடிவில் நின்னையே சாற்றும்.

குறிப்புரை :—வேதாகம சாஸ்திராதிகளின் சித்தாந்தமாய்த் துலங்கும் வித்தகச் சித்துருவனே! நின்னையல்லால் வேறெவையும் நினைக்க மாட்டேன். (5)

சா. நெறிக டாம்பல பலவுமா யந்தந்த நெறிக்காம்
செறியுந் தெய்வமும் பலபல வாகவுஞ் செறிந்தால்
அறியுந் தன்மையிங் காருனை யறிவினா லறிந்தோர்
பிறியுந் தன்மையில் லாவகை கலக்கின்ற பெரியோய்.

பொழிப்புரை :—சமய வொழுங்குகள் பற்பல விதமாகி, அவ்வச் சமயங்களுக்கும் நேர்மையாகப் பொருந்தா நின்ற தெய்வமும் அநேகவிதங்களாக நீயேயிருந்து வருவாயானால், இவ் வகிலத்தின்கண்ணே நின்னை யுணர்ந்துய்வார் யாவர்? பேரறிவினால் நின்னையுள்ளபடி யறிந்துள்ள மகா பிராக்ஞரெல்லாம் தம்மைவிட்டு மாறாதவகையாய் அவர்களோடுங் கலந்தொருமையாகவே விளங்கிவருகின்ற பெருமையாளனே!

குறிப்புரை :—பேரறிவினாலே தம்மை அறிந்துள்ள மெய்ஞ்ஞானியரை யெக்காலமும் பிரியா அபேதனே! பலபட விரிந்துள்ள மதங்களுக் கெல்லாம் பற்பல தெய்வமாகவும் நீயே யமைந்துவரின் நின்னை யறிந்துய்ய வல்லார் யாவரோ வென்பது, நின்னை யறிபவர் யாவனே வென்ற ஐயம் அறிந்துய்வார் மிக அரியராவர் என்பதை விளக்குகின்றது. (6

எ. பெரிய வண்டங்க ளெத்தனை யமைத்ததிற் பிறங்கும்
உரிய பல்லுயி ரெத்தனை யமைத்தவைக் குறுதி

வருவ தெத்தனை யமைத்தனை யமைத்தருள் வளர்க்கும்
அரிய தத்துவ மெனக்கிந்த வண்ணமே னமைத்தாய்.

பொழிப்புரை :—அளவிடற் கரிய பெரிய வண்ட கோளங்கள் பற்பல வாகக் கற்பித்தும், அவைகளுள் உச்சீவிக்கா நின்ற பற்பல ஆன்மகோடி களையும் கற்பித்து வைத்தும், அந்த ஜீவகோடிகளுக்கும் உறுதிப்பொருளாக பற்பலவுஞ் சமைத்தருளியும் அவைகட் கேற்றவாறு அருண்மழை பெய்து காத்து வருகின்ற சிவதத்துவ சொரூபனே! அடிமைக்கு இவ்விதமாக வேனோகற்பித்தாய் ?

குறிப்புரை :—அண்டங்கள் பலவமைத்தும், அவைகளில் சராசர பேதங்களாக ஜீவகோடிகளைக் கற்பித்தும், அவைகட்குரிய உறுதிப் பொருளாம் புருஷார்த்தாதிகளைக் கற்பித்து வைத்தும், அவ்வான்ம வர்க்காதிகளைக் கருணைப் பெருக்கால் காத்தருள்புரிந்து வந்தும், எனக்கு மட்டும் கிருபை செய்யாது ஏன் இவ்வாறாய் இசைத்தனை யென்பது சாரமாயிற் றென்க. (7)

அ. கணம தேனுநின் காரணந் தன்னையே கருதி
உணரு மாதவர்க் கானந்த முதவினை யொன்றுங்
குணமி லாதபொய் வஞ்சனுக் கெந்தைநிர்க் குணமா
மணமு லாமலர்ப் பதந்தரின் யாருனை மறுப்பார்.

பொழிப்புரை :—நின் சர்வக்ஞத்துவத்தினை ஓர் கணப்போதேனும் அறியும் மகா தவஞானியர்களுக்குப் பரானந்தப் பேற்றைப் பாலித்தருளி வருகின்றாய்; யாதொரு குணாதி விசேஷங்களும் பொருந்தாது, பொய்மை யும், வஞ்ச நெஞ்சமும் வாய்ந்துள்ள எளியேற்கு, என் பரம பிதாவே! குணாதிதனே! மிக்க மணங்கமழா நின்றருள் புஷ்பமனைய திருவடிச் சேவை தந்தாள்வையேல் நின்னைத் தடுத்திடுவார் யாரோ ?

குறிப்புரை :—எல்லாத் தத்துவங்களும் பொருந்தி யெவ்வன்மையும் நிறைந்தோங்கு மிறைவனது எண்குணத்தன்மையையு மறிந்துள்ள மிகப் பெரியோரே யன்றி யேனையோ ருணரவல்லா ரல்லரென்பது தோன்றவே, "கணமதேனு நின் காரணந் தன்னையே கருதி உணரு மாதவர்க் கானந்த முதவினை" யெனலாயினர். மற்றும் மாமலர்ப்பத மென்று இறைவன் றாளிணையைச் சிறப்பித்தது, தம்மை யாதரித்தாளற் குரியதும், திருவட் சத்தியார் வாழ்வதுமாயுள்ள தாகையால் என்க. தந்தை சேய்க்குதவுதல் தகுதியே யாதலான் நின்னை யாவரே தடுப்பவ ரென்றனர் உரிமை நோக்கி யாம். (8)

௯. கன்னன் முக்கனி கண்டுதேன் சருக்கரை கலந்த
தென்ன முத்தியிற் கலந்தவர்க் கின்பமா யிருக்கும்
நன்ன லத்தநின் னற்பதந் துணையென நம்பச் [ன்
சொன்ன வர்க்கென லாங்கைம்மா றில்லையென் சொல்லே

பொழிப்புரை :—கரும்பிரதம், வாழை பலா, மா யென்று மிக்கனி களும், கற்கண்டும், தேனும், சர்க்கரையும் ஆகிய இவைகள் ஒன்றுபடச் சேர்த் தருந்திய வினிமை போன்று, மோக்ஷம் எய்தினோர்க்குச் சரீராதியந்த மூமே இனிப்புறும் நின்மேலாய நன்மையைத் தந்தருளுகின்ற அழகிய திரு வடித் துணைகளையே இன்றியமையாத் துணையென நம்பத்தக்கதாக உப தேசித்தருளிய உத்தமாசாரியர்க்கு என்னாற் செய்யத் தக்கதாயுள்ள பிரதி யுபகார மெதுவுமே யின்றாம். ஆகவே அவர் தம் திருக் கருணையின் பெருக்கை என்னென்று சொல்ல வல்லேன்.

குறிப்புரை :—முத்திப் பேற்றினைப் பெற்றார்க்குப் பலவாறான இனிப் புத் தொகுதிகளின் கலப்புச் சுவையன்ன இனிமை பயப்பனவா யனுபவிப் பர். ஏனையோர் கிடந்து வீணே வருந்தி மாள்வர்; ஆகவே எளியேற் குற்ற துணை இறைவன்றன் நற்பதமே யென்றருளிய வாசிரியர்க்கு யான் யாது செயவல்லேன் என்றது முடிபாம்.

'பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க'
'மாயப் பிறப்பறுக்கு மன்ன னடிபோற்றி'

என்று மணிவாசகர் இறைவனடியினை யேத்தின போன்றே நமது ஆசிரியரும், 'நற்பதந் துணை யென நம்பச்சொன்னவர்' என்று வியந்தனர் போலும். இதனால், பவசாகரந் துலைக்கும் பரமனடி யென்பது தோன்ற நின்றது. (9)

௰. தந்தை தாய்தமர் மகவெனு மவையெலாஞ் சகத்தில்
பந்த மாமென்றே யருமறை வாயினாற் பகர்ந்த
எந்தை நீயெனை யின்னமவ் வல்லலி லிருத்திச்
சிந்தை தான்றெளிந் தெவ்வண முய்வணஞ் செப்பாய்.

பொழிப்புரை :—தகப்பன் தாய் உற்றார் புத்திராதியர் என்கின்ற இன்ன வர்க ளெல்லாம் இந்நில வுலகத்தின்கண்ணே ஓர் விலங்காகுமென்றே அரிய வேதங்களை யோதியருளிய திருவாயான் ஓதியருளிய எனது பிதாவானநீ, இன்னமும் என்னை அத்துன்பத்திலேயே ஆழ்ந்திருக்கச் செய்வையே யாயின், யான் யென் மனந்தெளிவுற்று கடைத்தேறும் வகை யெவ்வண்ணமாகும் கூறுவாய் ?

குறிப்புரை:—தந்தை தாய் தமர் மகவென்ப தெல்லாம் பெருந்தளேயே யென்றுநீ வேதமுதலான சாத்திராதிகளால் விளம்பியும், இங்கென்னை அப் பந்தத்திலேயே யாழ்த்தி வைப்பின் யான் யெவ்வாறு மனத்தெளிவு கொண்டு கரையேறுவது என்பது கருத்தாம்.

"ஈன்றேன் றனைநாளு மெண்ணுமை லிவ்வுடம்பை
யீன்றேனை யீன்றேனென் றெண்ணிளேயே"—

என்றார் பிறரும். (10)

மக. துய்யன் றண்ணருள் வடிவினன் பொறுமையாற் றுலங்கும்
மெய்ய னென்றுனை யையனே யடைந்தனன் மெத்த
நொய்ய னுண்ணிய வறிவில னொன்றைநூ றுக்கும் [லாய்
பொய்ய னென்றெனைப் புறம்விடி னென்செய்வேன் புக

பொழிப்புரை:—மகா பரிசுத்தனும், குளிர்ந்து சிறந்த திருவருட் சொரூபனும், பொறுமைக் கிருப்பிட மானவனும், மெய்மையனும் ஆகியவ னென்று துணிவுற்று என் இறைவனே, நின்னை வந்தடையலானேன்; யானோ மிகவுஞ் சாமானியன், நுட்ப புத்தியற்றவன், ஒன்றைப் பலவாகப் பெருக் கிச் சொல்கின்ற புரட்டன் என்று என்னை நீ கைவிடுவையேயானால் யான் யென் செயக்கடவேன் சொல்லாய்.

குறிப்புரை:—இறைவனே! நீயோ, தேவ தேவனாலும் புகழத்தக்க பெருமையாளனாதல் நின் றிருவருட் சுபாவத்தை யறிந்துய்வான் வேண்டி நின்றாள் பணிந்து கிடக்கின்றேன், ஆதலின் என்பிழையையும் பேதமையையும் பொறுத்தாளாவிடில் வேறு கதியிலனாதலால், 'இத்தீனனைக் காப்பாரெவருமிலர்' என்பது சாரமாம். (11)

மஉ. ஒன்ற தாய்ப்பல வாயுயிர்க் கிரட்டெலா முறுகி
என்ற தாயென்று முள்ளதா யெவற்றினு மிசைய
நின்ற தாய்நிலை நின்றிடு மறிஞவென் னெஞ்சு
மன்ற தாயின்ப வுருக்கொடு நடித்திடின் வாழ்வேன்.

பொழிப்புரை:—உலகிற்கே யொன்றாகியும், பலவகையாகியும், சர்வான் மாக்களுக் கெல்லாம் துணையென்ற தாகியும், நித்திய வஸ்துவாகியும், மற் றும் எல்லாப் பொருள்களிடத்தும் பொருந்தியுள்ள தாகியும், நிலை பெற் றுள்ளதாயு மிருக்கின்ற முற்றறி வுடைய முழுமுதற் பொருளே! என் மன மானதைச் சிதாகாசமாகக் கொண்டருளி பரமானந்தத் திரு நடத்தரசாய் நின்று நிருத்தம் புரிவாயாயின் அடிமை வாழ்வேன், அல்லாவிடின் தாழ் வேன்.

குறிப்புரை :—ஏகனும், அநேகனும், ஆன்மகோடிகளுக் கெல்லாம் ஆதாரபூதனும், நித்தியனும், மற்றும் சராசர பேதங்களிற் பொருந்தியுள்ள தாயுமுள்ள முழுமுதற்றேவே! நீ யென் மனத்தினை இன்ப நிலையமாக் கொண்டு திரு நடம்புரிந்தருள வேண்டு மென்பது சாரமாம். (12)

௰௩. தனியி ருந்தருட் சகசமே பொருந்திடத் தமியேற்
கினியி ரங்குதல் கடனிது சமயமென் னிதயக்
கனிவு மப்படி யாயின தாதலாற் கருணைப்
புனித நீயறி யாதகொன் றுள்ளதோ புகலாய்.

பொழிப்புரை :—யான், தன்னந் தனிமையா யிருந்து நினது திருவருளின் விசேடத்தால் சதா நிட்டையினைப் பெறுமாறதாக நீ இனி மனமிரங்குதல் நின் பொறுப்பாகும், இதுவே சமயமாம்; என் மனமும் அவ்வாறாகவே கனிவு பெற்றுள்ளது; ஆகவே, கருணாகர அருளுததனே! நீயறியாதனவு முண்டோ? சொல்வாயாக?

குறிப்புரை :—இப்பாசுரத்தின் முதற்கண் தனியிருந்து என்றார். அதாவது; அன்னமய கோசம், ஆனந்த மயகோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விக்ஞானமய கோசம் என்கின்ற ஐவகைய கோசங்களையுந் தாண்டி அப்பாலுள்ள முப்பாழையுங் கடந்து அதாவது சிவப்பாழ், சீவப்பாழ், பரப்பாழ் என்கின்ற மூன்றையுந் தாண்டி, கூடஸ்த பிரம மென்னும் நெஞ்சமுங் கடந்து தானே தானய தனிநிற்கு நிலையாம்.

அன்றி, முற்றறியும் முற்றுத் தொழிலு முள்ளவனுதலால் நீ யறியாத தொன்றுள்ளதோ வெனலானுர். முப்பாழைப்பற்றி பிரகிருதிப்பாழ், சுத்த மாயைப்பாழ், அசுத்தமாயைப்பாழ் என்றுங் கூறுவர். இதனல் அடிமை சகச நிட்டை பெறுமாறதாக தேவரீர் திருக்கருணை புரிதல் வேண்டும் என்பதாயிற்று.
(13)

௰௪. திருந்து சீரடித் தாமரைக் கன்புதான் செய்யப்
பொருந்து நாணல்ல புண்ணியஞ் செய்யுநாள் பொருந்தா
திருந்த நாள்வெகு தீவினை யிழைத்தநா ளென்றால்
அருந்த வாவினைப் பொருந்துநா ளெந்தநா ளடிமை.

பொழிப்புரை :—வெகு தீர்மானமாயுள்ள சிறப்புடைத் திருவடித் தாமரைகளுக்கு பக்தியாய்த் தொண்டு செயப் பொருந்தியுள்ள தினமே மேலாய புண்ணிய தினமாகும்; அவ்விதம் அன்புபக்தி யிவற்றில் ஈடுபடாத நாளானவை மட்டற்ற பாவமாம் கொடிய வினைகள் புரிந்த நாளாம் எனக்

கூறும்போது, ஏ அரிய தவத்தர்க்கருளு மாதவத்தோய்! இவ்வடியேன் தேவ்ரீரைச் சார்ந்துய்யும் நாள் எந்நாளோ!

குறிப்புரை :—இறைவன் திருவடிக் கமலங்கட் கன்புற்றிருந்த நாளே நன்றுளெனவும், அவ்வாறு அன்பு செய்யப்பெறாத நாள்களெல்லாம் கெட்ட நாளென்பது சாரமாம்.

"பேசாத நாளெல்லாம் பிறவாநாளே" யென்பதுபோல. (14)

௰௫. பின்னு முன்னுமாய் நடுவுமா யாவினும் பெரிய
தென்னுந் தன்மையா யெவ்வுயிர்த் திரளையு மியக்கி
மன்னுந் தண்ணருள் வடிவமே யுனக்கன்பு வைத்தும்
துன்னு மின்னலேன் யாதெனு மகந்தையேன் சொல்வாய்.

பொழிப்புரை :—எவற்றினுக்கும் ஆதி நடு அந்தமுமாய், சர்வத்திற்கு மேலாய தென்கின்ற நிலைமைத்தாகி சர்வான்ம தொகுதிகளையுந் தன்பால் இயக்கு மாறதாக்கி, நித்தியத்துவமாயுள்ள குளிர்ந்த திருவருள் சொரூபமே! நின்னடிக் கிடையறாத பேரன்பு கொண்டும், யான் எதற்காக கஷ்டமெய்துவது? என்பால் ஏன் இன்னும் அகங்கார கிரந்தி யிருந்து வருந்த வேண்டும்? சொல்வாய்!

குறிப்புரை :—முதல் நடு கடை யென்கின்ற முப்போதும் மற்றெப் போதும் விளங்கி, பெருந்தகையாளனாய், ஆன்ம கோடிகளை ஐக்கியங் கொண்டு, திருவட் சொரூபத்தனாய் நின்றுள்ள தெய்வ மணியோய்? எளியன் தம்பாலன்பால் தஞ்சமென் றடைந்த பின்னரும், அகங்காராதியும் துக்கானுபவமும் அடைத லடாதன்றோ?

அன்புற்றடிபணிந்தே யகங்குழைந்தாட்பட்ட பினு
மின்புற் றகங்குளிரா திருவினைவாய்ப் பட்டேங்கித்
துன்புற் றயர்ந்துமனத் தூய்மையுறா தென்று நினைப்
பின்பற்றி வாழ்ந்தினியென் பேறுபெறு மாறுமுண்டோ.

என்ற பெரியார் பெருமொழியுங் காணத்தகும். (15)

௰௬. மின்னை யன்னபொய் வாழ்க்கையே நிலையென மெய்யாம்
உன்னை நான்மறந் தெவ்வணமுய்வண முரையாய்
முன்னை வல்வினை வேரற முடித்தென்று முடியாத்
தன்னைத் தன்னடி யார்க்கருள் புரிந்திடுந் தக்கோய்.

பொழிப்புரை :—முன் ஜனனத்திலே யான் செய்த தீய வினையாம் வேர் அடியோடு அகழ்ந்தெறிந்து, எக்காலு மாயாதுள்ள தேவரீரை நின்

னன்பர்கட்கு அருளாநின்ற சமநிலை கொண்டோய்! மின்னலைப்போன்று தோன்றி யழியும் கேவல அற்ப வாழ்வினையே நிச்சய மென்றுணர்ந்து, தம்மை மறந்து பின் பிழைத்திட வெங்ஙனஞ் சாற்றுவாய்! என்பது.

குறிப்புரை :—கேவலம் பொய்யினும் பொய்யாம் வாழ்வினை நம்பி எக்காலும் மெய்யாயிருந்தருளும் தேவரீரை மறந்திட்டால் யானுய்வ தெவ்வாறு? மெய்யன்பர்தம் முன்வினையை அடியோடு மொழித்து நித்தியமாயுள்ள தன்னை அவ்வடியர்க் கறிவித்து உய்யுமாறு செய்வாரென்பது முடிவுரையா மென்க. (16)

௰எ. எம்ப ராபர வெம்முயிர்த் துணைவவென் றிறைஞ்சும்
உம்ப ரிம்பர்க்கு முளக்கணே நடிக்கின்று யுன்றன்
அம்பொன் மாமலர்ப் பதத்தையே துணையென வடிமை
நம்பி னேனினிப் புரப்பதெக் காலமோ நவிலாய்.

பொழிப்புரை :—எனக்கினிய பராபரவத்துவே! எனதுயிர்க்குற்ற துணையாளா! என நின்னை வழிபடுகின்ற மண்ணோர் விண்ணோர்களுக்கும் அவரவர்கள் இதய தாமரையின்மீது நிர்த்தனஞ் செய்கின்றாய், ஆதலினாலே, தேவரீர்தம் திவ்ய பொன்போன்ற பெருமை கொண்டருளிய திருவடிக் கமலத்தையே அடியேன் நிலையென நம்பியுள்ளேன்; ஆகலான் என்னை இனி காத்தருள்வது எந்த சமயத்திலோ கூறுவாயாக.

குறிப்புரை :—என்னுயிர்க் கிறைவா! இவ்வுலகோர்க்கும் அவ்வுலகத்தோர்க்கும் அவரவரிதயத்திருந்து திரு நடம்புரிதலை யுணர்ந்த யான் தேவரீர்தம் திருத்தாண் மலரையே ஆன்ற துணையென அகங்களி கொண்டுள்ளேன், ஆதலால் அடிமையையும் இரக்ஷை செய்தருள வேண்டி நிற்கின்றேன் என்பது கருத்தாம்.

“ தில்லை மூதூ ராடிய திருவடி
பல்லுயி ரெல்லாம் பயின்றன னாகி
எண்ணில் பல்குண மெழில்பெற விளங்கி
மண்ணும் விண்ணும் வானோ ருலகும்
துன்னிய கல்வி தோற்றியு மழித்து
மென்னுடை யிருளை யேறத் துரந்தும்
அடியா ருள்ளத் தன்புமீ தூரக்
குடியாக் கொண்ட கொள்கையுஞ் சிறப்பும்”—என்றே பழ வடியார் பாடியருளின ராதல் கொண்டே ஆசிரியரும் அம்முறை கொண்டோதின காண்க. இம்பர் - இவ்வுலகன்பர். (17)

மஅ. பாடி யாடிநின் றிரங்கிநின் பதமலர் முடிமேல்
சூடி வாழ்ந்தன ரமலநின் னடியர்யான் றொழும்பன்
நாடி யேயிந்த வுலகத்தை மெய்யென நம்பித்
தேடி னேன்வெறுந் தீமையே யென்னினிச் செய்வேன்.

பொழிப்புரை:—எ மலரஹிதனே! நினது மெய்யன்பர்கள், அன்பி னாற்றல் பாடித் துதிசெய்து ஆனந்த மீதுற வாடித்தம் திருத் தாண்மல ரைத் தம்முடிக்கணிந்து ஒப்பற்ற பதிவாழ் வெய்தினர்கள்; நின்னடிமைய னய யான் இவ்வுலகியலை யிச்சித்து உண்மையெனக் கொண்டு கொடிய தீவினையையே செய்து பாவத்தைக் கைக்கொண்டுள்ளேன், இனி யாது செய்குவேன் என்பது.

குறிப்புரை:—"பாடும் பணியே பணியா வருள்வாய்" என்று பழ வடியாராய அருணகிரியார் அருளியவாறுக இவ்வாசிரியரும் 'பாடியாடி நின்றிரங்கிநின் பதமலர் முடிமேல் சூடிவாழ்ந்தன ரடியர்' என்று கூறினர்; இங்ஙனம் அம் மெய்யடியவர் மெய் வாழ்வினைக்கருதி பேறு பெற்றனர்; யான் பாவியேன் பொய்வாழ்வே வாழ்வென்று உள்ளம் பொங்கி வழிய புதுமை கொண்டேனன்றியும், பாவப் புனல் பரப்பி லாழ்ந்துழையு நினை யாது பாவவினையினீட்டி, வாழாது தாழா நின்றேன்! உய்யு நெறி கண்டி லேன் என் செய்வான் தோன்றினேன்! என்றிரங்க லாயினர். (18)

மகூ. களவு வஞ்சனை காமமென் றிவையெலாங் காட்டும்
அளவு மாயையிங் காரெனக் கமைத்தன ரையா
உளவி லேயெனக் குள்ளவா றுணர்த்தினுன் னடிமை
வளரு மாமதி போன்மதி தளர்வின்றி வாழ்வேன்.

பொழிப்புரை:—எனையனே! திருட்டென்ன, வஞ்சிப்பென்ன, இச் சைப் பெருக்கென்ன இவைகளை யெல்லாம் என்பால் நின்று தூண்டிக் காட்டாநின்ற மாயா மாயையினை இங்கே எளியேற்கு உண்டு பண்ணினோர் யாவரோ? ஆகையால் யானறியு மாறதாக இவ்வுளவை மர்மமா யெடுத்தோ துவையே யாயின், நின் உண்மைத் தொண்டனேன் கோழை புத்தி கொள் ளாது தினேதினே வளரா நின்ற சந்திரனைப் போன்று அறிவு விருத்தியாய் வாழ்வேன் என்பது.

குறிப்புரை:—களவாதி தீக்குணங்களைத் தூண்டுவிக்கு மாயா சக்தி யினை எற்கமைத்தாரியாவர்? அவ்வுண்மை மர்மத்தை யென் அறிவறியுமாறு ஓதின், பூரண சந்திரனையொத்து புத்தி-விர்த்தியாகி நல்வாழ்வு பெறுவே னென்பது கருத்தாம்.

"கிடையாத வாக்கை கிடைத்து மென்கொ லாவி
யடையாச் சிவனடி யாய்ந்து"

என்ற பெரியார் பெருமொழியின் கருத்தைப் பற்றுக் கோடாராதலின் மனமாயை வந்தவாறறிந் தொதுக்குவான் கருதி இறைவனை வேண்டுவா ராயின ரென்க.

(19)

உ௰. வான நாயக வானவர் நாயக வளங்கூர்
ஞான நாயக நான்மறை நாயக நலஞ்சேர்
மோன நாயக நின்னடிக் கன்பின்றி முற்றும்
தீன னுயகம் வாடவோ வென்செய்வேன் செப்பாய்.

பொழிப்புரை:—தேவ லோகத்திற்குத் தலைவ! ஆண்டுள்ள தேவ ராதியர்க்கு மிறைவனே! வளப்ப மலிந்துள்ள மெய்ஞ்ஞானதிபனே! மற் றும் சதுர் வேதங்கட்கு மிறைவனே! நன்மை மிகுத்தோங்கு மௌன சித்திக்கிறைவனே! நின் திருப்பாத கமலங்கட்கு பேரன்பு செய்வதன்றி முழுமையும் எழ்மை புத்தி கொண்டு என்னெஞ்சம் வாட்ட முறவோ! யான் யாது செய்வது கூறாய்!

குறிப்புரை:—தேவலோகாதி சமஸ்தங்களுக்கும் மகா பிரபுத்துவம் வாய்ந்துள்ள தலைவனே! நினது பெருமை வாய்ந்த பொன்னடிகட்கு மன மார்ந்த மெய்யன்பில்லாது கோழை புத்திகொண்டு ஏழையேன் வாட்டமுறு தலும் நின்னருட்குத் தக்கதாமோ?

(20)

உக. ஏத மற்றவர்க் கின்பமே பொழிகின்ற விறையே
பாத கக்கருங் கன்மனங் கோயிலாப் பரிந்து
சூத கத்தனு யாகினு மிச்சைமேற் றேன்றும்
வாத னைக்கிட மாயினே னெவ்வணம் வாழ்வேன்.

பொழிப்புரை:—சிறிதேனும் குற்றமில்லா நற்றவர்கட்கு ஒப்பற்ற பரமானந்த பிரசாதத்தைத் தந்தருளுகின்ற தலைவனே! பாவத்தால் திண் ணியதான கல்லொத்த நெஞ்சமானது நினக்கு ஆலயமா மாறதாக, மிகவும் வஞ்சமலிந்த நெஞ்சகத்தோடும் விரைந்து கபட சிந்தையினனாகி, எவற் றினும் விருப்ப மீக்குறத் தக்கத் துன்பத்திற்கு ஆஸ்பதனாகி விட்டேன், ஆதலால் யான் வாழ்வதினி யெவ்வாறோ! என்பது.

குறிப்புரை:—நன்னெஞ்சர்க்கு நலம்பொழி கருணையாளனே! எவற் றினும் விருப்ப மேலோங்கப்பெற்ற வாதனை கொண்டுள்ள யான் எவ்வாறு பெருவாழ் வெய்தப் போகிறே னென்பது.

(21)

உஉ. தெளிவோ டீகையோ வறிகிலா னறிவிலான் சிறிதும்
அளியி லானிவன் றிருவருட் கயலென வறிந்தோ
எளிய னாக்கினை யென்செய்வே னென்செய்வே னெல்லா
வொளியு மாய்நிறை வெளியுமா யாவுமா முரவோய்.

பொழிப்புரை :—சோதி மயமாய்த் துலங்கும் சகல பொருள்க ளாகியும், பரந்து விரிந்துள பரவெளியெனும் பரமாகாய மாகியும், மற்றுள்ள பொருள்களனைத்து மாகியு முள்ள மேலோய்! சத்து அசத்தென்றுணரத் தக்க தெளிந்த புத்தியோடும், தான தருமங்களென்பதைச் சிறிது மறிந்தானில்லை, அன்றிப் பேரறிவுமில்லாதவன், சற்றும் தயவு முதலிய காருணிய புத்தியு மற்றவன், மற்றுந் திருவருளுக்கும் புறம்பானவன் என்றுணர்ந்தோ என்னைப் பேதையனாகச் செய்தாய்! தேவரீரே இவ்வாறாகச் செய்திடின், பேதை யென் செயக்கடவேன்! என் செயக்கடவேன்!!

குறிப்புரை :—ஐயந், திரி பென்னும் விகாராதிகளன்றி கூர்மையாய் நிதானித்துள்ளதே தெளிவாம்; " இத்தெளிந்த புத்தியற்றவன், கொடை, நல்லறிவு ஆகிய சத்துவகுண பிரவிர்த்தி யில்லாத மந்த மதியன், திருவருட் சத்திக்குத் தக்க பாத்திரனல்லன் என்பது மெய்ந்நூன் முறையாதலால், அஃதிலானென்றறிந்தோ எளியனாக்கினை " யென்று இரங்கி வேண்டுவாராயினர்.

' எல்லா வொளியுமா ' யென்றார் இறைவனை.

எல்லா வொளி.

ஒளியாவது, பல முகாந்தரப்பட்டு நானா வடிவமாக ஆங்காங் கமைந்து நின்று அநுபவம், காக்ஷி, யுக்தி பூர்வமாகச் சமயநோக்கிப் பரிபக்குவத்திற் கீடாகப் புலனாகும்;

ஆன்மாக்களுக்குத் தற்போதமென்னும் சீவபோதம் குறையக் குறைய, சிவபோதம் என்னும் சத்வகுண பிரவிருத்தி நிறையப் படும்; அங்ஙனம் நிறைவெய்திய விடத்தே அங்கோர் ஒளி தோன்றும்; இவ்வொளியே தீபச் சுடரினைச் சூழ்ந்து பிரபைபோல் வட்டமாகப் பரந்து தோன்றுவ தறிக.

இவ்வொளியினைச் சற்று உற்று நோக்கு மிடத்தே இதனுள் பஞ்ச வர்ணப்படங்களை விரித்தன போன்றே பலவர்ணச் சுடராய்க் காணப் படும்; அன்றி அவ்வொளிக்குளே பலவாறான சித்திர வடிவங்களுந் தோன்றி யொளிரும்; அன்றியும், பஞ்ச மூர்த்திகளும், பஞ்ச சத்திகளும் அவ்வொளிக்குள்ளே காணப்படும்;

இவ்வகையான பலபட விரிந்த ஒளித் தோற்றங்களுள்ளிருந்தும், சிவமென்பது பனி, புகை, தீக்காற்று, அக்கினி, மின்மினி, மின்னல், பளிங்கொளி, சந்திரனொளி முதலானவைகளைப் போன்று பலவகைத் தோற்றமாகக் காணப் பெறுமென்க; இவை மட்டோ, பற்பல புவனப் பரப்புகளுந் தோன்றப்படும்; இன்னும், எழுவகைத் தோற்றமாயுள்ள பல ஆன்ம வர்க்காதிகளும் ஆங்கே காணலாகும்.

மற்றும், பளிங்கொளியை யொத்த விந்துக்கள் அநேகமான சந்திரனை யொத்து காணப்படும்; பின்னே ஆதித்தனொளியன்ன கண்டமாயதோர் சோதியுங் கண்கூசத் தோற்றும்; இதன் பின்னர் தொடர் பாகத் தசநாதங் களும் ஒலிக்கு மென்க; இதன் பின்னடியாக வெங்கணும் நீக்கமற வியாபித்து நிற்கும் செஞ்சுடாராய பரை தோன்றுவள்; இதுவும் சுடர் மயமே. இதன்மேல் பரை யொளிக்குளே ஆன்ம சைதன்னிய மழுந்துங்கால் உள்ளிருக்கம், கண்ணீர், திகைப்பு, கம்பம், நகை, பெருவலி, புகை முதலியனவுந் தோற்றப்படும். இதன்பின்னே பாலன், உன்மத்தன் பக்குவம் நிகழப் பெறு மென்க.

இவ்வரியனவாகிய பலப்பல சோதி சொரூபாதிக ளெல்லாம் முறையே ஒன்றன்பி னொன்றாகக் காணப்பட்ட பின்னர், பரையொளிக்குள் உள்ளொளி யாகிய பேரானந்தச் செஞ்சுடர் காணப்பெறும், இச்சுடர்க்கு ஒப்புவமையில்லை யாகும்; அன்றி வாயினாற் கூறவும் வசமன்று; உள்ளொளித் தோற்றமாய் மேலுக்குமேல் தோன்றும்; இப்பரஞ்சோதியே பரசிவமாகும், இவ்வுண்மை நிகழ்வு மெஞ்ஞானக்கண்ணாற் காணத்தக்கனவேயாம்; ஆகவே, சிவத்தையே கண்டுள்ள ஆன்மா பசையற விழுங்கப்பட்டு ஆனந்தாதீதத்தில் வைக்கப் பெறுவனென்க. இவ்வநுபூதிகள் மூலாதார முதலாகப் பிரமரந்திர பரியந்தம் சகள ரூபியாக வியாபித்துள்ள சூரியவொளி போன்று சுழுமுனை நாடியின் மத்தியில் பேரொளிப் பிரபையாய், சூக்குமமாய் விளக்கமுறும் சிவபரஞ்சுடரைக் குருமுகாந்தரமாய்த் தியானித்துச் சமாதி கூடலாலும், பதி பசு பாச வுண்மையை யுணர்தலானும் நன்கறியலாம். (22)

உ௩. கண்ணி னுண்மணி யென்னவே தொழுமன்பர் கருத்துள்
நண்ணு கின்றநின் னருளெனக் கெந்தநா ளணுகும்
மண்ணும் விண்ணுமற் றுள்ளன பூதமு மாறுப்
பெண்ணு மாணுமா யல்லவாய் நிற்கின்ற பெரியோய்.

பொழிப்புரை:—மண்ணுலகு, விண்ணுலகு, மற்று முள்ளனவாகிய பூத பேதங்களினும், நீங்கப் பெறாத பெண்ணாண்களுமாகி யிவையல்லாத

னவு மாகி விளங்குகின்ற பெரிய பொருளானவனே! நேத்திரங்களுள்ளே மணிபோன்றொளி செய்து, நின்னைத் தொழுது துதிசெய்யும் பேரன்பர்தங் கருத்தினூடு மருவி யிருக்கின்ற நின் பேரருளானது, இவ்வடியவனுக்கு எக்காலம் வந்து கிடைக்குமோ!

குறிப்புரை:—நினது ஒப்பற்ற திருவருட் செல்வமாயது, நின் பாத தாமரைக்கண் விழுந்து கிடக்கின்ற இவ்வெளியேற்குக் கிடைக்கப் பெறுவது எக்காலமோ வென்பது முடிபுரையாம்.

"கண்ணுண் மணியே, மணியாடு பாவாய் காவாய்"

என்று திருவாய் மலர்ந்தருளியவாறு, ஈண்டு ஆசிரியரும், கண்ணினுண்மணி யென்னவே தொழுமன்பர் கருத்துள் நண்ணுகின்ற நின்னருளென்றார். (23)

உச. சகமெ லாந்தனி புரந்தனை தகவுடைத் தக்கோர்
அகமெ லாநிறைந் தானந்த மாயினை யளவில்
மகமெ லாம்புரிந் தோரைவாழ் வித்தனை மாறா
இகமெ லாமெனைப் பிறந்திடச் செய்ததே தெந்தாய்.

பொழிப்புரை:—எனது திருவருளன்னையே! அண்டபுவன சராசரங்க ளனைத்தையும் நீயாகவே காத்தருள் செய்தனையே! மிகவும் தக்கோராய பெரியோர்களது உள்ளக மெல்லாம் பொருந்தி பேரானந்த மயமாயமர்ந் தருளினையே! மற்றும் கணக்கில்லாத யாகாதி பதி புண்ணியங்களைச் செய்தவர்களையும், நன்குற வாழுமாறுகந்தனையே! (இவ்வாறெல்லாம் நின் கருணைக் கடலினும் விரிந்து கிடப்ப) இவ்வடியவனை மட்டும் இப்புவனமெங்கெங்கும் சனித்துக் கிடக்குமாறு செய்தருளியது எதற்காகவோ! என்பது.

குறிப்புரை:—சகல உலகங்களோடும், பெரியார்தம் அகத்தின்கண்ணும் பொருந்தி, யாகபரானான மகானுபாவனையும் நலனுறக் கருதியும், வந்து, எளியேனை யெங்கணும் பிறந் திறந்துழலுமாறாக்கிய தென்னோ வென்பது சாரமாயிற்று. (24)

உரு. ஏய்ந்த நல்லருள் பெற்றவர்க் கேவலா யெளியேன்
வாய்ந்த பேரன்பு வளர்க்கவுங் கருணைநீ வளர்ப்பாய்
ஆய்ந்த மாமறை யெத்தனை யத்தனை யறிவால் [ய்
தோய்ந்த பேர்கட்குந் தோன்றிலாத் தோன்றலாந் தூயோ

பொழிப்புரை :—இவ்வேழை மதியேன் பொருத்தமாய நின்மேலாகிய திருவருளைப் பெற்றருளிய பாக்கியவான்களான மெய்யன்பர்கட்கு தொண்டுரிமை யாளனாக வாய்க்கக் கூடியதோர் மேலாம் பக்தி சிரத்தையைப் பெருக்குமாறு நீ யென்பால் கிருபையை வளர்த்தருள வேண்டுவன்; பெரியோர்களாலே ஆய்ந்துணர்ந்து வரும் பெருமை வாய்ந்த வேதங்களெவ்வளவோ அவ்வளவையும் அறிவினாலே வாய்ந்துள்ள பேர்களுக்குந் தோற்றப் பெறாத மாதேவனாகிய மகாபிராக்ஞனே!

குறிப்புரை :—இறைவா! நின் திருவருள் வாய்க்கப் பெற்ற மெய்யடியவர்க்கடியனாயும், நின்பாலன்பை யின்னுமின்னும் வளர்ந்தோங்குமாறும் நீ கிருபை செய்தருள வேண்டுவேன் என்பது.

இறைவன், அடியார்தம் முளமே குடியாக்கொண் டருளியவனாதலால், அம்மெய்யன்பர் தம்மடிக் கேவலாயமர்ந்துழி இறைவன் திருவருட்கு இலேசா யீடுபடலா மென்பது நோக்கியே, எய்ந்த நல்லருள் பெற்றவர்க் கேவலாளனாக வேண்டுமென்று வேண்டலாயின ரென்க. (25)

உசா. தக்க நின்னருட் கேள்வியோ சிறிதின்றித் தமியேன்
மிக்க தெய்வமே நின்னின்ப வெள்ளத்தில் வீழேன்
ஒக்க ருப்தந்தை மகவெனும் பாசக்கட் டுடனே [தேன்
துக்க வெள்ளத்தி லாழ்கின்றே னென்செய்வான் றுணிந்

பொழிப்புரை :—முத்தேவர் போற்று முதற்றேவ! மேலாகிய நினது திருவருட் பிரசாதத்தைப்பற்றிய விசாரமேது மில்லாதுள்ள இந்த சிறுவன், நினது மேலாய பரமானந்தப் பெருக்கிலே கலவாது, உற்றார் பெற்றார் மக்கள் என்பதாகிய பரமாபாசத்தளை பூண்டு விசாரமாகிய வெள்ளத்தின்கண் கிடந்துதத்தளிக்கின்றவன் யாது செயவோ முன்வந்தேன்!

குறிப்புரை :—எம்மானே! நினது திருவருட்குரிய விசாரமென்பது சற்றுமில்லாததால் முத்தி யின்பத்திற்குப் பக்குவமில்லாது பந்துவர்க்க பந்தமானது தொந்தித்து துயர்க்கடலுட்டுளைந்து கிடக்கின்றேன் என்பது முடிபாம். (26)

உஎ. பவம் புரிந்திடும் பாவியேற் கருணிலை பதியத்
தவஞ்செ யும்படித் தயவுசெய் தருள்வதே தருமம்
அவம்பு ரிந்திடார்க் கானந்த வமிர்தத்தை யளிக்க
நவங்கொ டத்துவத் திரையெறி கடலெனு நலத்தோய்.

பொழிப்புரை :—அப்பிரயோஜனமாய காரியாதிகளைச் செய்யாதவர் கட்கு பரமானந்தாமிர்தம் வழங்கற்கு, ஆச்சரியமாகிய தத்துவாதிகளான அலைவீசும் சமுத்திரம்போன்ற நலத்தவ! பாவகாரியனுய எளியேற்கு நினது மேலாகிய திருவருட் செல்வமானது நிலைபெறுமாறு அதற்குரியதாகிய மேலாம் தவத்தினை புரிந்திட நீகிருபை செய்தாள்வதே நின் பெருந்தகைமைக்குரிய தருமமாகும்.

குறிப்புரை :—

அடுக்குந் தொண்டர் தமக்கெல்லா மருளீந் திங்கே
யெள்ளளவிற்
கொடுக்குந்தன்மை தனையொளித்தா லொளிக்கப்படுமோ
குணக்குன்றே
தடுக்குந் தடையும் வேறில்லை தமியேன்றனையித்
தாழ்வகற்றி
யெடுக்குந் துணையும் பிறிதில்லை யையோவின்னு
மிரங்கிலையே.

யென்றூர் பெரியரிற் பெரியாரும்.

இதனுல், பாவம் புரியும் சுபாவங்கொண்ட பான்மையேனுதலால் இந் நாயினேற்கு நின்றிருவருள் பதியுமாறதாக அதற்கேற்ற மெய்த்தவ மிழைப்பான் தேவரீர் திருக்கருணை புரிந்தாள்வதே தருமமாகு மென்பது சாரமாமெனக. (27)

உஅ. உற்று ணர்ந்தெலா நீயல தில்லையென் றுனையே
பற்று கின்றன ரெந்தைநின் னடியர்யான் பாவி
முற்று மாயமாஞ் சகத்தையே மெய்யென முதரு
னற்றி ருந்திடத் தொழில்செய்வான் றனைநிக ரானேன்.

பொழிப்புரை :—என்னருந் தந்தையே! தேவரீர்தம் மெய்யன்பர்கள் அறிவு நூல்களால் ஆராய்ந்தறிந்தமட்டில், சகலமான பொருள்களெல்லாம் நீ பொருந்தியிராதில்லை யென்று தெரிந்தவர்களாய்த் துணிவுகொண்டு நின்னையே வந்தடைந்து அன்பு செய்கின்றூர்கள்; மகா அபாக்கியனுன இப் பாவியேன் முழுதுமே பொய்த் தோற்றமாயுள்ள இப் பிரபஞ்ச வாழ்வையே சாஸ்வதமாக்கொண்டு, யாதாமோர் முதல்தொகையு மில்லாது காரியஞ் செய்யும் மந்தமதித் தொழிற்காரனை ஒத்தவனுய் விட்டேன்!

குறிப்புரை :—எனது பரமபிதாவே! சுருதியுக்தி யனுபவாதிகளால் ஆய்ந்துணருங்கால் சகலமும் நின் செயலானே நடந்தும், எதுவும் நீயன்றி

யில்லாததுமாய் விளங்கலான் நின்னையே வந்தடைகின்றனர் ; மிகப் பாவியாகிய யானோ, முழுமோசமாய இவ்வுலக வாழ்வையே உறுதியாக்கொண்டு, முதலிலாத் தொழில்புரி மூடனையொத்தேன் என்பது சாரமாம். சான்றாக :—

எல்லா முடையாய் நின்செயலே யெல்லாமென்றா
லென் செயல்க
ளொல்லாநினது செயலன்றோ வென்னே யென்னைப்
புறந்தள்ளல்
வல்லா யென்னைப் புறம்விடுத்தாற் புறத்துமுன்றன்
மயமன்றோ
நல்லா ரெங்குஞ் சிவமயமென் றுரைப்பாரெங்க
ளுயகனே.—என்றார் பெரியாரும். (28)



## மண்டலத்தின்

க. மண்டலத்தின் மிசையொருவன் செய்த வித்தை
யகோ வெனவும் வாராது
அண்டமவை யடுக்கடுக்கா யந்தரத்தி
னிறுத்துமவ தானம்போல
எண்டருநல் லகிலாண்ட கோடியைத்தன் னருள்வெளியி
லிலக வைத்துக்
கொண்டுநின்ற வற்புதத்தை யெவாறு நிச்சயிக்கக்
கூடா வொன்றை.

பொழிப்புரை :—இப்பெரிய மண்ணுலகத்தின் மேல் ஓர் வித்தையாளன் செய்துகாட்டிய வித்தையானது மிக்க அதிசயமே யெனவும், கோழி முதலிய பக்ஷிகளின் முட்டைகளை ஆகாயத்திலே அடுக்காய் நிற்கச் செய்கின்றதான ஜெகஜாலவித்தை போன்று, எண்ணளவினதான மேலாய அகிலமாம் அண்டகோடிகளை யெல்லாம் தமது ஒப்புவமையற்ற திருவருள் வெளியாமாகாயத்திலே நிலை நாட்டியுள்ள புதுமையினை இவ்வகைத்தன்ன தென்று உறுதி கூறுமிலக்கண மொன்றில்லாத வொருவத்துவை யென்பது.

குறிப்புரை:—மண்டலம், மண்—தலம், மண்மய பிரதேசமாம். வித்தையாளியாய ஒருவன் பல மூட்டைகளை ஒன்றின்மே லொன்றாயடுக்கி ஆகாயத்தில் நிற்கச் செய்வதுபோலவே, என்வாழ் முதலாய விறைவனும் அண்டாண்

டங்க ளனைத்தையும் தமது திருவருள் வெளியின்கண் நிலையுறச் செய்தருள் கின்றோனென்பதுவே கருத்தாம். அகோவென்பது இரும்பூதுரையாம். (1)

உ. ஒன்றிரண்டாய் விவகரிக்கும் விவகாரங்கடந் தேழாம்
யோக பூமி
நின்றுதெளிந் தவர்பேசா மௌனநியா யத்தைநிறை
நிறைவைத் தன்னை
யன்றியொரு பொருளிலதா வெப்பொருட்குந் தான்
முதலா யசல மாகி
யென்று முள்ள வின்பத்தைத் தண்ணென்ற சாந்தபத
வியற்கை தன்னை.

பொழிப்புரை:—ஒன்றென்றும் இரண்டென்றும் எண்கொண்டுரைக்கும் வித்யா விவகாரத்தினைத் தாண்டி யதற்கப்பாலுள்ள ஏழாவதான துரியஞான பூமிக்கண் பொருந்தி தெளிந்தவர்கள் பேச்சற்றதற் கேதுவாய மோன விவகாரத்தினை, பூரணப்பொருளை, தானன்றி வேறோர் பொருளில்லாமையாய், சகலத்திற்கும் தானே முதற்பொருளாய், சலிப்பிலதாகி, எக்காலத்தினும் கெடாத பரமானந்தத்தை, குளிர்ந்த பரமசாந்த பதமெனும் இயல்பாந் தன்மைப் பொருளினை என்பது.

குறிப்புரை:—முதற்பூமி யிரண்டாம் பூமி யென்று விசாரம் செய்வதில் ஏழாவதாயுள்ள துரியங்கடந் தப்பாலுள்ள அதீத நிலையாம் ஞான பூமிக் கண்ணிலவி ஒப்பற்ற மௌன ஞானமெய்தி வாழ்வர்; இதனையே மேலோர் பரானந்த மென்றுங் கூறுகிற்பர்.

பரானந்தம் - பரத்தோடும் பிரிவின்றி அத்துவிதானந்த மெய்தலென்பதாம். அசலம் - சலிப்பற்று நிற்றலென்க. (2)

ங. பதமூன்றுங் கடந்தவர்க்கு மேலான ஞானபதப்
பரிசு காட்டிச்
சதமாகி நிராலம்ப சாக்ஷியதா யாரம்பத்
தன்மை யாகி
விதமியாவுங் கடந்தவித்தை யெனுமிருளைக் கீண்டெழுந்து
விமல மாகி
மதமாறுங் காணுத வானந்த சாகரத்தை
மௌன வாழ்வை.

பொழிப்புரை :—நால்வகையதாம் பதவிகளில் முதன் மூன்று பதவிகளையுந் தாண்டியவர்க்கு நாலாவதாய மெய்ஞ்ஞான பதத்தன்மையு மறிவித்து நிலைபெறச் செய்து யாதாமோர் பற்றுக்கோடு மின்றிய சாக்ஷிபூதமாய், ஆதியெனுந் தன்மையு முடைத்தாய்ப் பின்னர் மற்றவையுங் கடந்து, அவிவேகமாகிய விருளையுங் கிழித்தொதுக்கி வெளிப்பட்டு, மேல் மலமாசுமற்று அறுவகை மதத்தவரு மறியவொண்ணாத பேரின்பக்கடலை, மோனப் பெருவாழ்வினை என்பது.

குறிப்புரை :—சரியை கிரியா யோகமென்கின்ற மூவகையதான பதவிகளைக் கடந்தப்பாலான ஞான பதவிக்கணிறுத்தி நின்மலானந்த மெய்து மாறும். அவித்தை - அஞ்ஞானம். விமலம்-மலமற்ற தன்மை. (3)

ச. வாழ்வனைத்துந் தந்தவின்ப மாகடலை நல்லமிர்தை
மணியைப் பொன்னைத்
தாழ்வறவென் னுளத்திருந்த தத்துவத்தை யத்துவித
சாரந் தன்னைச்
சூழ்பெரும்பே ரொளியையொளி பரந்தபரவெளியையின்
சுகத்தை மாறு [பச்
தேழுலகுங் கலந்தின்றாய் நாளையா யென்றுமா
மியற்கை தன்னை.

பொழிப்புரை :—ஒப்பற்ற பரபோக வாழ்க்கையாவு மளித்தருளிய பரானந்த வாரியை, மேலாய திருவமுதை, ஒளிசெயு மாணிக்கத்தை, சுவர்ணத்தினை, என் கீழ்மை யறுமாறு இதயவெளியி லமர்ந்துள்ள யதார்த்த வத்துவை, அத்வைத நெறிநின்ற சாரமாயுள்ளதை, மிக்கதோர் பரஞ் சோதியை, பிரகாசமாய் விளங்கிய பரமாகாயத்தை, நிரதிசயானந்தத்தினை, நீக்கமுறாது எழுலகுங் கலந்தருளி, இன்றும் நாளையுமாய், எப்போதுமாய் விளங்குகின்ற இயல்பாந் தன்மையை.

குறிப்புரை :—

"சீரொளிய தழற்பிழம்பாய் நின்ற தொல்லைத்
திகழொளியைச் சிந்தைதனை மயக்கந் தீர்க்கு
மேரொளியை யிருநிலனும் விசும்பும் விண்ணும்
எழுலகுங் கடந்தண்டத் தப்பாலின்ற பேரொளியை"—

என்றவாறே. அப்பமுனியார் செப்பி யருளியவாறுங் காண்ப.

'வாழ்வனைத்துந் தந்தவின்ப மாகடலை' யென்றாசிரியர் கூறியருளியது மெய்யடிவர்கட் கருளியன கொண்டு இறந்த காலத்தாற் போற்றியருளினரென்க. காரணம், தமக்கும் அப்பெருவாழ்வு வேண்டலின். (4)

௫. தன்னையறிந் தவர்தம்மைத் தானாகச் செய்தருளுஞ்
சமத்தை லோக
மின்னைநிகர்த் திடவழியாச் சொரூபானந்தச்
சுடரை வேதமாதி
என்னையறி வரிதென்னச் சமயகோ டிகளிடைய
விடையறாத
பொன்னைவிரித் திடுமுலகத் தும்பருமிம் பரும்பரவும்
புனித மெய்யை.

பொழிப்புரை :—தம்மை யுள்ளவா றுணர்ந்த தத்துவஞானியர்களை யெலாம் தம் வடிவமே யாக்குவித்தருளும் அரும்பெரும் பரம சக்தி வாய்ந் துள்ளதை, இம் மண்ணுலகு வான மின்னை யொத்திருக்கவும், எக்காலுங் கெடாத வடிவமாகிய சோதி மயானந்தத்தை, சதுர்மறை முதலாகியவைகள் தன்னை யுணர்தல் அரிதெனவும், மற்றும் பலமத மார்க்காதிகளெல்லாம் அறியப்பெறாது பின்னிடையவும், இன்னும் இடைவிடாது விளங்கியுள்ள பொன்னுலகப் புத்தேளும் இம் மண்ணுலகத்தாரும் தோத்திரித்துவரும் மேலாம் சத்திய வத்துவினை.

குறிப்புரை :—'சமத்தை' யென்பதற்குச் சமநிலை யென்பது மமையும்; இவ்வுலகம் மின்னலைப்போன் றழிவதாயினும், தாமழியாச் சொரூப ஆனந்தச் சுடரை யென்றார். மறை முதலானவைகள் இன்னமும் அறியோ மென்னும் பெருமை வாய்ந்தவனென்பது விகசிதம்; அறுசமயங்கட்கும் புறச்சமயங்களானவை யறியப்படாத வஞ்சவெளி யென்ப. தேவர்முதல் யாவரும் போற்றத்தக்க சுத்த சத்தியன் என்பது சாரமாய்த் துலங்கு கின்றது. (5)

௬. பரவரிய பரசிவமா யதுவெனலாய் நானெனலாய்ப்
பாச சாலம்
விரவிநின்ற விசித்திரத்தை யைக்கியபதத் தினிதிருந்த
விவேகந் தன்னை
இரவுபக லினைப்புமறப் பெனுங்தொந்த மறியார்க
ளிதயம் வேதச்
சிரமெனவாழ் பராபரத்தை யானந்த நீங்காத
சிதாகாசத்தை.

பொழிப்புரை :—அன்பர்கள் பாடிப் பணிதற்கரிய பரசிவ சொரூப மாகியும், அப்பரம்பொருளென்று சொல்லத் தக்கதாகியும், யானென்னக்

கூறத் தக்கதாயும், ஆசாபாச வினங்களோடு மருவியுள்ள விநோத சொரூபத்தையும், ஐக்ய நிலையிற் பொருந்தியுள்ள இனியதோர் ஞான சொரூபத்தையும், இராப்பகல், கருதல் மறத்தலெனக் கூறப்படும் தொடர்பினை யறிதலில்லாத மெய்த்தவத்தோ ரிதய தாமரையே வேத முடியெனக் கருதி ஆண்டமர்ந்துள்ள பராபர வஸ்துவையும், பேரின்பநிலை குலையாத ஞான வெளியினையும்.

குறிப்புரை :—தற்பரனும் நற்பரன்றன் பொற்புருவங் காணப்பெறுதலரிதா மாதலால், இறைவன் ஈண்டு ' பரவரிய பரசிவமா யென்றும், அதுவெனலா ' யென்றுங்கூறி யருளின ரென்க ; இறைவன், மாயாஜால கோலாகலத்தில் மருவியு மொருவியு முள்ளமையான், ' பாச சாலம் விரவி நின்ற விசித்திரத்தை ' யென்றனர். சீவாத்ம பரமாத்ம சக்யத்தையே ஐக்ய மென்றனர்போலும் ; சகல கேவலங் கடந்துள்ள பெரியாரிதயமே அவர் தமக்கு வேத சிரமாமெனக் கொண்டமர்ந்தாரென்று கூறியருளியதால், ஏனையோ ரிதயத் திருக்காரென்பது வெளித்தோன்றிற் றென்க. சிதம்பர மெனும் சிதாகாச வெளியாம் பொற்சபைக் கண்ணே இறைவன் புரியுந் தாண்டவம் ஆனந்தத் தாண்டவமாதலின், ஈண்டு ஆசிரியரும் ' ஆனந்த நீங்காத சிதாகாசத்தை ' யென்றருளிச்செய்தன ரென்ப. (6)

எ. அத்துவித வனுபவத்தை யனந்தமறை யின்னமின்ன
மறியே மென்னும்
நித்தியத்தை நிராமயத்தை நிர்க்குணத்தைத் தன்னருளா
நினைவுக் குள்ளே
வைத்து வைத்துப் பார்ப்பவரைத் தானாகவெந்நாளும்
வளர்த்துக் காக்குஞ்
சித்தினைமாத் தூவெளியைத் தன்மயமா மானந்தத்
தெய்வந் தன்னை.

பொழிப்புரை :—சீவேச்வர ஐக்யாநுபூதியினனும், இன்னமும் வேதங்களெல்லாம் யாங்களறிந்தில மென்கின்ற உண்மைப் பொருளானவனும், யென்ஞேயுமில்லானும், குணரகிதமானவனும், தனது திருவருளினாலே தன் சித்தத்தூடே ஊன்றி யூன்றி நோக்கிடுவோரைத் தானாகுமாறு எப்போதும் மென்மேலும் நன்குற வோங்குமாறதா யிரட்சித்துவரும் ஞானாகாரப் பொருளானவனும், மகாப் பரிசுத்தாகாய மானவனும், தற்சொரூபமாய பரானந்த வின்பமருளும் பரதெய்வ மானேனும்.

குறிப்புரை :—அத்துவிதவத்து - சீவேஸ்வராநுபூதி நிலயமாயது. நிராமயத்தை - செகசீவபரங்களுக்குரிய நாமரூபாதி மாயாவினையவிகாரதி

நோயற்ற பொருளை. நிர்க்குணத்தை - குணங்களுக் கப்பாற்பட்ட பொருளை. தன்னருளா நினைவுக்குள்ளே வைத்து வைத்துப் பார்த்தல் - தன்னருள் வலத்தால் தன்னியத்தூடே உயிர்க்குயிரான தனிப்பரஞ் சுடரினை வருந்தி வருந்தி நோக்குதல். மாத்தூவெளி - பெருமைவாய்ந்த பராகாயமாம். (7)

அ. தன்னிலே தானாக நினைந்துகனிந் தவிழ்ந்துசுக
சமாதி யாகப்
பொன்னிலே பணிபோலு மாயைதரு மனமேயுன்
புரைக டீர்ந்தாய்
என்னிணே யான்பிழைப்பே னெனக்கினியா ருன்போல்வா
ரில்லை யில்லை
உன்னிலோ திருவருளுக் கொப்பாவா யென்னுயிர்க்கோ
ருறவு மாவாய்.

பொழிப்புரை :—தனக்குள் தான் இலயமாகு மாறு எண்ணி, அவ் வண்ணமே ஓங்கி விரிவெய்தி பேரின்ப யேதுவாய நிட்டைகூடற்காக, பொன்னாலேற்பட்ட ஆபரணம் போன்று, மாயையாலேற்பட்ட நெஞ்சமே! நீ நின் குற்ற குற்றங்களி னின்றும் நீங்கினையானால் யான் கடைத் தேறுவேன்; இனி எனக்கு உன்னைப் போன்ற உரிமையாள ரெவருமின்றும், யோசிக்கு மிடத்து நீ திருவருட் செல்வத்திற்குச் சமானமாவாய், அன்றி, என்னுவிக்கும் இனியதோர் அரிய பந்துவு மாவாய்.

குறிப்புரை :—மகா மாயையான் றோன்றப்பெற்ற நெஞ்சமே! நின் குற்ற மற்று பரிசுத்தமாய்ப் பரிபக்குவ மெய்தால் யான் உய்வேன், இச் சமயம் நின் போன்ற துணையாளரும் உரிமையாளரு மின்றும்; அன்றி அத் திருவருட் சத்தியே நீ யாகுவாய்; நின்னாலே எனக்கு இன்ப நிட்டையுங் கிடைக்கப் பெறுவேன் என்பது சாரம். சான்றாக :—

அஞ்சு புலன்வழியோடி யலைகின்ற மனமேவா
நஞ்சமுத மாயுண்ட நாதன்பாற் போவோம்வா
தஞ்சமினி வேறில்லை சங்கரன்றாட் டஞ்சமின்றி
யுஞ்சிடவோர் நெறியில்லை யோகியர்பாற் போவோம்வா.

பெரியவர்தந் தரிசனத்தாற் பெறாதபொரு ளொன்றுண்டோ
வரியவர் மொழித்தடியா லடிக்கின்றேன் வாமனமே
யொருபொழுதோர் நொடியளவு நிற்பாயே லுயர்முத்திக்
கரைகாண்பேன் மெய்ஞ்ஞானக் கடலினையுங் காண்பேனே.

மனமெனுமோர் பேய்க்குரங்கு மடைப்பயலே நீதான்
மற்றவர்போ லெனைநினைத்து மருட்டாதே கண்டாய்
இனமுறவென் சொல்வழியே யிருத்தியெனிற் சுகமா
யிருந்திடுநீ யென்சொல்வழி யேற்றிலையானாலோ
தினையளவுன் னதிகாரஞ் செல்லவொட்டே னுலகஞ்
சிரிக்கவுனை யடக்கிடுவேன் றிருவருளாற் கணத்தே
நனவிலெனை யறியாயோ யாரென விங்கிருந்தாய்
ஞானசபைத் தலைவனுக்கு நல்லபிள்ளை நானே.

இவ்வண்ணமாக உபய வள்ளலாரும் ஓதிய தறிக. (8)

௯. உறவுடலை யெடுத்தவரிற் பிரமாதி யேனுமுனை
யொழிந்து தள்ளற்
கறவுமரி தரிதன்றோ விகபரமு முன்னையன்றி
யாவ துண்டோ
வறிதிலுன்னை யசத்தென்னல் வழக்கன்று சத்தெனவும்
வாழ்த்து வேனென்
சிறுமைகெடப் பெருமையினின் சென்மதே யத்தினினீ
செல்லல் வேண்டும்.

பொழிப்புரை :—உடற் சுமையைப் பெற்று வந்தவர்களுள்ளே மேன்மையான பிரமதேவன் முதலா யுள்ளவர்களாயினும் நின்னை விலக்கி வாழ்தற்கு மிக்க அருமையான தாகுமன்றோ? (நிற்க;) இம்மை மறுமை போகாதிகளும் நின்னையல்லாது அநுபவித்தற் கியலுமோ? வீணாக நின்னை அசத்தென்று கூறுதலும் நியாயமல்ல; சத்தாம்ஸமென்றே வாழ்த்தி வருவன்; ஆகையினாலே எனது கீழ்மை யொழியுமாறு பெருமையாகவே நினது பிறப்பிடத்திற்கே, அதாவது ஜனன தேயத்திற்கே இனி நீ போய்விட வேண்டும்.

குறிப்புரை :—இப்பாசுரத்தில், மனத்தை முன்னிலை யாகக்கொண்டு அதன் ஜனன தேயமாகிய மாயாபுரிக்கே சென்றடைதல் வேண்டு மென்று மிகவும் உபசார முறையாக ஆசிரியர் வேண்டிக் கொள்கின்றார்; ஏன்? மனமானது அங்ஙனம் மாயைக்கண் இலயப்பட்டு விடுமேல் தாம் தனியே யிருந்து நிட்டை கூடிச் சுத்த சைதன்யத்தையடைந்து சிவானந்தப் பேறு பெற்றுய்யலா மென்னுங் கருத்தால் கூறின ரென்றே குறிப்பறிந்துணர்க; இச்செய்யுட்கு மனம் தோன்றா யெழுவாயாகத் தொக்கி நிற்கின்றது.

இதனால், மனம் இறத்தல் வேண்டு மென்பது மிகவும் அவசிய மென்ற கருத்தாம்; சான்றாக ஆசிரியரும் பிறாண்டும்.

" சினமிறக்கக் கற்றாலுஞ் சித்தியெல்லாம் பெற்றாலு
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே"

என்றருளியதுங் காண்க. மனத்திற்குத் தாயக மாயையதாகும். (9)

ய. வேண்டியநா ளென்னோடும் பழகியநீ யெனைப்பிரிந்த
விசாரத் தாலே
மாண்டுகிடக் கினுமந்த வெல்லையையும் பூரணமா
வணக்கஞ் செய்வேன்
ஆண்டகுரு மௌனிதன்னால் யானெனதற் றவனருளா
லுவேன் பூவிற்
காண்டகவென் சித்திமுத்தி யெனக்குண்டா மொன்றாலென்
கவலை தீர்வேன்.

பொழிப்புரை :—வெகு காலமாக நீ யென்னோடும் பழக்க முற்றிருந்து இப்போது யெனைவிட்டேகிய கவலையினால் நீ மடிந்து போயினும் அவ்விடத்தை மனப்பூரணமாகவே (யான்சென்று) வணங்கிடுவேன், அடியனை யாண்டருள் புரிந்தருளிய மௌனாசிரியரால் யான், எனது என்கின்ற அகங்கார மமகாரங்க ளொழிந்து அவன்றன் திருவருளே நானாய் விடுவேன்; இவ்வுலகின்கண் எவர்களும் காணத்தக்கதாக எனக்கான சித்திகள் என்ன மற்று மோக்ஷமென்ன இவைகள் எனக்குக் கிடைக்கும்; கின்னால் எனக்குரிய விசார மொழிந்திருப்பேன்.

குறிப்புரை :—மன மாண்டொழிதலாவது, நினைப்பு மறப்பற்று நீங்கி விட லென்பதாம்; இங்ஙனம் நீங்கப்பெறின் நிட்டானுபூதி சித்திக்கும் பேறு வகையாலே "மாண்ட வெல்லைக்கும் வணக்கஞ் செய்வேன்" என்றார், ஏன்? மௌனாசிரியரால் திருவருளும் சித்தி முத்திகளும் பெற்று நிர்ச்சிந்தையா யிருப்ப னென்பது ஆசிரியர் கொள்கையாம். (10)

யக. தீராத வென்சனன வழக்கெல்லாந் தீருமிந்தச்
சனனத் தோடே
ஆரேனு மறிவரிய சீவன்முத்தி யுண்டாகு
மைய வையோ
காரேனுங் கற்பகப்பூங் காவேனு முனக்குவமை
காட்டப் போமோ
பாராதி யாகவெழு மண்டலத்தி னின்மகிமை
பகர லாமோ.

பொழிப்புரை :—இதுகாறும் நீங்காதுள்ள என் சனன விவகாராதிகளனைத்தும் இந்தப் பிறப்போடும் அற்றுப் போகும்; எவரானும் தெரிதற்கரிய தாம் சீவன் முத்தியு முண்டாம்; ஐயனே! அந்தோ! மேகத்தையாவது, அல்லது கற்பகப் பூஞ்சோலையை யாவது நின்றனக்கே உவமிக்க சாத்தியமாமோ! இந்த விரிந்த பூமண்டல முதலாக எழுவகையாயுள்ள மண்டலாதிகளினும் நின் பேராற்றல் வாய்ந்த தம் பெருமையினை யெடுத்துக் கூறுதல் எவர்க்கேனு மியலுமோ!

குறிப்புரை :—இவ்வுடற் பிறவியின் விவகாரம் இதோடு ஒருவாறு அற்று விடலாம்; எனக்கு சீவன் முத்திப் பேறுங் கிடைக்கப் பெறும் பாக்கியமுண்டு. நின் கொடைக் குணத்திற்கு மேகாதியனவும் ஈடுபடக் கூறலாகாதே! நினது மகத்துவத்தினை எழுவகைப் புவனத்தாராலும் கூறியளவிட லெளிதாமோ!

(11)

## பாயப்புலி.



க. பாயப் புலிமுன மான்கன்றைக் காட்டும் படியகில
மாயைப் பெரும்படைக் கேயிலக் காவெனை வைத்தனையோ
நீயெப் படிவகுத் தாலுநன் றேநின் பெருங்கருணை
தாயொத் தடியர்க் கருள்சச்சி தானந்த தற்பரமே.

பொழிப்புரை :—பாயும் சுபாவமாயுள்ள அந்தப் புலியின் பார்வையாக ஓர் மான் தனது கன்றினைக் காண்பிவித்தல் போன்று, இவ்வகிலாண்ட மாயையாம் பேராயுதத்திற்கு நேரான இலக்ஷியமாக எளியனைக் குறிக்கொண்டாயோ! நீ யெவ்வாறு நிர்மாணிக்கினும் அஃதொத்ததே யாகும்; ஒப்பற்ற வுனது அரிய கிருபா பிரசாதத்தினை நின் மெய்யன்பர்கட்கு அன்னையை யொத்தே யருளிச்செய்யும் உண்மை யறிவானந்தத் தான்றோன்றிக் கடவுளே.

குறிப்புரை :—இறைவ! பாயும் புலிக் கெதிராக மான் தன் கன்றைக் காட்டு மாறதாக, உலக மாயைக்கு எளியனை இலக்ஷியமாக் குறிக் கொண்டருளினாய்; ஆயினும் நின் பாகுபாடானது நலத்தினையே புரியுமாற்றால் எங்ஙனமாயினு மாகுக.

"நன்றுடையானைத் தீயதில்லானை நரைவெள்ளே, றொன்றுடையானை" என்றும், "தோன்றிய வெவ்வுயிர்க்குந் துணையாய் நின்ற தாயானை" என்றும்,

"பொய்யிலா மெய்யன்றன்னைப், பூதலமு மண்டலமும் பொருந்தும் வாழ்க்கை செய்வானை" யென்றும் இவ்வாறு யனந்த மெய்யுரைகள் மெய்ம்முறைச் சமயாசிரியர்கள் திருவாய் மலர்ந்தருளியனவே போன்று ஈண்டு இந்நூலாசிரியரும் 'நீ எதுசெயினும் நன்றே நின்னடியார்க்கு' என்று இறைவனை வாழ்த்தின ரென்க. (1)

உ. தற்பர மாஞ்சிற் பரமாகி மன்றந் தனிநடித்து
நிற்பரம் போருகன் மால்பணி நீதரென் னெஞ்சகமாங்
கற்பரந் தாங்குக் கரைந்திட வாஞெத்த காட்சிநல்கும்
பொற்பர மாயென் வினைக்கருந் தாதைப் பொடிசெய் ததே.

பொழிப்புரை:—கமல நான்முகனும், விட்டுணுவும் வழிபாடு செய்யா நின்ற பேராயிரமுடைய பெம்மானுர், தான்றோன்றியும் ஞான வடிவனுமாய்ப் பொன் மன்றமாம் ஞான சபையின்கண்ணே பஞ்ச கிருத்திய நிருத்தம் பயின்று நிற்கும் அப்பெருந்தகையாளர் என் மனச்சிலை வ்ளர்ந்தனவுருகா நிற்குமாறு, மேலாய சேவை தந்தருளும் அறக்கடவுள் அழகிய பராபரமாய் நின்று என் கொடிய வினைகளாகும் இரும்பினைத் துகளாக்கி விட்டதே!

குறிப்புரை:—எப்பொருட்கு மிறைவராந் தற்பரனுர், எனது கொடிய தீவினையா மிரும்பினைப் பொடிபடப் புரிந்த அறக்கடவுளாயின தென்னே வென வியந்தன ரென்க. (2)

௩. செய்யுந் தவஞ்சற்று மில்லாத நானுன் றிருவடிக்கே
கொய்யும் புதுமல ரிட்டுமெய் யன்பர் குழாத்துடனே
கையுஞ் சிரமிசைக் கூப்பிநின் றுடிக் கசிந்துருகி
உய்யும் படிக்கருள் செய்வதென்றோ புலி யூரத்தனே.

பொழிப்புரை:—திருப்புலியூரெனுந் தில்லைத் தலத்தமர் பரமபிதாவே; செய்தற்குரிய தவமென்பது சிறிதும் செய்தலில்லாத யான் நினது பொன்போன்ற திருப்பாதங்களை நாண்மலர் கொண்டருச்சித்து நின் உண்மையன்பர் கூட்டத்தோடும் சேர்ந்து சிரமேற் காங்குவித்து ஆனந்தப் பரவசமா யாடிப்பாடி யுருகி யுய்யுமாறு திருவருள் சுரந்தாள்வ தென்று கொலோ வறியேன்!

குறிப்புரை :—

சிற்பரமே யென்சிவமே திருவருட் சீர்மிகுந்த
கற்பகமே யுனைச் சார்ந்தோர்க் களிக்குமின் கைவழக்க
மற்பமன்றே பலவண்டங்களினடங் காதென்றே
நற்பர ஞானிகள் வாசகத்தாற்கண்டு நாடினனே.—

என்று வள்ளற் பெரியாரும் வாழ்த்தியதற் கிணங்க ஆசாயருமு வேண்டுவராயினர். இப்பாசுரத்தால், சரியை கிரியா மார்க்கத் திருந்து பத்தி செய்யா விச்சிறியவனை நின் மெய்யன்பரோடும் சேர்ப்பித்து திருவருள் புரிந்தாள வேண்டுவராயின ரென்க. (3)

ச. அத்தனைச் சிற்றம் பலவனை யென்னுயி ராகிநின்ற
சுத்தனைச் சுத்த வெளியா னவனைச் சுகவடிவாம்
நித்தனை நித்த நிராதார மாகிய நின்மலனை
யெத்தனை நாள்செல்லு மோமன மேகண் டிறைஞ்சுதற்கே.

பொழிப்புரை :—மனமே ! எனது பரம பிதாவானவனும், ஞானகாயச்சபைக்கண் திருத்த மிடுவோனும், என்னுயிர்க் குயிராயுள்ள பரம சுத்த சொரூபனும், ஆகாய வெளியானவனும், பரமானந்த சொரூபமாய நித்திய வத்துவானவனும், எப்போதும் ஆதாரமற்ற மல பந்த மில்லாதவனும், ஆகிய இத்தகையாளனை நேரே தரிசித்துப் போற்றற்கு எவ்வளவு நாளாகுமோ கூறாய். என்றது.

குறிப்புரை :—திருச்சிற்றம்பலத் திருநடத்தெய்வத் திருவடிச் சேவைக்கு எத்தனை நாட்செல்லுமோ வென்று ஐயப்படக் கூறியது தேகாணித்தியத்துவத்தைக் கருதியே யென்று புலனாயது.

'என்னுயிராகி நின்ற சுத்தனை' யென்றது உயிர்க்குயிராம் பரம அறிவு சொரூபனை யென்பதாம். (4)

ரு. கண்டா ருளத்தினிற் கானூன்றிப் பெய்யுங் கருணைமுகி
லண்டார் புரத்துக்கு மன்பர் வினைக்கு மசனிதன்னைக் [லாம்
கொண்டாடி னார்முனங் கூத்தாடு மத்தன்றன் கோலமெல்
விண்டாலம்மா வொன்றுங் காணாது வெட்ட வெறுவெளியே

பொழிப்புரை :—தேவரீரைத் திருவுளத்தே தரிசிக்கு மெய்யன்பர்கள் களிதுளங்குமாறு காருணிய மழை பெய்யு மேகமனையார் பகைவராயுள்ள திரிபுராதியர்களான பர்வதங்கட்கும், அன்பர்தம் வினையா மலைகளுக்கும் இடியேறைக்கொண்டு மிகவும் பாராட்டி யவர்கட்கு முன்னிலையாக ஆனந்த

நடனம் புரியா நின்ற பித்தனார்தம் திருக்கோலங்களனைத்தையும் வெளி முகமாகக் கூறலா மென்றால், ஆங்கே வெட்ட வெறும் ஆகாயமன்றி யாது மில்லையம்மா !

குறிப்புரை :—பஞ்சபூத தலங்களுள் தில்லைச் சிதம்பரம் ஞானகாய தலமான முறைகொண்டே ஆசிரியர் 'வெறுவெளி' யென்று கற்பித் துள்ளார். மேலே வந்த அசனி யென்னும் பதநோக்கியே திரிபுராதியரை யும் அடியவர் வினையையும் மலையென உருவகம் செய்தனர் போலும் ; அசனி - இடியாம்.

கொண்டாடுவார்தம் அன்பைக் கொண்டாடுவா ராதலினே ஈண்டு உன்மத்தன் எனப் பிரித்துரைக்க லாயிற்று அன்றிப் பித்தன் பேரும் பெற்றமையானு மென்க. (கொண்டு ஆடுவாரென்று பிரிக்க.) (5)

சா. வெளியான நீயென் மனவெளி யூடு விரவினையா
வொளியாருங் கண்ணு மிரவியும் போனின் றுலாவுவன்காண்
அளியாருங் கொன்றைச் சடையாட வம்புலி யாடக்கங்கைத்
துளியாட மன்று ணடமாடு முக்கட் சுடர்க்கொழுந்தே.

பொழிப்புரை :—ஞானகாய சொரூபமாயுள்ள நீ எனது மனாகாயத்திற் சார்ந்து நிற்பின், என் ஐயனே ! ஒளி நிறைந்த நேத்திரமும் பகலவனும் போன்று ஒன்றுபட்டுய்வன் ; மது விருப்பங்கொண்ட வண்டுகள் மொய்த்த கொன்றை மாலைசூடிய சடைகளாடவும், அதன்கண் மிலைந்த மதி துண்ட மசையவும், கங்காதுளிகளாடவும் ஸ்ரீ சிற்சபைக்கண் திருத்தஞ் செய்யும் திரிநேத்திரங்கள் கொண்ட சோதி மயமே !

குறிப்புரை :—சோமசூரியாக்னி யென்னு மூன்றையும் மூன்று நேத் திரமாகக் கொண்டுளாராதலின் முக்கண் சுடர்க்கொழுந்தென்றார். கொழுந்து - தோகை.

அவனுட வினைத்து மாடல் நோக்கி, மதி, சடை, கொன்றை முதலி யனவு மாடின தோதின ரென்க.

" வீங்கானை மாடஞ்சேர் விண்ணொன்ற கல்கடந்தைத்
தூங்கானை மாடச் சுடர்க் கொழுந்தே "—என்றார் பெரியாரும். (6)

எ. கொழுந்தா துறைமலர்க் கோதையர் மோகக் குரைகடலி
லழுந்தாத வண்ணநின் பாதப் புணைதந் தருள்வதென்றோ

எழுந்தா தரவுசெயெம்பெருமானென் றிறைஞ்சிவிண்ணோர்
தொழுந்தாதை யேவெண் பொடிபூத்த மேனிச் சுகப்
[பொருளே.

பொழிப்புரை :—தேவர்களாவார் அன்போடும் எழுந்து நின்று, எங்கள் நாதனே! எவ்வாற்றானும் அடியேங்கட்கு கிருபை கூர்ந்து திருவருட் பிரசாதமாம் பேராதரவைத் தந்தருள வேண்டும் என்று வேண்டி நின்று தோத்திரஞ் செய்து வழிபட்டுய்யும், எங்கள் பிதாவே! திருவெண்ணீறு பிரகாசிக்கும் திருமேனி கொண்டருளிய அநந்த கல்யாணகுண பிரபுவே! செழுமையான மகரந்தாதிகள் பொருந்தா நின்ற மலர் மாலை சூடிய மங்கையர்கள் மையல் மயக்காம் ஆரவாரக் கடலிடை மூழ்கி யழியாதபடி தேவரீர் தம் திருவடித்தாமரையா மரக்கலத்தை யீந்தாண்டருளுவது எந்த சமயமோ! (அறியேன்).

குறிப்புரை :—தேவர் தொழுந் தேவநாதனாதலின், 'விண்ணோர் தொழுந் தாதையே' யென்றனர். மாதர் மயக்கற வேண்டின், இறைவன் பதயுகளப்பிணையன்றி வியலாதென்பது மறை முழக்கொலியா மென்க. சான்றாக,

"மகமா யைகளைந் திடவல் லபிரான்,
முகமா றுமொழிந் துமொழிந் திலனே
யகமா டைமடந் தையரென் றயருஞ்
சகமா யையுணின் றுதயங் குவதே"—என்றும்

"மட்டூர் குழல்மங் கையர்மை யல்வலைப்
பட்டூ சல்படும் பரிசென் றொழிவேன்"

என்றும் அருணகிரியார் அருளியவாற்றானும் நன்கு புலனும். (7)

அ. சுகமாகு ஞானந் திருமேனி யாகவல தொண்டர்தங்கள்
அகமே பொற்கோயி லெனமகிழ்ந் தேமன்று ளாடியகற்
பகமேயுன் பொன்னடி நீழல்கண் டாலன்றிப் பாவிக்கிந்தச்
செகமாயை யான வருங்கோடை நீங்குந் திறமிலையே.

பொழிப்புரை :—சிற்சுகோதய மாதற் கேதுவாய மெய்ஞ்ஞானத்தையே உண்மைத் திருமேனியெனக் கொண்டுள்ள மெய்த்தவத் தொண்டர்களது உள்ளமே அழகுவாய்ந்த திருக்கோயிலாக் கொண்டன்புற்று பொன்னம்பலப் பொதுவில் புனித நடனம் புரிந்த கற்பக விருக்ஷமே! நின் திவ்ய திருப்பாத நீழலிற்றங்கி யிளைப்பாறினலன்றி, இப்பாவியேன் இப்

பிரபஞ்ச மாயா வருங்கோடையின் வெப்பமானதை நீங்கப் பெறே னென்பதாம்.

குறிப்புரை :—அண்டர் தொழும் பொன்னம்பலத்தரசே! அபாக்கியனை யான், நின் பொன்னடிப் போதினிழலிருந்தக்கால் உலக மாயா வருங் கோடை நீங்கி மிகச்சுகித்திருப்பன். (8)

௯. நீங்கா துயிருக் குயிராகி நின்ற நினையறிந்தே
தூங்காமற் றூங்கினல் லாதே யெனக்குச் சுகமுமுண்டோ
ஓங்கார மாமைந் தெழுத்தாற் புவனத்தை யுண்டுபண்ணிப்
பாங்கா நடத்தும் பொருளே யகண்ட பரசிவமே.

பொழிப்புரை :—பிரணவாம்சமாயுள்ள ஸ்ரீ பஞ்சாக்கர மகாமந்திர விசேடத்தினாலே அகிலாண்டங்களை யெல்லா மாக்குவித்து, நெறிபட அந் நாமரூபப் பிரபஞ்சாதியனைத்தும் கொண்டு செலுத்தும் பரம்பொருளே! அகண்டமாயுள்ள பரமேஸ்வரா! ஆன்மாக்கடோறும் இடையறாது உயிர்க் குயிராய் வியாபித்துள்ள தேவதேவனும் நின்னைத் தெரிந்து, நின் சேவை யாம் பரநிட்டை கொண்டாலன்றி, இவ்வெளியேற்கு பரானந்த பாக்கியமுங் கைவல்யமாமோ!

குறிப்புரை :—ஸ்ரீபஞ்சாக்கரம் பல படித்தா யிருப்பினும் மூலம் ஓங்காரமாம் வித்தாகுமென்பர் மேலோர். சாக்ரா வத்தையிலேயே பரநிட்டை கூடி யிருத்தலை ‘தூங்காமற்றூங்கி’ யென்றார். சான்றாக :—

நோக்காமல், நோக்கி, கொடிகொட்டு, மன்னோரஞ்
சாக்கிரா தீதநிலை சாதித்தோர்—ஆக்கைச்
சுமையெடுத்து நாளுந் துயருறார் சொன்னே
னுமைபங்க னுணை யுவந்து.—என்றார் பெரியார். (9)

௰. சிவமாதி நான்முகக் கோவந்த மாமறை செப்புகின்ற
நவமா யிலங்கிய வொன்றே யிரண்டற்ற நன்மைபெறு
தவமே தருமைம் புலப்பொறிக் கேயென் னறிவுபொல்லாப்
பவமே விளைக்கவென் றேவெளி மானெனப் பாய்ந்ததுவே.

பொழிப்புரை :—ஒப்பருந் தற்பரசிவமே எவைக்கு மூலப் பொருளா யுள்ளதென்று வேதங்களும் வேத நாதனும் பிரமனும் மகிழ்ந்தோதற்குரிய பரமாச்சரிய வத்துவாய வொரு தனிப்பொருளே! யான் இரண்டாட்டா தொன்றான அத்துவித வத்துவா யாகப்பெருமே, கேவலம் அநித்தியாதி யநுபவங்களையே யீந்திடும் ஐம்பொறிப் புலத்தினைப் பற்றி யழிதற்காகவோ

யென் யேழை மனம் தீய பவப்பிணிக் காட்பட மான்போன்று பாய்ந்து கெட்டது !

குறிப்புரை :—வேதாகமாதிகள் ஓதா நின்ற ஒப்பருந் தற்பர சிவத்தினையே அத்துவித நெறி பற்றிச் சார்ந்துய்யாது, கொடிய பவசாகரத்திற் படியச் செய்யும் ஐம்பொறிப் புலன் பற்றியழியவோ மனம் மானெனப் பாய்ந்தது ! என்பது சாரமாயிற்று.

அறிவிலறிவா யகண்டிதமா யனந்தானந்த மயமாகிச்
செறியும் பரம சிவந்தன்னைத் தன்னுட்கண்டு தியானித்துக்
கறவை யருந்தப் பால்சுரக்குங் காலமெனுங் கடைப்பிடிப்போர்
பிறவிக் கடலைக் கடந்தோர்க ளவரேயுலகிற் பெரியோரே.

ஐம்புலன் வழியோடி மானிடரெலா மழிவார்
ஐம்புலன் வழித்தாவிமே லமரருமலைவார்
ஐம்புலன் வழியடைத்தவன் யோகியேயன்றி
ஐம்புலன் வழியடைத்தவருலகினில் யாரே.

என்றிவ்வாறாகப் பெரியார் கூறியனவும் காண்க. (10)

௰க. ஆறெனுக் கிலங்கு சமயங்க ளாறுக்கு மாழ்கடலாய்
வீறிப் பரந்த பரமான வானந்த வெள்ளமொன்று
தேறித் தெளிந்து நிலைபெற்ற மாதவர் சித்தத்திலே
ஊறிப் பரந்தண்ட கோடியெல் லாநின் றுலாவியதே.

பொழிப்புரை :—நதிகளைப்போன்று விரிந்துள்ள அறுவகைச் சமயத்தோர்களுக் கெல்லாம் மிகுந்த ஆழமாய சமுத்திரம் ஒப்பாய் விசேடித்துள்ள யேகமாய பரானந்தப் பிரவாக மொன்றினைத் தேறவிசாரித்துத் தெளிவடைந்துள்ள மகா தவசிகாமணிகளார்தம் மாசுநீமை வாய்ந்த உத்தம சித்தத்தின்கண் இயல்பாகவே அன்பின் பெருக்கால் அருணீர் பெருகி யிவ் வகிலாண்டங்க ளெங்கணும் சென்று பரந்தது.

குறிப்புரை :—அகச்சமயங்களாறும், பரானந்தத்தாண்டவ ஆண்டவனும் பரவையையே தங்களுக்கு உறை விடமாக் கொள்ளினும் பின்னர் அது தெளிவு கொண்ட மகா தவசிகாமணிகளின் இதயத்திற் படிந்து கொண்டு மேற்போந்து எல்லாப் புவனங்களினும் ஓடிப் பரந்ததென்று அலங்காரமுறைக் கற்பனையாக் கூறியருளினரென்க. கற்றல் கேட்டல் சிந்தித்தல், தெளிதல் என்பனவால் தெளிதல் பெரியார் முறையாதலால் ஈண்டு ஆசிரியரும், "தேறித்தெளிந்த மாதவர் சித்தத்திலே ஊறிப்பரந்த"

தென்றார். 'கற்றல் கேட்டலுடையார் பெரியார்கழல் கையாற்றொழுதேத் தும் பெற்றமூர்ந்த பிரமாபுர மேவியபெம்மான்' என்றார் சுந்தர மூர்த்தி நாயனாரும். அகச்சமயங்களாறும் முன்னே விவரித்துள்ளன. (11)

௰௨. நடக்கினு மோடினு நிற்கினும் வேறொரு நாட்டமின்றிக்
கிடக்கினுஞ் செவ்வி திருக்கினு நல்லருட் கேள்வியிலே
தொடக்குமென் னெஞ்ச மனமற்ற பூரணத்தொட்டிக்குளே
முடக்குவன் யான்பர மானந்த நித்திரை மூடிடுமே.

பொழிப்புரை :—நடத்தல், ஓடுதல், நிற்றல், வேறு சிந்தையிலாது படுத்திருத்தல், அன்றி நன்றாய் வீற்றிருத்தலாதிய சமயங்களே யானாலும், என் மனமானது உத்தமமான திருவருட் சம்பந்தமாயுள்ள விசாரணைகளி லேயே சென்றிருக்கும் ; யானும் மென்னறிவானது பரானந்தத்திலேயே லயப்படும். முடிவில் நிரதிசயானந்த நித்திரையும் பெறுவேன்.

குறிப்புரை :—

ஐம்பொறியா லைம்புலன்க ளாரத்தான் புசித்தாலு
மறிவான் மிக்கோர்
உம்பர்பிரான் றிருவடிக்கீ ழுள்ளத் தைவைத்தங்கே
யுறங்கா நிற்பர்
நம்பனைநீத் தொருசோர நாயகனை விருப்புற்ற
நாரி வேண்டு
மன்பவன்றன்பாற் கிடக்குமாக்கை யிவன்பாற் கிடக்கு
மதுபோ லன்றே."—என்ற பெரியார் பெருமொழிப் பாசு ரமே போதிய சான்றாமென்க. மனமற்ற பூரணத் தொட்டி - இராப்பக லற்ற பரவெளியாம் வீடு. (12)

௰௩. எண்ணாத்தெண்ணிய நெஞ்சே துயரொழி யென்னிரண்டு
கண்ணே யுறங்குறங் கென்னாணை முக்கட் கருணைப்பிரான்
தண்ணார் கருணை மவுனத்தி னான்முத்தி சாதிக்கலாம்
நண்ணாத தொன்றில்லை யெல்லா நலமு நமக்குளவே.

பொழிப்புரை :—எண்ணற்கரிய மட்டற்ற வெண்ணங்களை யெல்லாம் எண்ணித் துயருற்ற ஏ மனமே ! நின்துயரொழிவாய் ; எனது இருகண் களே, நீங்கள் இருவீரும் நித்திரை போங்கள் ; என்மே லாணையாக, திரி நேத்திரங்களோடுங் கூடிய காருணியக் கடலாம் சிவபெருமானது னளிர் திருக்காருண்யங் கொண்டு நம்பாலுள்ள மோன முத்திரையினாலே மோக்ஷ

சாம்பிராச்சியத்தினை நன்கு பெற்றுய்யலாம் ; கிட்டாததெதுவு மின்றும் ; என்னலமும் நம்பால் பொருந்தும் என்பதாம்.

குறிப்புரை :—எனது அரிய மனமே ! இனி நீ நின் கவலையெலா மொதுக்குவித்துச் சுகமுறுவாய் ; என் கண்காள் ! நீங்களும் இனித்தாராளமாகக் கவலையற்று நித்திரைபோமின்கள் ! நமக்கு இனி திரியம்பகன்றன் திருக்கருணை பிரசாதத்தால் எப்பதமும் பெற்றுய்யலாம் என்பது சாரமாமென்க. கவலையால் கண்ணுறங்காதும், ஐயப்பாட்டினுல் நெஞ்சம் அவலம் பித்தும் வந்தமையால் அதுவொழிய அயருங்களென்பார் நெஞ்சே துயரொழி, கண்காள் அயருமின் எனலானூர் போலும். அறிவு இடங்கொண்டதாகும். (13)

௰௪. நானென் ஞெருமுத லுண்டென்ற நான்றலைநாணவென்னுட்
டானென் ஞெருமுதல் பூரணமாகத் தலைப்பட்டொப்பில்
ஆனந்தந் தந்தென் னறிவையெல் லாமுண் டவசநல்கி
மோனந் தனைவிளைத் தாலினி யாது மொழிகுவதே.

பொழிப்புரை :—எவற்றிற்கும் நான் நான் என்றே கெர்விதமாகப் புலம்பிக் கொண்டிருந்த வோர் முனைப்பானது, யான் சிரங்குனிய, என் இதயத்துள்ளாக தானுயதோர் பொருளானது எங்கு நிறைந்து கலப்பெய்தி, அளவிலாப் பேரானந்த மளிப்பித்து எனது புத்தியைப் புசித்துப்பின் பரவசப் படச் செய்து மௌன சித்தியை யெனக் களித்திடுமாயின், யானினிக் கூறுவதென்ன !

குறிப்புரை :—நானெனத் துள்ளித் தோன்றும் அகங்காரக் கிரந்தியானது விசையற்றுத் தலைநாண, ஒப்பற்ற வொருதனிப் பொருள் வந்துளம் புகலும், என்மன மதஞேடி யின்புற்று, எனது புத்தியினையும் தன் வசமீர்த்துப் பரவசப்படுத்தி மௌன நிலையினையுந் தந்தருளுமாயின், என்வாய் வழங்குவ தென்னே !

அகங்கார மெனும் பொல்லா அடவாதிப்பயலே
யடுக்கடுக்கா யெடுக்கின்றுயடுத்து முடுக்கின்றுய்
செகங்காணத் தலைகாலுந் தெரியாம லலைந்து
திரிகின்றுய் நின் செபந்தான் சிறிது நடவாது
இகங்காண வடங்குகநீ யடங்காயேற் கணத்தே
யிருந்தவிடந் தெரியாதே யெரிந்திடச் செய்திடுவேன்
சுகங்காண வென்றனை நீ யறியாயோ நான்றான்
சுத்தசிவ சன்மார்க்கம் பெற்றபிள்ளை காணே.

என்று ஓர் பெரியார் கூறிய மெய்ம்மொழிப்பாவும் விளங்கும். (14)

௰௫. தானந் தவஞ்சற்று மில்லாத நானுண்மை தானறிந்து
மோனம் பொருளெனக் கண்டிடச் சற்குரு மோனனுமாய்த்
தீனன் றனக்கிங் கிரங்கினை யேயினிச் சிந்தைக்கென்றும்
ஆனந்தந் தானல்ல வோபர மேசச்சி தானந்தமே.

பொழிப்புரை:—கொடை, நோன்பு என்பன சிறிதேனும் செய்யப் பெறாத யான், சத்திய நிலைதெரிந்து, மௌனநிக்கமே உண்மையென் றுணரும்படி மோன சற்குருநாதனாய் இங்கே யெளியேன் றனக்கு மனமிரங்கி கிருபை செய்தருளினையே! இனிமேல் என் மனத்தினுக்கு எப்போதும் இன்பநிலையே யியல்பாயமைந்துள்ளதே! பராபரவஸ்துவே உண்மை யறிவானந்த வொரு பரம்பொருளே!

குறிப்புரை:—சச்சிதானந்தத் தனிப்பரம் பொருளே! நோற்றல், ஈதலாதியன சற்றும் செய்தறியாத சிற்றறிவேனாகிய யான் உய்யும் வண்ணம் தேவரீர் திருக்கருணை கொண்டு, ஞான நன்னிலையாம் ஒப்பற்ற வோர் மோன முத்திராநு பூதியே மிகவுஞ் சிரேட்டமென உபதேசித்தருளும் மௌன சற்குருநாதனாக வந்தருளினை; இனி யெனக்காவது பரானந்த நிலையாகும் என்பது. (15)

௰௬. எனக்கோர் சுதந்தர மில்லையப்பா வெனக்கெய்ப்
பில்வைப்பாய்
மனக்கோ தகற்றும் பரம்பொருளே யென்னை வாழ்வித்திட
நினக்கே பரநின்னை நீங்காத பூரண நீள்கருணை
தனக்கே பரமினிச் சும்மா விருக்கத் தகுமென்றுமே.

பொழிப்புரை:—எனக்கினிய பரம பிதாவே! நின்னடிமைக்கென இங்கே யாதொரு சுதந்தரத்வமுங் கிடையாதே! ஆதலின், தமது தொண்டனேற்குத் தாம் குறைவில்லாச் செல்வம்போன் றுதவி மனமாதி குற்றங்களை யொழித்தருளும் பராபரமே! எளியனை வழுவாது வாழுமாறு செய்ய வேண்டுவது தேவரீர்க்கே பொறுப்பாகும், அன்றி நின்னைப் பிரிந்திராத பரம காருணியத்தினுக்கும் கடமையேயாம்; ஆகவே, யான் இனி யெப்போதும் கருவி கரணாதிக ளோயப்பெற்றுத் தனியிருக்கத் தக்கதாகு மென்க.

குறிப்புரை.—இப்பாசுரத்தால், யான் சும்மா யிருத்தல் எனக்கியல்பும், நீ நின் கருணை கடாக்ஷத்தால் காத்தருள வேண்டுவது நினக்கியல்பு மாயது என்று ஒருவாறான பொறுப்பினை நிலை நாட்டினா ரென்பது தோன்ற நின்றது.

எய்ப்பில் வைப்பு - என்றுங் குன்றா யிரும்பொரு ளென்ப. (16)

௰எ. இடம்பெறு வீடுமின் னார்சேய் சகமு மிருநிதியும்
உடம்பைவிட் டாருயிர் போம்போது கூடி யுடன்வருமோ
மடம்பெறு மாயை மனமே யினியிங்கு வாமௌனி
திடம்பெற வைத்த மவுனஞ் சகாயந் தெரிந்துகொள்ளே.

பொழிப்புரை:—மடமேவுடம்பாய்க் கொண்ட மாயா நெஞ்சமே! இங்கு வருவாய், (யான் கூறுவதைக் கேட்பாய்:—) விசாலமாயுள்ள நமது மனையும், பெண்டிரும், பிள்ளைகளும், இவ்வுலக போகமும் திரண்ட ஆஸ்திகளுமாகிய இவையெலாம், இந்தச் சரீரத்தை விட்டுப் பிராணன் வெளிப்படுங் காலத்திலே நம்மோடும் பின்றொடர்ந்து வரக்கூடியனவோ, அன்றே; ஆதலின், "நாம் திடமும் தீவிர தரமுமாய் நன்னிலையுறக் கருணை பூத்து நம்பால் எழுந்தருளி வந்தருளிய மோன ஞான பாக்கியமே இன்றி யமையா வுயிர்த்துணை யாகுமாக்கும்; இதனை நன்கு தெரிவாயாக"; என்று நெஞ்சறிவுறுத்தின தாகும்.

குறிப்புரை:—

குடும்பத்தை யென்னுட் குலைப்பேனோ பொல்லா
விடும்பையினை யென்ஞான் றீர்வேனோ—குடம்பையினிற்
புட்பறந்தாற் போலேயான் பொய்யுடல்விட் டேகுவனோ
நட்பசிவ னுனுவே னோ.

என்றே பெரியார் கூறியருளியதொக்க, சரீரமாயுங்கால் பிராணனோடும் சென்று உறுதி பயப்பது குடும்பமும் பொருளுமன்று, குருவருளும் மெய்ஞ் ஞானச் செல்வமுமே யாகுமென்று மனதிற் கறிவுறுத்திய தாகும். குருவே துணை யென்பது முடிபாம். (17)

௰அ. நாற்றச் சடலத்தை யொன்பது வாச னடைமனையைச்
சோற்றுப் பசையினை மும்மல பாண்டத் தொடக்கறையை
ஆற்றுப் பெருக்கன்ன கன்மப் பெருக்கை யடர்கிருமிச்
சேற்றைத் துணையென்ற நாய்க்குமுண் டோகதி
சேர்வதுவே.

பொழிப்புரை:—துர் நாற்றத்திற் காஸ்பதமான பருத்த உடலை, நவத்துவாரங்களோடுங் கூடிய நடையகத்தை, அன்னத்தினது பசையினாலாயதை, மூவகை மலாதிகளடைந்த பாத்திரங்கள் சேர்ந்த போறை யினை, நதிப்பெருக்கொத்த மாயாகாரிய விசேஷத்தை, செறிவுற்ற

புன்புழுச் சேற்றினை, இன்னு மிவையாதிகளை யெல்லாம் சாநித்ய மென்று நம்பி யிருந்த இந்நாயினேற்கும் நற்கதி கிடைப்ப துண்டோ !

குறிப்புரை :—பொய்யினும் பொய்யாயும், மிக்க அருவருப்போடுங் கூடியதாயுமுள்ள இந்நாறு முடலை நிலையெனக்கொண்டு காத்து வந்த ஏழை மதியனுக்கும் உத்தம பதவிகள் கிடைக்கப் பெறுமோ ! கொடிய ஆபாசத்தை யிச்சித்தலால், நாயென்றார்.

புழுவினை நிறையுமாக்கை யொன்பது பொள்ளலாலு
மிழிபடு மலங்கள்வீசு மிதனினு நரகநன்றே
வழுவையி னுரிபோர்த்தாடும் வள்ளலே பிறவிவேண்டேன்
செழுமணி மாடமோங்குந் திருப்புலி வனத்துளானே.

என்ற பெரியார் மெய்ம்மொழிக் கிலக்கணமாயே ஆசிரியரும் மேற் போந்தவாறு ஓதியருளினரென்க. (18)

௰௯. பொய்யா ருலக நிலையல்ல கானற் புனலெனவே
மெய்யா வறிந்தென்ன வென்று விதனை விடப்படுமோ
கையான் மவுனந் தெரித்தேகல் லானிழற் கண்ணிருந்த
ஐயாவப் பாவென் னரசே முக்கண்ணுடை யாரமுதே.

பொழிப்புரை :—அநித்தியமான போக போக்கியங்களுக் குரிய யிவ்வுல கானது சத்தியமன்று ; கானல் நீர்போல அழிந்தொழிவதாகும் ; என வுண்மை யாய்த் தெரிந்தென் தெரியாதிருந்தென், என்றாலே இவ்வுலக வாழ்வினை விட்டகல வொண்ணுதே ! ஞான முத்திரைக் கைக்கொண்டு மவுன நிலையினை கல்லால நீழலின்கணிருந் தருளிய எனையனே ! அப்பனே ! யென தரசே ! மூன்று நேத்திர தாரியே ! அரிய தேவாமிர்த மொத்தாய் !

குறிப்புரை :—இந்த மண்ணுலகானுபவமானது கேவலம் கானற்சலம் போன் றழிவதாயினும் என்றால் இதனை விட்டொழிய வியலா தென்கின் றேன் ; ஏன் ? நின் பேரருளின்மையா லென்பேன். இதனால் அவனருளா லன்றி இவனறிவா லாகா தென்பது சாரமாகத் தோன்ற லாயிற்று.

பொடியெடுக்கப் போயதனை மறந்துமடி யெடுத்தறையிற்
புனையேன் சில்லோர்
தடியெடுக்கக் காணிலதற் குளங்கலங்கி யோடுவநித்
தரத்தே னிங்கே
முடியெடுக்க வல்லேனோ விறைவாநின் னருளிலதேல்
முன்னே வைத்த

அடியெடுக்க முடியாதே யந்தோவிச் சிறியேனு
லாவ தென்னே.

இப்பெரியா ருரையானும், இறைவனருளாலன்றி யிவனறிவால் மண்ணுலகாசை யொழித்தல் மாளாதென்ப தாயிற்று. (19)

உ0. ஆரா வமுதென மோனம் வகித்துக்கல் லானிழற்கீழ்ப்
பேராது நால்வ ருடன்வாழ்முக் கண்ணுடைப் பேரரசே
நீரா யுருகவுள் ளன்புதந் தேசுக நிட்டையைநீ
தாரா விடினென் பெருமூச்சுத் தானத் தனஞ்சயனே.

பொழிப்புரை :—தெவிட்டலிலாத் தேவாமிர்தம் போன்று மௌனநிலைகொண்டருளி கல்லாலின் கீழமர்ந்திருந்து அதை விட்டகலாமே சனகாதி நால்வர்களோடும் வாழ்கின்ற திரி நேத்திரதாரியாகிய பேரிறைவனே! என் மனம் நின்பா லன்புகொண்டு நீராளமா யுருகும்படி நின் உள்ளன்போடும் பேரின்ப நிட்டையினை நீ அனுக்கிரகிக்கா விட்டால், என் நெட்டுயிர்ப்பானது அந்தத் தனஞ்சய வாயுவை யொத்தொழியு மென்பதாம்.

குறிப்புரை :—இச்சரீரத்துள் ஆங்காங்கு இயங்குங் காரியாதிகளை இயக்குவிக்குமாறு பத்து வாயுக்களை நிலையுறச் செய்துள்ளது; இவைகளுள் லலாட ஸ்தானத்தின்கண் உள்ளவாயுவுக்கு தனஞ்சயன் என்று பெயர். இந்த தனஞ்சயன்வாயு, பிராணன் தேகத்தை விட்டு வெளிப்படினும், தான் வெளிப்போகா திருந்து தகன காலத்துத் தலை வெடிப்புண்டு வெளிப்படும்;

ஆகவே, இன்ப நிட்டையை நீ யெனக் களிக்காவிடின் அதனுற் றோன்றும் என் நெட்டுயிர்ப்பு மூச்சானது தனஞ்சயனைச் சார்ந்து இருவாயுக்களும் கபால மோக்ஷமாக லலாடம் சிதறுறச் சென்றொழியு மென்றருளினர். (அதாவது இது கெவரவ ப்ராணத்தியாக மென்ப தாயிற்று.) (20)

உக. வாயுண்டு வாழ்த்த மவுனஞ்செய் போது மவுனவருட்
டாயுண்டு சேயென்ன வெனைப் புரக்கச் சதானந்தமா
நீயுண்டு நின்னைச் சரண்புக நானுண்டென் னெஞ்சமையா
தீயுண் டிருந்த மெழுகல வோகதி சேர்வதற்கே.

பொழிப்புரை :—தேவரீர் தந்திருவடிகளை வாழ்த்தற்கு வாயிருக்கின்றது. மோன நிலையுறுங்காலத்து (அது நிலைபெற) மவுனமாம் திருவருட்டா யிருக்கின்றாள்; பிள்ளைபோன்றெனைக் காப்பதற்கே சதானந்தமென்னும் நீ யிருக்கின்றாய்; ஆகவே, தம்மைச் சரணாகதி யடைய யானிருக்

கின்றேன்; என் ஐயனே! யான் நற்கதி பெற்றுய்யுமாறு என் மனமானது அக்னியால் வெதுப்புற்ற மெழுகென்ன தாயிற்றே.

குறிப்புரை :—இப்பாசுரத்தால், ஆசிரியர் தம் பரிபக்குவ நிலையினை இறைவற்கும் அருட்சத்தியார்க்கும் நன்கு விண்ணப்பித்து, காய நிலையாமையைக் கருதி காலதாமத மின்றிக் கடைக்கணிக்குமாறு மன்றாடுகின்றனர் போலும். (21)

உஉ. கல்லா லெறிந்துங் கைவில்லா லடித்துங் கனிமதுரச்
சொல்லாற் றுதித்துநற் பச்சிலை தூவியுந் தொண்டரின
மெல்லாம் பிழைத்தன ரன்பற்ற நானினி யேதுசெய்வேன்
கொல்லா விரதியர் நேர்நின்ற முக்கட் குருமணியே.

பொழிப்புரை :—ஜீவ இம்சை செய்வதில்லை யென்று உறுதி கொண்டுள்ள உத்தம சத்துவ குணவான்களுக்கு காக்ஷி கொடுத்துள்ள திரிநேத்திர தாரியாம் தேசிகனே! கல்லினை யெறிந்தும், கைக்கொண்டுள்ள வில்லினாலே புடைத்தும், மிக மாதுர்யம் பொருந்தியுள்ள செந்தமிழ்ச் சொன்மாலைகள் சாத்தித் துதி புரிந்தும், மேன்மையான பல பத்ர புஷ்பாதிகளால் அருச்சித்தும், மெய்யன்பர் கூட்டத்தினரனைவரும் நின்பால் கதி பெற்றருளினர்கள். அன்பென்பதே சிறிது மில்லா யான் என்னவிதமாக உய்வேன்!

குறிப்புரை :—கல்லெறிந்து கதி பெற்றவர், சாக்கிய நாயனார்; இவர் வரலாறு பெரிய புராணங் கூறும். வில்லால் அடித்தவன் அருச்சுனனாகும். இவ்வரலாறு பாரதங் கூறும்; கனி மதுரச்சொல் கொண்டு துதி புரிந்தார் நால்வராதியராகும்; இவர்கள் வரலாறு பெரிய புராணங் கூறும். பச்சிலையாம் பத்ர புஷ்பாதிகளால் அருச்சித்தவர் ஔவையாராதிய வனந்தர் இவர்கள் வரலாறு தொண்டர் புராணங் கூறும். இவ்வாறாகப் பல பக்த கூட்டத்தினர்கள் எம்பெருமான் திருவடிக் கன்பராய் பதம் பெற்றுய்ந்தனர்கள், அன்பென்பதே தெரியாத யான் பிழைப்ப தெப்படி யென்று வருந்தினர். 'தமிழ்' என்னும் வார்த்தை இனிமை யெனும் பொருடருதல் பற்றியே 'கனி மதுரச் சொல்லாற்றுதித்து' என்று சிறப்பித்தனர் போலும். முக்கனிச் சுவையினு மிக்க நன்மொழி யாதலின் தென்மொழியினைக் கனிமதுரச் சொல்லென்றும் வியந்தோதின ரென்க. அன்பர்தம் அன்புக் கெளியராதல் இறைவர்க் கியல்பாதலால் சாக்கியர் எறிந்த கல்லும் மலராயின. (22)

உ௩. முன்னிலைச் சுட்டொழி நெஞ்சே நின்போத முளைக்கிலையோ
பின்னிலைச் சன்மம் பிறக்குங்கண் டாயிந்தப் பேய்த்தன
மேன்

றன்னிலை யேநில்லு தானே தனிச்சச்சி தானந்தமாம்
நன்னிலை வாய்க்குமெண் சித்தியுங் காணு நமதல்லவே.

பொழிப்புரை :—மனமே! நீ முன்னிலைச்சுட்டை விலக்கி விடுவாய்; நின் போதமாய ஜீவ போதந்தோன்றி மார்தட்டுமாயின், அந்தோ! உடனுக சனனந் தோன்றி விடுமே! ஆதலால் நினக்கிந்த பித்த புத்தி யெதற்காக? ஆகவே, தன்னிலையிலேயே நின்றிடுவாய், தானுகவே ஒப்பிலா சச்சிதானந்த மென்னும் பேரானந்த நிலைமையே நினக்குக் கிடைக்கப் பெறுவாய், அன்றி எண்வகைச் சித்திகளும் லபிதமாம், இவையெல்லாம் எம்மான்றன் றிருவருள் வலத்தால் எய்தற் பாலனவே யன்றி நம்மாலே யாகக்கூடியன வன்றென்க.

குறிப்புரை :—தற்போதமுனைப் பெழாவிடின் பிறப்பிறப்புக்கள் இல்லை யாகும். இதனையே ஆசிரியர், 'நின்போத முளைக்கின் பின்னிலைச் சன்மம் பிலக்கு' மென்று குறிப்பித்தன ரென்க. ஒருவற்கு சங்கற்ப முள்ளளவும் மனமிறத்தலாகா; அது இல்லையாகவே மனமும் மாயும். ஆக நீ எவ்விதத் தும் முன்னிலைச் சுட்டை யொழிப்பாயாக, அங்ஙனம் ஒழியாக்கால் சனனுதி ஓயா. ஆகையால் நீ நின் யதார்த்த நிலையிலேயே நிலைத்திருப்பாய்; அவ் வாறுக நிற்க, அட்ட சித்திகளும் நல்ல நிலைமையும் கைவரு மென்க. இதுவே சாரமாம். (23)

உச. சொல்லான் மவுன மவுன மென்றே
சொல்லிச் சொல்லிக்கொண்ட
தல்லான் மனமறப் பூரண நிட்டையி
லாழ்ந்த துண்டோ
கல்லாத மூட னினியென் செய்வேன்
சகற் காரணமாம்
வல்லாள ஞன மவுன சதானந்த
மாகடலே.

பொழிப்புரை :—சகலலோக காரணனுகும் எல்லாம் வல்ல மௌன முத் திரையானுகிய மகா கருணையங்கடலோய்! வாசா வசன மாத்திரமாக மௌன மௌன மென்று விருதாவாகக் கூறிவந்ததே யல்லாமல், மனே லய மாகுமாறு பரிபூரண நிட்டை யென்னும் பெருவாரிதிக்கண் யான் முழுகி யறியேனே! ஆகவே, (அதற் கேதுவாம் வித்தையைக்) கற்றுணராத மூடனுகிய யான் இனி யாது செய்வது!

குறிப்புரை :—சகலலோக சரண்ய! யான் இதுகாறும் மௌனம் மவுன மென்று வீணே வாய் வார்த்தையாகச் சொல்லிச் சொல்லிக் காலத்தைக்

நடத்தி விட்டதன்றி மனமொடுங்கற்கான நிட்டையை யெட்டிப் பார்க்கவு மில்லையே! யென்செய்வன்! என்பது சாரமாயிற்று. (24)

உரு. ஆரண மாகம மெல்லா முரைத்த வருள்மௌன
காரண மூலங்கல் லாலடிக் கேயுண்டு காணப்பெற்றாற்
பாரணங் கோடு சுழனெஞ்ச மாகிய பாதரசம்
மாரண மாய்விடு மெண்சித்தி முத்தியும் வாய்த்திடுமே.

பொழிப்புரை :—வேதாகமாதிய கலைகளெல்லா வற்றையும் (ஆன்மாக் கள் பொருட்டா) யருளிச்செய்த பரம தயா சொரூப மௌன நிலையையும், லோக காரணத்வமு முள்ள முதற் பொருளானது கல்லால விருக்ஷத்தடியின் கண்ணே விளங்கியுள்ளது, அதனைத் தரிசிக்க வியலுமேல், உலக வாசனை யாகிய விசாரத்தோடும் கலந்துழலும் மனமென்னும் பாதரஸமானது மாண் டொழியும்; மேலே, அட்ட சித்திகளென்ன, மோக்ஷமென்ன இவைகள் வெகு இலகுவாய் கிடைக்கப் பெறலாம்.

குறிப்புரை :—கல்லால நீழலின்கண் வீற்றிருந்தருளும் கருணைகடாக்ஷ னைத் தரிசித்தோமானால் மனமெனும் பாதரஸமானது மாய்ந்தொழியும்; அது மாயவே, சகல சித்திகளும் முத்திப் பதங்களும் அடையலா மென்பது சார மாம். இதனால், இறைவன் பேரருளாசிரியனாய் வந்துபதேசிக்கப்பெறின், மனமாண்டு நிட்டை பலித்துச் சித்தி முத்திகளும் சித்திக்கு மென்பது புலனா யது. ஆகவே அவனருள் வேண்டு மென்பதாயிற்று. (25)

உசா. சித்த மவுனி வடபான் மவுனிநந் தீபகுண்ட
சுத்த மவுனி யெனு மூவருக்குந் தொழும்பு செய்து
சத்த மவுன முதன்மூன்று மவுனமுந் தான்படைத்தே
னித்த மவுனமல் லாலறியேன் மற்றை நிட்டைகளே.

பொழிப்புரை :—சித்தமிசை குடிகொண்ட அறிவா மௌனியென்ன, வடவால விருக்ஷத்தடியில் வீற்றிருந்தருளும் மவுன குரு வென்ன, நம் தீபகுண்டத்தின்கண் விளங்கும் நந்தி வொளியெனும் சுத்த மவுனி யென்ன இம்மூன்று பேர்களுக்கும் தொண்டு புரிந்து (அதாவது வணக்கஞ்செய்து) சத்த மவுன முதலாகிய மூவகை மவுனங்களையும் அடையப் பெற்றனன்; ஆகவே, சதா மௌனமல்லது வேறு நிட்டைக ளொன்றும் தெரிந்திருக்க வில்லையாம்.

குறிப்புரை :—இதில், சத்தமவுன மாதிமூன்று மவுனங்கள் மனம் புத்தி சித்த மென்பனவாம். (26)

உஎ. கண்டே னினதரு ளவ்வரு ளாய்நின்று காண்பதெல்லா
முண்டே யதுவு நினதாக்கி னேனுவட் டாதவின்ப
மொண்டே யருந்தி யிளைப்பாறி னேனல்ல முத்திபெற்றுக்
கொண்டேன் பராபர மேயெனக் கேதுங் குறைவில்லையே.

பொழிப்புரை :—நின்து திருவருட் சத்தியினைத் தரிசிக்கப் பெற்றேன்; அந்த திருவருண் மயமாயிருந்து கொண்டு காணப்பெறுவதனைத்து மிருக்கிறதே, அவை யெல்லாம் நின்னுடையதாகவே யாக்கிவிட்டேன்; தெவிட்டலில்லா பரமானந்தப் பெருக்கை முகந்தருந்தி ஆயாசந் தீர்ந்தனன்; இதனாலே மேலான மோக்ஷானுபவமுங் கைக்கொண்டேன்; பராபரப்பொருளே! அடிமைக்கினி யாதுங் குறைபாடில்லையாம்.

குறிப்புரை :—எம்மானே! நின் திருவருளினை நன்குறச் சேவை செய்து எனக்குண்டாயிருந்த சகல ஆயாசாதிகளு மொழியக் கண்டேன்; இனி மோக்ஷத்தினையும் பெறலாம்; இனி எளியேற்கு யாதாமோர் குறைகளுமின்றாம் என்பது சாரம். (27)

உஅ. மேற்கொண்ட வாயுவுங் கீழ்ப்பட மூலத்து வெந்தழலைச்
சூற்கொண்ட மேக மெனவூமை நின்று சொரிவதையென்
னாற்கண்ட தன்று மவுனோபதேசி யளிக்கையினிப்
பாற்கண்டு கொண்டனன் மேலே யமிர்தம் பருகுவனே.

பொழிப்புரை :—மேற்பட்டுள்ள வாயுவானது கீழான மூலாதாரத்துள்ள வெவ்விய மூலாக்கினியை கர்ப்பமான மேகத்தைப் போன்று ஊமையானேன் நிலைநின்று பெய்தலை என்னறிவினாற் பார்க்கப்பட்டதல்ல; மௌன தேசிகனருளிச் செய்ததால் இங்ஙனங் காண்டற் கியைந்தது; இதன் பின்னர் மதி மண்டலச் செழுந்தேன் மடைதிறந்துண்டுளந் தேக்கிடுவேன் என்பது ஆசிரியரின் உட்கிடையாம்.

குறிப்புரை :—இனி, ஒப்பரும் பர நிட்டை கொண்டு துரிய பூமிக்கேகி ஆங்கே மூலக்கனலால் மதிமண்டலத்திற் றாக்கி அமுத கபாடந்திறந்திழியும் அரிய தேனமுதருந்தி அடற்பசி யொழிந்து மௌனச் செறுக்குற்று கரணச் சேட்டைகளறுந்து அருளின்ப வீட்டின் நாட்டங்கொண்டு சிந்தை மகிழ்ந்து எந்தையைத் தரிசித்துய்வேன் என்பது எதிர்கால சம்பவ ஆனந்த நிலைப்பே றென்க. (28)

உகூ. சொல்லாற் றொடர்பொரு ளாற்றொட ராப்பரஞ் சோதிநின்
வல்லாளர் கண்ட வழிகண்டிலேன் சக மார்க்கத்திலுஞ் [னை

செல்லாதென் சிந்தை நடுவே கிடந்து திகைத்துவிம்பி
யல்லான தும்பக லானதும் வாய்விட் டரற்றுவனே.

பொழிப்புரை :—சொல்லாலும், அச்சொற்குரிய அர்த்தத்தாலும் தொடர்ந் துணரப்படாதுள்ள பரஞ்சோதியினை வழி தெரிந்துள்ள மேதாவியர் கண்டறிந்த நெறியினையு முணர்ந்தேனில்லை; அன்றி இவ்வுலக நெறியினும் எனது மனம் போகாது; ஆனாலும் மத்தியிற் கிடந்து திகைப்பெய்தி விம்மித முற்று இரவும் பகலும் வாய் திறந்து அலறுவே னென்பது.

குறிப்புரை :—

வேதமுதற் கலைகளெல்லாம் விரைந்துவிரைந் தனந்தமுறை
யோதவவைக் கணுத்துணையு முணர்வரிதா மெம்பெருமான்
பாதமலர் நினதுதிருப் பணிமுடிமேற் படப்புரிந்த
மாதவம்யா துரைத்தருளாய் வன்றொண்டப் பெருந்தகையே.

என்று வாழ்த்தியருளிய வள்ளற் பெருவாக்குக் கிணங்க இந்நூலாசிரியரும் "சொல்லாற் றொடர்பொருளாற் றொடராப்பரஞ்சோதி" யென்றோதி யருளினமை காண்க; அன்றியும், மனவாக்குக் கெட்டா மணிச்சுடரைத், தம்முட் கண்டு களி கொண்ட கனதீர சிகாமணிகளார் கொண்டடைந்த செகந்நெறியினைத் தான் தன்னறிவாலறிந் தெய்தப் பெறாமையால் ஈண்டு "வல்லாளர் கண்ட வழி கண்டிலே" னென்றனர். இன்னும், முன்னம் தற்போதங் கொண்டு தேடக்கிடையாத் திரவியம், அல்லாயிருந்து, பின்னர் குருபரனருள் வாய்க்கப்பெற்றுச் சிவபோதத்தாற் தேடுங்கால் "பகல்போல் ஒளிதோன்றலும் வாய்கொண்டரற்றுவன்" என்றருளின ரெனினும் அமையு மென்க. (29)

௩௰. அறியாத வென்னை யறிவாயு நீ யென்றகம் புறமும்
பிறியா தறிவித்த பேரறிவாஞ் சுத்தப் பேரொளியோ
குறியாத வானந்தக் கோவோ வமுதருள் குண்டலியோ
சிறியேன் படுந்துயர் கண்டுகல் லானிழற் சேர்ந்ததுவே.

பொழிப்புரை :—(தேவர் மூவர் யாவராலுங்) காண்டற்கரிய என்னைத் தெரியக் கூடியவனும் நீயே யாகுமென என்னகத்தும் புறத்தும் நீங்கப் பெறாதிருந்தருளி எனக்கறிவித்தருளிய பேரறிவு மயமாகியுள்ள பரிசுத்த பெருமைவாய்ந்த பரஞ்சோதியோ! எண்ணற்கரிய இன்பருளும் இறைவன்றானே! அன்றி அமுர்த மளிக்குங் குண்டலி சத்திதானோ! இச்சிறியவ னெய்தும் கஷ்ட முணர்ந்து கல்லால நீழலைச் சென்றடைந்தது?

குறிப்புரை :—மிகப் பேதையேனாய யான் படுங்கஷ்டங் கண்டருளி கல்லாலினீழலை யெய்தியது இன்பளிக்கு மிறையோ? அன்றிப் பரஞ் சோதியோ? மற்றும் குண்டலிதானோ? தெரிந்திலனே யென்பது சாரமா மென்க. என்னறிவுக்குப் பேரறிவாளனா யிருந்தோதி யருளினது மேற் கூறிய முப்பொருளில் எப்பொருளோ வென ஐயமொழிப்பான் கூறி வினுதல் செய்தனரெனலுமாம். (30)

௩௧. எல்லா முதவு முனையொன்றிற் பாவனை யேனுஞ்செய்து
புல்லா யினுமொரு பச்சிலை யாயினும் போட்டிறைஞ்சி
நில்லே னல்யோக நெறியுஞ்செயே னருணூ லொன்றுங்
கல்லே னெவ்வாறு பரமேபரகதி காண்பதுவே.

பொழிப்புரை :—(வேண்டுவார் வேண்டுவன) வனைத்தும் தந்தருளா நின்ற நின்னை ஓர் பிம்பத்தின்கண் பாவனை கொண்டு புல்லோ, அல்லது பத்திர புஷ்பாதிகளோ இவைகளி லேதேனு மொன்றை நின்னையர்ச்சித்து வாழ்த்தித் துதிசெய்து நின்றேனில்லையே! இதுவன்றி, மேலாய யோகாநு பூதியையாவது செய்தேனு மில்லை! இதுவும்போக, திருவருள் சம்பந்தமான நெறி முறை யோதும் குருமொழி நூல்களையுங் கற்றுத் தெளிய வில்லையே! ஏ பராபரவத்துவே, இந்நிலையேன் பரகதி பெறுவது எவ்வாறோ!

குறிப்புரை :—பரகதிக் காளாதல் வேண்டுமேல், புல், பல் பச்சிலை களைக் கொண்டு பரனடிக்கிட்டுப் பத்தியாற் பணிந்திலேனென்பார், "புல் லாயினுமொரு பச்சிலையாயினும் போட்டிறைஞ்சி நில்லேன்" என்றார், பல் பச்சிலை - பலவகைப் பத்திரபுஷ்பாதிகளையென்க. இதனால், இறைவன் றிருவருட்கிச்சை கொண்டால், பல பத்திரபுஷ்பாதிகளைக்கொண்டு பரமன் பதமலர்க்கே யருச்சிக்க பாலிப்பன் பரகதி யென்பது பழுதல்லவே என்னுங் கருத்து கொண்டே மேலோரும் :—

ஞானசம்பந்தர்

பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்
நாக்கைக் கொண்டர னாம நவில்கிலார்
ஆக்கைக் கேயிரை தேடி யலமந்து
காக்கைக் கேயிரை யாகிக் கழிவரே.—என்றும்,

திருமந்திரம்

யாவர்க்கு மா மிறைவர்க் கொருபச்சிலை
யாவர்க்கு மா ம்பசுவிற் கொருவாயுறை
யாவர்க்கு மா முண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கு மா ம்பிறர்க் கின்னுரை தானே.—என்றும்,

திருவெண்காடர்

கண்ணுண்டு காணக் கருத்துண்டு நோக்கக் கசிந்துருகிப்
பண்ணுண்டு பாடச் செவியுண்டு கேழ்க்கப் பல்பச்சிலையா
லெண்ணுண்டு சாத்தவெதிர்கா ணவீச நிற்கையிலே
மண்ணுண்டு போகுதையோ கெடுவீர்இந்த மானிடமே.

என்றும், இவ்வாறாகப் பற்பல பெரியார் அருளிய பாசுரங்களும் சான்றாம் என்க. (31)

௩௨. ஒன்றுந் தெரிந்திட வில்லையென் னுள்ளத் தொருவவெனக்
கென்றுந் தெரிந்த விவையவை கேளிர வும்பகலுங்
குன்றுங் குழியும் வனமு மலையுங் குரைகடலு
மன்று மனையு மனமாகி தத்துவ மாயையுமே.

பொழிப்புரை:—எனது நெஞ்சக மேவிய யெம்பரனே! நின் அடிமையா மெளியேற்கு நின்னை யுணர்தற்கான வழிகளில் ஓர் சிறிது முணர்ந்தேனில்லை; எப்போதும் தெரிந்துள்ளன இவைமட்டேயாம்; (அவையாவை யெனின்) கேட்பாய்:—இராப்பகலான யிரண்டு நேரங்களும், சிறிய மலையும், தடாகமும், கானகமும், பெரிய பர்வதங்களும், சப்திக்கானின்ற சமுத்திரமும், ஞானசபையும், வீடும், மன முதலான தத்துவங்க ளெல்லாமு மாயா சம்பந்த விவகாரங்களாம்.

குறிப்புரை:—என் சித்தத் தமர்ந்த சிவக்கொழுந்தே! இச்சிறுவனுக்கு நின் சம்பந்தமான தத்துவங்களிலே இலவ லேசமு மறிந்திலேனே நானறிந்தன மண்ணும் மலையும் குளமுமாய மாயா தோற்றங்களேயாம். உள்ளத் தொருவிய வுனக்கும் யான் ஒதுவதோ! யென்பது உட்கிடையா மென்க.

சான்றாக இவ்வாசிரியரே,

உள்ள மறிவா யுழப்பறிவாய் நானேழை
தள்ளிவிடின் மெத்தத் தவிப்பேன் பராபரமே.—

என்றார் பிறாண்டும். (32)

௩௩. பழுதுண்டு பாவையர் மோக விகாரப் பரவையிடை
விழுகின்ற பாவிக்குந் தன்றாட் புணையை வியந்தளித்தான்
றொழுகின்ற வன்ப ருளங்களி கூரத் துலங்குமன்று [பனே.
ளெழுகின்ற வானந்தக் கூத்தனென் கண்மணி யென்னப்

பொழிப்புரை:—நின்னை வழிபடாநின்ற அடியவர்களது நெஞ்சமானது சஞ்சல மொழிந்து களிப்புறுமாறு பொற்சபைக் கண்ணோங்கிய பர

மானந்தத் திருநடம் பயிலும் பரஞ்சுடரும், யென திருகண்மணிக்கு மொப் பானும், என் பரம பிதாவுமானோய்! யான் இயல்பாகவே குற்றமுடையே னாய் மங்கையர் தங்கள் மயக்க விகாராதிச் சமுத்திரத்தின்கண் இடந் தழுந்தியுள்ள மகாபாவியா மெனக்கும் வியந்து தமது பதயுகளமாகிய தோணியைத் தந்தாண்டருளினன் என்பது.

குறிப்புரை :—இறைவன் கருணைத்திறம் நன்கு புலனுதலைத் தாமே வியந்து மகிழ்ந்து இப்பாசுரம் அருளினாராகத் தெரிய வருகிறது. குணர கடல் - அலைபால் சப்திக்கின்ற கடல். (33)

௩௪. அழுக்கார்ந்த நெஞ்சுடை யேனுக்கை யாநின் னருள்வழங்கி
னிழுக்காகு மென்றெண்ணி யோவிரங் காத வியல்புகண்டாய்
முழுக்காத லாகி விழிநீர் பெருக்கிய முத்தரெனுங்
குழுக்காண நின்று நடமாடுந் தில்லைக் கொழுஞ்சுடரே.

பொழிப்புரை :—பூரணமான அன்புடையோர்களாகியும், ஆனந்தக் கண்ணீர் பெருக விட்டவர்களாயு முள்ள ஜீவன் முத்தராம் கூட்டத்தவர் கள் சாக்ஷாத்காரமாய்த் தரிசிப்பான் வேண்டி திருத் தில்லைச் சிற்றம்பல சபையினின்றும் பரமானந்தத் திருநடம் பயிலும் செஞ்சுடரோய்! என் ஐயனே! மாசு படர்ந்த மனத்தினேற்கு தேவரீர்தம் திருவருளைப் பாலித் தருளின் அது குற்றமேயாம் எனக்குறித்தோ எளியேற்கு நீ இரக்க முறு வியல்பு கொண்டுள்ளது?

குறிப்புரை :—முற்றத்துறந்த முனீந்திராதியர்க ளெல்லாங் கண்டு பரமானந்த முறுவான் வேண்டித் திருத்தில்லைச் சிற்றம்பலத்தின்கண் அந வரத தாண்டவம்புரி யாண்டவனே! குற்றமுள்ள நெஞ்சினேற் கருளின் குற்றமென்றோ என்பாலிரக்க மொன்றிலீர்? என்பது சாரம். (34)

௩௫. ஆலம் படைத்த விழியார்கண் மால்கொண் டவர்செயிந்த்ர
சாலம் படைத்துத் தளர்ந்தனை யேயென்றுந் தண்ணருள்கூர்
கோலம் படைத்துக்கல் லாலடிக் கீழ்வைகுங் கோவுக்கன் பாங்
காலம் படைக்கத் தவம்படை யாதென்கொல் கன்னெஞ் சமே.

பொழிப்புரை :—கடினக் கல்லொத்த வலியமனமே! நஞ்சு மருவிய வஞ்ச விழியாராய மங்கையர்பால் மையல் செய்து அன்னார் செய்யும் இந்த்ர சாலத்திற் சிக்கி வெட்கினையே! எக்காலத்தும் குளிர்ச்சி பொருந்திய திரு

உருவம்படைத்துக் கல்லாலின்கீழ் வீற்றிருந்தருள்கின்ற எங்குரு நாதனுக்கு அன்புற்று வாழ்த்தும் படிக்கான நேரத்தைக் கற்பிக்க தவமிழையாமைக்கு ஏது யென்னவோ ?

குறிப்புரை :—வஞ்சமாதர் மயலிற் சிக்கி வருந்துமாறு மிக்க வன்மை கொண்டாயன்றி நல்லோர்க்கருளும் நற்குரு பரசிவநாதனைச் சார்ந்து நலம் பெறுமாறு தவம்பெற தொழிந்தது நகைதருமே. என்பதாயிற்று. ஆலத்தையன்னவென்றது, 'ஆலம்படைத்த விழியென்றது' முற்றும் ஆலமே யெனலானர். (35)

௩௬. சும்மா விருக்கச் சுகஞ்சுக மென்று சுருதியெல்லா
மம்மா நிரந்தரஞ் சொல்லவுங் கேட்டு மறிவின்றியே
பெம்மான் மவுனி மொழியையுந் தப்பியென் பேதமையால்
வெம்மாயக் காட்டி லலைந்தேனந் தோவென் விதிவசமே.

பொழிப்புரை :—சும்மாயிருப்பின் சுகமுண்டு சுகமுண்டு யெனவே வேதாதி சுருதிகளனைத்தும் அம்மா ! எப்போதும் சொல்லி வருதலைக் கேட்டிருந்தும், உண்மை யுணர்ச்சி யில்லாது யெம்மானுய மவுன குரு வார்த்தையுங் கடந்து என் புத்தி யின்மையினுலே கொடிய மாயாகானகத்தே அலைந்து வாடினேன் ! ஐயோ ! இது எனது விதியின் வலியே !

குறிப்புரை :—

" மும்மாயைக்கப்பால் முழுப்பாழுக் கப்புறத்தே
சும்மாவிருக்கத் துரியங் கடந்த நலச்
சிம்மாதனமளித்த சிவஞான தேசிகர்க்கு." —என்றும்,

வெண்பா.

இன்றுவரு மோநாளைக் கேவருமோ வல்லதுமற்
றென்றுவரு மோவறியே னெங்கோவே—துன்றுமல
வெம்மாயை யற்று வெளிக்குள் வெளிகடந்து
சும்மா யிருக்குஞ் சுகம்.

என்றுங் கூறிய மேலோர் வாக்கியங்களான் சும்மா யிருத்தல் விளங்கினதறிக.

ஆகவே, கருவி காரணதிகளற்று தானகவே துரிய நிலை யெய்திச் சுயஞ்சோதி பரவெளியிலே தன்னறிவைச் செலுத்தித் தான் தன்னந் தனிமையாய் நிற்றலே பரநிட்டை யென்கிறார் மேலோர் ; மற்றவை குருகிருபை கொண்டறிக. (36)

௩௭. தினமே செலச்செல வாழ்நாளு நீங்கச் செகத்திருள்சொற்
பனமே யெனவெளி கண்டே யிருக்கவும் பாசபந்த [வோம்
வினமே துணையென் றிருந்தோம் நமன்வரி னென்செய்கு
மனமே நம்போலவுண் டோசுத்த மூடரிவ் வையகத்தே.

பொழிப்புரை :—ஒவ்வொரு நாளாகக் கழிந்து கொண்டே ஆயுள் காலமெலாங் குன்றி, இவ்வுலக மாயா விருளானது கேவலம் கனவே யென்று நிச்சயிக்கும்படியாகப் பகிர்முகமாய்ப் பார்த்துவந்தும், எதார்த்த மற்ற பாச பந்தமாதிய கூட்டுறவினர்களே நமக்கு மெத்த உதவியாளராக எண்ணி யிருந்து வந்தோம்; அகஸ்மாத்தாக நமன் வந்திடின் யாது செய்ய வல்லோம்! ஏ நெஞ்சமே! நம்மை யொத்த பெருமூடர்கள் இந்த மண்ணுல கத்திலு முள்ளார்களோ!

குறிப்புரை :—

மையாடுங் கண்ணியு மைந்தரும் வாழ்வு மனையுஞ்செந்தீ
யையாநின்மாயை யுருவெளித்தோற்ற மகிலத்துளே
மெய்யா யிருந்தது நாட்செல நாட்செல வெட்டவெறும்
பொய்யாய்ப் பழங்கதை யாக்கனவாய்க்கண்டு போனதுவே.

என்றார் மெய்ந்நூலுணர்ந்த மேதாவியர். இம்முறை தெரிந்தே நந்தாயுமானாரும் மேற்கூறிப்போந்த பாசுரத்தால் முதற்கண் மெய்யென்று தோன்றி, நாளடைவில் பொய்யாயும் கனவாயுங்கண்டு விட்டோம்; இனி முடிவில் வரும் கூற்றுவனுக்கு என்ன சொல்வது யென்று மயங்கினராகப் புலனுகின்றது. (37)

௩௮. கடலைத் தனைமலை யெத்தனை யத்தனை கன்மமதற்
குடலைத் தனையத் தனைகட னுண்மணலொக்கு மிந்தச்
சடலத்தை நான்விடு முன்னே யுனைவந்து சாரவிருட்
படலத்தை மாற்றப் படாதோ நிறைந்த பராபரமே.

பொழிப்புரை :—சமுத்திரம் எவ்வளவோ விரிவுள்ளனவாயும், மலை யெவ்வளவோ பெரியதாயு மிருக்கிறது போல அனந்தமான வினைகளுக்கிடு பட்டனவாகும் நமக்கேற்பட்டுள்ள கர்மாக்க ளென்றும், இவ்வித கன்மானு பவத்திற்கு ஈடுபட்டுவந்துள்ள நம் சரீரங்களை உற்றுணர்ந்து விசாரிப்பின் கடன் மணலெவ்வளவோ அவ்வளவினதாகு மென்பதாயிற்று; (ஆனை யினுலே) இவ்வுடம்பை யான் அகன்றொழிதற்கு முன்பதாகவே நின்திரு வடிப் பிணைக்கண் வந்தடைதற் காகாதபடி யேற்பட்டுள்ள மாயாவிருளை

மனமிரங்கி போக்க வியலாதோ? எங்கணும் பரிபூரணமாக விளங்கியுள்ள பராபர வஸ்துவே!

குறிப்புரை:—என்னிறையவனே! கணக்கில்லா ஜென்மங்களை இதுகாறும் எடுத்தெடுத்து, இப்போது தேவரீரைத் தரிசித்துய்தற் கேற்ற மேலாய மானிட ஜென்மங்கொண்டு வந்துள்ளதைக் கண்டு வந்துள்ள நீ, இச்சரீரம் நீங்கற்கு முன்னமே யான் நின்னடிக்காளாகுமாறு என் அவிவேகமாய அந்தகாரத்தினைப் போக்கி யருளப்படாதோ யென்பது சாரமாகும்.

"வல்வினையேன் றன்னை, மறைந்திடமூடியமாயவிருளை
யறம்பாவ மென்னுமருங்கயிற்ருற் கட்டி"—என்றார் திருவாதவூரரும். இருட் படலம் - மாயாந்தகாரம் என்க. (38)

௩௯. நினையு நினைவு நினையன்றி யில்லை நினைத்திடுங்கால்
வினையென் றொருமுத னின்னையல் லாது விளைவதுண்டோ
தனையுந் தெளிந்துன்னைச் சார்ந்தோர்க ளுள்ளச்செந்
தாமரையா
மனையும் பொன்மன்றமு நின்றுடுஞ் சோதி மணிவிளக்கே.

பொழிப்புரை:—தன்னைத்தானறிந்து, பின்னை யுன்னை வந்தடைந்தவர்கள் மனமாயுள்ள செவ்விய தாமரை மலராகிய இல்லிடத்தேயும், ஸ்ரீ தில்லைச் சிற்சபையின் கண்ணும் நின்று திரு நிருத்தம் புரிகின்ற பிரகாசமாம் தீபரத்னமே! நினைத்தலாகிய நினைப்பும் உன்னை யல்லது வேறாகயில்லை; நினைக்கும்போது கன்ம மாகிய தோர் மூளைமுதற் பொருளானதும் உன்னையல்லாது மூளைத்தலு முளவாமோ. என்றது. (39)

குறிப்புரை:—மெய்யன்பர்களது உள்ளத்தின் கண்ணும், மற்றும் சிதம்பர சிற்சபையினிடத்தும் பொருந்தி நடம்பயில் தீபரத்னமே! யான் எண்ணும் எண்ணமானது நின்னை யல்லாதில்லை யென்றால், நீயறியாதபடி எனக்கோர் துன்ப முண்டாமோ வென்பது புலனுயது.

௪௦. உள்ளத்தையு மிங்கெனையுநின் கையினி லொப்புவித்துங்
கள்ளத்தைச் செய்யும் வினையால் வருந்தக் கணக்கு
முண்டோ
பள்ளத்தில் வீழும் புனல்போற் படிந்துன் பரமவின்ப
வெள்ளத்தின் மூழ்கினர்க் கேயெளி தாந்தில்லை வித்த
கனே.

பொழிப்புரை :—மேட்டில் நின்றும் பள்ள நிலத்தில் பாய்ந்தோடுகின்ற தண்ணீரை யொத்தே நினது மேன்மை வாய்ந்த பரானந்தப் பிரவாகத்திற் மூழ்கியவர்க்கே மிகவும் சுலப சாத்தியனுன திருத்தில்லை வாழும் தெய்வ நடத்தரசே! எனது சித்தத்தையும் எளியேனையும் இங்கே நின்பால் அடைக் கலப் படுத்தியும், மேலும் மேலும், வஞ்சமே புரியும் கன்மங்களாலே ஏற் படுந் துன்பத்தை யடைதற்கு எது முறையுமுண்டோ?

குறிப்புரை :—எல்லையில் பெருமைகொள் தில்லையில் நடம்பயில் இறை வனே! நின்றனக்கே என் இதயத்தையும் என்னையும் அர்ப்பணஞ் செய்தும், இன்னமும் கன்மம் வந்தென்னையே நலிவிப்பது என்ன நின் கணக்கே யென்பது சாரம். (40)

சுக. கள்ளம் பொருந்து மடநெஞ்ச மேகொடுங் காலர் வந்தா
லுள்ளன் பவர்கட்குண் டோவில்லையே யுலகின்றவன்னை
வள்ளம் பொருந்து மலரடி காணமன் ருடுமின்ப
வெள்ளச் செம்பாதப் புணையே யல்லாற் கதிவேறில்லையே.

பொழிப்புரை :—கள்ளத்தன்மை பொருந்தி அறியாமையையு முள்ள ஏ மனமே! கொடியனுகிய எம தேவன் வருங்காலத்து, அன்னவனுக்குச் சிறிதேனும் உள்ளத்திடை அன்புமுண்டோ, இல்லையே! இவ்வுலகத்தைப் படைத்த பரம மாதாவின், கிண்ணம்போன்று விளங்கா நின்ற தாமரை மல ரொத்துள்ள திவ்ய திருவடியிணையைத் தரிசிக்குமாறு பொன்னம்பலப் பொதுவில் நிருத்தஞ் செய்யும் பரமானந்த சமுத்திரம் போன்ற நடராஜ வள்ளலாரது சிவந்த திருவடியாகிய மரக்கலமேயல்லால் அடைக்கலம் புக வேறே யிடமில்லை யென்பதாம்.

குறிப்புரை :—ஏ மனமே! மிகக்கொடிய கூற்றுவன் வருவான். அவன் இரக்கமும் அன்பும் சிறிது மில்லாதவன்; நாமோ அவனிடம் தப் பிப் பிழைக்க வேண்டியிருக்கிறது; ஆதலால் தில்லை யாண்டவன் திருவ டிப்புணைகொண்டு பிறவிக்கடல் கடக்கப் போவோம்வா என்றது.

"மார்க்கண்டர்க் காக மறலிபட்ட பாட்டை யுன்னிப்
பார்க்கினன்பர்க் கென்ன பயங்காண் பராபரமே"—என்றார் ஆசிரி யர் பிறண்டும். (41)

சுஉ. தன்மய மான சுபாவத்தின் மெள்ளத் தலைப்படுங்கான்
பின்மய மான சகம்யா துரைத்தென் வெளியினுய்த்த
சின்மயி முத்திரைக் கையேமெய் யாகத் தெளிந்தநெஞ்சே
நின்மய மென்மய மெல்லா நிறைந்த நிராமயமே.

பொழிப்புரை :—தானே தானுயுள்ள இயர்க்கையின்கண் பையச் சாரும் போது, மின்னலின் தன்மையைக் கொண்டுள்ள இவ்வுலகானது எதைக் கூறினு மென்ன ? பகிர் முகமாய்க் குறிப்பித்தருளிய சிந்முத்திரை கொண்டருளிய திருக்கரமே நித்தியமானதாகத் தெளிவடைந்த நன்னெஞ்சமே ! நின்சொரூபம் என்சொரூப மென்னுமிரண்டும் பொருந்தியுள்ள தான பரிபூரண நிராமய வத்துவே என்றது.

குறிப்புரை :—தத் - மயம், தன்மயம் ஆகவே அப்பொருளி னியர்க்கை நிலையில் நாம் ஒன்றுபடும்போது நாம் அதனினும் வேறாகாது ஒரே பரிபூரண நிராமயப் பொருளேயாம் என்பது முடிவுரை. (42)

சரு. ஆயுங் கலையுஞ் சுருதியுங் காண்டற் கரியவுனைத்
தோயும் படிக்குக் கருணைசெய் வாய்சுக வான்பொருளே
தாயும் பிதாவுந் தமருங் குருவுந் தனிமுதலும்
நீயும் பரையுமென் றேயுணர்ந் தேனிது நிச்சயமே.

பொழிப்புரை :—ஆராயத்தக்க சாத்திரங்களானும் வேதங்களானும் பார்த்தற்கு அருமையாம் நின்னைவந்து பொருந்துமாறுகக் கிருபை செய்தருள்வாய் ; மேலாம் பரானந்த பொருளே ! நீயே பிதா, மாதா, உற்றார், ஆசாரியன், முதலானவர்களாகவும் நம்பியுள்ளேன், இது சத்தியம்.

குறிப்புரை :—பெறுதற்கரிய இறைவனே ! தேவரீரையும் என்னற்றாயையும் என்னை யீன்ற பிதா மாதாக்களாகவே உறுதிகொண்டுள்ளேன் ஆகவே, யென்னுறுதிகண்டு நான் தம்மை யடைந்துய்யுமாறு வேதாதிகட்கெட்டா விழுப்பொருளாம் தேவரீர் கிருபை செய்தருள வேண்டுகின்றேன் என்பது சாரம்.

ஒருவனே போற்றி யொப்பி லப்பனே போற்றி வானோர்
குருவனே போற்றி யெங்கள் கோமளக் கொழுந்து போற்றி
வருகவென் றென்னை நின்பால் வாங்கிட வேண்டும் போற்றி
தருகநின் பாதம் போற்றி தமியனேன் றனிமை தீர்த்தே.

என்றார் வாதவூராளியாரும். (43)

சச. அல்லும் பகலு முனக்கே யபய மபயமென்று [மனக்
சொல்லுஞ் சொலின்னந் தெரிந்ததன் றோதுதிப் பார்கண்
கல்லுங் கரைக்கு மவுனவுனது கருணை யென்பாற்
செல்லும் பொழுதல் லவோசெல்லு வேனந்தச் சிற்சுகத்தே.

பொழிப்புரை :—யான் இராப்பகலாக நின் திருவடித் தாமரைக்கே அடைக்கல மென்று பிதற்றும் வார்த்தையானது நின் செவிக்கே இன்னும்

கேட்டில போலும்! நின்னைத் தோத்திரிப்பாரது நெஞ்சமாம் வஞ்சக் கல்லையுங்கரையச் செய்யும் ஏ மௌனோபதேச குருவே! நின் திருவருளா னது என்பால் கண்வைக்கும் போதல்லவோ அந்த ஞானானந்த சுகத்தில் யான்கண் வைத்திடுவேன்.

குறிப்புரை.—பவப்பிணி யோட்டுந் தவப் பெருங்குருவே! யான் இராப்பகலாக நின்னடிக் கபய மபய மென்றோதுவது நின் செவியிற் சேர்ந் தில போலும்; என்பால் நின்கருணை கால்வைக்கும் போதே யான் யெனன்மை யதன் மேல் வைப்பதாகு மென்பது சாரம். (44)

சரு. எல்லாஞ் சிவன்செய லென்றறிந் தாலவ னின்னருளே
யல்லாற் புகலிடம் வேறுமுண் டோவது வேநிலையா
நில்லாயுன் னுற்றமி யேற்குக் கதியுண்டிந் நீணிலத்திற்
பொல்லா மயக்கத்தி லாழ்ந்தாவ தென்ன புகல் நெஞ்சமே.

பொழிப்புரை:—செயலனைத்தும் சிவன் செயலே யாகும் எனச் சிந்தை செய்தால், புகுதற்கான அடைக்கல ஸ்தானம் அவனருளன்றி வேறின் றாம்; ஆகையால் நீ அந்நிலையே நிலையுள்ளதாக நிற்பாயாக; அவ்வாறு நிலைப்படின், நின்னால் இத்தமியேனுக்கு நித்தியமான நற்கதி கிடைக்கப் பெறுவேன்; இப்பரந்த வுலகின்கண் கொடியதான மயக்கநெறி பற்றி நின்றதால் ஏற்படும் பயனானது என்ன விருக்கிறது? ஏ மனமே, கூறுவாய்.

குறிப்புரை:—ஏ மனமே! செயல்கள் யாவும் அந்தச் சிவபெருமான் செயலே யென்றுணரப்பெறின், அவனது மேலான திருவருளே நமக்குப் புகுமிடமாகு மன்றி வேறில்லை யென்றெண்ணி அந்நிலைநிற்கின் நின்னால் எளியேனுக்கு நல்ல கதி மோக்ஷ முண்டாம்; இக்கருத்தன்றி இவ்வுல காபாச மாயைக்கண் கிடந்ததனால் என்ன பெறப்போகிறாய் யென்பது சார மாகும். (45)

சசு. ஒளியே யொளியி னுணர்வே யுணர்வி னுவகை பொங்குங்
களியே களிக்குங் கருத்தே கருத்தைக் கவளங் கொண்ட
வெளியே வெளியின் விளைசுகமே சுகர் வீறுகண்டுந்
தெளியேன் றெளிந்த வரைப்போற்றிடே னென்ன செய்கு
வனே.

பொழிப்புரை:—சோதிமயமே! அம்மயமாயுள்ள பேரறிவே! அவ் வறிவின்பாற் றோன்றும் பேரின்பக் களிப்பே! அக்களிப்பிற் செறிந்த

கருத்தினை விழுங்குஞ் சிற்பர வெளியே! அதினின்றுந் தோன்றும் பர சுகானந்தமே! சுகமுனிவரது உண்மைத் தன்மையை யோர்ந்தும் தெளிவு கொண்டார் தம்மைக்கண்டு வழிபட்டேனுமில்லை! இனி யென்கதிக்கு யேது செய்குவேன்.

குறிப்புரை :—ஒப்பருந் தற்பரஞ்சோதி மயமே! சுகபர ஞானியின் மெய்த்துறவா மேலாம் பதவியை யுணர்ந்திருந்தும் தெளிவுற்றிலேன்; தெளிந்தாரைச் செறிந்து வந்தித்திலேன்! ஆகவே, யான் இனி யெவ்வா றுய்வதோ வறிந்திலன் என்பது முடிவுரையாம். "சோதியே சுடரே சூழொளி விளக்கே" யென்றார் மணிவாசகர். (46)

சஎ. மறக்கின்ற தன்மை யிறத்த லொப்பாகு மனமதொன்றிற்
பிறக்கின்ற தன்மை பிறத்த லொப்பாகுமிப் பேய்ப்பிறவி
இறக்கின்ற வெல்லைக் களவில்லை யேயிந்தச் சன்மவல்லல்
துறக்கின்ற நாளெந்த நாள்பர மேநின் றொழும்பனுக்கே.

பொழிப்புரை :—மனிதனுக்கு மறத்தலானது இறத்தலையும், ஒன்றை நினைத்தலானது சனித்தலையும் ஒத்ததாகுமென்க. ஆகவே, இவ்வாறுயுள்ள தன்மையில் இவ்வளவு கேவலமான பிறவிகளானவை மடியு நிலைமையை நோக்குங்கால் அதற்கோ ரெல்லை சொல்ல வியலாது. இப்பிறவிக்கு ஏற்ப டும் துன்ப மொழியுங் காலம், பராபர வஸ்துவே! நினது அடிமைக்கு எக் காலமோ! தெரியேனே!

குறிப்புரை :—எம் பரம்பரனே! மறத்தல் நினைத்தல்கள், இறத்தல் பிறத்தல்களுக்குச் சமமாமென்று சாத்திரங் கூறுதலான், இவ்வாறுயுள்ள பிறப்பின் கஷ்டங்களை நின் தொழும்பனாகிய யான் நீங்கி நிலைபெறு நாள் எந்தநாளென்பது சாரமாயிற்று.

யானேதும் பிறப்பஞ்சே னிறப்பதனுக் கென்கடவேன்
வானேயும் பெறில் வேண்டேன் மண்ணாள்வான் மதித்துமிரேன்
தேனேயு மலர்க்கொன்றைச் சிவனேயெம் பெருமானெம்
மானே யுன்னருள்பெறுநா ளென்றென்றே வருந்துவனே.

என்று மணிவாசகர் அருளியதும் சான்றாம் என்க. (47)

சஅ. காட்டிய வந்தக் கரணமு மாயையிக் காயமென்று
சூட்டிய கோலமு நானு மியங்கத் துறையிதனு
ளூட்டிய நான்றனக் கென்றோ ரறிவற்ற நானிவற்றைக்
கூட்டிநின் றூட்டினை யேபர மேநல்ல கூத்திதுவே.

பொழிப்புரை :—சாத்திராதிகளால் பிரித்துக் காட்டியுள்ள அகக் கரணங்களும் மாயையின் காரியமாயுள்ள இவ்வுடம்பென்று சொல்லா நின்ற சரீரமும் பற்பலவாறு மியங்கியிருக்க, பலவகைகளை யுள்ளதான இத்தனுவுக்குள்ளே நிலை நாட்டியுள்ள யானே, தனக்கெனவோர் அறிவற்ற (அதாவது பரதந்த்ரனாய்) யான், இவையனைத்தையும் ஒன்றுபடுத்தி நின்று ஆட்டுவித்தாயே! ஏ பரம்பொருளே! நினக்கு இஃது ஓர் கூத்தாயிருக்கிறதோ?

குறிப்புரை :—எனக்கான சுதந்தர அறிவற்ற எளியேனை மாயையின் காரியமாயுள்ள என்னுடலிற் கூட்டி யாட்டுவிக்கின்றாயே, இது நினக்கு ஓர் நல்ல நாடகமே யாயிற்றையா! என்பது சாரமாம். (48)

சஅ. பொல்லாத மாமர்க் கடமன மேயெனைப் போலடுத்த [மா
வெல்லாற்றை யும்பற்றிக் கொண்டனையே யென்னை நின்மய
நில்லா யருள்வெளி நீ நானிற் பேனரு ணிட்டையொரு
சொல்லாற் பதிந்து பரிபூர ஞானந்தந் தோய்குவனே.

பொழிப்புரை :—மிகவுங் கொடியதான குரங்கு நெஞ்சகமே! நீ என்னைப் பிடித்துக் கொண்டது போன்றே நின்னைச் சார்ந்த சகலத்தையும் பற்றிக் கொண்டு விட்டாயே! இஃதென்ன? நீ அருளம்பலத்தே தன் மயமாய்ப் நிற்பாயாக; யான் திருவருள் நிட்டையினை சற்குரு நாதன் உணர்த்தியருளிய ஓர் மொழியினாலே பதிந்து நின்று பரிபூரணமாய பரம சுகத்தில் மூழ்கி நிற்கின்றேன்.

குறிப்புரை :—மனமே! என்னைப் பற்றியது போலவே இதரபொருளனைத்தையும் பற்றி விட்டாயே? நீ திருவருள் வெளியில் நிற்பையேல் யான் குருவாக்கின்படி திருவருள் நிட்டாபரனாய்ப் பரிபூரண சுகக் கடலில் மூழ்கிடுவேன் என்பது சாரமாம். (49)

ருo. வாராய்நெஞ் சேயுன்றன் றுன்மார்க்கம் யாவையும்
வைத்துக் கட்டிங்
காரா யடிக்கடி சுற்றுகின் றாயுன்
னவல மதிக்
கோரா யிரம்புத்தி சொன்னாலு மோர்கிலை
யோகெடு வாய்
யாராயுனைக் கொல்வேன் வெல்வேனருட்
பாங்கு கொண்டே.

பொழிப்புரை :—ஏ மனமே வருவாய், நினது தீய நடவடிக்கைக ளனைத்தையும் கட்டிவைப்பாய்; இங்ஙனம் நிலைப்பட்டு சன்மார்க்கத்தைப் பற்றி நன்காராய்ந் தறிவாயாக; அடிக்கடிச் சுழன்று வருகின்றாய்; நினது பேமால புத்திக்கு ஒரு ஆயிரம் புத்திமதிகளை இங்கெடுத்தெடுத் தோதினும் உணர்ந்தாயில்லை! ஆ! கெடுவாய், பார்ப்பாயாக; நின்னை திருவருட் சக்தியைக் கொண்டே வதைத்திடுவேனுக்கும்! அல்ல, ஜெயித்து நின்னை அடக்குதலையேனும் செய்திடுவேன் என்பது.

குறிப்புரை :—கொல்வேன் என்னுங் கொடிய வார்த்தைக்கு நேர்மையாகச் சிலர், பாங்கு என்னுஞ் சொல்லிற்கு 'கட்டாறி' எனப் பொருளுரைப்பதும் உண்டு. ஏ, மனமே! நினது தீ நெறிப்போக்கை யொழித்து நன் மார்க்கத்தைச் சார்வாய்; பன்னிப் பன்னிப் பன்முறை யுரைப்பினும் நீ பின்னிப் பின்னிப் பிறழுதல் கொண்டாய், நின்னைத் திருவருணெறியைக் கொண்டு வெற்றி பெறுவேன் என்பது சாரம்.

இவ்வழியிற் செல்லாதே யென்னுடையான் றன்னடிசே
ரவ்வழியிற் செல்லென் றடிக்கடிக்குச்—செவ்வழியிற்
சொன்னாலுங் கேட்கிலைநீ துட்டமனமே யுனக்கிங்
கென்னா லுறவே தினி.—என்றார் மேலோரும். (50)

ருக. மாதத்தி லேயொரு திங்களுண்டாகி மடிவதைநின் [சே
போதத்தி லேசற்றும் வைத்திலையே வெறும் புன்மைநெஞ்
வேதத்தி லேதர்க்க வாதத்தி லேவிளங் காதுவிந்து
நாதத்தி லேயடங் காதந்த வான்பொரு ளைடிக்கொள்ளே.

பொழிப்புரை :—ஓர் மாதத்துள் ஒரு பூரண சந்திரன் தோன்றிப் பின் குறைந்து மறைவதை நின் புத்தியில் சற்றும் பொருந்தச் செய்ய வில்லையே! மிகவும் தாழ்வான மனமே! வேதத்தும், தர்க்கஞ் செய்யும் விவகாரத்தினும் தெரியப்படாதது எதுவோ அதனையும், விந்து நாதத்தினும் அடக்க மில்லாதிருப்பது எதுவோ அம்மேன்மைசால் பொருளையும், நீ நன்காராய்ந்தறிந்து பற்றி நிற்பாயாக. என்பது.

குறிப்புரை :—

விரிந்தமன மெனுஞ் சிறிய விளையாட்டுப் பயலே
விரிந்துவிரிந் தலையாதே மெலியாதே விடயம்
புரிந்தநெறி புரிந்தவமே போகாதே பொறிவாய்ப் புரையாதே
விரையாதே புகுந்து மயங்காதே

தெரிந்துதெளிந் தொருநிலையிற் சித்திரம்போ லிருநீ
சிறிதசைந்தா லக்கணமே சிதைத்திடுவேன் கண்டாய்
பரிந்தெனைநீ யாரென்று பார்த்தாய்சிற் சபைவாழ்
பதிதனக்கே யருட்பட்டம் பலித்தபிள்ளை நானே.

என்றார் மேலோரும். (51)

௫௨. எங்கும் வியாபித் துணர்வா யுனக்கென் னிதயத்துள்ளே
தங்குந் துயரந் தெரியாத வண்ணந் தடைசெய்ததார்
அங்கங் குழைந்துள் ளுருகுமன் பாளர்க் கணைகடந்து
பொங்குங் கருணைக் கடலே சம்பூரண போதத்தனே.

பொழிப்புரை :—இச்சரீரம் மிகவும் ஒடுங்கி நெஞ்ச முருகாநின்ற மெய்யன்பர்களுக்கு வரம்பு மீறிப் பொங்கு மாறுன கருணை சமுத்திரமே! மேலும் பரிபூரண மெய்ஞ்ஞான சம்பன்னனே! நீ யெங்கணும் வியாபித்து யெவற்றையு மறியத்தக்கோய் அப்படியே, என்நெஞ்சிடத்துள்ளதான கவலை யைத் தெரியா வகையாக நினக்கு மறைந்துள்ளார் எவர்?

குறிப்புரை :—ஏ எனுண்டவனே! நீயோ, எவ்விடத்தும் பொருந்தி யிருந்து யாவற்றையு முணர்ந்துள்ள சர்வஞ்ஞன்; அவ்வாறாக, எளியேன் றன் இதயத்தைப் பற்றியுள்ள சங்கட மறியாததற்குக் காரணம் யேதோ வென்பது சாரமாம். (52)

௫௩. வையக மாதர் சுகத்தையும் பொன்னையு மாயைமல
மெய்யையு மெய்யென்று நின்னடி யார்தம் விவேகத்தையும்
ஐயமில் வீட்டையு மெய்ந்நூலையும்பொய்ய தாகவெண்ணும்
பொய்யர்தந் நட்பை விடுவதென் றோபரி பூரணமே.

பொழிப்புரை :—இவ்வுலகத்து மங்கையர் சுகத்தையும், பொன் பொருளாதியனவும், மாயையின் காரியப்பட்ட இச்சரீரத்தையும் நிலையுள்ள தென, நின் அன்பர்களது ஞானத்தையும், சந்தேக மற்ற மோக்ஷத்தையும், மற்றும் சத்திய சாத்திராதிகளையும் அசத்தியமா யெண்ணும்படியாயுள்ள அசத்தியர்களது, சிநேகர்களது கூட்டுறவை யொழித்து நிற்பது எக் காலமோ எங்கும் நிறை பொருளே! என்பது.

குறிப்புரை :—சர்வ வியாபகப் பொருளே! இவ்வுலகத்து மாதரின்ப மாதியவை நிச்சயமென்றும், நின் உண்மை யன்பர்களது ஞான மார்க்கத்தினை அசத்திய மெனவும் நினைத்துள்ள கேவலம் அசத்தியர்களது கூட்டுறவை விட்டுவிடுவது எந்தக் காலமென்பதுவே இதன் முக்கிய கொள்கையாம்.

மாயா மனமெவ் வகையுரைத் தாலு மடைந்தையர்பா
லோயாது செல்கின்ற தென்னசெய் கேன்றமை யுற்றதொரு
நாயா கினுங்கை விடாருல கோருனை நானடுத்தே
னீயா கிலுஞ்சற் றிரங்குகண் டாயொற்றி நின்மலனே.

என்றார் மேலோ ராதலி னென்க. (53)

ருச. அளியுங் கனியொத் தருவினை யானொந் தயர்வுறுவேன்
தெளியும் படிக்குப் பரிபாக காலமுஞ் சித்திக்குமோ
வொளியுங் கருணையு மாறுத வின்பமு மோருருவாய்
வெளிவந் தடியர் களிக்கநின் றாடும் விழுப்பொருளே.

பொழிப்புரை :—நின் மகிமா பிரதாபமாகிய பிரகாசமும், காருணிய மும், வேறுபடாத பரமசுகமும் ஒரு உருவமாய் வெளித்தோன்றி வந்தருளி நின் உண்மை அன்புள்ளார் மகிழ்வெய்துமாறு நிலைபெற்று நிருத்தஞ் செய் கின்ற ஒரு பெருந்தனிப் பொருளே! வெற்றி கொள்ளற்கரிய கர்மாவினாலே கனிவுபெற்ற பழத்தினை நிகர்த்துக் கனிவெய்தி அயர்ந்துறும் யான் தெளி வடையும்படி பக்குவ காலமும் எளியேனுக்கு லபிக்குமோ! என்பது.

குறிப்புரை :—எவ்வுயிர்க்கு மிறையோய்! தானாகக் கனிவுற்ற பழத் தினைப் போன்று நைவுற்று துயரெய்திய யான் தெளிவுற்றுய்யும் பக்குவ தன்மையும் சித்திக்குமோ வென்பது சாரமாம். (54)

ருரு. அடையார் புரஞ்செற்ற தேவேநின் பொன்னடிக்
கன்பு சற்றும்
படையாத வென்னைப் படைத்திந்தப் பாரிற்
படர்ந்த வினைத்
தடையாற் றளையிட்டு நெஞ்சம் புண்ணாகத்
தளர வைத்தாய்
உடையா யுடைய படியன்றி யான்செய்த
தொன் றிலையே.

பொழிப்புரை :—பகைவராம் முப்புராதியரை யொழித்தருளிய மகா தேவனே! நினது அழகார் திருத்தாண் மலர்க்கு கொஞ்சமும் அன்பு செய் யாத வெளியனை இப்பூவுலகில் உண்டுபண்ணி பரந்துள்ள கர்மமாம் விலங் கொடுபூட்டி மனம் புண்படுமாறு அயரச் செய்தனையே! எல்லா முடையவ னாகிய நீ செய்துள்ள கட்டளைப் பிரகார மல்லாது யானாகச் செய்ததொன்று மில்லையே! அடையார் - பகைவராம் முப்புராதியர்கள்.

குறிப்புரை :—எல்லாம் வல்ல இறைவனே! நின் பொன்னடிக் கன்பென்பதே கிடையா இக் கடையனேனை யிவ்வுலகிடைத் தோற்றிவித்து வினையாம் தளையால் ஆர்த்துத் துயருறுமாறு செய்தனை; எவையும் நின் வன்மையே யல்லாது என்னுலிரையளவும் நடக்திலவே யென்பது சாரமாம்.

"எல்லாமுன் னடிமையே, யெல்லாமுன் னுடைமையே எல்லாமுன் னுடைய செயலே" யென்றார் பெரியார்.

நானுரைக்கும் வார்த்தையெலாம் நாயகன்சொல் வார்த்தையன்றி
நானுரைக்கும் வார்த்தையன்று நாட்டீர்நா—னேனுரைப்பேன்
நானெனக் கெனவோர் ஞானவுணர் வேதுசிவம்
ஊனூடி நில்லா வுழி.

என்றார் பெரியார். (55)

ருசு. ஆடுங் கறங்குந் திரிகையும் போல வலைந்தலைந்து
காடுங் கரையுந் திரிவதல் லாநின் கருணைவந்து
கூடும் படிக்குத் தவமுய லாத கொடியரெமன்
தேடும் பொழுதென்ன செய்வார் பரானந்த சிற்சுடரே.

பொழிப்புரை :—பரமானந்த மெய்தப்பெற்ற ஞானதீபமே! சுழன் றாடுகின்ற காற்றாடியையும், குயச்சக்கரத்தையு மொத்து காட்டையும் கரையையுஞ் சுற்றித் திரிவதல்லாதபடி, நினது திருவருட் பிரசாத மெய்து மாறு தவமாதிகளைச் செய்தலில்லாக் கொடியராவார், இயமதர்மனார் இவ ரைத் தேடுங்காலத்து யாது செய்வரோ?

குறிப்புரை :—இறைவனே! காற்றாடி, குலாலன் சக்கர மிவைபோன்று சுழன்று அலைந்தொழியும் தீச்செயலாளர்கள், தென்றிசைக் கிறைவனும் காலன் வந்துற்று தேடும்போது அவர்க்கிவர் என்ன சொல்வரோ யென்பது சாரமென்க. (56)

ருள. கற்றும் பலபல கேள்விகள் கேட்டுங் கறங்கெனவே
சுற்றுந் தொழில் கற்றுச் சிற்றின்பத் தூடு சுழலினென்னுங்
குற்றங் குறைந்து குணமே விடுமன்பர் கூட்டத்தையே
முற்றுந் துணையென நம்புகண் டாய்சுத்த மூடநெஞ்சே.

பொழிப்புரை :—முழு மூடத்தனம் வாய்ந்த மனமே! அநேகவித சாத்திரங்க ளெல்லாம் படித்துணர்ந்தும், நானாவகையான விசாரங்களை யெல்லாம் சந்தேகமற விசாரித்துணர்ந்தும் காற்றாடியை யொத்தே சுற்றிச் சுற்றித் திரியும் தொழிலாய் நின்று முடிவாகச் சிற்றின்பாதியில் நுழைந்

தழுந்திக் கிடப்பின் பயன் என்னவோ? தீயநெறி குறையப்பெற்று, நற்குண விருத்தியை விருத்தியாக்கும் மெய்யன்பர் குழாத்தினரையே முழுத் துணையாக் கொண்டு வாழ்வாயாக.

குறிப்புரை:—நன்குறக் கற்றாய்ந்தும் அவ்வழி நில்லாது கேவலமான காற்றாடியைப் போன்று பின்னும் பின்னும் அந்தச் சிற்றின்பாதியிலேயே நுழைந் தனுபவித்தவரின் என்னாகும்! ஆகையால் சத்துவகுணச் சன்மார்க்கர்கள் கூட்டத்தையே நற்றுணையாக் கொண்டு சார்ந்து வரக்கடவா யென்பது சாரம்.

"கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக"—வென்றார் வள்ளுவர். (57)

௫அ. நீயென நானென வேறில்லை யென்னு நினைவருளத்
தாயென மோன குருவாகி வந்து தடுத்தடிமைச்
சேயெனக் காத்தனை யேபர மேநின் றிருவருளுக்
கேயென்ன செய்யுங் கைம்மாறுள தோசுத்த வேழையனே.

பொழிப்புரை:—நீ யென்றும் யானென்றும் வேறில்லை யென்கின்ற நிலையினைப் பற்றித் திருவருள் புரியுமாறு அன்னையொத்து மவுனாசிரியராக வந்து இதர விஷயாதிகளிலே செல்ல வொட்டாமல் தடைசெய்து தன் அடிமைப் பிள்ளையைப் போன்று காத்தருள் செய்தனையே! ஏ பரமாத்மனே! மிக்க ஏழ்மையேனாகிய யான் நின் திருவருட்குரிய பிரதியுபகாரம் உளவாயின் அதனைக் கூறுவாயாக.

குறிப்புரை:—பரம்பரனே! யானெனவும் நீ யெனவும் வேறுபாடின்று என்னும் நிலையை அடியேற் கருள, தாய் போன்று மவுனாசிரியனாய் வந்து தடுத்தாண்டு அடிமையைக் காத்தாண்டருளினையே! இத்தகைய திருவருட்கு யான் செய்யுங் கைம்மாறென்னோ? இதனால் அத்துவித சித்தியே மெத்த உத்தம நிலையெனச் சித்தாந்தித் தருளின னென்பது சாரமாயிற்று. சான்றாக:—"ஒன்றென் றிரண்டென்று முன்னா துறங்கியே, யொன்றா தலே சிவயோகம்" என்றார் மேலோர். (58)

௫௯. ஆத்திரம் வந்தவர் போலில்லை யாம லரோகதிட
காத்திரந் தந்தென்னை யேயன்னை போலுங் கருணைவைத்திம்
மாத்திர முன்னின் றுணர்த்தினை யேமவு னாவினிநான்
சாத்திரஞ் சொன்ன படியிய மாதியுஞ் சாதிப்பனே.

பொழிப்புரை :—காரியத்திற் கவலையுண்டானோர் போன்று அலைந்து திரியா வண்ணமாக வியாதியற்ற திட சரீர புஷ்டியினை யுண்டுபண்ணி, எளியேனைத் தாயைப்போன்று தயைகூர்ந்து இவ்வளவாவது நேரில் வந்தருளி எற்கறிவித்தருளினையே! மௌனகுருவே! இனி, அடிமையேன் சாத்திரங் கூறியவாறாக இயம முதலான அட்டாங்க யோக சித்திகளையும் சாதனையால் சாதித்து வருவேன் என்றபடி.

குறிப்புரை :—ஆத்திரமாவது,—மிக்க அவசிய துரிதம் என்றுணரற்பாற்று. 'அரோக திருடகாத்திரம்' என்றது வடமொழியாகும்; இதன் பொருள், வியாதியின்றிச் சரீரம் திடப்பட்டோங்கி புஷ்டியா யிருத்தலாம். மௌனகுரவ! நீ யென் பக்குவ நோக்கி வந்தருளி உபதேசிக்க வேண்டியன வோதியருளினீர்கள்; இனி, அடிமை, நூற்பிரகாரமாக இயம நியமாதி முறைப்படி சாதித்து வருவேன் என்பது சாரம். (59)

---

## உடல் பொய்யுறவு

### நேரிசை வெண்பா

க. உடல்பொய் யுறவாயி னுண்மை யுறவாகக்
கடவரார் தண்ணருளே கண்டாய்—திடமுடனே
உற்றுப்பார் மோனனொரு சொல்லே யுண்மை நன்றாப்
பற்றிப்பார் மற்றவெல்லாம் பாழ்.

பொழிப்புரை :—மனமே! நமக்கு வாய்த்த இந்தச் சரீரமே பொய்மையான நட்பாயிருக்கிறது; ஆகவே, மெய்யுறவாக ஒருவரிருத்தல் வேண்டும், அது யாதெனின், தண்மை வாய்ந்த திருவருட் செல்வமே யாகும்; நன்றாயாழ்ந்து பார்ப்பாய்; மௌனகுரியாது ஓர் மொழியே உறுதி மொழியாகும்; நன்காய்த் தறிவாயாக; இதர விஷயங்களனைத்தும் மித்தையே யாமென் றுணர்வாயாக.

குறிப்புரை :—வஞ்சமிலா நெஞ்சமே! எக்காலத்தும் எவ் விவகாரத்தும் நம்மோடும் ஒன்று பட்டே வந்த யிந்தச் சரீரமே நமக்குறுதித் துணையிலையாயின், உண்மை யுறவான ரெவரு மின்றாம்; ஆதலால், உறுதித் துணையாயுள்ளது திருவருட் சத்தியாகும்; மவுன குருநாதன் ஓதியருளிய ஓர் உபதேசமே சத்திய வார்த்தையாகும்; மற்றன அசத்திய வுரையெனக் கொள்வாய். (1)

உ. பாராதி பூதமெல்லாம் பார்க்குங்கா லப்பரத்தின்
சீராக நிற்குந் திறங்கண்டாய்—நேராக
நிற்குந் திருவருளி னெஞ்சேயா னிற்பதல்லாற்
கற்குநெறி யாதினிமேற் காண்.

பொழிப்புரை :—மண்முதலிய பஞ்ச பூதங்கள் யாவும் உற்று நோக்குமிடத்தில் அப்பரவத்துவின் அகண்டாகார சொரூபமாகவே விளங்குந் தன்மையினை யுணர்ந்தனை ; ஆகலினாலே, ஏ மனமே ! நாமோ, பிரத்தியக்ஷமாய் விளங்கியுள்ள அருணிலை நிற்பதைத் தவிர இனிக்கற்றுத் தெரிந்து கொள்ள வேண்டிய தொன்றும் இன்றாம்.

குறிப்புரை :—ஏ மனமே, பிருதுவியாதிய பஞ்சபூதங்களும் பரமானந் தன்றன் அம்ஸமானதே யென்பது நன்குணரப் பெற்றாய் ; ஆனதுபற்றி நாம் அருணிலை யமர்தலல்லாது வேறாகக் கற்றுணரற் பாலதன் றென்றறிவாயாக. (2)

ங. மெய்யான தன்மை விளங்கினால் யார்க்கேனும்
பொய்யான தன்மை பொருந்துமோ—வையாவே
மன்னு நிராசைபின்னம் வந்ததல்ல வுன்னடிமை
என்னுநிலை யெய்துமா றென்.

பொழிப்புரை :—எதார்த்த நிலைவிளங்கப் பெறின், யாராவது அசத்திய நெறியையு மணுகுவரோ ? ஐய, நிலைபெற்றதான பற்றற்ற தன்மையானது இதுகாறும் வந்தெய்தியதன்றாம் ; ஆகவே நின்னடிமையெனும் ஓர் உறுதிச் சார்பானது வந்தெய்தற்கான மார்க்கம் யாதோ ?

குறிப்புரை :—எவர்க்காயினும் உண்மை தெரிந்த பின்னர் பொய்யின் கட்டுப்பாடானது நிலை பெறுவதுமுண்டோ ? அடிமைக்கு இதுவரையில் ஆசையற்ற பாடில்லை ; யான் நின்னடியவன் என்னும் தன்மை யெனக்கு உண்டாவ தெவ்வாறோ ? (3)

ச. அறியாமை மேலிட் டறிவின்றி நிற்குங்
குறியேற் கறிவென்ற கோலம்—வறிதேயா
நீயுணர்த்த நானுணரு நேசத்தா லோவறிவென்
றேயெனக்கோர் நாமமிட்டதே.

பொழிப்புரை :—மடமையதிகரித்து அறிவிழந்து நிற்கின்ற சிறியவனுக்கு அறிவென்னும் சொரூபம் அவலமேயாகும் ; நீ என்னகத்திலிருந்து

தெரிவிக்க, நானறிகின்ற அன்பினாலோ அடியேற்கு அறிவெனும் பெயர் வந்தது.

குறிப்புரை :—அறியாமை மிகுந்த அடியேற்கு அறிவெனும் அம்பலம் பொய்படும் ; ஆனாலும், நீயே உள்ளிருந்தறிவிக்கும் வற்றை யானுணரு மாற்றால் எனக்கு அறிவெனும் பெயர் சூட்டப்பட்டது. என்பது. அறிவே தானென்பது பொருள். (4)

ரு. ஏதுக்குச் சும்மா விருமனமே யென்றுனக்குப்
போதித்த வுண்மையெங்கே போகவிட்டாய்—வாதுக்கு
வந்தெதிர்த்த மல்லரைப்போல் வாதாடி னாயேயுன்
புந்தியென்ன போதமென்ன போ.

பொழிப்புரை :—மனமே, (நீஅலக்கழிவது) எதற்காக, சும்மா யிரு வென்று நினக்கோதிய வோர் நன்னிலையினை யாங்ஙனம் விட்டொழித்தனை ? வம்புக்காக எதிர் வந்து போராடுகின்ற சண்டைக்காரரைப் போன்று வம்பி யியற்றினையே ! நின் புத்தியென்ன புத்தியோ அறிவு என்ன வறிவோ, போ யொழிவாய்.

குறிப்புரை :—ஏ மனமே ! யான் நினக்குச் ‘ சும்மா யிரு ’ யென்று ஓதிய வுண்மை மொழியை யெவ்விடத்தே விட்டனை ? எதிரியா மல்லரை யொத்து என்னுடனே வாதாட வந்துவிட்டாயே ? நின் புத்தியும் போத மும் என்னவோபோ.

மாயையின் முதற்பிள்ளை - மனம். 2-வது பிள்ளை-புத்தி. 3-வது பிள்ளை - சித்தம். 4-வது பிள்ளை - அகங்காரம் என்ப. (5)

சா. சகமனைத்தும் பொய்யெனவே தானுணர்ந்தாற் றுக்க
சுகமனைத்தும் பொய்யன்றோ சோரா—இகபரத்தும்
விட்டுப் பிரியாத மேலான வத்துவிதக்
கட்டுக்கு ளாவதென்றோ காண்.

பொழிப்புரை :—உலக மெல்லாம் கேவலம் அநித்திய மென்றறிந்தக் கால் இன்ப துன்பம் யாவும் அநித்தியமே யன்றோ ? இம்மை மறுமைகளி லும் தளர்வெய்தாமல் விட்டு நீங்குதலில்லா மேலாம் அத்துவித மென்னும் கட்டினுள்ளாவது எந்தக் காலத்திலோ ?

குறிப்புரை :—இக் குவலய மனைத்தும் பொய்யென் றுணர்ந்தக்கால் இன்பதுன்பமிரண்டும் பொய்யேயாம் ; ஆதலினாலே அத்துவித நிலைமைக்கு உள்ளாயிருப்பதுவு மெக்காலமோ யென்பதுவே சாரம். (6)

எ. கற்கண்டோ தேனோ கனிரசமோ பாலோவென்
சொற்கண்டா தேதெனநான் சொல்லுவேன்—விற்கண்ட
வான மதிகாண மௌனி மௌனத்தளித்த
தானமதி லூறு மமிர்தம்.

பொழிப்புரை :—பிரகாசம் பொருந்திய சிதாகாயமேவிய சந்திர மண்டலத்தைத் தரிசிக்க மௌன தேசிகர் மோன நிலை கொண்டு உணர்த்தியருளிய விடத்தே சுரந்தோங்கும் தேனமிர்தமானது கற்கண்டுதானோ? அல்லது தேன்தானோ! முக்கனிகளின் இரசந்தானோ! அன்றிப் பால் பழமோ! என் வார்த்தைக்கு அடங்கப் பெறாதாக்கும், ஏதென்றெடுத்துரைப்பேன்! இவைகளுள்ளே!

குறிப்புரை:—ஞானாகாயத்திற்றோன்றியுள்ள சந்திரன்பால், தோன்றி வழியும் அமிர்தமானது கற்கண்டு முதலிய மதுரவஸ்துக்களுள் யாதென வோதுவன்! (7)

அ. கேட்டலுடன் சிந்தித்தல் கேடிலா மெய்த் தெளிவால்
வாட்டமறா வுற்பவநோய் மாறுமோ—நாட்டமுற்று
மெய்யான நிட்டையினை மேவினர்கட் கன்றோதான்
பொய்யாம் பிறப்பிறப்புப் போம்.

பொழிப்புரை :—(நன்னூன் முறைகளைப் பற்றி நல்லாசிரியர்பால்) கேட்டுணர்தலென்ன, மநநஞ் செய்தலென்ன, இவைகளிலுள்ள தெளிந்த வுண்மைகளைப் பற்றி யுய்த்துணர்த லென்ன ஆகிய இவைகளால், அல்லலொழிவுறாதுள்ள பிறப்பிறப்பாகிய பெரும் வியாதியானது நம்மைவிட்டொழிவது முண்டோ? இல்லை; ஆதலால், உண்மையாகிய உறு பொருளினைப் பற்றும் கருத்தை மனத்தில் வைத்து உண்மையாயுள்ள பர நிட்டையினைப் பற்றினர்க்கல்லவோ அநித்தியமாய பிறவித்துன்பங்கள் முற்றிலுமே அற்றொழியு மென்பது.

குறிப்புரை :—ஒப்பரும் தற்பர ஞானத்தைப்பெற வேண்டுமாயின், யேற்ற பரநிட்டை கூடாது, மெய்ந் நூலாராச்சியாகிய கேட்டல், சிந்தித்தல், தெளிதலாகிய மட்டும் செய்துவரின் அதனால் பவப்பிணியறா தென்பதாம். உறுதி பயக்கும் ஞானத்தையும், இந்த ஞானத்தால் மோக்ஷத்தையுந் தருதலான் மெய்யான நிட்டை யென்றார் போலும்.

பரநிட்டை இலக்கணம்

மக்களு மனையு நீத்து மாதராராசை நீத்துச்
சொர்க்கமே லாசை நீத்துச் சுத்தனுய்ப்பற் றொன்றிக்

கற்கவேண்டியது நீத்துக் கருதிருவினையு நீத்து
நிர்க்குண சிவந்தானாகி நிற்பது ஞானநிட்டை.

சிந்தனை புறஞ்செலாச் சிவோகம் பாவனை
சந்தத முனூற்றிடிற் சமாதிவந்துறு
மந்தநற் சமாதியா லறிவு மேலிடு
மிந்த நன்னிலையிலே யிருக்கற் பாலையே.

ஆங்கறியாமையு மறிவு நீங்கவே
யோங்கிய வறிவொடு மொன்றுபட்டவண்
டுங்கு பேரானந்தத் தூக்கம் வந்துறு
மூங்கை காண்கனவென முத்திகாண்டியே.

மூங்கைகாண் கனவென - ஊமையன் கண்ட கனவைப் போன்று சொல்ல வொண்ணாப் பரமுத்தி யெய்து மென்க. (8)

கூ. மாயா சகத்தை மதியாதார் மண்முதலா
யேயான தத்துவத்தி லெய்துவரோ—நேயானு
பூதிநிலை நிற்கப் பொருந்துவர்க ளன்னவர்த
நீதியையே யோர்மனமே நீ.

பொழிப்புரை :—மாயையின் கற்பிதமாய இவ்வுலகத்தை ஓர் பொருட்டாக வெண்ணாதவர்கள் மண் முதலிய பஞ்ச பூதத்துச்சிலில் பொருந்தி வாழ நினைவரோ ? இறைவன்பால் அன்புற்று சிவானுபூதி செயச் சித்த மொருமித்தவர்க ளாவார்கள் ; ஆகவே, அன்னார்தம் அநுசந்தானத்தையே ஏ நெஞ்சே ! நீ உணர்ந்தொழுகுவாய். துச்சில் - குப்பை.

குறிப்புரை :—நெஞ்சமே ! புவன போகாதிகளை யொரு பொருட்படுத்தாத மெய்யறிவாளர்கள் பிருதிவியாதிய தத்துவச் சேற்றில் அழுந்தி வாழ விசைவரோ ? இசையாது சிவானுபூதி நிலை பொருந்துவர் ; ஆகவே, அன்னார்தம் செந்நெறியையே நீ சார்ந்துய்வா யென்பது.

முத்திக்கு வித்தாகு முழுதுணர்ந்தோர் பெரு நட்பே
சித்திக்கு நாடோறுந் தேவர் பெறற்கருந்திருவுஞ்
சித்திக்கும் படியருளுஞ் செப்பரிதா லதுநிற்க
வெத்திக்கும் புகழுநினக் கியன் மணநன்காயிற்றே.

என்றார் மேலோரும் (குசேலாபாக்யானம்). (9)

௰. இகமுழுதும் பொய் யெனவே யெய்ந்துணர்ந்தா லங்கே
யிகவளர வந்தவருண் மெய்யே—யகநெகிழப்

பாரீ ரொருசொற் படியே யநுபவத்தைச்
சேரீ ரதுவே திறம்.

பொழிப்புரை :—இவ்வுலகானுபவாதிக ளனைத்தும் கேவலம் அநித்தியத்துவமானதே யென்று உற்றுணர்ந்தால், அப்போதே மேலோங்கு மாறு வந்த திருவருளானது நிச்சயமே யாகும் ; இது விஷயத்தை நன்கு மனம் நெகிழுமாறு உற்றுணர்வீர்களாக ; சற்குரு வோதியருளிய ஓர் உரை கொண்டே அநுபூதியினைப் பற்றுவீர்களாக ; அங்ஙனஞ் செய்து வருதலே உறுதி நிலையாகும்.

குறிப்புரை :—உலக போகாதிகள் பொய்யெனக் கண்டக்கால், அவ்வுணர்வே திருவருள் வந்துணர்த்திய தென்றது வுண்மையாயிற்று ; ஆகையினாலே அவ்வுண்மையையே மேலுமேலும் ஊன்றிவாருங்கள் ; குருமொழியா மொரு மொழிப்படியே அநுபூதி செய்யுங்கள் ; அங்ஙனம் புரிதலே உங்கட்கோர் உறுதிப்பாடாகும். என்பது. (10)

௰௧. ஆரணங்க ளாகமங்கள் யாவுமே யானந்த
பூரணமே யுண்மைப் பொருளென்னுங்—காரணத்தை
ஓராயோ வுள்ளுள்ளே யுற்றுணர்ந்தவ் வுண்மையினைப்
பாராயோ நெஞ்சே பகர்.

பொழிப்புரை :—வேதங்களென்ன, ஆகமாதிகளென்ன இவைகளெல்லாம் பரானந்த பரிபூரணப் பொருளையே நித்திய வித்தகன் என்று கூறு நின்ற வுண்மைக் காரணத்தை ஆய்ந்தறியாயோ ? உனக்குள்ளாகவே யூன்றி யுணர்ந்துய்யாயோ ? ஏ மனமே ! சொல்லுவாய் நீ.

குறிப்புரை :—வேதாக மாதிகளனைத்தும் நிரதிசயானந்த பரிபூரண வத்துவே உண்மைப் பரம்பொருளென்று ஓர் வழியா யோதுவதை இனியாயினும் அறிந்து கொள்ளக் கடவாய். சான்றாக—

பரைவடி வீசற்கான படியினாற் பன்றிக்கன்றுக்
கருண்முலை கொடுத்தான் பின்னு மானைக்கா யரியைவிட்டான்
குருவடிவாகிக் கல்லால் குறுகினா னதலாலே
தெரியருண் மூர்த்தி போலுந் திருப்புலி வனத்துளானே.

என்றார் அதி மேதாவியர். (11)

௰௨. நேராயம் மௌனநிலை நில்லாமல் வாய்பேசி
யாரா யலைந்திர்நீ ராகெடுவீர்—தேரீர்

திரையுந் திரையுநதிச் சென்னியனை நாவாற்
கரையுங் கரையுமனக் கல்.

பொழிப்புரை :—நேர்மையாக மௌன நிலையைக் கைக்கொள்ளாது வாசாகைங்கரிய மாத்திரமாக அனைவரும் ஆ ர ா யலையலானீர்கள் ; ஐயோ, கெடுபவர்களே ! இனித் தெளிவு பெறுங்கள் ; அலைகளானவை பல முறையும் திரைந்து விழும் கங்காநதி சூடிய சடா மகுடதாரியை நாவி ஞலே செபஞ் செய்துருகுவீர்களாக ; அங்ஙனஞ் செய்ய, நெஞ்சக்கன கல் லானது நெகிழ்ந் துருகாநிற்கும்.

குறிப்புரை :—முமூட்சுக்களே! நீங்கள் பெரும்பாலும் மௌன யைப் பற்ருது வீணே அங்குமிங்குமாக வலைந்து திரிகின்றீர்களே ! கங்கை சூடிய கண்ணுதலைப் பலமுறையுந் துதிசெய்து கசிந்துருகுங்கள். மனக்கல் இளகும் என்பதாம். முமுட்சு - சந்நியாசி. (12)

௰௩. அற்ப மனமே யகிலவாழ் வத்தனையுஞ் [யொன்
சொற்பனங்கண் டாயுண்மை சொன்னேனுன்—கற்பனை
றில்லா விடத்தே யெனைச்சும்மா வைத்திருக்கக்
கல்லாய்நீ தானேர் கவி.

பொழிப்புரை :—ஏழை நெஞ்சமே ! இந்த உலக வாழ்வனைத்தும் கனவைப் போன்றதேயாம் ; யான் சத்திய நிலையைக் கூறி விட்டனன் ; ஆனதினுலே, கற்பனை யென்பதே யொழிந்த ஸ்தானத்திலே எளியனைத் தனிமையாக விருக்கச் செய்ய நீ ஒரு கவியினைக் கற்றுக் கொள்வாயாக.

குறிப்புரை :—நெஞ்சமே ! இந்த பூமண்டல போக போக்கியாதிக ளெல்லாம் சொப்பனம் போன்று முடிவில் பொய்மையாய் விடும் ஆகையி ஞலே மனோ நாசமான விடத்தில் என்னைச் சந்தடியில்லாது யேகமாயிருந்து வர ஓர் நன் மொழியினைக் கற்பாய். (13)

௰௪. ஏதுந் திருவருளி னிச்சையா மென்றென்றெப்
போதும் பொருந்தும் புனிதர்பாற்—றீதுநெறி
செல்லுமோ செல்லாதே செல்லுமிட மின்பமலாற்
சொல்லுமோ வேதத் தொனி.

பொழிப்புரை :—எவையும் திருவருட் செயலே யென்று எந்தக் காலத்திலும் ஒரே நிலவரமா யமைந்துள்ள உத்தமோத்தமர்க ளிடத்திலே தீயன செல்லுதலு முண்டோ ! செல்லாதாம் ; அவ்வாறின்றிச் செல்லு

மிடமோ, பரானந்த மல்லாது, வேதத் தொனியானது மற்றொன்றைக் கூறுமோ, கூறாதாம். என்பது.

குறிப்புரை :—சகலமும் திருவருட் சம்மதமே யென்று உறுதி கொண்ட வுத்தமர்பால் தீயனவொன்றுஞ் சென்றிடா தென்க. (14)

௰௫. கல்லேறுஞ் சில்லேறுங் கட்டியே றும்போலச்
சொல்லேறப் பாழ்த்த துளைச்செவிகொண்—டல்லேறு
நெஞ்சனென நிற்கவைத்தாய் நீதியோ தற்பரமே
வஞ்சனல்லே னீயே மதி.

பொழிப்புரை :—கல், சில், மண்கட்டி, ஆகிய இவைகள் எறிதலைப் போன்று சமமாயிருப்ப, பலவாறான சொற்களும் எறுதலால் பாழாம் செவித் துளையினால் அவிவேக இருள் யேறியுள்ள மனத்தினை யுடையவனுக்கு மிவன் என்று மெய்யநுபவிகள் சொல்லுதற் கொக்க என்னையேன் நிற்கும்படி விட்டாய்? இப்படிச் செய்தது நினக்கு நீதிமுறையாகுமோ? எ தற்பரம் பொருளே! யான் வஞ்சமில்லாதவன்! நீயே நிதானித்துக் கொள்வாயாக.

குறிப்புரை :—தற்பரசிவமே! நானாவகைக் கேள்விகளினாலே கலங்கிய நெஞ்சமுள்ளவனிவன் என உத்தம பரிபக்குவர்கள் சொல்லுமாறு செய்ததும் நினக்கு நீதியாமா? என்பது. (15)

௰௬. அப்பொருளு மான்மாவு மாரணநூற் சொன்னபடி
தப்பிலாச் சித்தொன்றுஞ் சாதியினா—லெப்படியுந்
தேரிற் றுவிதஞ் சிவாகமமே சொல்லுநிட்டை
யாரு மிடத் தத்துவித மாம்.

பொழிப்புரை :—அந்தப் பரம்பொருளும், ஆன்ம சொரூபமும், வேத சாத்திரங்கள் கூறியருளியபடி சாதியால் குற்ற மில்லா சித்தான ஓர் வத்துவே யாகும்; எந்த வகையானும் ஆராயப்புகின், சிவாகமங்களானவை துவித மார்க்கத்தைப் பற்றியே கூறும், நிட்டை நிலையாகு மிடத்திலே அத்து விதமே பேசும் என்க.

குறிப்புரை :—செக சீவபரங்களானவை சித்தென்று சொல்கிற தன்மையினாலே சாதியினால் ஒன்றே யாகுமென்பது. (16)

௰௭. வேத முதலாய் விளங்குஞ் சிவவடிவாம்
போத நிலையிற் பொருந்தாம—லேதமிகு

மோகாதி யல்லலிலே மூழ்கினையே நெஞ்சேயித்
தேகாதி மெய்யோ தெளி.

பொழிப்புரை :—நான்மறை முதலாய் விளங்கும் சிவ சொரூபமாகிய மெய்ஞ்ஞான நிலைக்கண் பொருந்துதலின்றியே, பிழை மீக்குடைய மோக முதலாயுள்ள துன்பங்களிலே வீணுக அழுந்தி கிடந்தனையே! ஏ மனமே! இந்தச் சரீராதிகள் உண்மையானதோ ? நன்கு தெளிவாயாக என்பது.

குறிப்புரை :—மனமே! சதுர்மறை முதலாய் விளங்கலான சிவ சொரூபமாகியுள்ள நற்போதத்தை நாடியிராது, மகாதீய மோக சாகரத்திலே அழுந்திக் கிடந்தாய்; ஆகவே, இந்தச் சரீராதிகள் யாவும் உண்மையானவையோ ? என்பது சாரமாம்.

ஏதம் - குற்றம். தேகாதி - சரீரமும் தத்துவாதிகளும். (17)

௰அ. நோக்கற் கரிதான நுண்ணியவான் மோனநிலை
தாக்கற் குபாயஞ் சமைத்தபிரான்—காக்குமுயிர்
அத்தனைக்கு நானடிமை யாதலினால் யானெனதென்
றித்தனைக்கும் பேசவிட மில்

பொழிப்புரை :—பார்ப்பதற்கு மிகவும் அரியதானதும், நுட்பத்தோடு மேன்மை வாய்ந்ததுமான மௌன நிலையினைப் பதியுமாறு ஓர் வழி காட்டியருளிய எம் பரமகருணையன், காத்தற்கான சர்வான்மாக்களுக்கும் யான் மீளாவடியவனாதலினாலே நானெனவும் எனதெனவும் இம்மட்டுக்கும் விவகரித்தற்கு ஏதுவின்று மென்பது.

குறிப்புரை :—எளியேற்கு மௌன நிலை பொருந்துமாறு அநுக்கிரகித்தருளிய யெம்பெருமானால் காத்தற்குரியனவாய ஆன்ம கோடிகளுக்கு யான் அடியவன்; ஆகையால், யான் எனதென்பதற் கிடனின்றென்க. (18)

௰௯. ஒன்றுமற நில்லென் றுணர்த்தியநம் மோனகுரு
தன்றுணைத்தா ணீடூழி தாம்வாழ்க—வென்றென்றே
திக்கனைத்துங் கைகுவிக்குஞ் சின்மயராந் தன்மையர்க்கே
கைக்குவரு மின்பக் கனி.

பொழிப்புரை :—'யாதா மோர் சங்கற்ப விகற்பாதிகளு மின்றி நிர்ச்சிந்தையனா யிருப்பா' யென்று ஓதியருளிய எம் மௌனாசிரியாது இரு திருவடிகளும் அளவு கடந்த காலம் வாழ்க. என்றோதியே அட்டதிக்கு களிலு முள்ளாரனைவரும் கரங் கூப்பித் தொழுதற்கான ஞான மயத்தன்மையர்க்கே நிரதிசயானந்தக் கனி கிட்டும்.

குறிப்புரை :—'நிர்ச்சிந்தையா யிருப்பார்' என்றருளிய பரமாசிரிய மோன நாதனது உபய சரணாரவிந்தங்களும் 'நீடூழிகாலம் வாழ்க' வென்று வாழ்த்திக் கைகூப்பி யருளிய எண்டிசை யாளரான அன்பர்க்கே பேரானந் தக்கனி கிடைக்கு மென்க. (19)

உ௦. மனத்தாலும் வாக்காலு மன்னவொண்ணு மோன
வினத்தாரே நல்ல வினத்தார்—கனத்த புகழ்
கொண்டவரு மன்னவரே கூறரிய முத்திநெறி
கண்டவரு மன்னவரே காண்.

பொழிப்புரை :—நெஞ்சாலையானும் வாயினாலும் நிலை பெறக்கூடாத மௌன நிலைகொண்ட வகையார்களே உத்தம கூட்டத்தாராவர்; மிக்கதான கீர்த்தியாளரும் அவரேயாகும்; அன்றிச் சொல்லுதற்கரிய மோக்ஷ மார்க்கத்தை நன்கு கண்டுணர்ந்தவரும் அம்மேதாவியரேயாம்.

குறிப்புரை :—மனத்திற்கும் வாக்கிற்கும் அகோசரமான மௌன சித்தியாளரே மெத்தச் சிறந்த வினத்தவராவர்; ஆதலின் அத்தகையாளரையே இன்றியமையாச் சொந்த வினத்தவராகக் கொள்ளற் பாற்றென்பதாயிற்று. நல்ல வினத்தார் - பிரதிப் பிரயோசனங்கருதாது கருணைபுரிந்தோதும் கருணாகர வள்ளலாராதலினானே அங்ஙனம் நல்லவினத்தா ரென்றனர். சான்றாக :—

அடிக்கரும்பு காட்டுகின்ற வாராத வின்பை
முடிக்கரும்பு காட்டுமோ மூட—மிடிக்கின்ற
மெய்ஞ்ஞானி காட்டுகின்ற மெய்ஞ்ஞானந் தன்னையொரு
பொய்ஞ்ஞானி காட்டுவித்தல் பொய். —என்றார் மேலோர். (20)

உக. கண்ணொளியே மோனக் கரும்பே கவலையறப் [வுன்
பண்ணொளிக்கு முள்ளொளியாம் பான்மையினை—நண்ணிட
சித்த மிரங்கிலதென் சித்தந் தெளியாவே
றித்தனைக்கு மாதரவு மில்.

பொழிப்புரை :—கண்ணினுள் ளொளியே! மௌனமயக் கரும்பே! கவலை நீங்குமாறு செய்கின்ற பரவொளிக்கும் உள்ளொளியாந் தன்மையை யானடையும்படியாக நின் மனமிரக்க முறுவதைக்காணேம்! ஆதலால் என் னெஞ்சந் தெளிவடைந்திலது, இவ்வளவுக்கும் நின்னை யல்லால் வேறே யாதாரமுமின்றாம். என்பது.

குறிப்புரை :—எல்லாம் வல்ல விறைவனே! ஒளிக்குள் ஒளியாந் தன்மையை யான் பொருந்தி யுய்யுமாறதாக நின்கருணை என்பால் திரும்பல் வேண்டுவன்; வேறே யாதரிப்பாளரில்லை யென்பதாம். (21)

உஉ. அறியாமை சாரி னதுவா யறிவா
நெறியான போதநுவாய் நிற்கும்—குறியாற்
சதசத் தருளுணர்த்தத் தானுணரா நின்ற
விதமுற் றறிவெனும் பேர் மெய்.

பொழிப்புரை :—மடமையைப் பொருந்துங்கால் அம்மடமையே யாகியும், அறிவைச்சாரின் அவ்வறிவு மயமாகியும் நிற்கின்ற பெயரால் சத்தசத்தென்றே திருவருளானது தெரிவிக்க, தான் அதனை அறியா நின்ற தன்மையைப் பற்றி அறிவு என்னும் பேர் மெய்யாயிற்று.

குறிப்புரை :—அறியாமையைச் சார அதுவாயும், அன்றி அறிவைச் சார அவ்வறிவே யாகியும் இருத்தல் காரணமாக சதசத்தென அறியத்தக்கதாம்; திருவருளுணர்த்தும் தன்மையை நோக்கி அறிவெனும் பேர் சித்தித்ததாகும் என்ப. (22)

உ௩. குருலிங்க சங்கமமாக் கொண்ட திருமேனி
கருவொன்று மேனிநம்பாற் காட்டா—கருவொன்று
கண்டவர்க்கே யானந்தங் கண்டுகொள லாமலது
கொண்டவர்க்கிங் கென்ன கிடைக்கும்.

பொழிப்புரை :—ஒப்பற்ற திருவருளானது, சற்குரு, இலிங்கம், இயங்குதிணைப் பொருள் இவ்வகையாக் கொண்டருளுந் திருமேனியாகிய தன் உண்மைச் சொரூபத்தினை கருப்போற் பத்திக் கேதுவான உருவமுள்ள நம்போன்றார்க்குக் காண்பியாதென்று, உண்மை யுணர்ந்தார்க்கே பேரின்பம் கண்டுகொளவியலும், அஃதல்லாது இதர எண்ணத்தினர் கட்கு இங்ஙனம் கிடைப்பதொன்று மின்றாம்.

குறிப்புரை :—எம்மிறைவன், குரு, இலிங்கம், சங்கமம் என்னு மூவகை உருக்கொண்டு சமய நேர்ந்துழி அன்பர்க்கு முன்பாகத் தோன்றியருளுதல், பரிபக்குவமுள்ளார்க் கல்லாமல் ஏனையோர்களுக்கு அறிதல் இயலாவாம். குரு - ஆசாரியார். வேறு இயங்குந்திணைப் பொருள் வடிவு. இலிங்கம் - சிவலிங்க சொரூபம். (23)

உ௪. புலியி னதளுடையான் பூதப் படையான்
பலியிரந்து மெல்லாம் பறிப்பான்—மலிபுனல்சேர்

பொன்முடியான் முக்கட் புனிதன் சரண்புகுந்தோர்க்
கென்முடியா தேதுமுள தே.

பொழிப்புரை :—புலித்தோ லுடையானும், பூதபைசாச படையினைக் கொண்டவனும், பிக்ஷை வாங்கியும் சகலத்தையும் பிடுங்கிக் கொள்பவனும், கங்கா தேவி மருவிய பொன் முடியை யுடையவனும், திரி நேத்திர தாரியான மகா பரிசுத்தனுனவனுமான சிவ பரஞ்சுடரார்தம் திருவடிக்கண் சரணுகதி யடையப் பெற்றூர்க்கு எந்த விதமான காரியங்களும் முடிதலேயன்றி முடியாததின்றாம். என்பது

குறிப்புரை :—ஸ்ரீ சிவபரஞ்சுடரார்தம் திருவடியின் கண்ணே சரணுகதி யடைந்தார்க்கு முடியாத தொன்றில்லை ; எல்லாமுடியும். என்பது. (24)

உரு. சொல்லுக் கடங்காச் சுகப்பொருளை நாமெனவே
யல்லும் பகலு மரற்றுவதென்—நல்லசிவ
ஞானமயம் பெற்றோர்க ளுமில்லை யென்பரந்தோ
மோனமய மான முறை.

பொழிப்புரை :—வாயினுற் கூறுவதற் கடங்கப் பெருத சுகானந்த சொரூபமான வத்துவை நாமேயென்று இராப்பகலாக கோஷிப்ப தென்னே ? நல்லதான ஞான மயம் பெற்றவர்கள் நாமல்ல வென்றுரைப்பர்கள் ; அந்தோ ! (இஃதன்றே) மோன சொரூபமாயுள்ள ஓர் முறையாகும்.

குறிப்புரை :—மனவாக்குக் கெட்டாப் பரம்பொருளை நாம் என்று கூறுதல் அடாதனவாம் ; மெய்ஞ்ஞானியர் நாம் என்பது கூடா வென்பர். இது வன்றே மோனத்திற்குரிய தோர் இலக்கணம் என்பர் ; என் ? இந்த 'நாம்' 'நான்' எனும் சப்தம் அகங்கார கிரந்தியின் கூற்றாதலின் இவை கனவினுங் கூடா தென்பர் எனவறிக.

'நான் சாகப்பெற்றிலனே' யென்றதும் சான்றாகு மென்க. (25)

உசு. ஐயா வருணகிரி யப்பா வுனைப்போல
மெய்யாக வோர்சொல் விளம்பினர் யார்—வையகத்தோர்
சாற்றறிதென் றேசற்றூர் தன்னனையாய் முக்கணெந்தை
நாற்றிசைக்குங் கைகாட்டி னன்.

பொழிப்புரை :—ஐயனே ! சோணசைலத்தில் வீற்றிருக்கின்ற அப்பனே ! நின்னைப்போன்று யதார்த்தமாக வோர் சொல்லினை உரைத்தருளினவர் யாவர் ? இவ்வகிலத்துள்ளார் கூறுவது மிகவும் அரியதாகு மென மன

மிளைத் தனர்கள்; தனக்குத்தானே ஒப்பானவனே! மூன்று நேத்திரதாரி யாம் எந்தந்தையார் நாஞுதிசைகளினு முள்ளார்கட்கெல்லாம் கை சைகை யால் உபதேசித்தருளினுர்.

குறிப்புரை :—அருணகிரிமேவு மப்பனே! திரியம்பகத் தேவன் திருக் கரங்கொண்டு காட்டியருளிய பொருளினை நீயோர் மொழியினு லுணர்த்தி யருளினையே! நின்னை யொப்பார் யாவரோ! அறியேன். என்பது சாரம்.(26)

உஎ. காதற்றுப் போன முறி கட்டிவைத்தா லாவதுண்டோ
தீதற்ற காயமுமச் செய்கையே—போதமாய்
நிற்பரல்லா லிச்சகத்தி னேரார்க ணேர்ந்திடினுந்
தற்பரமாக் கண்டிருப்பார்தாம்.

பொழிப்புரை :—காதற் றொழிந்த முறியினை மீண்டும் காப்பாற்றி வைப்பதால் பயனில்லை யென்பது போலவே கெடுதியில்லாச் சரீரமும் அவ்விதமே யாகும்; (ஆதலினுலே) மெய்யறிவாளர் ஞான மயமாக விளங்கி நிற்பரே யன்றி, இப்பிரபஞ்ச விஷயாதிகளிற் சிறிதுங் கலவார்; நேர்ந்திடி னும், அதனைத் தற்பரமாய்ப் பார்த்திருப்பர்க ளென்பதாம்.

குறிப்புரை :—அறிஞர், காதற்றமுறிபோல உடலைக்கருதி ஞானவடி வாய் நிற்பர் என்பதாம். (27)

உஅ. வெள்ளங் குலாவுசடை வெள்ளக் கருணையினுன்
கள்ளங் குலாவுவஞ்சக் கள்ளனேன்—உள்ளத்தில்
இல்லனென்று லன்னவன்று னெங்கும் வியாபகத்தான்
அல்லனென்றுஞ் சொல்லவழக் காம்.

பொழிப்புரை :—கங்காதேவி யிலங்காநின்ற கற்றைச் சடையுடைக் கருணு ப்ரவாகக் கண்ணுதற் பெருமான், கபட நாடகனுயும், வஞ்ச நெஞ் சினனுயு முள்ள என்னிதயத்தில் வீற்றிருந்திலனுயின், அப்பெரியான் யாண் டும் வியாபகத்தவன் அல்லன் என்று சொல்லுவதற்கு ஓர் நியாய முண்டு என்பது.

குறிப்புரை :—எம்மானும் பெம்மான் என்னுளத்திலிலனுயின், அம் மான்றன் சர்வ வியாபகத் தன்மைக்கு அது நேரே பிழையாமே. ஆனுலும் அற்றன்று; அவன் சர்வ பரிபூரணனே! என்பது ஆரண முடிபா மென்க. எங்ஙன மெனின் ;—

"தோற்றுவ தெல்லா நின்னிடத் தோற்றம்
தோற்றம் பிரிதிற் றேற்றுச் சுடர்முனே"—என்பதாம்.

"மன்னுமாலயனோடு வானும் வையமும்
பின்னமு மபினமும் பெருகிச்சீவனும்
பன்னுமா ணவமுதற் பாசமியாவையு
முன்னுமிச் சிவத்திடை யுதித்தொடுங்குமால்"—எனவும்,

"ஏழுபா ரேழுகட லிபங்களெட்டு வெற்புடன்
சூழும்வாள கிரிதொடங்கிச் சூழுமேழுலகமும்
வாழிமால் விசும்பினோடு பிரமவண்டம் யாவையு
மூழியானொளிக்குளே யுதித்துநின்றொடுங்குமே"—எனவும்,

"திரைநுரை குமிழியெல்லாந் திரைகடற்றோன்றுமாபோ
லுரையுயிர் மாயை யாக்கை யுனதிட முதிக்கக் கண்டேன்
பரைதிருவுருவமாகிப் பசுத்தொறுங் குடியிருந்த
திருமறு மார்பன் போற்றும் திருப்புலிவனத்துளானே"
எனவும் வருவனவற்றால், பரசிவன் பரிபூரணத்துவமும், பரத்துவமும், பரம வன்மையுடையமையும் இனிது விளங்கும். (28)

உகூ. தத்துவப் பேயோடே தலைபடித்துக் கொள்ளாமல்
வைத்த வருண்மோன வள்ளலையே—நித்தமன்பு
பூணக் கருதுநெஞ்சு போற்றக் கரமெழும்புங்
காணத் துடிக்குமிரு கண்.

பொழிப்புரை :—தத்துவாதிகளான பேய்க் கூட்டங்களோடும் போராடிக் கொள்ளாதபடி திருவருள் புரிந்தருளிய மௌன தேசிகோத்தமனையே எப்போதும் அன்பு செய்தொழுக என்மனமானது எண்ணியே கிடக்கும்; அன்றி, போற்றுதற்காகக் கரம் சிரமேற்குவியும்; தரிசிக்க இரு நேத்திரங்களுந் துடிப்புறு மென்க.

குறிப்புரை :—மௌனஞானு சந்தானஞ் செய்ய எளியேற் கருளிய இறைவனுக்கே யன்பு செய்யுமாறு அறிவு பெருகும்; அஞ்சலி செய்ய கைகள் சிரமேற் குவியும், காண்டற்கு விரையுங் கண்க ளென்ப. (29)

௩௦. தொல்லைவினைக் கீடாய்ச் சுழல்கின்ற நானொருவன்
எல்லையிலா நின்கருணை யெய்துவனோ—வல்லவனே
மோன குருவே முழுதினையுந் தானுணர்ந்த
ஞான குருவே நவில்.

பொழிப்புரை :—முன்செய் வினைக்கு ஈடுபட்டு அநுபவிக்குமாறு பிறவி யேற்றுவந்த வொருவனாய யான், பெருமைகூற முடியாத நினது

கருணைநிதியினையும் மெய்துமாறுளதோ! சகல வன்மையையும் கைவல்ய மாக்கியுள்ள மௌன தேசிகோத்தம! சர்வமும் உற்றுணர்ந்துள்ள மெய்ஞ் ஞான சற்குருவே! நீ தெரிந்துரை செய்வாயாக.

குறிப்புரை :—எல்லாம்வல்ல விறைவ! கர்ம பந்தத்தால் ஜென்ம பந்த முற்று வந்த யான் நின் பெருங்கருணை நிதியினையும் பெறும் பாக்கியவானு வனே என்பது சாரம். (30)

௩௧. மூன்றுகண்ணு முத்தொழிலா மும்முதலா மூவுலகுந்
தோன்றக் கருணைபொழி தோன்றலே—யீன்றவனை
தன்னைப்போ லன்பு தழைத்தோ யொருதெய்வம்
உன்னைப்போ லுண்டோ வுரை.

பொழிப்புரை :—திரியம்பகனே! முத்தொழிற் கிறையோய்! மும் மூர்த்திகட்கு முதல்வனானவனே! திரிலோகங்களுந் தோன்றுமாறதாக கருணை பொழிகின்ற மேலோய்! தாய்போன்று அன்பு தழைத்தோய்! நின் போன்றோர் தெய்வ முண்டோ கூறுவாய்!

குறிப்புரை :—முக்கண் - சந்திரன், சூரியன், அக்னி. முத்தொழில் - படைத்தல், காத்தல், அழித்தல். மூவர்க்குந் தலைவன் - மும்மூர்த்திகட் கும் இறைவன். தாயனைய தயவுடையான். மூவுலகங்கள் - பூவுலகம், சுவர்க்க லோகம், பாதாள யுலகம் என்பன. எவ்வுயிர்க்கு மிறைவா! உன்போலொரு தெய்வமு முண்டோ வென்பதாம்.

முத்தேவர்போற்று முதற்றேவ நின்னையன்றி
யெத்தேவர் சற்றே யெடுத்துரைநீ—பித்தேன்செய்
குற்றமெலா மிங்கோர் குணமாகக் கொண்டென்னை
யற்றமிலா தாள் கின்றவர்.—என்றார் ஓர் பெரியாரும். (31)

௩௨. நேசிக்குஞ் சிந்தை நினைவுக்கு ளுன்னைவைத்துப்
பூசிக்குந் தானிறைந்து பூரணமா—யோசித்து
நின்றதல்லான் மோன நிருவிகற்ப நிட்டைநிலை
யென்றுவரு மோர்வறியேனே.

பொழிப்புரை :—அன்பு செய்தொழுகும் என்னெஞ்சமானது தன் எண்ணத்துள்ளே தம்மை நிலை நாட்டிப் பூசை செய்துவரும்; தானாகவே பூரணத்துவ மெய்தி நன்காய்ந்தறிந்துள்ளதே; தவிர, மௌன தேசிகனே! நிருவி கற்ப சமாதி கூடுதலானது எப்போது கைகூடுமோ வென்று உண ரப்பெற்றே னில்லை.

குறிப்புரை :—இறைவ ! எனது மனது நின்னைத் தன்னிடங் கொண்டமைத்தருளி மானச பூசை புரிந்ததோடு நின்னையே யோசித்தலும் செய்து வந்ததல்லால், நிர்விகற்ப நிட்டையைப் பெற்றில தென்பது சாரமாயிற் றென்க. (32)

௩௩. அறிவி னறியாமை யற்றறிவாய் நின்று
பிறிவறவா னந்தமயம் பெற்றுக்—குறியவிழ்ந்தால்
அன்றைக் குடல்வேண்டே னையாவிவ் வாக்கையையே
என்றைக்கும் வேண்டுவனே யான்.

பொழிப்புரை :—அறிவோடும் அறியாமையு மொழிந்து அறிவு சொரூபமாயிருந்து நீக்கமிலாது பரானந்த மயமாய் நினைவற நிற்பனேயாயின், அதன் பின்னர் மட்டும் இச்சரீரத்தில் விருப்புறேன்; அங்ஙனமில்லாவழி, ஐயனே ! எப்போதும் இவ்வுடலோடுங்கூடிய வாழ்க்கையையே விரும்புவேன் என்பது.

குறிப்புரை :—இறைவா ! அறிதலும் அறியாமையு மொழிந்து, அறிவு மயமாயிருந்து, ஆனந்த மெய்தி சங்கல்பமு மறும்போது சரீர வெறுப்புறுவேன்; அதுமட்டும் இச்சரீரம் வேண்டிய தவசியமே. அதாவது, பேத பாவனை யொழிந்து அறிவாகாரமாய் நினைவு மற்றக்கால் என்னை யான் மறிப்பேன். (33)

௩௪. உடலைப் பழித்திங் குணவுங் கொடாமல்
விடவிடவே நாடுவரோ மெய்யைப்—படபடென
வேண்டுவே னிந்தவுடன் மெய்யுணராப் பொய்யனேன்
ஆண்டநீ தானே யறி.

பொழிப்புரை :—இந்தச் சரீரத்தை வெறுத்து இவ்விடத்திலே ஆகாரத்தையு முண்ணாது சரீரத்தை யொழித்தற்கே யெண்ணுவரோ ! எண்ணார், ஆதலினாலே, மிகவும் துரிதமாக இச்சரீரத்தை, உண்மையை யுணராத பொய்யனாய யான் விரும்பியே யுள்ளேன் ; ஆகவே (இந்நிலையினை) எனை யாட்கொண்டருளிய நீயே யறிந்து கொள்வாய்.

குறிப்புரை :—முத்திக்கு அத்தியாவசியமாகிய இவ்வுடலானதை ஆதாரமாக வைத்துக் கொண்டே அறிஞராவார் ஓம்பிவருவார்கள். அது போன்றே இவ்வேழையேனும் அவ்வழியே கொள்வேன். இதனுண்மை நீ அறியாததன்றே யென்பது. (34)

௩௫. அறியாயோ வென்னையுநீ யாண்டநீ சுத்த
வெறியாய் மயங்கவுமேன் விட்டாய்—நெறிமயங்கிக்
குன்றுஞ் செடியுங் குறுகுமோ வையாவே
கன்றுகெட்டாற் றாயருகே காண்.

பொழிப்புரை :—ஐயனே! இதுகாறும் நீ எளியனையு மறிந்திலையோ! எனையாட்கொண்டருளிய நீ, யான் மிகவும் வெறிகொண்டவனாய் மயங்கற் கிடனாகவும் ஏனோ கைவிட்டனை! கன்று கெட்டுப் போகுமாயின் அருகாயுள்ள தாய்ப்பசுவானது மார்க்கந் தவறிப்போய் சிறு குன்றுகளையும் செடிப் புதார்களையும் சாருமோ! சாராவாம் என்றபடி.

குறிப்புரை :—தன் கன்றை யிழந்த தாய்ப் பசுவானது கன்றினைத் தேடும் நாட்டங்கொண்டு ஓட்டமும் நடையுமாய் ஓடித்திரியு மன்றி கற்பாறையையும் செடிகளையும் காணச்செல்லா; அதே போன்று, என்தன்மை யறிந்தும் நீ, யான் உன்னைவிட்டு மயங்குமாறு கைவிட்டதேனோ? என்பதுவே. (35)

௩௬. ஏதுக் குடற்சுமைகொண் டேனிருந்தே னையனே
யாதிக்க மோன வருட்டாயே—சோதியா
மன்ன நிருவிகற்ப வானந்த நிட்டையிலே
பின்னமற நில்லாத பின்.

பொழிப்புரை :—ஐயனே! அதிமேன்மை வாய்ந்த மௌன நிலையினைத் தருதற்குரிய திருவருட்டாயே! சுவயம் பிரகாசமாயுள்ள தலைவ! யாதொரு விகற்பாதிகளு மில்லாத சுகானந்த நிட்டைக்கண் பேதமற நிலையாதிருக்கும்போது, எதன் பொருட்டாக இவ்வுடலாம் பார சுமையினைத் தாங்கிக் கொண்டிருக்கின்றேன்! ஈங்கென்ன பிரயோசனத்தை யடையப் போகிறேன்?

குறிப்புரை :—பெற்ற கரும்பேறாகிய நிர்விகற்ப நிட்டானுபூதி செய்துய்தற் கில்லாமல், யான் இந்தச் சரீரமாகிய வீணான பாரத்தைச் சுமை தாங்கியன்னச் சுமந்திருக்கவோ வந்தது!

சுத்தப் படிகமுச்சிச் சூரியனைச் சந்தித்தா
லெத்தன்மைத் தத்தன்மை யீசனிலை—யுற்றுற்றுப்
பாராதவர்க்குப் பவமும் பலபிணியும்
போராடு மெஞ்ஞான்று போம்............என்றார் மேலோரும். (36)

௩௭. பின்னு முடற்சுமையாப் பேசும் வழக்கதனை
லென்னபல னுமுற் றிருந்தோமே—யன்னதனை

லானந்தந் தானே தானாகு மெம்மையனே
யேனிந்தத் துன்ப மினி.

பொழிப்புரை :—மேலும் மேலும் இச்சரீரத்தைச் சுமை சுமையெனக்குழறும் வழக்கத்தினாலே என்ன பிரயோசனத்தை நாம் பெற்றிருக்கின்றோம் ? ஆகவே, இந்நிலையா யுள்ள இவ்வுடலினாலே சுகோதயமானது தானாகவே தான் உற்பவ மாகும் ; சதா இத்துயரும் எதனால் அடைவதோ !

குறிப்புரை :—வீணே இச்சரீரத்தை வெறுத்துரைப்பதால் ஏதும் பிரயோசனமோ ? அல்ல ; பெறவிருக்கும் மோக்ஷ நிலைக்கு இஃதோர் உபகார பாத்திரமாகிய ஜடவத்து தானே என்பது கருத்தாம்.

உடம்பாரழியி லுயிரா ரொழிவர்
திடம்பெற மெய்ஞ்ஞானம் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கு முபாய மறிந்தே
உடம்பை வளர்த்தே னுயிர்வளர்த்தேனே.—என்றார் திருமூலர். (37)

கஅ. துன்பக் கடலிற் றுளைந்த தெல்லாந் தீர்ந்ததே
யின்பக் கடலி லிருமென்ன—வன்பிற்
கரைந்து கரைந்துருகிக் கண்ணருவி காட்ட
விரைந்துவரு மானந் தமே.

பொழிப்புரை :—துயரக்கடலில் அழுந்தி மிதந்த துன்பங்களியாவு மொழிந்தது ; இனிப்பேரானந்தக் கடலி லிருந்துய்யுமின் என்று இவ்வுலகர்க் கறிவூட்டி அன்பினாலே மனங்கரைந்து கரைந்துருகி உடல் வாட்டமுற்று மனமிளைத்து கண்ணீரொழுகச் செய்துவரின் அப்போதே சுகோதயம் துரிதமாய்த் தோன்றும்.

குறிப்புரை :—துன்பந் துலைந்தது, இனியேனும் சுகானந்த முறுங்கள் என உலகுக் கறிவூட்டிப், பின்னர் தானும் அன்பால் கண்ணீர்ச் சொரிந்து அதனாலுடம்பு நனைந்து வாடி வருந்துங்கால் சுகம் பெற்றுய்தல் விரைவாய்ப் பெறலா மென்பது.

ஆனையுரி போர்த்தாடு மம்பலவா வென்னுடைய
வூனவுரி போர்த்தாட வொண்ணாதோ—ஞானநிலை
வெள்ளிமலை வீற்றிருந்து வேதியரோர் நால்வர்க்கு
முள்ளபடி சொன்ன யுரை..............என்றார் பெரியார். (38)

கக. கரைந்துக ரைந்துருகிக் கண்ணீ ரருக
விரைந்தே நிருவிகற்ப மெய்த—நிரந்தரமு

நின்னையே சிந்திக்க நீ கொடுத்தாய் மோனநா
னென்னைமுழு துங்கொடுத்தே னே.

பொழிப்புரை:—கரைந்து கரைந்து உடல் மெலிந்துருகி மனமிளகி கண்ணீரானது ஆறாயோட்டெடுப்ப, மிகச் சீக்கிரமாக நிர்விகற்ப சமாதியைப் பெற்றுய்ய வெப்போதும் நின்னை யான் நினைந்துய்ய நீயே கருணை செய்தனை; மோன தேசிகனே! யானோ, நின்பால் என்னை முற்று மர்ப்பணஞ் செய்து விட்டேன்.

குறிப்புரை:—முன்னமே உடல் பொருளாவியைத் தத்தஞ் செய்திடினும் அது நிற்க, ஈண்டு என்னை முற்றிலும் ஒப்படைத்தேன் என்பது தற்போதமாம் ஜீவ போதத்தைக் கொடுத்தலையே கூறினா ரென்க. இதனால், தான் சிவபோதமா யிருக்கின்றே னென்பது வெளியாயது; நிட்டையடையவும், நின்னையே சிந்திக்கவும் நீ கொடுத்தாய் நின்னுடலையான் அதற்கீடாக என்னைக் கொடுத்துவிட்டேன். என்பது.

செய்யா ரழலே நின் செம்மேனி யென்னினு மென்
னையாநின் கால்பிடித்தற் கஞ்சேன்காண்—மெய்யாவிஞ்
ஞான்றுகண்டு நான்மகிழ நந்தொண்ட னென்றெனையு
மேன்று கொண்டாற் போது மெனக்கு......என்றார் பெரியார். (39)

௪0. அல்லும் பகலும்பே ரன்புடனே தானிருந்தாற்
கல்லு முருகாதோ கன்னெஞ்சே—பொல்லாத
தப்புவழி யேனினைந்தாய் சந்ததமு நீயிறந்த
வெய்ப்பிலே யானந்த மே.

பொழிப்புரை:—இராப்பகலாக (இறைவன்பால்) இடையறா அன்புற்றிருந்து வந்தால், கல்லானாலும் நீராளமாக உருகி விடாதோ! ஏ கல் மனமே! கொடியதான தீய மார்க்கத்திற்போக ஏன் எண்ணினாய்? எந்நேரங்களினும் நீ யிறந்ததான வொடுங்கிய நிலையிலேதானே சுகோதயமாகுமே!

குறிப்புரை:—மனமே! நீ, இரவு பகலெக்காலத்தினும் மாறாத அன்போடுங் கூடியிருந்து வருவையே யாயின் கல்லுஞ் சற்று கனிவுறுமே! அஃதொழிந்து நீ தீயவழியேன் சென்றனை? நீ யொடுங்கிய நின்னிலையிலேதானே நின்மலானந்த நிட்டை முற்றும் பெறுமே யென்பது. (40)

௪௧. கொடுத்தேனே யென்னைக் கொடுத்தவுட னின்ப
மடுத்தேனே நீடூழி வாழ்ந்தே—யடுத்தேனே

பெற்றேனே பெற்றுப் பிழைத்தேனே சன்மமல்ல
விற்றேனே யேழையடி யேன்.

பொழிப்புரை :—அறிவிற் குறைந்த வடிமையேன் என்னை நின்பாற் கொடுத்து விட்டேன் ; அதன் மேற்பட்டே இன்பமென்பதைக் கொண் டேன் ; பலகாலங்களாகவும் வாழ்வுற்று வந்தேன் ; பின்னர் பெறுதற் கானதையே பெற்றுக் கொண்டேன் பிழைத்தேன் பின்னும், இதன்மேல் பிறத்தலாதிய துயரத்தையும் விட்டு நீங்கப் பெற்றேனென்பது.

குறிப்புரை :—பெரும் பேதையேனாகிய யான், யென்னை நினைக்கர்ப்பித் ததன் பின்னரே என் பிறப்பின்றுயர் கெடுத்தெ னென்பது சாரமாகும்.

பேசாத பேச்சும் பிறவாப் பிறப்புநற் பேதையர்பால்
நேசாத நேசமு நினையா நினைவையு நின்மலமுந்
தூசாச் சமாதித் துரியங்கடந்த சுகமயமும்
ஏசாதெனக்கருள் செய்யெழிலார்கச்சி யேகம்பனே.—
என்றார் மேலோர். (41)

சஉ. பெற்றோம் பிறவாமை பேசாமை யாயிருக்கக்
கற்றோ மெனவுரைக்கக் காரியமேன்—சற்றேனும்
நீக்கற்ற வின்ப நிலைபொருந்தி யேசற்று
வாக்கற்றார் பேசுமோ வாய்.

பொழிப்புரை :—இனிப் பிறவாமையாகிய ஒப்பற்ற பேற்றினைப் பெற்று விட்டோம் ; (இதன்மேல்) மௌன முத்திரையுங் கொண்டு விட் டோம், என்று சொல்லுவதில் பிரயோசன மென்னவோ ? ஆதலால், சிறிது போதாவது நீங்குதலன்றி அத்துவித முறையாய்ச் சுகானந்த நிலை யுற்றே பழியின்றி பேச்சுக் கிடமான நினைவு மற்றொழியின் வாயானது தானாக வசனிப்பது முண்டாங் கொல்லோ ? என்பதாம்.

குறிப்புரை :—பிறந்திறவாப் பேற்றினைப் பெற்றுவிட்டோம், மௌன நிலையு முற்றோம் என வாய்ப்பறை சாற்றுவது வழக்கன்று ; அவ்வழக்கு இழுக்காகும் ; மனம் நினைவு கொண்டாலன்றி வாய் வசனியா ; ஆதல் கொண்டே இந்நூலாசிரியரும் மற்றோர்பால், " மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் " என்றார்.

ஈண்டு மௌன மென்றது, வாய் வார்த்தையை மட்டும் குறித்த தன்று ; மனமாதி அந்தக்கரணங்கள் யாவும் மௌன முற்றிருத்தலையே குறித்ததாகும். தற்காலம் சில மௌனியர் வாயை மட்டும் மூடிக்கொண்டு மூங்கை போன்று மற்ற விவகாரங்களை யெல்லாம் கை சைகையாகக்

கோறணிகொண்டு பேசி வருவது வழக்கமாய்க் கொண்டுள்ளதைப் பார்க்கலாம். அவ்வழக்குச் சழக்கேயாம் என்றார் பெரியார். மோனம் ஞான வரம்பா மென்றார் பெரியார் ஞான நிலையாவது அகக்கரணுதி யடங்கலு மோய்ந்த விடமே ஞானோதய நிலையென்று பல விடத்தும் பற்பல பெரியார்களும் பறக்கக் கூறியுள்ளமை நன்குற வறிதல் பான்மையாம்.

இதுகொண்டே நம்மாசிரியரும் முற்பங்கிலே " பேசாதவானந்த நிட்டைக்கும் அறிவிலாப் பேதைக்கும் வெகுதூரமே " யென்றது கொண்டே மௌன நிலையின் பெற்றி நன்கு பிறங்கும். (42)

சரு. காலன் றனையுதைத்தான் காமன் றனையெரித்தான்
பாலன் பசிக்கிரங்கிப் பாற்கடலை—ஞாலமெச்சப்
பின்னே நடக்கவிட்டான் பேரருளை நாடாதார்க்
கென்னே நடக்கை யினி.

பொழிப்புரை :—இயமதர்மனை உதைத்து மாய்த்தவனும், மதனைக் கண் கொண்டெரித்தவனும், பாலகனும் உபமன்யுவுக்குப் பசி கண்டிரங்கிப் பாற் சமுத்திரத்தை தில்லைக்கண் வரித்தளித்தவனும் ஆகிய பேருளானது பெருங்கருணை பிரசாதத்தை விரும்பிப் பெறாதார்க்கு இனி இங்கே என்ன சற்காரிய மிருக்கின்றது ? ஓர் பலனுமில்லை யென்பதாம்.

குறிப்புரை :—காலனை வதைத்தும், காமனை யெரித்தும், பாலனும் உபமன்னிய பகவானுக்குப் பாற்கடல் வருவித்தளித்தும், பின்னர் அப் பாற்கடலை பின்னே நடந்தேகச் செய்தவருமாய தாண்டவ ஆண்டவரது பேரருளைப் பெற்றார் வாழ்வர், பெறாதார் தாழ்வர் என்பதாயிற்று.

ஈண்டு பாலனும் உபமன்னிய பகவான், வியாக்கிரபாத முனிவரின் புத்திரர்; சிவபெருமானால் அனுக்கிரகிக்கப்பெற்ற திருப்பாற்கடலை யுண்ட செல்வர் ; வேதாகமங்களின் எல்லைகண்ட வல்லமாதவர், ஸ்ரீகண்ணனார்தம் சிவ தீக்ஷாகுரு ; ஆக இத்தகையாள ரென்ப.

இன்னமும், " பாலுக்குப் பாலகன் வேண்டியழுதிடப் பாற்கடலீந்த பிரான் " திருப்பல்லாண்டானும், கோயிற் புராணத்தானு முணர்தற் பாற்று. (43)

சச. விண்ணருவி மேன்மேல் விளங்குவபோ லேயிரண்டு
கண்ணருவி வெள்ளமொடு கைகூப்பித்—தண்ணமிர்த
வெள்ளமே யானந்த வெற்பே யெனத்தொழுவோ
ருள்ளமே ஞான வொளி.

பொழிப்புரை :—ஆகாயத்தி னின்றும் பொழியும் மழைப் பெருக்கானது விருத்தியாதல் போன்று, இருகண்களினீர் பெருக்குடனே சிரமேற் கரங்குவித்து குளிர்வாய்ந்த அமிர்தப் பெருக்கே, பரானந்தப் பர்வதமே! என்று போற்றி சரீரத்தால் வணக்கஞ் செய்வார்தம் நெஞ்சமே ஞானப் பிரகாசச் சுடர் மயமாகும்.

குறிப்புரை :—மேக மண்டல மழைத்தாரையை யொத்தே கண்களினின்றும் ஆனந்த வருவிசொரிய, கைகூப்பி நின்று, அமிர்தப் பிரவாகமே! ஆனந்த மலையே யென்று எம்மானை யிடையறாது போற்றுவோர்களது இதயமே மெஞ்ஞான வொளியாகும் என்பது சாரமாம். (44)

சரு. பிள்ளைமதிச் செஞ்சடையான் பேசாப் பெருமையினன்
கள்ளவிழும் பூங்கொன்றைக் கண்ணியான்—உள்ளபடி
கல்லாலின் கீழிருந்து கற்பித்தா னோர்வசன
மெல்லாரு மீடேற வே.

பொழிப்புரை :—பிறைச் சந்திரனை யணிந்துள்ள சிவந்த கற்றைச் சடையை யுடையவனெவனோ, அவனும், சிறப்பித்துப் பேசுதற் கருமையான பெருமை வாய்ந்தவன் எவனோ அவனும், மதுவுடனே மலரும் கொன்றைத் தாரணிந்தவன் எவனோ அவனுமான எம்மான், அனைவரும் கதி பெறும் பொருட்டாகவே கல்லால நீழலின்கண் எழுந்தருளி யிருந்து கொண்டு உண்மையான வோர் மொழியினை யோதியருளினன் என்பது.

குறிப்புரை :—கயிலை யாளியான், கல்லாலின் கீழே தக்ஷிணாமூர்த்தியாய் வீற்றிருந்து ஆன்மாக்களார் கதி பெறுமாறு ஓர் வார்த்தையினைக் கைக்குறிப்பாற் காட்டி யருளினன். 'பேசாப் பெருமையாளன்' என்றவோர் காரணத்தானே ஈண்டு சொல்லாமற் சொல்ல நேர்ந்தமை யுணரற்பாற்று. சான்றாக :—

வாழி திருச்சனகர் வாழி சனற்குமரர்
வாழி சனந்தர் மறைச்சனந்தர்—வாழிமறைக்
கல்லாலின் கீழிருந்த கண்ணுதலார் மாமேரு
வில்லார் மணிச்சிலம்பு மே—என்றார் பெரியார். (45)

சசு. புலனைந்துந் தானே பொரமயங்கிச் சிந்தை
யலமந் துழலு மடிமை—நலமிகுந்த
சித்தான மோன சிவனேநின் சேவடிக்கே
பித்தானு லுண்டோ பிறப்பு.

பொழிப்புரை :—சப்த முதலாயுள்ள புலாதிகள் ஐந்தும் தாமாகவே வந்து தாமெழுப்ப, மனமானது மயக்குற்று மிகச் சுழன்று, இவ்வடிமையன் மீது, நன்மை மிக்குள்ள ஞானாகார மௌன நிலையை யுணர்த்துஞ் சிவ குருவே ! நினது ஒப்புவமையற்ற பொன்போன்ற பூவடிக்கே பேரன்பாம் பித்துடையே னாயின் பின்னர் பிறவியு முண்டாமோ ! இல்லை யென்றபடி.

குறிப்புரை :—எல்லாம் வல்ல இறைவனே ! திவ்ய திருத்தாண் மலர்க்கே பேரன்பாம் பித்து கொள்வேனாயின், பின்னர் எனக்குப் பிறவியு முண் டாமோ ! என்பது சாரம்.

"வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில"—என்றார் பொய்யா மொழியாரும். (46)

சஎ. நிறைகுடந்தா னீர்கொளுமோ நிச்சயமா மோன
முறையுணர்ந்தார் யாதை முயல்வார்—பிறையணிந்த
மிக்ககை லாயமலை வித்தகனே வேதியனே
செக்கரணி மேனியனே செப்பு.

பொழிப்புரை :—முற்றிலும் நீரைக்கொண்டுள்ள நிறைந்த குடமானது பின்னுந் தண்ணீரைக் கொள்வது முண்டாங் கொல்லோ ! நிலவரமாயுள்ள மௌன நிலையினை யுணரப்பெற்றவர்கள் மற்றும் எதனை அப்யசிக்க முன் செல்வர், மூன்றாம் பிறை மதியை யணிந்தருளி மேன்மை வாய்ந்த கைலாய மலையில் மேவிய பூரண ஞான புனிதனே ! வேத நாத விசேஷணனே ! செஞ்சுடர் வண்ணத் திருமேனியோய் ! சொல்வாயாக.

குறிப்புரை :—மதியணி சென்னி மாதவனே ! ஏற்கனவே நிறையப் பெற்ற குடமானது மீண்டும் தண்ணீரைத் தன்னுட் கொள்ளாமை போன்று, மெஞ்ஞான நிட்டாபரராயுள்ளார் பின்னு மொன்றைத் தழுவார் என்றபடி. (47)

சஅ. துங்கமழு மானுடையாய் சூலப் படையுடையாய்
திங்களணி செஞ்சடையாய் சேவுடையாய்—மங்கையொரு
பாலுடையாய் செங்கட் பணியாயென் சென்னியின்மேற்
காலுடையாய் நீயே கதி.

பொழிப்புரை :—மகாப் பரிசுத்தமாய மழுவென்ன, மானென்ன, சூலா யுத மென்ன, மதி தவழ் சடையென்ன, இடப வாகன மென்ன, உமையொரு பாகமுடைமை யென்ன, செங்கண் வாய்ந்த சர்ப்பாபரண மென்ன இவை

யனைத்தும் உரிமையாக் கொண்டருளிய இறைவனே! எனது சிரசின் மீது சூட்டிய திருவடி யுடையோய்! எளியேற்கு நீயே புகலிடமாவாய்.

குறிப்புரை :—மழு, மான், சூலப்படை, மதிச்சடை, இடபம், செங்கண்ணரவு இவை முதலாய வனைத்தையும் உரிமையாக் கொண்டருளியவனே! அடிமைக்குப் புகலிடமாவது நீயேயாம் என்பது சாரம். (48)

௪௯. இனிய கருணைமுகி லெம்பிரான் முக்கட்
கனியமிர்த வாரியின்பக் கட்டி—தனிமுதல்வ
னித்தன்பரம னிமலனிறை வாய்நிறைந்த
சுத்தநமக் கென்றுந் துணை.

பொழிப்புரை :—நன்மை பயக்கு மேலான காருணிய மழை பொழிகின்ற மேகம் போன்ற எம்பெருமான், மூன்று கண் கொண்டகனியை யொத்தவன், தேவாமிர்தக்கடலான், இனிப்புறுங் கருப்புக் கட்டி யனையான், இணையற்ற யேகன், யென்று முள்ளான், மேன்மை வாய்ந்தவன், மல பந்தமில்லான், பரிபூரண நிறைவுடையான், மகாப் பரிசுத்தன், ஆகிய இத்தகைமை கொண்டருளிய இறைவ! நீ எமக்கு என்று நீங்காத் துணையாவாய்.

குறிப்புரை :—காருண்ய மழை பொழியுங் கண் மூன்றுடைய கடவுண் மணியே! என்றும் நீங்காத் துணை யெமக்காவாய் என்பது சாரம். (49)

௫௦. நீதியாய்க் கல்லாலி னீழலின்கீ ழேயிருந்து
போதியா வுண்மையெல்லாம் போதித்தா—னேதில்
சனகாதி யாய தவத்தோர்க்கு ஞான
தினகரனு மௌன சிவன்.

பொழிப்புரை :—சுத்த ஞான சூரியனாகி மௌன முத்திரையைக் கொடுத்தருளும் சிவகுருநாதன், நியாயமுறை யுடையோனாய்க் கல்லால விருக்ஷத்தின் கீழ் வீற்றிருந்தருளி, குற்றமற்ற சனகர் முதலாகிய தவ சிரேட்டர்களுக் கெல்லாம் போதிக்க வொண்ணாத அரிய உபதேசவுண்மைப் பொருளனைத்தும் ஒருமனப்பட்டு உபதேசித் தருளினன் என்க.

குறிப்புரை :—‘ குற்றம் இல்லாத ’ என்னும் பொருளைத் தந்த ‘ ஏதம் இல் ’ என்னுஞ் சொற்கள் (ஏதில்) என இடைக்குறையாய் வந்தது. விவேக திவாகரன் போன்ற ஸ்ரீ சிவபிரான் கல்லாலின் கீழிருந்து கொண்டு சனகாதி தவத்தினர்கட்கு உபதேசித்தற் கரியதாயுள்ள அதியிரகசிய பொருள்களனைத்தையும் உபதேசித்தருளினன் என்பது சாரம். சான்றாக—

இல்லாத வன்பினர்க்கே யீசன் மிகவரியன்
றெல்லாழி வையகத்திற் றேன்றனே—நல்லார்தங்
கல்லுஞ் சிலையுமொரு கைப்பிரம்பும் பட்டமையா
லெல்லார்க்கு மீசனெளி யன்.—என்றார் மேதாவியர். (50)

ருக. தேகச் செயலுனுஞ் சிந்தையுட னேகுழையில்
யோகநிலை ஞானிகளுக் கொப்புவதோ—மோகநிலை
யல்லலிலே வாழ்வாரோ வப்பனே நீயற்ற
வெல்லையிலே சும்மா விரு.

பொழிப்புரை :—இச்சரீரத்தின் செயலும் மனத்தினுடனே சேர்ந் தொழிந்து விடுமானல் மெஞ்ஞானியர்க்கு யோகானுபூதி பொருந்தற் பாலதோ! மற்றும் அன்னர் மோகாதிய அஞ்ஞான ஆஸ்பத விவகாரத்திலே அழுந்திவிடுவரோ? (அழுந்தார் என்பது) ஆதலால், அப்பனே! தானென்ற தற்ற எல்லை யெதுவோ அத்தனியிடத்தே நீ யேகனய்ச் சும்மாயிருப்பாய்.

குறிப்புரை :—ஹே மானஸ! யோகப்பதம் மெஞ்ஞானியர்க் கேலாதா தலின், நீ நின் சுத்த தனியான நீயற்ற நிலைக்கண் யேகனு யிருந்திடுவாயாக வென்பது சாரமாம். சான்முக—

"பத்தைவிட வுண்டோ பரமபத மாருயிர்க்குச்
சித்தைவிட வுண்டோ செயல்."—ஆகையினலே, நீ,
"முத்தி யிடைநிற்க முறை."—என்றார் மேலோர். (51)

ருஉ. சும்மா விருக்கச் சுகமுதய மாகுமே
இம்மாயா யோகமினி யேனடா—தம்மறிவின்
சுட்டாலே யாகுமோ சொல்லவேண் டாங்கன்ம
நிட்டா சிறுபிள்ளாய் நீ.

பொழிப்புரை :—கன்ம நிட்டாபரனை ஏ சிறுமதலாய்! நீ சிந்தையற் றுத் தனிமையா யிருந்து வருவையே யானல் நினக்குத் தானகவே ஆனந் தானுபவ மமைந்திடுமே! இவ்வித மாயா சகிதமாகிய யோகப்பயிற்சி யினி யெதற்காகவோ? தன்னறிவின் சுட்டால் சுகோதய முண்டாதலு முண்டாங் கொல்லோ? ஆதலால், நீ அதைக்குறித்து யாது மோதா தொழிவாய் என் பது.

குறிப்புரை :—கர்மநிட்டனை பிள்ளைமதிப் பேதாய்! உள்ளபடி யோதுவதுணர்வாய் :—அறிவாற் சுட்டிப்பார்த்தல் கன்ம நிட்டை, அது

பயன்றருவதன்று; ஆதலின், சொன்னபடியே சும்மாயிரு; சுகோதய முண்டாம். என்பது சாரம். சான்றாக :—

சும்மா விருக்குஞ் சுகோதயங்காட்டித் துரிசகலா
மும்மாயைக் கப்புறத் தொன்றாய்க்கிடந்த முழுதறிவாஞ்
சிம்மாதன மெனக் கீந்தா யுனக்கென் செயக்கடவேன்
கைம்மாறு மாரிக்குமுண்டோ கவிக்கச்சி யேகம்பனே.—என்றார் சிவஞான முனிவரர். (52)

௫௩. நீயற்ற வந்நிலையே நிட்டையதி நீயிலையோ
வாயற் றவனே மயங்காதே—போயற்
றிருந்தாலு நீபோகா யென்றுமுள்ளாய் சும்மா
வருந்தாதே யின்பமுண்டு வா.

பொழிப்புரை :—நீ யொழிந்திட்டதான அந்த பெரு நிலைதானே நிட்டை யெனப்படும்; அந்நிட்டையினிற்ப, நீ அதிலில்லாமலில்லை; வகையறியாதோய்! இனியு மயக்கமா! வேண்டாம்; நீ சென்று அற்றிருந்த போதினும் நீ போதலில்லையாம்; எக்காலு முளவாவை; மீண்டும் மீண்டு வருந்துத லொழிந்திரு; சுகமுனக்குண்டாம்; வருவாயாக.

குறிப்புரை :—நீ யிறந்த வந்நிலையே நிட்டையாம்; அதின்கண் நீயே தானுள்ளாய்; ஆதலின் வருத்த மெய்தற்க; சுகோதய முளவாம்; வந்திடுவா யென்பது சாரம். (53)

௫௪. வாவாவென் றின்பம் வரவழைக்குங் கண்ணீரோ
டாவாவென் றேயழுத வப்பனே—நீவாடா
வெல்லா நமக்கெனவே யீந்தனையே யீந்தபடி
நில்லா யதுவே நிலை.

பொழிப்புரை :—வா, வா, யென்று சுகோதயத்தை யெழுப்புகின்ற கண்ணீரோடும் ஐயோவென் றோலமிட்டலறிய வப்பனே! நீ வந்திடுவாயாக, உடல் பொருளாவியனைத்தும் நமக்கென்றே அர்ப்பணஞ் செய்துவிட்டாயே! (இனி நினக்கேன் கவலை) நீ ஒப்படைத்த வண்ணமே நிற்பாய்; அதுவே நினக்கான ஒப்பற்ற நல்லவோர் பெரு நிலையாகும் என்பது.

குறிப்புரை :—இன்ப மெழுப்பும் ஆனந்த நன்னீராங் கண்ணீருடனே அய்யா வென்றழுத எனப்பனே! நீ வாடா; முப்பொருளும் ஒப்புவித்த மூத்தவனே! இனி நினக்கு அந்நிலையே நிற்கு நிலையாம். (54)

௫௫. நில்லாப் பொருளை நினையாதே நின்னையுள்ளோர்
சொல்லாப் பொருட்டிரளைச் சொல்லாதே—கல்லாத
சிந்தை குழைந்துசுகஞ் சேரக் குருவருளால்
வந்தவழி நல்ல வழி.

பொழிப்புரை :—அநித்தியமாயுள்ள பொருளெவற்றையும் நினைத்த லொழிக; நின்றனை யுள்ளாக்கியவர் சொல்லுமாறதாகப் பொருட் பலவற் றையும் புகலற்க; உயிர்க்குறுதி பயக்கும் நுட்ப முறையினைக் கற்றறியாத நின்னெஞ்ச முருகிச் சுகம் பெறுமாறு அருட்குருவின் திருக்கருணை கடா க்ஷத்தினாலே நீ வந்த முறையே நல்லவோர் நெறி யென்பாம்.

குறிப்புரை :—நிலையற்றன நினைதல் செய்யாய்; நின்போன்றார்க் குரி யதல்லா மொழியினைக் கூறாதே; இன்பம் பிறத்தற் கேதுவாக நெஞ்ச முருகநின்று குரு கிருபையாற் கொண்டநிலையே நன்னெறியாக் கொண்டு நிற்பாயாக. என்பது சாரம். சான்றாக :—

ஆழ்ந்தே கிடந்தேன் பவக்கட லி லனேககாலம் புகலின்றிச்
சூழ்ந்தே கருணை யாலெடுத்துத் தூரியக்கரையிற் சேர்த்தாய்க்கு
வீழ்ந்தே வீழ்ந்தே பணிந்திறைஞ்சி வியந்து வியந்து மகிழ்க்கடலில்
வாழ்ந்தேன் வாழ்ந்தேன் கைம்மாறு காணேன் வலியத் தடுத்தாய்க்கே.

என்றார் ஞான தேசிகரும். (55)

௫௬. வழியிதென்று மல்லா வழியிதென்றுஞ் சொல்லிற்
பழிபழிபா நல்லருளாற் பார்த்தோர்—மொழியுனக்கே
ஏற்றிருக்கச் சொன்னவன்றே யெங்கும் பெருவெளி
பார்த்தவிட மெல்லாநீ பார். [யாம்

பொழிப்புரை :—இதுவே நல்ல மார்க்கமென்றும், இது கெட்ட நெறி யெனவும் கூறின், அது பழித்தற்கேதுவான பழி மொழியாகும்; ஆதலால் மேலாம் கருணை கடாக்ஷஞ் செய்து ஒருவார்த்தையினை நினக்குப் பொருத் தமா யிருக்குமாறு உபதேசித்த அன்றைத்தினமே நீ பார்த்தவிட மெங்க ணும் பெருவெளியாய் இப்போது காணப்படும், பார் நீ யிப்போதே. என்பது.

குறிப்புரை :—நின்னைக் கருணையோடும் நோக்கி ஓர் அரியமொழி கூறியருளிய போதே யாண்டும் ஒரே பெருவெளியதாக் காண்டலாகும்; இதன்மேல் நன்னெறி தீயநெறி யென்னும் பேதபாவனை நினக்குத்தக்கதன் றாம். என்பது சாரம். (56)

ருள. பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளை
ஆருந் துறக்கை யரிதரிது—நேரே [யைப்போல்
மனத்துறவு மப்படியே மாறு விவற்றில்
உனக்கிசைந்த வாறொன்றே யோர்.

பொழிப்புரை :—பூமண்டல மடங்கலும் முழுப் பொய்யென்றே பட்டினத்தடிகளார் போன்று எவரும் துறவு பூணுதல் அருமை யருமையாம்; நேராக, நெஞ்சத்துறவு மவ்வாறே யாகும்; ஆதலினால், ஏ மாணவ! இவ்விருதுறவுள்ளும் நினக்கேற்றதாய ஓர் நெறியையே முதற்கண் ஆய்ந்தறிந்து அவ்வழி நிற்பாயாக, வென்பது.

குறிப்புரை :—இப்பிள்ளைப் பெரியார், துறவிரண்டினையும் ஒருபடித்தாயே கைக்கொண்டாரென்பது எவருமறுக்க வியலா விஷயமாகும்; ஆயினும், இசைந்தவாறொன்றென்றது இல்லத் துறவை முற்கொண்டு பின்னர் அதன்வழியாக வுள்ளத்துறவுங் கொள்ளக்கிடக்கின் சாதனைக்கு இலகுவாதல் நோக்கியே அங்ஙனம் உனக்கிசைந்த வாறொன்றே யோர் என்றார் போலும். இதனாற் சாதனைத் திறங் கருதி கூறின புலனாயதாம். (57)

ருஅ. ஓராம லேயொருகா லுன்னும லுள்ளொளியைப்
பாராம லுள்ளபடி பார்த்திருந்தால்—வாராதோ
பத்துத் திசையும் பரந்தெழுந்தா னந்தவெள்ளந்
தத்திக் கரைபுரண்டு தான்.

பொழிப்புரை :—நன்காராயாதும், யேகதேசமாக நினைவு கூறாமலும் உள்ளகத் தோங்கும் பரவொளியினை, பகிர்முகப் பார்வை கொள்ளாமல் உண்மையாக அகமுகமாய்ச் சதா நோக்கிவரின் பெரியதோர் சுகப்பிரவாக மானது மேலோங்கி பரவி கரை புறண்டு பத்துத் திசைக்கண்ணும் பாய்ந்தோங்கி வாராதோ!

குறிப்புரை :—வேறொன்றையும் பாராது உள்ளபடியாக எதிர்பார்க்க வேண்டியவற்றை யெதிர்நோக்கி யிருப்பின் இயல்பாய்ச் சுகோதயந் தோன்று மென்பதாயிற்று. (58)

ருகூ. தானான தன்மைவந்து தாக்கினு லவ்விடத்தே
வானாகி மாயை வழங்காவோ—ஞானகேள்
உன்னுள்ளே தோன்று வுறவாகி நின்றதெனை
யென்னுள்ளே யென்று மிரு.

பொழிப்புரை :—தான் என்கிற அகங்காரம் சேடித்தறுமேல் ஆங்கே ஆகாய முதலாயுள்ள மாயாகாரியாதிகள் நிகழமாட்டாவோ? ஏ ஞான வானே! கேட்பாய் ;—(யான்) நின்னகத்தே தோன்றுத் துணையுறவாயிருந்து வருவது போன்று நீ என்னிடத்தே எப்போதும் சும்மா யிருந்துவருவா யாக. என்பது.

குறிப்புரை :—தான் எனும் அகங்கார மமகார சேடிப்பு மேலுக்கு மேல் மாயாகாரியாதிகள் ஒவ்வொன்றாய் வந்து நலிவிக்குமே; ஆதல் கொண்டே, ஏ ஞானவானே! நான் நின்னகத்திருந்து வருவது போன்று இனி நீ யென்னகத்தே மருவி யிருந்து வருவா யென்பது சாரம். (59)

சா0. என்னையுன்னை யின்னதிது வென்னுமை நிற்குநிலை
தன்னையரு ளென்ற தருணத்தில்—அன்னைபெற்ற
பிள்ளைக்குஞ் சொல்லாத பெற்றிகண்டா யையனே
உள்ளத்தி னுள்ளே யுணர்.

பொழிப்புரை :—பரமபிதாவான ஐயனே! எனையும் நின்னையும், இது இன்னின்னதெனச் சுட்டிக்கூறுது நிற்கின்ற வோர் நிலையினை அருளிச் செய்வா யென்ற சமய நோக்கி, மாதாவானவள் தன் பிள்ளைக்கும் தெரிவிக் கக்கூடாத வோர் நிலைமையை நின் நெஞ்சகத்தேயே நிதரிசனமாகத் தெரிகு வாயாக. என்பது.

குறிப்புரை :—எனையும் நினையும் பிரிவாயுணராது ஒன்றுபட்ட தன் மையை அறிவித்தல் வேண்டுமென்ற சமயம் ஏற்படும் இன்பம் எதுவோ அதனை, பெற்ற தன் பிள்ளைக்கு மறிவியா பெரிய அரிய தாகு மென்பது புலப்படலாயிற்று. (60)

சாக. சொன்னவர்கா நிட்டை தொகுத்திரார் நிட்டையிலே
மன்னினவர் போகியார் மாமவுனன்—றன்னுள்
விருப்பாகக் கைகாட்டி மிக்கா வடநீழல்
இருப்பா னிருவிகற்பத் தே.

பொழிப்புரை :—ஜீவான்ம பரமான்ம ஒருமைப்பாட்டிற் றோன்றும் சிற்சுகோதயமானது உண்டான அக்கணத்தே, தன்னிலையுணராத பர மானந்தமாம் சொக்குதலாய் நிற்க நேருவதியல்பாதலின், அதனை யின்னண மென்றோதார் உள்ளபடி யறிந்தனுபவித்தவ ராதலான்; ஆகவே, மேற் பாசுர கருத்திற் கேற்க அவ்வனுபவ நிலையை, விவரித்தவராவார் யதார்த்த நிட்டையில் அநுபூதி செய்திருக்க மாட்டார்; உள்ளபடியே நிட்டையில்

பொருந்தி யனுபூதி செய்தவர் பிறர்க்கோதார்; மகா மௌன நிலையுணர்த்தும் இறைவனும், தன்னன்பு கொண்டு வடவால நீழலின்கண் மெய்யன்பர்கட்காக நிருவிகற்ப சமாதியாகத் தமது திருக்கரங்கொண்டு குறிப்புறவோதின தறிக.

குறிப்புரை :—நிட்டாபரராயுள்ளார் பிறர்க் கெடுத்துரையார். அங்ஙன முரைத்தார், நிஷ்டைபதியா ரென்றுணர்க; சான்றாகவே இறைவர் மௌனமாயிருந்து தம்மன்பர்க்காக முன்னே வடவால நிழலில், சொல்லாமல் திருக்கரங்கொண்டு காண்பித்தமை யறிக. (61)

௬௨. இந்த நிருவிகற்பத் தெந்தை யிருக்கநிட்டை
சிந்தைநீ தேறாய் செகமனைத்தும்—வந்ததொடர்ப்
பாடுகெட வன்றோவோர் பாத்திரத்துக் காடலல்லால்
ஆடுவதே தாட்டு மவன்.

பொழிப்புரை :—இத்தகைய நிருவிகற்ப சமாதியிலே எம் தந்தையாந் தக்ஷிணாமூர்த்தியார் நிட்டானுபரராய் விளங்க, அதுகண்ட நீ மனந்தெளிந்தாயில்லை; இப்பிரபஞ்ச மனைத்தும் தோன்றி வந்தவோர் பந்த தொடர்பானது கெடுமாறதாகவே ஓர் பாத்திரத்திற் காடலாகும்; ஈதல்லாது அவராடுவது எதற்காகவோ? ஆகவே, அவனே ஆட்டுகின்றா னென்பது தெளிவாயது.

குறிப்புரை :—இறைவன், மௌன சற்குரு நாதனாக வீற்றிருந் தருளிய ஞானமுத்திரையே அன்பர்கெல்லாம் அருண் முகமா யோதுவதாகவே யறிந்து கொள்க. (62)

௬௩. அவனே பரமு மவனே குருவும்
அவனே யகில மனைத்தும்—அவனேதா
மானவரே சொன்னு லவரே குருவெனக்கு
நானவனாய் நிற்பதெந்த நாள்.

பொழிப்புரை :—பராபரவத்துவும் அவனே யாகும்; சற்குரு நாதனும் அவனேதான்; அன்றி இந்தபிரபஞ்சாதிய வெல்லாம் அவனே யாகியுள்ளான்; அவனே தாமானவர்களே; சொல்லு மிடத்து, அவர்களே எளியேற்கு ஆசிரியராவர்; நான் அவனாயமையுங்காலம் எக்காலமோ? என்பது.

குறிப்புரை :—எல்லாமா யல்லதுமா யிருந்ததனை யிருந்தபடி யிருந்து காட்டிச் சொல்லாமற் சொன்ன சுகநிட்டை சேர்தல் எக்கால மென்பதாம். (63)

௬௪. நாளவங்கள் போகாம னுடோறு நந்தமையே
ஆளவந்தார் தாளின்கீ ழாட்புகுந்தாய்—மீளவுன்னைக்
காட்டாம னிற்குங் கருத்தறிந்தா னெஞ்சேயுன்
ஆட்டாளு னையமில்லை யால்.

பொழிப்புரை:—நமக்குரிய காலம் வீணிலே செல்லாதபடி தினே தினே நம்மையே காருணியத்தினாலே ஆட்கொள்ளவந்த அருட்குருவினது திவ்ய திருவடிக் கமலங்களின் கீழாக ஆட்படுத்தினாய்; மீண்டும் நின்னைக் காண்பியா வண்ணம் நிற்குங் காரியத்தை நீ நன்கு தெரிந்தாயானால், ஏ மனமே! யான் நின் ஆளாவது நிச்சயமே; இதிற் சிறிதும் சம்சய மில்லையாகும்.

குறிப்புரை:—நெஞ்சமே! நம் வாழ்நாளானது வீணாகா வண்ணமாக வந்த அருட் குருவின் பாத கமலங்களின் கீழே அடிமைப் பட்டமர்ந்தாய்; இனிமேல் நீ நின்னை விளக்கா வண்ணமான கருத்தறிவையேல் யான் நினக் கடியவனே; இது உண்மை, ஐயப்படாதே. "வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன், வாழ்நாள் வழியடைக்குங்கல்" என்றார் பெரியார். (64)

௬௫. யான்றா னெனலறலே யின்பநிட்டை யென்றருணைக்
கோன்றா னுரைத்தமொழி கொள்ளாயோ—தோன்றி
யிழுக்கடித்தாய் நெஞ்சேநீ யென்கலைகள் சோர
அழுக்கடிக்கும் வண்ணார்போ லாய்.

பொழிப்புரை:—'யான்தான்' என்னும் முனைப்புமொழி நின்னை விட்டொழிவதே சுகநிட்டையாம் என்று அருணகிரியப்பன் கூறிய வோர் பொன்மொழியைக் கொண்டிலையோ! யெனக்கெனவுண்டாய மனமே! எனது வத்திரங்கள் சோரத்தக்கதாக அழுக்கற வடிக்காநின்ற வண்ணரைப்போன்றே நீ யென்னையும் இழுக்கடித்து விட்டனை.

குறிப்புரை:—மனமே! 'யான்தான்' என்பது நீங்கி நிற்றலே சுக நிட்டை யென்பதாக அப்பன் அருணகிரியார் அன்றறைந்த அருமொழியை நன்றெனக் கொண்டிலையோ! வண்ணாரைப்போல என் கலைகள் சோரும்படி இழுக்கடித்து விட்டாயே என்பது. (65)

௬௬. எங்குஞ் சிவமே யிரண்டற்று நிற்கினெஞ்சே
தங்குஞ் சுகநீ சலியாதே—அங்கிங்கென்

றெண்ணாதே பாழி லிறந்து பிறந்துழலப்
பண்ணாதே யானுன் பரம்.

பொழிப்புரை :—மனமே! நீ இரண்டென் றெண்ணாது எங்கணும் சிவம் ஏகமே யென்றிருந்தாயானால், நினக்குச் சுகோதய முண்டாம்; ஆதலின் நீ சலிப்புறாதே! அங்கேயுளது, இங்கேயிலது என்று எட்டுணையு மெண்ணற்க; வீணே பிறப்பிறப்பால் கிடந்துழலுமாறு செய்யற்க; யான் நினக்கே அடைக்கலமாவேன். என்பது.

குறிப்புரை :—மனமே பார்க்குமிட மெங்கணுங் கோத்த நிலைகுலையாது பரிபூரணமாய் விளங்குவது சிவமயமேயாம்; நமக்குச் சுகோதயம் சித்தியாகும்; ஆதலின் நீ சலித்தலொழிக! ஆண்டுள்ளது; ஈண்டில்லது எனக் கோடல் குற்றமாம்; பிறத்த லிறத்தலாதிய துன்புறச் செய்யற்க; யான் அபயம் நினக்கே என்பது. (66)

சுஎ. மெய்யைப்பொய் யென்றிடவு மெய்யனையாய் பொய்ந்
நெஞ்சே
பொய்யைத்தான் மெய்யெனவும் போகுமோ—வையமறத்
தன்மயத்தை மெய்யெனவே சார்ந்தனையே லானந்தம்
என்மயமு நின்மயமு மே.

பொழிப்புரை: —இச்சரீரத்தை யான் பொய்யென்று சொல்லவும், அம்மெய்யினை யுணரகில்லாப் பொய் மனமே! பொய்யினையே மெய்யென்றுரைக்கப் போமோ! ஆகவே, சந்தேக விபரீத மின்றியே தன்மயமாம் பரம் பொருளினை மெய்யாக வெண்ணிச் சார்ந்தொழுகினால் என் சொரூபமும் நின்சொரூபமும் சுக ரூபமே யாகும் என்பது.

குறிப்புரை :—மனமே! உண்மையைப் பொய்யெனவும், பொய்யினை உண்மையெனவும் கூறுவதடாது. சந்தேகம் நுந்தேகம் விட்டொழிவான் வேண்டி, தன்மய சொரூபத்தை உண்மை யென நம்பியதனைச் சார்வையேல், யென்னம்சமும் நின்னம்சமும் ஆனந்தமயமே யாகும் போது விளங்கும் என்பது. (67)

சுஅ. பூங்கா வனநிழலும் புத்தமுதுஞ் சாந்தபதம்
வாங்காத வானந்த மாமழையு—நீங்காவாஞ்
சொல்லிறந்து மாண்டவர்போற் றாமெளன பூமியினு
னில்லையென நின்ற விடம்.

பொழிப்புரை :—வாய் வார்த்தை யொழிந்து மவுன முற்றவர் போல பரிசுத்தமாம் மோன நிலையிலே நானில்லை யென்றே நிலைபெற்ற மவுன பூமிக்கண் கற்பகப் பூஞ்சோலை நன்னிழலும் புதியதான தேவாமிர்தமும் சாந்தமுமே நிறைந்துள்ளதான பேரின்ப மாரியும் என்றும் நிலவப்பெற்றதாகும் என்பது.

குறிப்புரை :—நான் என்னும் முனைப்பொழிந்து மோன நிலமேவி யுள்ள மெய்ஞ்ஞானியர்களுக்கு தேவேந்திர பதவியும் முத்தியும் மற்றுள்ளனவும் சித்தியாகு மென்பது சாரமாம். (68)

சாகூ. இடம்வான நல்லபொரு ளின்பமெனக் கேவ
லடங்காக் கருவி யனைத்தும்—உடனுதவ
மந்தார தாருவென வந்து மவுனகுரு
தந்தானோர் சொற்கொண்டு தான்.

பொழிப்புரை :—இவ்வெளியேனுக்கு மேலான இடமும் நல்லதான பொருள் சுகம், ஏவல் இவைகளோடும் மற்றும் அநேகமான கருவிகளெண்ணிலவாகவும் உடனே கொடுத்தருள்வதற் கென்றே மோன குரு நாதன் மந்தார விருக்ஷம்போன்றே வந்தருளி ஓர் வார்த்தையைக் கொண்டே எல்லாமும் கொடுத்தருளினன் என்பது.

குறிப்புரை :—ஸ்ரீ மோனானந்த தேசிகோத்தமன் எழுந்தருளி வந்தே எளியனுக்கு இடம் பொருளேவலாதியன வனைத்தும் அநுக்ரகித்தானென்பது சாரம். மந்தாரம் - தேவதாருக்களில் ஒன்றாகும். தேவரும் வணங்கும் ஞானியர் பெருமையை யாவரே யளப்பர்! (69)

எ0. தானந் தவஞ்ஞானஞ் சாற்றரிய சித்திமுத்தி
ஆனவையெல் லாந்தாமே யாகுமே—மோனகுரு
சொன்னவொரு சொல்லாற் சுகமா யிருமனமே
இன்ன மயக்கமுனக் கேன்.

பொழிப்புரை :—கொடை யென்ன, தவ மென்ன, மெய்ஞ்ஞான மென்ன, சொலற்கரிய சித்தி முத்திகளென்னு மிவைகளென்ன ஆகிய இவை யெல்லாம் இயல்பாகவே யமையும்; மௌன தேசிகன் ஓதிய ஓர் வார்த்தை யினாலே ஏ நெஞ்சமே சுகமாயிருப்பாய்; இனியும் நினக்கு மயக்க மெதற்காக என்பது.

குறிப்புரை :—வஞ்சமிலா நெஞ்சமே! மோன தேசிக னோதியருளிய ஓர் சொற்கொண்டு சும்மாயிருந்துவரின் தானந் தவமாதிய வனைத்தும் நினக்கமையு மென்பது சாரம். (70)

எக. உன்னை யுடலை யுறுபொருளைத் தாவெனவே
என்னை யடிமைக் கிருத்தினான்—சொன்னவொரு
சொல்லை மறவாமற் றோய்ந்தாலெனஞ் சேயுன்றன்
வில்லை பிறப்பதெனக் கே.

பொழிப்புரை :—அறிவாகாரமாய நின்னையும், நினக்கிடனான சரீரத்தையும், இவைக்கென அபிமானித்துள்ள இதர பொருள்களையும் கொடுக்க வேற்றுக்கொண்டு எனைத் தன்னடிமைக்காகப் பெற்றுத் தொண்டியற்றச் செய்த அருளாளன் கூறியருளிய வோர் பேருரையினைச் சிந்தை வைத்தநுபூதி செய்து வருவையேல் ஏ மனமே ! நின்னால் எளியேற்குப் பிறந்திறத்தலாதிய பெருவாருதி நீந்தலில்லையாகு மென்றறிகுதி. என்பது.

குறிப்புரை :—நெஞ்சே ! என் உடல் பொருளாவிகளைப் பெற்று எனை அடிமையாக் கொண்டருளிய அருண்மய வாசான் கூறியருளிய வோர் அரிய திருமொழியினை மறவாமே மனத்தகத் திருத்தி அநுபூதி செய்தியேல், நின்னால் யான் பிறவியறுவேன் என்பது. (71)

எஉ. எனக்கு முனக்குமுற வில்லையெனத் தேர்ந்து
நினைக்கவரி தான வின்பநிட்டை—தனைக்கொடுத்தே
ஆசான் மவுனி யளித்தானெனஞ் சேயுனையோர்
காசா மதியேனான் காண்.

பொழிப்புரை :—அடிமைக்கும் தனக்கும் உறவாந் தன்மையிலையெனத் தெளிவு கொண்டே எண்ணுதற் கருமையான சுக நிட்டையைத் தண்ணருட் குருவாமிறைவன் மௌனியாய் வந்தருளிச் செய்தனன் ; ஆகையால் ஏ மனமே ! நின்னை யினியான் ஓர் காசுக்கு மதிக்கமாட்டேன் என்பது.

குறிப்புரை :—இனி, யெனக்கு முனக்கும் பந்தத்துவ மில்லையென்று, கிடைத்தற்கரிய சுகநிட்டையை மவுன குருநாதன் எனக்கருளினதின் மேல் யான் நினையோர்போது மதியேன் என்பது.

காயந் துவளாமற் கரண மசையாமல்
வாயும் பதையாமன் மாற்றியே—நேயத்
தறிவானந் தத்தி லரைக்கண நின்றாலும்
பிறவார் சிவனேனை பின்.........என்னும் இப்பெரியார் மொழியே பெரிதாய்க் கொண்டுணரற் பாற்று. (72)

எந. ஆனந்த மோனகுரு வாமெனவே யென்னறிவின்
மோனந் தனக்கிசைய முற்றியதாற்—றேனுந்து

சொல்லெல்லா மோனந் தொழிலா தியுமோன
மெல்லாநன் மோனவடி வே.

பொழிப்புரை :—மௌனானந்த தேசிகராவார், பரமானந்த நிட்டை யுண்டா மென்றபோதே என்னறிவின்பால் மௌன நிலைக்கு ஏற்றவாறாக முடிவுற்றது ; எங்ஙன மெனின், தேவெனவே உருசிகரிக்கின்ற வார்த்தை யனைத்தும் மௌன சொரூபமாகவே யமைந்தது ; அன்றிக் காரியாதிகளும் மௌனமே யாயிற்று ; அதுபற்றிய செயலாதியனவு மௌனமேயாம் ; எனையவும் மவுன சொரூபமேயாம் என்பது.

குறிப்புரை :—மோன தேசிகர் என்னறிவறிந்து, சுக நிட்டையுண் டாதலை யோதியபடியே நிகழ்ந்தமை யான் என் வார்த்தை முதலாயுள்ள வெல்லாம் மவுன நிலையையே கைக்கொண்டனன்.

சீடனறி வெவ்வளவோ வவ்வளவுஞ் சிந்தித்துக்
கூடுமுப தேசங்கள் கூறுவா—னீடுபுக
ழுக்கமுடைச் சீராம னெண்ணுதற்கா யன்றெய்தான்
காக்கைக்குத் தக்க கணை.........என்னும் பெரியார் மொழியுங் கண்டு சான்றாக் கோடல் மரபாம். (73)

எசு. எல்லாமே மோனநிறை வெய்துதலா லெவ்விடத்தும்
நல்லார்கள் மோனநிலை நாடினார்—பொல்லாத
நானெனவிங் கொன்றை நடுவே முளைக்கவிட்டிங்
கேனலைந்தே தன் மோனகுரு வே.

பொழிப்புரை :—யாவையுமே மௌன வமைதியினை யெய்தி நிற்ற லான் நல்லோராவார் எங்கணும் மௌனத்தையே உபயோகிக்க லாயினர் ; ஆகவே, பொல்லேனாகிய யான்மட்டும் 'நான்' என்பதை மத்தியில் தோன்ற விட்டு இவ்வுலகின் கண்ணே அலக்கழிவது எது பற்றியோ ! மௌன தேசிகோத்தமனே ! என்பது.

குறிப்புரை :—கண்டு, நல்லார் - ஞானப் பிரசாதியர் என்க. இந் நல் லோரெல்லாம் மௌன நிலையையே சாதனைக்குரிய சாதனமாக் கொண்டார் கள் ; இப்பேதையன் மட்டும் யானெனத் திரிந்துழன்று வீணே நிஷ்பிர யோசனனாயினேன்

ஆணவத்தாற் பட்டதுப ராற்றநிலே னந்தோகோ
வீணவத்தை யென்றொன்று வீயுமோ—மாணவத்தை
வேறென் றறிந்த விவேகமே ஞானத்தின்
கூறென்று சொன்னான் குரு.........என்ற மேலோர் கூற்றை மிகவும் பாராட்டுக. (74)

எரு. மோன குருவளித்த மோனமே யானந்த
ஞான வருளுமது நானுமது—வானாதி
நின்ற நிலையுமது நெஞ்சப் பிறப்புமது
வென்றறிந்தே னானந்த மே.

பொழிப்புரை :—மௌன தேசிகன் திருவாய் மலர்ந்தருளிய மௌன நிலை யொன்றே பரமானந்த மாயது ; எங்ஙன மெனின், ஞானஸ்பதமாய திருவருட் பிரசாதமும் அதுவேயாகும். யானும் அதுவேயாம் ; அன்றி, ஆகாயாதிய பூதாதிகள் இயங்கற்கு ஸ்தான மாயுள்ளதும் அப்பொருளே யாகும். இன்னும் மனமாதி தோன்றற்குத் தாயகமா யுள்ளதும் அதுவேயா யிருக்கின்றது ; என்றிவை யாதியனவு முணர்ந்தனன் ; இங்ஙனம் பேரறி விற் பிறங்கிய பின்னர் அனைத்தும் பரானந்த மயமாயே காணப்படுகின்றன. என்பது.

குறிப்புரை :—தவமுனி போற்றும் மவுன குரவன் ஓதிய நிலை யொன்றே சுக நிலைக்களமாயது ; எவ்வாறெனின், ஞானவருணிறைவும், அது பெறுவான் வேண்டும் எளியனும் வெளியாதியன நிலைபெறற்குரிய ஸ்தானமாயதும், மனந்தோற்றற் குரியனவு மாதலாலேயேயாம் என்பது சாரம்.

எவ்வுயிர்க்கும் போத மிறையென் றறிதலே
செவ்வே சிவதரிசனம்,.........
அந்தச் சிவ நம்மை யன்றியிலை யென்றோர்தல்
உந்துஞ் சிவயோக மோர்.........
என்றார் மேலோர். (75)

எசு. அறிந்த வறிவெல்லா மறிவன்றி யில்லை
மறிந்த மனமற்ற மவுனஞ்—செறிந்திடவே
நாட்டினா னானந்த நாட்டிற் குடிவாழ்க்கை
கூட்டினான் மோன குரு.

பொழிப்புரை :—அறிந்துள்ளதான எல்லா அறிபொருள்களும் அவ் வறிவு மயமன்றி மற்றொன் றன்றாகும் ; ஆகவே திரும்பின மனமொழிந்த மோன நிலை பொருந்திடவே மௌனகுருவே என் நெஞ்சகத்தே நிலைப்படு மாறு இன்பமாம் நாட்டில் வாழுங் குடிபோன்று கிருபை செய்தருளி எனைச் சேர்த்து வைத்தருளினான் என்பது.

குறிப்புரை :—ஆன்மாக்களிடத்து அன்பே உருவாக் கொண்டமர்ந் தருளி எழுந்தருளிவரும் குருநாதன் பெருந்தயவினால் எனை ஆனந்தமாய

நாட்டகத்தே ஓர் குடித்தனக்காரனு யமைத்தருளினார் ; இனி யானுணர்ந்தன வனைத்தும் என் போத நிலையினவே என்பது நிலை பெற்றது. (76)

எஎ. குருவாகித் தண்ணருளைக் கூறுமுன்னே மோனு
உருநீ டுயிர்பொருளு மொக்கத்—தருதியென
வாங்கினையே வேறுமுண்மை வைத்திடவுங் கேட்டிடவும்
ஈங்கொருவ ருண்டோ வினி.

பொழிப்புரை :—சற்குரு நாதனும் வந்து தண்மையாந் திருவருளின் நிலைமையை உபதேசித்தற்கு முன்னர், ஏ மௌன குருவே ! இவ்வுடம்பையும், நிலையான ஆன்மாவையும், பொருளினையும் ஒருங்கே கொடுத்திடுவாயென்று பெற்றுக் கொண்டாயே ! பின்னும், உண்மையைக் கேட்கவும் உபதேசிக்கவுமாக இங்கே மற்றொருவருண்டாங் கொல்லோ ! என்பது.

குறிப்புரை :—சற்குருநாத ! தேவரீர் குருமூர்த்தமாக வந்து எளியேற் கோதியிடற்குமுன்னமே என்னுடல் பொருளாவிகளைக் கொடுப்பாயென்று பெற்றுக் கொண்டனையே ! இனி உண்மை நிலையோதவும் மற்றுமென்பால் கேட்பன கேட்கவும் இங்ஙன் எவரேனு முளராவரோ ? இல்லை என்றபடி. (77)

எஅ. இனிய கருப்புவட்டை யென்னுவி விட்டால்
நனியிரத மாறுது நானுந்—தனியிருக்கப்
பெற்றிலேன் மோனம் பிறந்தவன்றே மோனமல்லாற்
கற்றிலே னேதுங் கதி.

பொழிப்புரை :—இனிக்கத்தக்க கரும்பு வெல்லக் கட்டியினை எனது நாவிலே பொருந்த, மிக்க ரசமானது சிறிதும் மாறுபடாவாம் அதே போன்று, யானும் தனியே யிருந்து பெரு வாழ்வெய்த மௌனத்தைப் பெற்றேனல்லேன் ; ஆனல் ஜெனித்தது முதலாகவே மௌனமல்லாது யாதேனும் கதி பெறுதற்குரியதைக் கற்றறிந்ததே யின்றாம் என்பது.

குறிப்புரை :—என்னை இவ்வாறு வஞ்சித்தற்காகவேதான் போலும் முன்னதாக வாய்பேசாது பூட்டிட்டருளியது என்பது சாரமாம். (78)

எகூ. ஏதுக்குஞ் சும்மா விருநீ யெனவுரைத்த
சூதுக்கோ தோன்றுத் துணையாகிப்—போதித்து
நின்றதற்கோ வென்னையா நீக்கிப் பிரியாமற்
கொன்றதற்கோ பேசாக் குறி.

பொழிப்புரை :—எவைக்கும் சும்மாயிரு நீ யென்று ஓதிய வஞ்ச வார்த்தைக்கோ, இன்றியமையாப் போதனை செய்ததற்கோ, என்னையனே! எனையகற்றிப் பிரியாது கொன்றதற்குத்தானோ இவ்வாறு பேச்சற்றிருக்கு மாறு செய்த அடையாளம்? என்பது.

குறிப்புரை :—என்னை யெவைக்கும் பேச்சற்றிருக்குமாறு செய்தது தாம் விளைத்த வஞ்சம் கொஞ்சமும் வெளிவராமைக்குத்தானோ என்பது. (79)

அ௰. குறியுங் குணமுமறக் கூடாத கூட்டத்
தறிவறிவாய் நின்றுவிட வாங்கே—பிறிவறவுஞ்
சும்மா விருத்திச் சுகங்கொடுத்த மோனநின்பாற்
கைம்மாறு நானொழிதல் காண்.

பொழிப்புரை :—போதிய சின்னமும் குணபாவமும் அமையப் பெறாத கூடவொண்ணா கூட்டத்திலே என் அறிவும் அறிவுமயமாகவே நிற்க, அஞ் ஞான்றே பிரிதலிலாது சும்மா விருக்கும்படி யாக்குவித்துச் சுகமளித்த மவுனசிரியனே! நினக்கு யான் செய்தற்கான பிரதியுபகாரமானது நான் என்பதை யொழித்தலேயாகும் என்க.

குறிப்புரை :—குணபாவமும் குறியுமறாக் கூடாக் கூட்டத்தின்கண் என்னறிவு அறிவுமயமாய்நிற்க, அக்கணமே நீங்குதலின்றிச் சும்மாவிருக்கு மாறமைத்துச் சுகமளித்த மோன குருவே! நானென்பதை யொழித்தலே நினக்கான பிரதியுபகார மாகும் என்பதே சாரமாகும். (80)

அ௧. நான்றா னெனுமயக்க நண்ணுங்கா லென்னுனை
வான்றா னெனநிறைய மாட்டாய்நீ—யூன்றாமல்
வைத்தமவு னத்தாலே மாயை மனமிறந்து
துய்த்துவிடு ஞான சுகம்.

பொழிப்புரை :—மனமே! நான்தான் என்கின்ற மோகம் வந்து யெனை யடையும்போது என்மேலாணையாக நீ ஆகாயமொத்து பரிபூரணத் துவம் பெறமாட்டாய், எவற்றினும் பதிந்து நிற்றலில்லா மௌன நிலை யினால் மாயா சொரூபமான மனமே! நீ உன்னில் அடங்கி ஞானானந்த மடைவாயாக. என்பது.

குறிப்புரை :—மனமே! நான்தான் எனும் மயக்குறின் நீ பரிபூரண மாகாய்; ஆகவே நீ யெவற்றினும் பற்றி நில்லாது அருட்குரு வைத்தரு ளிய மோன நிலையி லொடுக்கமுற்று அறிவானந்த மெய்துவாய். என்பது. (81)

௮௨. ஞானநெறிக் கேற்றகுரு நண்ணரிய சித்திமுத்தி
தானங் கருமந் தழைத்தகுரு—மானமொடு
தாயெனவும் வந்தென்னைத் தந்தகுரு வென்சிந்தை
கோயிலென வாழுங் குரு.

பொழிப்புரை :—மெய்ஞ்ஞான மார்க்கத்திற்குத் தக்கதான ஆசானும், மற்றும் நான் பெறுதற்கரியனவாய சித்தி முத்தியாதிகளும், இன்னும் தானதர்மாதியனவும் செழிப்புறச்செய்த ஆசானும், மற்றும் பெருமையுடனே அன்னைபோன்று வந்தருளி யென்னைப் பெற்ற பேராசிரியனும் எவரென்றால், என் மனத்தையே கோயிலாக் கொண்டுள்ள மௌன தேசிகோத்தமனே யாவன்.

குறிப்புரை :—ஒப்பற்ற மௌன தேசிகனே மேலான ஞான மார்க்கத்திற்கு யேற்றவரும், சித்தி முத்திக்குரிய காரணனும், தானதர்மாதி விருத்திக்கிடமான குருவும், தாய்போன்று வந்தருளி எனைக்காத்தருளிய பரம குருவு மாவாரென்பது. (82)

௮௩. சித்துஞ் சடமுஞ் சிவத்தைவிட வில்லையென்ற
நித்தன் பரமகுரு நேசத்தாற்—சுத்தநிலை
பெற்றோமே நெஞ்சே பெரும்பிறவி சாராமற்
கற்றோமே மோனக் கரு.

பொழிப்புரை :—மனமே! சேதனு சேதனப் பொருள்கள்யாவும், ஒப்பற்ற தற்பர சிவத்திற் கன்னிய மில்லாதனவே யென்று எளியேற் கெடுத்தோதியருளிய நித்தியத்துவ பரமாசிரியரது விசுவாச விசேஷணத்தானே மிகவும் பரிசுத்தமான பெருநிலையினைப் பெற்றுய்ந்தோம்; இனி, கொடிய பிறந்திறந்துழலற் கேதுவின்றிய மௌனக் கொள்கையினைக் கைக்கொண்டு விட்டோம்! என்பது.

குறிப்புரை :—மனமே ! சித்துப் பொருள்களும் சடப்பொருள்களும் சிவத்தின் மாயையால் தோற்றமான காரணத்தானே சிவத்திற்கன்னிய மில்லையென்றோதினர். இவ்வரிய வுண்மைத் தத்துவ மர்ம தர்மத்தை நம்பால் விசுவாசத்தோடும் எடுத்தோதியருளிய பரமாசிரியர் தம் பரம கருணை விசேஷத்தினாலே பவசாகரங் கடத்துவிக்கும் மோன முத்திரையுங் கற்று விட்டோம்; உய்ந்தோம்! உய்ந்தோம் !!

சித்து - அறிவுள்ளது. அசித்து - அறிவற்ற சடபதார்த்தமாம். (83)

## ஏ ச ற் ற வ ந் நி லை

கோச்சகக் கலிப்பா

க. ஏசற்ற வந்நிலையே யெந்தைபரி பூரணமாய்
மாசற்ற வானந்த வாரி வழங்கிடுமே
ஊசற் சுழல்போ லுலகநெறி வாதனையாற்
பாசத்துட் செல்லாதே பல்காலும் பாழ்நெஞ்சே.

பொழிப்புரை :—பாழான மனமே! குறை கூறலின்றிய அம்மௌன நிலையில்தானே, ஒப்பற்ற நம் பரம பிதாவானவர், நமக்குப் பரிபூரணமான தும், யாதாமோர் குற்ற மில்லாததுமான பரமானந்தப் பெருக்கத்தைக் கொடுத்தருளுவர், ஆதலால் நினக்கு நான் ஒன்று சொல்லுகின்றேன். அதாவது—சுழலும் ஊஞ்சல் போன்று பிரபஞ்ச நடக்கையாம் கஷ்டத் தினாலே பலவாறாக ஆசாபாசக்கட்டினுள் அகப்பட்டுத் துன்புறாதே. என்பது.

குறிப்புரை :—ஈண்டு, 'ஏசற்றவந்நிலை' யென்பதற்கு கருவி கரணாதி கள் ஒடுங்கி நிற்றலாய நிலை யென்பதும் பொருந்தும்; மோனமே சகல நன்பதவிகளுக்கும் ஆஸ்பதமாதலின் அந்நிலையை விட்டு வீணாக உலகா பாசத்தளைபட் டழியாதே யென்று மனதிற் கறிவுறுத்திய பான்மையாம். பாசம் நாசத்துக் கேதுவாதல் நோக்கி அங்ஙனங் கூறலாயின ரென்பது விகசிதம். (1)

உ. பாழாகி யண்டப் பரப்பையெல்லாம் வாய்மடுத்தும்
ஆழாழி யின்பத் தழுந்தப் படியாயோ
தாழாயோ வெந்தையருட் டாட்கீழ்நெஞ் சேயெனைப்போல்
வாழாது வாழ்ந்தழியா வண்ணா மிருப்பாயே.

பொழிப்புரை :—மனமே! நீ இதுகாறும் வீணாக உலக விவகாராதி களை யெல்லாம் வாய் கொண்ட மட்டும் பேசித்துலைந்தும், இனியாவது, மிகவும் ஆழ்ந்ததான பேரின்பமாம் பெருஞ் சாகரத்தின்கண் படிந்து நிற்கக் கற்றறியாயோ! அன்றி, எம் அரிய பரம பிதாவின் திருவருட்டாளின் கீழமர்ந்து பெரு வாழ்வெய்தாயோ! இங்ஙனஞ் செய்தியேல், எனைப் போலவே பதிவாழ்வெய்தி நித்திய சூரியாவா யென்பது.

குறிப்புரை :—மனமே! நீ யென்றுங் குன்றா நித்தியானந்தக் கடலில் அமிழ்ந்து பேரின்பெய்தற்குரிய கல்வியைக் கற்றறிகுவாய்; அதோடும் நில்

லாது, எம்மான்றனிணையடிக்கன்பு செய்வாய்; இவ்வாறுன நன்னிலைக்கண் பொருந்துவையேல் பொன்றாப் புகழுமெய்துவாய். (2)

௩. இருப்பா யிருந்திடப்பே ரின்பவெளிக் கேகமக்குக்
குருப்பார்வை யல்லாமற் கூடக் கிடைத்திடுமோ
வருட்பாய் நமக்காக வாளவந்தார் பொன்னடிக்கீழ்
மருட்பேயர் போலிருக்க வாகண்டாய் வஞ்சநெஞ்சே.

பொழிப்புரை:—நிலைபெற்றிருத்தற்கு, நமக்குச் சற்குரு கடாக்ஷமென்னும் திருவருட் பார்வையின்றி லபிக்குமோ? அன்றிப் பரானந்தப் பரவெளியாம் நன்னிலையும் கிட்டுமோ? நம் பொருட்டாகத் திருவருள் புரிந்து ஆட்கொள்ளவந்த எம்பெருமானது பொற்றாண் மலரின் கீழாக சாமானிய பித்தினர் போன்று வாழ்தற்கு வஞ்சகமாய நெஞ்சகமே, வருவாய்.

குறிப்புரை:—மனமே! பரானந்தப் பரவெளிக்கண் மேவி வாழ்தற்காக ஆசான் திருவருள் நமக்கு அத்தியாவசியமாம்; ஆதலினாலே நம்மை அன்பு மீக்குற்று ஆண்டருள்வான் வந்தருளிய அருட்குருவின் திருவடிக் கமலங்களின் கீழே வாழ அலகை போன்றார்போ லமைந்து கிடப்ப வருவாய் என்பது.

பாசத்தாற் பாசியாகிப் பலபல பிறப்பிற் சென்று
பாசத்தாற் பிறந்திறந்து பலபல போகந் துய்த்த
பாசத்தைத் தாளாற்போக்கிப் பதித்துவம் பதித்த நாதன்
பாசத்தை நினையுந்தோறும் பசுத்துவங் கழலுமன்றே.—என்றார்

பன்னூலுணர்ந்த பரம குருவும். (3)

௪. வஞ்சமோ பண்டையுள வாதனையா னீயலைந்து
கொஞ்சமுற் றாயுன்னைக் குறைசொல்ல வாயுமுண்டோ
வஞ்சலஞ்ச லென்றிரங்கு மானந்த மாக்கடற்கீழ்
நெஞ்சமே யென்போல நீயழுந்த வாராயோ.

பொழிப்புரை:—ஈதென்ன வஞ்சமோ! பழய வாசனை பழக்கத்தினாலே நீ பலவாறாக அலைப்புண்டு திரிந்துழன்று கீழ்மை பெற்றாய்! நின்னைக் குறை சொல்லுதற்கு வாயும் வாராது! என் செய்வல்! இனியேனும், பயப்படாதே! பயப்படாதே யென்றிரங்கும் பரானந்த சாகரத்தின்கண் படிந்து வாழ்தற் பொருட்டு மனமே! நீ என்னைப் போன்று வந்தருளாயோ!

குறிப்புரை :—நெஞ்சமே! உன்மீது கொஞ்சமும் வஞ்சமின்று! ஆயினும் என் செய்வாய்! ஜென்மாந்தர வாசனை வயப்பட்டு கெட்டனை, பழி கூற வசமன்று; அஞ்சேலென்று அபய சப்தத்தோடுங் கூடிய ஆனந்தக் கடலனையான்றன் இணையடிக்கே என்றும் நீங்காத் தொண்டு ஏற்றி வருவாய் என்றது. சான்றாக :—

கல்லாலின் கீழிருந்த கண்ணுதலை பாமேரு
வில்லாற் புரமெரித்த வேதியனைச்—சொல்லாமற்
சொல்லிப் பிறப்பறுத்த தூயவனை நன்னெஞ்சே
சொல்லிப் பல்காலுந் தொழு.—

என்றார் கற்றல் கேட்டலுடையார். (4)

ரு. வாரா வரவாய் வடநிழற்கீழ் வீற்றிருந்த
பூராய நம்மைப் புலப்படுத்த வேண்டியன்றோ
ஓராயோ நெஞ்சே யுருகாயோ வுற்றிருந்து
பாராயோ வவ்வுருவைப் பார்க்கநிறை வாய்விடுமே.

பொழிப்புரை :—வருதற்குக் கிடைக்கா அரியவரவாய் கல்லால விருக்ஷ நீழலின்கண் வீற்றருளியது, பூர்வோத்தரத்தை நமக்குத் தெரிவிப்பான் வேண்டியல்லவோ! மனமே நீ அதனை நண்குணராயோ? அக்கருணையை நினைந்துருகுதல் செய்யாயோ! எதிர் நோக்கி யிருந்து பார்ப்பாய்! அங்ஙனம் ஒரு மனதாய்ப் பார்ப்பையே யானால் நீ நிறைவெய்துவாய்; அஃதாவது பரிபூரணப் பொருளாவை யென்பதாம்.

குறிப்புரை :—மனமே! நம் பரம்பொருளார் கல்லால நீழலிற் கவின் பெற வாழ்தல், நம்போன்றாரைத் தம்போன்று நிட்டை புரியுமாறாக்குவித்தற் பொருட்டாமே! அவ்வற்புத நிலையினை நீ நன்குய்த் துணர்வையேயாயின், அவ்வுண்மை வெளியாய் நமக்குரிய சாதனங்களனைத்தும் கைகூடிவிடுமே!

கல்லா லமர்ந்தாரைக் கண்மூன் றுடையாரைச்
சொல்லாமற் சொல்லவந்த தூயாரைப்—பல்காலுஞ்
சிந்தி சிவோகஞ் சிவோகஞ் சிவோகமென
வந்தி பிறப்பறு மாறு.................என்றார் பெரியார். (5)

சா. வாயாதோ வின்பவெள்ளம் வந்துன் வழியாகப்
பாயாதோ நாலும் பயிராய்ப் பிழையேனோ
ஓயாம லுன்னி யுருகுநெஞ்சே யந்நிலைக்கே
தாயான மோனகுருள் சந்திக்க வந்திடுமே.

பொழிப்புரை :—மனமே! நமக்குச் சுகோதயந் தோன்றுவோ! நின் மூலமாக வந்தெய்தாவோ! (அதற்காகக் காத்திருந்த) யானும் அந்நெறி கண்டு நினது பயிர்போல பரசுகானந்தம் பற்றியுய்ய மாட்டேனோ? அன்றி இடை விடாது நினைவு கூர்ந்து உருகுவாயாக; அந்நிலைக்காகவே மௌன குருவானவர் தாய் போன்று கருணையாளராய் வந்தருளுவரே!

குறிப்புரை :—மனமே! நீ சதா மனத்திடத்தால் நெக்குநெக்காகக் கரைந்துருகுவையே யாயின் சுகானந்தம் சுலப சாத்தியமாகும்; அன்றி மௌன தேசிகனது திருவருளுந் நினக்குக் கிடைக்கும் என்பது. (6)

எ. வந்த வரவை மறந்துலகாய் வாழ்ந்து கன்ம
பந்தமுற வுன்னைப் படிப்பிக்கக் கற்றவர்யார்
இந்தமதி யேனுனக்கிங் கென்மதிகே ளொன்றாலே
சந்ததநெஞ் சேபரத்திற் சாரினின்ப முண்டாமே.

பொழிப்புரை :—மனமே! நாமோ, இவ்வுலகின்கண் வந்துள்ள முக்கியமான காரியத்தை அடியோடு மறந்துவிட்டு, இவ்வுலக மாயாவாழ்வு கொண்டு மயங்கி பாழான துர்க்கன்மத்தால் கட்டுண்டு முட்டுண்ண நினக்குக் கல்வி கற்பித்தவர் யாவரோ? நினக்கேன் இந்த மந்த மதி வந்தது? இனி யென்போதனையைக் கேட்பாய்; என்னை நினக்குத் துணையாக் கொண்டே யெப்போதும் பரவத்துவைச் சார்ந்திடுவையேல் உத்தமமான நித்திய சுக முண்டாகும்

குறிப்புரை :—மனமே! நீ இந்த சன்மம் பெற்றுவந்த தெதற்கோ அந்த காரியத்திற் கண்ணுபிராது மறந்தாய் மந்தமதியால்; உலக மருட்டில் மயங்கிக் கிடக்கின்றாய்; நினக்கு இங்ஙனங் கற்பித்தார் எவரோ! இதை விட்டு இனி யெப்போதும் பரத்தைச் சார்ந்துவர சுகம் பெறுவாய். (7)

அ. இன்பமய மாயுலக மெல்லாம் பிழைப்பதற்குன்
அன்புநிலை யென்பா ரதுவுநினை யன்றியுண்டோ
உன்புலத்தை யோரினருட் கொப்பாவாய் நெஞ்சேநீ
தென்புலத்தா ரோடிருந்து செய்பூசை கொண்டருளே.

பொழிப்புரை :—மனமே! செக சீவபரங்களெல்லாம் இன்பமாய் உச்சீவித்தற்கு நினது உண்மையன்பின் உறுதிப்பாடே காரணமாக் கூறுவர்; அவ்வன்பும் நீ யல்லாதில்லையாம்; நின் புத்தியை ஆராயின் திருவருளுக்கு நேர்மையாகுவை; ஆகையால் நீ நின் பிதிரர்களோடுஞ் சென்றடைந்து என்றுஞ் செயப்படும் பூசனையைப் பெற்று வாழ்ந்திடுவாயாக; என்பது.

குறிப்புரை :—மனமே ஆன்மாக்கள் சுகமாக வாழ்தற்கு அன்புதான் காரணமாம்; நீயோ, திருவருட்கீடாவை; இனி நீ, பிதிரரோடு மிருந்து கொண்டு என்றூற் செய்யப்படும் பலி யேற்றுய்வாய்; "தென்புலத்தாரைச் சார்ந்துய்வா" யென்றது நீ மரித்தொழிதலை யென்பதாயிற்று.

இதனுல், இறைவர்பால் அன்பு செய்யாவிடின் பிதிரரைச்சார்வா யென்பது தோன்ற நின்றது. (8)

கூ. அருளேயோ ராலயமா வானந்த மாயிருந்த
பொருளோ டியானிருக்கப் போயொளித்த நெஞ்சேநீ
மருடீர் முயற்கோடோ வான்மலரோ பேய்த்தேரோ
இருடீர நீயுறைந்த தெவ்விடமோ காணேனே.

பொழிப்புரை :—திருவருளை ஓர் கோயிலாக்கொண்டு சுகாகாரமாயிருந்தருளும் பரவஸ்துவோடும் யான் சேர்ந்திருக்கும்போது எனைவிட்ட கன்றொளித்த மனமே! நீ மயக்கொழிந்த முயற்கொம்போ? அன்றி ஆகாயத்தாமரைப் புட்பமோ? பின்னும் கானலினீரோ? எனது மாயாந்தகாரமொழிந்த பின், நீ சென்றுற்ற தெவ்விடமோ வறிந்திலன் என்பது.

குறிப்புரை :—அருளை திருமேனியாகக் கொண்டருளிய இறைவனை யான் சார்ந்திருக்கும் போது நீ சென்ற விடந்தெரிந்திலன்; என்பது. (9)

ய. எவ்விடத்தும் பூரணமா மெந்தைபிரான் றண்ணருளே
அவ்விடத்தே யுன்னைநெஞ்சே யாராயிற் கண்டிலனே
அவ்விடத்து மாயையிலே மாண்டனையோ வவ்விடமுஞ்
செவ்விடமே நீயுஞ் செனனமற்று வாழியவே.

பொழிப்புரை :—எங்கணும் பரிபூரணமாயுள்ளது, எம்மருட்டந்தை யாம் பரமோபகார காருணியனது திருவருட் பிரசாதமேயாம்; ஆங்கே நின்னைப் பார்க்கும்போது அகப்பட்டாயில்லை; ஒருக்கால் நின் உதிப்பிடமாயுள்ள மாயாதேவியார் வசமாகினையோ! யாதோ காண்கிலன்; அந்த ஸ்தானமும் உத்தம விடந்தான்; ஆகையால் நீ இனிப் பிறப்பற்று வாழ்வாயாக, என்பது.

குறிப்புரை :—ஏ மனமே! யாண்டும் பரம்பொருளினது பரமாம்ஸமே வியாபகமாயுள்ளது; ஆகவே, அப்பரவெளி யூடாக நின்னை யான் காணப் பெறவில்லை; மாயையில் மக்னமாயிருக்கலாம்; ஆனுலும் அவ்விடம் கேவலமல்ல; நின் செனனத்திற் கேதுவின்றியே வாழலா மென்றும் தெரிகிறது. (10)

## காடுங் கரையும்.



க. காடுங் கரையு மனக்குரங்கு
கால்விட் டோட வதன்பிறகே
ஓடுந் தொழிலாற் பயனுளதோ
வொன்றாய்ப் பலவா யுயிர்க்குயிராய்
ஆடுங் கருணைப் பரஞ்சோதி
யருளைப் பெறுதற் கன்புநிலை
தேடும் பருவ மிதுகண்டீர்
சேர வாருஞ் செகத்தீரே.

**பொழிப்புரை:**—மனமெனுமோர் குரங்கானது காடு மேடெங்கும் காலெடுத்தோடி நிற்றலியல்பே; ஆகவே, அவ்வாறான மனத்தோடும் நீங்களும் பின்பற்றிச் செல்லுதலும் நியாயமோ? அன்றி யாதேனும் பிரயோசன முண்டாமோ? யேகமாயும் அநேகமாயும், உயிர்க்குள் உள்ளுயிராயும், நடித்து ஆடாநிற்கும் பரமானந்த சோதி சொரூபனது திருவருளைப் பெறுதற்கான பேரன்பாம் பக்தி முறை கோடற்குரிய சமயம் இதுவே யாதலால், ஏ ஆன்மகோடிகளே! அனைவரும் ஒரு சேரவந்துறுவீர்காண்க.

**குறிப்புரை:**—உலகியலீர்! நீங்கள் நன்னிலை பெறவேண்டுமாயின், மனதைப் பின்பற்றிச் சென்று வீணே அலக்கணுறாது, அறிவைப் பின்பற்றி அம்முறை கொண்டு எம்மிறையருட்கே அன்புற்றும், அதனைப்பெறும் அத்தருணம் இத்தருணமே என்றே யறிந்தும், எல்லீரும் ஒருங்கு சேர்ந்து வருவீர்களாக. என்பது. (1)

உ. சைவ சமய மேசமயஞ்
சமயா தீதப் பழம்பொருளைக்
கைவந் திடவே மன்றுள்வெளி
காட்டு மிந்தக் கருத்தைவிட்டுப்
பொய்வந் துழலுஞ் சமயநெறி
புகுத வேண்டா முத்திதருந்
தெய்வ சபையைக் காண்பதற்குச்
சேர வாருஞ் செகத்தீரே.

**பொழிப்புரை:**—சமய பேதங்கள் பலவாயினும், அவற்றுள்ளும் சிவசம்பந்தமாய சைவசமயமே சற்சமயமாகும்; ஆகவே, அச்சைவ சமயத்திற்

கும் அதீதப்பட்டவராய அபூர்வ பரம்பொருளாரை நம் ஆவிக்குறு துணையா மாறு ஸ்ரீ சிற்சபையாம் பொற்சபைக்கண்ணே வெள்ளிடை மலைபோல் காட்டியருளி நிருத்தம் புரிகின்ற பரமானந்தராது திவ்ய திரு நோக்கமாங் கருத்தினை யுணர்ந்துய்யப் பெறாது, பொய்யையே ஆதாரமாக் கொண்டுள்ள புறப்புறச் சமயங்களின் வழி பற்றிச் செல்லற்க; ஆகவே, பரானந்த பரம சாம்பிராச்சியமாம் மோக்ஷத்தைத் தந்தருளும் தெய்வீக பொற்சபை யினைத் தரிசித்தற்கு சகத்தீர்காள்! அனைவர்களும் ஒரு சேர வந்துய்வீர்க ளாக. என்பது.

குறிப்புரை :—சைவம், பாசுபதம், காளாமுகம், வாமம், பைரவம், மகாவிரதம், இவையாறும் அகச்சமயம். உலகாயதம், புத்தம், சமணம், வைணவம், மாயாவாதம், அனீச்சுரவாதம் இவையாறும் புறச்சமயங்களாம். ஆக பனிரெண்டு மதங்கள் கொண்டதே இந்துமத மென்பர். இவைகளுள் ளும் சைவம் உடலாகவும், மற்றை ஐவகை அகச்சமயங்களும் அவ்வுடலின் சினையாகவும் அமையப் பெற்றுள்ளன.

ஆக மேற்கூறிய பனிரெண்டு மதங்களையுங் கடந்த மகாபுருஷ னெவனோ அவன்றான் ஞானி யென்றும், சிவன் முத்தனென்றும் உபசரிக்கப் பெறுவன்.

இன்னும், சமய சாத்திரம், சமய அனுட்டிப்பு, சமய தேவதை ஆகிய இவைகளனைத்தும் மனம் பக்குவ முறுமாறு ஆக்கிய உபாய சூத்திரங்க ளாம்; நாமார், நமக்குப் பதியார் எனவரும் ஞானங்களே சமயாதீத ஞானம் எனப் பெறும்; இந்த ஞானத்தைக் கைக்கொண்டே சுகர், வாம தேவர், வதிட்டாதி கபிலரீறாய இருடியர்களும், சம்பந்தர் முதல் மாணிக்க வாசகர் ஈறாய மகத்துக்களும் முத்தி யெய்தினர். ஆகவே, சைவ சமயத்தி னின்றும் பத்தி யோக ஞான மார்க்கங்களால் ஸ்ரீ சிவ பெருமானைத் திரி கரண சுத்தியோடும் வழிபட்டு குருலிங்க சங்கமங்களான் உருவச் சித்தி, அருவச்சித்தி, அருவுருவச் சித்தி யென்பனவற்றைப் பெற்றுப் பரமானந்தப் பெருவாழ் வெய்தலானே ஆசிரியர் "சைவ சமயமே சமயம்" என்று மிக வும் பாராட்டலாயின ரென்க. (2)

௩. காக முறவு கலந்துண்ணக்
கண்டீரகண்டா காரசிவ
போகமெனும்பே ரின்பவெள்ளம்
பொங்கித்ததும்பிப் பூரணமாய்
ஏகவுருவாய்க் கிடக்குதையோ
வின்புற்றிடநா மினியெடுத்த

தேகம்விழுமுன் புசிப்பதற்குச்
சேரவாருஞ் செகத்தீரே.

பொழிப்புரை:—காக்கையானது தனக்கு ஆகாரங் கிடைத்த அக் கணத்தே தன்னினங்களான பல காக்கைகளைக் கூவியழைத்து உண்ணப் பார்த்திருப்பீர்கள்; அதே போன்று, அகண்டமான சொரூபங் கொண்டருளிய சிவபெருமானது சிவானுபவமாய பேரானந்த வெள்ளப் பெருக்கானது பொங்கி வழியப் பெற்று பரிபூரணமா யேகசொரூபமாய்க் கிடக்கின்றதே! அந்தோ! நாம் இனி அதைப்பருகிச் சுகப்படு மாறதாக இச்சரீரம் நீங்கற்கு முன்னரே எ அகில ஆன்மகோடிகளே! அனைவரும் ஒரு சேர வருவீர்களாக.

குறிப்புரை:—அகிலான்மகோடிகாள்! ஒப்பருந் தற்பர சிவத்தின் பரம போகாதிகளைக் காக்கையைப் போன்று ஒன்று சேர்ந்து அநுபூதி செய்துய்யுமாறு அனைவரும் சேர்ந்து வருவீர்களாக. சிவானுபூதி செய்தின் புறல் இச்சரீர முள்ளபோதே யன்றி, நீங்கிய பின்னராகாமை கொண்டே "தேகம்விழுமுன் புசிப்பதற்குச் சேரவாரும்" என்றருளினர் போலும். (3)

---

## எடுத்த தேகம்

### கட்டளைக் கலிப்பா

க. எடுத்த தேகம் பொருளாவி மூன்று நீ
யெனக்கொன் றில்லை யெனமோன நன்னெறி
கொடுத்த போது கொடுத்ததன் றோபினுங்
குளறி நானென்று கூத்தாட மாயையை
விடுத்த வாறுங்கண் ணீரோடு கம்பலை
விலகு மாறுமென் வேட்கைப்ர வாகத்தைத்
தடுத்த வாறும் புகலாய் சிரகிரித் தாயுமான
தயாபர மூர்த்தியே.

பொழிப்புரை:—திரிசிரகிரியின்கண் எழுந்தருளியுள்ள தாயுமான தயாபரசிவமே! நின்னாற் கொடுத்தருளப் பெற்ற இந்த மானிட சரீரம் என்ன, பொருளென்ன, ஆன்மா என்ன இம் மூன்றையும், நீ யாகவே எனக் கியாது மில்லை யெனக்கூறி மௌன நெறியாம் சன்மார்க்கத்தினை நீ யெளி யேற்கநுக்கிரகித்த அஞ்ஞான்றே யான் தமக்கு ஈந்தருளினதல்லவா?

இதன் பின்னரும், நானென்று குழறிக் குழறிக் கூத்தாடுமாறு மகா மாயையை ஏவியருளினதும், ஆனந்தக் கண்ணீரோடு கம்பலை விட்டு நீங்கிய வகையும், அன்றி யெனது பேராவலான பெருக்கினை அறவே யொழித்தமையும் பற்றிய ஏதுவை இவ்வளவென்று யெடுத்தோதுவாயாக. என்பது.

குறிப்புரை :—திரிசிரகிரித் தெய்வமணியோய்! தேவரீர் எளியேற்குக் கருணைமீதூற மௌன முத்திரையை யநுக்கிரகித்த போது யான் எனது உடல் பொருளாவியைத் தமக்குத் தத்தஞ் செய்து விட்டேன்; இங்ஙனமாய பின்னரும் மாயாதேவியின் சேட்டிப்பால் நானென்று குழறிப் பேய்க்கூத்தாடுதன் முதலாம் ஜீவபோதம் வந்து என் வாழ்வைத் தாழ்வுறச் செய்கின்ற தென்னே வறிந்திலனே! (1)

உ. நோயும் வெங்கலிப் பேயுந் தொடாநின்
றூலிற் சொன்ன முறையிய மாதிநான்
றோயும் வண்ண மெனைக் காக்குங் காவலுந்
தொழும்பு கொள்ளுஞ் சுவாமியு நீகண்டாய்
ஓயுஞ் சன்ம மினியஞ்ச லஞ்சலென்
றுலகங் கண்டு தொழவோ ருருவிலே
தாயுந் தந்தையு மானேய் சிரகிரித்
தாயுமான தயாபர மூர்த்தியே.

பொழிப்புரை :—கொடிய வியாதி யென்ன, தாரித்ரமாய கொடிய பிசாசமென்ன இவைகள் வந்து என்னைப்பற்றி நலிவுறுத்த, யான் தேவரீர் தம் திருமுறையாம் வேதாகமாதிகளால் அருளிச்செய்த இயம நியமாதிகளிற் பொருந்தி யுய்யுமாறு காத்தருளலும், அன்றி அடிமைகொளுங் கடவுளும் நீயாயே யுள்ளாய்; இனி அஞ்சற்க அஞ்சற்க வெனவேயும், நின் பிறத்திறத்தலாதியனவும் ஒழிந்தது என்றும் உலகோர் கண்டு துதி புரியுமாறும் ஓர் திருமேனி கொண்டருளி அன்னையும் பரம பிதாவுமானவனே! திரிசிரகிரி மேவியருளிய மாதுர்பூதேசுரனே! என்பது.

குறிப்புரை :—ஏ மாதுர்பூதேஸ்வரா! வேதாகமாதிகளில் நீ கூறியருளிய இயமாதி நியமங்களை யநுட்டிப்பதில் தவறாது காத்து இனிது முடிப்பிக்க எனைக்காத்திடுவோனும், எனக்கினிய பரம காருணிய கடவுளும் தாமாகவுள்ளனை, எனை உலகம் பரவி வாழ்ந்த ஒருருக்கொண்டு தாயுந் தந்தையுமாய் வந்தருளிக் காத்தாண்டனையே! என்பதாம். (2)

## முகமெலாம்

க. முகமெலாங் கணீர் முத்தரும்பிடச் செங்கை முகிழ்ப்ப
அகமெலாங் குழைந் தானந்தமாக நல்லறிஞர்
இகமெலாந் தவ மிழைக்கின்றா ரென்செய்கோ வேழை
சகமெலாம் பெற நல்லருளு தரமாச் சமைந்தோய்

பொழிப்புரை :—மெய்யன்பர், தம் முகமுழுமைக்குமே கண்ணீர் முத்துக்கள் உதிர்ந்து விளங்கவும், சிவந்த கரங்கள் சிரமேற் குவியவும், மற்றும் நெஞ்சம் நீராளமாயுருகி யின்புறுமாறும் இந்த வாழ்நாள் முற்றிலுமே நற்றவம் புரிந்து வருகின்றனர் ; இந்த எளியனுய யான் யாது செய்வதோ ! இந்நாமரூபப் பிரபஞ்சாதியன வனைத்தும் அருண்மய வயிற்றினின்றும் பிறக்கும்படித் திருவுளம்பற்றிய தேவதேவனே ! யான் என் செய்வது !

குறிப்புரை :—விரிந்த இப்பிரபஞ்சத்தை நின் வயிறாகக் கருணை கொண்டருளிவைத்துக் காத்தருளுங்கால் நின் மெய்யன்பர்க ளெல்லாம் தவம் புரிகின்றனர். யானொருபாவி வீணே காலங்கடத்தி கிஞ்சித்தும் அன்பின்றிக் காலத்தை அவமாயொழித்துவரின் பிழைப்ப தெப்படியோ ! வறிந்தில னென்பதாம். (1)

---

## திடமுறவே

கோச்சகக் கலிப்பா

க. திடமுறவே நின்னருளைச் சேர்த்தென்னைக் காத்தாளக்
கடனுனக்கென் றெண்ணி நின்னைக் கைகுவித்தோ னல்லேனோ
அடைவுகெட்ட பாழ்மாயை யாழியிலே யின்னமல்லற்
படமுடியா தென்னுயிர்ப் பற்றே பராபரமே.

பொழிப்புரை :—" யான் திடப்படுமாறதாக நின் றிருவருளளித்துக் காப்பாற்றியருள நினக்கேபரமாகும் " என்றெண்ணி நினைச்சதா கும்பிட்டு வழிபட்டவன் யானன்றோ ? சிறிதேனும் நெறிபடா கேடுகெட்ட மாயா சமுத்திரத்தில் ஆழ்ந்து கிடந்தே துன்புற வாற்றேன் ; எனது உயிர்க்குரிய தோர் பிடிப்பான பரதெய்வமே ! என்பது.

குறிப்புரை :—ஏ பரங்கருணைத் தடங்கடலோய்! என்னை நின்னருளிற் சேர்த்துத் திடப்படுத்திக் காத்திடுதல் நின்பரமென்றெண்ணி நின்னைக் கைகூப்பித் தொழுதேன்; ஆகவே, இனியாயினும் யான் கொடிய மாயாவாரிதியிற் கிடந்து வருந்துத லொழிந்துய்யச் செய்யவேண்டும் என்பது. உயிர்க்குறுதி பயப்பன வாதலால் "ஆவிப்பற்றே" என்றருளினர் போலும். (1)

உ. ஆராமை கண்டிங் கருட்குருவாய் நீயொருகால்
வாராயோ வந்து வருத்தமெல்லாந் தீராயோ
பூராய மாகவருட் பூரணத்தி லண்டமுதற்
பாராதி வைத்த பதியே பராபரமே.

பொழிப்புரை :—என்னுற்றாமையைப் பார்த்து இங்கே அருளிறையாக வோர் முறை வந்தருளாயோ? அவ்வாறு வந்தருளி யென்கட்டத்தை தீர்த்திட மாட்டாயோ? பழமையாய் நீ திருவருளாய நிறைவின்கண்ணே, இவ்வகிலத்திற்கு மூலயேதுவாய மண்முதலாம் ஐவகைய பூதங்களையும் பிரிவுற வைத்தருளிய பெரும்பதியே! பராபரவத்துவே! என்பது.

குறிப்புரை :—என்னிறைவ! எனது ஆற்றாமையுணர்ந்து அருளாசிரியனாய் வீற்றிருந்தருளி துன்பந் தொலைவித் தருளாயோ! திருவருள் வெளியாம் பராகாயப் பரப்பின்கண் அண்டபுவன சராசரங்களை யெல்லாம் வைத்தருளியதால் ஈண்டு "அருட்பூரணத்தில் அண்டமுதற் பாராதி வைத்த பதியே" யென்றனர் போலும். (2)

௩. வாழாது வாழவுனை வந்தடைந்தோ ரெல்லாரும்
ஆழாழி யென்னவரு ளானா ரழுக்காற்றோ
டேழா யெனவுலக மேசுமினி நானொருவன்
பாழாகா வாறுமுகம் பார்நீ பராபரமே.

பொழிப்புரை :—பொய்வாழ் வொழிந்து மெய்வாழ்வு பொருந்த நீயே கதியென்று நின் பாதமலர்கண்டு அடையப் பெற்ற அன்பர்களனைவரும் ஆழமாய சமுத்திரம் போன்றதான திருவருளம்ச மடையப்பெற்றுய்ந்தனர். இவ்வகிலம், 'பழிப்புடனே பொறாமையும் மந்தமதியினனு மானோய்' என்றே உலகோர் நிந்தனை செய்யும் யானொருவன் இனிப் பாழடையா வாறுக எனது ஏழ்மை முகத்தினைப் பாத்திரங்கல் செய்வாய் பராபரவத்துவே.

குறிப்புரை :—இறைவ! நின்னிருதாட் புணையையும் வந்தடைந்த உத்தமச் சன்மார்க்கிக ளனைவர்களும் நின் திருவருட்குரியராயினர்; அது

போன்று இவ்வேழையான யானுங் கடைத்தேற கருணை விழியால் என் முகத்தைக் கடைக்கணித்தருள வேண்டுவன் என்பது சாரமாம். 'ஏழையே!' என்றவிளி ஏழாய் எனக்கடைக்குறை விளியாயது.

வாழாது வாழ்தல் - அருள்பெற்று நித்தியவாழ்வு பெறுதலாம். (3)

ச. உள்ளத்தி னுள்ளே யொளித்தென்னை யாட்டுகின்ற
கள்ளக் கருணையையான் காணுந்தர மாமோ
வெள்ளத்தை மாற்றி விடக்குண்பார் நஞ்சூட்டும்
பள்ளத்தின் மீன்போற் பதைத்தேன் பராபரமே.

பொழிப்புரை :—ஒப்பருந் தற்பரனை நீ என் மனத்தகத்தே மறைந்திருந்து கொண்டு எனை நடத்துவிக்கின்ற வஞ்சமான கருணாகரத்துவத்தை சிறியேன் காணத் தரமுடையவனாவனோ! மாமிசமுண்ணுவோர் வெள்ள நீரை வடிவுறச்செய்து விஷத்தினைக் கொடுக்கத்தக்க சிறிய குட்டை மீன் குஞ்சுகளைப் போன்று மனத்துடிப் பெய்தலானேன் பராபரவத்துவே என்பது.

குறிப்புரை :—தாண்டவ ஆண்டவ! நீ யெனது நெஞ்சகத்தே வஞ்சமாயிருந்து எனை யாட்டுவிக்கின்ற நின் திருவருள் வன்மையைத் தெரியகில்லேன்; ஆகவே, விஷமுண்டு பள்ளத்தில் வாழும் மீனையொத்தே மனநடுக்குற்றேன் என்பது. (4)

ரு. வாவிக் கமலமலர் வண்டாய்த் துவண்டுதுவண்
டாவிக்கு ளின்றவுனக் கன்புவைத்தார்க் கஞ்சலென்பாய்
பூவிற்கும் வான்கடையிற் புல்விற்போர் போலவொன்றைப்
பாவிக்க மாட்டேன் பதியே பராபரமே.

பொழிப்புரை :—பெருந்தடாகத்துள்ள தாமரை மலரின் வண்டையொத்தே திகைத்துத் திகைத்துத் என் உயிர்க்கண் அந்தர்ப்பூதமாய் விளங்கியுள்ள நின்பால் அன்பால் நினைவு கொண்டுள்ளாரான மெய்யடியவர்களை அஞ்சற்கவென்றே அபயஞ் செய்வோய்! பூமாறும் மேலான புட்பக்கடையின்கண் புற்கட்டு விற்பவரைப்போன்று நின்னை யல்லாது வேறோர் தேவனை கனவினுந் தேடல் செய்யேன் பதிப் பொருளாம் பராபரவத்துவே என்பது.

குறிப்புரை :—எவற்றிற்கு மிறைவ! தாமரை மலர் வண்டானது எவ்வாறு அம்மலரினைப் பிரிந்து செல்லாது அதையே சுற்றி நிற்குமோ, அதே போன்று, நீ நின்பால் அன்புற்ற மெய்யடியாரிதயத்துள்ளே இடையறு

திருந்து, அஞ்சலிப்பாரை அஞ்சலென்றாள்வாய்; யானோ, நின்னையன்றிப் பின்னையொருவரை உன்னலுஞ் செய்யேன். (5)

சா. விண்ணாறு வெற்பின் விழுந்தாங் கெனமார்பிற்
கண்ணாறு பாய்ச்சிடுமென் காதல் வெள்ளங் கண்டிலையோ
தண்ணாறு சாந்தபதத் தற்பரமே நால்வேதப்
பண்ணாறு மின்பப் பதியே பராபரமே.

பொழிப்புரை :—ஆகாய கங்கையானது பர்வதத்தின்மேல் பெய்தாற் போல, மார்பகத்தே கண்ணருவி நீரானது பாயப்படுகின்ற எனது அன்பின் பெருக்கினை நீ பார்க்கவில்லையோ? தண்மையே மிக்குடைய பரம சாந்த பக்குவத்தை யுடைய தற்பரமாம் சிற்பரவத்துவே! நான்மறைப் பண்ணகத் தும் மணக்கின்ற சுகாரம்பப் பெரும் பதியே! பராபரவத்துவே!

குறிப்புரை :—இறைவ! ஆகாய கங்கையானது பர்வதத்தின் மேலே வருஷித்தது போல என்மார்பிடையே கண்ணீரை ஆறாகப் பெருகவிட்ட எனது அன்பின் வெள்ளப் பெருக்கைப் பார்த்தாயில்லையே! யான் என் செய்வது! (6)

எ. கூடியநின் சீரடியார் கூட்டமென்றோ வாய்க்குமென
வாடியவென் னெஞ்சுமுக வாட்டமுநீ கண்டிலையோ
தேடியநின் சீரருளைத் திக்கனைத்துங் கைகுவித்துப்
பாடியநான் கண்டாய் பதியே பராபரமே.

பொழிப்புரை :—ஒருங்கு சேர்ந்த நின் உண்மை யன்பர்களது திருக் கூட்டம் எப்போது கிடைக்கப் பெறுவேனோ வென்று வாட்ட முற்ற என் மனத்தையும் முகவாட்டத்தையும் நீ பார்க்கவில்லையோ? நின் உண்மை யன்பர்களாலே தேடப்பட்டுள்ள நின் பொன்னருளினைக் குறித்து திசைக ளெங்கணும் கைகூப்பிப் பாடப் பெற்ற எளியனன்றோ யான்! பரமபதியே! பராபரவத்துவே.

குறிப்புரை :—என் பரமபிதாவே! தேவரீர்தம் திருக்கூட்டம் எளி யேற்கு எக்காலம் கிடைக்கப் பெறுவனோ வென்று கொண்டுள்ள மனவாட் டம் முகவாட்டம் என்னும் இருவகைத் திரிபையும் தேவரீர் பார்த்திலீர் போலும்! திசையெட்டும் நின்னருள் குறித்துக் கைகூப்பி நின்றதையேனு மறிந்தாயில்லையே! என்பது.

எப்பொருட்கு மிறைவனாதலின் ‘பதியே’ யென்றார் போலும். (7)

அ. நெஞ்சத்தி னூடே நினைவாய் நினைவூடு
மஞ்சலெனு வாழுமென தாவித் துணைநீயே
சஞ்சலமாற் றினையினிமேற் றுய்க்குபசா ரப்புகன்று
பஞ்சரிக்க நாஞர் பதியே பராபரமே.

பொழிப்புரை :—மனத்தினுள்ளே எண்ணுவதாய், அவ்வெண்ணத் துள்ளும் 'பயமெய்தற்க' வென்று சாற்றி வாழாநின்ற என்னுயிர்த் துணை யாம் நீயே யெனது மஞே துக்கத்தை யொழித்தருளினை! இனித் தாய னைய நினக்கே உபசார வார்த்தைகூறிக் கெஞ்சுவதற்கு யாஞர்? பரம பிதாவே! பராபர வத்துவானவனே! பஞ்சரித்தல் - உபசரித்துரைத்தல்.

குறிப்புரை :—எம்மானே! என் மனத்தகத்தே மறைந்திருந்தருளி நினைவாயிருந்து அஞ்சலென்றருளிய ஆன்ம சகாயனே! என் வருத்த மொழித்தனை; தாயனைய நினக்கு யான் என்ன முகமன் கூறப் போகி றேன்? நாஞர்? "நாஞர், எனுள்ளமார், ஞானங்களார்" என்றுர் மேலோர். (8)

கூ. புத்திநெறி யாகவுனைப் போற்றிப் பலகாலு
முத்திநெறி வேண்டாத மூடனே னுகெடுவேன்
சித்திநெறிக் கென்கடவேன் சீரடியார்க் கேவல்செயும்
பத்திநெறிக் கேனுமுகம் பார்நீ பராபரமே.

பொழிப்புரை :—புத்தியின் மூலமாக நின்னைப் பன்முறையும் பரவி மோக்ஷாபேக்ஷை கொள்ளாத மூடஞயுள்ள யான் ஆ! கெடுவேன்! அட்ட மாசித்திக்கு யான் இனியென் செயவல்லேன்! நின் சிறப்பு வாய்ந்த மெய் யடியவர்கட்கு பணி செய்தற்கான பத்திமார்க்கம் சித்திக்குமாருகவாவது நீ என் முகம்பார்த் தருளுவாயாக! பராபரவத்துவே!

குறிப்புரை :—புத்தியிஞலே முத்திபெரு மூடனேஞயினும், நின் மெய்யடியவர் தம் பத்திபணியாவது எனக்குக் கட்டளையிட அந்தர்முக, பகிர்முக மென்னும் உபய முகங்களையேனும் பார்த்தருள்வீராக என்பது. சாரமாம். "அடியாருறவு மரன்பூசை நேசமு மன்பு மன்றிப், படிமீதில் வேறுபயனுளதோ" என்றுர் பிள்ளையார். (9)

ய. கண்டறியேன் கேட்டறியேன் காட்டுநினை யேயிதயங்
கொண்டறியேன் முத்தி குறிக்குந் தரமுமுண்டோ
தொண்டறியாப் பேதமையேன் சொல்லேநின் ரேன்
பண்டறிவாய் நீயே பகராய் பராபரமே. [மையெல்லாம்

பொழிப்புரை :—யான் யாதுங் பார்த்தறிந்திலேன் ; அன்றிக் கேட்டும் தெரிந்திலேன் ; எப்பொருளையும் பிரித்துணர்த்தும் நின்னையே என்னிதயத்தில் வைத்தும் அறிந்திலன் ; இவ்வாறுள எனக்கு மோக்ஷத்தை எண்ணற்கேனுமுள்ள தத்துவம் வாய்த்துளதோ ! ஊழியமுறை தெரிதலில்லா மடமையை யுடைய யான் உனது பூர்வீகமனைத்தும் கூறியு மறிந்திலேன் ; ஆகவே, இவையனைத்தும் முன்னே நன்குணர்ந்துள்ள நீயே கூறுவாயாக, பராபரவத்துவே !

குறிப்புரை :—இறைவ ! யான் என்றும் நின்னைப் பார்த்தது மில்லை ; அன்றி நெஞ்சகத்தே நினைவும் வைத்துமில்லேன் ; இத்தன்மையனான எளியனுக்கு முத்தியென்பதை எண்ணுதற்கேனு முறையுண்டோ ? யானோ நின் அடிமைக்குரிய தன்மையறிபவன் ? ஆனால், இவற்றை யெல்லாம் நீ நன்கு முன்னமே யறிந்துள்ளாய். (10)

---

## தன்னை யறிய

### கொச்சகக் கலிப்பா

க. தன்னை யறியத் தனதருளாற் றானுணர்த்தும்
மன்னைப் பொருளெனவே வாழாமற் பாழ்நெஞ்சே
பொன்னைப் புவியைமடப் பூவையரை மெய்யெனவே
என்னைக் கவர்ந்திழுத்திட் டென்னபலன் கண்டாயே.

பொழிப்புரை :—தன்னைத்தானே யுணர தனது திருவருள் வலத்தால் தானாகவே தெரிவிக்கின்ற எம்பெருமானை உறுதியான நித்தியவத்துவென்று தெரிந்துய்யாது, ஏ பாழ்பட்டமனமே ! பொன் பொருளையும், பூமியையும், பக்குவமான நங்கையரையும், உண்மையாக ஆசைகொண்டு என்னைப்பற்றி யீர்த்தலில் என்ன பிரயோசனத்தைக் கைக்கொண்டனை ?

குறிப்புரை :—ஏ மனமே ! தன்னையறியும் வண்ணம் தனது திருவருளாலே நமக்கறிவித்திடும் எம்மானைத் துதிசெய்து வாழ்தலின்றி பொன், மண், பெண் என்னு மூன்றையும் உண்மைப் பொருளாக் கொண்டு எனை ஆங்காங்கு யீர்த்துச் சென்று நீ பெற்ற பேறென்னவோ ? என்பது.

“ தன்னைத்தான் கண்டால் தனைப்படைத்தோனையும்
இன்னவித மென்றறிந் தின்புறலாம் ”—எனறார் பெரியார். (1)

## ஆக்குவை

க. ஆக்குவை மாயையாவு நொடிதனி லதனைமாள
நீக்குவை நீக்கமில்லா நினைப்பொடு மறப்புமாற்றிப்
போக்கொடு வரவுமின்றிப் புநிதநல் லருளானந்தந்
தாக்கவுஞ் செய்வாயன்றோ சச்சிதானந்த வாழ்வே.

பொழிப்புரை :—மாயா சத்திகளியாவையும் நீ தோற்றிவிப்பாய்; தோற்றிவித்தவாறே அதனைப் பின்னர் ஓர் நொடிக்குள்ளாக லயப்படவுஞ் செய்வாய்; நீங்கப்பெறாத நினைவோடு மறதியையு மொழித்துப் பின்னர் ஒழிதலும் வருதலு மில்லாமே மகாப் பரிசுத்தமாய்ச் சிறந்துள்ள அருளா னந்தத்தினைப் பெறவுஞ் செய்யும் கர்த்தவ்யம் வாய்ந்தவ நீயன்றோ? உண்மை யறிவானந்தப் பெருவாழ்வே! என்பது.

குறிப்புரை :—நித்திய ஞானனந்தப் பரம் பொருளே! நாமரூபப் பிரபஞ்சாதிய வனைத்தும் தம் மாயாசக்தியைக் கொண்டு இவ்வுலகத்தைக் காரியப்படுத்துவதில் மிகச் சமர்த்தரேயாவீர்! இதன்றியும் போதலும் வரு தலு மில்லா அருளானந்தத்தைப் பெறச் செய்பவனும் நீயேயல்லவோ? என்பது.

"ஒன்றதா யிச்சாஞானக் கிரியையென் றொருமூன்றாகி
நின்றிடுஞ் சத்தியிச்சை யுயிர்க்கரு ணைசமாகும்
நன்றெலா ஞானசத்தியானயந் தறிவ னுதன்
அன்றருட் கிரியைதன்னு லாக்குவ னகிலமெல்லாம்"—என்ற இச்
சிவஞான சித்தியின் உண்மை கண்டுணர்க. (1)

---

## கற்புறு சிந்தை

க. கற்புறு சிந்தைமாதர் கணவரை யன்றி வேறோர்
இற்புறத் தவரைநாடார் யாங்களு மின்பவாழ்வுந்
தற்பொறி யாகநல்குந் தலைவநின் னலதோர்தெய்வம்
பொற்புறக் கருதோங் கண்டாய் பூரணா னந்தவாழ்வே.

பொழிப்புரை :—கணவனையே தெய்வமாக் கொண்ட கற்பு நிலைச் சிந்தையாளரான மங்கையர்கள் தத்தம் நாயகனை யல்லாது வேறோர் புருட

லைக் கனவினுங் கருதல் செய்யார்கள்; அதேபோன்று தம்பாலன்பே கொண்டுள்ள தமியேங்களும், நித்திய சுகவாழ்க்கையையும் தனது உரிமைச் செல்வமாயீந்தருள்கின்ற இறைவனே! நின்னையல்லால் மற்றுமோர் கடவுளைக் கனவிலேனும் யாங்கள் மிகவும் சிறப்புறுமாறு கருதோம்; நிறைந்த நித்தியானந்த வாழ்வே.

குறிப்புரை :—சிவபரஞ்சுடரே! தம்முரிமை நாயகனை யல்லாது அயல் புருடனை அகத்தும் புறத்தும் ஒப்புற நினையாக் கற்பலங்காரிகள் போன்று யாங்களும் தேவரீரை யல்லாது யாவரொருவரையுங் கனவினு நினையோம் என்பது. எங்ஙன மெனில் :—

அன்பனை விட்டு மற்றோ ரவலனை விரும்பிப் பின்னர்
துன்புறு வார்கள் போலச் சுயம்பிர காசனுரு
நம்பனை விட்டுப் பொல்லா ஞாலத்தை விரும்பிப் பின்னர்
துன்புறு வார்க ளந்தத் துயரினுக் கொழிவு முண்டோ.

என்ற வள்ளறன் வாக்கானு முணர்க. (1)

உ. முருந்திள நகையார்பார முலைமுகந் தழுவிச் செவ்வாய்
விருந்தமிர் தெனவருந்தி வெறியாட்டுக் காளாய் நாளும்
இருந்தலோ காயதப்பே ரினத்தனு யிருந்தவேழை
பொருந்தவுங் கதிமேலுண்டோ பூரணா னந்தவாழ்வே.

பொழிப்புரை :—மயிற்கத்தைக் காம்பன்ன ஒள்ளிய சிறு பல்வரிசை வாய்ந்த நங்கைமார்தம் முலைமுகட்டைத் தழுவுதல் செய்து, சிவந்த அதரபானத்தை விருந்தென வருந்துமாறுள்ள தேவாமிர்தமென்று சுவைத்து வெறியாட் டயர்ந்துவரும் காலமுற்றுங் கழித்தும் உலோகாயத மதத்தோர் இனத்தனு யிருந்துவரும் கேவல மந்த மதியேனுயுள்ள யான், இனி மேலாம் பரகதிக்காளாகவுங் கூடுமோ! பூரணானந்த புனித வாழ்வோய்!

குறிப்புரை :—பரானந்த பரசிவக் கொழுந்தே! உலோகாயதனைப் போன்று மங்கையர் சுகமே மகா சுகமென்று காலங் கடத்திவந்த எளியேற்கும் உத்தமமான நித்தியானந்த முத்தி நெறியுங் கிடைக்கப் பெறுவேனோ வென்பதாம். (2)

ரு. தீதெலா மொன்றும் வன்மை செறிந்திருட் படலம்
பாதகச் சிந்தைபெற்ற பதகனுன் பாதநீழல் [போர்த்த
ஆதர வடைய வள்ளன் பருள்கிலை யாயின் மற்றியார்
போதனை செய்யவல்லார் பூரணா னந்தவாழ்வே.

பொழிப்புரை :—தீயனவனைத்தும் ஒழுங்குறச் சேர்ந்துள்ளன போன்ற கடினமாய அவிவேகமாகிய இருளால் மறைவெய்திய மகா பாவியாம் தீய சிந்தைகொண்ட யான், நின் திருவடிக் கமல நன்னீழலைப் பேராதாரமாக் கொண்டடையுமாறு நீ எளியேற்கு உண்மை யன்புண்டாகச் செய்திலையேல், எனக்கான பாவ நீக்கத்தின் பொருட்டு போத மூட்டியருள வல்லவர் வேறுயாவரோ? பூரணானந்த வாழ்வே!

குறிப்புரை :—தீயன பல வொன்று சேர்ந்தென்ன மனமுடைய யான் நின் பொன்னடிக் கமலத்தை நண்ணிடவேண்டி, யுண்மை யன்புண்டாகாமைக் கிரங்கி யருள்புரிவார் வேறுயாவரோ? என்பது. (3)

ச. நாதனை நாதாதீத நண்பனை நடுவாய்நின்ற
நீதனைக் கலந்துநிற்க நெஞ்சமே நீவாவென்றால்
வாதனை பெருக்கி யென்னை வசஞ்செய்து மனந்துன்மார்க்க
போதனை செய்தனன்றோ பூரணா னந்தவாழ்வே.

பொழிப்புரை :—எவற்றிற்கு மேலோனையும், நாத தத்துவத்திற்கு அப்பாற் பட்டவனையும், அன்புடையார்க் கன்பனையும், சகல கிருத்தியாதிகளுக்கும் நடுவாயுள்ளவனையும், கலந்துவாழ வ மனமே, நீ வருவா யென்றழைக்கின், என்னுள்ளம் (அதற்கிசையாது) உலக வாசனையில் சுழன்று என்னையுந் தன் வசமீர்த்து தீயபோத மூட்டிவருதல் நலமாமோ? பூரணானந்த புனித மெய்வாழ்வே!

குறிப்புரை :—ஒப்பிலப்பன்பால் உறவு கொண்டுய்ய வருவாய் மனமே யென்றழைப்ப, அதற்கு மனம் அமையாமே, யென்னைத் தன் வசமாக்கி யீர்த்து தீயன பயிற்றி நாசமுறச் செய்தலும் நன்றோ? என்பது. (4)

ரு. எண்ணிய வெண்ணமெல்லா மிறப்புமேற் பிறப்புக் காசை
பண்ணியென் னறிவையெல்லாம் பாழாக்கி யெனைப்
[பாழாக்குந்
திண்ணிய வினையைக் கொன்று சிறியனை யுய்யக்கொண்டாற்
புண்ணிய நினக்கேயன்றோ பூரணா னந்தவாழ்வே.

பொழிப்புரை :—நான் என் உள்ளத்திலே நினைத்த உத்தம வெண்ணங்க ளத்தனையும் இறத்தல் பிறத்தல் முதலியவைகட்கே ஆசைவைத்து, என் புத்தியைப் பாழ்படச் செய்தது மல்லாமல் எளியனையும் கெடுமாறு செய்த கொடிய தீவினையை யொழித்து இச்சிறியேனைப் பிழைத்தெழச் செய்யின், இதனால் உண்டாம் புண்ணியம் நின்னதே யன்றோ? பூரணானந்த வாழ்வே! என்பது. திண்ணியவினை - திட்பமான தீவினை யென்ப.

குறிப்புரை :—எம்மானே ! எனையும், என் அறிவினையும் கெடுத்திடும் தீய வினையை அறவே யொழித்து இச்சிறுவனைப் பிழைக்குமாறருளின், அதனால் நினக்கு பெரும் புண்ணியமாகுமே ! (5)

சா. பத்திநீ பத்திக்கான பலனுநீ பலவாச் சொல்லுஞ்
சித்திநீ சித்தர் சித்தித் திறமுநீ திறமார்மோன
முத்திநீ முத்திக்கான முதலுநீ முதன்மையான
புத்திநீ யெனக்கொன்றுண்டோ பூரணா னந்தவாழ்வே.

பொழிப்புரை :—ஆய்ந்துணரின், பக்தியாவதும் நீயேயாம் ; அந்த பக்திக்கேற்ற பலப்ராப்தியும் நீயேதான் ; மற்றும் பற்பலவாறான சித்திகளும் நீதான் ; அன்றிச் சித்தரானோர் அட்ட சித்தித் தன்மையும் நீயலாதில்லை ; இன்னும், உறுதி பயப்பனவாய மௌன முத்திகளும் நீயாகும் ; அம்முத்தியைத் தந்தருள்வதற்குரிய மூவா முதல்வனும் நீயாகவே யுள்ளாய் ; இவைகட் கெல்லாம் காரணமாய அறிவும் உன்னையன்றி யின்றாம் ; ஆகவே, எனக் கென்னவோர் சுதந்தரத்துவ முளவாமோ ? இல்லை யென்றபடி. பூரணானந்த வாழ்வே.

குறிப்புரை :—இறைவனே ! மேற்கூறிய பத்தி முதலாக புத்திவரை யுள்ள வனைத்தும் நீயாகவே யிருக்கிறபோது, எனக்கெனவே சுதந்தரமோர் இறையுமில்லை யென்பதாம். (6)

எ. தாயினு மினிய நின்னைச் சரணென வடைந்த நாயேன்
பேயினுங் கடையனாகிப் பிதற்றுதல் செய்தனன்றோ
தீயிடை மெழுகாய் நொந்தேன் றெளிவிலேன் வீணேகாலம்
போயின தாற்றகில்லேன் பூரணா னந்தவாழ்வே.

பொழிப்புரை :—தாயைவிடத் தயவு வாய்ந்த நின்னைச் சரணாகதி யடைந்துள்ள நாயினேன் பேயைவிடக் கீழ்மையனாகிப் பேத்துதலும் நலமாமோ ! அழலிடைப்பட்ட மெழுகா யகங்குழைந்து வாடினேன் ! தெளிந்த தன்மையு மில்லேன் ! ஆக இந்நிலையாய்க் காலத்தை அவமாகப் போக்கினமை பற்றி மனஞ்சகியேன் ; பூரணானந்த புனித வாழ்வே !

குறிப்புரை :—இறைவனே ! தாயினுஞ் சாலத் தயவுடைத் தண்ணருளோய் ! தேவரீரைச் சரண்புகுந்து அடைக்கலமான பேயினுமிழிந்து பிதற்றல்செய் பித்தினனும் சூடுண்ட மெழுகனையனா யுருகிக் காலமெலாம் வீணே கழித்தமைக்கு நெஞ்சங் கலங்குகின்றேன் ! என்பது. (7)

## மலை வளர் காதலி



க. பதியுண்டு நிதியுண்டு புத்திரர்கள் மித்திரர்கள
பக்கமுண் டெக்காலமும்
பவிசுண்டு தவிசுண்டு திட்டாந்த மாகயம
படரெனுந் திமிரமணுகாக்
கதியுண்டு ஞானமாங் கதிருண்டு சதிருண்டு
காயசித் திகளுமுண்டு
கறையுண்ட கண்டர்பா லம்மைநின் றளிற்
கருத்தொன்று முண்டாகுமேல்
நதியுண்ட கடலெனச் சமயத்தை யுண்டபர
ஞானவா னந்தவொளியே
நாதாந்த ரூபமே வேதாந்த மோனமே
நானெனு மகந்தை தீர்த்தென்
மதியுண்ட மதியான மதிவதன வல்லியே
மதுரூ தனன்றங்கையே
வரைராச னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்கா தலிப்பெணுமையே.

பொழிப்புரை :—பலப்பலவான ஆறுகளை யெல்லாம் உட்கொண்டுவ்ரா நின்ற பலவான சமயாதிகளையும் தன்னிடங் கொண்டருளிய ஒப்பற்ற ஞானச் சுடரொளியே! நாத தத்துவாதீத சொரூபமே! மறை முடிவாய் விளங்கும் மோன முதலே! நான் என்கின்ற அகங்காராதிகளை யொழித்து, எனது அறிவினை மக்ஷஞ்செய்த அறிவு சொரூபமாயுள்ள, பூரண சந்திரனை யொத்த முகார விந்தம் வாய்ந்த கொடியனையாய்! விட்டுணு மூர்த்திக் கினிய சகோதரியே! மலை மன்னற்கு இரு கண்ணு யவதரித்து மலையில் வளர்ந்து வந்தருளிய தெய்வப் பெண்ணரசியே! விடமயின்ற கண்டன்பா லமர்ந்தருளிய பேரன்னாய்! நின் பொற்றாண் மலரின்கண் எளியேற்கு அன்புண்டாகுமாயின், அடிமைக்கினிய நற்பூமியுண்டாம்; அன்றி அருட் செல்வமு முண்டாகும்; அன்றிப் புத்திர மித்திராதியர்களு முண்டாகும்; மற்றும் உற்றுருறவாரும் பெருகுவர்கள்; சதாகாலமும் வன்மையு முண்டா யிருக்கும்; அன்றி உன்னதமான படுக்கையாதிகளு முண்டாகும்; சான்று கவே, யம தூதர்களாய பேரிருளும் வந்தடையாவாறு மேலான நற்கதி களும் உண்டாகும்; மேலும் மெய்ஞ்ஞானமாய சூரியனு முண்டாம்; சகச

சம்பத்து முண்டாம்; இன்னும் சரீராரோக்கியாதிகளு முண்டாகும்; என்பதாம்.

குறிப்புரை :—இருளினைத் துறத்தும் ஒளிபோன்று, யமபாடாளய தீய வந்தகாரமுந் துலையவேண்டி மெய்ஞ்ஞானமெனும் நற்கதியும் கதிரு முண்டென்றார்; மதுவெனும் அரக்கனை யொழித்தலான் மதுசூதனன் தங்கையென்றார்; ஈண்டு தவிசு என்பதை பலவகை ஆசனாதிகளெனலும் பொருந்தும். மலைவளர் காதலி - தேவை மேவிய திருவினளாய தெய்வ மாதர் என்ப; நின் திருவடிக்கண் எனக்கன்புறின், சகல சம்பத்தாதி அட்ட யோகாதிகளு முண்டா மென்பதாம். (1)

உ. தெட்டிலே வலியமட மாதர்வாய் வெட்டிலே
சிற்றிடையிலே நடையிலே
சேலொத்த விழியிலே பாலொத்த மொழியிலே
சிறுபிறை நுதற்கீற்றிலே
பொட்டிலே யவர்கட்டு பட்டிலே புனைகந்த
பொடியிலே யடியிலேமேற்
பூரித்த முலையிலே நிற்கின்ற நிலையிலே
புந்திதனை நுழையவிட்டு
நெட்டிலே யலையாம லறிவிலே பொறையிலே
நின்னடியார் கூட்டத்திலே
நிலைபெற்ற வன்பிலே மலைவற்ற மெய்ஞ்ஞான
ஞேயத்திலே யுனிருதாள்
மட்டிலே மனதுசெல நினதருளு மருள்வையோ
வளமருவு தேவையரசே
வரைராச னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காதலிப்பெண்ணுமையே.

பொழிப்புரை :—கொடிய வல்லமை மீக்குற்ற பெண்களது வஞ்ச மாயத்தினும், வாய்வெட்டுப் பேச்சினும், சிறியதான மருங்கினும், ஒயில் நடையினும், சேல்மீன் போன்ற கண்மிரட்டலினும், பாலென விளிக்கும் இனிய வார்த்தையினும், மூன்றாம் பிறையொத்த நெற்றியினழகினும், அந் நெற்றியின் திலதத்தினும், அன்றி அவர் உடுத்துள்ள பட்டாவளியினும், சரீரத்தி லணிந்துள்ள நறுமணக்கலவை மணத்தினும், செம்பஞ்சூட்டிய பாதத்தினும், மேலோங்கி விம்மிப் பருத்துள்ள தனபாரங்களினும், அன்னார் நிற்கும் லாயக்கான நிலையினும், புத்தி செல்லும்படி விட்டு நீளவலைந்து திரிந்து மனஞ் சென்றவழி கெடாமல், ஞான நெறியினும் பொறுமையினும்,

நினது மெய்யடியர் திருக்கூட்டத்தினும், அவர்பாலும் நின்பாலும் உறுதி கொண்ட மெய்யன்பினும், மயக்கொழிந்துள்ள உண்மை விவேகம் நிறையப் பெற்ற நேசத்தினும், நின் பொற்றுணை யடிக்கண்ணும், எனது நெஞ்சம் நிலைபெற்றுய்யுமாறு நீ திருவருள் சுரந்தாள்வையோ? மிக்க வளப்பம் பொருந்தியுள்ள தேவை நகர்க்குரிய மகராசியே! மலையரசனுக்கு இரண்டு கண்மணிபோன்று தோன்றி மலையின்கண் வளர்ந்தோங்கிய தேவமாதரசியே!

குறிப்புரை:—மலையமர் காதலியாம் தெய்வப் பெண்மணியே! என் மன மானது தீய மாதரார்தம் வஞ்ச சாலங்களில் செல்லவிடாது உத்தம மான ஞான நிலைக்கண் செலுத்தித் திருவருள் பாலித்தருள நின் இணையடி மலர்க்கு வந்திக்கின்றனன் என்பது.

தெட்டுதல் என்னுஞ்சொல் தல் கெட்டு தெட்டென நின்று, வஞ்சித் தல் எனும் பொருள்தந்து நிலவியது.

பழிப்ப வெடுத்த மாதர், விலைமாதராகும். (2)

௩. பூதமுத லாகவே நாத்பரி யந்தமும்
பொய்யென் றெனைக்காட்டியென்
போதத்தி னடுவாகி யடியீறு மில்லாத
போதபூ ரணவெளிக்குள்
ஏதுமற நில்லென் றுபாயமா வைத்துநினை
வெல்லாஞ்செய் வல்லசித்தா
மின்பவுரு வைத்தந்த வன்னையே நின்னையே
யெளியேன் மறந்துய்வனோ
வேதமுத லானநல் லாகமத் தன்மையை
விளக்குமுட் கண்ணிலார்க்கு
மிக்கநின் மகிமையைக் கேளாத செவிடர்க்கும்
வீறுவா தம்புகலும்வாய்
வாதநோ யாளர்க்கு மெட்டாத முக்கணுடை
மாமருந் துக்கமிர்தமே
வரைராச னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்கா தலிப்பெணுமையே.

பொழிப்புரை:—பிருதிவி முதல் பஞ்சபூதங்களோடும் நாதம் ஆம் தத்துவம் வரையில் கேவலம் மித்தையேயென்று யெனக்கறிவித்தல் செய்து என் புத்தியினூடாய் ஆதியந்தமற்ற பூரண ஞானகாயத்தின்கண்

ஒன்றுமின்றி யேகமாய் நிற்பாயென்றே தாந்திரீகமாக நிலைசெய்து, யெண்ணு மெண்ணங்களனைத்தும் கைகூடுமாறு அதற்கான போத நிலையையு மீந்து இன்பவுருவாக்கியருளின என்னருமை யம்மையே! இவ்வேழைத் தமியேன் நின்னை நினையாது மொழிவனோ? நான்மறை முதல் ஆகமாதிகளை யெலாம் நன்குற விளங்கச் செய்கின்ற ஞான நேத்திர மற்றவர்க்கும், உத்தமமான நின் மகிமையைக் கேட்டறியாச் செவிடர்க்கும் விதண்டாவாதம் புகலும் வாதமதத்தினர்கட்கும் பொருந்துமாறில்லா திரிநேத்திரதாரியாம் திவ்யாமிர்தத்திற்கும் மேலான தேவாமிர்தமே! பர்வதராஜனுக்கு இரண்டு கண்மணிபோன்று தோன்றியருளி மலைமீது வளர்ந்தோங்குந் தெய்வப் பெண்ணரசியே!

குறிப்புரை :—உமையம்மையே! மண்முதல் நாதவீறு யுள்ளனயாவு மித்தையே யென்று யெனக்கோதி, அறிவுக்கும் அறிவாகிய ஞானவெளிக் கண் தங்குக, எனவே உத்திகூறிச் சர்வ வன்மை வாய்ந்துள்ள திவ்ய ஞான சொரூபத்தை யருளிச் செய்த நற்றாயே! இத்தகைய காருணிய பேருபகாரியாம் நின்னைவிட்டு வேறியாவரையுந் தொழுவனோ! என்பது.

இதனால், பூதத்துவமுதல் நாதபரியந்தமுள்ளவை யனைத்தும் அநித்தியத்துவமே யென்பது தோன்ற நின்றது. (3)

ச. மிடியிட்ட வாழ்க்கையா லுப்பிட்ட கலமெனவு
மெய்யெலா முள்ளு டைந்து
வீறிட்ட செல்வர்தந் தலைவாயில் வாசமாய்
வேதனைக ளுற வேதனுந்
துடியிட்ட வெவ்வினையை யேவிநான் பாவிநான்
றொடரிட்ட தொழில்க ளெல்லாந்
துண்டிட்ட சாண்கும்பி யின்பொருட் டாயதுன்
றொண்டர்பணி செய்வ தன்றோ
வடியிட்ட செந்தமிழி னருமையிட் டாரூரி
லரிவையோர் பரவை வாயி
லம்மட்டு மடியிட்டு நடைநடந் தருளடிக
ளடியீது முடியீ தென
வடியிட்ட மறைபேசு பச்சிளங் கிள்ளையே
வளமருவு தேவை யரசே
வரைராச னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காதலிப்பெண்ணுமையே.

பொழிப்புரை :—வறுமையி லகப்பட்ட இப்பொய் வாழ்விஞலே உப்பு வைத்த மட்பாண்டமனைய என் உடலெல்லாம் செக்குவிட்டு, மிக்க தனவந்தர்களது தலைவாயிற்படியில் ஸ்திரவாசமாக நின்று மனந்துயரெய்த நான்முகனும் வினைகளைத் தூண்டி யனுப்பினுன்; கொடிய தீயவனுய யானே, ஆரம்பிவித்த காரியாதிகளெல்லாம் துண்டு செய்யப்பட்ட ஓர் சாணளவு தாய வயிற்றினுக்கு ஈடுபட்டொழிந்தனவே! இவைகளை யொழித்து தேவரீர்தம் திருத்தொண்டுடையார்க்குத் தொண்டு புரிவது இனி எந்த சமயமோ! அருமைவாய்ந்த வடித்தெடுத்ததான பூர்வீக இனிய செந்தமிழின் பெருமையை யுணர்ந்து திருவாரூரிலேயுள்ள அரிய தவசீலியாம் பரவை நாச்சியாரது தலைவாயிற்படி வரையில் தம் திருப்பாதத்தால் நடந்து சென்ற எம்பெருமானது அடியு முடியு மிவையென்று கண்டறிந்தோதிய நால்வேதங்களையும் ஓதுகின்ற பசுமைவாய்ந்த இளமைக்கிளியே! இன்னும் வளப்பமுள்ள தேவையம்பதிக் கரசியே! பர்வதராசனுக்கு இரு கண்மணி போன்ற புத்திரியே!

குறிப்புரை :—மலைவளர் தெய்வப் பெண்ணரசியே! யான் யென் சாண் வயிறு நிறப்புவதற்கே காலம் ஈடுபட்டுப் போகிறபோது நின் தொண்டர் தம் தொண்டு ஏற்றப் போதிய போதற்றவனுய்த் தியங்குகின்ற நாயினேன் நின் தொண்டர்க்குத் தொண்டனுதல் என்று கொலோ! என்பதாம்.

எம்பெருமான், திருவாரூர் திருவீதியின்கண் திருவடிபட நடந்து பரவையகஞ் செல்லுமாறு ஆக்குவித்தது, நம் தொன்மைச் சுந்தரனுர் பக்திரசம் பொங்கப் பாடியருளிய பழந் தமிழ்ப் பண்ணிசை யென்பதே நன்கு புலனுயது. (4)

ரு. பூரணி புராதனி சுமங்கலை சுதந்தரி
புராந்தகி த்ரியம்பகி யெழிற்
புங்கவி விளங்குசிவ சங்கரி சஹஸ்ரதள
புட்பமிசை வீற்றி ருக்கும்
நாரணி மனுதீத நாயகி குணுதீத
நாதாந்த சக்தி யென்றுன்
னுமமே யுச்சரித் திடுமடியர் நாமமே
நானுச் சரிக்க வசமோ
ஆரணி சடைக்கடவு ளாரணி யெனப்புகழ
வகிலாண்ட கோடி யீன்ற
வன்னையே பின்னையுங் கன்னியென மறைபேசு
மானந்த ரூப மயிலே

வாரணியு மிருகொங்கை மாதர்மகிழ் கங்கைபுகழ்
வளமருவு தேவை யரசே
வரைராச னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்கா தலிப்பெணுமையே.

பொழிப்புரை :—வளம் பொருந்திய தேவையம்பதி வாழ் தெய்வப் பெண்ணரசியே! நீயோ, சர்வ பரிபூரணியாவாய்; அன்றிப் பழமையா யுள்ள நித்ய மங்கள சுமங்கலியுமாவாய்; இன்னும் சர்வத்தினும் சுதந் தரத்துவமு முடையவளாவாய்; மற்றும் திரிபுராதியர்க்குச் சங்கார கர்த் தவ்ய முடையவளுமாவாய்; பின்னும் மூன்று நேத்திரியுமாயுள்ளாய்; வனப்பு வாய்ந்துள்ள தெய்வ மாதருமாவாய்; பிரகாசியாநின்ற சிவத்வ சங்கரிக்குந் தெய்வமுமாவாய்; ஆயிர மிதழ்களோடுங் கூடிய தாமரை மலரின்கண் வீற் றிருக்கும் நாராயணன் தங்கையு மாவாய்; மனதிற் கப்பாற்பட்ட பர தேவதையு மாவாய்; சகல கேவல்குண ரஹிதமானவளு மாவாய்; நாத தத்துவத்திற்கு அப்பாற்பட்ட பராசத்தியுமாவாய்; ஆக இத்தகைத் தெய்வ மணியாய் விளங்கும் நினது திவ்ய திரு நாமாதிகளைத் தினந்தமும் உருச் சபித்துத் துதிசெய்து வரும் மெய்யன்பர்தம் நாமத்தையேனும் யான் உருச் சபித்துரை செய்யும்வகை யுடையவனுவனே! கங்கை சூடிய சடையை யுடைய கடவுளர், வேதமாதாவென்று கொண்டாடித் துதிக்கும்படியானவ ளும், பிரபஞ்சாதிகளனைத்தையும் சிருட்டி செய்தாளற்குரிய பரம மாதாவு மானோய்! நின்னையே இன்னு மின்னும் கன்னிகையென்றே வேதாதிகள் போற்றும்படியான பரானந்த சொரூபமும் மயிற்சாயலு முடையவளே! கச்சணியுங் கொங்கைகளுடைய மங்கையர் கொண்டாடத்தக்க கங்கா தேவியார் துதிபுரியும் பெருமைவாய்ந்த எனம்மையே! பர்வதராஜனது இரு கண்மணிக் கொப்பாம் புத்திரியே!

குறிப்புரை :—மலைவளரும் தெய்வப் பெண்ணரசியே! பூரணி யென்ப தாதிய பலவகையான நின்னுமோச்சாரணம் பயிலும் நின் மெய்யடிவர்தம் நாமத்தையேனும் யான் உருச்சபித்துய்யும் வகையறியா துள்ளபோது, நின் திருநாமங்களைக் கூற லெங்ஙன முய்யப் பெறுவேன்! என்பது.

மேற்கூறிய நாமாதிகளனைத்தும், சிவசம்பந்தத்தால் அம்பிகைக்கு யேற்ற மாயினமையான் காரணப் பெயராயமைந்தது.

சஹஸ்ரதள புஷ்பமிசை எழுந்தருளியுள்ளதாவது :—லலாடஸ்தான நடுவே ஆயிரவிதழ்க்கமல மத்தியில் வசித்துவரும் மகிழ்வுடைய பிரகாச மான குண்டலி சத்தியாம். அவ்வற்புத தேவியார்தம் உபயவடி நின்றூறி வரும் தேனென ருசிக்கும் அமிர்தமானது அண்ணக்குப் புரைவழியிறங்க, அதனைத் தன்னுவினல் ருசித்திழுத்துச் சரீர முற்றிலும் பாவச்செய்து

அதனால் மூலாக்னியை தணி செய்தல் யோக பான்மையா மென்க. இதன் விரிவை யோகநூன்முறை கொண்டுணர்க. (5)

சா. பாகமோ பெறவுனைப் பாடவறி யேன்மல
  பரிபாகம் வரவு மனதிற்
பண்புமோ சற்றுமிலை நியமமோ செய்திடப்
  பாவியேன் பாப ரூப
தேகமோ திடமில்லை ஞானமோ கனவிலுஞ்
  சிந்தியேன் பே ரின்பமோ
சேரவென் றூற்கள்ள மனதுமோ மெத்தவுஞ்
  சிந்திக்கு தென் செய்குவேன்
மோகமோ மதமோகு ரோதமோ லோபமோ
  முற்றுமாற் சரிய மோதான்
முறியிட் டெனைக்கொள்ளு நிதியமோ தேடவெனின்
  மூசுவரி வண்டு போல
மாகமோ டவும்வல்ல னெனையாள வல்லையோ
  வளமருவு தேவை யரசே
வரைராச னுக்கிருகண் மணியா யுதித்தமலை
  வளர்கா தலிப்பெண்ணுமையே.

பொழிப்புரை :—யான், பரிபாகி யாகும்படியாக நின் சீரினைச் சிறிது பாடித் துதி செய்ய வறிந்திலன்; இதன்றி, மல பரிபாகம் யெய்தற்கு மனஞ் சற்றுங் குணப்படவு மில்லை; இன்னும், இயம நியமாதி யோக நிட்டை புரிவோ மென்னிலோ, மகாபாவ சரீரமாம் எனதுடல் ஒத்துத் திடமுறவில்லை; அன்றி மெய்ஞ்ஞானத்தைக் கனவிலுங் கருதல் செய் திலேன்; பின்னும், பேரின்பமாம் சதானந்த முறவோ, வஞ்ச நெஞ்சம் மிகவும் ஆலோசனை செய்கின்றது; இந்நிலையினனாய யான் யாது செய வல்லேன்! மற்றும், காமக் குரோத லோப மோக மத மாச்சரிய மென்னும் இவையாறு உடற் பகைகளும் என்னை அடிமைப்படுத்தி முறி யெழுதியது போன்றுச் சுதந்தரித்துக் கொண்டனவே! மற்றும் பொருள் தேட்டம் செய்யவெனிலோ, வரிகளையுடைய வண்டினையொப்ப பறந்து ஆகாயத்தி னும் செல்வேன்; ஆகவே, இத்தகையேனை ஆண்டருள்புரியவும் செய் வையோ! வளப்பம் பொருந்திய தேவையம்பதிக் கரசியே! பர்வதராஜ குமாரியே! மலையில் வளர்ந்தோங்கும் உமையம்மையே!

குறிப்புரை :—இத்தனைக் கொடிய அபாத்திரனாய ஏழை மதியனேயும், பரிபக்குவத்தால் நின்னைப் பலவாறாகப் பூஷித்துத் துதிசெய்யவும் பற்றாத

அதி கேவலனுன உன்மத்தனையும் நீ ஆண்டருள்செய்ய தயவு வைத்தாள் வையோ என்பது. (6)

எ. தூளேறு தூசுபோல் வினையேறு மெய்யெனுந்
தொக்கினுட் சிக்கி நாளுஞ்
சுழலேறு காற்றினிடை யழலேறு பஞ்செனச்
சூறையிட் டறிவை யெல்லாம்
நாளேற நாளேற வார்த்திக மெனுங்கூற்றி
னட்பேற வுள்ளு டைந்து
நயனங்க ளற்றதோ ரூரேறு போலவே
நானிலந் தனி லலையவோ
வேளேறு தந்தியைக் கனதந்தி யுடன்வென்று
விரையேறு மாலை சூடி
விண்ணேறு மேகங்கள் வெற்பேறி மறைவுற
வெருட்டிய கருங் கூந்தலாய்
வாளேறு கண்ணியே விடையேறு மெம்பிரான்
மனதிற் கிசைந்த மயிலே
வரைராச னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காதலிப்பெணுமையே.

பொழிப்புரை :—தூசனாம் அழுக்கேறற்கான வஸ்திரமனைய கன்ம வினைகள் யேறியுள்ள இம்மானிட சரீரமாகிய தோற்பைக்குள்ளாக நாளனைத்தும் அடைபட்டு திரிகாலமுஞ் சுழன்றுவரும் காற்றிடைப்பட்ட பஞ்சானது எவ்வாறு தீப்பற்றி பறக்குமோ அதேபோலப் பறந்து திரியுமாறு என்னறிவினைக் கொள்ளை கொண்டு நாளா விர்த்தியாக வயோதிகமென்னும் இயமனது சிநேகம் பெருகி வரவும் மனமானது வாட்டமுற்று, நேத்திரா பாவமான ஓர் ஊர்ப் பன்றியை யொத்தே இப்பூமியின்கண் அலைப்புற்றுத் திரிதலும் நினக்குச் சம்மதிதானோ? மதன் அரோகணித்துச் செலுத்தானின்ற யானையையும், மேகங்களான யானையையும் வெற்றி பெற்று மணங்கமழும் மலர்மாலை யணிந்து, ஆகாய மளாவிச் செல்லும் மேக படங்களானவை பர்வத மடைந்து அப்புற மறைந்தொழியுமாறு வெருட்டல் செய்த கரிய அளகபாரத்தை யுடைய தெய்வத் திருமகளே! வாளாயுதம் போன்ற நீட்சி பொருந்திய நேத்திரதாரியே! இடபாரூடனை எம்மான் றன் இதயகமல மகிழ்தற்கான மடமயிலன்னாய்! பர்வதராஜனுக்கு இரு கண்களை யொத்த புத்திரியே! மலைவளர் உமையம்மையே!

குறிப்புரை :—மலைவளர் காதலியாம் உமாதேவியே! இருவினைக்

கென வந்த யிந்த தனுவினிற் கட்டுண்டு பலவாறான கட்டமனைத்து மனுபவித்து அந்தத்திலே இயமதர்மனுக்குப் பயந்து உளமருண்டு, கண்மறைந்துள்ள ஊர்ப்பன்றியை யொத்தே யலைந்து திரியவோ! என்பது.

ஈண்டு, வேள் ஏறு தந்தி யென்றது மன்மத வாகனமாய இருளினைக் கருமை நோக்கி யானையென உவமை கூறினர் போலும்; வாள் வடிவமைந்தயான் 'வாளேறு கண்ணி' எனலானார்.

துகள், என்பது தூளென லாயினர் போலும்.

அம்மையின் கரிய கூந்தலைக்கண்டு வெட்கியே, ஆகாய மேகங்கள் மலைப்புறம் மறைந்த தென்றனர் போலும். இதனால், உத்தமஜாதி ஸ்திரீகளின் கூந்தல் அவ்வளவு கருமை வாய்ந்த தென்பதைப் புலப்படச் செய்ததாம். (7)

அ. பூதமொடு பழகிவள ரிந்திரிய மாம்பேய்கள்
புந்திமுத லான பேய்கள்
போராடு கோபாதி ராக்ஷசப் பேய்களென்
போதத்தை யூட ழித்து
வேதனை வளர்த்திடச் சதுர்வேத வஞ்சன்
விதித்தானி வல்ல லெல்லாம்
வீழும் படிக்குனது மௌனமந் த்ராதிக்ய
வித்தையை வியந் தருள்வையோ
நாதவடி வாகிய மகாமந்த்ர ரூபியே
நாதாந்த வெட்ட வெளியே
நற்சமய மானபயிர் தழையவரு மேகமே
ஞானவா னந்த மயிலே
வாதமிடு பரசமயம் யாவுக்கு முணர்வரிய
மகிமைபெறு பெரியபொருளே
வரைராச னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்கா தலிப்பெண்ணுமையே.

பொழிப்புரை:—பஞ்ச பூதாதிகளோடும் நெருங்கி வளர்ந்தோங்கு பஞ்சேந்திரியங்களான பிசாசங்களென்ன, புத்தி முதலாம் பிசாசங்களென்ன ஆய இவையனைத்தும் எனது மெய்யறிவினை உள்ளத்தினிடத்தே அழிவுறச் செய்து, துன்பத்தை யுண்டுபண்ணி வருமாறு மறையவனுட விதித்து விட்டான்; ஆகவே, இத்தியாதி துன்பங்கள் யாவையும் ஒழி மாறதாக நின் மௌன மந்த்ரமாம் சுதந்தர சக்தி வித்தையினையும் அ

பொடும் மகிழ்வெய்தி யநுக்ரகிப்பையோ? நாத மயமாம் மகாமந்த்ர சொரூபியே, அன்றி, நாத முடிவான பராகாயமே! சைவமெனும் சற் சமயப் பயிரானது செழிப்புற்றோங்க வந்தருளிய பசிய மேகசொரூபமே! ஞானனந்த மடமயிலன்னாய்! குதர்க்கவாத விவகாரிகளான புறச்சமய வாதியர்களெவர்க்கும் தோன்றப்பெறாத அரிய பெருமையோடுங் கூடிய மிக மேலான உயர் வொப்பிலா பரதேவதையே! பர்வத ராசனுக்கு இனிய இருகண்மணி போன்று விளங்கும் உமையம்மையே!

குறிப்புரை:—பலவேறு வகைப்பட்ட சமயங்களுக் கெல்லாம் சைவ சமயமே மிகமேலாம் உண்மைச் சமய மென்பதும், பலவாற்றானும் சாலச் சிறந்த தென்பதும் ஆன்றோர் அறிவர். ஆகவே இத்தகைய தத்வம் நில விய மெய்ச்சமயமானது பற்றியே ஆசிரியர் "நற்சமயமான பயிர் தழையவரு மேகமே" யென்றார் போலும்.

பர்வதமே யிடமாக் கொண்டோங்கிய உமையம்மையே! பஞ்ச பூதாதியோடுறழ்ந்து விளங்கிவரும் இந்திரியாதி பிசாசங்கள் என் புத்தியை அநியாயமாய் மயக்கி துன்பத்தைப் பெருக்கிடுமாறு வஞ்சபிரமன் படைத்து விட்டனன்; ஆகவே இத்துன்பங்கள் யாவு மொழிந்து போமாறு நினது மேலான மோன மந்த்ரத்தினை எளியேற்கும் மனப் பூர்ணமாக அன் பொடும் அருளிச் செய்வையோ என்பதுவே இதன் முடிவாம் சார மாகும். (8)

## அகிலாண்ட நாயகி

### சந்த விருத்தம்

க. வட்ட மிட்டொளிர்பி ராண வாயுவெனு
நிகள மோடுகம னஞ்செயு
மனமெ னும்பெரிய மத்த யானையையென்
வசம டக்கிடின்மு மண்டலத்
திட்ட முற்றவள ராச யோகமிவன்
யோக மென்றறிஞர் புகழவே
யேழை யேனுலகி னீடு வாழ்வனினி
யிங்கி தற்குமனு மானமோ

பட்ட வர்த்தனர் பராவு சக்ரதர
பாக்ய மானசுக யோகமும்
பார காவியக வித்வ நான்மறை
பாராய ணஞ்செய்மதி யூகமும்
அட்ட சித்தியுந லன்ப ருக்கருள
விருது கட்டியபொ னன்னமே
அண்ட கோடிபுகழ் காவை வாழுமகி
லாண்ட நாயகியெ னம்மையே.

பொழிப்புரை :—வட்டமிட்டுத் தோன்றிவரும் பிராணவாயு வென்கின்ற விலங்குடனே நடவாநின்ற மனமாகியதோர் பெரிய மதங்கொண்ட யானையினை என்பால் அடங்கி நிற்கும்படி செய்தருளுவையே யாயின், மூன்று லோகங்களிலேயும் விரும்பத் தக்கதாயுள்ள வளமான இராஜ யோகமே இவனது மேலான யோகமென்று மகாமேதாவியர் எவரும் கொண்டாடும்படியாக இந்த எளியவனாகிய யான் இவ்வுலகத்தின்கண் நீண்டகாலம் வரையிலும் வாழ்ந்திடுவேன்; இனி இதற்கும் அநுமானந் தானுண்டோ? பட்டவர்த்தனரியர் புகழத்தக்க சக்ரவர்த்தித்துவமாம் என்னும் பாக்கியமான சுப யோகாதிகளையும், பெரிய காவியங்களாகும் கவித்துவத்தையும், சதுர் மறைகளையும் பாராயணமாய்ச் சொல்லத்தகுந்த நுட்ப புத்தியையும், இன்னும் அட்டமா சித்திகளையும் உண்மை யடியவர்கட்கனுக்கிரகிக்க வேண்டி கங்கணம் பூண்டருளிய பொன்னெனப் பிரகாசிக்கா நின்ற பேடன்னப் பக்ஷியை யொத்த தேவியே! அண்ட கோடிக ளெல்லாம் மெச்சத்தக்க திருவானைக்காவில் வாழ்ந்தொளிரும் அகிலாண்டநாயகி யெனுந் திருநாமம் பெற்றருளிய என் பரம மாதாவே!

குறிப்புரை :—அகிலாண்ட நாயகியே! பிராண வாயுவும் மனமும் எனது வசப்பட்டு நிற்கும்படி நீ திருவருள் புரிவையே யாயின், திரிலோகங்களும் கொண்டாடும்படியாக யான் மிகவும் மேன்மையுற வாழ்ந்திடுவேன் என்பது. (1)

## பெரிய நாயகி

### விருத்தம்

க. காற்றைப் பிடித்துமட் கரகத் தடைத்தபடி
 கன்மப் புனற்கு ளூறுங்
கடைகெட்ட நவவாயில் பெற்றபசு மட்கலக்
 காயத்து ளெனை யிருத்திச்
சோற்றைச் சுமத்திநீ பந்தித்து வைக்கத்
 துருத்திக்குண் மது வென்னவே
துள்ளித் துடித்தென்ன பேறுபெற் றேனருட்
 டோயநீ பாய்ச்சல் செய்து
நாற்றைப் பதித்தென ஞானமாம் பயிரதனை
 நாட்டிப் புலப் பட்டியு
நமனென தீப்பூடு மணுகாமன் முன்னின்று
 நாடுசிவ போக மான
பேற்றைப் பகுத்தருளி யெனையாள வல்லையோ
 பெரியவகி லாண்ட கோடி
பெற்றநா யகிபெரிய கபிலைமா நகர்மருவு
 பெரியநா யகி யம்மையே.

பொழிப்புரை :—பிராண வாயுவினைப் பிடித்து மட்பாத்திரத்தில் அடைத்தது போன்று கன்மமாய தண்ணீரிலே ஊறி வருகின்றதான கேவலமாய ஒன்பது துவாரங்களையுடைய பச்சையான மட்பாத்திர மொத்த இந்தச் சரீரத்தினூடே யெனை நிறுத்திவைத்து, இதனுள் சோற்றினை நிறப்பி நீ பந்தகஞ் செய்து வைத்திட, அது, தோற்பைக்குள்ளாகச் செலுத்தி வைத்துள்ள கள்ளைப் போன்று துள்ளியோடி யான் பெற்ற பிரயோசன மென்னவோ? யெதுவுமில்லை; ஆகையினாலே, இனி நீ உனது திருவருளாகிய நன்னீர் பாயச்செய்து நாற்றைப் பதிவு செய்ததுபோல ஞானமாகிய பயிரை நட்டு, புலன்களாகும் பட்டி மாடுகளும், நமனாகிய தீப் பூண்டுகளும் சேராதபடி நீ நேரே நின்று என் விருப்பத்திற் கேற்ற சிவானு பூதியாம் பரபோகத்தை எனக்குப் பங்கிட்டுக் கொடுத்து எளியனை ஆண் டருள் புரிய எழுந்தருளி வாராயோ! மிகப் பெரிய இந்த அகில கோடிகளை யெல்லாம் பெற்றருளிய நற்றாயே! பரந்து விரிந்துள்ள கபிலை மாநகர் மேவியருளிய பெரியநாயகி யம்மையே!

குறிப்புரை :—பெரியநாயகி அம்மையே! நீ யென்னை இம்மானிட

சரீரத்தின்கண் சேர்ப்பித்து, தோற்றுருத்திக் குட்பட்ட கள்ளினை யொத்தே துள்ளிக் குதித்தோடி என் பயனடைந்தேன்? ஒன்றுங் காணேமே! இனியேனும், நின் திருவருளாம் தண்ணீர் பாய்த்தருளிச் சிவாநுபூதிப் பயிரின் பலனை எனக்குப் பிரித்துக் கொடுத்து எனைக் காத்தருள வேண்டும் என்பது. (1)

## தந்தைதாய்

க. தந்தைதாய் மகவுமனை வாழ்க்கை யாக்கை
சகமனைத்து மௌனியரு டழைத்த போதே
இந்திரசா லங்கனவு கான னீரா
யிருந்ததுவே யிவ்வியற்கை யென்னே யென்னே.

பொழிப்புரை:—பிதா, மாதா, புத்திரர், மனைவி ஆகிய இன்னவர்களுடனே சேர்ந்து நடத்தும் இல்லற வாழ்வென்ன, இவ்வுடம்பு முதல் இப்பிரபஞ்சாதிய வெல்லாம், மௌன குருவின் திருவருளுபதேசமானது முதற் கொண்டே, இந்திர சாலத்தை யொத்தும், சொப்பனம் போன்றும், கானல் நீர் போன்றும் விளங்கினவே! ஆகவே இவ்வித வியற்கையின் தன்மை யாதோ?

குறிப்புரை:—ஒப்பற்ற மௌன தேசிகன் திருவருள் என்பால் பொருந்திய பின்னரே பிதா மாதா மனைவி மைந்தர் முதலான பிரபஞ்ச வாழ்வனைத்தும் இந்திர சாலம், கனவு இவை போன்று சகலமும் முழு மித்தையாய்த் தோன்றி விட்டது என்பது. (1)

உ. என்னைநான் கொடுக்கவொருப் பட்ட கால
மியாதிருந்தென் னெதுபோயென் னென்னை நீங்கா
அன்னைபோ லருள்பொழியுங் கருணைவாரி
யானந்தப் பெருமுகிலே யரசே சொல்லாய்.

பொழிப்புரை:—எனையான் கொடுத்தற்கு மனமாதி ஒருமைப் பட்டபோது எவை யிருந்தாலென்ன, எவை போயினுமென்ன? என்னை யகன்றொழிதலில்லா தாயைப்போன்று திருவருண் மாரி பொழியா நின்ற காருணிய கடலே! பரானந்த மேக படலமே! இறையவனே கூறுவாயாக என்பது.

குறிப்புரை:—சகலமான பதார்த்தங்களையும் ஆண்டனுபவிக்கும்படியான தலைவனை வெறுத்தொழியும்போது, அந்தப் பண்ட பதார்த்தாதிகள்

இருந்தாலும் அன்றிப் போய் விட்டாலும் என்னவாகப் போகிறது ? ஒன்று மின்றும் ; ஆகவே இருவகையானும் பயனில்லை யென்பதாயிற்று. (2)

௩. அரசேநின் றிருக்கருணை யல்லா தொன்றை
யறியாத சிறியேனு னதனுன் முத்திக்
கரைசேரும் படிக்குனருட் புணையைக் கூட்டுங்
கைப்பிடியே கடைப்பிடியாக் கருத்துட் கண்டேன்.

பொழிப்புரை :—அருளரசே! யான் தேவரீரது திருக்கருணையன்றி மற்றொன்றையு மறிந்திடாத சர்வ சாமானியச் சிறுவனுதலால் நான் மோக்ஷ மாகிய கரையைப் பெறுமாறதாக நினது திருவருட் புணையினைச் சேர்ப்பிக் கும் நின் கைப்பிடியே கண்டிப்பான பிடிப்பாகக் கருத்தினில் தீர்மானஞ் செய்து கொண்டேன்.

குறிப்புரை :—இறைவனே ! யான் நின் திருக்கருணையன்றி மற்றெ வையுங் கனவினுங்கருதல் செய்கிலேன் ; ஆதலால் முத்தி யெனுங் கரை சேருமாறு நின் திருவருட் பிணையைக் கூட்டி யருளும்படியாகக் கடைப்பிடி யாக் கொண்டேன் என்பது. (3)

௪. கண்டேனிங் கென்னையுமென் றன்னையு நீங்காக்
கருணையுநின் றன்னையுநான் கண்டேன் கண்டேன்
விண்டேனென் றெனைப்புறம்பாத் தள்ளவேண்டாம்
விண்டதுநின் னருட்களிப்பின் வியப்பா லன்றோ.

பொழிப்புரை :—இவ்விடத்திின்கண்ணே என்னையும், என்னை நீங்கப் பெறாத கருணையையும், நின்னையும் யான் நன்கு கண்டு களிகொண்டேன் ; இதனால் யான் வெளியிட்டுரைத்தேனென்று எனைப்புறம்பே தள்ளிவிடலா காது ; அவ்வாறு யான் வெளியிட்டதும் நின் திருவருட் களிப்பின் பெருக்காம் ஆச்சரியத்தாலே யாகும் எனக்கொள்க. என்பது.

குறிப்புரை :—இறைவனே ! இங்கெனையும், நின்றிருக்கருணையையும், நின்னையும் யான் நன்குறக்கண்டு கொண்டேன் என்பது. ஆனல் இங்கி தனை வெளியிட்டதற்கு வெகுளற்க. (4)

௫. ஓவென்ற சுத்தவெளி யொன்றே நின்றிங்
குயிரையெல்லாம் வம்பினென வுவட்டாவின்பத்
தேவென்ற நீகலந்து கலந்து முத்தி
சேர்த்தனையேற் குறைவாமோ செகவிலாசம்.

பொழிப்புரை :—ஓவென்று கொண்டாடும் படியான பராகாய மொன்றிலேயே நிலைபெற்றிருந்து இவ்வுலகத்துள்ள ஆன்மாக்களை யெல்லாம் வருவீர்களாக வென்றழைப்பித்து தெவிட்டவிலா பேரானந்தத்தினை யளிக்குந் தெய்வமென வழங்கும் நீ கூடிக்கூடி மோக்ஷபதவியிற் சேர்ப்பாயானால், இப்பிரபஞ்ச லீலாவிசேடம் குன்றிப் போமோ.

குறிப்புரை :—ஓ, வென்ற ஓர் ஒப்பற்ற உண்மைத் தொனியால் பரவி விரிந்துள்ள பராகாயத்தூடே ஒன்றி நின்று ஆன்மகோடிகளை யெல்லாம் வருவித்து மோக்ஷத்திற் சேர்ப்பின் ஜெகத் பிரசக்தி குறைவெய்திப் போமோ ? என்பது. (5)

சு. செகத்தையெல்லா மணுவளவுஞ் சிதறு வண்ணஞ்
சேர்த்தணுவில் வைப்பையணுத் திரளை யெல்லாம்
மகத்துவமாப் பிரமாண்ட மாகச் செய்யும்
வல்லவா நீநினைந்த வாறே யெல்லாம்.

பொழிப்புரை :—சேதனுசேதனப் பிரபஞ்சாதிய வனைத்தையும் பேரணுப் பிரமாணமேனும் கெடாதபடி, அணுவின்கண்ணே ஒருப்படுத்தி வைத்திடுவை, அணுக்கூட்டங்களை யெல்லாம் பெருமையுளவாகிய பிரமாண்ட சொரூபமாகச் செய்யக்கூடிய சர்வ பிரசக்திவாய்ந்தவனே ! எல்லாமும் நீ நினைத்த வண்ணமாயே முடியும்.

குறிப்புரை :—ஏ வல்லவனே ! இப்பிரபஞ்சங்க ளனைத்தையும் சிறிதேனும் கெடாதவகையாக அணுக்கூட்டத்தில் அடக்குவை ; அன்றி அவ்வணுவை பிரமாண்டமாகவும் ஆக்குவிப்பாய் ; யாவும் நின் எண்ணப் படியேயாம். என்பது. (6)

எ. சொல்லாலே வாய்துடிப்பத் தல்லா னெஞ்சந்
துடித்திருக ணீரருவி சொரியத் தேம்பிக்
கல்லாலே யிருந்தநெஞ்சுங் கல்லான் முக்கட்
கனியேநெக் குருகிடவுங் காண்பேன் கொல்லோ.

பொழிப்புரை :—சொல்லுஞ் சொற்களினுல் வாயானது பதைபதைப்பதல்லாது, மனம் பதைப்புற்று இரண்டு நேத்திரங்களும் நீரை அருவி போன்று சொரியா நிற்ப, வாட்ட முற்றுக் கல்லால விருக்ஷ நீழலின்கண் வீற்றிருந்தருளும் திரிநேத்திரதாரியான கனியனையாய் ! கல்லொத்த மனமும் நெகிழப் பெற்றுருகவும் கிடைக்கப் பெறுவனோ என்பது. (7)

# பெற்றவட்கே

க. பெற்றவட்கே தெரியுமந்த வருத்தம் பிள்ளை
பெறும்பேதை யறிவாளோ பேரா னந்த
முற்றவர்க்கே கண்ணீர்கம் பலையுண் டாகு
முறுதவரே கன்னெஞ்ச முடையராவார்.

பொழிப்புரை :—ஓர் பிள்ளையைப் பெற்ற தாய்க்கே கர்ப்ப முற்றிருந்த கஷ்டத்தை யறியப்படுமன்றி மற்றையள் அறிய மாட்டாள்; அதே போன்று பேரின்பம் பெற்றார்க்கே கண்ணீரும் கம்பலையும் ஏற்பட்டொழுகும், அங்ஙனம் நீர்பெருக வில்லாதவரே கன்மனங் கொண்டவராவார்கள் என்பது. (1)

உ. ஆவாவென் றழுதுதொழுங் கையராகி
யப்பனே யானந்த வடிகளேநீ
வாவாவென் றவர்க்கருளுங் கருணை யெந்தாய்
வன்னெஞ்சர்க் கிரங்குவதெவ் வாறு நீயே.

பொழிப்புரை :—ஐயோவென்ற, அழுகையுடன் பணிகின்ற கரங்களை யுடையோராய், ஐயனே! சுகமளிக்குந் தெய்வமே! நீவாவா வென்றழைத்தோர்க்குத் திருவருள் புரிகின்ற கருணையையுடைய எனம்மையே! நீ வஞ்சமாய நெஞ்சினர்களுக்கு இரக்க முற்றருள் புரிவது எவ்வகையோ? என்பது.

குறிப்புரை :—நன்னெஞ்சினர்க்கு திருவருள் புரிவது நின் கருணைக் கியல்பாயிருக்க, உத்தமரல்லா மற்றவராம் வன்னெஞ்சினர்க்கும் அருள் புரிவது அழகோ? என்பது. (2)

ந. நீயேயிங் கெளியேற்குந் தாக மோக
நினைவூடே நின்றுணர்த்தி நிகழ்த்தலாலே
பேயேற்குந் தனக்கெனவோ ரன்பு முண்டோ
பெம்மானே யின்னமன்பு பெருகப் பாராய்.

பொழிப்புரை :—எனது நினைவுக்குள் நினைவாகத் தோன்றி வந்து தாகமோக விகாராதிகளை யெல்லாம் உண்டுபண்ணுபவ னாகின்றாய்; ஆகையால், இப்பேயனேற்கும் தனக்கென்றே ஓர் அன்புமுளவாங் கொல்லோ?

ஆனாலும், எம்பெருமானே! தேவரீர் இனியும் எளியேற்கு அன்பு மேலும் மேலும் விர்த்திசெய்தருளுவாயாக.

குறிப்புரை :—நீதானே தாகமோகாதி விகாராதிகளனைத்தையும் என்னினைவுக்குள் நினைவாயிருந் துண்டாக்குபவனாகிறாய் அதேபோன்று என்னன்பையும் இன்னும் பெருக்குவாயாக; என்பது. (3)

ச. பாராயோ வென்றுயர மெல்லா மையா
பகருமுன்னே தெரியாதோ பாவி யேன்முன்
வாராயோ வின்னமொரு காலா னாலு
மலர்க்காலென் சென்னிமிசை வைத்தி டாயோ.

பொழிப்புரை :—யானடைந்துவரும் துக்கங்களைச் சிறிது கண்பார்க்க வொண்ணாவோ? என்னையனே! யான் சொல்லியழுமுன்பாகத் தெரியவில்லையா! இப்பாவியா மென்முன்பாக இன்னுமோர் முறையேனும் வந்தருள் புரியாயோ! செந்தாமரை மலரொன்ன திவ்ய திருப்பாதங்களை யெனது சிரசின்மேல் சூட்டியருளாயோ!

குறிப்புரை :—என் துயராதிகளைச் சற்றுந் தீர்க்க வொண்ணாதா? என்றந்தையே! யான் அடிக்கடிக் கதறுவதழகோ! சர்வ வியாபியாந் தமக்கு யான் கூறுமுன் தெரியாதோ? ஆகையால் என்னேரே வந்து திருவடி தீக்ஷை செய்தருளவேண்டும். என்பது.

இதனால், திருவடி தீக்ஷை செய்தருளி அகக்கரணாதிகளைச் சுத்திகரித்தருள வேண்டுமென்பதாய் வேண்டினா ரென்பதாம். (4)

ரு. வைத்திடுங்கா லைப்பிடித்துக் கண்ணின் மார்பில்
வைத்தணைத்துக் கொண்டுகையால் வளைத்துக் கட்டிச்
சித்தமிசை புகவிருத்திப் பிடித்துக்கொண்டு
தியக்கமற வின்பசுகஞ் சேர்வ தென்றோ.

பொழிப்புரை :—அவ்வாறு என் சிரசின்மேலே சூட்டப்படும் திருவடித் துணையைக் கரத்தாற் பிடித்துக் கண்களிலொற்றி மார்பிடஞ் சேர்த்துத் தழுவிக் கைகளால் இறுகக் கட்டிப் பின்னர் மனத்தினும் பொருந்துமாறுக்கி மற்கடம்போல் பற்றிக்கொண்டே தியங்குத லொழிந்து பரமசுகமாம் பேரின்பம் பெற்றுய்தல் எப்போதோ!

குறிப்புரை :—விரும்பியவாறுகத் திருவடி தீக்ஷை பெற்றுய்யுங் காலம் எக்காலமோ வென்பதாம். (5)

௬. சேராமற் சிற்றினத்தைப் பிரித்தெந்நாளும்
திருவடிப்பே ரினத்துடனே சேராவண்ணம்
ஆராக நானலைந்தே னரசே நீதா
னறிந்திருந்து மாயையிலே னழுந்த வைத்தாய்.

பொழிப்புரை :—கீழ்மையான வினத்தவர்களைச் சேர்ந்தொழுகாமே தடுத்தாண்டு வந்தும், எப்போதும் நின் திருவடித் தாமரையைப் பற்றி நின்ற மெய்யன்பரைக் கூடாதபடி ஆராக யான் அலக்கணுற்றுழன்றமை யைத் தாம் தெரிந்திருந்தும் மாயையின்கண் ஆழ்த்திவைத்தது எதற் காகவோ ?

குறிப்புரை :—இறைவனே ! எனை கீழ்மையானோரைச் சாராது தடுத் திருத்தினாய் ; ஆனாலும், யான் நின் மெய்படியவரை சார்ந்துய்யாது வீணாக மாயையி லாழ்த்தின தெற்றுக்கோ ? (6)

௭. வைத்தபொரு ளுடலாவி மூன்று நின்கை
வசமெனவே யான்கொடுக்க வாங்கிக் கொண்டு
சித்தமிசைப் புகுந்ததுதான் மெய்யோ பொய்யோ
சிறியேற்கிங் குளவுரையாய் திகையா வண்ணம்.

பொழிப்புரை :—தேட்டஞ்செய்த திரவியமும் உடலுடனே பிராண னையும் நின்பால் யான் தத்தஞ்செய்ய, நீயுமனமுவந்து பெற்றுக்கொண்டு என் சித்தத்தின்கண் குடிகொண்டருளியது உண்மையோ, அன்றிப் பொய் மையோ, ஆகவே இந்நிலையில் என்மனமானது திகைப்புறாவாறு இச்சிறியவ னுக்கு அதன் உண்மர்மத்தை யோதியருள்வாய்.

குறிப்புரை :—இறைவ ! என்னுடல் பொருளாவியை நீ யேற்ற பின் னர் என்னுள்ளத் துறைந்த துண்மையோ மித்தையோ உண்மையை யெனக் கோதுக என்பது. (7)

௮. திகையாதோ வெந்நாளும் பேரா னந்தத்
தெள்ளமுத முதவாமற் றிவலை காட்டி
வகையாக வலக்கழித்தா யுண்டு டுத்து
வாழ்ந்தேனா னிரண்டுகான் மாடு போலே.

பொழிப்புரை :—எக்காலமும் பேரின்பமாம் தெளிந்த வமிழ்தினை எனக் கீந்துதவாது, கண் துளியினை மட்டும் சிந்துமாறு காண்பிவித்துப் பல வாறாக அலக்கழிவு செய்வையேயானால், மனமானது இயங்காவோ ?

னாளே, இரண்டு கால்களுள்ள மிருகத்தை யொத்தே காலங்கடத்தி வந்தேன்! என் செய்வேன் என்பது.

குறிப்புரை :—சிற்சுகோதயம் உண்டாமாறு திருவருள் புரியாயேல் மனந்தியங்கா தென்செயும்? கண்டுளி சிந்தக் காரியமென்னே? இரு கால் மாடெனத் திரிந்தலக்கணுற்றேன்! என்பது. (8)

௯. மாடுமக்கள் சிற்றிடையார் செம்பொ னுடை
வைத்தகன தனமேடை மாட கூடம்
வீடுமென்பாற் றொடர்ச்சியோ விடை விடாமன்
மிக்ககதி வீடன்றோ விளங்கல் வேண்டும்.

பொழிப்புரை :—மாடு, புத்திரர்கள், மனைவி, சிவந்த பொன், பூஷணம், வஸ்திரம், சேர்த்துவைத்துள்ள திரவியம், மேடை, கூடம், வீடு ஆகிய இத்யாதிகளெல்லாம் விட்டொழித்துத் தனிச் செல்லும் என்பால் பற்றிவருவனவோ! என்றும் சாஸ்வதமாயும், ஒப்பற்று முள்ள மேன்மை வாய்ந்த பரகதி மோக்ஷ சாதன மன்றோ? தெரிய வேணும்.

குறிப்புரை :—மனை, மாடு, கூடமுதலாயுள்ள சகல பந்து மித்திராதியர்க ளனைவர்களும் பொன் பொருளாதிகளும் யென்னோடும் அந்தத்தில் வந்திடுமோ? மேலான பரகதியான மோக்ஷ சாம்பிராச்சியமே சாஸ்வதமாகும் என்பது. (9)

௰. விளங்கவெனக் குள்ளுள்ளே விளங்கா நின்ற
வேதகமே போதகமே விமல வாழ்வே
களங்கரஹி தப்பொருளே யென்னை நீங்காக்
கண்ணுதலே நாதாந்தக் காட்சிப் பேறே.

பொழிப்புரை :—யான் நன்குணருமாறு என்னுள்ளத்தின் கண்ணே பிரகாசியா நின்று வேறுபடுத்தும் பொருளே! உபதேசித்துணரும் பொருளே! மலரஹிதப் பெருவாழ்வே! நிஷ்களங்கப் பொருளே! எனைப் பிரியாத நுதற்கண்ணு! நாத தத்துவ முடிவில் காண்டரும் பரம ஜோதிப் பொருளே! சிவான்மப் பரமவைப்பே.

குறிப்புரை :—என் உணர்விற்குப் பேருணர்வாய் என்னகத்தே இனிதமர்ந்து எல்லா நலங்களையும் துய்ப்பித்தருளும் இன்றியமையா தினிப்புறும் பரம்பொருள் நீயேயென வுணர்ந்தனன். என்பது. (10)

௧௧. நாதமே நாதாந்த வெளியே சுத்த
ஞாதுருவே ஞானமே ஞேயமே நல்

வேதமே வேதமுடி வான மோன
வித்தேயிங் கென்னையினி விட்டி டாதே.

பொழிப்புரை :—நாத மயமும், நாத முடிவாம் பரவெளியும், பரிசுத்தமான காண்பானுயுள்ளவனும், காட்சியும், காணப்படுவதும், மேலான சதுர் மறையும், அம்மறைமுடிவாம் மௌன பீஜமும், இங்ஙனம் எல்லாமாய நீ என்னை இனி கைவிடற்க. (11)

## கல்லாலின்

க. கல்லாலி னீழறனி லொருநால் வர்க்குங்
கடவுணீ யுணர்த்துவதுங் கைகாட் டென்றாற்
சொல்லாலே சொலப்படுமோ சொல்லுந் தன்மை
துரும்பு பற்றிக் கடல்கடக்குந் துணிபே யன்றோ.

பொழிப்புரை :—கல்லாலவிருக்ஷ நிழலின்கண் எழுந்தருளியிருந்து சனகாதியராம் நால்வர்கட்கும் கடவுளும் பரம குருவுமாய் நீ யறிவுறுத்துவதும், கைகாட்டலாலே யாகுமானால் (அதைச்) சொல்வதால் தெரிவிக்கக் கூடியனவாமோ ? அங்ஙனஞ் சொல்லப் படுவதானது, துரும்பினைக் கொண்டு சமுத்திரத்தைக் கடக்குந் துணிவினை யொத்ததாகுமே !

குறிப்புரை :—கல்லால் குரவன் கடவுளே ; நால்வர் வினவி நின்ற போது, மௌனமுற்று கரகமலத்தாற் குறித்துணர்த்தினர் ; உணர்த்தியதும் சும்மா விருத்தலேயே ; வாயாற் கூறல், துரும்பு கொண்டு கடலைத் தாண்ட நினைத்தலை யொக்கும் என்பதாயிற்று. (1)

உ. அன்றேவா மோவெனவுஞ் சமய கோடி
யத்தனையும் வெவ்வேறா யாற்ற நேரே
நின்றாயே நினைப்பெறுமா றெவ்வா றங்கே
நின்னருள்கொண் டறிவதல்லா னெறிவேறுண் டோ.

பொழிப்புரை :—உலகுக் கொருவனுயுள்ள இறைவனை அறியும் ஆற்றலற்ற சிலபல போலி மதத்தவர்கள், இவன் " இறைவன்றானோ, அன்றோ " என்றே பலவாறாக உளறிவர, நீ நேர் நின்றுணர்ந்து வருகின்றாயே ! நின்னைப் பெற்றுய்யும் மார்க்கம் நின்றிருவருளன்றி வேறே வழியுமுண்டோ ? இல்லை யென்பதாம்.

குறிப்புரை :—ஒப்புயர்வற்ற ஒருவனுன பரம கருணு நிதியை யுணர்தல், அவனருள் கொண்டாலன்றி யாகாதென்பது புலனுயது.

அருண்முறை வருமாறு :—

சிவஞான சித்தியார்

அருளது சத்தியாகு மரன்றனக் கருளையின்றித்
தெருள்சிவ மில்லையந்தச் சிவமின்றிச் சத்தி யில்லை
மருளினை யருளால் வாட்டி மன்னுயிர்க் களிப்பன் கண்கட்
கிருளினை யொளியா லோட்டு மிரவியைப் போலு மீசன். (2)

௩. நெறிபார்க்கி னின்னையன்றி யகிலம் வேறே
நிலநீர்திக் கால்வானு நீய லாத
குறியாது மில்லையென்றால் யாங்கள் வேறே
கோதையொரு கூறுடையாய் கூறாய் கூறாய்.

பொழிப்புரை :—கோதையாம் உமாதேவியை இடப்பாகங் கொண் டருளிய இறைவனே! நின்னையுணரும் முறைமையினை ஆராய்ந்து பார்த் தால், உன்னையல்லாது இவ்வுலகம் வேறுகுமோ? நிலம் நீராதிய பஞ்ச பூதாதிகளில் நின்னையல்லாத தோர் குறியெதுவு மின்றென்றால், யாங்கள் வேறுவோமோ? சொல்வாய், சொல்வாய்.

குறிப்புரை :—உன்னையல்லாது உலகம் வேறல்ல; இவ்வுலகமாய பஞ்ச பூதாதிகள் நின்னையல்லாதில்லை; யாங்கள் நீ யல்லாதில்லை. ஆகவே சகல மும் நீயாயேயுள்ளா யென்பது புலனுயது. (3)

௪. கூறாய வைம்பூதச் சுமையைத் தாங்கிக்
குணமிலா மனமெனும்பேய்க் குரங்கின் பின்னே
மாறாத கவலையுடன் சுழல வென்னை
வைத்தனையே பரமேநின் மகிமை நன்றே.

பொழிப்புரை :—பகுக்கப்படுவனவாய ஐந்து பூதங்களானு மாக்கு வித்த இச்சரீர சுமையைத் தாங்கிக்கொண்டு, நற்குணபாவ மில்லாததான பேய் மனமாங் குரங்கைப் பின்பற்றிச் சென்று ஒழியாக் கவலைகொண்டு சுற்றித் திரியுமாறென்னை உண்டாக்கி விட்டாயே! ஏ பராபரமே! உனது சாமர்த்தியம் மிகவும் பெரிதுதான்.

குறிப்புரை :—பிரிவினை செயற்பாலதானது பற்றி கூறாய ஐம்பூத மென்றார். பிரிவினையாவது பஞ்சீகரணஞ் செய்தலாம். மனத்தைக் குரங்காக உருவகித்து சலனமாம் சேட்டையானென்ப; இயல்பான சேட்

டைக் குரங்கிற்குப் பேயும் பிடித்து விட்டால் மகா சேட்டையைச் செய்து வருமென்பது. சான்றாக ;— "எண்பதுகோடி நினைந்தெண்ணுவன" என்றார் சான்றோர். (4)

ரு. நன்றெனவுந் தீதெனவு மெனக்கிங் குண்டோ
நானாகி நீயிருந்த நியாயஞ் சற்றே
இன்றெனக்கு வெளியானா லெல்லாம் வல்ல
விறைவாநின் னடியருட னிருந்து வாழ்வேன்.

பொழிப்புரை :—எல்லாம் வல்ல இறையவனே! நல்லது கெட்டது என்கிற இருவகைகளும் இங்கே எனக்கு முண்டாங் கொல்லோ? ஏன்? நீயே நானாகவுள்ள முறைமை யெனக்குத் தெளிவுறத் தெரியுங் காலையில் யான் நினது மெய்யன்பரோடும் இடையறா திணங்கியிருந்து சுகாநுபவி யாக விருந்து வாழ்ந்திடுவேன். என்பது.

குறிப்புரை :—நீயே நான், நானே நீயான முறைமையானது இங்கு சிறிது எனக்கு வெளிப்படையாகத் தோற்றுமாயின், எனக்கென நல்லது கெட்டது என்பது முண்டோ? ஒன்றுமின்று; ஆதலால் நான் இனி நின் னன்பருடனே சேர்ந்துய்வே னென்பதாம். (5)

சா. வாழ்வெனவுந் தாழ்வெனவு மிரண்டாப் பேசும்
வையகத்தார் கற்பனையா மயக்க மான
பாழ்வலையைக் கிழித்துதறிச் செயல்போய் வாழப்
பரமேநின் னானந்தப் பார்வை யெங்கே.

பொழிப்புரை :—வாழ்வு, தாழ்வு என இருவகையாகச் சொல்லி வருகிற உலகத்தாரது கட்டுரையான மயக்கச்செய் பாழான வலையினைக் கிழித்தெறிந்துவிட்டு மாயாகிரியாம்சங்களு மின்றிப் பெருவாழ் வெய்துமாறாக நினது பேரானந்த மாயகருணை நோக்கம் செய்திடுவாயாக.

குறிப்புரை :—கேவலம் அநித்தியமான உலகவாழ் வொழிந்து சீவ போதமாகிய முனைப்பற்றுத் தற்போத நிலைபெற்றுய்ய நின் பரானந்தத் துக்கான கருணை கடாக்ஷம் புரிவாயாக. என்பது. (6)

எ. எங்கேயெங் கேயருளென் றமையி ரந்தா
னேழையிவ னெனவுமெண்ணி யிச்சை கூரும்
அங்கேயங் கேயெளிவந் தென்னை யாண்ட
வாரமுதே யுனைக்காண்பா னலந்துபோனேன்.

பொழிப்புரை :—மிக்க ஏழைமதியினனுய இவன் திருவருள் எங்கே! எங்கே! என்று எம்மைக் கெஞ்சிக் கேட்டனன் என இன்புற்றுள்ள அவ்வவ்விடங்கடோறும் மிக வெளிதாகத் தோன்றி யாட்கொண்டருளிய அரிய திருவமுத மனையாய்! நின்னைத் தரிசிக்கும் பொருட்டதாக நான் மிகவும் அலமந்து வாடினேன் என்பது.

குறிப்புரை :—ஆரமிர்தமனையாய்! நின்திருவருட் செல்வத்தை யான் யாசித்துவந்த ஆங்காங்கும் எளிதாய்த் தோன்றி யாண்டருள் புரிந்தோய்! நின் திருவடிதரிசனார்த்தம் மிகவும் வருந்தலாயினேன் என்பது. (7)

அ. போனநாட் கிரங்குவதே தொழிலா விங்ஙன்
பொருந்துநா ளத்தனையும் போக்கி னேனென்
ஞானநா யகனேநின் மோன ஞான
நாட்டமுற்று வாழ்ந்திருக்கு நாளெந் நாளோ.

பொழிப்புரை :—சென்ற காலத்தையுத்தேசித்து மனமிரங்குவதே பெரியகாரியமாக வெண்ணி இங்கேயுள்ள காலத்தை யெல்லாம் வீணே கழித்துவிட்டேனே! எனது மேலான மெய்ஞ்ஞானவுறவோய்! நினது மௌனஞான நோக்கத்தோடும் யான் பெருவாழ் வெய்துங்காலம் இனி யெக்காலமோ? என்பது.

குறிப்புரை :—ஞான நாயகனே! சென்றநாளைக் குறித்து வீணுக மன மிரங்கி காலத்தைப்போக்கி விட்டேன்; நின் மௌனமாயுள்ள ஞான நாட்டத்தினைப் பெற்று நல்வாழ்வுற்றிருக்கும் காலம் எந்நாளோ வென்பது. (8)

௯. நாட்பட்ட கமலமென்ன விதய மேவு
நறுந்தேனே துன்மார்க்க நாரி மார்கண்
வாட்பட்ட காயமிந்தக் காய மென்றோ
வன்கூற்று முயிர்பிடிக்க வருமந் நீதி.

பொழிப்புரை :—அன்றுபூத்த தாமரை மலரென்றே நினைத்து என் இதயத்தின் மீதமர்ந்துள்ள நல்ல தேவன்போன்ற விறைவனே! கெட்டவர்களான பெண்களது நேத்திரமான வாள் பதிந்து இந்த தேகம் என்றே வலிமைபெற்ற இயமனும் ஆவியைக் கொள்ளவரும் அந்நியாயம் எந்தக் காலமே?

குறிப்புரை :—என்னிதயகமல மேவும் என்னிறைவனே! என் சரீரமானது தீயமாதர்களதுகண் எனும் வாள்பட்டது என்றும் இயமன் உயிர் கவர வருங்காலம் எக்காலமோ என்பது. (9)

௰. நீதியெங்கே மறையெங்கே மண்விண்ணெங்கே
நித்தியரா மவர்களெங்கே நெறிதப் பாத
சாதியெங்கே யொழுக்கமெங்கே யாங்க ளெங்கே
தற்பரநீ பின்னுமொன்றைச் சமைப்ப தானால்.

பொழிப்புரை :—ஏ, தற்பரசிவமே ! நீ நின் இட்டம்போன்று வேறும் ஒன்றைப் படைப்பு செய்வையேயானால், நியாயமேது ? வேதங்களேது ? மண்ணகமும் விண்ணகமு மேது ? தேவராதியரேது ? ஒழுக்கமுள்ள மேலாம் சாதியேது ? ஆசாராதிகள் எது ? நாங்களுமேது ? சொல்வாய் என்பது. (10)

௰க. ஆனாலும் யானெனதிங் கற்ற வெல்லை
யதுபோது மதுகதிதா னல்லவென்று
போனாலும் யான்போவ னல்லான் மோன
புண்ணியனே வேறொரு பொருளை நாடேன்.

பொழிப்புரை :—எவ்வாறானாலும் இங்கே யான் எனது என்னும் அகங்காரமென்ன மமகாரமென்ன இவையொழிந்த விடமே போதியதாகும் அன்றி அவ்விடம் கதியன்றென்று போயினும் நான் ஒழிவேனன்றி, மௌனத்தினை என்னறிவிற் கறிவித்த மகா புண்ய புனிதனே ! மற்றோர் பொருளினையும் பெற எண்ணிலேன், அன்றி இச்சையுங் கொள்ளேன் என்பது.

குறிப்புரை: —எவ்வாறாயினும், அகங்காராதிக ளொழிந்துள்ளதே போதுமானதாம் ; இதுவும் கதியல வெனினும், யான் போவேனன்றி, என்னிறைவனே ! வேறோர் பொருளையும் விரும்பேன். (11)

௰உ. பொருளேநின் பூரணமே விட்ட காலம்
போக்குவர வுண்டோதற் போத முண்டோ
இருடானுண் டோவல்லால் வெளிதா னுண்டோ
வின்பமுண்டோ துன்பமுண்டோ யாமங் குண்டோ.

பொழிப்புரை :—ஒப்பற்ற பரம்பொருளே ! நின் வியாபகத்துவம் என்பால் நிறைவுபெற்ற அஞ்ஞான்று ஒழிதல் மீளலாதியான வுளவாமோ ? அன்றி ஜீவபோதமாவதுளவோ ? மற்றும் அஞ்ஞானந்தகார மாவதுதானுண்டோ ? அன்றி, எதிரிடையான பராகாயந் தானுளவாமோ ? பின்னும், பரமப் பிரகாசமேனு முண்டோ ? சுகோதயமாவ துளவாமோ ? இல்லை, கட்டமுண்டோ ? அல்லாது, யாமாவது அவ்விடத்தில் உண்டோ ? என்பது.

குறிப்புரை :—இறைவனே! நின் பேரருளாம் பரிபூரணத்துவம் என் மட்டில் பூர்த்தி பெற்ற போது சகலமும் சிவத்துவமாய் நிறைவுற்று சுவாநுபவ நிலைவந்துறுமே யன்றி வேறில்லை; என்பது. (12)

மங. உண்டோநீ படைத்தவுயிர்த் திரளிலென்போ
லொருபாவி தேகாதி யுலகம் பொய்யாக்
கண்டேயு மெள்ளளவுந் துறவுமின்றிக்
காசினிக்கு ளலைந்தவரார் காட்டாய் தேவே.

பொழிப்புரை :—இறைவ! நீ சிருட்டித்த ஆன்மகோடிகளிலே என்னைப்போன்ற ஓர் கொடியவனு மிருப்பனோ? சேதனசேதன நாமரூபப் பிரபஞ்சமானது கேவல மித்தையாக விளங்குவதைக் கண்கூடாக் கண்டிருந்தும், எட்டுணையேனும் துறவுபெறாது இப்புவியின்கண் அலக்கழி வாரைக் காண்பித்தருள்வாய், என்பது.

குறிப்புரை :—எம்மானே! இந்த நாமரூபப் பிரபஞ்சத்தின்கண்ணே யுள்ள ஆன்மகோடிகளார், அநுபவிக்கும் இவ்வுலகானுபவம் பொய்யென் றுணர்ந்தும் துறவுகொள்ளாதவன் பாபி யென்பது புலனாயது. (13)

மச. தேவரெல்லாந் தொழச்சிவந்த செந்தாண் முக்கட்
செங்கரும்பே மொழிக்கு மொழி தித்திப்பாக
மூவர்சொலுந் தமிழ்கேட்குந் திருச்செவிக்கே
மூடனேன் புலம்பியசொன் முற்று மோதான்.

பொழிப்புரை :—தேவராயினோரெவரும் வணங்குவதாற் சிவந்துள செவ்விதாய உபயபதமலர்களும், திரிநேத்திரங்களும் பொருந்திவாழும் செங்கரும்பனையாய்! ஒவ்வொரு வார்த்தைகளும் ஒன்றுக் கொன்றதிக மாய் மதுரிக்கும்படியாயுள்ள, மூவரோதிய செந்தமிழ்ப் பாவை கேட்டருளிய நின் அழகுவாய்ந்த திவ்ய காதுகளுக்கு கயமையேன் குழறிக்கழறும் கட்டுரையும் களிப்புறச் செய்யுமோ! என்பது.

குறிப்புரை :—இறைவ! முற்று முணர்ந்து பற்றறத் துறந்த முழுத் தவச் சிகாமணிகளா மூவராற் கூறியருளிய தேவார திருவாசகாதிகளாம் திவ்ய தீம்பாச்சுவையேறிய திருச்செவிகட்கு எளியேன் வேற்றுரையும் வெறுப்பா மன்றே. என்பது. (14)

மரு. முற்றுமோ வெனக்கினியா னந்த வாழ்வு
மூதறிவுக் கினியாய்நின் முளரித் தாளிற்

பற்றுமோ சற்றுமில்லை யையோ வையோ
பாவிபடுங் கண்கலக்கம் பார்த்தி லாயோ.

பொழிப்புரை :—இவ்வேழைமதிப் பேதையேற்கும் இனிச் சுகானந் தப் பெருவாழ்வும் கிடைக்கப் பெறுவேனோ ! மெய்யன்பர்தம் மெய்யன்புக் கினிமை பயப்பவன் ; நின் செந்தாமரை மலர்த் திருவடிகளிலே எனக்கு ஆசையென்பது கொஞ்சமு மில்லையாகும் ; அந்தோ ! இந்தப்பாவியேன் கொண்டுள்ள துயரத்தைக் கொஞ்சமும் பார்த்திலையே !

குறிப்புரை :—இப்பேதைக்கும் சுகவாழ் வென்பது கிடைக்கப் பெறுமோ ! நீயோ, மெய்யுணர்வினர்க் கன்புடையவன் ; நின் திருவடிக் கன்பென்பதே யில்லாதவன் யான் ; அந்தோ ! யானென் செயக்கடவேன் ! கட்டமொழிய கண்பாரையனே ! என்பது. (15)

௰௬. பார்த்தனவெல் லாமழியு மதனாற் சுட்டிப்
பாராதே பார்த்திருக்கப் பரமே மோன
மூர்த்திவடி வாயுணர்த்துங் கைக்காட் டுண்மை
முற்றியென தல்லல்வினை முடிவ தென்றோ.

பொழிப்புரை:—கண்ணினாற் காண்பதனைத்தும் அநித்தியமானவையே ஆதல்கொண்டு யெவையும் குறித்துணராதபடி அகத்தேயுள்ள அறிவைச் சார்ந்து நிற்பதற்காக வேண்டி, ஏ பரவத்துவே ! மௌன ஆசிரிய சொரூப மாய் வந்தோதுவதாய கையினாற் குறித்தருளும் அதியற்புத மர்ம உபதேச மாயது எற்கு முடிவடைந்துய்ய, துக்காஸ்பதமாகிய பூர்வகன்ம வினை யானது சூன்யமுற்றொழிவது மென்றோ என்பது.

குறிப்புரை :—சீவ் காணுதிகள் யாவு மழிவனவாதலால், இறைவ ! என் பூர்வ கன்மம் தொலையப் பெற்று, நின் பரமாசாரிய தன்மையாம் கைக் காட்டும் உண்மையினை யென்றோ கண்டுய்வது ! என்பது. (16)

௰௭. என்றுளைநீ யன்றுளம்யா மென்ப தென்னை
யிதுநிற்க வெல்லாந்தா மில்லை யென்றே
பொன்றிடச்செய் வல்லவனீ யெமைப்படைக்கும்
பொற்புடையா யென்னினது பொருந்தி டாதோ.

பொழிப்புரை :—'நீ யெப்போதுள்ளனையோ யானு மப்போதுவரை யுள்ளவனுவேன்' என்றுரைப்ப தென்னவோ ? இஃதொரு பாலிருக்க ; யெப்பொருள்களும் தாமாகவுமுள்ள நீ ; பின்னு மில்லையாகவே அனைத்து

மொழித்திடவும் சக்திவாய்ந்த நீயே எங்களைப் படைக்கக்கூடிய தத்வ முடையா னென்றால் அது நினக்குப் பொருத்த முடையதன்றோ?

குறிப்புரை :—தான் சர்வமு மாகியும், சர்வமும் பின்னர் தானல்ல தாகியு மிருக்கிறபோது, எங்களையும் படைப்பவன் நீயன்றோ? இங்ஙனங் கூறலும் பொருந்துத லன்றோ? (17)

௰அ. பொருந்துசக மனைத்தினையும் பொய்பொய் யென்று
புகன்றபடி மெய்யென்றே போதரூபத்
திருந்தபடி யென்றிருப்ப தன்றே யன்றோ
வெம்பெருமான் யான்கவலை யெய்தாக் காலம்.

பொழிப்புரை :—விளங்காநின்ற இவ்வகிலமியாவும் மெய்யல்ல வெனவே கண்டபடி சத்யமெனவே ஞானமயமா யிருந்தவிதமாக விருப்பது எக்காலத்திலோ, அக்காலத் தல்லவா எம்மானே! யான் துன்ப மெய்தாது பரானந்த சுகப்பேறெய்துங் காலமாகும் என்பது.

குறிப்புரை :—இவ்வுலக போகாதிகள் யாவும் அழிந்து போவன என்று கண்டபடி கழித்து, அதன்மேல் மெய்யாகு ஞானமயமா யமர்ந்திருப்ப தாகும் அக்காலந்தான் சுகமுறுங்காலம் என்பது. (18)

௰கூ. காலமே காலமொரு மூன்றுங் காட்டுங்
காரணமே காரணகா ரியங்க ளில்லாக்
கோலமே யெனைவாவா வென்று கூவிக் [லாய்
குறைவறநின் னருள்கொடுத்தாற் குறைவோ சொல்

பொழிப்புரை :—கால நிலைமையே! மூன்று காலங்களையுங் காட்டற் குரிய காரணப்பொருளே! மற்றும், அந்தக் காரணமென்ன, அக்காரணத் திற் றியங்கும் கிரியாம்சங்களென்ன இவைகளொழிந்த திருவுருவே! எளி யனை வருவா யென்றழைப்பித்துக் குறைவில்லாதபடி நினது திருவருட் பிர சாதத்தை யநுக்கிரகித்தால் நினக்கேதுங் குறைதல் ஏற்பட்டு விடுமோ கூறுவாய்.

குறிப்புரை :—காலமாகவும், இதற்குக் காரணமாகவும், இவ்விரண் டிற்கு மப்பாலான சொரூபமாகவும், அதீத வஸ்துவாகவு முள்ள நீ, எனை யழைத்துப் பூரணமாகத் திருவருள் புரிந்தால் குறைவென்ன சொல்லக் கடவை. காலமொரு மூன்று - சென்ற காலம், நடக்குங் காலம், இனி வருங் காலம், என்பனவாம். (19)

உ௰. சொல்லாய தொகுதியெல்லாங் கடந்து நின்ற
சொரூபானந் தச்சுடரே தொண்ட னேனைக்
கல்லாகப் படைத்தாலு மெத்த நன்றே
கரணமுட னுறவு கலக்க மாட்டேன்.

பொழிப்புரை :—நாமரூபப் பிரபஞ்சாதிய வனைத்தையுங் கடந்தப் பாற்பட்ட ஆனந்தத்தோடுங் கூடிய தேசோமயமே ! நின்னடியவனுய எளியேனை கேவலம் சிலையாகவுண்டு பண்ணினும் மிக்க நலமாயிருக்குமே ! அந்தோ ! யான் யென் அந்தக் கரணங்களோடு சேர்ந்திருந்து வாழ முடியாதையா. என்பது.

குறிப்புரை :—பரானந்தத் தேசோமயமே ! நின் அடிமையா மென்னைக் கால்லாய்ப் படைக்கினும் மிக நலமாகும் ; கரணுதி கூட்டுறவே வேண்டேன் என்பது. (20)

உக. கலங்காத நெஞ்சுடைய ஞான தீரர்
கடவுளுனைக் காணவே காய மாதி
புலங்காணுர் நானொருவன் ஞானம் பேசிப்
பொய்க்கூடு காத்தென்ன புதுமை கண்டாய்.

பொழிப்புரை :—திடமான மனத்தினர்களாகிய மெஞ்ஞானவான்கள், கண்ணுதற் கொண்டருளிய கடவுளே ! தேவரீரைத் தரிசித்துய்யுமாறே சரீராதிய புலமானவைகளை நன்கு பேணு தொழிந்தனர்கள். யானொருவன் மட்டும் ஞானவிஷயமாய் வாசா கைங்கரியமாகப் பேசாநின்று மித்தையா மித்தனுவை வீணே நம்பிக் காத்திருந்ததும் ஓர் புதுமையாயே தோன்றுகிறது. (இதையும் நீயறிவாய்.)

குறிப்புரை :—மெய்ஞ்ஞானியர் இறைவனைச் சார்ந்துய்யுமாறு இவ்வுடலாதி கருவி கரணங்களை நம்பாது அலக்ஷியம் பண்ணினர். யான் வாய்ஞானத்தால் பேய்போல் பிதற்றிப் பொய்யுடற் சுமந்த சுமைதாங்கியானதும் ஓர் புதுமையாயிற்று. மித்தையா மித்தனு வென்றது, பொய்யான இவ்வுடம்பு என்க. (21)

உஉ. கண்டிலையோ யான்படும்பா டெல்லா மூன்று
கண்ணிருந்துந் தெரியாதோ கசிந்துள் ளன்பார்
தொண்டரடித் தொண்டனன்றோ கருணை நீங்காச்
சுத்தபரி பூரணமாஞ் சோதி நாதா.

பொழிப்புரை :—யானடைந்த வருந்துயரமனைத்தையும், நினக்கு மூன்று நேத்திரங்களிருந்தும் தெரிய வில்லையோ ? அல்லது, நின் சர்வ வியாபகமாம் ஞானக்கண்ணிற்கும் தெரியவில்லையோ ? உள்ளன்பினாலே உள்ளம் கசிவுற்றுருகி வரும் அடியவர்கட்கும் தொழும்பனாயிற்றே ! சிறிதும் காருணியம் நீங்கப் பெறாத பரமதேசஸானே !

குறிப்புரை :—சோதி ஸ்வரூபனே ! நினது சகளத் திருமேனியின்கண் மூன்று நேத்திரங்கள் கொண்டிருந்தும் என் துயராதியன காணார் போன்றுள்ளனையே ! யான் நின் மெய்த்தொண்டர்தம் தொண்டனன்றோ ? நினக்குக், கருணையே திருமேனியாக் கொண்டவன் எனும் பேருமிருக்கிறதே ! (22)

உ௩. சோதியா யிருட்பிழம்பைச் சூறை யாடுந் [நாளும்
தூவெளியே யெனைத் தொடர்ந்து தொடர்ந்தெந்
வாதியா நின்றவினைப் பகையை வென்ற
வாழ்வேயிங் குனைப்பிரிந்து மயங்குகின்றேன்.

பொழிப்புரை :—ஜ்வலித மயமாய்நின்று, அந்தகாரத் தொகுதியைத் துவம்சஞ் செய்த பரிசுத்த பராகாயமே ! எனைப் பின்பற்றிப் பின்பற்றி எப்போதும் துன்புறுத்தி வந்த கன்ம விரோதியை செயங்கொண்ட தெய்வத் திருவாழ்வோய் ! நின்னை விட்டு இங்கு யான் அன்னைவிட்ட குழவியொத்தே யலறுகின்றேன் !

குறிப்புரை :—இறைவ ! யான் என்சென்ம விரோதியாம் கன்ம தொந்தமாள தொழிந்தும், பரமானந்த வாழ்வே பரம வாழ்வாய்க் கொண்டருளும் நின்னைவிட்டு அன்னையை விட்டழுங் குழவியைப் போல் மயக்குற்றேன். (23)

உ௪. மயக்குறுமென் மனமணுகாப் பாதைகாட்டி
வல்வினையைப் பறித்தனையே வாழ்வே நானென்
செயக்கடவேன் செயலெல்லா நினதே யென்று
செங்கைகுவிப் பேனல்லாற் செயல்வே றில்லை.

பொழிப்புரை :—மயக்கத்தைத் தருகின்ற எனது மனம் பற்றாதவோர் நல்வழியைக் காண்பிவித்து என் வினைத்திரளை யொழித்தனையே ! வாழ் முதலே ! யான் யாது செயவல்லேன் ! என் செய்கைகள் அனைத்தும் நின்னதாகவே யெண்ணி யென் செங்கரங் குவித்த லல்லாது வேறேயாதோர் செயலுமில்லையே !

குறிப்புரை :—இறைவ! நீ கருணைகூர்ந்து கன்மங்களை வேரறுத் தாண்டாயேனும், யான் செய்வதொன்றுங் காணேன். யென் செயல் நின் செயலேயெனக் கொண்டனன்; அன்றியும் கைதொழுகின்றேன்; வேறே யாதுஞ் செய்ய வல்லேனல்லேன். (24)

உரு. வேறுபடுஞ் சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்
விளங்குபரம் பொருளேநின் விளையாட் டல்லான்
மாறுபடுங் கருத்தில்லை முடிவின் மோன
வாரிதியி னதிக்திரள்போல் வயங்கிற் றம்மா.

பொழிப்புரை :—பலவேறு மார்க்கமாயுள்ள மதங்கள்யாவும் ஆழ்ந்து கவனிக்கின், விளக்கமாயுள்ள பரவத்துவே! ஆங்காங்கும் நின் திருவருட் செயலேயல்லாது விரோதமான கருத்தியாது மிருக்கவில்லை; முடிவிலாத மௌனக் கடற்குள் நதித்தொகுதி போன்று அபின்னமாய் விளங்கலாயின. என்பது.

குறிப்புரை :—

"வேறுவேறாகி யோடும் விரிநதிக் குலங்களெல்லாங்
கூறுமுன்னீரி ஞென்றுங் கொள்கையதாகு மாபோல்
வேறுவேறாகி நின்ற விதிவழிச் சமயமெல்லாங்
கூறுமுத்தியினி லொன்றுங் கொள்கை யதாகுமன்றே."

என்ற பெரியார் கூறிய பேருரைகொண்டு தெளிவுறுக. (25)

உசா. அம்மாவீ ததிசயந்தா னன்றோ வன்றோ
வகண்டநிலை யாக்கியென்னை யறிவாம் வண்ணஞ்
சும்மாவே யிருக்கவைத்தா யையா வாங்கே
சுகமயமா யிருப்பதல்லாற் சொல்வா னென்னே.

பொழிப்புரை :—அம்ம! இஃதென்ன அதிசயமா யிருக்கிறதல்லவோ! அகண்டமான பிரமாண்ட நிலையை யுண்டுபண்ணி, எளியேனை அறிவு சொரூப மாகுமாறு நிர்மாணஞ் செய்து சும்மாயிருக்கச் செய்தனையே; அப்பனே! ஆங்கே சுகப்பட்டிருத்த லல்லாது வேறொன்றும் சொல்லற்கில்லை.

குறிப்புரை :—தன்னை, அளவு கடந்த அகண்டாகாரமாக வைத்து, என்னை ஆங்கே அறிவாகார மாக்கினை. இதன் மத்தியிலே பேச்சுமுண்டோ? இதுவும் ஓர் ஆச்சரியமேயாம். (26)

உஎ. என்னேநான் பிறந்துழல வந்த வாறிங் [ன்
கெனக் கெனவோர் செயலிலையே யேழையேன்பா

முன்னேசெய் வினையெனவும் பின்னே வந்து
மூளும்வினை யெனவும்வர முறையே னெந்தாய்.

பொழிப்புரை :—எனப்பனே! இங்கேயான் தோன்றியமுறை யென்னவோ? எளியேற்கு யாதொரு காரியமு மில்லையே? இவ்வெளியேனிடத்து பூர்வ வினையெனவும், பின் பிழைத்த கன்ம மெனவும் இருவகையாயும் சொல்லும் தன்மைக்கு நீதியாதோ?

குறிப்புரை :—இறைவனே! என்னைச் சும்மாயிருக்கும்படி விட்டு வைத்து, யானும் சும்மா யிருந்திருக்கிறபோது, முன்வினை பின்வினை யென்பதற்குக் காரணமென்னே? என்பது. (27)

உஅ. தாயான தண்ணருளை நிரம்ப வைத்துத்
தமியேனைப் புரவாமற் றள்ளித் தள்ளிப்
போயான தென்கொலையா வேக தேசம்
பூரணத்துக் குண்டோதான் புகலல் வேண்டும்.

பொழிப்புரை :—எளியேனுக்குத் தாயகம்போன்ற தண்ணியதான திருவருளைப் பூரணமாகவைத்து இச் சிறியவனைக் காத்தருளாதே விலக்கி விலக்கிப்போய், பெறப்பட்ட பெரும்பயன் யாதோ! ஐயா! நின் பரிபூரணத்துவத்திற்கும் ஏகதேச முளவாமோ? கூறுவாயாக என்பது.

குறிப்புரை :—என்தாய் வீடுபோன்ற திருவருளைப் பாலித்துக் காத்தருளாமே ஒதுக்கிவிட்டுச் செல்லலும், அதனாலெய்த பயனும் இன்னனவென்ன வியம்புக ஐயனே! (28)

உகூ. புகலரிய நின்விளையாட் டென்னே யெந்தாய்
புன்மையறி வுடையவென்னைப் பொருளாப் பண்ணி
இகல்விளைக்கு மலமாயை கன்மத்
யிடருறவுஞ் செய்தனையே யிரக்க மீதோ.

பொழிப்புரை :—இறைவ! சொல்லுதற்கு அருமையான நின் திருவிளையாடல் என்னெனக் கூறுவது! சிற்றறிவோடுங்கூடியவெனை ஓர் பொருளாக்குவித்து வம்பியற்றத்தக்க மாயா கன்மங்களிற் சிக்குண்டு துயரெய்தப் பண்ணினையே! நினக்கு ஆன்மாக்களிடத்துள்ள தயை யென்பதும் இதுவோ சொல்வாய். (29)

௩௰. இரக்கமொடு பொறையீத லறிவா சார
மில்லேனு னல்லோர்க ளீட்டங் கண்டாற்

கரக்குமியல் புடையேன்பாழ் நெஞ்ச மெந்தாய்
கருந்தாதோ வல்லுருக்கோ கரிய கல்லோ.

பொழிப்புரை :—சீவர்களிடத்து இரக்கத்தோடுங்கூட பொறுமை யென்ன, தானமென்ன, இவைகள் செய்தலின்றி, ஞானம், ஒழுக்கம், இவை யின்றியுமுள்ள யான், சுத்த சன்மார்க்க உத்தமர்களது கூட்டங்காணில், கரந்தொழுகும் வஞ்ச நெஞ்சினையுமுடையேன் ; இவ்வாறன தீயமனமா னது என் அன்னையே ! இரும்பென்னலாமா ? அன்றி வலிய உளியுருக்கு தானோ ! மற்றும் கருங்கல்லோ ? யாதோ ! என்பது. கரத்தல் - ஒளிதல், அல்லது மறைதல். (30)



## பராபரக் கண்ணி

க. சீராருந் தெய்வத் திருவருளாம் பூமிமுதற்
பாராதி யாண்ட பதியே பராபரமே.

பொழிப்புரை :—சிறப்புமிக்க தெய்வீகம் வாய்ந்த திருவருளெனும் உத்தமபூமி முதலாக இம்மண்ணுலகாதிய வனைத்தும் காத்தருள் புரியும் பரமபதியும் பராபர வத்துவுமானவனே ! (1)

உ. கண்ணாரக் கண்டோர் கருப்பொருள்கா ணுமலருள்
விண்ணூ டிருந்தவின்ப வெற்பே பராபரமே.

பொழிப்புரை :—கண்கூடாக நேரே தரிசித்தோர்கள், பிறப்பிறப் பென்பதைச் சிறிது மின்றி நிலைபெற்று பெருவாழ்வுறுமாறு தண்ணருள் வெளிக்கண் மருவியுள்ள பரமானந்த பர்வதமே ! (2)

ங. சிந்தித்த வெல்லாமென் சிந்தையறிந் தேயுதவ
வந்த கருணை மழையே பராபரமே.

பொழிப்புரை :—எண்ணிய வனைத்தும் எளியேற்களித் தருளுமாறு தோன்றிவந்து மாகம்படர் கருணைமாரியே. (மாகம்—ஆகாயம்.)

குறிப்புரை :—ஆன்மாக்களுய்யுமாறு ஆகாயமிருந்து மழைவருஷித்தருளல் போன்று, அன்பர்களுய்ய, காருணிய மழைபெய்தலால் ‘ கருணை மழையே ’ யென்றுபசரித்தனர் என்க. ‘ வேண்டுவார் வேண்டுவன ஈவான் கண்டாய் ’ யென்றார் பெரியார், (3)

ச. ஆராவமுதே யரசே யானந்த வெள்ளப்
பேராறே மோனப் பெருக்கே பராபரமே.

பொழிப்புரை :—தெவிட்டாத தேவாமிர்தமே! மானிலத்து மன்னவனே! பேரானந்த வெள்ளப் பெருநதியே! பேச்சற்ற யின்பப் பெருக்கே!

குறிப்புரை :—தெவிட்டலின்மையால் 'ஆராவமுது' என்றனர். எந் நிலங்களினும் பொருந்துமாறுளவாதலால் பொதுமுறையா 'யரசே' யென்றனர் போலும். எந்நிலம் - எழுவகை மேனிலம். (4)

ரு. ஆரறிவா ரென்ன வனந்தமறை யோலமிடும்
பேரறிவே யின்பப் பெருக்கே பராபரமே.

பொழிப்புரை :—நின்னை ஊன நாட்டத்தாலன்றி மோன ஞானத்தாலறிபவ ரெவரு மின்றாதலால், சகல வேதாதிகளும் பறையறை விக்கும் பரஞானமே! சுகோதய ப்ரவாகமே என்பது.

குறிப்புரை :—வேதாதிகள் முதலாக பிரம விட்டுணுக்களாலும் முன்னர் தேடியுங் காணப் பெருமைகொண்டும், தேடக்கிடையாத் திரவியமானது கொண்டும் ஈண்டு 'ஆரறிவார்' என்றனர் போலும். (5)

சு. உரையிறந்த வன்பருளத் தோங்கொளியா யோங்கிக்
கரையிறந்த வின்பக் கடலே பராபரமே.

பொழிப்புரை :—சுத்த மௌனத் துறவியர்தம் முள்ளத்தே நித்த மெரியும் நீளொளியா யெத்தேசகாலமு மின்பமய வாரிதியா யுள்ளாய்!

குறிப்புரை :—உரையிறந்த வன்பர் - பேச்சற்ற யின்பப் பெருக்காளர். கள்ளமிலா வுள்ளங் கலந்த வொளியாகலான், 'அன்பருளத் தோங்கொளியா' யென்றனர் போலும். (6)

எ. எத்திக்குந் தானாகி யென்னிதயத் தேயூறித்
தித்திக்கு மானந்தத் தேனே பராபரமே.

பொழிப்புரை :—எண்டிசையோடுந் தச திசைக்கண்ணு மிலங்கு பரம் பொருளாயும், எனது மனத்திடையே சதா யினிப்புற்றும் விளங்காநின்ற வினிய நறுந்தேனனையாய்!

குறிப்புரை :—இதயம் கமல மலராகலானும், இறைவன் இருதயத்துமுள்ளவனாதலானும் இனிக்குந் தேனென்ன கற்பித்தனர். உள்ளக மெலாந் தித்தலான் ஆனந்தத் தேனென்றார் போலும். (7)

அ. திக்கொடுக்கிழ் மேலுந் திருவருளாம் பொற்பறிந்தோர்
கைக்குள்வளர் நெல்லிக் கனியே பராபரமே.

பொழிப்புரை :—பத்துத் திசைகளினும் தேவரீர்தம் திருவருட் செல்வம் பொருந்தி நிறைந்துள்ள தத்துவ உண்மையை யுணர்ந்த மெய்த் தவச்சீமான்களது கரதல நெல்லிக்கனி யனையவனே ! என்பது.

குறிப்புரை :—திருவருளாம் பொற்பமைந்தோர் - மெய்ஞ்ஞானியரா வார் என்பது. (8)

கூ. முத்தே பவளமே மொய்த்தபசும் பொற்சுடரே
சித்தேயென் னுள்ளத் தெளிவே பராபரமே.

பொழிப்புரை :—முத்தையும் பவழத்தையு மொத்து விளங்கி பொற் பிரகாசமாய் சொலித்து முள்ள அறிவாகாரமே ! உள்ளத்தினூங்கும் ஒள்ளிய தெள்ளுணர்வே !

குறிப்புரை :—நவமணிகளினும் ஜொலிக்கும் பிரகாசம் இறைவனிருப்பிடமாக் கோடன் முறையாதல் பற்றி கீதையினும் கண்ணன் கூறிக் கதி பெற்றனன் மகிமையென்றே. இறைவன் ஒளிமயனுதலான் மணிகளையும், ஆனந்தயேதுவா மினிமைக்குப் பற்பல மதுரித பொருள்களையும் உவமித்தோதுவது ஆன்றோராம் சான்றோர் கூறுவதியல்பாக் கொள்ளக் கிடந்தமையு முணர்க. (9)

௰. கண்ணே கருத்தேயென் கற்பகமே கண்ணிறைந்த
விண்ணே யானந்த வியப்பே பராபரமே.

பொழிப்புரை :—என் கண்ணினும் கருத்தினிடத்தும் நிகழ்ந்து விளங்கும் கற்பக விருக்ஷமனையாய் ! விவேகமாய தூவெளியே ! நிரதிசயானந்தமே ! என்பது.

குறிப்புரை :—ஈண்டு ஆனந்தமே வியப்பாம். ஏன் ? உலகானந்தம் ஏகதேசமான அநித்தியமும் துக்காஸ்பதமு மாயது பற்றியாம். நித்தியானந்தமோ, அற்றன்று, இடையறுாது பரமானந்த முற்றுப் பரபோகமுந் துய்த்தலான் ஆச்சரியத்திற் கேதுவானதாம். (10)

௰க. வாக்காய் மனதாய் மனவாக் கிறந்தவர்பாற்
றூக்காதே தாக்குந் தனியே பராபரமே.

பொழிப்புரை :—வாக்கிந்திரியமும், மனமாங் கரணமுமாய் விளங்கினின்று, பின்னர் இவ்விரண்டிற்கும் அகோசரமாயு முள்ளதாய், மனவாக்

கற்ற மாதவராகமே மகாலயமாக் கொண்டருளுந் தன்னந் தனிப் பொருளே! ஆகம் - சரீரம்.

குறிப்புரை :—

"வாக்கு மனமு மில்லா மனோலயந்
தேக்கி யெனக்குச் சிந்தை தெளிவித்து"—என்றும்

"வாக்காலு மிக்க மனத்தாலு மெக்காலுந்
தாக்கா வுணர்வாய தன்மையினை—நோக்கிப்
பிரித்தறிவு தம்முட் பிரியாமை தானே
குறிக்குமருணல்கக் கொடி"—என்பன வற்றானு முணர்க. (11)

௰௨. பார்த்தவிட மெல்லாம் பரவெளியாய்த் தோன்றவொரு
வார்த்தைசொல்ல வந்த மனுவே பராபரமே.

பொழிப்புரை :—பார்க்குமிட மெங்கணுமே பரஞான வெளியாகத் தெரிதருமாறு ஓர் ஒப்பற்ற வார்த்தையை எளியேற்கு ஓதியருள்வான் தோன்றியருளிய மனிதாகிர்தியே!

குறிப்புரை :—பார்த்த விடமெல்லாம் பர வெளியாய்த் தோன்ற வொரு வார்த்தை சொல்ல வந்தருளியவர் மௌன தேசிகரென்ப. (12)

௰௩. வானந்த மண்ணினந்தம் வைத்துவைத்துப் பார்க்கவெ
கானந்தந் தந்த வரசே பராபரமே. [னக்

பொழிப்புரை :—ஆகாய முடிவென்ன, பூமியின் முடிவென்ன இவ்விரு நிலையையு முணருமாறு இன்ப மெனக்களித்த இறைவனே!

குறிப்புரை :—பாதாதி கேச பரியந்த மென்பதே வானந்தமும் மண்ணந்தமுமாகக் கூறினரெனலும் ஒவ்வுமென்க. (13)

௰௪. அன்பைப் பெருக்கியெனதாருயிரைக் காக்கவந்த
இன்பப் பெருக்கே யிறையே பராபரமே.

பொழிப்புரை :—முதற்கண் என்பால் அன்பினை வளர்த்திட்டுப் பின்னர் என் அரிய பிராணனையுங் காத்தருளுமாறு ஆசிரிய ரூபமாய் வந்தருளின பேரின்ப வெள்ளமே! என் இறைவனே!

குறிப்புரை :—ஆசிரியராக வந்தாண்டருளி ஓதினது, தன்னைக்காக்குமாறென்ப தாயிற்று. உயிரைக் காத்தலாவது, அதற்குறுதி செய்தலாம் (14)

௰௫. வானமெல்லாங் கொண்ட மவுனமணிப் பெட்டகத்துக்
கானபணி யான வணியே பராபரமே.

பொழிப்புரை :—ஆகாய முழுமையுமே தன்பால் கொண்டுள்ள மவுன சுபாவ பேழையின்கண் இடுதற்கான பேராபரணமே!

குறிப்புரை :—எம்மிறையங்கே யிருந்தருள் ஸ்தானமாதலால் அம்மவுன நிலையினை மணிப்பேழை யெனச் சிறப்பித்தனர். (15)

௰௬. ஓடு மிருநிதியு மொன்றாகக் கண்டவர்கள்
நாடும் பொருளான நட்பே பராபரமே.

பொழிப்புரை :—ஓட்டுச் சல்லியையும் பெருந்திரவியக் குவியலையும் சமத்துவமாகவே யெண்ணி (அதிலிச்சைவையாது வெறுத்து) உணர்ந்தார், நாடியடைதற்குரிய நண்புரிமைப் பொருளே!

குறிப்புரை :—பெரும்பொருளையும் ஓட்டுச்சல்லியாயே நினைந்தொருவு தலே ஒன்றாகக் காண்டல் என்பதாம். (ஒருவுதல் - விலகல்) (16)

௰௭. சித்த நினைவுஞ் செயுஞ்செயலு நீயெனவாழ்
உத்தமர்கட் கான வுறவே பராபரமே.

பொழிப்புரை :—மனோ சங்கற்பங்களும், அச்சங்கற்ப பிரகாரமாகச் செய்துவரும் காரியாதிகளும் தாமே யென்று திடம் பெற்றுள்ள சத்வாம்ஸ சாதுக்களின் உண்மைப் பந்துவே என்பது.

குறிப்புரை :—நினைவுஞ் செயலும் நேர்படல், அவனருளென்றே அகங்கருதி நின்றார்க்கு அவனே உரியோனாவ னென்க. (17)

௰௮. போதாந்தப் புண்ணியர்கள் போற்றிசய போற்றியெனும்
வேதாந்த வீட்டில் விளக்கே பராபரமே.

பொழிப்புரை :—மெஞ்ஞான முடிவுணர்ந்த மகா மேதாவிகள் போற்றி சயபோற்றி யென்றே துதிசெய்கிறதான வேதமுடிவாம் வீட்டகத் தெரியாநின்ற விளக்கொளியே!

குறிப்புரை :—வேதாந்த வீட்டிற்கு போதாந்த தீபம் பொருந்துவ தியல்பே. அஃதாவது,—ஞானியர் தம்முள்ளே நயந்த பரஞ்சோதியாம்.(18)

௰௯. மூத்தாந்த வீதி மூளரிதொழு மன்பருக்கே
சித்தாந்த வீதிவருந் தேவே பராபரமே.

பொழிப்புரை :—சீவன்முத்தர் தம் முடிவாயுள்ள மோக்ஷ சாம்பிராச்சியத்திலே காணப்பெறும் நின்மேலாம் பதகமலத்தை நமஸ்கரிக்கின்ற மெய்யடியர்க்காக வேண்டி சித்தாந்தமெனும் திருவீதிக்கண் விளங்கிவரும் பரதெய்வமே! என்பது.

குறிப்புரை :—ஆறந்தத்துட் சிறந்த முத்தாந்தமாய 'தானவனும் நிற்றல்' நிலவியக்கால், சித்தாந்தமெனும் ஆகமாந்த மாய முடிவுபெற்றுள்ள தீர்மானத்தில் இறைவன் திருவருள் காண்டகு மென்ப. மற்றும், ஷடாந்த சமரசமே சித்தாந்தத் தெளிவென்பர் மேலோர். (சித்தாந்தம் - சதுர்வேத சாரமாம் ஆகமாந்தம்.) (19)

உ0. ஈனந் தருமுடல மென்னதியா னென்பதற
வானந்தம் வேண்டி யலந்தேன் பராபரமே.

பொழிப்புரை :—கேவலமாய இச்சரீரத்தினை என்னது, யானென்று விவகரித்தும் வருகின்ற அகங்கார மமகாரம் அறவே நீங்கப்பெற்று பரானந்தமாம் சுகோதயத்தினைப் பெற்றிடாது வீணுயலமந்தேன்! என்றிரங்கலாயினர் போலும்.

குறிப்புரை :—பொய்யுடலை நம்பிப் புலம்பித் திரிந்தேனன்றி நின் மெய்யுடற்கணின்று மேலாம் சிற்சுகோதயம் பெற்றேனில்லையே! (20)

உக. என்புருகி நெஞ்ச மிளகிக் கரைந்துகரைந்
தன்புருவாய் நிற்க வலந்தேன் பராபரமே.

பொழிப்புரை :—எலும்புகளனைத்தும் நெக்குநெக்காயுருகி, மனமு மிளகிக் கரைந்து அன்பே உருவாக்கொண்டு நிற்க சாலநாள் துயரெய்தினேன்.

குறிப்புரை :—மன முருகுதலினும் என்புருகவே அன்பின் முதிர்ச்சியாதலானும், அன்னார்க்கே சிற்சுகோதயப்பேறு உண்டாமென்றும் மெய்ந்நூல் விளம்பும். (அன்புருவாய் நிற்றல் - உழுவலன் பென்ப). (21)

உஉ. சுத்த வறிவாய்ச் சுகம்பொருந்தி னல்லாலென்
சித்தந் தெளியாதென் செய்வேன் பராபரமே.

பொழிப்புரை :—சித்தவிகாரமின்றி, அறிவேயுருவாய் நின்று சதானந்தம் பெற்றாலல்லது என் புத்தியானது சிறிதேனும் சாந்தமுறாதே! இதற்கியான் என்செயவல்லேன்! என்பது.

குறிப்புரை :—பேறறிவாகாரமாகிப் பேரானந்த மடையப்பெற்றார்க்கே பரம சாந்தபதவி யோமநிலையமையு மென்பது. (22)

உ௩. மாருவனுபூதி வாய்க்கி னல்லா லென்மயக்கந்
தேருமெதன் செய்வேன் சிவமே பராபரமே.

பொழிப்புரை :—இடையறாது சுவாநுபூதி செய்யப் பெற்றாலன்றி எனது நெஞ்சத்துறும் ஐயமொழியாவே! பரசிவமே! யாது செய்வேன்!

குறிப்புரை :—சித்தந் தெளிவுறவேண்டின் சுவாநுபூதி மிகவேண்டு மென்பதாம். என்? அநுபூதி ஞானம் அமைந்து திடப்படல் வேண்டு மென்பதே கருத்தாயிற்று. (23)

உ௪. தாகமறிந் தின்பநிட்டை தாராயே லாகெடுவேன்
தேகம் விழுந்திடினென் செய்வேன் பராபரமே.

பொழிப்புரை :—என்னை வருத்துகின்ற மனத்தின் றொல்லையொழிந்து, நின்மலானந்த நிட்டைக்கேற்ற முத்திப்பேற்றின் தாகந் தணித்திலையாயின், அந்தோ! கெடுவேன் தேகம் சந்தேகமாதல் நோக்கி வருந்துகின்றேன். என்பது.

குறிப்புரை :—தாபத்திரயத்தையே வெப்ப மென்பர் மேலோர். ஈண்டு, தாபத்திரயமாவது :—ஆதியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதெய் விகம் என்று மூவகை யெனவும், இதன்விரிவும் முன்னே கூறியுள்ளன. (24)

[றியென்று
உ௫. அப்பாவென் னெய்ப்பில்வைப்பே ஆற்றகிலேன் போற்
செப்புவதல் லால்வேறென் செய்வேன் பராபரமே.

பொழிப்புரை :—எனப்பனே! எளியேற்குச் சமயம் நேர்ந்துழி பரிந்துதவத்தக்கதான புதைபொருளே! யான் நின்னைப் போற்றி யென்று துதிசெய்வ தொழிந்தே வேறே என்செயக்கடவேன் என்பது.

குறிப்புரை :—எனக்கு மிகவுங் கட்டமாயிருக்கின்றது! ஆனாலும், யான் நினக்கு நமஸ்கரித்தலைக் கூறலின்றி வேறெதுவும் செய்ய வல்லே னல்லேன் என்பது. (25)

உ௬. உற்றறியு மென்னறிவு.முட்கருவி போற்சவிமாண்
டற்றுமின்பந் தந்திலையே யையா பராபரமே.

பொழிப்புரை :—(பொறிபுலாதிகளைச்) சார்ந்துணரும் எனது அறிவா னது அந்தக்கரணங்கள் ஒளிகுன்றிய தொப்ப பிரகாசங்குன்றி அறவே யொழிந்தும் எனையனே! எற்குச் சுகோதய மாகவில்லையே! என்பது.

குறிப்புரை :—எனது கருவி கரணாதிகளின் செயல் ஒடுங்கியும், இது காறும் சிற்சுகோதயத்திற் கிடனில்லையே ! நின் கிருபை யென்னே ! (26)

உஎ. சொல்லா லடங்காச் சுகக்கடலில் வாய்மடுக்கின்
அல்லா லென்றாக மறுமோ பராபரமே.

பொழிப்புரை :—வாய்கொண்டுரைக்க வொண்ணா பரமசுக சாகரத்திலே வாய்வைத்துட் கொண்டா லல்லது எளியேற் கேற்பட்டுள்ள பர போகதாகம் படியாதென்பதே. என்பது.

குறிப்புரை :—சொன்மாத்திரத்தால் அளவிடப்படாத சுகானந்தக் கடலின்கண் வாய்கொண்டு பருகினால் விடாய்தீரு மென்பது. (27)

உஅ. பாராயோ வென்னைமுகம் பார்த்தொருக்கா லென்கவலை
தீராயோ வாய்திறந்து செப்பாய் பராபரமே.

பொழிப்புரை :—என் முகத்தினைச் சிறிது கருணையோடும் பார்க்கப்படாதோ ! அங்ஙனம் பார்த்து என் மனக்கஷ்டங்களை யெல்லாம் நிவர்த்திக்கப்படாதோ ! நின் வாய்திறந்தொரு வார்த்தை கூறாயோ ! (28)

உகூ. ஓயாதோ வென்கவலை யுள்ளே யானந்தவெள்ளம்
பாயாதோ வையா பகராய் பராபரமே.

பொழிப்புரை :—எனது பரபோக தாகங்கொண்ட கவலை தீர்ந்திடாதோ ! பரமானந்த பிரவாகமானது, என்னகத்தே எங்கணுஞ் சென்று பரவாதோ சொல்லாயெனையனே !

குறிப்புரை :—மிக்க கவலையோடுங்கூடிய வென்னகத்தே பரமானந்த பிரவாகம் பாய்ந்திடலுஞ் செய்யாதோ ? என்பது. (29)

௩0. ஓகோ வுனைப்பிரிந்தா ருள்ளங் கனலில்வைத்த
பாகோ மெழுகோ பகராய் பராபரமே.

பொழிப்புரை :—ஓகோ ! நின்னைவிட்டு நீங்கினவரது நெஞ்சமானது அக்கினியிற் கிடந்த மெழுகாமோ ! அல்லது பாகென்னலாமோ ! சொல்லல் வேண்டும் என்பது.

குறிப்புரை :—ஏனென்றால், அன்னாற் பிரிவாற்றாது படும் மனத்துயரம் அவ்வளவு உடைந்தவராய்ச் சலிக்கின்றமையி னென்க. (30)

௩க. கூர்த்தவறி வத்தனையுங் கொள்ளைகொடுத் துன்னருளைப்
பார்த்தவனு னென்னைமுகம் பாராய் பராபரமே.

பொழிப்புரை :—யான் எனது நட்பபுத்தி முற்றிலுமே செலுத்தி ஒப்பற்ற நினது திருவருட் பிரசாதத்தை யெதிர்நோக்கி நின்றேன் ; ஆகையினாலே, எனது ஏழை முகத்தை யிரங்கி நோக்குக. என்பது.

குறிப்புரை :—" கூர்த்த மெய்ஞ்ஞானத்தாற் கொண்டுணர்வார் " என்றார் மணிவாசகனார் ; அதேபோன்று என்னுட்ப புத்தி முற்றிலுஞ் செலுத்தி காத்திருக்கின்ற தறிக வென்பது. (31)

௩௨. கடலமுதே தேனேயென் கண்ணே கவலைப்
படமுடியா தென்னைமுகம் பார்நீ பராபரமே.

பொழிப்புரை :—திருப்பாற்கடலிற் றோன்றிய திருவமுதமே ! மதுர மதுவே ! எனது இருகண்களுக்கு மொப்பாய் ! இனி யான் மனவருத்த மடைய முடியாதாகையால் என்முகம் பார்த்தருள வேண்டும்.

குறிப்புரை :—இனியும் யான் துன்பமுறவியலாது ! தயைகூர்ந்து என் ஏழைமுகம் பார்த்திரங்குவாய். இன்னும், இறவாமையை நோக்கி அமிழ்தென்றும், தெவிட்டலிலாது நாவினுக்கும் மனத்திற்கும் சுவைபுரிதலால் தேனெனவும், கண்களில் மணியாய் விளங்கலின் கண்ணே யெனவும் உவமைகூறி உபசரித்தோதின ரெனினுமமையும். (32)

௩௩. உள்ள மறிவா யுழைப்பறிவாய் நானேழை
தள்ளிவிடின் மெத்த தவிப்பேன் பராபரமே.

பொழிப்புரை :—என்னெஞ்சக நினைவைத்தெரிவாய் ! யான் கட்டப் படுதலையும் நன்கு காண்பாய் ! யானோ எளிமையன், ஆகையால் என்னைத் தள்ளிவிடாது கொள்ளுவாயாக ; மிகவுந் தயங்குகின்றேன். என்பது. தள்ளிவிடல் - அடியருடன் சேர்க்கா தகற்றுதல் என்ப.

குறிப்புரை :—நீ நின் பேரருளால் ஆண்டருள் புரியாது தள்ளிவிடுவையே யானால் இவ்வேழை மதியேன் வழியறியாது தத்தளிப்பே னென்றனர் போலும். (33)

௩௪. கன்றினுக்குச் சேதா கனிந்திரங்கல் போலவெனக்
கென்றிறங்கு வாய்கருணை யெந்தாய் பராபரமே.

பொழிப்புரை :—கன்றையீன்ற தாய்ப்பசுவானது உடனே இரக்க முற்று தன்கன்றுக்குப் பால்சுரந்தீவதுபோல, ஏ கருணை சொரூப பரம பிதாவே ! நீ கருணையாலென்னைக் கடைக்கணிப்பதென்று கொலோ !

வெண்பா

சிவனே சிவனே சிவனே யென்பார் பின்
சிவனுமையா ளோடுந் திரிவன்—சிவனருளாற்
பெற்ற யிளங்கன்றைப் பிரியாமற் பின்றொடிச்
சுற்றும் பசுபோற் றொடர்ந்து.—என்றார் பெரியார். (34)

[நெஞ்சம்

௩௫. என்னுத வெண்ணமெலா மெண்ணியெண்ணி யேழை
புண்ணாகச் செய்ததினிப் போதும் பராபரமே.

பொழிப்புரை :—எண்ணற்கரிய எண்ணங்களை யெல்லாம் என்பாழ் நெஞ்சமானது நினைத்து நினைத்து புண்பட்டுப் போனதும் இனி போதாதோ !

குறிப்புரை :—இறைவ ! நின் திருவருள் கிட்டாது யான் பட்டு வருந் துக்கத்தால் என் மனம் மெத்தப் பாதவிக்கின்றதை இனியேனும் பார்த்திரங்குவாய். (35)

௩௬. ஆழித் துரும்பெனவே யங்குமிங்கு முன்னடிமை
பாழிற் றிரிவதென்ன பாவம் பராபரமே.

பொழிப்புரை :—நினது மெய்யன்பனும் இவ்வெளியேன் கடற்றுரும் பானது அலைவாய்ப்பட் டலமருவதுபோன்று யான் வாளாதிரிந்துழல்வதும் பாவச் செயலே.

இங்கு அலைவதாவது=பிறவிகடோறும் பிறந்திறத்தலே யென்க.

குறிப்புரை :—யான் நினக் கடிமைப்பட்டவன் ; இவ்வாறு வீணிலே அலைந்து அலக்கழிதல் நின் திருவருளுக் கழகன்று ; எவ்வளவு பாவியாயி னும் நின்தாண்மலரில் தஞ்சமென்று விழுந்தால் அஞ்சல் என்று அபயஞ் செய்தாளல் நின் கடமையாகும் என்றபடி. (36)

௩௭. கற்றவறி வாலுனைநான் கண்டவன்போற் கூத்தாடிற்
குற்றமென்றன் னெஞ்சே கொதிக்கும் பராபரமே.

பொழிப்புரை :—யான் கற்றுணர்ந்த கல்வி கேள்வியாலுண்டான விவேக விர்த்தியால், தம்மை உணர்ந்தவன் போன்று பேய்க்கூத்தாடுவ னேல், அது என்குற்றமாக் கருதி, என்மனமே எனைச் சினந்துருக்கு மென்ப.

குறிப்புரை :—

தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்.—என்றார் பெரு நாவலர். (37)

௩அ. ஐயோ வுனைக்காண்பா னாசைகொண்ட தந்தனையும்
பொய்யோ வெளியாப் புகலாய் பராபரமே.

பொழிப்புரை :—யான் நின்னைத் தரிசித்துய்யவேண்டி அன்புற்றலைந்தது அந்தோ ? பொய்யோ ? அங்ஙனமாயின் புகலுவாய் வெளியிட்டென்பதாம்.

குறிப்புரை :—' பொய்யாசைப் பட்டால் வருமோ பதம் ' என்றார் மேலோர். (38)

௩௯. துன்பக் கண்ணீரிற் றுளைந்தேற்குன் னனந்த
இன்பக் கண்ணீர்வருவ தெந்நாள் பராபரமே.

பொழிப்புரை :—துன்பஞ் சகியாதாற்றெழுங் கண்ணீரிலே அழுந்தி வந்த எளிய அறிவினனுக்கும், நிரதிசயானந்தத் தானுண்டாம் ஆநந்தநீர் பெருகுவது எக்காலமோ வென்பது,

குறிப்புரை :—இதனால், ஆனந்தக் கண்ணீர் பெருகுதல் வேண்டுமென்பது தம்மிச்சை யெனல் தோன்ற நின்றது (39)

௪0. வஞ்சனையும் பொய்யுமுள்ளே வைத்தழுக்கா றுயுளாறும்
நெஞ்சனுக்கு முண்டோ நெறிதான் பராபரமே.

பொழிப்புரை :—வஞ்சமும் பொய்யு மருவிய நெஞ்சினேன் பொறாமையால் குளறிக் கூத்தாடுவ தல்லால் நன்னெறிச்சென்று நலம்பெறலு முண்டாமோ.

குறிப்புரை :—இதனால், வஞ்சமலிந்த நெஞ்சகமும், பொய்யும், பொறாமையும், மற்றுமுள்ள தீக்குணங்களும் பொருந்தினர்பால் இறைவன் பொருந்துவதற்கு மனம் பொருந்தானென்பது விகசிதம். (40)

௪க. பாசம்போய் நின்றவர்போற் பாராட்டி யானும்
மோசம்போனே னுன் முறையோ பராபரமே.

பொழிப்புரை :—அநாதியாய பாசத்தொடர் பொழித்தார் போன்றுள்ள வேஷத்தவனானும் மோசம் போனது நீதியாகமாட்டா தென்க.

குறிப்புரை :—' பாசத்தளை கொண்டார் பத்திநெறி நின்றால், ஈசனவர்தம்மை யிரங்கி யருளாள்வன் ' என்றோர் முதுரை யுணர்க. (41)

௪உ. நன்றறியேன் றீதறியேன் னென்று நின்றவனோர்
என்றறியே னேனழை யென்னை பராபரமே.

பொழிப்புரை —யான் நல்லதென்பதும் தெரியேன்; தீயதென்பதும் தெரியேன்; அன்றி 'நான்' என்ற அகங்கார மமகாரப் பேர்வழியை யும் தெரிந்திலன்; ஆகவே, இத்தகைய ஏழை மதியினனுய்த் தோன்றியதும் என்னே?

குறிப்புரை —யான் சிறிதும் நன்மை தீமையறியாதவனாதலால், இறைவ? கிருபை செய்வாய் என்பதாயிற்று. (42)

சங. இன்றுபுதி தன்றே யெளியேன் படுந்துயரம்
ஒன்றுமறி யாயோ வுரையாய் பராபரமே.

பொழிப்புரை —யானும், யான் படுந்துக்கமும் இப்போதுண்டானதல்லவே; சென்ம சென்மங்களாகத் தொடர்ந்து வந்ததுவாயிற்றே? அதனை யுணராமைக்கு நீயும் புதிதல்லவே? ஆகவே, நீ நெடுநாளறிந் துள்ளதே யாம்; ஆதலால் அறியாதுபோன்றுள்ளது சரியானதன்று, கிருபை செய்வா யென்பதாம்.

குறிப்புரை —நீயும், யானும், என் துயரமும் புதிதல்ல; ஆகவே நீண்டகாலமாக அறிந்திருந்தும் அறியார் போன்றுள்ளது நீதியோ, கூறாய் என்பது. (43)

சச. எத்தனைதான் சன்மமெடுத் தெத்தனைநான் பட்டதுயர்
அத்தனையு நீயறிந்த தன்றோ பராபரமே.

பொழிப்புரை —யான் எத்தனையோ பிறவியெடுத்துவந்து அவ்வப் பிறவிகளிலும் அடைந்த துன்பம் யாவும் நீ தெரிந்துள்ளதேயாம்; நினக்கு யான் தெரிவிப்பதென்னே? என்பது.

குறிப்புரை —இதனால் பூர்வவினை யனுபவம் இன்னுமுளவென்பது வெளியாயிற்றென்க. (44)

சரு. இந்தநாட் சற்று மிரங்கிலையேற் காலன்வரும்
அந்தநாட் காக்கவல்லா ரார்காண் பராபரமே.

பொழிப்புரை :—யான், பழவினைபாறு வண்ணம் பத்திநெறி நின்று உன்னைச்சார்ந்துள்ள இக்காலம் காத்தருளாயேல், காலன் வந்துறும் அந்த முடிவுகாலத்திலே நின்னையன்றி யாவருளர்? ஐயனே. என்பது.

குறிப்புரை :—'அந்தநாள்' என்பது ஈண்டு கடைசி நாளெனினு மமையும் அந்தியகாலத்துக் காத்தலினும், முந்தியகாலமாய இந்த நற்போதே காத்தருளல் இன்றியமையாப் பரமானந்தத்திற் கேற்றதா மென்பதாயிற்று. (45)

சசு. உற்றுற்று நாடி யுளமருண்ட பாவியைநீ
சற்றிரங்கி யாளத் தகாதோ பராபரமே.

பொழிப்புரை :—உன்னை என்னுள்ளே ஊன்றியூன்றிப் பார்த்தும் காணவியலாது நெஞ்சம் மயங்கிய இந்தப் பாவியேனையும் சற்றுவது இரக்க முற்று ஆண்டருள்புரியத் தக்கதன்றோ?

குறிப்புரை :—தற்போதமின்றிச் சிவபோதங்கொண்டாராய்ந்தார்க்கே இறைவன் வெளிப்படக் காணலாமென்பது ஆன்றோர் அருண்மொழியாக லான் அம்முறைகோடாது, இறைவனும் எளிதாப் புலப்படாமைகண்டே "உற்றுற்று நாடியுளமருண்ட பாவியை" என்றனரென்பாம் (46)

சஎ. எள்ளளவு நின்னைவிட வில்லா வெனைமயக்கிற்
றள்ளுதலா லென்னபலன் சாற்றாய் பராபரமே.

பொழிப்புரை :—எளியேனை யாண்டருள்புரிபவர், எட்டுணையேனும் தம்மையல்லாது வேறெவருமின்றியபோது, மீண்டு மீண்டும் பவசாகரத்திற் றள்ளி மயங்கச் செய்வதால் நினக்காய பயன் என்சொல்? கூறுவாயாக, என்பதாம்.

குறிப்புரை :—எனக்கருள்புரிந்தாள்வது நீயேயாகவிருக்க, அங்ஙனம் ஆண்டருளாமே அடுத்தடுத்துப் பவக்குழி வீழ்த்தி மயக்கிடுவதில் பயன் யாது (47)

சஅ. பாடிப் படித்துலகிற் பாராட்டி நிற்பதற்கோ
தேடியெனை யடிமை சேர்த்தாய் பராபரமே.

பொழிப்புரை :—இவ்வுலகத்திலே நின்னைப் பலவாறுகப் பக்திகொடு துதிசெய்து பெருமைபாராட்டி விளங்கற்கோ என்னைத் தேடி நீ அடிமை கொண்டாய் அன்று என்பதாம்.

குறிப்புரை :—எளியேனை யடிமைகொண்டது, யான் நினைப் பெருமை யோடும் பாடித் துதிசெய்வதற்கோ? (48)

சகூ. சொன்னத்தைச் சொல்வதல்லாற் சொல்லறவென் சொல்ல
கென்னத்தைச் சொல்வே னெளியேன் பராபரமே. [றுதிக்

பொழிப்புரை :—முன்னோர்கூறிய முதுமொழியேயன்றி, சொல்லுத லற்று நிற்குமாறும், எனது சொல்லும் முடிவடையுமாறும், எளியவன் வேறென்ன சொல்லவல்லே னென்பது. (49)

௫0. சொல்லும் பொருளுமற்றுச் சும்மா விருப்பதற்கு
அல்லும் பகலுமெனக் காசை பராபரமே.

பொழிப்புரை :—செந்தமிழ்ச் சொல்லும் அதன் அருத்தமும் ஒழித்து விட்டு யேகாந்தமாயிருத்தற்கே இரவும் பகலும் எனக்கு ஆசையாகும். (சொற்பொருள் கூறுதொழிந்து தனியிருத்தற் கெனக்காசையாகும்.)

குறிப்புரை :—நிர்ச்சிந்தையாய் மௌன முற்றிருத்தற்கே தனக்கு ஆசையென்றனர் போலும் (50)

௫க. நேச நிருவிகற்ப நிட்டை யல்லா துன்னடிமைக்
காசையுண்டோ நீயறியா தன்றோ பராபரமே.

பொழிப்புரை :—உன் அடிமைக்கு, நேசமுள்ள நிருவிகற்ப நிட்டையிலே ஆசையல்லாது வேறெவற்றினும் பற்றில்லையென்பது நீ உணராத தன்றோ! நேச நிருவிகற்ப நிட்டை - இதுகாறும் அநுபாலித்தமை.

குறிப்புரை :—என்னகத்தீசா! என் ஆசையை உள்ளிருந்தறிந்தும் அறியாதவன் போலிருந்தாயானால் அடிமைக்காணமை என்னே, யென்பது இதன் கருத்தாக் காணப்படுகின்றமையறிக. (51)

௫உ. துச்சனென வேண்டாமித் தொல்லுலகி லல்லல்கண்டால்
அச்சமிக வுடையேனையா பராபரமே.

பொழிப்புரை :—எளியனை நீ கேவலத்தன் என்று எண்ணவொண்ணாது; இப்பழமையான நிலவுலகில் அநுபவரீதியாலறியப் படும் கட்ட நிட்டூரங்களை யுள்ளபடி யுணரின், அப்போதென்னுள்ளம் அஞ்சுகின்றது; ஐயனே! நீயேயறிவாய்.

குறிப்புரை :—எளிய அடியவனது கேவலத்தன்மை, நின் பேரருள் வழங்கப் பெறுமையாலன்றோ? ஆய்ந்துபார்மின்! (52)

௫௩. கண்ணுவா ரேனுமுனைக் கைகுவியா ராயினந்த
மண்ணுவார் நட்பை மதியேன் பராபரமே.

பொழிப்புரை :—எளியேற்கு நேத்திர ஸ்தானத்தவரேயானாலும், அவர் நினக்குக் கரங்கூப்பிச் சிரம் வணங்கா வன்பரானுல், அவ்வன்னெஞ்ச மண்ணுய்க்கழிவாரை நண்புகொள எண்ணுதொழிவேன் என்பதாம்.

குறிப்புரை :—அண்ணல்! நின்னை யன்புற்று வணங்காரேல், அவரை நண்ணு தென்னுள்ளம் என்பது கருத்தாகும்.

கோணிலா வாளியஞ்சேன் கூற்றுவன் சீற்றமஞ்சேன்
நீணிலா வணியினனை நினைந்துநைந் துருகிநெக்கு
வாணிலாங் கண்கள் சோர வாழ்த்திநின் றேத்தமாட்டா
வாணலாத வரைக்கண்ட லம்மநா மஞ்சுமாறே.—

மணிவாசகர் கூற்று. (53)

ருச. கொல்லா விரதங் குவலயமெல் லாமோங்க
எல்லார்க்குஞ் சொல்லுவதென் னிச்சை பராபரமே.

பொழிப்புரை:—ஜீவஹிம்சை செய்யாதொழிதலைக் குறியாக்கொண்டு ஒழுகவேண்டுவதைக் குறித்து ஆன்மாக்களார்க்கு ஓதுவதே அடிமைக்குப் பேராசையாகும்.

குறிப்புரை :—"அஹிம்ஸா பரமோதர்மஹா" யென்றார் வடநூலார், 'நோன்பென்பதுவே கொன்று தின்னாமை' யென்றார் ஔவைப் பாட்டியார் 'கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி, எல்லா வுயிருந் தொழு' மென்றார் பெரு நாவலர் திருவள்ளுவர். (54)

ருரு. எத்தாற் பிழைப்பேனோ வெந்தையே நின்னருட்கே
பித்தானேன் மெத்தவுநான் பேதை பராபரமே.

பொழிப்புரை :—என் பரமபிதாவே! யான் எவ்வகையால் ஜீவிப்பனோ அதையறிந்திலன்; நின் திருவருட்பிரசாதத்திற்கே பேராவலாம் பித்துகொண்டேன்; அன்றியும், மிக்க பேதமையேன்.

குறிப்புரை :—யான் பெரும் பேதமையேனாதலால், பிழைத்தற்கு நீயே கதியென்றடையலாயினேன். வேண்டேன் பிற வேண்டுவதும் நின் திருவருளேயாகும் என்பது சாரம். (55)

ருசா. வாயினாற் பேசா மவுனத்தை வைத்திருந்துந்
தாயிலார் போலுன் றளர்ந்தேன் பராபரமே.

பொழிப்புரை :—வாசாஞானமன்றி, ஞானவரம்பாம் மோனத்தைக் கொண்டிருந்தும், யான் அன்னையிலாக் குழவிபோன்றலைந்து மனந்தயங்கலாயினேன்; (இது நின்னருட்கழகோ!)

குறிப்புரை :—(வெண்ணை கொண்டும் நெய்க்கழுவார்போல்) ஞானமோனம் பெற்றிருந்தும் (எனையா?) தாயொழிந்த தனையனை யனையனாய்த் தளர்வெய்தியதுந் தக்கதோ? (இதுவுந்தர்மமோ) (56)

ருஎ. அன்னையிலாச் சேய்போ லலக்கணுற்றேன் கண்ணார
என்னகத்திற் றாய்போ லிருக்கும் பராபரமே.

பொழிப்புரை :—பெற்றொழிந்த பிள்ளையைப்போன்று, யான், நின் திருக்கருணைகாணாது அளவில் துயரடையலானேன் ; எந்நெஞ்சகத்தே கண்கண்ட தெய்வமாய் வீற்றிருந்தருளும் பரவஸ்துவே !

குறிப்புரை :—இறைவா ? நின் திருவருட் சத்தியாம் பேரன்னையின் திருவருள் கிடைக்கப் பெறுமே சில காலமாக அலமந்து அலைந்து வந்தேன் ! (57)

ருஅ. உற்றுநினைக் கிற்றுயர முள்ளுள்ளே செந்தீயாய்ப்
பற்றநொந்தே னென்னைமுகம் பார்நீ பராபரமே.

பொழிப்புரை :—ஆழ்ந்தறிந் தாலோசித்தால், என் இதயத்தின்கண் தோன்றுகின்ற துக்ககரமானது, செஞ்சுடர்தீயாய்ப் பற்றி யெரிகிறதாகி மிகவும் வாட்டமுற்றனன் ; இனியாவது என் வாட்டந் தவிர்க்க ஏழையின் முகம் பார்த்தருள்வாய் என்பரம் பொருளே !

குறிப்புரை :—என்னை யான் சற்று ஆழ்ந்தாராய்ந்து பார்க்கின், அங்க மெலாம் அனலாய் பற்றி எரிகிறது ; இஃதறிந்த நீ மவுனமொழிந்து, கருணைகரத்தெய்வமே ! சற்று என் முகத்தைக் கடைக்கணிப்பாயாக. (58)

[கேட்டுக்

ருகூ. பொய்யனிவ னென்றுமெள்ளப் போதிப்பார் சொற்
கைவிடவும் வேண்டாமென் கண்ணே பராபரமே.

பொழிப்புரை :—என்னிரு கண்மணியோய் ! எவரேனும், " இவன் மிகப் பொய்மையன் " என்று சாதுரியமாய்க்கூறும் வார்த்தைக்குச் செவி கொடுத்து என்னைத் தள்ளிவிடாது காத்தருள் புரிவாயாக என்பது.

குறிப்புரை :—பொறாமைகொண்டு எவரேனும் என்னை இழித்துக் கூறும் கோளுறை கோடாது, என் கண்மணியே ! என்னைக் கைவிடாது காத்தருள் புரிவாயாக. (மெள்ளப் போதிப்பார் - ஈண்டு தத்துவ சேடிப் பாகும்.) (59)

சுO. எண்ண மறிந்தே யிளைப்பறிந்தே யேழையுய்யும்
வண்ணந் திருக்கருணை வையாய் பராபரமே.

பொழிப்புரை :—என் இதயபந்தரில் படர்ந்து செழித்துள்ள தோற் றங்களை யுணர்ந்து, அதுமெலிவடைந்தமைக் கிரங்கி, எளியேன் கடைத் தேறுமாறு கருணைபூத்தருள எனையா ? நின்னை வேண்டிக் கொள் கின்றேன்.

குறிப்புரை :—நின்கருணைக்கு, யான் பரிந்து பரிந்து விரைந்து நின் பால் பரிதபித்தோதும் பான்மைக் கிரக்கங்கொண்டருள வேண்டுமாய் மன் றாடுகின்ற தறிந்தருள்வாய் என்பது.

இளைப்பு - திருவருட்டாக மாகும். (60)

சுகூ. நாட்டாதே யென்னையொன்றி னட்டியித மஹிதங்
காட்டாதே யெல்லாநீ கண்டாய் பராபரமே.

பொழிப்புரை :—எளியனை யாதொன்றினும் பற்றச் செய்யற்க ; ஏன்? அதனால் நல்லன தீயன தோன்றும். ஆகையினாலே யென்பாம் ; ஆகவே, அனைத்தும் நீயாகவேயு முள்ளாமையா னென்க.

குறிப்புரை :—நாமரூபப் பிரபஞ்சாதிகளனைத்தும் முடிவாகப் பார்க்கு மிடத்து நீயாகவே காணப்படலான் எனையாதினும் பற்றுறாது தனிப் பொருளா யிருக்குமாறருள்வாயாக வென்பது.

இதம் அஹிதம் - வடசொல் ; அதாவது, நல்லன தீயன. (61)

சுஉ. உன்னைநினைந் துன்னிறைவி னுள்ளே யுலாவு மென்னை
அன்னைவயிற் றின்ன மடைக்காதே பராபரமே.

பொழிப்புரை :—சதா நின்னையே தியானத்தில் வைத்து, பின்னர் நின் திருவருட் பரவெளிக்கண்ணும் வாழ்ந்து வருகின்ற எளியனை, மீண்டு மீண்டும் மற்றுமோர் தாயின் கருப்பாசயப் பைக்குள்ளாகாவாறு காத்தாள்வ துன்பரம் பரவத்துவே என்பது.

குறிப்புரை :—ஒப்பற்ற நின் தியானத்தோடும் நின்னருள் வெளிக் குளே திரிந்துவாழும் இவ்வேழைத் தொழும்பனை இனியோர் மாதாவுதரத் தில் வாராவகையருள்வா யென்று வேண்டுவாராயினர்.

உன்னிறைவாவது - திருவருள் விலாச பரவெளி வீடாம் (62)

சுங. பரமுனக்கென் றெல்லாம் பழக்கமே மாறா
வரமெனக்குத் தந்தருளென் வாழ்வே பராபரமே.

பொழிப்புரை :—இவ்வெளியேனைத் திருவருள்புரிந் தாண்டருளல் நின் பாரமாகும் என்று தீர்மானித்துள்ள அம்முறை கெட்டுப்போகாதபடி ஓர் நல்ல அநுக்ரக திருவாக்கருளுதல் வேண்டுமென் பரானந்த பெருவாழ் வோய் என்பது.

குறிப்புரை :—யான் இப்போது நின் திருவருள் பெற்றுய்ய வேண்டு வது நின் திருவருள் பாரமாகும் எனக்கொண்ட வைராக்கிய முடிபானது

மாறுபடாவகையா யென்று முள்ளவாறிருத்தற்கு நின்வல்ல செல்வாக்கில் நல்லதோர் திருவாக்கருள வேண்டுவராயினர் போலும். (63)

சாச. வந்தித்து நின்னை மறவாக் கடனாகச்
சிந்திக்க நின்னருள் செய்யாய் பராபரமே.

பொழிப்புரை :—தேவரீர்தம் திருவடிகளையே சதா காலமும் வழிபட்டேத்தியும், மற்றும் தம்மை யான் நினைத்த லொழியாதவகைத் தியானித்தல் வைத்திருக்கவும் கடமைப் பெற்றுய்ய நின் திருவருள் புரியாய் என்பது.

குறிப்புரை :—இதனால், எம்பெருமான்பால் பத்தி செய்து முத்திபெற வேண்டுதலுங்கூட, முதற்கண் " அவனருள் கொண்டவன்றாள் வணங்கி " என்ற மணிவாசகர் திருவாக்குக்கிணங்க இறைவன் திருவருள் வேண்டுமென்பது நிராடங்க மொழியாய் முடிந்ததறிக. (64)

சாரு. எவ்வுயிரு மென்னுயிர் போலெண்ணி யிரங்கவுநின்
தெய்வ வருட்கருணை செய்யாய் பராபரமே.

பொழிப்புரை :—சேதனு சேதன நாமரூபாதி பிரபஞ்ச ஆன்மாக்களனைத்தையும் என் பிராணனைப்போன்று சமத்துவ பாவனை கொள்ளவும் அவைகளிடத்தே சமயநேர்ந்துழி இரங்கியபாவம் வரவும் நின் தெய்வீகமாகிய திருவருட் கருணைப்பிரசாத மொன்றை அடிமைக்கு அநுக்கிரகிப்பாயென்பது.

குறிப்புரை :—சர்வான்மாக்களிடத்தும் என்னுயிர்போல் இரக்கங் கொண்டு கலந்து பேதமின்றி வாழ்ந்துவர வேண்டும் என்பது. (65)

சாசா. வெட்டவெளிப் பேதையன்யான் வேறுகப டொன்றறி
சிட்டருடன் சேரனந்தந் தெண்டன் பராபரமே. [யேன்

பொழிப்புரை :—இறைவனே ! யானே, சாமானியமான வெறு வெளித்திரியும் சிறிய பால்ய பேதமையேன் ; எனக்கு வஞ்சமாய எண்ணங்கள் என் சித்தமறியாதாகும் ; ஆகவே, எளியனைக் கடைத்தேற்றுமாறு நின் மெய்யன்பரோடும் கூட்டியருள்வாயாக ; இவ்வாறு கிருபை புரிய யான் நின் பாதமலர்க்கு அநேக நமஸ்காரம் செய்கின்றேன்.

குறிப்புரை :—வெள்ளறிவினனுய எளியேற்கு சற்றேனும் கள்ளங் கபடு என்பதே சிறிது மில்லை யாதலால் யான் உய்யும்படி அடியருடன் கூட்டி கிருபைசெய்ய அநேக நமஸ்காரம் செய்கின்றேன்.

சிஷ்டர் என்ற வடசொல் சிட்டராய், 'உத்தம அன்பர்' எனப் பொருள் தந்துள்ளது. (66)

சுஎ. இரவுபக லற்றவிடத் தேகாந்த யோகம்
வரவுந் திருக்கருணை வைபாய் பராபரமே.

பொழிப்புரை :—கங்குல் பகல் கடந்துள்ள பரவெளி வீட்டகத்தை நாடியிருத்தலாந் தன்னந்தனி யிருக்கையாம் பிரதம யோகத்தை எனக்குப் பாலித்தருள திருக்கருணை புரிந்தருள்வாயாக. என்பது.

குறிப்புரை :—இரவு பகலற்றவிடம், சகல கேவல மென்றும், நினைத்தல் மறத்தல் செய்யாதொழிந்த நிலையென்றும், மேலோர் கூற்று ; இங்ஙனம் சும்மாயிருத்தலே யோகமாகும் ! ஆதலின் இது சாத்தியமாக வேண்டுவாராயினர். இதுவே தனியிருத்தலாகும். (67)

சுஅ. மால்காட்டிச் சிந்தை மயங்காமல் நின்றுசுகக்
கால்காட்டி வாங்காதே கண்டாய் பராபரமே.

பொழிப்புரை :—எளியேற்கு இச்சையை மிச்சப்படுத்தி அதில் மயக்குற்று கெடாது நின்று சிற்சுக மளித்திட்டுப் பின்னர் கைவிடாதருள் புரிக.

குறிப்புரை :—யான் மயக்க மொழிந்து நிலைபெற சிற்சுகோதயத்திற் கேதுவாம் யோக நிட்டைதந்து பின்னரும் நின்னுருக்காட்டியருள வேண்டுமென்பதே உடையவர் கோறுதலாம். (68)

சுகூ. எப்பொருளு நீயெனவே யெண்ணிநான் றேன்றுத
வைப்பையழி யாநிலையா வையாய் பராபரமே.

பொழிப்புரை :—காண்பன வனைத்தும் நீயாகவே யான் பாவனை கொண்டும், நான் எனும் போகந்தை என்பால் அறவே தொலைந்து, பொன்றுதலில்லா மேலாம் பரவெளிவீட்டை யடையுமாறும் கிருபை செய்தருள பிரார்த்திக்கின்றேன் என்பது.

குறிப்புரை :—நானெனு மகந்தை நாசமுற்று, எவையும் நீயேயாகு மெனக் கொண்டு, துரியத்திருந்துய்ய வேண்டு மென்பது. தமது ஆத்மார்த்த ஆசையென்பது தோன்ற நின்றது. (69)

எ0. சும்மா விருப்பதுவே சுட்டற்ற பூரணமென்
றெம்மா லறிதற் கெளிதோ பராபரமே.

பொழிப்புரை :—நினைத்தல் மறத்தலாம் சகல கேவல மொழிந்து அதாவது முன்னிலைச்சுட் டொழிந்தும், அதுவே நிறைவாம் பூரணநிலை யென்றும் அறிந்து நிற்றல் என்றால் தரமன்று என்பது.

குறிப்புரை :—மனோ நாசமுற்று நிற்றலையே மனமிறந்த தென்றும், மனமிறக்கவே, கருவி கரணாதிகளெவையுந் தானாகவே யோயுமென்பதும் சோபான முறையாயிற் றென்க. பூரண நிலையும் இதுவே யாகும் என்க. (70)

எக. முன்னொடு பின்பக்க முடியடிநாப் பண்ணறநின்
றன்னொடுநா நிற்பதென்றோ சாற்றாய் பராபரமே.

பொழிப்புரை :—முன், பின், பக்கங்களோடு இரண்டு பக்கங்களுங் கூட்டி நாற்புறங்களென்ன, முதற், கடை, நடு வென்னும் மூன்று காலங்களென்ன இவைகள் அறவே யொழியும்படி யான் நின்னைச் சார்ந்து ஒன்றாய் முடியுஞ் சமயம் எந்நாளோ கூறுவாய் என்பது.

குறிப்புரை :—ஜீவாத்மா பரமாத்மாவுடன் கலப்புறுவதான அத்துவித நிலைபேறு வாய்த்த அக்கணமே மேற்கூறியன வொழிதலால் அவை யெந்நாளொன்று வினவியறிந்தனர் போலும் என்க. (71)

எஉ. மைவண்ணந் தீர்ந்த மவுனிசொன்ன தெவ்வண்ணம்
அவ்வண்ண நிட்டை யருளாய் பராபரமே.

பொழிப்புரை :—சந்தேக விபரீதமற்ற மவுன தேசிகனருளிய தெவ் வகையதோ, அவ்விதமாகிய பரமநிஷ்டையையே யெளியேற்குத் திருவுளம் பற்றி யநுக்ரகிக்குமாறு வேண்டுகின்றேன் என்பது.

குறிப்புரை :—சற்குரு நாதன் உபதேசித்த தெந்த நிட்டையோ அதனையே தேவரீர் எனக்கு அநுக்ரகிக்குமாறு கிருபை செய்க வென்பது. (72)

எங. வித்தன்றி யாதும் விளைவதுண்டோ நின்னருளாஞ்
சித்தன்றி யாங்களுண்டோ செப்பாய் பராபரமே.

பொழிப்புரை :—விதை யில்லாது தாவர மில்லாமைபோன்று, நின் திருவருட் சத்தியாம் மெய்ஞ்ஞானமன்றி யாங்கள் கதிபெறலின் மார்க்க மில்லையென்பது விகசித மென்ப என்பது.

குறிப்புரை :—வித்திலா விளைவில்லாமை போன்றே நின் திருவருளாய ஞானமென்பது சிறிதுமில்லாது யாங்களு மில்லையாகவே முடியுமே? இது பற்றி உண்மை கூறுவீராக. (73)

எச. ஆங்கார மற்றுன் னறிவான வன்பருக்கே
தூங்காத தூக்கமது தூக்கும் பராபரமே.

பொழிப்புரை:—அகங்கார மமகார மற்ற சிவபோதத்தார்க்கே, தூங்காது யோக நித்திரை தோன்றுமென்ப தாயிற்று.

குறிப்புரை:—சிவபோத முள்ளளவும் யோகியர்க்குப் பரநிட்டை கூடுதல் இயலாதென்பது வேத சம்மதமா மென்றுணரற் பாற்று. (74)

எரு. சிந்தை யவிழ்ந்தவிழ்ந்து சின்மயமா நின்னடிக்கே
வந்தவர்க்கே யின்பநிலை வாய்க்கும் பராபரமே.

பொழிப்புரை:—மனம் ஒருவர்க்கு அன்பினுலே எவ்வளவு நெகிழ்ந் துருகுமோ அன்னவர்க்குத்தான் எம்பெருமான், தனது அருட்சத்தியார் வாழுந் தலமாம் திருவடி நீழலைத் தந்தாள்வ ரென்பது உபநிஷத்துக்களின் கூற்றும்.

குறிப்புரை:—இதனுல், நீராளமாக நெகிழ்ந்துருகும் நெஞ்சினை யுடைய மெய்யன்பர்கள் ஞானசத்தியார் திருவருள் கொண்டு, இறைவன் திருவடி நீழலை இலகுவாய்ப் பெறுவர் என்பது பெறப்பட்டது.

சிந்தையவிழ்தல் - ஈண்டு நெஞ்சம் அன்பால் கரைதலாம். (75)

எசா. சொல்லாட ஊமரைப்போற் சொல்லிறந்து நீயாகின்
அல்லா லெனக்குமுத்தி யாமோ பராபரமே.

பொழிப்புரை:—பேச்சற்ற மகா மவுன ஞானியர்கள் தன்மைபெற்று, பின்னர் அடிமை அத்துவிதமாக நின்னைப் பற்றிக் கொண்டாலன்றி மோக்ஷ நிலை யெளிதாய் லபியாதே என்பது.

குறிப்புரை:—சுத்த மவுனச் சத்தர்களாம் மெய்ஞ்ஞானிப் பிரசாத சித்தி, நின் பற்றன்றி, யான் என் வலிமையாற் பெறற்பாற்ரே? கிட்டா தென்பது. (76)

எஎ. பேச்சாகா மோனம் பிறவா மூளைத்தென்றற்
காச்சாச்சு மேற்பயனுண் டாமோ பராபரமே.

பொழிப்புரை:—வாக்கிறந்த மவுனம் பிறந்து நிலைபெற்ற தென்பது உறுதியாகியது; ஆகவே அதன் காரணமாகிய மோக்ஷானுகூலமும் இனி பெற்றுய்யலா மென்பது.

குறிப்புரை:—சொல்லுஞ் செயலொழிந்து முழுமவுனம் சித்திப்பது மிகச் சமீப மாயிற்றென்பது தோன்ற நின்றதாம். (77)

எஅ. கெட்டியென்றுன் னன்பர்மலங் கெட்டயர்ந்தோர் பூரண
தொட்டிலுக்குட் சேய்போற் றுயின்றார் பராபரமே. [மாந்

பொழிப்புரை :—'இவர் மிகச் சமர்த்தர்' எனவே கொண்டாடத் தக்கதாகவுள்ள நின் உண்மை யடியார், மலத்தாற் சுழன்று பின்றெளிந்து மல மற்றுப் பூரணமெனும் தொட்டிலின்கண், குழவியைப் போன்று யோகுறக் கங் கொண்டனர் என்பது.

குறிப்புரை :—மும்மல மொழிவு பெற்ற அன்பர் பரிபூரணமாந் தொட்டியில் அயர்ந்து யோகுறங்கங் கொள்வரென்பது பெறப்பட்டது. (78)

எகூ. காட்ட வருளிருக்கக் காணு திருண் மலத்து
நாட்ட மெனக்குவர னன்றோ பராபரமே.

பொழிப்புரை :—எளியேற்கு முத்திவழி காட்டற்குத் திருவருள்வலி யிருக்கிறபோது, அதற் கெதிரிடையான அந்தகாரமாம் திரிமலபந்தம் எந்தவாறுண்டாம்? வாரா தென்பதாம்.

குறிப்புரை: —முத்திப் பேற்றிற்கு வித்தாம் திருவருள் வயப்பட்டுள்ள வரையில் காரிருண் மலபந்தம் தலைகாட்டா தென்பதாயிற்று. (79)

அ0. எத்தன்மைக் குற்ற மியற்றிடினுந் தாய்பொறுக்கும்
அத்தன்மை நின்னருளு மன்றோ பராபரமே.

பொழிப்புரை: —எக்குற்றம் புரியினும் சேயென்று தாய் பொறுத்தல் இயல்பாம்; அதேபோன்று, எம்போன்றார் செய்த குற்றம் பெரிதே யாயினும், நின் திருவருளன்னையார், அறிய பிள்ளையாம் என் பிழை பாராட்டாது திருவருள்புரிவள் என்பதாம்.

குறிப்புரை —"குற்றஞ் செய்தல் எனக்கியல்பே, குணமாக்கொள்ளல் நினக்கியல்பே" என்ற பெரியார் மூதுரைக்கிணங்க 'அன்பர் பிழைபாராட்டாள் அருளம்மை' யென்றார். (80)

அக. எத்தனையோ தேர்ந்தாலு மென்னாலே யின்பமுண்டோ
சித்துருவே யின்பச் சிவமே பராபரமே.

பொழிப்புரை :—யான் எவ்வளவு தெரிந்திருப்பினும் பேரின்ப மென்பதை யானாகவே தேடிக்கொள்ள முடியுமோ? ஞானமயமாய திருவருட் சத்தியும், நின்கருணையுமின்றியே? சிற்சுகோதய ஞானசொரூபனே என்பது.

குறிப்புரை :—நின் பெருமைவாய்ந்த சிவபோதமின்றிச் சிறுமை யேய்ந்த சீவபோதத்தாலே ஞானச்சுகோதயம் வாராதென்பதாயிற்று. (81)

அ௨. மண்ணொடுவின் காட்டி மறைந்துமறை யாவருளைக்
கண்ணொடுகண் ணொகவென்று காண்பேன் பராபரமே.

பொழிப்புரை :—இப் பூமண்டலத்தோடும் ஆகாய விரிவையுங் காண்பித்து மறைவுபெற்றும் மறையாதாகிய நின் பேரருளைக் கண்ணகத்துள்ள கண்ணின் பிரகாசம்போன்று யான் பெறுவது எக்காலமோ ?

குறிப்புரை :—ஒப்பற்ற நின் பேரருட் பிரசாதத்தினை, கண்ணும் கண்ணொளியும் போன்று ஒருமையுற் றோங்க யானடைதல் எப்போதோ என்பதாம். (82)

அ௩. பஞ்சரித்து நின்னைப் பலகா லிரந்ததெல்லாம்
அஞ்சலெனும் பொருட்டே யன்றோ பராபரமே.

பொழிப்புரை:—யான், நின்பால் பலமுறையும் மிகக் கெஞ்சிக்கெஞ்சி யாசிப்பதெல்லாம், " தஞ்ச மென்று வந்து தாள்பிடித்தபோது நீ என்னை அஞ்சாதே யென்று அபயாஸ்தம் செய்தற்பொருட்டேயாம் " என்பது.

குறிப்புரை :—எளியேன் நின்றாள் பணிந்து கெஞ்சிக்கேட்டுக் கொண்டதெல்லாம் ' அஞ்சலை ' யென்ற அபயப் பிரதானத்தையே யன்றி மற்றன் றென்பதே. பஞ்சரித்தல்.-கெஞ்சிக்கேட்டல். (83)

அ௪. எங்கெங்கே பார்த்தாலு மெவ்வுயிர்க்கு மவ்வுயிராய்
அங்கங் கிருப்பதுநீ யன்றோ பராபரமே.

பொழிப்புரை :—இறைவா ! நின்னை எவ்வெவ்விடங்களில் உற்று நோக்கினும் ஆங்காங்கும் அவ்வவ் வுயிர்க்குயிராய்ப் பொருந்தி யிருந்தருள் கின்றாய் ; இங்ஙனம் சர்வாந்திரியாமியா யிருப்பதுவும் வேறோர் தெய்வத் திற்கு முண்டாங் கொல்லோ ! இல்லையில்லை யென்றபடி.

குறிப்புரை :—" எல்லாமா யல்லதுமா யிருந்ததனை யிருந்தபடி யிருந்துகாட்டி " என்று பெரியார் கூறிய பெருமொழிக்கிணங்க எங்கணும் நீயே வியாபித்துள்ளா யன்றோ ? அப்போது யான் நின்றனக்குரைப்ப தெற்றுக்கோ யென்றபடி. (84)

அ௫. அனைத்துமாய் நின்றாயே யான்வேறோ நின்னை
நினைக்குமா றெங்கே நிகழ்த்தாய் பராபரமே.

பொழிப்புரை :—நாமரூபப் பிரபஞ்சாதிய வனைத்தும் நீயாகவே விளங்கியுள்ளாய் ; ஆகவே யான் அவற்றினும் வேறாதலெவ்வாறோ ? அன்றி நின்னைத்தியானஞ் செய்தலு மெப்படி ? கூறுவாயாக என்பது.

குறிப்புரை :—சர்வமும் நீயாகவே விளங்கி வருகிறபோது, யான் நினக்குப் புறம்பானவனல்ல வென்றபடி. (85)

அசா. நின்போதத் தாலே நினைப்பு மறப்புமென்றால்
என்போத மெங்கே யியம்பாய் பராபரமே.

பொழிப்புரை :—நினைத்தலென்ன, மறத்தலென்ன இவை யெல்லாம் உன்னறிவா லுண்டாமாயின் என்னறிவாலுண்டாதல் எப்படி கூறுவாய்?

குறிப்புரை :—அனைத்தும் அவனலாம்போது இவனறி வன்றென்பது தோன்ற நின்றதாம். போதம் - அறிவென்ப.

சிவபோதம் வியாபித்த விடத்து சீவபோதமின்றெனும் நியாயம் :

தற்போதத்தைச் சீவபோதமென்பது முண்டு. இது பரிபாஷை. (86)

அஎ. ஒன்றைநினைந் தொன்றைமறந் தோடுமன மெல்லாநீ
என்றறிந்தா லெங்கே யியங்கும் பராபரமே.

பொழிப்புரை :—ஓர் விஷயத்தை நினைத்தும் மற்றோர் விஷயத்தை மறந்தும் சஞ்சரியா நிற்றல் நம்மனத்தின் சுபாவம். ஆனால், எவையும் நீயே யென்றுணர்ந்த மனம் பின்னெங்கும் போமோ ? போகாதென்றபடி.

குறிப்புரை :—எண்ணலும் மறப்பும் இயல்பாக்கொண்ட மனம், அனைத்துமாய் அவனே விளங்கலை யுணர்ந்த பின்னர் வேறிடஞ் செல்லலு முண்டோ ? என்பது. (87)

அஅ. கொழுந்தில் வயிரமெனக் கோதறவுள் ளன்பில்
அழுந்துமவர்க் கேசுகமுண் டாகும் பராபரமே.

பொழிப்புரை :—மிகக் கொழுந்தாயுள்ள குச்சியில் வயிரமறை வெய்தமை போன்று, யாதொரு குறையுமின்றி உள்ளன்பில் பொருந்திய வர்க்குத் தான் சிற்சுகோதயமாகும் யென்பதாம்.

குறிப்புரை :—இளமரத்தினும் வயிரம் மறைந்து நிற்றல்போல் இறைவன்பால் கொண்ட அன்பில் யாவர் அழுந்தி நின்றார்களோ அவர்க்கே ஆனந்தம் ஜனிக்குமென்பது. (88)

அகூ. பற்றும் பயிர்க்குப் படர்கொழுந்து போற்பருவம்
பெற்றவர்க்கே நின்னருடான் பேறும் பராபரமே.

பொழிப்புரை:—கணுவுக்கு கணுமேலோங்கி வளர்தலையுடைய புற்பயிர்களில் காண்டகும் கொழுந்தினை யொத்தே, பரிபக்குவ முடையவர்க்குத் தான் நினது மேன்மைசால் திருவருளானது பயன்றருவனவாம்.

குறிப்புரை:—பரிபக்குவம் வாய்ந்துள்ள மெய்யன்பர்களுக்கு மட்டுமே பெம்மான் றிருவருட் பேறெய்தப்படு மென்பது. (89)

கூ0. யோகியர்க்கே ஞான மொழுங்காம்பே ரன்பான
தாகியரும் யோகமுன்னே சார்ந்தோர் பராபரமே.

பொழிப்புரை:—யோக முற்றியவர்க்கே ஞான முரியதாகும்; அஃதல்லாதார் விரும்பல் முறையன்று; மற்றும், பேரன்பு கொண்ட பெரியாரும் முத்திக்கு இச்சைகொண்டு நிற்பர்; இவர்கள் முன் பிறப்பிலேயே யோகத்தைச்சார்ந்து முடித்தவர்களா யிருப்பது முண்டு.

குறிப்புரை:—சரியை, கிரியை, யோகம் இவை முறையாய் முடியப் பெற்றவரே ஞானப்படியில் கால்வைக்கலாம்; அங்ஙனமில்லாது ஒன்றைவிட்டொன்றைத் தாண்டிச் செல்லில் முடிவு பெறுவென்பதாயிற்று. ஆனால் யோக சித்தியின்றி ஞானம் பெற்றாரின்றோ வென்று சங்கிப்பார்; ஆனாலவர் முன்னே யோகமுடிந்து நின்றவரென்று தெரிதற்பாற்று. முன்னே - முன் சென்மம். (90)

கூக. அல்லும் பகலு மறிவாகி நின்றவர்க்கே
சொல்லும் பொருளுஞ் சுமைகாண் பராபரமே.

பொழிப்புரை:—இராப்பகல் எப்போதும் அறிவாகாரமா யிருந்துவருபவர்க்குச் சொல்லும் சொல்லளவாய பொருளும் இவையிரண்டும் வீணான சுமையைப் போன்று தெரிதரு மென்க.

குறிப்புரை:—இதனால், மௌன முத்திரையில்லாமலே மவுனமா யிருந்துவருவ ரென்பது சித்தாந்தம் என்க. (91)

கூ௨. எச்சிலென்று பூவை யிகழ்ந்தோர்க் குனைப்போற்றப்
பச்சிலையுங் கிள்ளப் படுமோ பராபரமே.

பொழிப்புரை:—புஷ்பத்திலுள்ள தேனை வண்டுகள் அருந்த, அப்பூவை எச்சில்பட்டதென்று எடாது கழிக்கும் அறிவாளிகள், நின் அர்ச்சனைக்காம் பத்திரங்களான பச்சிலையைப் பறித்தலும் நியாயமாமோ?

குறிப்புரை :—கண்டு, பத்தியின் மேன்மை தோன்றவே அங்ஙனம் புஷ்பத்தை விளக்கினதாகக் கோடல் மரபாம். பூஜா விதியும் அவ்வாறே கூறிவருகின்றது. ஐயமுற்றூர் புட்பவிதியை நோக்குக. (92)

கூங. அந்தக் கரண மடங்கத் துறப்பதுவே
எந்தத் துறவினுநன் றெந்தாய் பராபரமே.

பொழிப்புரை :—மன முதலான அந்தக்கரணங்கள் யாவும் சேடிப் பின்றி அடங்குமாறு துறவு பூண்பதுவே மிகமேலாந் துறவென்றும், அத் துறவே விரைவில் முத்தி சித்திப்பிக்கு மென்றும் உத்தமர் உரைப்பர்.

குறிப்புரை :—பலவாறுன பொருள்களைத் துறத்தலினும், கரண சேட்டையையும் அடங்கத் துறத்தல் மிக மேலாயதென்பது. இதனையே உள்ளும் புறமும் ஒத்த துறவென்பர். (93)

கூச. தன்னை யறிந்தாற் றலைவன்மேற் பற்றலது
பின்னையொரு பற்றுமுண் டோ பேசாய் பராபரமே.

பொழிப்புரை :—தன்னைத்தான் இத்தன்மையன் என்றுணர்ந்தானு யில் அதன் பின்னர் தன் தலைவனு மிறைவன்பால் பற்று திரும்புதலன்றி மற்றுமோர் பற்றும் தோன்று தென்ப ; உளதாயின் கூறுப.

குறிப்புரை :—'தன்னைத்தான் கண்டால் தலைவனையுங் காண்பான்' என்ற மூதுரைப்படியே இறைவனைக் காண்டற்கே மனந் துரிதப்படு மென்க. இது மெய்த்தவர் கொள்ளும் உத்தம முறையாம். (94)

கூரு. அன்பாற் கரைந்துகண்ணீ ராறுகண்ட புண்ணியருக்
குன்பால் வரவழிதா னுண்டோ பராபரமே.

பொழிப்புரை :—அளவு கடந்த பேரன்பால் மனமுருகி கண்ணீர் ஆறு போல் ஓடக்கண்ட மகத்துக்களுக்கும் நின்பால் வந்தடைதற்கு வழியு முண்டோ ? இல்லை யென்பதாம்.

குறிப்புரை :—மிதமிஞ்சிய மெய்யன்பால் ஆநந்த பாஷ்பம் ஆறுய்ப் பெருகுமேல், அன்னூர் அதனினும் வேறொன்றை வேண்டப்பெறுமையால் "நின்பால் வர வழிதா னுண்டோ" வென்றனர். (95)

கூசா. தன்னை யறிந்தருளே தாரகமா நிற்பதுவே
உன்னை யறிதற் குபாயம் பராபரமே.

பொழிப்புரை :—தன்னைத்தான் முதற்கணறிந்து, பின்னர் திருவருட் சத்தியையே தாரகமாகக்கொண்டு அவ்வருணிலையில் நிற்பதே நின்னை யறிதற்கேற்ற நிதான மென்பது.

குறிப்புரை :—தன்னைக்கண்டார் தலைவனைக்காண்பான், அருணிலை நிற்றலே யவர்க்குறும் குறியாக் கொள்வரென்பது அநுபவம். (96)

௯௭. கற்றகலை யானிலைதான் காணுமோ காண்பதெல்லாம்
அற்றவிடத் தேவெளியா மன்றோ பராபரமே.

பொழிப்புரை :—ஒருவன் தான் கற்றறிந்த சாத்திர ஆராய்ச்சியினாலே வஸ்து நிலைகாணப்பெறுவனோ ? பெறான் ; ஆகவே, காண்பன வனைத்தும் அல்லவென்று கண்டறிந்தவிடமே பொருளிடமென்பர் பெரியார்.

குறிப்புரை :—ஒருவன், கடவுள் நிலையினைத் தன்னகத்தே காணல் வேண்டுமாயின், தான்கற்ற நூலினாலே மட்டும் சாத்தியமாகா ; சற்குரு கடாக்ஷ உபதேசத்தான் காண்பன வல்லவென்று கண்டு, அவ்வாறு கண்டறிந்த விடத்தே பொருளறிதல் வேண்டுமென்பர் அறிவாலறிந்த பெரியார். " காண்பதும் பொய் கேட்பதும்பொய் காரியம் போலே யிதமாய்ப், பூண்பதும்பொய் யெவ்விடத்துப் போகமும் பொய் " என்றார் பெரியார். (97)

௯௮. கண்மூடிக் கண்விழித்துக் காண்பதுண்டோ நின்னரு
விண்மூடி னெல்லாம் வெளியாம் பராபரமே. [ளாம்

பொழிப்புரை :—ஊனக் கண்ணால் மூடியும் விழித்தும் பார்ப்பதன்று அப்பரம் பொருள் ; பின்னெவ்வாறு காணலாமென்றால், நின் ஒப்பற்ற திருவருளாகிய ஞானகாயமானது நின்னைக்கவிழ்ந்து சூழ்ந்துகொள்ளின், அப்போது நின் அறிவுக்கு நன்கு புலனாகும் என்பது.

குறிப்புரை :—ஞானக்கண்ணாலன்றி ஊனக்கண்ணால் எல்லாம் வல்ல இறைவனைப் பார்த்தானந்தித்தல் இயலா ; ஆனாலும், இறைவன் பேரருள் இருத்தல் வேண்டும் என்பதாயிற்று. எவ்வாறு ?

" அவனருளாலே யவன்றாள்வணங்கி " யென்ற பெரியார் பெருமொழி யொன்றே சாலும். (98)

௯௯. நேரே நினதருளென் னெஞ்சைக் கவரினென்றும்
பாரேன் சுகமும் படைப்பேன் பராபரமே.

பொழிப்புரை :—என் அன்பால் கிடைத்த இறைவா ! நினது மேலாம் திருவருட் செல்வமாயது எனது மூடமாம் மனத்தினை நேராகச் சூழ்ந்து

கொள்ளின் வேறெவற்றையும் பார்த்தல் செய்யேன், அன்றிச் சுகானந்த போகத்தையும் பெற்றுய்வேன் என்பது.

குறிப்புரை :—இறைவனே ! நினது திருவருள் என் சிந்தை குடிகொள்ளின் அஞ்ஞான்றே யான் எதையும் சுட்டிப்பாரேன் ; அன்றிச்சிவபோகத்தையும் பெற்றுய்வே னென்பது. சுகம் - சிற்சுகோதயம். (99)

கசoo. வான்காண வேண்டின் மலையேற லொக்குமுன்னை
நான்காணப் பாவனைசெய் நாட்டம் பராபரமே.

பொழிப்புரை :—இறைவ ! நின் தரிசனஞ்செய்யவேண்டி நான் கொண்டுள்ள நாட்டமானது, ஒருவன், ஆகாய விரிவைப் பார்க்கவெண்ணி உயர்வான பர்வத உச்சிக்கண் ஏறி நிற்றலை யொக்குமென்பதாயிற் றென்பாம்.

குறிப்புரை :—இறைவன் திருவுருத் தரிசனஞ் செய்தல் வேண்டுமாயின், தற்போதமாஞ் சீவபோதங்கழன்று சிவபோதங்கொண்டே முயல்வார்க்கு எளிதில் முடியு மென்பது புலனுகின்ற தறிக.

" நான் காணப்பாவனைசெய்தல் " - என்பது அகங்கார மமகார சகிதமென்ப. (100)

கசoக. வாதனைவிட் டுன்னருளின் மன்னினல்லால் வேறுமொரு
சாதனைதா னுண்டோநீ சாற்றாய் பராபரமே.

பொழிப்புரை :—இறைவ ! யான், என்னைப் பற்றியுள்ள ஈஷணைத் திரயங்கவொழிந்து நினது பேரருள் வெளிக்கண் நிலவினல்லது மோக்ஷமெனும் முத்தி சித்திக்குமோ ? மற்றோர் சாதனை பழக்கமும் செய்தல் வேண்டுமோ ? நீயே கூறியருள்வாயாக. என்பது.

குறிப்புரை :—வாதனை, ஈண்டு வாதனைத்திரயங்களாம் ; அவையாவன : உலகவாசனை, தேகவாசனை, சாஸ்திரவாசனை என மூவகைப்படும் ? இவையொழிந்து நினது பேரருள்வாய்க்கப் பெற்றால் வீட்டின் இன்பம் தானுக ஏற்படும் என்பதாம். (101)

கசo௨. பாரகமும் விண்ணகமும் பற்றாக நிற்பதருட்
டாரகத்தைப் பற்றியன்றோ சாற்றாய் பராபரமே.

பொழிப்புரை :—இறைவ ! மண்டலமும் விண்டலமும் தமக்குத் தாரகமாய்ப் பொருந்தி நிற்ப தெல்லாம், நின் ஒப்பற்ற திருவருட்டாரகத்தின் சக்தியாலன்றோ ? கூறுவாய்.

குறிப்புரை :—சர்வ சராசரமுந் தோற்றி நிலைபெற்றியங்க லெல்லாம் பார்க்கின்றபோது, நின் பேரருட் சத்தியின் பேராற்றலென்றே நன்கு புலனாகின்ற தையனே ! தாரகம் - பேராதரவு. (102)

கoங. விளக்குந் தகளியையும் வேறென்னார் நின்னைத்
துளக்கமறச் சீவனென்று சொல்வார் பராபரமே.

பொழிப்புரை :—நின்னைச் சந்தேக விபரீதங்கள் நீங்க சீவனெனக் கூறுவோர் எவரோ அன்னார், விளக்கையும், தகளியையும் தனித்தனியாகப் பிரிவினைசெய்து கூறார் என்பதாம்.

குறிப்புரை :—நின்னை, தேறித்தெளிவுபெற்ற மெய்யறிவாளர்கள் துவிதமாய்க் கூறாது அத்துவிதமாயே யுரைப்பரென்பது நிராடங்கமாய் வெளியாகின்றதாம். (103)

கoச. பாராதி நீயாப் பகர்ந்தா லகமெனவும்
ஆராயுஞ் சீவனுநீ யாங்காண் பராபரமே.

பொழிப்புரை :—இறைவ ! பிருதிவியாதிய வனைத்தும் தாமாகவே கூறும்போது நானென்று முன்னின்றாராயும் சீவனும் தாமே யன்றோ ? கூறுவாய் காண் என்பது. அகம் - நான் என்னும் பொருளைத்தந்த வடசொல்.

குறிப்புரை :—மண்ணாதிய வனைத்தும் தாமாகுங்கால் யான் அதற்குப் புறம்பானமைக் கேதுவில்லையாயிற்று. அகம் - நான். இது வடமொழியா மென்க. (104)

கoரு. பொய்யைப் பொய்யென்றறியும் போதக்குக் காதரவுன்
மெய்யருளே யன்றோ விளம்பாய் பராபரமே.

பொழிப்புரை:—இயல்பாக அநித்தியமான வத்துவைப் பொய்யென்றே ஆய்ந்துணர்ந்த பேரறிவிற்குத்துணை நின்றறிவித்தது நினது ஒப்பற்ற திருவருளானமை யல்லவோ ? கூறுவாய் ?

குறிப்புரை :—நின் திருவருட்டுணையன்றி யென் வெறுமறிவுக்குச் செயலின்மையால் பொய்ப்பொருளை யுணர்த்தியதும் நீயே யென்பதும், விகசிதமாயதாம். மெய்யருள் - அருட்சத்தியென்ப. (105)

கoசு. வருவான்வந் தேனெனல்போன் மன்னியழி யுஞ்சகத்
தெரிவாக வில்லையென்ற தீரம் பராபரமே. [தைத்

பொழிப்புரை :—முதற்கண் நித்தியமாய் விளங்கிப் பின்னர் அழி வனகண்டு துணியத்தக்க இந்த நாமரூபப் பிரபஞ்சம், பொய்யென்னுந் துணிபானது வரவிருக்கு மொருவன் விரைவு பற்றி வந்தேனெனலொக்கு மென்க.

குறிப்புரை :—இன்றிருப்பினும், இவை நாளையில்லனவாதல் அநுபவத் தாலறிந்து கொண்டமை கொண்டு, ஆண்டும் வருவான் வந்தே னென்ற தீரத்துவம் பொருந்தலாயிற்று. (106)

கOஎ. மாயா சகமிலையேன் மற்றெனக்கோர் பற்றுமிலை
நீயேநா னென்றுவந்து நிற்பேன் பராபரமே.

பொழிப்புரை :—காணப்படும் இம்மாயா கற்பிதவுலகம் இருந்திரா விடின் மற்றுமொரு பற்றில்லாமற்போம்; ஆதலினால் நீ நானாகவே வந்து விடுவேன் என்பது.

குறிப்புரை :—பற்றற்றுப் பளிங்கென்னப் பரிசுத்த மெய்தியக்கால் நீ நானும் நான் நீயுமாய் விடலாமென்பது பெற்றாம்.

சான்றாக ஆன்றோர் கூறிய வாக்கியம் :—

மித்தையா முடலமென்ன விவேகமே விடுதலாலே
நித்தனென்னும் விவேக நேரிடும் நேர்ந்தகாலை
முத்தர்பேரவை கிடைக்குங் கிடைத்தலான் முதிர்ந்த ஞானஞ்
சித்தியாமன்றே சீவன் முத்தனய்ச் சிவனுமாவன். (107)

கOஅ. வானாதி நீயெனவே வைத்தமறை யென்னையுநீ
தானாகச் சொல்லாதோ சாற்றாய் பராபரமே.

பொழிப்புரை :—ஆகாயாதி சகல பூதங்களும் நீயே யாவா யென்று முரசறையும் சதுர் வேதங்களானவை எளியேனை மட்டும் புறம்பாய்க் கூறுமோ ? சொல்லாய் !

குறிப்புரை :—சேதனசேதன நாமரூபாதி பிரபஞ்சங்க ளெல்லாம் நீயேயானபோது யான் வேறெனல் பொருந்தாவென்று வேதம் விளம் பும். (108)

கOகூ. வெள்ளக் கருணைமத வேழமா நின்னருட்கென்
கள்ளக் கருத்தே கவளம் பராபரமே.

பொழிப்புரை —காருண்யத்தை மதமாக்கொண்டதாம் திருவருண் மதயானைக்கு எனது வஞ்ச நெஞ்சமே கவளவுணவா மென்க.

குறிப்புரை :—திருவட் சத்தியாம் யானைக்கு எனது நீயமங்கமே உணவுப் பொருளென்பதாகும். இதனுல் ஆன்மா சத்தியின்கண் லீனப்படல் தோன்றினதாம். (109)

கக0. வண்டாய்த் துவண்டு மவுன மலரணைமேற்
கொண்டார்க்கோ வின்பங் கொடுப்பாய் பராபரமே.

பொழிப்புரை :—வண்டுபோற் செறிந்து மவுனமாஞ் சயனமலர் மஞ்சத் தமர்ந்துள்ள பெரியார்க்கு மட்டுமோ நீ சிற்சுகோதயஞ் செய்தருளுவாய் ? மற்றவர்க்குக் கொடாயோ ?

குறிப்புரை :—மோனஞானங் கொண்டருளிய பெரியார்க்கே யன்றி யேனையோர்க்கு சுகானந்தப் பெருவாழ்வின்றென்பதாயிற்று. (110)

கக௧. மாயைமுத லாம்வினைநீ மன்னுயிர்நீ மன்னுயிர்தேர்ந்
தாயுமறி வானதுநீ யன்றோ பராபரமே.

பொழிப்புரை :—மகா மாயையும், மற்றுமுள்ள சகல காரியச் சத்தி சத்தர்களும் நீயாகவே யுள்ளாய்; உலகத்து நிலைபெற்ற ஆன்மாக்களும் நீயேயாம்; அவ்வான்மாக்களில் சில மாயையை விலக்கி தேர்ந்து தெளிவான பேரறிவும் நீயேயாயுள்ளாய்; மற்றென் ?

குறிப்புரை :—மாயா தேவி முதற்கொண்டு சேதன சேதனங்க ளீறாகவுள்ள வனைத்தும் பார்க்குங்கால் நீயல்லதில்லை யாயிற்றென்ப. இந்த மாயையும் இறைவனல்லதில்லையாம். சான்று காணுமின் :—

(பிரமகீதை கேனோபநிடதம்)

எப்பொருளு மாயையினு லெனச்சிலவ ரியம்புவர்கள்
மெய்ப்பரமன் றனையொழிய வேறொரு மாயையுமில்லை
ஒப்பரிய பரனொழிய வொருமாயை யுண்டாகில்
அப்பரமன் றன்பெருமைக் கதுநேரே யழிவன்றோ. (111)

கக௨. என்னறிவும் யானுமென தென்பதுவு மாமிவைகள்
நின்னவையே யன்றோ நிகழ்த்தாய் பராபரமே.

பொழிப்புரை :—இறைவ ! என் கேவல சிற்றறிவும், நானும், எனதெனும் அகங்கார மமகாராதிகளெல்லாமும் பார்க்கின், நின்னதாகவே முடிகின்றதன்றி வெறென், கூறுவாய் ?

குறிப்புரை :—யானும் என்புத்தியும், மற்றும் என் கருவிகாணுதி தற்போதங்களும், மற்றுளவும் நின்னதே யென்பது தெளிவாயது. (112)

கக௩. பாரறியா தண்டப் பரப்பறியா துன்பெருமை
யாரறிவார் நானோ வறிவேன் பராபரமே.

பொழிப்புரை :—காணப்படும் இப்பூவுலகு மறியப்படா ; காணப்படா ககன விஸ்தீரண முள்ளாரும் அறியாரென்றால், நினது நாமரூபாதி பேராற்றல்களை மற்றுமுள்ளாரும் அறிய முடியாதாயின் இங்கு கேவலனான யானோ வறியத்தக்கவன் ? அன்றென்பது.

குறிப்புரை :—முடிவிலாற்றலுடைய முன்னோனாகிய நின் பராக்கிரம பராமாம்ஸத்தை தேவர் முதல் யாவரு மறியாரென்பதாயிற்று. மண்ணுலகோரும் விண்ணுலகோரு மறியாதபோது மற்றியாவர் காண்பார்.

"விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியா
யெண்ணிறந் தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்."

என்றருளினர் வாதவூராளியாரும். (113)

கக௪. அண்ட மனைத்திலுமா யப்பாலுக் கப்பாலுங்
கொண்டநின்னை யாரறிந்து கொள்வார் பராபரமே.

பொழிப்புரை : —ஆயிரத்தெட் டண்டங்களினும், அதற்கு அப்புறத்திற்கு அப்புறமுமாய் விராட்டுருவங் கொண்டுள்ள நின் பரம சொரூபம் அறியத்தக்கவர் யாவரோ ! எவருமறியா ரென்பது.

குறிப்புரை :—ஆயிரத்தெட் டண்டங்களுக்கு மப்புறத்தும் வியாபித்துள்ள நின் பேராகிருதியின் அளவை யறிவாருமுளரோ வென்பது.

அண்டங்கள் பலவென்ன, அவைக்கணுள்ள பிண்டகோடிகளென்ன, பிருதிவி யண்டம் புவலோக முதலாகச் சிவலோக பரியந்தமும், அதன்மேலுள்ள அண்டகடாகங்களும், மற்றும் பிரமாண்டமும், இதன்மேல் அப்பு தேயு வாயு ஆகாயங்களாகிய அண்டங்களும், இதன்மேல் மனம், புத்தி, ஆங்காரம், குணம் ஆகிய அண்டங்களும், இவைக்குமேல் பிரகிருதி யண்டமும், இதற்குமேல் அராகம், வித்தை, கலை, நியதி, காலங்களாகிய அண்டங்களும், இதன்மேல் அசுத்தமாயையும், இதன்மேல் சுத்த மாயையில் சுத்தவித்தை, மாகேச்சுரம், சாதாக்கியங்களும், இவைக்குமேல் பரவிந்து பரநாதங்களும் எண்பத்து நூறாயிரம் யோசனை கனமுள்ள பூமியும், கனிட்ட பாதலமும், கீழே ஆடகேசுரர்க்குப் புவனமாகிய ஏழுபாதலங்களும், கூர்மாண்ட ரென்னும் உருத்திர புவனமுமாய் அண்டகடாக முட்பட்ட புவனமும், இவ்வண்டங்க ளனைத்திற்கு மாதார பூதமாய்ச் சிவசத்தியான ஆதாரசத்திக்கும் அப்பாலும் சிவத்தின் பூரண அளவு எல்லைப்படா தாகலானும் ஆதியந்தமில்லா

வரும்பெருஞ் சோதிய ராகலானும் நமது இந்நூலாசிரியரும் யாவரறிவா ரென்றருளியது மன்றி "அப்பாலைக் கப்பாலைப் பாடுதுங்காண்" எனவும் பெரியாருரைத்தவாற்றால் அறிக. (114)

கக௫. ஒப்புயர்வொன் றின்றி யொலிபுகா மோனவட்டக்
கப்பலுக்காம் வான்பொருணீ கண்டாய் பராபரமே.

பொழிப்புரை :—சமானாதி உத்கிருஷ்ட மில்லாத அதீத பரம்பொரு ளாயும், சப்தாதியில்லா மோன நிலையாம் வட்டவடிவுள்ள பிரணவ் கப்பலுக் குரியதான ஒப்பற்றுயர்ந்த சரக்கு நீயே யாமென்பாம் என்பது.

குறிப்புரை :—இதனால், நம் பரம்பொருளார்க்கு அளவெல்லையும், சமான உத்கிருஷ்டரும் இல்லையென்பது சர்வார்த்தத்தானும் நன்கு புலனாய தறியற் பாலதாம். (115)

கக௬. என்போ லெளியவரு மெங்கெங்கும் பார்த்தாலும்
உன்போல் வலியவரு முண்டோ பராபரமே.

பொழிப்புரை :—எங்கணும் ஆராய்ந்து பார்க்கினும், என்னைப் போன்றுள்ள எளியோனும், நின்னைப்போன்றுள்ள பெரியதோர் வல்லமை சாலிகளும் உண்டோ ? என்பது.

குறிப்புரை :—தாழ்ந்தவனில் என்னைப்போல்பவரும் உயர்ந்தாரில் நின்னைப்போல்பவரும் எங்கும் யான் பார்த்தறியே னென்பதாயிற்று. (116)

கக௭. பார்க்கினண்ட பிண்டப் பரப்பனைத்து நின்செயலே
யார்க்குஞ் செயலிலையே யையா பராபரமே.

பொழிப்புரை :—அண்ட பிண்ட விரிவெங்கணும் ஆய்ந்தறியின் நினது பேரருட் செயலாகவே தோன்று கின்றதே யொழிய மற்றெவர்க்கு மோர் செய்கையையுங் காணேம் ; என்னையனே !

குறிப்புரை :—எவையு மாய்ந்துணருங்கால் எல்லாம் நின் செயலாயே தெரியவருகிறதன்றி மற்றொன்று மறியேன். என்பது தெரிகின்றது. (117)

கக௮. ஒன்றே பலவே யுருவே யருவேயோ
என்றே யழைப்பதுன்னை யென்றோ பராபரமே.

பொழிப்புரை :—இவ்வுலகுக் கெல்லாம் மூலகாரணனாய் ஓர் பொரு ளாகவும் மற்றும் பலபொருள்களாகவு மிருந்து, அரூபமும் சொரூபமுமாயு மிருப்பவனே யென்று, ஓல மிட்டழைத்தலு மெக்காலமோ ! என்பது.

குறிப்புரை :—" ஒருவனுபுலகேத்த நின்ற நாளோ " என்று பெரியார் ஓதியருளிய வண்ணம் ஒன்றாயும் பலவாயு மிருந்து உலகோம்பு மிறைவன் நீயே யென்பது தெளி பொருளாயிற்று. (118)

கககூ. செப்புவதெல் லாஞ்செபநான் சிந்திப்ப தெல்லாநின்
ஒப்பில் தியானமென வோர்ந்தேன் பராபரமே.

பொழிப்புரை :—யான் வசனிப்பதனைத்தும் நின் செபமாகவும், அன்றி நினைப்பன வெல்லாம் நின் தியானமாகவுமே நன்கறியப் பெற்றேன் என்பது.

குறிப்புரை :—என் வாயினின்று தொனிப்பதும் சிந்தையில் நினைப் பதும் எல்லாம் நின் சம்பந்தமான செபமும் தியானமு மாயே யறிந்துளேன் என்பது விகசிதமாயிற்று. இதனால், முத்தி விருப்பங் கொண்டார் அவனது மகிமா பிரபாவங்களைப் பற்றி பேசுவதே அத்தியாவசிய மென்றேற்பட்டது என்க. இதுகொண்டே :—

" பேசாத நாளெல்லாம் பிறவா நாளே " யென்றார் பெரியார். (119)

க௨0. ஆரிருந்தென் னார்போயென் னாமுதா நின்னருளின்
சீரிருந்தா லுய்வேன் சிவமே பராபரமே.

பொழிப்புரை :—யாவரிருப்பினும் எனக்கென்பயன்? யாவர் போயி னும் எனக்காம் நட்டமென்ன? எதுவுமின்றாம்; ஆகவே அரும் பெரும் பொருளாய நினது திருவருட் சத்தியின் கிருபை பொன்றுமட்டு முளதா யின், அதுகொண்டு யானுய்வேன் என் பரசிவமே! என்பது.

குறிப்புரை :—

" உற்றாரை யான்வேண்டே னூர்வேண்டேன் பேர்வேண்டேன்
கற்றாரை யான்வேண்டேன் கற்பனவு மினியமையுங்
குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாவுன் குரைகழற்கே
கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே."

என்று பெரியார் கூறியதும் அஃதேயாம். (120)

க௨க. வஞ்சநமன் வாதனைக்கும் வன்பிறவி வேதனைக்கும்
அஞ்சியுனை யடைந்தே னையா பராபரமே.

பொழிப்புரை :—மகா குரூரமுடைய யமவேதனைக்கும் வலிமையான ஜனன கஷ்டத்திற்கும் அஞ்சியே, காப்பவனுய நின்பால் தஞ்சமாயினேன் என் ஆண்டவனே! நின் கிருபை யெவ்வண்ணமோ!

குறிப்புரை :—

"அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்த லரிது"—என்ற இப்பெரிய மொழிகொண்டே ஆசிரியரும் இறைவன்பால் சரணாகதியடைந்தமை புலனாயது. (121)

கஉஉ. எந்தப் படியுன் னிதய மிருந்ததெமக்
கந்தப் படிவருவ தன்றோ பராபரமே.

பொழிப்புரை :—இறைவ ! நின் கருணை யிருந்தவாறெப்படியோ அம்முறையே எளியேற்கு இருமை யின்பதுன்பமு மெய்தவரும். என்பது.

குறிப்புரை :—நின் திருவருட் செயல்பிரகாரமாகவே எனக்குரிய இன்ப துன்பாதியவந்தெய்தப்படு மென்பது வெளியாயது. (122)

கஉங. எந்நாளு மெனைப்பிரியா தென்னுயிராய்ச்
சிந்தைகுடி கொண்டவருட் டேவே பராபரமே.

பொழிப்புரை :—முக்காலங்களினும் எளியேனைப் பிரிவின்றி என் ஆன்மதத்துவமாகி சிந்தையின் மேவிய திருவருட்டெய்வமே என்பது.

குறிப்புரை :—காலவகை மூன்றினும் என்னைப் பிரிவின்றி என் சிந்தையில் பிராணும் மேவியிருந்தெனை யாட்கொண்டதறிவாம். முக்காலம்-இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்பன. (123)

கஉச. அஞ்சலஞ்ச லென்றடிமைக் கப்போதைக் கப்போதே
நெஞ்சி லுணர்த்து நிறைவே பராபரமே.

பொழிப்புரை :—பயப்படாதே ! பயப்படாதே யென்று துயரெய்தும் அவ்வப்போது எனக்கு மனத்திடமுண்டுபண்ணி வந்தருளிய பரிபூரண வஸ்துவே !

குறிப்புரை :—யான் என் தத்துவாதி சம்யோகத்தால் இடர்ப்படும் போதெல்லாம் என்னுள்ளகத்தே 'அஞ்சலை' யென்றருளியதறிந்தாம். இதனால் ஆண்டானடிமைத்திறம் நன்கு வெளியாயது. என்பது. (124)

[கொடுத்துப்

கஉரு. என்னையுன்றன் கைக்களித்தார் யாவரென்னை யான்
பின்னையுன்னாற் பெற்றநலம் பேசேன் பராபரமே.

பொழிப்புரை :—எளியேனை நினதுகையில் ஒப்படைத்தார் எவருமின்றே ! யானேயன்றோ ! ஆகவே, யான் நின்பால்பெற்ற பேற்றினை யெடுத்துக்கூறுவதற்கு வாயற்றவனாயினேன்.

குறிப்புரை :—என்னை யான் கொடுத்தலாவது, ஈண்டு உடல் பொரு ளாவியை யென்க. யான் தன்னந்தனியனாய் நின்னைவந்தடைந்ததாக பேசவாயிலை யெனப்பட்டது. (125

கஉ௬. வாய்பேசா வூமையென வைக்கவென்றோ நீமவுனத்
தாயாக வந்தருளைத் தந்தாய் பராபரமே.

பொழிப்புரை :—எளியேனைப் பார்த்த மற்றோர், ஊமை யெனக் கொ ளற்கல்லவோ நீ மௌனத் தாயெனவந்து, எனக்குத் திருவருள் சகித மவுனத்திருக்க வைத்தருளினை ?

குறிப்புரை :—இறைவன் கருணைகொண்டருளி, திருவருள் பாலி பான் வந்து மவுனத்திருத்தி திருவருட்சாந்தமை புலனாயது. அருட்சத் யாய் வந்தமை மவுனோபதேசத்தின் பொருட்டாம். (126

கஉ௭. தன்னைத்தந் தென்னைத் தடுத்தாண்ட நின்கருணைக்
கென்னைக்கொண் டென்னபல னெந்தாய் பராபரமே.

பொழிப்புரை :—மிகச்சிறியேனைத் தடுத்தாட்கொண்டருளி, மி மிகப் பெரியராயுள்ள தம்மை யெற்களித்தருளிய திருவருளுக்குப் பெருமை யாதோ வெந்தந்தையே !

குறிப்புரை :—தன்னைத்தந்ததாவது : என்னுடல் பொருளாதிய பெ றுக்கொண்டு, நித்தியமாகிய தம்முடல் பொருளாவியைத் தந்தருளுதலாம் அஃதாவது நித்தியமான ஞானதேகம் பாலித்தலை யென்க. இதனால் இறைவன் உயிர்கட்கிரங்கல் வெளியாயதாம். (127

கஉ௮. மார்க்கண்டர்க் காக மறலிபட்ட பாட்டை யுன்னிப்
பார்க்கினன்பர்க் கென்ன பயங்காண் பராபரமே.

பொழிப்புரை :—பூர்வம், மார்க்கண்டேயரைப் பற்றிப்போகவந் இயமன் சிவபிரானிடத்து அகப்பட்டுத் துன்புற்றுப் போனதை ஆய்ந்த யின், நின் மெய்யன்பர்க்குப் பயமெதற்காகவோ ?

குறிப்புரை :—இறைவ ! முன்னே மார்க்கண்டேயர் பிராணனை கைக் கொள்ளவந்த இயமதருமன் செத்துப்பிழைத்ததை யுணர்ந்த பி னும் சிவனடியார் மரணத்திற் கஞ்சுவதெற்றுக்கோ வறியேன் ; இதனால் மெய்யன்பர் அஞ்சார் ; பொய்யன்பர் அஞ்சுவ ரென்பதாயிற்று. ஒ கால் இன்னுமோர் முறை வந்தாலும் வரலாம் ; எப்படியெனில், " மு போல் உதையுண்டாலும் குறையின்று, அவரது திருவடி தீக்ஷையும் தரிச

மும் கிடைக்கின் அதுவே நமக்குப் பெரும்பாக்கிய மாக்கும்" என்ற நோக்கத்தாலென்க. (128)

கஉகூ. சுட்டி யுணராமற் றுரியநிலையாய் வெளியில்
விட்டநின்னை யானோ வியப்பேன் பராபரமே.

பொழிப்புரை :—யாதாமொன்றையும் முன்னிட்டுக் கொள்ளாதபடி துரியநிலை யென்னும் பரவெளிக்கண்ணே செலுத்தின நின்னை நான் மெச்ச வல்லேனல்லே னென்பதாம்.

குறிப்புரை :—இதனால், கருணைகொண்டு என்னை மோனநிலையில் வைத்தருளிய நின் அரிய திருவருட்செயலை இந்திராதி தேவர்கள் மெச்ச வேண்டுவது தக்கதாதலின் ஈண்டு 'யானோ வியப்பேன்' என்றனர் போலும். (129)

கஙo. சூதொன்று மின்றியென்னைச் சும்மா விருக்கவைத்தாய்
ஈதொன்றும் போதாதோ வின்பம் பராபரமே.

பொழிப்புரை :—வஞ்சமிலாதென்னை வாழ்வில் தனியிருத்தி வைத்தனையே! இன்பநிலைக் கேற்ற இவ்வரிய பெருஞ்செயலுக்கு யான் செயத்தகுங் கைம்மாறு வொன்றுங் காணேனே யென்றிரங்குவ தாயிற்று.

குறிப்புரை :—இதனால், இறைவன் மெய்யன்பர்தம் பரிபக்குவ நோக்கித் திருவருள் புரிவது இயல்பென்பது விகசிதமாயது. (130)

கஙக. வாயொன்றும் பேசா மவுனியாய் வந்தாண்ட
தேயொன்றும் போதாதோ வின்பம் பராபரமே.

பொழிப்புரை :—இறைவ! தேவரீர் வாய் வார்த்தையின்றி மவுனங்கொண்டு எழுந்தருளி வந்தெனையடுத்து ஆட்கொண்டருளிய வொன்றுமே யெளியேற்கு அடங்காத ஆர்வத்தையும் இன்பத்தையும் முண்டாக்கியதே!

குறிப்புரை :—இறைவன் மவுனியா யெழுந்தருளிவந்து ஆண்டருளிய வொன்றுமே இன்ப நிலையாய்க்கொண்டு வந்தேன் என்பது. (131)

கஙஉ. என்று மிருந்தபடிக் கென்னை யெனக்களித்த
தொன்றும் போதாதோ வுரையாய் பராபரமே.

பொழிப்புரை :—எப்போதும் யானிருந்தவண்ணம் எனை யெனக்கே யாக்கிவைத்த தொன்றே போதுமானதாயிற்றே! இதைப் பார்க்கினும் இன்னுமோர் உதவியும் வேண்டுமா! கூறுவாய்!

குறிப்புரை :—நீ யெனக்களித்தருளிய இவ்வரிய பேருதவிக்கு என்னன்பு எட்பிரமாணமு மீடாகாதே யென்றிரங்கலாகும் என்பது. (132)

கந௩. எண்டிசைகீழ் மேலான வெல்லாம் பெருவெளியாக்
கண்டவிடத் தென்னையுநான் கண்டேன் பராபரமே.

பொழிப்புரை :—அட்ட திக்குகளென்ன, கீழ்மேலெனும் மண்விண் ணென்ன ஆக தசதிசைகளும் ஒரே பேராகாயமாக் கண்காணித்த விடத்தே என்னை யானுணர்ந்தனன் என்பதாம்.

குறிப்புரை :—இறைவன் என்னைப் பரவெளிக்கண் செலுத்தியருளிய பின்னரோ எட்டுத் திசையும் பதினாறு கோணமும் எங்கு மொன் றாய்ப் பெருவெளியாகக் கண்டு கொண்டனர் என்பது தோன்ற லாயிற்று. (133)

கந௪. பித்தனையே யும்மறியாப் பேதையனை யாண்டவுனக்
கெத்தனைதான் றெண்ட னிடுவேன் பராபரமே.

பொழிப்புரை :—கேவலம் சித்த சுவாதீன மில்லாதவனும், அறிவு விளங்கப் பெறாதவனுமாகிய யெளியேன்மீது கருணைவைத் தாட்கொண் டருளிய தேவரீர்க்கு, யான் யெவ்வளவு நமஸ்காரஞ் செய்தபோதிலும் அது போதாதென்றே நினைக்கின்றேன் இறைவனே!

குறிப்புரை :—பரங்கருணைத் தடங்கடலோய்! தேவரீர், இப்பேயி னுமிழிந்த பெரும் பேதையேனைப் பொருட்படுத்தி யாண்டருளிய நின் பெருந்தகைமைக்கு யான் செய்வதென்னோ வெனத்தியங்க லாயினனே யன்றிப் பிறிதொன்று மின்றே! என்பது. (134)

கந௫. தாயர்கர்ப்பத் தூடனமுந் தண்ணீருந் தந்தருளும்
நேயவனை யாரே நினையார் பராபரமே.

பொழிப்புரை :—யான், மாதாவுதரத்தில் மாயைப்பைக்குள் கட் டுண்டு கிடந்த அக்காலத்தும், அன்னபானாதிகளை யளித்தாண்டருளிய பரமகருணாகர நண்பனே! தேவரீரை நினைத்துத் துதிசெய்யாதவரு முலகத்துளாரவரோ! என்பது.

குறிப்புரை :—இதனால், கருப்பைக்குண் முட்டைக்குங் கல்லினுட் டேரைக்கும் விருப்புற் றமுதளிக்கும் வித்தகனாய வ இறைவா? "கைம்மாறு வேண்டாத நின்கருணைப் பெருக்கை நினைந்த யென் மன மும் அறிவும் நீராளமாய் உருகுகின்றதைக் கண்டதன்றி மற்றொன்றை யுங் காணேனே" என்பது தோன்றுகின்றது. (135

கங௬. விரிந்த மனமொடுங்கும் வேளையினு ளாகப்
பரந்த வருள் வாழிபதியே பராபரமே.

பொழிப்புரை :—இறைவா! பரந்தலைந்த என் மனமானது குவியுந் தருவாயில், பரபரப்பாக விரைந்து வந்தருளிய நின் பேரருள் பெருகவும் வாழக்கடவதாக ; என்பதாம்.

குறிப்புரை :—பேய் மனத்தேன், பேய்போற் றிரிந்தலைந் தெய்க்கும்போது, அது குவியுமாறு விரைந்து வந்தருளிய நின் பெருங்கருணையை யென்னென்று துதித்து எவ்வாறு வணங்குவேன் என்பது. (136)

[மாமழையை

கங௭. சிந்தனைபோய் நானெனல்போய்த் தேக்கவின்ப
வந்து பொழிந்தனைநீ வாழி பராபரமே.

பொழிப்புரை :—ஏ, இறைவ! நினைத்தல் மறத்தலற்றும், நானெனுஞ் செறுக்கொழிந்தும் யான் பரிபூரணத்தினனுகுமாறு நீ கருணை கொண்டே வந்தருளி சிற்சுகமாரியைச் சொரிந்தாயே! நின் திருக்கருணை சிறந்து வாழ்க, வாழ்க!

குறிப்புரை :—என் மனம் ஏகாக்கிர மாதற்பொருட்டும் அகங்கார மமகார மொழியுமாறும் பேரின்பமாரி பெய்யச் செய்த நின் திருக்கருணை நாளும் வளர்ந்தோங்கி வாழ்க வென்பது. (137)

கங௮. தந்தேனே யோர்வசனந் தந்தபடிக் கின்பமுமாய்
வந்தேனே யென்றனைநீ வாழி பராபரமே.

பொழிப்புரை :—"அன்பனே! நினக்கு யான் அன்பொடும் ஓர் வசனம் கற்பித்தேனே! கற்பித்தவாறுகவே நின்பால் இன்பவடிவாயும் வந்தருளினேன்" என்று வெனக்குத் திருவாய் மலர்ந்தனையே! நீ, நீடுவாழ்வாய்!

குறிப்புரை :—இறைவனே! நீ கூறியவாறுகவே யெனக்கு ஓர் வசனமோதி யின்பமூட்டினை ; நின்கருணைக் கென்ன கடப்பாடுடையேன், நீவாழி. (138)

கங௯. மண்ணும் விண்ணும்வந்து வணங்காவோ நின்னருளைக்
கண்ணுறவுட் கண்டவரைக் கண்டாற் பராபரமே.

பொழிப்புரை :—இறைவ! நினது பேரருளினை உள்ளபடியாக உள்ளகத்தே தரிசித்த மெய்யன்பர்தமைக் காணுறின் அஞ்ஞான்றே

இந்த மண்ணகத்தாரும் விண்ணகத்தாரும் விரைந்துவந்து வழிபாடு செய்யாமற் போவரோ என்பது.

குறிப்புரை :—நின் பேரருள் வாய்க்கப்பெற்ற பெரியாரைக் கண்ட மனிதருந் தேவரும் வந்து வணங்கிச் செல்வரென்பது இனிது புலனாயது.

கண்ணுறவுட் காண்டல் - அகக்கண்ணும் ஞானக்கண்கொண்டறிதல் என்ப. (139)

கசுO. என்றுங் கருணைபெற்ற வின்பத் தபோதனர் சொற்
சென்றசென்ற திக்கனைத்துஞ் செல்லும் பராபரமே.

பொழிப்புரை :—நித்தியானந்த திருக்கருணைபெற்ற தவசீல மகத்துக்களின் மெய்ம்மொழியானது சென்றதிசை யெங்கணுமே சிறப்பெய்தி வாழ்ந்திடுமே யென்பது.

குறிப்புரை :—நிரந்தரமான திருக்கருணை வாய்க்கப் பெற்ற மெய்யன்பர் திருவாயினின்றும் பிறந்த திருமொழி எப்போதும் புனிதமொழியாயே யினிது விளங்கிப் பரிமளிக்கு மென்பதாம். (140)

கசுக. ஆடுவதும் பாடுவது மானந்த மாகநின்னைத்
தேடுவது நின்னடியார் செய்கை பராபரமே.

பொழிப்புரை :—பக்தியால் பரவசமாக ஆனந்தித்தாடலும், அன்றி அன்புருகிப் பணிவோடும் பாடுதலும், இன்னும் ஆனந்த மடங்காதே நின் ஞான வடிவைக்காணத் தேடித்திரிதலும் நின் உண்மையடியார்க் குரியனவே யாம் என்பது.

குறிப்புரை :—மெய்யன்பார்ந்த மெய்யடியர்கள் இறைவனால் திருவருள் வாய்க்கப்பெற்ற ஆனந்த மேலீட்டினாலே ஆடல்பாடல் தேடலாதிய திருக்கூத்தினானே கலங்கடத்துவ ரென்பது விகசிதமாம். சான்றாக :—

ஆடுவா ருன்மத்தர் போற்றிரிவார் நகைத்திடுவார் அங்கை கொட்டிப்
பாடுவா ரின்றிருந்த விடநாளை யிருக்கமனம் பற்றார் சுற்றிக்
கூடுவார் தமிழ்கூடார் கந்தையன்றிவே றுடுக்கை கொள்ளா ரன்னார்
நீடுவார் புகழ்ப்பெருமை யிற்றென்று மதிப்பவரார் நிகழ்த்து வாரார்.

(141)

கசுஉ. பொங்கியநின் றண்ணருளைப் புட்கலமாப் பெற்றவர்கட்
கெங்கெழுந்தென் ஞாயி றியம்பாய் பராபரமே.

பொழிப்புரை :—பொங்கித் ததும்பிய உனது தண்ணிய திருவருளினைச் சம்பூரணமாகப் பெற்றருளிய பெரியார்க்குக், கதிரவன் எத்திக்கிலே தோன்றினு மென், சொல்வாய் ?

குறிப்புரை :—இறைவ ! நின்மேலான திருவருட் செல்வத்தினை பூரண மாகக் கைக்கொண்ட பெரியோர்க்குச் சூரியன் எங்கு தோன்றினு மென்னா கும் ? ஒன்று மின்றாம் என்பது.

"அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
இன்னா வுலகம் புகல்"—என்றார் பொய்யா மொழியார். (142)

கசங. பாலரொடு பேயர்பித்தர் பான்மையென நிற்பதுவே
சீலமிகு ஞானியர்தஞ் செய்கை பராபரமே.

பொழிப்புரை :—குழந்தை, பேயர், பைத்தியக்காரர் இன்னோரன்ன தன்மையினைப் பெற்றிருத்தலே, பெறுதற்கரிய ஞானத்தைப்பெற்ற பெரி யார்க்குரிய சுபாவமாகும் என்பது.

குறிப்புரை :—மெய்ஞ்ஞானச் சம்பன்னரான ஆன்றோர்க்குரிய சான் றாங்குண மென்பதாவது :—பாலர் பேயர் பித்தர் செய்கையாள ரென்பதாம். இவையன்றி இன்ப துன்ப சமத்துவபாவனையும், ஓடும் பொன்னுமொப்பிட் டுணர்தலுமுரிமையா மென்க. (143)

கசச. உண்டுடுத்துப் பூண்டிடுங் குலகத்தார் போற்றிரியுந்
தொண்டர்விளை யாட்டே சுகங்காண் பராபரமே.

பொழிப்புரை:—இவ்வுலகச் சாதாரண மனிதர்கள் போன்றே புசித்தும் பூண்டும் திரிந்துவரும் மெய்ஞ்ஞானியர்தம் திருவிளையாட்டே எம்போன் றார்க்குச் சுகந்தருவதாய்த் தோன்ற நின்றது.

குறிப்புரை :—இதனால், மெய்யன்பராம் ஞானியர் போக்கே, இந்நூ லுடையார்க்குச் சுகமளிப்பதாகக் கூறலாயினர் போலும் "ஞானிகளாடுந் திருக்கூத்தைப் போன்று, நானுமாடுகிறேன் பேய்க்கூத்" தென்பதொக்கச் சிலர் போலி ஞானியராய்த் திரிவர் ; அன்னார் அஞ்ஞானியரே யாவர். (144)

கசரு. கங்குல் பகலற்றதிருக் காட்சியர்கள் கண்டவழி
எங்கு மொருவழியே யெந்தாய் பராபரமே.

பொழிப்புரை :—இரவும் பகலு மற்றொழிந்து பரஞ்சோதிப் பரவெளி நோக்கத்தானே நிலைபெற்ற பெரியார், யெங்குறினும் எல்லாம் ஓர் முறை யாயே யுலாவுவ ரென்க.

குறிப்புரை :—இப் பூரணஞான புண்ணிய சீலர்கள், இறைவர்க் கிருப் பாம் பரவெளியே தாரகமாதலின், மாகமிசை நோக்கலே மன்னி வாழ்தல் இயல்பாக்கொண்டு ஆசிரியர் 'திருக்காட்சியர்' என்றனர்.

மாகம்=பராகாய மென்க. திருக்காட்சி = பரன் தரிசனம். (145)

கசசு. காயநிலை யல்லவென்று காண்பா ருறங்குவரோ
தூயவருட் பற்றுத் தொடர்வார் பராபரமே.

பொழிப்புரை :—இந்த மனித சரீரமும் வாழ்வும் கேவலம் பொய் யென்றுணர்ந்த அறிவுடையோர் நித்திரையுங் கொள்வரோ! கொள்ளார்; மற்றென் செய்வர்,—நித்திய தேகமும் வாழ்வும் பெறவேண்டி இறைவன் றிருவருட் செல்வம் பெறுவா னெதிர்நோக்கி யிருப்பரென்க.

குறிப்புரை :—உடலும் உலக வாழ்வும் நிலையல்லன வென்றுணர்ந்த அறிஞர், திருவருட்பேற்றைப் பெறுவான் உரிய நெறி நிற்பர் என் பது. (146)

கசஎ. அப்புமுப்பும் போன்ற வயிக்கியபரா னந்தர் தமக்
கொப்புவமை சொல்லவும்வா யுண்டோ பராபரமே.

பொழிப்புரை :—தண்ணீரும் உப்பும் பேதமின்றிக் கலந்தபான்மை போன்று சிவாநுபூதியிற் செறிந்த உயர் வொப்பில்லா பரானந்த சீலர்களுக் கும் சமானதீரரா யொருவரை வாய்கொண்டு கூறக்கிடந்ததோ!

குறிப்புரை :—நீரும் உப்பும் சேர்ந்தொருமித்தது போலச் சிவானந்த சம்பந்தியரான மெய்ஞானியர்க்கு உவமைகூற எவருமின்றென்பது.

ஞானியே புருடோத்தமனுதலால்
வானநாடரும் வந்து வணங்குவா
ரேனை நாடருமேவலி நிற்பர்காண்
ஞானிபூச்சிய ரென்பதற் கையமோ. (147)

கசஅ. சித்தந் தெளிந்து சிவமானோ ரெல்லோர்க்குங்
கொத்தடிமை யான குடிநான் பராபரமே.

பொழிப்புரை :—மனத்தெளிவு கொண்டு சிவசொரூபம் பெற்ற அனை வர்கட்கும் வம்ச பரம்பரையான அடிமைக்குடியாவேன் நானென்பது.

குறிப்புரை :—இறைவ! சுத்தஞானம் பெற்று சாக்ஷாத் சிவசொரூபம் பெற்றருளிய யெவர்க்கும் யான் கொத்தடிமையாயுள்ள குடித்தனக்காரனே யாவன் என்பதாயிற்று. கொத்தடிமை - பாரம்பரியமாய் வந்த அடி மைக்குடியானவன். (148)

கசகூ. தம்முயிர்போ லெவ்வுயிருந் தானென்று தண்ணருள்கூர்
செம்மையருக் கேவலென்று செய்வேன் பராபரமே.

பொழிப்புரை :—தன்னைப்போன்றே இதர சீவன்களையும் பாவனை கொண்டு தயவுவைத்து காத்துவரும் மேலோர்களுக்கு யான் எக்காலத்தில் பணிசெய்ய நேருமோ ! அறியேனே ! என்றபடி.

குறிப்புரை :—தம்போன்று பிறவுயிர்கண் மாட்டும் அன்பு செய்து காத்துவரும் அருட்செல்வர்க்கு அடிமை செய்ய வேண்டுமென்று வேண்டலாயின ரென்பாம். (149)

கருo. விண்ணுக்கும் விண்ணாகி மேவுமுனக் கியான்பூசை
பண்ணிநிற்கு மாறு பகராய் பராபரமே.

பொழிப்புரை :—ஆகாயத்திற்கு ஆகாயபூதம்போன்றே சேர்ந்துள்ள நினக்கு யான் பூசித்துவரக்கூடிய மார்க்கத்தைப்பற்றி சொல்வாய்.

குறிப்புரை :—பராகாய சொரூபம் இறைவனுனது கொண்டு, சிதாகாயச் சத்தியாம் தாயின் திருவருளால் தம்மைப் பெறுதலையே பூசைசெய்த லென்று உபசரித்து வினவுதலாம். (150)

கருக. நெஞ்சகமே கோயி னினைவே சுகந்தமன்பே
மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய் பராபரமே.

பொழிப்புரை —எனது மனதே நினது கோயில், தியானம் பண்ணலே மணங்கமழ்பொருள், எனன்பே அபிஷேக நீர், ஆக இம்முறையான் அடிமை செய்யவிருக்கும் பூசையினைப்பெற வருவாயாக என் இறைவ !

குறிப்புரை —ஆத்மானந்த அகமுக பூசைசெய்தருள நீ கிருபைகூர்ந்து வந்தருள்வா யென்று வேண்டினர் போலும். (151)

கருஉ. கெட்டவழி யாணவப்பேய் கீழாக மேலான
சிட்டருனைப் பூசை செய்வார் பராபரமே.

பொழிப்புரை —தீயவழி செலுத்தும் ஆணவப் பிசாசம் கீழ்மைப்பட உயர்ந்த பரிசுத்த ஆத்மாக்களாவார் தேவரீரைப் பூசித்தொழுகுவார்கள் என்பது.

குறிப்புரை :—தற்போத மற்றொழிந்த சீவரே சிவபோத பூசைக்காசைப் படுவரென்பது இதனுல் தெளிவாயதாம். எவ்வாறெனில், நானென நிற்கு ஞானம் ஞானமன்றந்த ஞானம் மௌனமாயிருக்க வொட்டா என் பது. (152)

கருந. கால்பிடித்து மூலக் கனலைமதி மண்டலத்தின்
மேலெழுப்பிற்றேகம் விழுமோ பராபரமே.

பொழிப்புரை :—பிராணவாயுவை வைக்கும் பித்துக்கண்ட தாரையால் மேல்வழியே செலுத்தி மதிமண்டலமென்னுஞ் சந்திர நிலையிற் றாக்கிவரின் இந்தச்சரீரம் அழியுமோ ? அழியாதென்பதாம்.

குறிப்புரை :—இது யோகப் பயிற்சியால் சரீரத்தை நிலைபெறச் செய்யும் தாந்திரீக முறையாகும். தவத்தினர்க்கு ஆயுள்காலம் மிகபடச் செய்தற்கான வழியாம் ; அன்றி, மனமும் ஏகாக்ர மடையும். (153)

கருச. பஞ்சசுத்திசெய்து நின்னைப் பாவித்துப் பூசைசெய்தால்
விஞ்சிய ஞானம் விளங்கும் பராபரமே.

பொழிப்புரை—ஐவகைச் சுத்திகளைப் புரிந்து, நின்னை அகமுகமாகத் தரிசித்து பத்தி புட்பங் கொண்டருச்சித்து வரின், மேலாகிய ஞானபதவி கிடைக்கும் என்பதாம்.

குறிப்புரை :—பஞ்சசுத்தியாவது :—ஐவ்கைச் சுத்திகளாம் ; அவையாவன : ஆத்ம சுத்தி, இலிங்க சுத்தி, திரவிய சுத்தி, பூதசுத்தி, மந்திர சுத்தி என்பவைகளாம். விஞ்சிய - மேலாய. (154)

கருரு. அன்பர்பணி செய்யவெனை யாளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே.

பொழிப்புரை :—இறைவ, நின் உத்தமத் தொண்டர்கட்குரிய பணியினையான் செய்திடுமாறு பக்குவி யாக்குவித்தால், பரானந்த இன்பநிலை இயல்பாகவே யெனக்கு கிடைக்கும் என்பது.

குறிப்புரை :—இதனால், மெய்யடியவர்க்குரிய பணிவிடை பண்ணிவரின், அன்னார் அநுக்ரகத்தால் சிற்சுகோதயமுண்டாம் என்பது தோன்ற நின்றது. (155)

கருசா. மூர்த்திதலந் தீர்த்த முறை யாய்த் தொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே.

பொழிப்புரை :—மூர்த்தியென்ன, தலங்களென்ன, தீர்த்தங்களென்ன இவைகளிலே விதிப்படி பக்தி பாராட்டி வருபவர்க்கு உண்மையான ஞானோபதேசஞ்செய்தருளுமாறு மெய்க்குரவர் கிடைப்ப ரென்பது.

குறிப்புரை—அன்பர்க்காக ஆங்காங்கெழுந்தருளி ஆலயங் கொண்டமர்ந்தருளும் பரசிவ மூர்த்தங்களினும், அவ்வண்ணலார் நண்ணிய புண்ணிய க்ஷேத்திரங்களினும், அத்தகைய க்ஷேத்திரப் பிரவகிப்பான உத்தம தீர்த்தாதிகளிலும் பத்தி பூர்வம் வணங்கி, வசித்து, படிந்துவருதலே முறை

யாய்த் தொடங்கலாகும். ஓர் வார்த்தை - பரம இரகசியமாய ஓர்மொழி உபதேசமாம். (156)

கருஎ. விரும்புஞ் சரியைமுதன் மெய்ஞ்ஞான நான்கும்
அரும்பு மலர்க்காய் கனிபோலன்றோ பராபரமே.

பொழிப்புரை :—சான்றோர்களால் விரும்பியனுட்டிப்பதான சரியை முதற்கொண்டு மெய்ஞ்ஞான மிறுதியாயுள்ள நால்வகைப் படிகளும், மொட்டு, மலர், காய், பழமென்பன போன்றதாகு மாக்கும்.

குறிப்புரை :—இதனால், சரியை கிரியை யோக ஞான மெனும் சதுர் வித வகைகளும், மோக்ஷபதவிக்குரிய சோபான மார்க்கங்கள் என்று விகசிதமாயறிதல் வேண்டும். சோபானம் - படித்தரம். சரியை முடித்தார், சாலோகத்தையும், கிரியை முடித்தார், சாமீபத்தையும், யோக முடித்தார், சாரூபத்தையும், ஞான முற்றோர் சாயுச்சியத்தையும் பெறுவரென்பதாம்.

இன்னமும் :— சரியையாளர், சாலோகமெனுந் தேவலோகத்திற் பிறந்து வாழ்தலும், கிரியை முடித்தார் சிவலோகத்திற்ஜனித்து சிவாதிக்கியர்கட்குரிய பரிவார தேவாம்சம் பெற்று வாழ்தலும், யோக முடித்தார், சிவலோகத்திலே தேவாம்சர்களாகவும், ஞானமடைந்து முற்றியவர் சிவாம் சத்திலே லயப்பட்டுத் ததாகாரமுறுவரெனவும் சைவாகமங்கள் நன்கு விளக்கும் மற்றவை விரிந்த நூலிற் கண்டுகொள்க.

இந்நால்வரில், ஞானியொருவர் மட்டும் மீண்டும் மண்ணுலகத்தில் வந்து மாதாவுதரம் வாராதொழிவராம். இதனால் பிறவியில்லை யென்பது பொருளாகும். சான்றாக :—

ஆதிமறை யாகமங்க ளெல்லா மளவிட்டே
யோதியுணர்ந் தெல்லா முரைத்தாலும்—வேதை
யெழுநான்குகோடி யிழிநிரைய மெல்லாம்
விழுவர் சிவஞான விடின்.
உம்பர்வா ழுலகம் வேண்டா ருலகரசாட்சிவேண்டார்
பொன்புனை மகளிர்வேண்டார் புண்ணிய பாவம்வேண்டார்
இன்பொடு துன்பம்வேண்டா ரிறப்பொடு பிறப்பும் வேண்டார்
ஐம்புலப் பகையை வேண்டா ரறிவினை யறிந்தமேலோர். (157)

கருஅ. தானந் தவந்தருமஞ் சந்ததமுஞ் செய்வர்சிவ
ஞானந் தனையணைய நல்லோர் பராபரமே.

பொழிப்புரை :—உத்தம சீலர்களாவார், ஒப்பற்ற சிவஞானம் பெறுமாறு ஈதலென்ன, புண்ணிய கிருத்தியமென்ன, பஞ்சாக்கினி மத்தியிலிருந்திழைக்கும் அரிய கடுந்தவசுகமென்ன இவைகளைப் புரிவரென்ப.

குறிப்புரை :—இம்மண்ணுலகத்திலே, உத்தமோத்தமராவார்களே தான தரும தவசுகளை யெல்லாம் பத்தி சிரத்தையோடும் பரிந்து விரைந்து சிரத்தையோடும் செய்து வருவர்கள் என்பதாம். (158)

கருகூ. சொன்னத்தைச் சொல்லித் துடிக்கின்ற வாணவப் பேய்க்
கின்னல் வருவதெந்நா ளெந்தாய் பராபரமே.

பொழிப்புரை :—எதனினும் யான் யெனது யென்று அடுத்தடுத்துக் கூறித் திரியும் இந்த அகங்காரப் பிசாசிற்குரிய துன்பம் வந்து தொலைந்து போதல் எந்நாளோ வறியேனே! என் பரமபிதாவே!

குறிப்புரை :—அகங்காரமெனும் பொல்லா அடவாதிப் பேய் தொலைந்தஞான்றே யான் கிடைத்தற்கரிய சிற்சுகோதயம் பெற்றுய்வேனன்றி மற்றன்றென்பதாம். இதற்குத் துன்ப முண்டாதலாவது, அறிவு மன முதலியவற்றால் கட்டுண்டுத் தன் சேட்டையற்று ஒய்ந்தொழிதலாம். (159)

கசுο. இன்றோ விருவினைவந் தேறியது நானென்றோ
அன்றே விளைந்ததன்றோ வாற்றேன் பராபரமே.

பொழிப்புரை :—இருவினைப் பாகுபாடு எனக்கேற்பட்டது இப்போது தானோ! அன்று; யான் எப்போது ஏற்பட்டுள்ளேனோ, அஞ்ஞான்றே அது தோன்றினதல்லவா? அதுமுதல் இதுகாறும் யான் அவ்வினையால் துன்புற்றதுபோதும், இனிச்சகியேன் என்பது.

குறிப்புரை :—வினைப்பயன்களை யனுபவித்து யென்காலம் வீணிலே போனதுபோக, இனியும் வினையைக் கனவினு நினையேன், என்? பாசம் நாசமாகாது மோசஞ்செயும் என்க. (160)

கசுக. எண்ணமுந்தா னின்னைவிட வில்லையென்றால் யான்முன
பண்ணவினை யேது பகராய் பராபரமே. [மே

பொழிப்புரை :—நீ யறியாதவோர் நினைவும் எனக் கில்லையானால், யானுக சென்மாந்தரங்களில் கன்மம்செய்து வந்ததென்னே? சொல்வாய்?

குறிப்புரை :—இறைவனே! நீ என்சித்தமிசை என்னறிவிற் கறிவாய்ப் பொருந்தி யிருக்கிறபோது, வினைப்பயனுக்கு நான் பாத்தியப் படுவதென்ன நியாயமோ கூறுவாயாக. (161)

கசுஉ. என்னையின்ன தென்றறியா வேழைக்கு மாகெடுவேன்
முன்னை வினைகூடன் முறையோ பராபரமே.

பொழிப்புரை :—இயல்பாகவே யான் என்னை இத்தன்மையனென்று தெரியக்கூடா அத்தனை பேதையேற்கும், அந்தோ! கெடுவேன்! சென் மாந்தர வினைக்கும் ஆளாவதோ! இதுவு முறைமைதானே!

குறிப்புரை :—ஏது மறியா பேதைக்கும் சென்மாந்தர கன்மமும் சேர் தல் நீதியோ? (162)

கசுங. அறியா நான் செய்வினையை யையாநீ கூட்டுங்
குறியே தெனக்குளவு கூறாய் பராபரமே.

பொழிப்புரை :—ஐயனே! நல்லதென்றுந் தீயதென்றுந் தெரிந்து செய்யக் கூடாதவனாய சிறியேன் செய்த வினைகளை நீ சேர்த்துக்கொள்ளும் தானத்தைப்பற்றி ஓர் உண்மை கூறுவாயாக. என்பது.

குறிப்புரை :—யான் நன்மை தீமை யுணராதுள்ளவன்; இங்ஙனமிருக்க, எனக்கு வினைப்பந்தம் வந்த தெந்தவாறு? இதற்குரிய மர்ம தர்மமெப்படி உரைத்தருளுவாய். (163)

கசுச. என்னைக் கெடுக்க விசைந்த விருவினைநோய்
தன்னைக் கெடுக்கத் தகாதோ பராபரமே.

பொழிப்புரை :—இறைவ! எளியேனைக் கெடச்செய்யுமாறு ஒன்று பட்ட அவ்வினைப் பிணியைத் தொலைக்க நின்னாலாகாதோ?

குறிப்புரை :—எளியனைக் கெடுமாறு வந்து பற்றிய வினைப்பிணியை தொலைத்து எனைச்சுத்திகரிக்க வேண்டுவது நீயேயாகும். என்பது. (164)

கசுரு. வல்லமையே காட்டுகின்ற மாமாயை நானொருவன்
இல்லையெனி னெங்கே யிருக்கும் பராபரமே.

பொழிப்புரை :—பரமசக்தியையுடைய மகாமாயைக்கு யானில்லை யானால் தன்வன்மை செல்வதற் கிடனில்லையோ கன்ம வினை யொருபக்க மீர்க்க, மாயையும் வந்து விட்டதே! இதன் சக்தியே சக்தி.

குறிப்புரை :—இந்த மகாமாயை என்னிடத்தே தன் சக்தி முற்றி லுமே செலுத்திவருகின்ற தென்செய்கேன்! நீயுமறியாய் போன்றாய்! பின்னர் யான் செய்வதென்னே! (165)

கசாசா. மூக்குணத்தா லெல்லா முளைக்கப் பிரகிருதிக்
கிக்குணத்தை நல்கியதா ரெந்தாய் பராபரமே.

பொழிப்புரை:—எந்தையே! மூவகைக் குணபேதங்களானே அனைத்துந் தோன்றுமாறு செய்ய, இந்தப் பிரகிருதி மாயைக்கு ஆதிக்கங் கொடுத்த தார் கொலோ!

குறிப்புரை :—மாயையைப் பிடிக்கவே, அம்மாயையும் மெள்ளப் பழி யைத்தானேற்காது முக்குணத்திலேற்றி விட்டதே! இதுவும் தன் சக்தி களி லொன்றென்றே தெரியலானேன். என்பது. (166)

கசாஎ. ஆற்றப் படாது துன்ப மையவென்று லென்மனது
தேற்றப் படாதினியென் செய்வேன் பராபரமே.

பொழிப்புரை:—இறைவ! இப்போது என்னாற் சகிக்கொணு கஷ்டத்தை யடைந்துளேன்; அம்மனதைத் தேற்றித் தெளிவு செய்யவு முடியா. ஆகவே இனி யான் செய்வதென்னே வறிந்திலனே!

குறிப்புரை :—ஆற்றொணுத் துன்பத்தை அடிமைக் கென்றிட்டனே, இனி யான் யெவ்வாறு இதைவிட்டு கரையேறுவேன்! என்பதாம். (167)

கசாஅ. பூராயமாய் மனதைப் போக்கவறி யாமலேயோ
யாரா யலைந்தே னரசே பராபரமே.

பொழிப்புரை :—தியானுதிகளால் என் மனத்தை நிறுத்த விய லாமே, அந்தோ நான், யாராகவோ எனையெண்ணி யலமந்தேன் என்ன ரசே!

குறிப்புரை :—மனத்தினைக்கட்டி மாயையை செயிக்க வியலாமே வீணே நெடுநாள் வெறியனே யொற்றேனுயினேன். என்பது.

"பற்றற்றார் கண்ணும் பருவரலைச் செய்வித்தல்
குற்றமிகு மாயா குணம்."—என்றார் பெரியாரும்.
பருவரல் - துன்பம். (168)

கசாக. சினமிறக்கக் கற்றாலுஞ் சித்தியெல்லாம் பெற்றாலும்
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே.

பொழிப்புரை :—கோபமடக்கக் கற்றிடினும், அட்டசித்திகளைப் பெற் றிடினும், மனத்தை ஏகாக்கிரஞ் செய்யாவிடின், அன்னோர் வாயினுல் வளைத்து வளைத்துப் பேசி யென்ன பயன் பெறுவர்?

குறிப்புரை :—மனமடக்கலே தவத்திற்கு முதற்சாதனமாம் ; அஃதிய லாதபோது மற்றன செய்தென், செய்யாதிருந்தென் ! ஆக இரண்டுஞ் சரியேயாம். "சித்தநிரோதஞ் செய்யாரைப் பித்தரோ அன்றிப் பேயரோ. யாமறியோ "—மென்றார் பெரியார். (169)

கஎ0. வாதுக்கு வந்தெதிர்த்த மல்லரைப்போற் பாழ்த்த
ஏதுக்குக் கூத்தாடு தெந்தாய் பராபரமே. [மனம்

பொழிப்புரை :—எந்தையே ! பாழ்படச் செய்கின்ற இம்மனமானது, வம்பியற்ற வந்த மல்லகச்செட்டியைப் போன்று என்பால் போராடி நடனம் பண்ணுகின்ற தெதற்காகவோ !

குறிப்புரை :—மாயையின் முதல் மகனாய மனமானது என்னகத்துச் சும்மாயிராது பலவாறாகப் போராடி வம்பியற்றலில் மிகச் சமர்த்தா யிருக்கின்றதே ! இது எதற்காகவோ ! எனப்பனே ! (170)

கஎக. சூதாடுவார்போற் றுவண்டு துவண்டு மனம்
வாதாடி யென்னபலன் வாய்க்கும் பராபரமே.

பொழிப்புரை :—சூதாட்ட மாடுவோர்களைப் போன்று, மனமானது பின்னும் பின்னும் வளைந்து வாது புரியுமேல் அதற்கென்பயன் சித்தியாமோ வறியேனே !

குறிப்புரை :—என்ன சொல்லியும் என்மனம் பின்னும் பின்னும் வளைந்து வழிகட்டியைப் போன்று மறித்து வருத்தப்படச் செய்வதால் வரும் பெரும்பயன் யாதோ ? எந்தையே ! (171)

கஎஉ. கொள்ளித்தேள் கொட்டிக் குதிக்கின்ற பேய்க்குரங்
கள்ளமனந் துள்ளுவதென் கண்டாய் பராபரமே. [காய்க்

பொழிப்புரை :—கொள்ளித்தேள் கொட்டப் பெற்ற கேவலம் பேய்க் குரங்கானது துள்ளித்துடிப்பது போலவே வஞ்சமனமும் குதிக்கின்ற தெதற்காகவோ பார்த்தையா !

குறிப்புரை :—கொள்ளித்தேள் கொட்டிய துன்பம் விளைப்பதாகும். மனம் இதனாலேயே அதனை உவமித்தார். குரங்குக்குரிய குணமோ சொல்ல வேண்டியதின்று ! அதனோடும் கொள்ளித்தேள் கொட்டிவிடின் மெத்த கூத்தாய் முடியும் ; இக்குணந்திசய மனைத்தும் மனத்தினுக்கு முரிய தால் அங்ஙனங் கூறவேண்டியதாயிற் றென்க. (172)

கஎ௩. வந்ததையும் போனதையும் வைத்துவைத்துப் பார்க்
சிந்தை யிதமகிதஞ் சேரும் பராபரமே. [திருந்தாற்

பொழிப்புரை :—நடமுதல் விஷயமென்ன, சென்ற விஷயாதிக ளென்ன, இவை யனைத்தையும் மனத்திற்கொண்டு அவைகளைப்பற்றிச் சீர்தூக்கி ஆலோசித்துவரின், அதனால் மனோக்கமானது நன்மையையும் தீமையையு மனுசரித்துத் துன்பமெய்தப் பெறுமென்க.

குறிப்புரை :—

“ நானெனத்தனைபுத்தி சொன்னாலுங் கேட்கிலை நன்னெஞ்சமே
யேனிப்படிகெட்டு ழலுகின்றா யினி யேதுமிலா
வானத்தின் மீனுக்கு வன்றூண்டிலிட்ட வகையதுபோல்
போனத்தை மீள நினைக்கின்றையே யென்ன புத்தியிதே. ”

என்றிவ்வாறாகப் பட்டினத்தடிகள் கூறியதன்றியும்,

“ சென்றது கருதார் நாளைச் சேர்வது நினையார் கண்முன்
நின்றது புசிப்பார் வெய்யினிலவாய் விண்விழுது வீழ்ந்து
பொன்றின சவம் வாழ்ந்தாலும் புதுமையாயொன்றும் பாரார்
நன்றுதீதென்னார் சாக்ஷி நடுவான சீவன் முத்தர்.—” என்றார் கைவல்ய

நூலாரும். இதனால், மனம் பரம சாந்தமெய்தி யிருத்தல்வேண்டுமென்பது. (173)

கஎ௪. ஏறுமயிர்ப் பாலமுணர் விந்தவிட யங்களெருப்
பாறெனவு நன்றாவறிந் தேன் பராபரமே.

பொழிப்புரை :—என்னறிவே, ஏறிச்செல்லாநின்ற மயிர்ப்பாலமாகவும், இவ்வாறான விஷயாதிகள் நெருப்பாறெனவும் யான் நன்குணர்ந்தனனென்பதாம்.

குறிப்புரை :—இதனால், தன்னறிவினை, உரோமத்தாலமைத்த பாலமெனவும், நடமுதல் விவகாராதிகளை நெருப்பாறாகவும் கொண்டு செலுத்துவதான தாந்திரீக நிலைமையைப் பிறரறிய வெளியிட்டனரென்க. ஏன் ? பின்பற்றுமாறேயாம். (விஷயமாவன, ஐம்பொறி நுகர்ச்சியாம்). (174)

கஎ௫. பொறிவழியே யேழை பொறியா யுழல்வதுநின்
அறிவின் விகிக்கவிகி யாமோ பராபரமே.

பொழிப்புரை :—பொறிகள் வயப்பட்டு இப்பேதையாய யான் சிறிய தோராணுப்பிரமாணமாய் அலமருதல், நினது மேலான எல்லா மறியுந்தன்மைவாய்ந்த நின்சக்தியால் கற்பித்ததாகுமோ ?

குறிப்புரை :—ஐம்பொறிகளால் துன்புறும் இவ்வேழை மதியினனும் சிறியவனுவுருவெய்தத் தந்தருளியதன்றியும் அதனால் துன்ப மெய்தவும் ஆக்குவித்தது நின்பேரறிவுடைமையின் நியமம் போலும். என்பது. (175)

கஎசு. பாசசாலங்க ளெல்லாம் பற்றுவிட ஞானவைவாள்
வீசுநா ளென்னுள் விளம்பாய் பராபரமே.

பொழிப்புரை :—பந்தபாசத் தொகுதிகளனைத்தும் என்பற்றைவிட்டு நீங்குமாறதாக மெய்ஞ்ஞானமாம் கூரியவாளாயுதத்தால் சேதித்தொழித் தருள்வது எந்நாளோ ? அந்நாளின்னுளெனக் கூறுவாயாக.

குறிப்புரை :—பாசாடவியை வீசிமடித்தற்கான ஞானமாம் வாளுதவி யருளல் வேண்டுமென்று வேண்டுவாராயினர்.

பாசஅடவி - பாசமாம்காடு. (176)

கஎஎ. எந்தவுடலேனு மெடுத்தவுட னல்ல தென்று
சிந்தைசெய வந்ததிறஞ் செப்பாய் பராபரமே.

பொழிப்புரை :—கிடைத்துள்ளது எச்சரீரமாயினும் இந்த மனித வுடம்பே மிக மேலானதாக்கொண்டு நிலைநாட்டிய காரணத்தை எனக்கு விவரிப்பாயாக.

குறிப்புரை :—இதுகாறும் என் ஆன்மாவிற்குக் கிடைக்கப்பெற்ற சரீரங்கள் பலவற்றினும் இம்மானிட சரீரமே மேலானவைகளைப்பெற யோக்கியமானதென்றறியு மறிவும் வந்ததே ! இத்தன்மை நின்னறிவின் கூட்டுறவாலே யாமென்பது புலனுயது.

ஏன் ? நீ அறிவுக்கறிவா யிருந்து அறிவித்தலாலென்க. (177)

கஎஅ. பொய்யெல்லா மொன்றுய்ப் பொருத்திவைத்த பொய்
மெய்யென்றுன் மெய்யாய் விடுமோ பராபரமே. [யுடலை

பொழிப்புரை :—பொய்யெனப்பட்ட தனைத்தையுங் கொண்டு ஒருங்கு சேர்த்து கற்பித்து வைத்துள்ள இச்சரீரத்தினை உண்மையுடலெனக் கூறின் அது அங்ஙனமே உண்மைப்பொருளாய் விடுவது முண்டோ ?

குறிப்புரை :—உடல் பொய்யாயினும், இவ்வுடலே மேலாம் பதவிகள் பெறுதற் கேற்றதாயும் சாதகமாயு மிருத்தலின், இம்மானிட வுடம்பே மேன்மைசால் சரீரமெனப்பட்டதே யன்றி மற்றன்று. (178)

கஎகூ. மின்னனைய பொய்யுடலை மெய்யென்று நம்பினையே யா
நின்னை மறக்கை நெறியோ பராபரமே,

பொழிப்புரை :—வானமின் போன்றழியத்தக்க இவ்வனித்திய சரீரத்தை நித்தியமா யுள்ளதெனவே நம்பி, அந்தோ ! நின்னை நினையா தொழிவதும் தகுதியாமோ ? அன்றி நியாயமாகுமோ !

குறிப்புரை :—வருகணத்தில் வாழல் ஐயப்பாடாயுள்ள பொய்யுடற் சுமையை மெய்யென்னும் புன்மதி தொலைந்த ஞான்றே மெய்ஞானப் பலிதமே விடுமென்பது இதனால் நன்கு புலனுயது. என்பது. (179)

கஅ0. நித்தியமொன் றில்லாத நீர்க்குமிழி போன்றவுடற்
கித்தனைதான் றுன்பமுண்டோ வென்னே பராபரமே.

பொழிப்புரை :—நிலையற்றதான நீர்க்குமிழி யொத்து அழிவுற்ற இவ்வுடற் சுமைக்கே இவ்வளவினதாய துன்ப முளவாதலும் நீதியோ ! இஃதென்னமுறை ! இவைக்கியாவர் ஈடுபடுவர் !

குறிப்புரை :—அநித்திய சரீரத்தையுங் கொடுத்து, அதற்கேற்காத வாரூக மட்டற்ற கவலையையும் உடற் பிறப்பாயமைத்திடின், இத்துணை அல்லலையும் எவ்வாறொழித்து எவ்வகையால் நின்றிருவடிக் காளாகித் திருவருட் கொண்டுய்வது ! (180)

கஅக. தேகமிறு மென்றுசடர் தேம்புவதென் னித்திரையின்
ஊகமறிந் தாற்பயந்தா னுண்டோ பராபரமே.

பொழிப்புரை :—எடுத்துவந்த இந்தச்சரீரம் அழிந்துபோமே யென்று அறிவிலிகள் அஞ்சுவது எதற்காகவோ ? நித்தினமும் நித்திரை செய்யும் போது நிகழும் சொப்பன சுழுத்தி விஷயமாக ஊகித்துணரில் பயமின்றே.

குறிப்புரை :—தேகானித்தியத்தைக் கருதி அஞ்சும் பஞ்ச நெஞ்சினர், எம்மான்றன் இணையடிக்கே நெஞ்சை யிடமாக்கி நித்தினமு நேசித்துவரின் இறப்பிற்கேனோ அஞ்சவேண்டும் ? மார்க்கண்டன் சரிதமறிந்தவரே இறத்தற்கென்செயக்கடவோ மேன்றேங்குவர் ; என் செய்வாம். (181)

கஅஉ. ஏதைச் சுமையா வெடுப்பா ரெடுத்தவுடற்
சேதமுறின் யாதுபின்னே செல்லும் பராபரமே.

பொழிப்புரை :—கிடைக்கப் பெற்ற இந்த மானிட சரீரம் அழியுமாயின் பின்னே யெடுப்பது எவ்வுடலோ ! எவ்வகையாமோ ! அவ்வுண்மை யெவ்வாறு ஆராய்ந்துணர சாத்தியமாகும் ! முடியா.

குறிப்புரை :—எல்லாப் பிறவியினும் இம்மானிடப் பிறவியே மிக மேலாயதாகும் ; இதைக்கொண்டு வீடடையாது சென்மம் நசிக்குமாயின் பின்னர் இன்னவாறு மென்பது சிறிதும் விளங்கப் பெறாவாம். (182)

கஅரு. தோற்பாவை நாலாட் சுமையாகுஞ் சீவனென்றிங்
காற்பா லெடுத்ததெவ ராலே பராபரமே.

பொழிப்புரை :—சருமத்தானமைந்த இச்சரீரம் கேவலம் பதுமை யாகும் ; சவமாகின் நால்வர்க்குச் சுமையாம் ; சீவனது வேண்டலால் பெற்ற வுடலாம் இங்ஙனம் பொருந்தி பிறந்து வந்தது யாவராலே ? என்பதாம்.

குறிப்புரை :—கேவலம் மாம்ச மயமாய இவ்வுடல் சாமான்ய பிர திமைக் கொப்பாயினும், கர்ம பாகுபாட்டால் அடிக்கடி தேகம் பெற்று வருதல் இயல்பேயாம் கன்மமும் பாசமும் அற்றக்கால், அன்றே வருதலும் போதலும் அறவே யொழியு மென்க. (183)

கஅச. ஞாலத்தை மெய்யெனவே நம்பிநம்பி நாளுமென்றன்
காலத்தைப் போக்கியென்ன கண்டேன் பராபரமே.

பொழிப்புரை :—காணப்பட்ட இவ்வுலகத் தோற்றத்தை நிலையெனவே நம்பி நம்பி காலமெலாம் வீணாகக் கழித்து யான் பெற்ற பேறொன்றும் கண்டிலனே ! இதற்கென் செயக்கடவேன் என்பது.

குறிப்புரை :—பொய்த்தோற்றமாய இவ்வுலகை நிலையெனக்கொண்டு, அந்தோ ! என் கால முற்றிலும் வீணாகக் கழிந்து போயினவே ! ஈற்றில், இலவு காத்த கிளிபோல் வெட்கினனே யென்பது அமையும். (184

கஅரு. பொய்யுலக வாழ்க்கைப் புலைச்சேரி வாதனைநின்
மெய்யருளின் மூழ்கின் விடுங்காண் பராபரமே.

பொழிப்புரை :—பஞ்சமா பாதகராம் பறையர்சேரிக்கொத்த இவ் வனித்திய உலகத்துன்பமானது, உண்மையாய நின்றிருவருட் கடற்கண் மூழ்கினன்றோ முற்றுந் தொலைந்து தூய்மை பெறுவேன் என்பது.

குறிப்புரை :—அநித்திய உலகவாழ்வுந் துன்பமும், இறைவன் றிரு வருள் பாலித்தலென்றோ அன்றோடகன்று அரனடிக் காட்படும் என்பது தீர்மானமாய திருவுரையாயது. (185)

கஅசா. நூலேணி விண்ணேற நூற்குப் பருத்திவைப்பார்
போலே கருவிநன்னூர் போதம் பராபரமே.

பொழிப்புரை :—நூலேணி கொண்டே ஆகாயவுலகம் பார்க்க வெண்ணி, நூலுக்காகப் பருத்திப்பயிர் செய்வது போன்றதாகும், கருவியாய உத்தம சாத்திரங்களினால் ஏற்படும் ஞான மென்பதாம்.

குறிப்புரை :—வானுலகேக நூலேணிக்குப் பருத்திப்பயிர் செய்வதையொக்கும் கருவியாம் சாஸ்திராராய்ச்சிசெய்து ஞானம் பெறலா மென்பது; இதனால் சற்குரு கடாக்ஷ மின்றியும், இறைவன் றிருவரு ளின்றியும் சாஸ்திராராய்ச்சியால் ஞானத்தை யடைந்துவிட முடியா வென்பது வெளிப்பட்டது. (186)

கஅஎ. சின்னஞ் சிறியார்கள் செய்தமணற் சோற்றையொக்கும்
மன்னுங் கலைஞான மார்க்கம் பராபரமே.

பொழிப்புரை :—நம் சைவமார்க்கச் சாதனமான ஞானசாஸ்திர முறைகளானவை (ஆசிரியர்வாயிலாக வன்றி) தாமாகவுணர்ந்து ஞானத்தைப் பெறத்துணிதலானது, சிறுமியர்கள் செய்யும் மணற்சமையலை யொத்து அப்பிரயோசனமா மென்க.

குறிப்புரை :—உண்மையான ஞானநெறியை நன்கு விசாரித்துத் தெரிந்த தக்கோர் முன்னிலையில் சந்தேக விபரீதமற்று திடப்பிரக்ஞையால் சுவாநுபூதி செய்ய வல்லார்களாயின், அவர்களுக்குக் கலைஞானம் பயன்றரும்; அங்ஙன மன்றித் தான்றோன்றித் தம்பிரான் போன்று சுவடியை யெட்டு முறை புறட்டிப் புறட்டிப்பார்த்து நுட்ப பொருளறியவியலாதும், ஐயந்திரிபற ஆசிரியர் வாயிலாக வோதியுணராதும், சாஸ்திர முறை பிறழ்ந்து திரிபார்த்தங்கொண்டு சுவானுபவம் செய்து நெறிபடவகையறியாது முள்ள சாமானியரை நோக்கியே சிறுமிகள் மணற்சோற்றை உவமித்தாரே யன்றி உள்ளபடியோதிச் சிந்தித்து தெளிந்து சற்குரு கடாக்ஷத்தால் சுவானுபவஞ் செய்ய வல்லாரை நோக்கி ஆசிரியர் கூறியதன்றென்பாம்.

இதுகொண்டே நம் வாதவூரெந்தையாரும் தம் திருவாசகச் சிவபுராண அகவற்பா ஈற்றின்கண், "சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார், செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப், பல்லோரு மேத்தப் பணிந்து" என்று ஓதியுள்ளமையு மோர்ந்து கொள்க. (விரிவஞ்சி விடுத்தாம்). (187)

கஅஅ. வாசக ஞானத்தால் வருமோ சுகம்பாழ்த்த
பூசலென்று போமோ புகலாய் பராபரமே.

பொழிப்புரை :—நூல் வாசித்து விட்டாலே சிற்சுகோதயம் செனித்து விடுமோ! ஆகவே, வாயினாற் பேசுந்தன்மையான ஞான விவகார

விதண்டை எப்போது தொலையுமோ! தெரிந்திலன்; இதற்குத் தாமே திருவுளம் பற்றல் வேண்டு மென்பது.

குறிப்புரை:—நூலினுட் பொருளினைத் தக்காரால் ஓதியுணராமே, வாய்ப்பாடம் செய்தலாலேயே வந்துறுமோ பரானந்தம்? வாராது வாராது! ஆகவே பாழும் வாததர்க்கமொழிந்து சற்குருவை யடைந்து கேட்டு, சிந்தித்து, தெளிந்து பணிசெய்துவரின் அவரால்வரும் பேசா ஞானம். (188)

கஅகூ. கேட்டதையே சொல்லுங் கிளிபோல நின்னருளி
லூட்டமின்றி வாய்பேச லன்றே பராபரமே.

பொழிப்புரை:—நாம் சொன்னதைச் சொல்லும் கிள்ளையைப் போன்றே நினது ஒப்பற்ற திருவ்ருட் பிரசாதங் கைவரப்பெறாது வெறு வாய் மெல்லுதலில் நலமுண்டாகுமோ? ஒருபோது மில்லையென்பதாம்.

குறிப்புரை:—இறைவன் றிருவருள் பெறாது, கிளியைப்போன்று வாசாஞானம் பேசித்திரிதலால் வருமோ சிவஞானம் என்பது இந்நூலுடையார்தம் இதய யதார்த்தமாம். இதனால், கற்ற கவியைப் பற்றிச் சதா பிரசங்கித்து வருதலோ தவமாகும்? இல்லை யில்லை; கற்றபடி நிற்றலான தவமாகிய ஞான நெறிபற்றி யொழுகி ஈசுர உபாசனையால் திருவருள் பெற்று குருகடாக்ஷத்தால் ஞானத்தை யடைந்து யோக முயற்சியால் முக்தி பெறவே கதியாக் கொள்ளல் வேண்டு மென்பது. (189)

ககூ0. வெளியா யருளில் விரவுமன்பர் தேகம்
ஒளியாய்ப் பிறங்கியது முண்டோ பராபரமே.

பொழிப்புரை:—இல்லறந்துறந்து, வெளியேறி, பக்தி பூர்வமாக நின் திருவருட் பிரசாத முண்டுவந்து, அதின்வயம் நின்று பின் தன் சரீரம் சோதிமயத்திற் பேதமின்றிக் கலந்தருளலு முளவாமோ!

குறிப்புரை:—பிறவியறுதற்கான மெய்த்துறவு கொண்டு தவவலியால் திருவருள் வாய்க்கப்பெற்று மோன ஞானத்தால் சாயுச்சியமாம் பரஞ்சோதியிற் பேதமறக் கலந்தாரு முளரோ வென்பதாம். இதனால் இங்ஙனம் செய்து கதிபெறல் வேண்டுமென்பது கருத்தாம். (190)

கககூக. காலமொரு மூன்றுங் கருத்திலுணர்ந் தாலுமதை
ஞாலந் தனக்குரையார் நல்லோர் பராபரமே.

பொழிப்புரை :—உண்மை ஞான முணர்ந்த பெரியார், மேலான தம் சுவாநு பூதியால் தாங்களுணர்ந்துள்ள திரிகால வர்த்தமான முதலியனவும் யார்க்கும் வெளியிடா ரென்பதாம்.

குறிப்புரை :—மெஞ்ஞானியர் கண்டறிந்த முக்கால வர்த்த மானங் களைப் பெருமையை நாடி இவ்வுலகத்தார்க் கோதாரென்பது. (191)

கக௯உ. கொல்லா விரதமொன்று கொண்டவரே நல்லோர்மற்
றல்லாதார் யாரோ வறியேன் பராபரமே.

பொழிப்புரை :—சீவவதை செய்யாமையாய நல்விரதமே விரதமாக உத்தமர்கள் கொள்வர்கள்; அங்ஙனமில்லா ஏனைவிரதங்கள் பலகொள்ளினும் பயனொன்றும் பெறார்க ளென்பதாம்.

குறிப்புரை :—இதனால், சீவகாருணிய மில்லா வன்னெஞ்சுடைய பாவிகள் எவ்வாற்றானும் ஈடேறப் பெறாது நீண்டகால பரியந்தம் எரிவாய் நரகத்தையே யெய்தித் துன்புறுவ ரென்பதாம்.

"நோன் பென்பதுவே கொன்று தின்னாமை"—என்றும்,
"கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண் மேற்
செல்லா துயிருண்ணுங் கூற்று."—என்றும்,

கலையெலா முணர்ந்தானேனுங்கரி சறத் தெளிந்தானேனும்
மலையென வுயர்ந்தானேனு மனமயலகன்றா னேனும்
உலகெலாம் புகழப் பல்லோர்க் குதவிய கையனேனும்
இலகிய விரக்கமின்றே லெழுநரகடைவனன்றே"—என்றும்
இவ்வாறு பலரும் பல நூலின்கண் கூறியுள்ளமை காண்ப. (192)

கக௯௩. இல்லாத காரியத்தை யிச்சித்துச் சிந்தைவழி
செல்லாமை நல்லோர் திறங்காண் பராபரமே.

பொழிப்புரை :—பொய்ப்பொருளை யிச்சித்து மனத்தின் வழியைப் பின்பற்றிப் போகாதபடி அறிவின் வசமாயே செல்லல் மேலவர்தம் மெய்ந் நெறியாய்க் காணப்படு மென்க.

குறிப்புரை :—கல்வி யறிவு வொழுக்கங்களிற் சிறந்து தவநெறி நிற் போர் அநித்தியமான கேவல போக போக்கியத்தை யடைய மனமொரு மைப் படாரென்பது நன்கு விளங்கும், (193)

கக௯௪. ஏதுவந்து மேதொழிந்து மென்னதியா னென்னார்கள்
போதநிலை கண்ட புலத்தோர் பராபரமே.

பொழிப்புரை :—மோன ஞானம் பெற்ற முனீந்திரர், எவை வரினும், எவைபோயினும் அவை பற்றி யான், எனது என்று அகங்கார மமகாரம் பேசி நில்லார்கள் என்பது.

குறிப்புரை :—முற்றுமுணர்ந்த மோனியர்பால் சற்றேனும், யான் எனது என்கிற அகங்கார தன்மை தலைகாட்டா தென்பது இதனால் நன்கு தெளிவுற்றுத் தோன்றலாயின. (194)

ககரு. ஆயிரஞ் சொன்னாலு மறியாத வஞ்சநெஞ்சப்
பேயரொடு கூடிற் பிழைகாண் பராபரமே.

பொழிப்புரை :—ஆயிரமாயிரமா யெடுத்துக் கூறினும் தெளிவு பெறாத கேவல தீயமனத்தினையுடைய பேயர் நேசங்கொண்டிடின் அதனால் பெரியதோர் குற்றம் வந்துறு மென்பதாம்.

குறிப்புரை :—என் சொலினுந் தெளிவுறா வேழைமனப் பேயர் நேசமிருக்குமானால், அவ்வஞ்சகர் நேசம் பெரியார்க்கு நஞ்ச நேசமாம் ஏன் ? வஞ்ச நிலையுள்ளார் எதற்கும் அஞ்சு நிலைகொள்ளார்; ஆதலின் என்க. (195)

கககா. மாய மயக்கொழிந்தார் மற்றொன்றை நாடுவரோ
நேய வருணிலையி னிற்பார் பராபரமே.

பொழிப்புரை :—மாயாசக்தியின் கட்டறுத்து விட்டவர்கள், தமக்கின்றியமையாத் திருவருணிலையே பரமசாதனமாக் கொண்டு இன்புற்றுப் பெருவாழ் வெய்துவதைத் தவிர்த்தும் வேறொன்றை விரும்பாரென்ப.

குறிப்புரை :—மாயையின் தலைமிதித்த மஹான்கள் திருவருண்முறையன்றி மற்றொன்றையும் நாடல் செய்யாமை திண்ணமாம். (196)

கககஎ. நித்திரையிற் செத்தபிண நேருமுடற் கிச்சைவையாச்
சுத்தர்களே நல்ல துறவோர் பராபரமே.

பொழிப்புரை :—உறங்குங்கால் பிணத்திற் கொப்பாயுள்ள உடலின்பால் விருப்புறா திடப்பிரக்ஞரே மேலாந் துறவினராவர் என்பது.

குறிப்புரை :—நித்திரை புரியுங்கால் பிணம் போன்றுள்ள சரீரத்தின் கண்ணே ஆசையொழித்துள்ள உத்தமர்களவர்களோ, அவர்களே சுத்த துறவிய ராவாரென்பது. (197)

கககஅ. எந்நெஞ்ச மேனு மிரங்குமே நின்னருட்குக்
கன்னெஞ் சருமுளரோ காட்டாய் பராபரமே.

பொழிப்புரை :—நினது மேலாய திருவருட் பிரசாதத்திற்கு உருகாத எவ்வகை மனமும் நீராளமாயுருகிடுமே! அவ்வாறு உருகா நெஞ்சமு முண்டோ! இராதென்பதாம்; இருப்பின் காட்டியருளும் என்பது.

குறிப்புரை :—தேவரீரது ஒப்பற்ற திருவருட்குப் பேராசைகொண்டே அலமந்து திரியு மனத்தினர் அநேகாயிர மாயிற்றே! இத்திருவருள், உயிரெலாம், உடலெலாம் உள்ளகமெலா மதுரிப்பதாயிற்றே இதற்கென வுருகா நெஞ்சமு முளவாமோ! இது ஆச்சரியமே! (198)

கசுசு. மந்தவறி வாகியின்பம் வாயா திருந்தலைந்தாற்
சிந்தைமயங் காதேரவென் செய்வேன் பராபரமே.

பொழிப்புரை :—கேவலம் மந்தமதியினனாய் ஞானச் சுகோதயம் உண்டாகா திருந்திடின் என் மனமானது அதனால் ஏன் மிக வருந்தாதொழியும்? அத்திகைப்பை மாற்றுவதற் கென்கடவேன்!

குறிப்புரை :—இதுகாறும் நீ எளியேற்குச் சுகோதய முண்டுபண்ணா திருக்கின்றதால் என் னெஞ்சம் அலமந்து வாடி வருந்தாதென் செயும்! தீவிரதானுகாவிடினும், நின்னடிமை திசைதப்பிய நாவாய்போற்றியங்குகின்றதறியாயோ! (199)

உ00. தேடினேன் திக்கனைத்துந் தெண்டனிட்டேன் சிந்தை
வாடினே னென்மயக்க மாற்றாய் பராபரமே. [நைந்து

பொழிப்புரை:—இறைவனே! நின்னை யான் திசையெங்கணுஞ் சென்றோடித் தேடிப்பார்த்தேன்! ஆங்காங்குந் திளைத்து வழிபட்டு வந்தேன்; மீண்டுமீண்டும் மனமிகவருந்தி வருந்தி வாட்டமே யடைந்தேன்! என் செய்தும் நின் திருவருட்டன்மைக்கு இரக்க மொன்றுங் காண்கிலன்! என் செய்வன்! ஆகவே, மனசஞ்சலமாவதை முதற்கணொழித்திடல் வேண்டுவன்! என்பது.

குறிப்புரை :—சிதாகாயத் திருமேனி கொண்டருளும் நின் பரானந்தத் திருவுருவங்காணப் பலவாறு தேடியுங் காணாமையால் ஏற்பட்டுள்ள மனோ குழப்பமாற்றி யருளவேண்டுவன் என்பது. (200)

உ0க. மடிமையெனு மொன்றை மறுத்தன்றோ வென்னை
அடிமை கொள்ளல்வேண்டு மரசே பராபரமே.

பொழிப்புரை :—என்பாலுள்ள சோம்பலானதைத் தொலைப்பித்தே பின்னர் என்னைத் தேவரீர் தமக்குத் திருப்பணி யடிமையாக்கிக் கொள்ள வேண்டும் என்று மன்றாடுகின்றனன் என் அரசனே.

குறிப்புரை :—இதனால், எளியேனை முதற்கண் பரிசுத்தனுக்கி யதன் மேலன்றோ அடியவனுகக் கொள்ளல் நலமாகும்? ஆதலின் அங்ஙனஞ் செய் தல் வேண்டு மென்பது. (201)

உ0உ. காலர்பயந் தீரவின்பக் காற்கபய மென்றெழுந்த
மாலை வளர்த்தனையே வாழி பராபரமே.

பொழிப்புரை :—எமபடாளது அச்சம் உண்டாகா வண்ணம் சிற்சு கோதயம் புரிந்தருளும் நின்மேலான திருவடித்தாமரைக்கே அபயமாகக்கூறி, மனத்திற்கு மகாசந்தோஷத்தைப் பெருமாறருளினையே! இறைவா! இனி நீ மென்மேலும் வாழ்க.

குறிப்புரை :—என்விஷயமாக எமதூதர் வாராவகைக்கு ஏதுவாய திருவடிக் கமலங்களுக்கபய மாக்கி மனத்திருப்தி செய்த நீ வாழ்வா யென் பது.

இன்பக்கால் - சிற்சுகோதமருளும் திருவருட்சத்தியார் தங்கு மிடம். (202)

உ0௩. நீர்ப்புற் புகமாய் நினைவருட்கே நின்றழியப்
பார்ப்பதல்லால் வேறுமொன்றைப் பாரேன் பராபரமே.

பொழிப்புரை :—ஒப்புவமையற்ற நினது திருவருளார்த்தமாக என் மனம் நீர்க்குமிழியைப்போன்று உடனழியப் பார்ப்பதன்றி வேறெவற்றை யும் உற்று நோக்கே னென்பதாம்.

குறிப்புரை :—நின் திருவருள் பெறுமாறு என்மனத்தினை நீர்க்குமி ழிபோ லழிவுறப் பார்த்திருப்பேன்; வேறொன்றையும் பாரே னென் பது. (203)

உ0௪. நீர்க்குமிழி போலென் னினைவுவெளி யாய்க்கரையப்
பார்க்குமிட மெல்லாமென் பார்வை பராபரமே.

பொழிப்புரை :—என்னெஞ்சம் நீர்க்குமிழி யொத்து வெளிப்பட்டு திருவருட் பெருக்கால் கணவுபெற்று என்பாற் கலந்தருளுமாறு யான் பார்த்திடுந் திசை யெங்கணும் பார்வையாயுள்ளேன் என்பது.

குறிப்புரை :—நீர்க்குமிழியொத்து என்னெஞ்சம் உன்னருட் பிரவா கத்திற் கரைந்து என்னைக்கலந்தருள பார்க்குமிடந்தோறும் பார்வையாகும் என்பது. (204)

உ0ரு. ஆடியோய் பம்பரம்போ லாசையுட னெங்குமுனைத்
தேடியோய் கின்றேனென் செய்வேன் பராபரமே.

பொழிப்புரை :—பம்பரமானது ஆடியோய்ந்ததன்ன, மெத்தப் பிரி யங்கொண்டே நின்னைத் தேடியலைந்து ஓய்ந்து போயினேன் ! இதற்கும், வேறே யாதும் செய்யத் தெரியாது மயங்கு கின்றேன் என்பது.

குறிப்புரை :—தேவரீர் தம்மைத் திசைதிசை யெங்குந்தேடிக் காணு தோய்ந்து வாடியலமந்து மனம் வேறெவற்றினுஞ் செல்லாது ஆடிய பம் பரத்தை யொத்துக் கிடக்கின்றதே ! மேல் என் செய்யவல்லேன்! அந்தோ ! ஈதென்கொலோ ! (205)

உ0சா. வேதாந்தஞ் சித்தாந்தம் வேறென்னார் கண்களிக்கும்
நாதாந்த மோன நலமே பராபரமே.

பொழிப்புரை :—வேதாந்த மார்க்கமும் சித்தாந்த மார்க்கமும் வெவ் வேறு நிலையன வென்று கூறாது, சமரச பாவமாக் கொண்ட மேலோர்க ளது கண்கள் களிப்புறும்படிக்கான நாதாந்த தத்துவத்தின் முடிவாய்ப் பிர காசிக்கும் மோனச் சுகோதயமே !

குறிப்புரை :—நாததத்துவ முடிவுணர்ந்த மேலோர்கள், வேதாந்த நிலையும் சித்தாந்த நிலையும் வெவ்வேறாகக் காண்பதில்லை ; சமரஸமாகப் பாவிப்ப ரென்பாம். வேதாந்தம் ஞானகாண்டம் ; சித்தாந்தம் பத்திகாண் டம். ஆக பதவி யொன்றேயாம். (206)

உ0எ. ஆனந்த மானநின்னை யன்றியொன் றையுன்னாத
மோனந் தமியேற்கு முத்தி பராபரமே.

பொழிப்புரை :—ஆனந்தஸ்பதனாய தேவரீரையல்லாது, மற்றொன் றையும் நினையாதுள்ள மௌனமே, யெளியேற்கு உற்ற பரமுத்தி யென்பது சித்தாந்த மாயிற்றென்ப.

குறிப்புரை :—பரமானந்த சகித தேவரீரை யன்றி, மற்றொன்றும் கருதா மௌனநிலையே எளியேன்கண்ட தீர்மான முத்தியாம் என்பது. சிவானந்தத்தி லீடுபட்டுச் சிவத்தையே நோக்கி நிற்க, அதுவே சிவ மாகும். (207)

உ0அ. ஏதுக்கு முன்னைவிட வில்லையென் றெலென்கருத்தைச்
சோதிக்க வேண்டாநான் சொன்னேன் பராபரமே.

பொழிப்புரை :—எக்காரியாதிகளினும் நின்னையே கொண்டும், நின்னாலேயே சகலமு முடிவதாக் கொண்டும் நிகழும்போது, எளியனை மீண்டு மீண்டும் பரீக்ஷை செய்யவும் வேண்டுமோ ? வேண்டாம் என்பது.

குறிப்புரை :—இறைவன் திருவுளக்கருத்தின்படியே அனைத்தும் நிகழ்வதாக உள்ளபடி யுய்த்துணர்ந்தும், சர்வமும் ஆக்கலழித்தலாதிய வெல்லாம் அவனே காரணகர்த்தாவாயிருந்து ஆக்குவிப்பவ னென்றும் செவ்வனே தெரிந்து வந்தும், எனைச் சோதிப்பதுந் தகுமோ பரஞ்சோதியே யென்பது. (208)

உ0௯. முத்தியிலுந் தேகமிசை மூவிதமாஞ் சித்திபெற்றோர்
எத்தனைபே ரென்றுரைப்ப தெந்தாய் பராபரமே.

பொழிப்புரை :—இச்சரீரத்தோடு முத்தி பெற்றவர்களில் மூவகைச் சித்தியையும் பெற்றவர்கள், இவ்வுலகத்துள்ளே இத்தனைபேர்களென்று கணக்கிடலும் எந்தையே ! ஏற்றதாமோ ? ஆகா தென்ப.

குறிப்புரை :—ஜீவன் முத்தர்களில், உருவச் சித்தி, அருவச் சித்தி, அருவுருவச் சித்தி யென்னு மூவகைச் சித்தியையும் சரீரசகிதம் பெற்றுய்ந்தோர் அளவுகடந்தவராவரென்ப ! (209)

உ௧0. நீயன்றி நானார் நினைவாரென் னெஞ்சகமார்
தாயன்றிச் சூலுமுண்டோ சாற்றாய் பராபரமே.

பொழிப்புரை :—இறைவ ! நீயில்லையாயின், நானார் ? என் எண்ணம் யாரது ? அன்றி என் நெஞ்சம் யாருடையது ? ஆண்டுள்ளார் யாவர் ? ஆகவே, தாயறியாமல் கெர்ப்பமுண்டாதலு முண்டோ ? சொல்வாயாக.

குறிப்புரை :—“ நானு ரெனக்கெனவோர் ஞானவுணர் வேதுசிவம்
ஊனாடி நில்லா வழி ” யென்ற பெரியார்தம் திருமொழிக்கிணங்க யெத்தத்துவத்திற்கும் இறைவனே சீவதத்துவமாயிருந்து சர்வான்மகோடிகளையும் அசைப்பித்து வருகிறானென்பது. (210)

உ௧௧. அங்கமே நின்வடிவ மானசுகர் கூப்பிடநீ
எங்குமே னேனென்ற தென்னே பராபரமே.

பொழிப்புரை :—சரீரமே உன் அம்ஸமாக் கொண்டுள்ள சுகப் பிரம்மர் முன்னோர்கால் நின்னை ஓலமிட்டழைப்ப, அப்போது தேவரீர் எங்கனுமாயிருந்தவாறு அங்கங்கும் ஏன் ! ஏன் ! என்று ஒளிசெய்தருளியது பரமாச்சரிய மாயிற்றே ! (211)

[தார்க் கிழுத்தாற்

உகஉ. கொள்ளைவெள்ளத் தண்ணருண்மேற் கொண்டுசுழித்
கள்ளமனக் கப்பலெங்கே காணும் பராபரமே.

பொழிப்புரை :—குளிர்ச்சிவாய்ந்த நினது திருவருட் பிரசாதமெனும் பிரவாகம் மிகப் பிரவாகித்துச் சுழித்தோங்கிச் சப்திக்கிழுத்துப் போம் போது கபடநெஞ்சக் கப்பல் எங்ஙனங் காணப்படும்?

குறிப்புரை :—வஞ்சமய நெஞ்சகமாய மரக்கலத்தைத் தண்ணீர்மைத் திருவருட் பிரவாகமானது ஆர்ப்பரித்து இழுத்தேகுங்கால் மனம் மாயா தென்செயும் என்பதே ஆசிரியர் கருத்தாமென்க. (212)

உகங. எக்கலையுங் கற்றுணர்ந்தோ மென்றவர்க்குஞ் சம்மதஞ்
வக்கணையா லின்பம் வருமோ பராபரமே. [சொல்

பொழிப்புரை :—எல்லாக் கலைஞானங்களையும் கசடறக் கற்று வல்ல ராயினேமென்று மிறுமாப்பாளர் பலர்க்கும் பலவாறான சமயோசித சமா தானஞ் செய்து வரும் வக்கணையான விவகாரத்தினால், சிற்சுகோதய மாதலு முளவாமோ? இல்லையென்பதாம்.

குறிப்புரை :—உள்ளபடியாக ஆத்மார்த்தமான தவநிலை சார்ந்து மௌனத்தோடும் திருவருட் கெதிர்நோக்கங் கொள்ளாது பலவாறான வாய்க்கினிமையாக் கூறும் வாதவகுப்பாளர்க்குத் தக்கவாறு யோதி வர லான் பரானந்த சுகம் வாராதென்பது பெற்றாம். (213)

உகச. கல்லெறியப் பாசி கலைந்துநன்னீர் காணுநல்லோர்
சொல்லுணரின் ஞானம்வந்து தோன்றும் பராபரமே.

பொழிப்புரை :—பாசி மூடிய ஜலத்தில் ஓர் கல்லெறிய, பாசி விலகி தண்ணீர் துலங்குவது போன்று, உத்தமர் கூறும் சத்திய மொழிகளை நன் காய்ந்துணரின், அதனால் மெய்ஞ்ஞானம் பிறந்து அஞ்ஞானங் கரந்துபோ மென்பதாம்

குறிப்புரை :—'மேன்மக்கள் சொல்கேள்' என்ற அம்மைத் திருவாக் கின்படி அறிவுநூல் ஆய்ந்த பெரியார் கூறும் பெருமொழி கேட்டொழுகின் உண்மை ஞானம் உதயமாம் என்பது. (214)

உகரு. நின்னை யுணர்ந்தோர் கடமை நிந்தித்த பேயறிஞர்
என்ன கதிபெறுவா ரெந்தாய் பராபரமே.

பொழிப்புரை :—இறைவ ! தம்மைத் தவத்தாலறிந்த பெரியாரைத் தூஷித்தவரான பேயினத்தார் அடையுந் தீ நிரயம் அம்மட்டிம் மட்டென்றளவிடப் போமோ ! என்பதாம்.

குறிப்புரை :—மஹான்களை உள்ளபடி யுணர்ந் துய்யாமே, நிந்தனை புரிந்தார் எய்தும் நிரயம் நொய்யன வன்றே யென்பதாம். அவர்களுக்குக் கதி அதோ கதியே யாகும் என்பது. (215)

உகரு. என்னதியா னென்னலற்றோர் எங்கிருந்து பார்க்கினுநின்
சன்னிதியா நீபெரிய சாமி பராபரமே.

பொழிப்புரை :—இதைச் செய்தவன் யான், எனவும், இத்தகைய பொருளாதியன என்னது எனவும், உரிமையும் பெருமையும் பாராட்டிப் பேசும் அகங்கார மமகாரச் சொற்களொழித்த பேரறிவாளராம் பெரியார், யாண்டிருந்து இறைவனை நோக்கிடினும் அப்பார்வைபட்ட விடங்கள் அனைத்தும் நினது மகா சந்நிதியாகவே அவர்கட்கு நன்கு விளங்கப்பெறும் ; அன்றி அச்சந்நிதியிலும் நீ, தயாராகத் தோன்றி நிற்பா யென்பது அய்யந்திரிபற்ற அருண்மொழியாம்.

குறிப்புரை :—இதனால், களங்கமற்ற பரிசுத்த ஞானியர் தீக்ஷண்யம் எங்குற்றதோ, அங்கெல்லாம் சங்கரன் மங்கையோடும் கலீர் கலீரென்று சப்திக்கும் வீரகண்டாமணிச் சப்தமொலிக்கப் பரமானந்தத் திருநடம் பயின்று நிற்பர் என்பது புலனாயது. (216)

உகஎ. சோற்றுத் துருத்திச் சுமைசுமக்கக் கண்பிதுங்கக்
காற்றைப் பிடித்தலைந்தேன் கண்டாய் பராபரமே.

பொழிப்புரை :—சோறடைக்குந் தோல் துருத்தியாகிய சுமையைச் சுமந்து திரியுமாறு, கண்கள் விழிபிதுங்கக் காற்றைப் பூரித்துத் திரிந்தேன், அதை நீ பார்த்திலையோ ! என்பது.

குறிப்புரை :—சோறடைத்துக் கிடத்தும் இவ்வுடலாகிய சுமை நீடித்துக் கிடக்குமாறு வயிறு பருக்கக் கண்சிவக்கக் காற்றினைப் பூரிப்பதே காரியமாக் கொண்டிருந்து வந்தேன் ; நீயு மறிவாய். (217)

உகஅ. உள்ளபடி யொன்றை யுரைக்கினவர்க் குள்ளுறவாய்க்
கள்ளமின்றி யன்பாய்க் களிப்பேன் பராபரமே.

பொழிப்புரை :—உள்ளவாறாக யென்பால் ஓர் விஷயத்தை ஒருவர் அன்பா யோதுவாராயின் அவர்பால் யான் அகமுக அன்பொடுங் கலந்து களிப்பேன் என்பது.

குறிப்புரை :—என்பால் சத்தியஞான சம்பாஷணை செய்யும் உத்தமர் பால், யானும் உள்ளும் புறமுமொத்த அன்பொடும் வார்த்தையாடிக்கனிவு பெறுவேனென்பது. (218)

உகக. அடுத்தவியல் பாகவொன்றை யான்பகர்வ தல்லாற்
றொடுத்த தொன்றை யான்வேண்டிச் சொல்லேன்
[பராபரமே.

பொழிப்புரை :—ஒத்ததன்மையாகவுள்ள வோர் பொருளினைப்பற்றியே யான் கூர்தலன்றி, கற்பனையாக யான் ஓர் விஷயத்தையும், ஓர் பக்ஷமாகவும் பேசுதலில்லை யென்பதாம்.

குறிப்புரை :—உள்ளதையுள்ளவாறே பேசுதலொழிந்து மற்றொன்றை யுங் கற்பனையாப்பேசுதலும், பாரபக்ஷமாய்ப் பேசுதலும் பழக்கமில்லையென் பதும் விகசிதம் என்பது. (219)

உஉ0. உள்ள மறியாதொருவ ரொன்றையுன்னிப் பேசிலோ
துள்ளி யிளங்கன்றாய்த் துடிப்பேன் பராபரமே.

பொழிப்புரை :—ஒருவர், என் எண்ணமறியாது வேறாய வொன் றைப் பேசுவாராயின், அந்தோ! நான் சிறு கன்றெனத் துள்ளிப் பதைப் பெய்துவே னென்பது.

குறிப்புரை :—என்னுட்கிடையுணராற் வார்த்தை கேட்ட என் மன மிகவும் பதை பதைத்து அந்தோ! ஆற்றொணாத் துயரெய்து மென்பது நன்குணரற்பாலது. (220)

உஉக. எல்லாரும் மின்புற் றிருக்க நினைப்பதுவே
யல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே.

பொழிப்புரை :—அனைவரும் நன்மைபெற வெண்ணுவதே யன்றி மற்றும் என்மட்டில் மட்டும் சுகத்தை விரும்பி நிற்றல் எனக்கு வழக்க மன் றென்பது.

குறிப்புரை :—சுகப்படும் விஷயத்தில், என் மட்டிலே காரிய மானால் சரியென்று போவது எனக்கு மிகக் கஷ்டமாய்த் தெரிவது இயல்பாயுள்ள தாம். இதனால், முன்னிலையாரும் இன்புற வேண்டு மென்பதாயிற்று. (221)

உஉஉ. முன்னாண் மெய்ஞ்ஞான முனிவர்தவ மீட்டுதல்போல்
இந்நாளிற் காணவெனக் கிச்சை பராபரமே.

பொழிப்புரை :—மெய்ஞ்ஞான முற்ற முனீந்திரர்கள் அந்நாள் தவ மிழைத்தமை போன்று, தற்காலத்திலேயும் எங்கணும் பெரியார்கள் அருந் தவம் புரிதலை யான் பார்த்தற் காசையாம். என்பது.

குறிப்புரை :—அந்நாள் போன்றே இந்நாளினும் எங்கணும் தனித் தவ சீலர்கள் நனித்தவ மியற்றலைக் காண்பான் இச்சையை, மிச்சமாக வுடை யேன் என்பது. (222)

உஉ௩. கன்மமென்ப தெல்லாங் கரிசறவே மெய்ஞ்ஞான
தன்மநிலை சார்ந்ததன்பர் தன்மை பராபரமே.

பொழிப்புரை :—கர்மமானவை யனைத்தும் கொஞ்சமும் ஆசையற்றே உண்மையான தர்ம நிலையைப் பெற்று விட்டது, மெய்யன்பர்களது உண் மைக் குணவிசேஷமாயிற்று.

குறிப்புரை :—இதனால், உண்மையுணர்ந்த மெய்யன்பர் புரியுங் கன்ம மும், அவர்களது தெளிந்த பேரறிவினாலே பற்றிலாத ஞான நிலையை யடைந்தது என்பது வெளியாம்.

அன்பர் தன்மை - மெய்யடியவரது தேறிய தவநிலை யொழுக்காம். (223)

உஉ௪. கண்டுயிலா தென்னறிவின் கண்ணூடே காட்சிபெற
மண்டிய பேரொளிநீ வாழி பராபரமே.

பொழிப்புரை :—ஊனக் கண்ணானது உறங்கப்பெறு என்னறிவகத்தே காணத்தக்க மேலாங் காக்ஷியாய சுயஞ்சோதி வடிவு கொண்டருளிய நீ வாழ்வாய் ! என்பது.

குறிப்புரை :—ஊனக் கண்ணலன்றி ஞானக்கண்ணால், பார்க்க, என் னறிவூடு சோதிமயமாய்த் துலங்கியதறிந்தேன் ; ஆதலின் நீ நீடுவாழ நினையாது நினைத்தேன் என்னெஞ்சகத்தே. என்பதாம்.

மண்டிய - பொருந்திய. பேரொளி - சுயஞ் சோதி. (224)

உஉ௫. நானென தன்மையென்று நாடாம லுடலின்ப
வானாகி நின்றனைநீ வாழி பராபரமே.

பொழிப்புரை : —நான் என்னும் சுபாவத்தை நாடாதொழிந்தே நினையே கதியாக நாட்டங்கொள்ள, நீ சுகாரம்பப் பெருவெளியாகக் காணப்படலாலே நீ நீடுவாழ்வான் வேண்டினன். என்பது.

குறிப்புரை :—என் பரம விரோதியான ‘நான்’ எனும் அகங்காரக் கொடுங் கிழங்கை அறவே அகழ்ந்தெறிந்த பின்னரே, நின் சுயம் பிரகாசப்

பெருவெளி வடிவத்தை யெளியேற்குக் காட்டியருளினமையான், அங்ஙனே நீடுபெற நிற்க வேண்டுதல் புரிந்தனன். 'இன்ப வானுகி' என்பது, பேரின்ப மழை யெனப் பொருளுரைப்பது முண்டு.

நானென தன்மை - நானென்று முன்னிடும் ஆணவப்பேய். (225)

உஉசு. அகத்து டணுவணுவா யண்டமெல்லாந் தானும்
மகத்தாகி நின்றனைநீ வாழி பராபரமே.

பொழிப்புரை :—என்னுள்ளிடத்தே அணுப்பிரமாணமாக விளங்கியும், பின்னர் பல பிரமாண்டங்களாகியும், மற்றும், அளவிடற் கரிய மகத்துக்களாகியுங் காண நீயே நிலைபெற்றுள்ளாய்; ஆகவே, இத்தகைமை வாய்ந்துள்ள தேவரீர் நாளும் வாழ்ந்திடுக என்பது.

குறிப்புரை :—அணு மயமாகியும், பிரமாண்டங்களாகியும், மகான்களாகியும் விளங்கியுள்ள நிலைமை பெற்ற நீயே வாழ்ந்திடுவாயாக வென்பது; அகத்தூடு - பிண்டமாய இச்சரீரத்தினுள்ளாக. (226)

உஉஎ. காரகமாங் கர்ப்பவறைக் கண்ணூடு மென்கண்ணே
வாரம்வைத்துக் காத்தனைநீ வாழி பராபரமே.

பொழிப்புரை—இருட்டறையாகிய கர்ப்பப்பைக்குள் வாழும் போதும் நீ பேரன்பு கொண்டு எளியனைக் காத்தருளினை, அதுகொண்டு நீ நீடூழி வாழ்ந்திடுவா யென்பதாம்.

குறிப்புரை—கொடியகர்ப்பவறைக்குள் அடைப்பட்டு யான் வாழுங் காலத்தும் நீ கருணையோடும் பங்குவைத்துக் காத்தருளி வந்த நின் பேரருள் நனி சிறந்து நாளும் வாழியவே! என்பது.

இதனால் இறைவனது கைம்மாறு வேண்டாக் கருணை நன்கு புலனாயதாம். "கருப்பைக்குண் முட்டைக்குண் கல்லினுட் டேரைக்கும் விருப்புற் றமுதளிக்கும் விமலன்" என்றார் அறிவொழுக்கம் நிறைந்த அறவோர். (227)

உஉஅ. புரந்தோர்தந் தேசமென்பார் பூமியைப் போராடி
இரந்தோருந் தம்மதென்பா ரென்னே பராபரமே.

பொழிப்புரை :—இப்பூமண்டலத்தைக் காத்து வரும் அரசரும் தம்மதென்று கூறுவார்; இவரன்றி அப்பூமியைப் பலவாறுக உழுது பரித்துப் பயிர் செய்யும் உரிமையாளராம் வேளாண் குடிகளும் தங்களதாகக் கூறி வருகின்றனர்; இது என்ன முறைகொண்டதோ! புரத்தல் அரசர் கடமை யென்ப.

குறிப்புரை :—காணப்படும் இம்மண்ணுலகை மன்னர் தம்மதெனவும், உரிமையாளர் தம்மதெனவுங் கூறன் மரபேயாம். இது பழமையான ஓர்வகை உரிமையாகு மென்ப. ஓர்காலத்து இவ்விருவரும் இழந்து போகின்றனர் ; ஆகவே உண்டு பண்ணிய இறைவர்க்கே உரிமை யென்பது புலனுயது. (228)

உஉகூ. மூர்த்தி யெல்லாம் வாழியெங்கண் மோனகுருவாழியருள்
வார்த்தை யென்றும் வாழியன்பர் வாழி பராபரமே.

பொழிப்புரை: —பலவாறுன மூர்த்திகளும் வாழ்க ; எம்மனோர் மௌன குருநாதனும் வாழ்க ; 'திருவருள்' என்னும் திருமொழி எப்போதும் வாழக்கடவது ; இவை முதலியோர்க்குத் தவமியற்றிக் காத்துக்கிடக்கும் மெய்யன்புடையோர்களும் வாழி யென்பதாயிற்று ; ஏன் ? முத்திக்கு ஏற்ற மூலப்பொருளாதல் பற்றி.

குறிப்புரை :—உலகத்திற்கு மோக்ஷம் பிரதான மாதலானும், அதற்கு மூர்த்தி, மௌனகுரு, திருவருள் என்னும் இம் மூன்றுமே அத்தியாவசிய மாதலானும், இவையில் யாதேனும் ஒன்றின்றேல் பேறு வேறாய் முடியு மாதலானுமே மோக்ஷப்ராதான்ய மாயிற்றென லாயதாம். (229)

உஙo. சொல்லும் பொருளுந் தொடரா வருணிறைவிற்
செல்லும் படிக்கருணை செய்தாய் பராபரமே.

பொழிப்புரை :—சொற்பொருள் முதலியன பின் பற்றற் கேதுவில்லாத பரிபூரணத் திருவருட்டன்மையிலே சேறுமாறு எனக்கு நீ கிருபை பாலித்தருளினையே ! ! நின் கருணையை யென் சொலக்கடவேன்.

குறிப்புரை :—சொற்பொருட் கெட்டா சுயம்பிரகாசத் திருவருட் செல்வத்தின்கண் எளியனேயும் சேர்ந்துய்ய திருவருள் பாலித்தருளினையே! இத்தண்ணருணிலையை யென்னென்று கருதி யெவ்வாறு துதிசெய்வேன் ! என்பது. (230)

உஙக. இற்றைவரைக் குள்ளாக வெண்ணரிய சித்திமுத்தி
பெற்றவர்க ளெத்தனைபேர் பேசாய் பராபரமே.

பொழிப்புரை :—இதுகால பரியந்தம் பெருமைகூற வியலாத அட்டமா சித்திகளென்ன, முத்தி மோக்ஷ பதவிகளென்ன இவை பெற்றருளிய பெரியார்கள் எவ்வளவு பேர்களிருக்கலாம் கூறுவாயாக பராபரவஸ்துவே என்பதாம்.

குறிப்புரை :—மிகவும் எளியவனுய யான் நின் திருவடிக் கமலங்களிலடிமைபூண்ட பின்னர் எவ்வளவோ பேர்கள் சித்திகளேயு முத்தியையும் பெற்றுய்ந்தார்களே! நீ யறியாததோ ! (231)

உ௩உ. நாடு நகருநிசா ளூட்டிய பாளயமும்
ஈடு செயுமோ முடிவி லெந்தாய் பராபரமே.

பொழிப்புரை :—அரசர்க்குரிய நாடு நகராதிகளென்ன, கொடி நாட்டப்பெற்ற சேனு சமூகங்களென்ன இவைகளெல்லாம் கடைவழிக்கு உபயலமாயிருந்து பிராணனை இரக்ஷிக்குமோ, ஒருபோதுமில்லை யென்பது விகசிதமாயிற்று.

குறிப்புரை :—சதுரங்க சேனைகளோடுங் கூடிய மன்னர்களானாலும் முடிவு காலத்திலே சிறிதுந் துணைசெய்து காக்க வியலா தென்பதாம். (232)

உ௩௩. தேடுந் திரவியமுஞ் சேர்ந்தமணிப் பெட்டகமுங்
கூட வருந்துணையோ கூறாய் பராபரமே.

பொழிப்புரை :—சம்பாதிக்கப் படுகிற சம்பத்துக்களும், மற்று முண்டான இரத்னபாரணதிகள் வைத்திடும் பெட்டி முதலானவைகளும் அந்திய காலத்திலே வந்து காப்பாற்றிக் கொடுக்குமோ சொல்வாயாக பராபர வத்துவே யென்பது.

குறிப்புரை :—தேட்டஞ் செய்துள்ள சம்பத்துகள் பலவும், பல ஆபரணதிக ளடங்கிய பெட்டிகளும் முடிவு காலத்தில் வந்து உயிர் காத்தலும் உளவாமோ கூறுவாய்? (233)

உ௩௪. தேடாத தேட்டினரே செங்கைத் துலாக்கோல் போல்
வாடாச் சமநிலையில் வாழ்வார் பராபரமே.

பொழிப்புரை :—தேடக்கிடைக்காத் திரவியமாய திருவருட் செல்வத்தைச் சம்பாதித்துள்ள பரம ஞான பக்தர்களாவார் எவர்களோ அவர்களே சமநிலை காட்டும் தராசு போல நிலைபெற்று என்றும் சமநிலையாய் வாழ்வ ரென்பது.

குறிப்புரை :—அழியத்தகும் சம்பத்தொழிந்து அழிவுறா நிலைபேறுள்ள தெய்வ சம்பத்தாய திருவருட் செல்வம் பெற்றவர்களே குறைவிலா நிறைவாழ்வாய் வாழ்வ ரென்பதாம்.

"அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள". —என்றார் பெரு நாவலர். (234)

உ௩௫. நீராய்க் கசிந்துருகி நெட்டுயிர்த்து நின்றேனைப்
பாராத தென்னே பகராய் பராபரமே.

பொழிப்புரை :—தண்ணீராய் மனங்கரைந்துருகி பெரு மூச்செறிந்து நின்றுள்ள எளியனைத் திருவருணோக்கஞ் செய்தருளாமைக்குக் காரணமி யாதோ கூறி யருள்வாயாக என்பது.

குறிப்புரை :—நீர்போற் கரைந்த நெஞ்சுடையேற்கு இதுகாறும் மன மிறங்கி அருணோக்கஞ் செய்தருளாமைக்கு யாது காரணமோ வறிந்திலன் என்பது.

நெட்டுயிர்த்தல் - பெருமூச்சு விடல். (235)

உ௩௬. உள்ளபொரு ளாவியுடன் மூன்றுமன்றேதான்
கொள்ளைகொண்ட நீயென் குறைதீர் பராபரமே.

பொழிப்புரை :—என் உடலுயிர் பொருளான மூன்றையும் அப்போது உவந்து பெற்றருளிய தேவரீர், பிரதியுபகாரமாகவாவது எனக்குரிய மனக் குறையாவையு நிவர்த்திக்கக் கூடாதோ ?

குறிப்புரை :—உடல் பொருளாவி மூன்றுங் கொண்டருளிய எம் மானே ! எளியேன் நின்றிருவருட் காளாகக் கிருபை செய்தருள வேண்டி நிற்கின்றேன் என்பது சாரம். (236)

உ௩௭. ஆழ்ந்தாயே யிவ்வுலகி லல்லலெல்லாந் தீர்ந்தருளால்
வாழ்ந்தாயே யென்றனைநீ வாழி பராபரமே.

பொழிப்புரை :—மாயா கற்பிதமாய இவ்வுலக வாழ்வாம் கடலிடை யழுந்திக் கிடந்தனையே ! இஞ்ஞான்று, நீ பிறவிப் பிணியற்று என் கிருபை பொருந்தி பெருவாழ் வெய்தினையே, யென்றருளினை, நீ வாழ்வாயாக ; என்பது.

குறிப்புரை :—" இதுகாறும் நீ பொய்யுலக வாழ்வில் பொருந்தி நைவுற் றிருந்தாய் ; இப்போது, அதனாலாய துன்பங்களனைத்து மொழிந்து, என் னருளால் நல்வாழ்வுற்று நலம் பெற்றாய்," என்ற நின் திருவருள் வாழக் கடவதாக. என்பது. (237)

உ௩௮. தாரா வருளையெல்லாந் தந்தெனையு நின்னருளின்
வாராயோ வென்றனைநீ வாழி பராபரமே.

பொழிப்புரை :—யார்க்குங் கிடைக்கரிய அருளமுதை யளித்தருளின தன்றியும், அன்பொடும் வாரா, யென்று மருளினை! ஆதலால் நீ வாழி யரோ ! பராபர வத்துவே.

குறிப்புரை :—எவர்க்கும் தரவிசையா நினது திருவருட் பிரசாதத்தை யீந்தருளி, என்னையும் தம்மருளில் வருமாறருளினீர்! இவ்வரிய பிரிய பெருமைக்காக நீ நீடுவாழ்வான் என்று வேண்டினதாயினர். (238)

உ௩௯. ஆசையுன்மீ தல்லா லருளறிய வேறுமொன்றிற்
பாசம்வையே னின்கருணைப் பாங்காற் பராபரமே.

பொழிப்புரை :—நின் திருவருள் சாக்ஷியாக, நினது கிருபா விசேஷத்தினாலே அன்பெல்லாமும் நின்பாலேயன்றி மற்றொன்றினும் பற்றில்லேன் என்பது. (இது உறுதியுரை யாயிற்றென்க).

குறிப்புரை :—இறைவனே! எனக்குரிய பேரன்பெல்லாம் திருவருள் சாக்ஷியாக, நின்னருள் முறையால் தம்பாலேயாம்; மற்றெவற்றினும் பாசமே கிடையா; 'மற்றுப் பற்றெனக் கின்றி' யென்றார் பெரியார். (239)

உ௪௦. ஆதியந்த நீகுருவா யாண்டதல்லா னின்னையன்றிப்
போதனையு முண்டோ புகலாய் பராபரமே.

பொழிப்புரை :—சென்ம முதலாகவே நீயே அடியேற்கு அருட் குருமணியாய் வந்தாண்டருளினை; அங்ஙன மிருக்கிறபோது, நின்னை யன்றிப் பின்னையார் எற்குப் போதிப்பவர்? இல்லையில்லை யெக்காலு மில்லையாம்.

குறிப்புரை :—செனனத்துவக்கமே தேவரீர் தம் திருவுபதேசமாய் வந்திருக்கிறபோது பின்னும் வேறோர் போதனையானது மில்லையாகும் என்பது. (240)

உ௪௧. தானாக வந்து தடுத்தாண் டெனையின்ப
வானாகச் செய்தவின்ப வானே பராபரமே.

பொழிப்புரை :—இயற்கையாக யான் காலங்கடத்தி வருங்கால், தேவரீர் தம் திருக்கருணை தூண்டுதலாலும், தேவரீரே சற்குரு மூகூர்த்தமாய் வந்து பாசக்கடலில் படியா வகையாய்த் தடுத்தாட் கொண்டருளினை; அன்றியும் சுகானுபவத்திற்கு மாளாக்கினை, நீ பரானந்தனை விருந்து கொண்டு என்பது. இது நின் பெருந் தகைமையேயாம்.

குறிப்புரை :—தேவரீர் வலியவந் தாண்டருளி அடிமையைச் சுகானந்த மகாமாரியாகப் பொழிந்தருளிக் காத்த பேரானந்தப் பெருக் கானேய், பராபர வத்துவே! என்பது. (241)

உ௪௨. பற்றற் றிருக்கு நெறி பற்றிற் கடன் மலையுஞ்
சுற்ற நினைக்கு மனஞ் சொன்னேன் பராபரமே.

பொழிப்புரை :—பாச பற்றொழிந்த மெய்ஞ்ஞான மார்க்கத்தைக் கைக்கொண்டு விட்டால், என் மனமானது, சமுத்திரம் என்ன, மலையென்ன காடென்ன இங்கெல்லாந் திரிதரவே யெண்ணுமென்னும் என் கருத்தை தேவரீர்க்கும் கூறினேன். என்பது.

குறிப்புரை :—உலக பாசபந்தந் தொலைந்து நிராசை யேற்பட்டுவிடின், தவத்தைக் குறித்து கடல் மலை வனாந்தரங்களைச் சென்று அங்ஙனே வாசமாயிருக்க நெஞ்சம் நினைவுறும் என்பதை இறைவனே! நீ யறியக் கூறினேன். என்பது. (242)

உ௪௩. படிப்பற்றுக் கேள்வியற்றுப் பற்றற்றுச் சிந்தைத்
துடிப்பற்றார்க் கன்றோ சுகங்காண் பராபரமே.

பொழிப்புரை :—கற்றலோடுங் கேட்டலு மொழித்து, அன்றியும் ஆசா பாசங்களு மகற்றி, மனப்பதைப்பையு மொழித்துப் பரிசுத்தமாயினர்க் கல்லவோ சிற்சுகோதயம் பலிதமாம் என்பது.

குறிப்புரை :—கற்றல், கேட்டல், ஆசையறுதல், மனத்துடிப்பறல் ஆகிய இம் மாசொழிந்த விடத்தில் தான் சிற்சுகோதயம் தோன்றப் பெறுவது நியமமாகு மென்பதாம். (243)

உ௪௪. சத்தாகி நின்றோர் சடங்க ளிலிங்கமென
வைத்தாரு முண்டேயென் வாழ்வே பராபரமே.

பொழிப்புரை :—சுத்த சத்தாம்சர்களது சட சரீரத்தை இலிங்காகார மாகச் சிறப்புச் செய்து வைத்தாரும் உளராவரே! என் பெருவாழ்வாம் பெரிய பொருளே! என்பது.

குறிப்புரை :—மஹாத்துக்களின் சடத்தினை இப்புவிமீது பத்தி சிரத்தையோடும் நெடுங்காலம் நிலைபெறுமாறும் இலிங்கமாச் சமைத்து வைத்து ஆலயமாக்கி வணங்குனரு முளர் என்பது. (244)

உ௪௫. சித்த நிருவி கற்பஞ் சேர்ந்தா ருடற்றீபம்
வைத்த கர்ப்பூ ரம்போல் வயங்கும் பராபரமே.

பொழிப்புரை :—நிருவிகற்ப நிட்டையிற் றேறிய மஹாத்துக்களார் தம் சடவுடலானது, அக்னியிற் சேர்த்த கர்ப்பூர மெப்படியோ அப்படியே சகலமும் சூன்யமாய்ப் போம் என்பது.

குறிப்புரை :—நிட்டாபரர், ஞான யோகியர், மோன தபசியர் ஆகிய இன்னோர்களது உடற்கு முத்தி சித்தியாது தேகம் சடபாவ மெய்துங்கால் அன்னார்தம் சடவுடலும் சூன்யமே யாகு மென்பதாம். (245)

உசசு. ஆதிகா லத்திலெனை யாண்டனையே யிப்பானீ
போதியெனி னெங்கேநான் போவேன் பராபரமே.

பொழிப்புரை :—இறைவ ! நீ அடிமையை அஞ்ஞான்றே யாட்கொண் டருளினையே ! தற்போதென்னைத் தணந்து செல்லென்னில், அடிமை யெங் ஙனஞ் செல்வேன் ! நின்பாலன்றி யாவர்பா லடிமை புகுவேன் ! இது தருமா ? அன்றித் தருமமா ?

குறிப்புரை :—இச்சிறியேன், ஆதியில் தேவரீரது திருவடித் தாமரை களில் வீழ்ந்து நமஸ்கரித்து அடிமைப்பட்டு, நீயும் அபயஞ் செய்தது பொய்க்கலாகாதே ! இது முறையோ ? இங்ஙனம், எளியேனென்று என் னைக் கடத்திவிடின் என்னை யினியெவரும் தொழாரே ! நீயோ, பரம நீதி மானுயிற்றே ! நின் கருணையை யாவர்பாற் செலுத்தியுள்ளீர் ! ஆதரவற்ற அன்பரை யாதரித்தாள்வான் தக்க பரமபதியுமுண்டோ ? எவரு மின்றே ! என்பது. (246)

உசஎ. நாவழுத்துஞ் சொன்மலரோ நாளுதிக்கும் பொன்மல
தேவையுனக் கின்னதென்று செப்பாய் பராபரமே. [ரோ

பொழிப்புரை :—இறைவனே ! தேவரீர்க்கு மிகவும் இனியனவாயது அடியர் புனைந்து அன்பாற் சாத்தும் சொன்மாலையோ ? அதுவன்றி நித தினமும் புஷ்பிக்கும் நறுமணமலர் மாலையோ புகல்வாய் என்பது.

குறிப்புரை :—இறைவ ! நின்னடியர், தம் நாவால் புனைந்தேத்திச் சாத்தும் திருவருட் சொன்மாலையில் பிரியமா ? அன்றிப் பொன்மாலையிற் பிரியமா ? மற்றும் பொன்மாலைபோன்ற பூமாலையிற் பிரியமோ ? இவை களில் நினக்குப்பக்ஷமுள்ள தின்னவை யெனத் தெரிவித்தருள்வாயாக வென்பது. (247)

உசஅ. கன்னறரும் பாகாய்க் கருப்புவட்டாய்க் கற்கண்டாய்
இன்னமுதா யென்னு ளிருந்தாய் பராபரமே.

பொழிப்புரை:—கரும்பின் பாலைக்காய்ச்சப் பெற்ற இனியபாகைப் போன்றும், கரும்பு வெல்லமொத்தும், கற்கண்டை யொத்தும், மற்றும் தேவாமிர்தம் போலவும் எனது இதயமீது குடிகொண்டிருந்தனையே ! கன் னல் - கரும்பு. கருப்புவட்டு - கரும்பின் வெல்லம்.

குறிப்புரை :—இறைவ ! நீ யென்னிதயாம்பர மீதிருந்தருளியபோது என்னுடலெலாம், உயிரெலாம், உள்ளகமெங்கனும் தேன், பால், சர்க்கரை கற்கண்டென்னு மிவைபோன்றினித்து வந்ததே ! (248)

உசசு. சிற்பரமே தற்பரமே தெய்வச் சுருதிசொன்ன
அற்புதமே யன்பே யறிவே பராபரமே.

பொழிப்புரை :—ஒப்பற்ற ஞான பரம்பொருளே! தானாகவுள்ள தனிப்பரம்பொருளே! தெய்வமறை துதிக்கும் பேரதிசயப்பொருளே! இடையறாப்பேரன்பு சொரூபனே! மெய்யறிவே! என்பது.

குறிப்புரை :—இறைவனே! நீ உண்மையான ஞானபரவஸ்துவாயும், தானாயமைந்த தனிப்பரஞ்சுடராயும், வேதம் விளம்பியருளிய அதிசயப் பொருளாயும், அன்பொடும் பொருந்தாநின்றவறிவு மயமாயு முள்ள முழு முதற் பரசிவம் யென்பதாம். (249)

உருo. அறிவிப்பா னீயென்று லைம்புலன்க டந்தந்
நெறிநிற்பார் யாரே நிகழ்த்தாய் பராபரமே.

பொழிப்புரை :—என்னிதய மீதமர்ந்தருளி யெனக்கானவையை யவ் வப்போதும் தெரிவித்து வருந்தேவனாக நீயுள்ளாயாயின், ஆண்டுள்ள ஐம் புலாதிய அவவையும் வெறுத்தொதுக்கி மேன்மைசால் ஞானமார்க்கத்துள் ளார் இன்னாரெனக் கூறுவாய் நீயே என்பது.

குறிப்புரை :—என் நெஞ்சகத்திருந்து வஞ்சமிலாது சகல விஷயத்தை யும் அறிவூட்டிவாராநின்ற பேரறிவாளன் தானேயானால், ஐந்தாசையகற்றி நன்னெறி கடைப்பிடித்து நிற்பவர் இன்னாரென்பதைப் பற்றிச் சற்றே யெடுத்துரைப்பாய்? (250)

உருக. அந்தக் கரணமெனு மாகாத பேய்களெனை
வந்து பிடித்தாட்ட வழக்கோ பராபரமே.

பொழிப்புரை :—இறைவ! என்னுள்ளகத்திலங்கும் அந்தக்கரணங்க ளாகிற மனம் புத்தி சித்தம் அகங்கார மென்கின்ற நால்வகைப் பிசாசங் களும் இவ்வெளியேனைப் பற்றித் துன்புறுத்தலும் நியாயந்தானோ? நீயே யோசிப்பாயாக.

குறிப்புரை :—அந்தக்கரணங்களான விரோதிகளாம் பைசாசாதிகள் என்பாலிருந்து கொண்டு என் சொல்வழி யேகாது தன்வச மென்னை யீர்த் துத் தடுமாறச் செய்தலும் தக்கதாமோ? (251)

உருஉ. ஐவரொடுங் கூடாம லந்தரங்க சேவைதந்த
தெய்வ வறிவே சிவமே பராபரமே.

பொழிப்புரை :—இறைவ ! யான் ஐம்புலநுகர்ச்சியாம் சப்த ஸ்பரிச ரூப ரஸ கந்த மென்னும் இவைகளோடும் சேராவண்ணமாக்கி எவருமறியாமே அதியிரகசியமாகத் தரிசனங்கொடுத்தருளிய தெய்விக விவேகவிளக்கமே ! பரசிவமே ! பரவத்துவே !

குறிப்புரை :—எம்மானே! ஐம்புலக் கதவடைத்து அதியிரகசியமாக நின் பரம தரிசனமாம் சாக்ஷாத்காரத்தைக் காட்டியருளிய தெய்வஞானமே ! ஒப்பற்ற பரசிவமே ! என்பது. (252)

உருங. அருளாகி நின்றசுக மாகாம லையோ
இருளாகி நிற்க வியல்போ பராபரமே.

பொழிப்புரை :—இறைவ! திருவருள் வசப்பட்டு பரானந்த நிலை பேறடையாமே அந்தோ ! அஞ்ஞானமயமாம் பேரிருள்வசமா யிருந்து துன்புற்று வருதலும் எளியேற்குப் பொருந்துமோ ?

குறிப்புரை :—அடிமை நின்றிருவருட்டன்மையைச் சார்ந்துய்யாமே சுகாரம்பமு மின்றி மாயா சகிதமாயிருந்து துன்ப சாகரத்தாழ்ந்து வரலும் எனக்கு யேற்றது தானோ ? என்பது. (253)

உருச. அன்பரெல்லா மின்ப மருந்திடவும் யானொருவன்
துன்புறுத லன்றோநீ சொல்லாய் பராபரமே.

பொழிப்புரை :—இறைவ ! நினது மெய்யடியவர் யாவர்களும் நின்னருட் சுகமெய்தி வாழவும், யான் பாவி வீணை துன்பெய்தி வரலும் நின்பேரருளாண்மைக்கு நீதியோ சொல்லி யருள்வாயாக. என்பது.

குறிப்புரை :—ஐயனே ! நின் அன்பர்கள் திருவருட் பிரசாதம் பெற்றுச் சுகானுபவிகளாகவும், யான் அவர்களைப் பார்த்து ஏமாந்து, துன்பமனுபவித்து வரலும் நலமாகுமோ நீ கூறுவாய் என்பது. (254)

உருரு. சந்ததமு நின்கருணை சாற்றுவதல் லால்வேறு
சிந்தையறி யேனுன்றன் சித்தம் பராபரமே.

பொழிப்புரை :—இறைவ ! எந்த நேரத்தும் நின் கருணாகரத்துவத்தைப் பற்றி மிகுதியும் புகழ்ந்து கொண்டாடலன்றி வேறெவ்விஷயாதிகளையும் பற்றிச் சிறிதும் சிந்தை செய்யேன் ; மேலே நின் கிருபை யெப்படியோ அப்படியே !

குறிப்புரை :—சதா சர்வகாலமும் நினது காருணிய காரிய மகிமாவைப்பற்றிப் பேசிவரலே யல்லாது, மற்றோர் விஷயத்திலும் சிந்தை செல்வ

இல்லையாம்; ஆகவே, நின்றிருவுளக்குறிப் பெப்படியோ அப்படியே! என்பதாம். (255)

உருசா. நானு னெனக்குளறு நாட்டத்தா லென்னைவிட்டுப்
போனாலு முன்னைவிட்டுப் போகேன் பராபரமே.

பொழிப்புரை :—நான் நான் என்று அகங்கரிக்கின்ற ஆணவக் குளறுபடை நோக்கி, நீ எனைக் கைவிட்டகலினும், யான் தேவரீர்தம் திருவடித் தரிசனத்தையும் ஊழியத்தையும் விட்டு வேறிடஞ்செல்லேன் என்பது நிச்சயமே.

குறிப்புரை :—இறைவ! நீ எனது கீழ்மையைக் குறித்துக் கைவிட்டு விட்டாலும், யான் நின் பெருவாழ்வைக்குறித்து நின் பாத தாமரையின் கண் வீழ்ந்து கிடத்தலைத்தவிர்த்து பிறவிடஞ் செல்லுவதில்லையே! என்பது. (256)

உருஎ. இக்காயம் பொய்யென்றோ ரீட்டத் துனக்கபயம்
புக்காதா ருண்டோ புகலாய் பராபரமே.

பொழிப்புரை :—இம்மானிட சரீரம் அநித்தியத்தவ முற்றதெனை நன்குணர்ந்த சான்றோர் வகுப்பினுளே, நீயே சர்வ சக்தி வாய்ந்த முழுமுதற் கடவுளெனத்தெரிந்து நின்னடிக் கமலங்களுக்குச் சரணாகதி பெறாதவருமுளராவரோ! கூறுவாயாக.

குறிப்புரை :—ஆன்மாக்களுள்ளே, இவ்வுடம்பு கேவலம் அழிவுள்ளது எனத் தெரிந்து இதனிடத்தும் இதோடுங்கூடி வாழ்கின்ற வாழ்வும் அத்தகைத்தே யெனத்தெரிந்து வெறுத்துள்ள மேதாவியர் கூட்டத்தார் எவரும் நினக்கு அடைக்கலம் புகாமலிருக்க மாட்டாரென்பது நூற்றுணிபாம். ஈட்டம் - கூட்டம். (257)

உருஅ. தானுதல் பூரணமே சாருமிட முண்டுயிரும்
வானுதியு மொழுங்காய் மன்னும் பராபரமே.

பொழிப்புரை:—ஆகாய முதலாயுள்ள சகல பூதங்களோடும் இடையறாமல் பொருந்தி நிற்றலான சர்வ வியாபகத்துவமுள்ள நேர்மையாய பரம்பொருளே! என் ஆன்மாவானது தானுயுள்ள சர்வ பரிபூரணத்துவத்தைச் சார்ந்து வாழுமென்பதிலேய மின்றாம்.

குறிப்புரை :—இறைவ! நீ சகலபூதமயமாய் அமைந்து வியாபகமாயுறுங்கால், யான் நின் பரிபூரணும்சமாம் தனி நிலைக்கண் சார்பாய் வாழ்ந்து வருவேன் என்பது. (258)

உருகூ. உன்னுமனங் கர்ப்பூர வுண்டைபோ லேகரைய
மின்னுமா னந்த விளக்கே பராபரமே.

பொழிப்புரை :—எவற்றையுஞ் சிந்தைசெய் நெஞ்சமானது கர்ப்பூரக் கட்டிபோன்று கரைந்து சூன்ய நிலை பெறுமாறு பிரகாசியா நின்ற பேரானந்தத் தீபம் போன்றாயே!

குறிப்புரை :—நினைத்தற் றொழிலியற்றும் நெஞ்சம் கர்ப்பூர நிகர்த்துக் கரைந்துபோதற் கென்றே தீபம் போன்று ஆனந்தமாய்ப் பிரகாசியா நிற்கின்ற நின்னிலையை யாவரோ வறியாதார்? ஆனந்தவிளக்கு - பரானந்த சோதியாம்.

(259)

உசாO. நாட்பட் டலைந்த நடுக்கமெல்லாந் தீரவுனக்
காட்பட்டுந் துன்பமெனக் காமோ பராபரமே.

பொழிப்புரை :—பலநாளாக யான் நின்னருட் பிரசாதத்தின் பொருட்டே யலைந்து நடுக்குற்ற துன்ப மெலா மொழியுமாறே தேவரீர்க்கு அடைக்கலம் புகுந்துள்ளபோதும், என்னைத் துன்பாதிகள் வந்தடைய நியாய முண்டோ ? என்பது.

குறிப்புரை :—நீண்டகால முதலாக நின்னருளைக் கருதி யலைந்தலைந்து துன்புற்ற தொழிவான் வேண்டி நின்னையே பின்பற்றி அடிமை புகுந்தும், மீண்டும் யான் துக்கத்துக்காளாதலுக்கு நியாயமுமுண்டோ கூறுவாயாக. இல்லை யென்பதேயாம்.

(260)

உசாக. பாவிபடுங் கண்கலக்கம் பார்த்துமிரங் காதிருந்தால்
ஆவிக்குறு துணையா ரையா பராபரமே.

பொழிப்புரை :—ஐயனே ! பாவியாயுள்ள யான், சுகானந்தப் பெரும் பேற்றைக் கருதியடைந்துள்ள துக்கத்தை நீயறிந்தும், இரக்க மென்ப தில்லாது போயின், என்னுயிர்க்குற்ற துணை நின்னையன்றி வேறெவரோ ! கூறுவாய் என்பது.

குறிப்புரை :—இந்த மகா பாபிஷ்டனை யான் அநுபவித்துவரும்! துக்கத்தைப் பார்த்தும் பாராதார் போன்றிருந்துவரின், எளியனை யான் ஈடேறுமாறு என் உயிர்க்கு உயிராயிருந்து துணைபுரிவார் வேறியாவர் ஐயனே ! என்பது.

(261)

உசாஉ. நின்னிறைவே தாரகமாய் நின்றுசுக மெய்தாமல்
என்னிறைவே பாவித்தே னென்னே பராபரமே.

பொழிப்புரை :—இறைவ ! நினது ஒப்பற்ற பரிபூரணத்தையே யான் முக்கிய யேதுவாக் கொண்டு அநுபூதி செய்து பெரும்பயனடைதலின்றி, என் மனங்கொண்ட நிறைவையே கடைப்பிடித்துக் கிடந்து விட்டேன், ஈதென்ன !

குறிப்புரை :—உனது பூரணத்துவத்தைப் பூரணமாக் கொண்டு சுகப் பேறெய்தலின்றி, என் மனப்பூரணத்தையே நோக்கி வீணே கெட்டேனே! இதுவும், என் பேதமையையே விளக்குகின்ற தென்றையே ! (262)

உசா௩. நின்னைச் சரண்புகுந்தா னீகாக்கல் வேண்டுமல்லால்
என்னைப் புறம்விடுத லென்னே பராபரமே.

பொழிப்புரை :—இறைவனே ! யான் பாவியேன், தேவரீர்தம் திருவடிக்குச் சரணாகதி யடைந்தேனுனல் நீயே எனைக் காப்பாற்றி யருள வேண்டுவது நியாயமாயிருக்கிறபோது, அங்ஙனம் புரிந்தருளாது எளியேனைப் புறம்போக விடலும் நினக்கு நீதியாமோ ?

குறிப்புரை :—நின்திருவடிக்கண் அடைக்கலப்பட்ட எளியேனைக் காத்தருளாமே புறஞ்செல்ல விடலும் பேரருளுக்குப் பெருமையன்றே ! என்பது. (263)

உசா௪. மாறாத துன்பமெல்லாம் வந்துரைத்தா னின்செவியில்
ஏறாத வாறே தியம்பாய் பராபரமே.

பொழிப்புரை :—இறைவ ! நீங்கப்பெறாத என் துயரமனைத்தும் நின்னருட் சமுகத்தின்கண் தாழ்ந்து விண்ணப்பித்து மிருக்கிறபோது, இவ்வேழை குறை நின்திருச்செவிக்கே யேறா திருத்தலும் என்ன காரணமோ சொல்வாயாக ?

குறிப்புரை:—இப்பேதைபடும் பாடனைத்தும் பெருஞ் சமுகத்தில் பேயினேன் வாயினுல் பிதற்றி யுரைத்தும் காதுகொடாது மவுனமாயிருத்தலும் தருமமாமோ கூறாய் ! என்பது. (264)

உசா௫. விஞ்சுபுலப் பாடனைத்தும் வீறுதுன்பஞ் செய்யவந்த
அஞ்சுபுல வேடருக்கு மாற்றேன் பராபரமே.

பொழிப்புரை :—உத்தம நெறிக்கட் செல்வான் வேண்டி புலாதிகள் பட்ட அரும்பாடாகிய தபோஞானங்களை யெல்லாம் பாழ்படச் செய்யவந்த ஐம்புல வேடர்க்கு மினியான் ஆற்றவிசைந்தில னென்பது.

குறிப்புரை :—என் புலாதிகள் என்னறிவின்வழி நின்று பாடுபட்டுள்ள நற்றவமார்க்கங்களை யெல்லாம் கெடுத்துவரும் விரோதிகளான புலவேடர்க்கு இனியான் ஆற்றகில்லேன் என்பது. (265)

உசகு. கன்னங் கரியநிறக் காமாதி ராக்ஷசப்பேய்க்
கென்னையிலக் காகவைத்த தென்னே பராபரமே.

பொழிப்புரை :—மிகக் கருமை வாய்ந்துள்ள காம முதலான அறுவகை விரோதிகளான இராக்கதப் பிசாசர்களுக்கு எளியேனை யீடுபட வைத்திட்டது என்ன காரணமோ யானறிந்தில னென்பது.

குறிப்புரை :—கருநிற வரக்கராம் பேயினங்களான காமக் குரோதாதிய தீயர்க்காகவோ வெளியனை யிலக்கா யமைத்து வைத்தருளியது ? ஈதென்ன ஆச்சரியமாயிருக்கிறதே ! (266)

உசஎ. சித்திநெறி கேட்டல் செகமயக்கஞ் சென்மமற
முத்திநெறி கேட்டன் முறைகாண் பராபரமே.

பொழிப்புரை :—அட்ட சித்திகளையும் சித்திபெற ஒருவன் கேட்டலானது இவ்வுலகிற்குத் தம்பால் மயக்கத்தையே தருவதாகும் ; ஈதன்றி, பிறவிக்கடல் கடப்பான் வேண்டின் மோக்ஷ நெறியாம் ஞான மார்க்கத்தில் நிற்கக் கேட்டலே முறை யெனப்படு மென்க.

குறிப்புரை :—இதனால், அட்டசித்தியானது உலகர் மயக்கத்தையும், முத்தியானது மோக்ஷ மெனும் பிறவி வேரறும் பெரிய நிலையையுங் கொடுத்தருளான் அதுவே முறையென்றனர். (267)

உசஅ. சிந்தை சிதையச் சிதையாத வானந்தம்
எந்தவகை யாலேவந் தெய்தும் பராபரமே.

பொழிப்புரை :—சிந்தனைகெட்டும், கெடக்கூடாத பரானந்தமானது எளியன்பால் வந்து பொருந்துதலானது எவ்வகையாலோ வென்பது.

குறிப்புரை :—மனமிறந்து, என்றும் இடையறாத பரானந்த வெள்ளமானது என்பால் எவ்வாறு வந்து கிடைக்கப் பெறுவேனோ ! (268)

உசக. கூர்த்தவறி வாலறியக் கூடா தெனக்குரவன்
றேர்த்தபடி தானே தெரிந்தேன் பராபரமே.

பொழிப்புரை :—கூர்மையான பேரறிவினாலே அறிதற்கியலாதெனத் தேசிகோத்தமன் முன்னர் தெரிவித்தருளியவாறாகவே இயல்பாய்த் தெரிந்து மாறலாயினேன் என்பது.

குறிப்புரை :—"கூர்த்த மெய்ஞ்ஞானத்தாற் கொண்டுணர்வார் தங் கருத்தி னுக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே" என்று மணிவாசகர் தம் திருவாசகத்தில் ஓதியவாறாகவே கூர்த்த வறிவால் அறிய வியலாதென ஆசிரியர் ஓதினமையும் இசைந்தோர் கருத்தாயமைந்தமை யறிந்தாம். (269)

உஎ0. பத்த ரருந்தும் பரமசுகம் யானருந்த
எத்தனைநாள் செல்லு மியம்பாய் பராபரமே.

பொழிப்புரை :—இறைவ! நின் மெய்யன்பர்கள் அடைந்தனுபவித்து வருகின்ற பரானந்தப் பேற்றை இவ்வடிமையும் பெற்றுய்தற்கு எவ்வளவு காலமாகும் கூறுவாயாக என்பது.

குறிப்புரை :—சுத்த ஞானச் சிவனடியாராம் தம்முரிமை யன்பர்கள் அநுபூதிசெய்து வரும் சிற்சுகோதயத்தினை எளியேனாகிய யானு மநுபூதி செய்துய்ய வேண்டுமானால் அதற் கெவ்வளவு காலந் தாழ்க்கவேண்டுமோ கூறுவாய். (270)

உஎக. நிரத்தி றற்றுறவு சேராம லிவ்வுலகிற்
பாரத்தனம் பேசல் பண்போ பராபரமே.

பொழிப்புரை :—மனோசக்தியினாலேனும், அன்றி யறிவின் திடத்தினா லேனும் ஆசையகற்றி மெய்த்துறவு பெறாமே, இவ்வுலகத்திலிருந்து கொண்டு வீணே படாடோபமும் வாசாலமும் பேசிவரின் அதனால் யாதேனும் பய னுண்டோ ? என்பது.

குறிப்புரை :—உத்தம நூலுணர்ச்சியானும், மெய்த்தவர்தம் நேசத்தா லும் பத்தி வைராக்கியத்தானும் பாசபந்தமறுத்து மெய்த்துற வாச்சிரமம் பெறாமே வீண் வாதம் பேசி நாண் முழுதும் போக்கும் நிலைமையில் என்னோ பயனென லாயினர். (271)

உஎஉ. இந்த வெளியினையுண் டேப்பமிடப் பேரறிவாத்
தந்தவெளிக் கேவெளியாய்ச் சார்ந்தேன் பராபரமே.

பொழிப்புரை :—இச்சாதாரண பூதாகாயத்தைப் பெற்றிருந்து ஏப்ப மிடுமாறு மிக்க விரிவான பராகாயத்தின் கண்ணே வெளிப்படையாகச் சேர்ந்து வாழ்கின்றேன் என்பது.

குறிப்புரை :—சூக்குமாகாய மாய பூதாகாயத்தை யுள்ளிட்டு அதனால் யேப்பமிட்டதன் பின்னர் மெய்ம்மையான ஞானகாயத்தினைப் பின்பற்றி அதைச் சார்ந்து வாழலாயினே னென்றபடி. (272)

உஎங. உணர்த்து முனைநாடா துணர்ந்தவையே நாடி
இணக்குறுமென் னேழைமைதா னென்னே பராபரமே.

பொழிப்புரை :—உண்மைகொண்டு அறிவிக்கின்ற நின்னைக்கண்டு களிக்க யான் நாடுதலின்றி, அஞ்ஞானத்தால் ஏற்கனவே நாடியிருந்த நாட்டத்தையே மீண்டும் நாட்டுவித்த எனது பேதையறிவின் பேய்த் தன்மையை யென் சொல்வேன் ! என்பது.

குறிப்புரை :—இறைவ ! நீ என்னுள் ளமர்ந் துணர்த்துவிக்கும் நின்னைக் காணிக்கும் வகை யின்ன வென்றறிய வியலாது, முன்னமென் சுட்டினால் சுட்டியறிந்த சுட்டையே யின்னமுஞ் சுட்டிப்பார்த்திருக்கும் ஏழையறிவின் திடமின்மை யென்னே ! என்பது. (273)

உஎச. உண்டுபோ லின்று முலகைத் திரமெனவுட்
கொண்டுநான் பெற்றபலன் கூறாய் பராபரமே.

பொழிப்புரை :—எப்போது முள்ளதுபோலக் காணப்பட்டு நாளை யில்லாதழிந்து போகின்ற இந்த வுலகத்தை யான் நிச்சயமென வெண்ணி இதிலிருந்து வாழ்ந்து வந்து அடைந்த நன்மை யின்ன தென வுரைப்பாய் என் அப்பனே !

குறிப்புரை :—நித்தியமாகவே யெண்ணப்பட்டு, பின்னர் அழியத்தக்க இம் மண்ணுலகத்திருந்து இதுகாறும் வாழ்ந்ததை நினைக்க, யேதுமின்றித் தாழ்ந்ததாயிற்றே யன்றி மற்றொன்றுமில்லை யென்பது மிகவுந் தெளிவாயது. என்பது.

" நெருந லுளனொருவன் இன்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு "—என்றார் வள்ளுவனார்.

உலகம் தோன்றி நின்று அழியுங் காரியமாயுள்ளது. (274)

உஎரு. உள்ளபடி யாதுமென வுற்றுணர்ந்தே னக்கணமே
கள்ளமனம் போனவழி காணேன் பராபரமே.

பொழிப்புரை :—எவையும் இறைவன் ஆணைப்படி உள்ளது போலவே தான் ஆகுமென்று வோர் சமயத்தில் தெளிவுற்று தீர்மானித்திருந்தனன் ; அந்த க்ஷணத்திலேயே, கபட நெஞ்சமானது, தன்னிலை தவறி நாணமுற்று மறைவெய்தியது.

குறிப்புரை :—நமக்காவன வனைத்தும் திருவுளச் செயலாகு மல்லால் நம்செயலாகா வெனக் கண்டறிந்தேன் ; அடுத்த நேரத்திலேயே மனம் மாயக்கண்டனன் என்னிறைவனே ! என்பது. (275)

உஎசு. சித்த மவுனஞ் செயல்வாக் கெலாமவுனஞ்
சுத்த மவுனமென்பாற் றோன்றிற் பராபரமே.

பொழிப்புரை :—இறைவ ! என்பால், அகமும் புறமும் ஒத்ததான சுத்த மவுனநிலை பொருந்தியிருக்குமாயின், சித்தம், செயல், வாக்கு முதலிய வனைத்தும் சதா மவுனமாயே யமர்ந்துவிடு மென்பதிற் சிறிதும் ஐயமில்லை யென்க.

குறிப்புரை :—ஒப்பற்ற மகா மவுனம் எனக்கமைந்து விடுமாயின் அப் போதே கருவி கரணாதியனைத்தும் மோன முறுமென்க. இதனால் கருவி கரணாதியன வோய்ந்தவிடமே ஞானேயமாம். (276)

உஎஎ. எண்ணில் பலகோடியுயி ரத்தனையோ வத்தனைக்குங்
கண்ணிற் கலந்தவருட் கண்ணே பராபரமே.

பொழிப்புரை :—உற்று நோக்கி யுணரும்போது, அநேக கோடியான் மாக்களெவ்வளவோ அவ்வளவினதாய ஜீவாத்மாக்களினது கண்ணுள் மணி யாய்க் கலந்து கொண்டிருக்கின்ற திருவருணேத்திர மாயுள்ளாயே !

குறிப்புரை :—இதனால், எல்லா வான்மாக்களினும் கண்களில் ஜீவ மணியாய்க் கலந்துள்ளவ னிறைவனென்பது சித்தாந்த முறையாயிற் றென்பாம். (277)

உஎஅ. எனக்கினியா ருன்போலு மில்லையென்றால் யானும்
உனக்கினியா னாகா வுளவேன் பராபரமே.

பொழிப்புரை :—நின்னைப்போன்றார் எளியேற் கெவருமில்லையேல், மற்றும் யான், நினக்கு இனிமைய னாகாதிருக்கிறவோர் தந்திர வுளவுமியாது கொலோ வறிந்திலனே !

குறிப்புரை :—எனக்கு உன்போன்றார் எவருமில்லை ; ஆகவே, யான் நினக்கு இனியனாகாதிருக்க வேண்டிய சூக்கும தாந்திரீகமியாது ? (278)

உஎகூ. அண்டபிண்டங் காணே னகமும் புறமு மொன்றாக்
கண்டவென்னை நீகலந்த காலம் பராபரமே.

பொழிப்புரை :—உட்புறமும் வெளிப்புறமும் யேக பரமா யான் கண்ட அந்தசமயத்திலே நீ எனைக்கலந்தாண்டாய் ; ஆனால், அதன் பின்னர் அண்டபிண்டமாதியன கண்டிலேன் என்பது.

குறிப்புரை :—நான், நானா யிருந்தவரையில் அண்டம், பிண்டம், மற்றனைவனைத்தும் பேத முறையைக் கண்டிருந்ததன்றி, யான் தானாயுங் கலப்புற்ற பின்னர், அனைத்தும் பரவெளியாய்த் தெரியலாயின வென்பது இதனுண்மை யென்க. (279)

உ அ0. எத்தனையோ கோடி யெடுத்தெடுத்துச் சொன்னாலும்
சித்த மிரங்கிலையென் செய்வேன் பராபரமே.

பொழிப்புரை :—என் இறைவனே ! நின் திருவருட் சமுகத்திலே இவ்வேழைச் சிறுமதியேன், கோடிக்கணக்காக யெத்தனையு மெடுத்துக் குறையிரந்தும், அத்தனையுங்கேட்ட நின் சித்தமிரங்கிலையே ! யானிதற்கென் செயக்கடவேன் ! என்பது சாரம்.

குறிப்புரை .—இறைவ இச்சிறுமதியேன், என் குறை யெல்லாம் எவ்வளவோ யெடுத்தெடுத்து அடுத்தடுத்துக் கூறியிரந்தும், தேவரீர்தம் திருவுளவிலாசத்திலே தயவென்பதே தோன்றக் காண்கிலனே ! இன்னமும் என்ன சொல்வேன் எனையனே என்பது. (280)

உ அ௧. அன்றந்த நால்வருக்கு மற்புதமா நீயுரைத்த
தொன்றந்த வார்த்தையெனக் குண்டோ பராபரமே.

பொழிப்புரை :—அக்காலத்திலே தேவரீர் அருட்குரு மூர்த்தமாகக் கல்லாலின் கீழிருந்து நால்வர்களுக்கும் கருணையோடும் உபதேசித்தருளிய அதியற்புத மொழியுண்டே, அத்திருமொழி யொன்றை, இன்றெனக்கு மெடுத்தோத யெழில் கருணை நினக்கு முளவாமோ யென்பதாம்.

குறிப்புரை :—முற்காலத்திலே சனக, சனந்தன, சனாதன, சனற்குமாரரென்னும் நான்கு பரம பக்தாளுக்கும் வெகு பக்குவ முறையாகவும், ஆச்சரியப்படத்தக்கதாகவும் சொல்லாமற் சொல்லியருளிய ஓர் ஒப்பற்ற பரம ஞான நிலையினை இப்போது இவ்வெளியேற்கும் ஓதியருளத் திருவுளமுண்டோ வென்று வினவினர். ஏன் ? "அவ்வொரு மொழியாந் திருமொழியானுல கடங்கு" மாதலினென்க. (281)

உ அ௨. அப்பனென்று மன்னையென்று மாரியனென்றும் முனை
செப்புவது முன்னிலையின் சீர்காண் பராபரமே. [யே

பொழிப்புரை :—இறைவ ! நின்னையே பிதாவாகவும், மாதாவாகவும், அன்றிப் பரமாசாரியனுகவும் அழைத்திடுந் தன்மையானது தேவரீர்தம் திவ்ய அருட்டன்மையினுலேயே யென்பது நன்கு புலனும்.

குறிப்புரை :—இறைவனே ! நின்னை, மெய்யன்பராயினோர்கள், தம் பேரன்பினுலே அரிய பரம பிதாவென்றும், கருணை கொண்டருளிய நாலாயிரந்தாயில் நற்றுயென்றும், தண்ணருள் கொழிக்கும் தயாபர சற்குரு மூர்த்தி யெனவும் வாய்நிரம்ப வழங்கி யழைத்தலும் நின் பேராற்றற் பெருந் தகைமையா னென்பதாயிற்று என்பது. (282)

உஅங. கட்டுங் கனமுமந்தக் காலர்வரும் போதெதிர்த்து
வெட்டுந் தளமோ விளம்பாய் பராபரமே.

பொழிப்புரை :—ஒருவர்க்குரிய பந்துக்கட்டும் மதிப்பும் இயமதூதர் நெருங்கும்போது அத்தூதுவர்களை யெதிர்த்துப் போர்புரிந்துவிட யேதுவாம் தண்டு தளமாகுமோ வென்பதாம்.

குறிப்புரை :—உலகத்தார் சனக்கட்டென்றும், மனைக்கட்டென்றும், பணக்கட்டென்றும் இப்படி பலவாறுகப் பந்துக்கட்டா யிருந்து வருவதெல்லாம், முடிவுகாலம் வரும் அந்தகனை வந்தவழி திருப்பும் வாட்படை வகுப்பாளராவரோ கூறுயென்பது சாரம் என்பது. (283)

உஅச. பேசாத மோனநிலை பெற்றன்றோ நின்னருளாம்
வாசாம கோசரந்தான் வாய்க்கும் பராபரமே.

பொழிப்புரை :—வாய்பேசலற்று, சுத்த ஞான வெல்லையாகிய மவுனம் வாய்க்கப்பெற்ற பரம துறவாச்சிரமிய ரெவரோ அவர்களே மனவாக்குகளுக்குக் கெட்டாத பெரும்பேறும் திவ்ய திருவருணிறைவு எய்தப் பெறலா மென்பதாம்.

குறிப்புரை :—இதனுல், சர்வசங்க பரித்தியாகிகளாய் சந்நியாச ஆச்சிரமமுற்று, இறைவன் பற்றன்றி வேறெப்பற்று மற்ற மகா மோன விரதியர்க்கே தெய்வத் திருவருட் பிரசாதம் கிடைக்கப்பெறு மென்பது திண்ணமாயிற்று என்பது. (284)

உஅரு. கற்றுலுங் கேட்டாலுங் காயமழி யாதசித்தி
பெற்றுலு மின்பமுண்டோ பேசாய் பராபரமே.

பொழிப்புரை :—அறிவுநூல்களைச் சந்தேக விபரீதமறக் கற்றறிந்தாலும், அன்றி யொருவர் செவியறிவுறுத்தக் கேட்டினும், இச்சரீரமானது

அழிவுறாதபடி காயகற்ப மருந்தருந்தி நீண்டகால பரியந்தம் இவ்வுடலோடே யிருந்து வாழினும், பெறுதற்கரிய பரானந்த சுகமு முளவாமோ? உண்டாகா வென்பதாம்.

குறிப்புரை :—கசடறக்கற்றுங் கேட்டும், சாவாமருந்துண்டு உடலைக் கெட்டிபண்ணிக் கொண்டாலும் ஒப்பரும் யோக சித்தியாலாய ஆனந்தாஸ்பத சிற்சுகோதய முண்டாதலு முண்டோ? இல்லை யென்பது பரம தீர்மானமாகும். (285)

உ அ௬. கண்டவடி வெல்லாங் கரைக்கின்ற வஞ்சனம்போல்
அண்டமெல்லா நின்னருளே யன்றோ பராபரமே.

பொழிப்புரை :—அஞ்சனமானது, தன்னைச் சார்ந்தாரை நீராளமாகக் கரையச்செய்துவிடல் சுபாவம்; அதேபோன்று, இங்கே அண்டத்துட் பட்டுள்ள சகல சராசரங்களும் நினது திருவருளாக்கத்தானே விளங்கி வாழலாயின வென்பது.

குறிப்புரை :—அஞ்சனமையானது, தான் பற்றியவை யெவையோ அவைகளைச் சூன்யமாக்குவது போன்று நின்பேரருள் வெளியுளே அகப்பட்டுள்ள நாமரூபப் பிரபஞ்ச மனைத்தும் "இறைவன் பேரருள் பிறங்கியுள்ள" தென்பதாயிற்று என்பது. (286)

உ அ௭. தன்செயலா லொன்றுமில்லை தானென்ற ஞன்பாவி
நின்செயலாய் நில்லா நினைவேன் பராபரமே.

பொழிப்புரை :—தன் சக்தியினாலே யெதுவு மாவதில்லை யெனக் கண்டபின்னர், 'உன் செயலே' யென்றுள்ளபடி நிற்றல் வேண்டுவது நியாயமாகவிருக்க, அங்ஙனமும் நில்லா இப்பாவியேற்கு அந்நினைவு வந்திடுவதேனோ? இறைவனே! யென்பதாம்.

குறிப்புரை :—'யாவும் அவன் செயலேயாம்' என்ற சித்தாந்த நிலையுணர்ந்த இவன், பின்னும் தன் பொறுப்பாய்க் கொள்ளுதல் என்ன பேதைமையோ! இதனால், அனைத்தும் அத்தற்பரனுடையே யென்று திடப்பிரக்ஞை கொண்டொழுக வேண்டு மென்பது பேரறிவா மென்பாம். (287)

உ அ அ. கொலைகளவு கட்காமங் கோபம் விட்டாலன்றோ
மலையிலக்கா நின்னருடான் வாய்க்கும் பராபரமே.

பொழிப்புரை :—சீவவதை செய்தல், திருடல், மதுவருந்தல், காமானுபவ மொழியாமை, முனிசிற்றம் ஆகிய இத்தியாதி தீய பிரவிர்த்திகளைச்

சுத்தமா யொழித்த போதல்லவோ நினது பெருமை வாய்ந்த பேரருள் மலை யிலக்காய்ப் பெற்றிடலா மென்பது.

குறிப்புரை :—நஞ்செனை வருத்தும் பஞ்சமா பாதகங்களையு மொருங்கே பற்றறவிட்ட பரம சாந்த பரிபக்குவ சீலர்களுக்கே இறைவன் திருவருள் எய்தப்பெறு மென்பதாயிற்று. இதனால் திருவருளெய்தற் குரிய மாந்தர்க்கு, அறநெறி யோதின தாகுமென்க. (288)

உஅகூ. தன்னை யறியாது சகந்தானா யிருந்துவிட்டால்
உன்னை யறியவரு முண்டோ பராபரமே.

பொழிப்புரை:—ஆன்மாக்கள், 'தன்னைத்தான் கண்டால் பின் தலைவனையுங் காணவரும்' என்னுமுறையே தன்பாற் கொள்ளார்களாயின், பின்னையிவர்கள் அருள்கொண்டு பேராளனைக் காண்பதென்றோ?

குறிப்புரை :—தன்னையுணராது தாந்தோன்றிச் சாமிகளாயுள்ள தகவிலிகள், நின்னை வணங்கியருள் நேசித்து வாழ்ந்திடலும் என்று கொலோ வெய்தி யினிதுய்வ ரென்றுரால். உய்யார் என்பது. (289)

உகூ0. ஒன்றிரண்டென் றுன்னு வுணர்வுகொடுத் துள்ளபடி
என்றுமென்னை வையா யிறையே பராபரமே.

பொழிப்புரை: —அத்துவிதம் துவிதமென்கின்ற பேதந் தோன்றுவ தொழித்து 'ஏகமேவாத்துவீதம்" என்னும் பேருணர்வளித்து எப்போதும் ஒரே நிலைகொண்டு நிற்க நீ கிருபை வைத்தருளல் வேண்டும் என் இறையவனே யென்பதாம்.

குறிப்புரை :—" அத்துவிதப் பொருளொன் றுரணங்களோதுகின்ற, சச்சிதானந்தத் தனிப்பொருளை" என்றோதியருளிய பெரியாருரையைச் சிரமேற்கொண்டு என்றும் ஒரே நிலைபெற்றுய்யு மாறுக்குவீ ரென்பது நூலுடையார் கருத்தாம். (290)

உகூக. கருதுமடி யார்களுள்ளங் காணவெளி யாகுந்
துரியநிறை வான சுகமே பராபரமே.

பொழிப்புரை :—இறைவ! நினைச் சதா சிந்தை செய்கின்ற நின் மெய்யடியவர்களது உள்ளமானது காண்டற்குரிய பெருவெளியாந் துரிய பூமிக்கண் பிரகாசியாநின்ற பரானந்த மயமே யென்பது.

குறிப்புரை:—எந்த நேரமுஞ் சிந்தைசெய் உண்மைத் தொண்டர் கண்டு களிகொள்ளவே துரிய பரவெளியில் மேவாநின்ற பரானந்த பூரண பரமசுக வெள்ளமே என்பது. (291)

உகூஉ. பொய்குவித்த நெஞ்சனருட் பொற்பறிந்து திக்கனைத்
கைகுவித்து நிற்பதெந்தக் காலம் பராபரமே. [துங்

பொழிப்புரை:—பொய்யினைக் குவியலாக வைத்துள்ள தீய மனத்தினேன், நின் திவ்ய திருவருளின் பெருமை நோக்கி, அத்திருவருட் பிரசாதம் தன் கைவசமாமாறு திக்கெலாங் கைகூப்பித் தோத்தரிப்பது இனி யென்றோ! வென்பதாம்.

குறிப்புரை:—பொய்யினைப் பொருளாக்கொண்ட மனத்தினன், பெரும் பொருளாம் நின் திருவருட் செல்வம் பெற்றுய்யுமாறு நின்னருள் வெளியெங்கு நோக்கி கரஞ் சிரமேற்றிப் போற்றுவதென்றோ என்பது. (292)

உகூந. அத்துவித மான வயிக்ய வனுபவமே
சுத்தநிலை யந்நிலையார் சொல்வார் பராபரமே.

பொழிப்புரை:—அத்துவித மென்னும் ஏகீபாவச் சுவானுபவமே ஒப்பற்ற பரிசுத்த நிலையென மேலோர் கூறியவாறும் அந்த மேலாம் நன்னிலையின் உண்மையைப் பற்றி யெடுத்தோத வல்லார் இங்கு யாவரோ! வென்பது.

குறிப்புரை:—

"அந்தப் பரத்தோ டிரண்டற் றயிக்கமா
மந்தநன் னிட்டையே யுந்தீபற
அத்துவித வீடென் றுந்தீபற"—என்று அவிரோத வுந்தியார் கூறியருளியவாறு அதனைச் சுத்த நிலையென்றது மன்றி, இதனுண்மையைக் கூறுவார் யாவர்! என்றும் வியந்தோதினர் இந் நூலுடையார் என்பது. (293)

உகூச. வைத்தசுவ ரலம்பின் மண்போமோ மாயையினோர்க்
கெத்தனைபோ தித்து மென்னு மெந்தாய் பராபரமே.

பொழிப்புரை:—மண்ணுங் கல்லுங் கூட்டி வைக்கப்பட்டுள்ள சுவற்றைத் தண்ணீர்கொண்டு கழுவினதினாலே மண் போய் விடுவதின்றாம்; அதேபோன்று, மகாமாயையால் பந்திக்கப்பட்ட நடைச்சுவ ரொப்பார்க்கு

அறிவு நூல்களின் நுட்பங்களையும் உண்மையையும் யெடுத்து விவரித்தோதி னும் யாது பிரயோசனமாகும் ?

குறிப்புரை :—பரிபக்குவம் எய்தப் பெறாதுள்ள மாயா சகிதர்களுக்கு என்னதான் உண்மை நூலுரைத்தும், பக்குவர்களாக மாட்டாரென்பது கருத்தாம். ஏன் ? இருவினையொப்பு, மலபரிபாகம் சத்திநிபாத மென்பன பொருந்தாமையே காரணமாகும். (294)

உகரு. பூட்டற்றுத் தேகமற்றுப் போகுமுன்னே நின்னருளைக்
காட்டத் தகாதோவென் கண்ணே பராபரமே.

பொழிப்புரை :—இயல்பாகவேயுள்ள சரீர பிணைப்புகளாகிய பூட்டுகள் விட்டு, இந்தச் சரீரம் மரித்தொழிவதற்குள்ளாகவே, நினது பேருருட் செல்வப் பெருக்கினை யான் யென்பால் கண்டுய்யுமாறு, என் கண்மணி யோய் ! நீ கருணைபூத்துக் காட்டியருளப்படாதோ ? என்பதாம்.

குறிப்புரை :—இறைவனே ! என் தேகங்கெடு முன்னரே நினது மேலாம் திருவருட் பிரசாதத்தை என் கண்காண நீ கைகாட்டி வைக்கப் படாதோ ! (295)

உகசு. சொல்லிற் பதர்களைந்து சொன்முடிவு காணாதார்
நெல்லிற் பதர்போல நிற்பார் பராபரமே.

பொழிப்புரை :—சொல்லா நின்ற சொற்களிலே, பதர் போன்ற பய னில் சொல்லினை வேறு பிரித்தொதுக்கி உள்ள சொற்கொண்டு உண்மை யை யுணரமாட்டாத அறிவிலிகள் நெற்பதர் போல அவருடன் கலந்து கொண்டு விளங்குவரென்ப.

குறிப்புரை :—" பயனில் சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல்."—என்றார் பொய்யா மொழிப் புலவர். இதனால், நம் ஆசிரியரும் மேலே பயனில் சொல்லொதுக்கி உள் ளனகொண்டு பொருளுணரார் மனித பதராவாரென்றனர் போலும். இதனானே எவையும் ஆய்ந்துணரல் வேண்டுமென்றனர். (296)

உகஎ. அழுக்காற்று னெஞ்ச மழுங்கியபுன் மாக்கள்
இழுக்காற்று லின்பநல மெய்தார் பராபரமே.

பொழிப்புரை :—பொறாமை கொண்டு மனம் புழுங்கப்பெற்ற சிற்றின மாக்களார், தங்கடங்கள் தீயொழுக்கத்தினாலே மேலாம் இன்னலங்கள் எவை யும் யெய்தப் பெறாது துன்புற்று மடிவரென்பதாம்.

குறிப்புரை :—பொறாமை முதலான குற்றம் பொருந்தி, மனத் தூய்மை பெறாக் கேவல கீழ்க்குடியாளர்கள், தந்தந் தீயமனமே காரணமாக யாதொரு நன்மையு மடைதலின்றி வாழ்நாள் தேய்ந்து ஜென்மத்தால் பய னற்றுப் பாழ்படுவரென்ப. இன்னோர்க்கு உரியதோர் மெய்யுணர் வின்மை யால் ஆசிரியர் இன்னோரை மாக்களென்று ஓதினதுணர்க. நன்னூலாரும், 'மக்கள்தாமே ஆறறிவுடையா' ரென்று வரையறுத்தாண்டார். ஆக லானே ஐயறிவுள்ள மாக்கள் எனப்பட்டது முணரற்பாற்று. (297)

உகூஅ. தேகாதி பொய்யெனவே தேர்ந்தவுப சாந்தருக்கு
மோகாதி யுண்டோ மொழியாய் பராபரமே.

பொழிப்புரை :—இச்சரீராதிய வனைத்தையும் கேவலம் மித்தை யெனக் கண்டொதுக்கியுள்ள திடம்பெற்ற பரம சாந்த வியோம நிலையுற்றார் களுக்கும் கேவல துச்சமான மோக முதலாயுள்ள தீக்குணம்சங்கள் சிறிதும் உளவாமோ ? இல்லையாம்.

குறிப்புரை :—இந்த மானிட வாழ்வும், சரீரமும், மற்றனவும் பொய் யென்று வெறுப்புற்று மெய்ஞான பரராயுள்ளார்க்கும் இவ்வுலகானுபவத் தைக் கண்டு மயக்கமுறல் இலவாம். (298)

உகூகூ. சாதனையெல் லாமவிழத் தற்போதங் காட்டாதோர்
போதனைநீ நல்குவதெப் போதோ பராபரமே.

பொழிப்புரை :—இறைவ ! என்பால் இயல்பாயுள்ள சாதன சதுஷ் டயங்க ளனைத்தும் நீங்கச் செய்யும், சீவபோத மென்பது தோன்றப் பெறு தொழியுமாறு எளியேற்கு ஓர் இனியமொழி உபதேசித் தருள்வது எக் காலத்திலோ தெரிந்திலன்.

குறிப்புரை :—என் அரிய சாதனைகளைக் கெடுமாறு தலை தூக்கும் சீவபோத மென்னும் அகங்கார மமகாரக் கிரந்தியானது அடிமாண்டு தொலைய, இனி என்னிறைவ! எப்போது ஓர் அரிய உபதேசமொழி யெனக்கு அநுக்ரகமாமோ ! என்பது. சிவபோதம் பிறக்க, சீவபோதம் ஒழிதல் மர பாதலான், சிவபோதத்தை யெதிர்நோக்குகின்றமை இனிது விளங்கு கின்றது. (299)

௩௦௦. ஒன்றுமறி யாவிருளா முள்ளம் படைத்தவெனக்
கென்று கதிவருவ தெந்தாய் பராபரமே.

பொழிப்புரை :—ஐயனே! சத்தசத்தே விளங்கப் பெறாது இருண்ட நெஞ்சினே யுடையேற்கும், நின் ஒப்பற்ற பரகதி கிடைக்கப் பெறுதல் எக்காலத்திலோ விளங்க வில்லையே !

குறிப்புரை :—யேதுமறியா பேதையேற்கும், தேவரீர்தம் உத்தமோத் தம பதவிகளி லேதேனு மொன்றை, யென்னிருண்ட மனம் ஒளிபெறு மாறு அடையப் பெறுதல் எப்போதோ வென்று ஏக்கமுற்ற தென்னிறை வனே! என்பது. (300)

௩0௧. சிந்திக்குந் தோறுமென்னுட் சிற்சுகமா யூற்றூறிப்
புந்திக்கு ணின்றவருட் பொற்பே பராபரமே.

பொழிப்புரை : —இறைவனே! நின்னை யென்னுள்ளகத்தே தியானிக் கும்போ தெல்லாம் ஞானானந்த வெள்ளம் சுரப்புற்று என் போதப் பெரு வெளிக்கண் ஜொலித்திலங்கும் திருவருளழகே ! என்பது.

குறிப்புரை :—இறைவனை என்னிதயத்திலே வைத்து தியானிக்கின்ற காலமெல்லாம் என்னறிவூடு ஞானானந்த வெள்ளம் ஊற்றெழுந்து உருகு கின்றதே! இங்ஙனமாதல் நின் அழகிய திருவருட் சத்தியின் தன்மையா மென்பாம். (301)

௩0௨. என்று மடைந்தோர்கட் கிரங்கார் குறிப்பனைத்துங்
கன்றை யுதைகாலி கதைகாண் பராபரமே.

பொழிப்புரை :—அண்டினை வொருவரை யாதரித்தருளா திருத்த லானது, ஊன்றிப் பார்க்கும்போது, தன் கன்று பாலருந்த வொட்டாது தாளெடுத்தெறியும் ஆவினை யொத்தாராவார் என்பது.

குறிப்புரை :—இதனல், அண்டினர்க் கிரங்கி யகங்குழையா வாடவனு வான், விலங்கின னுவானென்பது வெளிப்பட்டது. இன்னும், மனித வகுப்பிற் றோன்றினும், குணம் மிருக சுபாவமா யிருத்தலேக்கியே ஆசிரி யர் இப்போலியர்க்கு மிருக வுவமை யோதின தென்பதாம். ‘விலங்கொடு மக்களனையர்’ என்பதுமஃதே. (302)

௩0௩. குற்றங் குறையக் குணமே லிடவருளை
உற்றவரே யாவிக் குறவாம் பராபரமே.

பொழிப்புரை :—குற்றங் குறைவுற்று மனம் மலையிலக்காய்ப் பெற்றி டற்கே நற்றவத்தால் தண்ணருளை நாடுவரன்றியும், ஆன்ம லாபம் பெறற்கு முரியராவா ரென்பதும் பொருந்தும்.

குறிப்புரை :—ஆன்மாக்கள் திருவருளை நாடுவதெல்லாம், குற்றம் நீங்கிக் குணமேலிடற்கே யன்றி மற்றன்றென்று மனதைத் தன்வச மீர்த்து மன்றாடுகின்றனர் போலும். (303)

௩௦௪. ஓருரையால் வாய்க்கு முண்மைக் கோரனந்தநூல்கோ
பேருரையால் பேசிலென்ன பேறும் பராபரமே. [டிப்

பொழிப்புரை :—ஓர் வார்த்தையினாலே அறியக்கூடிய உண்மைப் பொருட்கு அநேகநேக சாஸ்திரங்களைக் கொண்டு அநேகர்கள் மகா சப்தமிட்டு ஒருமித்துரைப்பினும், அதனாற் பயன் பெறுதென்பதாம்.

குறிப்புரை :—உண்மைப் பொருள் ஓர் மொழியிற்றுலங்க விருக்க அஃதுணரா பல்லோர் கூடிப் பறையடிக்கின் பயனென்னை யென்பது இதனால் விகசிதமாயிற்று. (304)

௩௦௫. சொல்லுஞ் சமயநெறிச் சுற்றுக்குளே சுழலும்
அல்லலொழிவ தென்றைக் கையா பராபரமே.

பொழிப்புரை :—பற்பல வகையாயுள்ள சமய நெறியாகிய சுழலுக்குள்ளாகச் சிக்குண்டு பலவாறு துன்புறுவதும் இனியொழிந்து யென்றுகொலோ உண்மையுணருமா றென்னையனே !

குறிப்புரை :—சாதிச்சமயச் சழக்கை யொழித்து திருவருட் சோதியைத் தேர்ந்துய்வதென்றோ யெனையனே என்பது. (305)

௩௦௬. பிடித்ததையே தாபிக்கும் பேராண வத்தை
அடித்துத் துரத்தவல்லா ரார்காண் பராபரமே.

பொழிப்புரை :—இறைவ ! கொண்ட கொள்கையையே நிலை நாட்ட வல்ல அகங்கார மெனும் கொடிய அடவாதிப் பேயினை யையப்புடைத் தோட்ட சக்திவாய்ந்தவரு முண்டோகாண் என்பது.

குறிப்புரை :—ஓர் பெரியார், “ அகங்காரக் கொடுங்கிழங்கை யகழ்ந் தெறிய வறியேன் ” என்று கூறியவாறு போன்றே ஆசிரியரும் “ ஆணவத்தைத் துரத்த வல்லாரார்காண் ” என்று ஓதியுள்ளார் ; இதனால், எவற்றினும் அகங்காரக் கிரந்தியே மிக்க வலியுடைத்தென்று நன்கு புலனாய தென்று அறிதல் வேண்டும். என்பது. (306)

௩௦௭. நேசத்தா நின்னை நினைக்கு நினைவுடையார்
ஆசைக் கடலி லழுந்தார் பராபரமே.

பொழிப்புரை :—அன்பின் முதிர்ச்சிகொண்டு தேவரீரைத் தியானஞ் செய்யுஞ் சிந்தையையுடைய தியானயோகப் பெரியார்கள், ஆசாபாச ரசாபாசத்திலே கிடந்து அலக்கணுறார் என்பது.

குறிப்புரை :—இறைவன்பால் பேரன்பு கொண்டுள்ள பெரியாராவார்கள் பிறவிப்பிணிக்கு வித்தாயுள்ள ஆசைக்கடற்கண் அமிழ்ந்து நாசமடையப் பெறுரென்பது நன்கு புலனுயதாம். (307)

௩௦அ. கள்ளாது கட்டுணவுங் காரியமோ நாளுெருசொற்
கொள்ளாத தோஷமன்றோ கூறாய் பராபரமே.

பொழிப்புரை :—திருடல் செய்யாது, திருட்டுக்குக் கட்டுப்பட்டு நிற்றலும் ஓர் காரியமாகுமோ ? ஆகவே, யான் ஒப்பற்ற ஓர் திருவார்த்தையினைக் குருமுகாந்தரமாக் கொண்டிராததே குற்றமாகு மல்லவோ ! சொல்வாய், என்பது.

குறிப்புரை :—' குருமொழி கொள்ளான் குணமண மில்லான் ' என்பதுபோல, சற்குரு கடாக்ஷத்தால் ஓர் ஒப்புவமை யற்ற திரு மொழியுபதேசம் பெறுனையின், அவன் எவ்வாற்றானும் பயன் பெறுன் என்பது தோன்ற நின்றது. (308)

௩௦௯. சென்றவிட மெல்லாந் திருவருளே தாரகமாய்
நின்றவர்க்கே யானந்த நிட்டை பராபரமே.

பொழிப்புரை —எங்கெங்கு போயினும் ஆங்காங்கும் தெய்வத் திருவருட் செல்வத்தையே முக்கியாதாரமாக் கொண்டுள்ளார்க்கே பரமானந்த நிட்டை கைகூடு மென்பதாயிற்று என்பது.

குறிப்புரை :—இதனுல், பரமானந்த நிட்டை யென்பது திருவருட் சத்தியார்தம் கிருபா நோக்கத்தானே யன்றி மற்றும் தன் சக்தியால் சித்திக்காதென்பது தோன்றலாயிற்று. (309)

௩௧0. நீட்சி குறுகலில்லா நித்யசுகா ரம்பசுக
சாட்சியா முன்னேவந்து சார்ந்தேன் பராபரமே.

பொழிப்புரை:—வளர்தல் சுருங்க லில்லாதும், நிலைபேறுடையதாயும், ஆனந்தோதய வஸ்துவாயும், உலக சாக்ஷியாயுமுள்ள தேவரீரையறிந்தே யான் அடைக்கல மாயினேன் என்பது.

குறிப்புரை :—வஸ்து நிச்சயமும், அதன் தத்துவம் முற்றிலும் நன்குணர்ந்தும், இதன்மூலம் பக்தி வினயந்தோன்றி, அதற்குரிய நியமத்தோடும் ஒழுகிவந்தே தான் நினக்கு ஈடுபடலாயினேன் என்பது.

சகசாட்சி - சர்வசாட்சியாம். பெருத்தல் சிறுத்தலில்லையாதலால் அப்பொருளை 'நீட்சி குறுகலில்லா' என்றோதினர். (310)

௩௧௧. வானாதி தத்துவமாய் மன்னிநின்ற காரணநீ
நானாகி நிற்பதெந்த நாளோ பராபரமே.

பொழிப்புரை :—ஆகாய முதலாகவுடைய சகல தத்துவ சொரூபமாய் விளங்கியுள்ள ஏ, காரண கர்த்தனே! யான், நீ தானாய் நிலைபெற்று வாழ்தல் எக்காலத்திலோ வறிந்திலனே!

குறிப்புரை :—ஆகாயாதி ஐம்பூதங்களாயும், மற்றுள்ளன வாயும் வியாபித்துள்ள தேவரீரை யான் பேதமிலா தெய்துவதும் எப்போதென்று ஆசிரியர் விரைந்து வினவுதலை நோக்க, தேக சந்தேகங்கொண்டு பட்டபாடு வீணாய்ப் பாழ்படுமோவென்ற ஐயமேயாம் மெனவெளியாயது. (311)

௩௧௨. காட்டத்தி லங்கி கடையவந்தா லென்னவுன்னும்
நாட்டத்தி னூடுவந்த நட்பே பராபரமே.

பொழிப்புரை:—கட்டையை மற்றொரு கட்டையால் அடுத்துக் கடைந்துவர, அக்னி தோன்றுமாறதாகவே, நின்னை அடுத்தடுத்து நினைவு கொள்ளும் தன்மையாலேயே நட்புகொண்டு விளங்கி வெளிவந்த பழய வுறவே யென்பது.

குறிப்புரை :—பக்தியும் தியானமும் பதியப்பதிய நித்திய வத்துவும் நின்பாற் றுலங்குமே யென்பார் பெரியார்கள்; ஆகவே, யார் யார்க்கு அன்பு நாளும் வளருமோ, அன்னோர்பால் ஈசற்கும் அன்பு மென்றும் பெருகு மென்பதும் வெளிப்பட்டது. அங்கி—அக்னி. (312)

௩௧௩. நித்திரையாய்த் தானே நினைவயர்ந்தா நித்தநித்தஞ்
செத்தபிழைப் பானதெங்கள் செய்கை பராபரமே.

பொழிப்புரை :—தியானத்தை, அயர்ந்து மறந்து, உறக்கங் கொள்ளுத லானது தினந்தினமும் இறந்து பிறத்தலை நிகர்த்து, அத்தியானத்தால் பயனுமின்றிப் பாழ்பட்ட பிழைப் பொக்கு மென்ப.

குறிப்புரை :—சிவத்யான சிந்தையர், தாம் தியான முறுங்கால் மனத் தளர்வால் அயர்வுண்டாகிப் பின்னுறக்கமும் கொள்வராயின், அத்தியான மத்தியானமேயன்றி மெய்த்தியான மாகாவென்பது பெறப்பட்டது என்பது. இங்கே, நினைவு, தியானமாம். (313)

௩௧௪. இன்பநிட்டை யெய்தாமல் யாதெனினுஞ் சென்றுமனந்
துன்புறுதல் வன்பிறவித் துக்கம் பராபரமே.

பொழிப்புரை :—பேரின்பத்தைக் கருதி பர நிட்டை கூடாது, எந்த வோர் அநாவசிய காரியத்தினும் மனம் போய் விழுந்தழுந்தித் துன்பப்படுத லானது, நினைக்குங்கால், வலிய பிறப்பினது துக்கமே யென்பது தெளி பொருளென்ப.

குறிப்புரை :—இன்பநிட்டைக்குப் பாத்திரவானாக வேண்டுவது நியாய மாக விருக்க, அவ்வழி செல்லாது உலக வீண் காரியாதிகளிற் பிரவிர்த் தித்து ஆழ்ந்தழிதலானது ஜென்மாந்தர வினைப்பயனென்றுணரற்பால தாம். என்பது. நலத்தின்கண் நாரின்மைதோன்றுவதானது, அவனது கீழ்மையைக்குறிக்கு மென்றார் பெரியார்.

நாரின்மை=அன்பில்லாமையாம். இதனால், அரனிடத்தன்பு எவனுக் கில்லையோ அவன் நலன் அலன் என்ப தாயிற்று. இன்னும், இந்நூலாசிரி யரும் அவன் யாரோ வென்றதுங் காண்க. (314)

௩௧௫. பொய்யகல மெய்யான போதநிலை கண்டோர்க்கோர்
ஐயமில்லை யையமிலை யையா பராபரமே.

பொழிப்புரை :—பொய்யான அகப்புறக் கரண சேஷ்டிதங்களனைத் தையு மொழித்து உத்தமமாய ஞான நிலையினை யடையப்பெற்ற பரமசாந்த முனிவர்களுக்கு யாதொரு சந்தேகமு மில்லையாகும்.

குறிப்புரை :—பொய்க்கரண வாதனையால் பொய்யாசைப் படுவ தொழிந்து மெய்க்கரண போதனையால் மெய்ஞ்ஞானம் பெற்ற பெரியார்க்கு முத்தி சித்திப்பதில் இலவலேசமும் சந்தேகமின்றென்ப தாயிற்று. உறுதிப் பாடு நோக்கி ஐயமிலை ஐயமிலையென மீண்டுங்கூறினர். (315)

௩௧௬. மந்திரத்தை யுன்னி மயங்காதெனக்கினியோர்
தந்திரத்தை வைக்கத் தகாதோ பராபரமே.

பொழிப்புரை :—இறைவனே ! யான் இனி மந்திரத்தை யெண்ணிக் கடவாதபடி, நின் அரியவோர் தந்திரவுத்தியைக் கூறி யாண்டருளப் படாதோ வென்பதாம்.

குறிப்புரை :—ஜீவபோத சகிதமாய் மந்திரத்தை மட்டும் அநுஷ்டித்து வருதலோடு தந்திர மென்னும் சிவபோதமீந்து சிற்சத்தியின் பிரசாதம் பெறுமாறதாக வோர் உபாயத்தை யெனக்கமைக்கப் படாவோ என்பது. இன்னும், யோக நிட்டையையுங் கூறுவாருமுளர். (316)

௩௧௭. விண்கருணை பூத்தெதன்ன மேவியுயிர்க் குயிராய்த்
தண்கருணை தோன்றவரு டாய்நீ பராபரமே.

பொழிப்புரை :—ஆகாயத்தினின்றும் மழையானது கைம்மாறு வேண்டாது கருணையினாலே வருஷிப்பது போன்றே, உயிர்களுக்குயிராய் நின்று குளிர்ந்த திருக்கருணையோடும் வந்திடும் நற்றாய் நீயல்லவோ!

குறிப்புரை:—கைம்மாறு வேண்டாக் கருணையால் மழை பொழிவதைப் போலவே உயிர்கண் மாட்டு இரக்கமுற்றுத் தண்ணருள் பெருகத்தோன்றி வந்து உதவும் அருமைத் தாயாயிற்றே! என்பது.

ஈண்டு 'விண்' என்பது மழையைக் குறித்ததாம். சான்றாக,—"விண்ணின்று பொய்ப்பி" னென்றார் பெரு நாவலரும். (317)

௩௧௮. தன்மயமாய் நின்றநிலை தானேதா னாகிநின்றால்
நின்மயமா யெல்லா நிகழும் பராபரமே.

பொழிப்புரை :—யதாப்ரகாரமான ததாகாரமாய், அதாவது தற்சொரூபமாகத் தோன்றியருளிய நின் பெருநிலையைப் பொருந்திய நீ, தனிநிலையைப்பெற்று விளங்கி நிற்பாயேல், நின் சந்நிதான விசேடத்தால் யாவும் நின் சொரூபத்தையே பெறும் என்பதாம்.

குறிப்புரை :—மாயாசகிதமாய நீ, மாயா ரஹிதமாய்த் தோன்றி விளங்குவையே யானால், என் கரணாதிகள் முதலாக ஆன்மாவும் நின் தன்மையைப் பெற்று நிலைபெறுதலு மென்பது; எவ்வாறெனின்; பொன்மலையைச் சார்ந்த காக்கை பொன் மயமே யாதல் போன்றென்க. இதற்கு வேறு பிராகாரமாயு முரைசெய்வரென்ப. (318)

௩௧௯. ஏங்கி யிடையுநெஞ்ச வேழையைநீ வாவென்றே
பாங்குபெறச் செய்வதுன்மேற் பாரம் பராபரமே.

பொழிப்புரை:—நின் திருவருட் செல்வம் பெற்றுய்யப்பெறாது மன ஏக்கங்கொண்டே வருந்துகின்ற பேதையிதயமுடைய பேயேனை, நலம் பெறுமாறு ஆக்குவிப்பது நின் பாரமாகு மென்பதாம்.

குறிப்புரை :—இறைவ! நின்றிருவருட் செல்வம் பெறா வேழைமனப் பேதையேனையும் நீ வாவென்றழைத்து வாழ்வித்தல் நின்கடமை யாம் என்பது. (319)

௩௨௦. ஆண்டநின்னை நீங்கா வடிமைகள்யா மாணவத்தைப்
பூண்டதென்ன கன்மம் புகலாய் பராபரமே.

பொழிப்புரை :—எளியேனை ஆட்கொண்டருளிய தேவரீரை ஓரிமைப்போதும் விட்டு நீங்கப் பெறாது அடைக்கலம் புகுந்த யாங்கள் அகங்கார மமகாரத்தையோர் ஆபரணமாகப் பெற்றுள்ளமை எந்த கர்மத்தின் பயனோ அதைக் கூறுவாய் என்பது.

குறிப்புரை :—இறைவனே ! நினக்கு அடைக்கலப்பட்ட அடியேங்கள் நின்னால் ஆண்டருளப் பெற்றும், அகங்காரப் பேய்மட்டும் இன்னும் எங்களை விட்டொழிந்த பாட்டைக் காணோமே ! ஈதென்ன கன்மவினையோ தெரியச் சொல்வாய் ? என்பது. (320)

௩௨௧. எங்கணுநீ யென்றா லிருந்தபடி யெய்தாமல்
அங்குமிங்கு மென்றலைய லாமோ பராபரமே.

பொழிப்புரை :—இறைவனே ! நீ யாண்டும் வியாபித்துள்ள பரிபூரணப் பொருளாயின், ஓரிடமிருந்து நின்னைத் தரிசியாமே எங்கெங்குமோடியலக்கழிவது மியல்பாமோ ? என்பது.

குறிப்புரை :—ஐயனே ! நீ எங்கு நிறைந்துள்ள பூரணப்பொருளாய போது நின்னை அன்பர்கள் அங்குள்ளார் இங்குள்ளாரெனவே கொண்டலைந்து சுற்றலும் நியாயமாகுமோ ? என்பது ஓர் வினாவாயினும் அங்ஙனஞ் சென்றடைதலும் நியாயமே யென்பாம். எங்ஙனமெனில், இறைவன் சர்வ வியாபகத்துவ முடையவ னென்பது நிர்ச்சந்தேகமான விஷயமே ; ஆகவே, மெய்யன்பர்கள் ஒவ்வோர் காலத்து ஒவ்வோரிடத்திருந்து சரியை கிரியை யோக ஞான மென்னும் நால்வகைச் சோபான முறையானும், மற்றும் பக்திமார்க்க முறையானும் பதிந்துள்ள அன்பின் மேலீட்டினாலே இறைவனை உபாசித்து வரும்போது, இறைவன் அவ்வன்பன் அன்பின் பெருக்கைக் கொண்டு தடுத்தாட்கொண்டருளும் பொருட்டு கருணையே உருவமாக் கொண்டு குருலிங்க சங்கம துவாரா தோன்றி நின்று திருவருள் புரிந்தாண்டருளிய அத்திருக்கோலக் காட்சியை மிகு மாக்ஷியாக்கண்டு கடைத்தேறுவான் கருதியே பிறதலங்கட்குச் செல்கின்றனரே யன்றி மற்றன்று ; ஆகவே, அந்த அன்பர் கருத்து, தாமிருந்த விடத்தே இறைவனிருந்திலன் என்றும், பிறதலத்தின் கண்ணேயே யுள்ளானென்றும் கொண்ட கொள்கையன்று என்பது விகசிதமாம். அன்றியும், அன்பர்கள் திருவருட் பிரசாதம் பெறுவான் வேண்டியும் இதற்கு சற்குரு நாதன் பணியும், அவன் உபதேசமும் அவசியமானதாலும், மூர்த்திதலந் தீர்த்தமுறையாய் வணங்க வேண்டுவது அத்யாவசிய மாதலானும், அங்ஙனம் வணங்கப் பெற்றார்க்கே சற்குரு தரிசன உபதேசாதிகள் கிடைத்து அதனால் மோக்ஷாபேக்ஷை நிவர்த்தியாகு மென்றும் ஆகமாதிகள் அறைதலானும், பலதலங்களினுமேவி அவ்வம் மூர்த்திகளைத் தரிசித்து வணங்கித் துதிபுரிந்து சொன்மாலை யணிவித்து வாயார

வாழ்த்திக் கொண்டாடி வரம் பலபெற்று வருதலும் பெரியதோர் சிறந்த முறையாயிற்று. இதனால், மெய்யன்பர்கள் பிறதலம் சென்று இறைவன் திருவடிச் சேவை செய்துவருவதால் சர்வக்ஞனது சர்வவியாபகத்துக்குக் குறைவுறு மென்பது அமையா தென்றறிதற் பாலதாம். (321)

௩௨௨. கற்குமது வுண்டு களித்ததல்லா னின்னருளில்
நிற்குமது தந்ததுண்டோ நீதான் பராபரமே.

பொழிப்புரை :—ஐயனே! கற்றறிதலான தேனருந்தப் பெற்றுக் களிப்புற்றேனே யல்லது, தேவரீர் தமது ஒப்பற்ற திருவருட்டேனளித்து நிலைபெறச் செய்ததைக் காணேமே! என்பது.

குறிப்புரை :—எக்காலுங் கற்றே வந்தால், அதனாலாய நின் திருவருட் பேற்றை யான் யெக்காலம் பெற்றுய்ய யேற்ற தவமுஞற்றுவேன்! அன்றியும் தேவரீரும் மனமிறங்கி முன்வந்து அருணெறியில் அடிமையைச் செலுத்தவும் செய்திலீர்! நின்னருளன்றி யென்னறிவாலாமோ! இன்றே! (322)

௩௨௩. அண்டபகி ரண்ட மறியாத நின்வடிவைக்
கண்டவரைக் கண்டாற் கதியாம் பராபரமே.

பொழிப்புரை :—இறைவனே! இவ்வண்டகோள மென்ன, இதன் அகத்தும் புறத்துமுள்ள பகிரண்டங்களென்ன, இவைகளுள் செறிந்திலங்கும் சேதனசேதன நாமரூபாதிய வனைத்தும் தன்னை யின்னனவென்றறிய வியலா நின் திருமேனியைக் கண்டானந்தங் கொண்டாரைக் கண்டக்கால் பரகதி வாய்க்குமே! என்பது.

குறிப்புரை :—"கனகசபேசன் சேவடி, கண்டபேரைக் கண்டால் போதுந்தில்லைக் கனக சபேசன் சேவடி" யென்றார் ஓர்மகான்; அதே போன்று இந்நூலாசிரியரும் உரைத்தமை பொருத்தமாயின தறிந்துய்தற் பாலது. என்பது. (323)

௩௨௪. கலக்கமுற நெஞ்சைக் கலக்கித் திரும்பத்
துலக்குபவ னீயலையோ சொல்லாய் பராபரமே.

பொழிப்புரை :—இறைவ! எளியன் மனதைப் பேதிக்குமாறு கலங்கச் செய்து, பின்னர் அக்கலக்கங்க ளத்தனையும் ஒழியுமாறு கருணைபூத்துத் திருவருணேக்கஞ் செய்யவல்லவனும் தாமேயன்றோ! கூறுவாயாக என்பது. துலக்கல் - சுத்திகரித்தல்.

குறிப்புரை :—எளியேனை மாயா சகிதப்படுத்தி, மனமாதி கரணாதிகளை மலைப்பெய்திடுமாறுங் கண்டு, பின் அம்மலைவை நீக்கித் தெளிவுறக் கண் காணிப்பவனும் நீயேயன்றோ ? என்பது. (324)

ருஉரு. சிந்தையுமென் போலச் செயலற் றடங்கிவிட்டால்
வந்தவெலா நின்செயலா வாழ்வேன் பராபரமே.

பொழிப்புரை :—என்னெஞ்சமும் என் போன்றே நினைவுகூறுமே இறந்தொழியின், மேற்கொண்டு நிகழ்வதனைத்தும் தேவரீர்தம் திருவுளச் செயலாகவே யமையுமாறு உச்சீவிப்பேன் என்பது.

குறிப்புரை :—எனது மனது ஒன்றையும் உன்னுதொழியின், அதே மூலமாக யாவும் இறைவன் காரியமாகவே நிறைவேறி வருமென்பதிலைய மின்றும். (சிவபோதமுமாய் விடும்) என்பது. (325)

ருஉசா. பந்தமெலாந் தீரப் பரஞ்சோதி நீகுருவாய்
வந்த வடிவை மறவேன் பராபரமே.

பொழிப்புரை :—எளியேனைப் பற்றியுள்ள பாசபந்தங்களெல்லாம் நீக்கமுற, ஏ பரஞ்சோதி சொரூப பரம சாம்பிராச்சியனே ! தேவரீர் சற்குருமணியாய்த் தோற்றியருளிய திருவுருப் பொலிவை யான் கனவினு மறவே னென்பதாம்.

குறிப்புரை :—பந்த பாசாதிகள் தீருமாறு சற்குருநாதனாய் எழுந்தருளி வந்தருளிய பரஞ்சோதியப்பா ! நின் கருணாகர திருமேனியை யொரு நேரமுங் கருதாதிரேன் என்பது. (326)

ருஉஎ. தானந்த மான சகச நிருவிகற்ப
வானந்த நிட்டையரு ளையா பராபரமே.

பொழிப்புரை :—சதுர்வேத சாரமாயுள்ள சகசநிலை பொருந்திய பரானந்த பரநிட்டையை அடிமைக்கு அருளிச் செய்தல் வேண்டுமென் ஐயனே ! யென்பதாம்.

குறிப்புரை :—எவற்றிற்கு முடிவாய் விளங்கிய நிருவிகற்ப சமாதியினை எளியேற்குக் கருணைபூத்து அநுக்ரகித்தருள வேண்டுமென் ஐயனே ! யென்றபடி. (327)

ருஉஅ. அல்லலெல்லாந் தீரவெனக் கானந்த மாகவொரு
சொல்லையென்பால் வைத்ததையென் சொல்வேன்
[பராபரமே.

பொழிப்புரை :—என்பாலுற்ற துன்பாதிகள் தொலைந்து இன்பாயிருந் தானந்திக்க அன்பாலொருசொல் லருளியதைப்பற்றி யான் யென்னென் றெடுத்துரைப்பேன் ! என்பது.

குறிப்புரை :—இறைவனே ! எனக்குற்ற பலவித தத்துவங்களின் துன்ப மகற்றித் தூய்மையுறச் செய்ததன்றியும் ஓர் அரிய திருவார்த்தை யோதி யருளினையே ! நின் பரங்கருணைத் திறத்தைக் கூறவும் வல்லேனோ ! அல்லேனே ! என்பது. (328)

௩உ௯. சிந்தை மயக்கமறச் சின்மயமாய் நின்றவுன்னைத்
தந்தவுனக் கென்னையுநான் றந்தேன் பராபரமே.

பொழிப்புரை :—என் அன்புக்கேற்ற வரும்பொருளே ! எனது மனதில் விளைந்த மயக்காதிகளைக் களைந்தெறியவென்றே, எளியேன் முன்பாக ஞானா கிருதியாய் நின்று, அன்று நின்னைத் தந்தாண்டாய் ; அஃதறிந்த யானும் பின்னர் என்னுடலுயிராதியனவும் நின்பாற் கொடுத்து விட்டேன் என்பதாம். சான்றாக வோர் அரிய பெரியாரும்.

குறிப்புரை :—

படமுடியா தினித்துயரம் படமுடியா தரசே
பட்டதெலாம் போதுமிந்தப் பயந்தீர்த்திப் பொழுதென்
உடலுயிரா தியவெல்லாம் நீயெடுத்துக் கொண்டுன்
உடலுயிரா தியவெல்லா முவந்தெனக்கே யளிப்பாய்
வடலுறுசிற் றம்பலத்தே வாழ்வாயென் கண்ணுண்
மணியேயென் குருமணியே மாணிக்க மணியே
நடனசிகா மணியேயென் னவமணியே ஞான
நன்மணியே பொன்மணியே நடராஜ மணியே.

யென்றே உவந்துரைத்தமை யறிக. (329)

௩௩0. மைகாட்டு மாயை மயக்கமற நீகுருவாய்க்
கைகாட்ட வுங்கனவு கண்டேன் பராபரமே.

பொழிப்புரை :—கருமாயை யுருமாய வொருவா நீ குருவாகி வந்தென் முன்னே தோன்றி வலக்கர சின்முத்திரையைக் காட்டியதா யொரு நாளிலோர் கனவுங் கண்டேன் எந்தாய் என்பது.

குறிப்புரை :—இறைவ ! நீ யன்று கனவிற் காட்டிய கைக்குறியாம் ஞான முத்திரையால் மாயா மயக்கறுமோ ! அறுவாம். ஆகவே அம்முறையை என் நனவாய சாக்கிரத்திற் காண்பிவித்தாள்வா யென்பதாய் வேண்டினதாயுங் கோடல் மரபாம் என்பது. (330)

௩௩௧. மால்வைத்த சிந்தை மயக்கறவென் சென்னிமிசைக்
கால்வைக்க வுங்கனவு கண்டேன் பராபரமே.

பொழிப்புரை :—பலவாறான மயக்கத்தை குடிகொண்டுள்ள மனத்தை யொழித்திடுவான் வேண்டி இறைவன், எனது சிரமீது பாதஞ் சூட்டலாகிய திருவடி தீக்ஷை செய்திடவுங் கனாக்கண்டேன் என்பது.

குறிப்புரை :—கண்ட கனவு மெய்மையாகவே நினைவாயபோதும் தோற்றியருளி தீக்ஷை புரிந்தருள்வதில் இச்சையை மிச்சமாக வுடைமையைத் திருவுளம்பற்ற வேண்டுவாரு மாவரென்பது. (331)

௩௩௨. மண்ணான மாயையெல்லா மாண்டுவெளி யாகவிரு
கண்ணார வுங்கனவு கண்டேன் பராபரமே.

பொழிப்புரை :—இறைவ! மண்ணொத்து என் மனமொத்த மகா மாயையின் சேஷ்டிதமியாவு மொழிந்து உண்மைப்பொருள் வெளிக்காண்பான் என்னிரண்டு கண்களிலும் மணியெனவும் பொருந்தவோர் சொப்பனமுங் கண்டு கொண்டேன் என்பது.

குறிப்புரை :—மாயாசகித மனோசேஷ்டைகள் யாவுமொழிந்து மன மயர்ந்து விழ, பரவெளிக்காண்பான் பெரிய பேரறிவாம் நேத்திரத்தானே கனவுங் கண்டறிந்தேன் என்பது. (332)

௩௩௩. மண்ணீர்மை யாலே மயங்காதுன் கையாலென்
கண்ணீர் துடைக்கவுநான் கண்டேன் பராபரமே.

பொழிப்புரை :—இறைவ! இவ்வுலக மாயா விசேடத்தாலே சிறிது மனமயக்க மெய்தாதபடி, நின் திருக்கரத்தினாலே யான் அழுத கண்ணீரைத் துடைத்தருளவும் யான் கனாக் கண்டனன் என்பது.

குறிப்புரை :—மாயா சகிதத்தாற் றினைத்தமை தெளியச்செய்து, துன்புற்ற கண்ணீரையுந் துடைத்தாண்டா னென்பதுவும் இதனால் நன்கு புலப் படலாயிற்று என்பது. (333)

௩௩௪. உள்ள துணரா வுணர்விலிமா பாவியென்றோ
மெள்ளமெள்ளக் கைநெகிழ விட்டாய் பராபரமே.

பொழிப்புரை :—யதார்த்த நிலையைச் சிறிதும் உணர்தற்கில்லா மந்தனென்றோ தேவரீர் சாவதானமாக வெளிய பாவியை தாந்திரீகமாய் கை நழுவ விட்டுவிட்டனை போலும்!

குறிப்புரை :—இறைவ! அடைக்கலம் புகுந்த ஏழைப் பாவியை, உண்மைவத்துவை அறியப்படாச் சாமானிய னெனக்கண்டு தான் இவ்வளவு காலந்தாழ்ந்தும் அருள்புரியாது கை நழுவவிட்டனை? நின் தந்திரம் மா மந்திரமேயாம்! (334)

௩௩௫. எல்லா நினதுசெய லென்றெண்ணு மெண்ணமுநீ
யல்லா லெனக்குளதோ வையா பராபரமே.

பொழிப்புரை :—இறைவ! யாவும் நின் செயலே யென்றுன்னும் எண்ணத்தை எண்பிக்கும் இறைமை நின்னதாதலின் எளியன் செயலென்று கொள்ளற் கிடனில்லையே! யெனப்பா! ஆகவே, உண்மையுணராதே னல்லேன்.

குறிப்புரை .—இறைவனே! யான் உண்மையுணரான் என்று என்னை யேய்க்கவே பார்க்கிறீர்; அஃதறிந்தயான் உம்மை யறியவே இம்மட்டும் ஏய்த்துப் பார்க்கின்றேன் என்பது. அதிர்ஷ்டம் யாவர் பங்கிலோ தெரிந் திலேன்! (335)

௩௩௬. பந்த மயக்கிருக்கப் பற்றொழிந்தே னென்றுளறும்
இந்த மயக்க மெனக்கேன் பராபரமே.

பொழிப்புரை :—இம்மண்ணுலக வாஞ்சை நீறுபூத்த நெருப்பன்ன உண்ணிகழ்ந்தொளிர, "ஆசைக்கு அநுமதி கொடுத் தனுப்பி விட்டேன்" என்று பேத்துதல் செய்யா நின்ற இத்தீயவோர் மயக்கத்தை எனக்கேன் வைத்தருளினீரோ? தெரிந்திலன். என்பது.

குறிப்புரை :—பெரியார்தம் மறிவின் பேருவப்பே! ஆசாபாச பந்தம் பேசா மவுனிபோல் உள்ளே குந்தியிருக்க, பற்றைப் பற்றற விட்டேனென்று பறைகொட்டிக் கூத்தாடலாம் பெருமயக்கம் எனக்கெற்றுக்கோ வைத்தருளி னீர்? (என்பற்றீதன்று; நின்பற்றே) என்பது. (336)

௩௩௭. காட்சியெல்லாங் கண்ணைவிடக் கண்டதுண்டோ யாதி
ஆட்சியுன தருளே யன்றோ பராபரமே. [னுக்கும்

பொழிப்புரை :—சிறியோர்க் கறிவரிய சிந்தாமணியே! கண்ணறி யாக் காட்சி யுண்டோ! இல்லையென்பார், அதே போன்று சமஸ்தாநுபூதிக் கும் நேத்திரம் தேவரீர்தம் திருவருட் சத்தியே யன்றோ? என்பது.

குறிப்புரை :—சிந்திப்போர்க் கெளிய ஜீவசாட்சியே! கண்ணே காண்பதானாலும், காணப்படும் பொருளையறியும் அறிவே உள்ளிருந்து

கண்ணாகிய சன்னல் வழிபார்த்துணரும் தன்மைத் தாதலின், ஆட்சியாகிய ஞானக்கண்ணை அருட்சத்தி யென்றனர் போலும். 'யாதினுக்கும் ஆட்சி' யென்றதால், அகத்தும் புறத்தும் வியாபித்துள்ளதை என்பது. (337)

௩௩௮. எட்டுத் திசையுமொன்று யின்பமாய் நின்றவுன்னை
விட்டுப் பிரியவிடம் வேறே பராபரமே.

பொழிப்புரை :—எண்டிசா முகமும் நீங்கா நிறைவாயுள்ள பரானந்த வத்துவான நின் திருவடித்தாமரையை விட்டகலற்கு வேறே நின்போன்ற பேரருளாளர் எங்கும் எவருமில்லையே! என்பது.

குறிப்புரை :—எல்லாம் வல்ல இறைவன் நீயேயாமென்று எம்மறையும் சம்மதித்திருக்கவும், யாவையும் நீயன்றி யில்லாமையானும் யான் நின்னைப் பிரிதற் கிடனில்லாதபோது செல்வதெங்கோ?

வெண்பா

எல்லா வுயிர்கட்கு மின்பங் கொடுத்தலினால்
எல்லாஞ் சிவனையே யெண்ணலால்—எல்லாஞ்
சிவனுருவே யாமாற் றெவிட்டாத வின்பஞ்
சிவன்பா லிருக்குமெனத் தேர்.—என்றார் பெரியார். (338)

௩௩௯. பிறியா துயிர்க்குயிராய்ப் பின்னமற வோங்குஞ்
செறிவே யறிவே சிவமே பராபரமே.

பொழிப்புரை :—பரம சித்தாந்தப் பரஞ்சுடரே! சேதனா சேதன நாமரூபப் பிரபஞ்சாதிய வனைத்தையும் விட்டுப் பிரிந்திராமே பொருந்தி யருளும் அபேதமா யோங்கி விளங்கிய நிறைபொருளும், பேரறிவு மயமாயும், சுத்த சிவாம்ஸமாயு முள்ளாயே! என்பது.

குறிப்புரை :—எங்குமா, யெல்லாமாய், அல்லதுமாய் எவ்வுயிர்க்கும் உள்ளுயிராய், எப்பொருட்கு முற்பொருளா யுள்ள வெல்லையிலாப் பெருஞ் சோதிப் பரம்பொருளாயுள்ளாய் நீயே. (339)

௩௪௦. ஏதேது சொன்னாலு மெள்ளளவு நீயிரங்காச்
சூதே தெனக்குளவு சொல்லாய் பராபரமே.

பொழிப்புரை :—எத்தனை நான் யெடுத்தெடுத்துக் கூறினும் தேவரீர் அம்மொழிகொண் டிரக்கமுறாத சூட்ச மென்னவோ? எட்டுணையுங் கருணை செய்யாத உள்மர்ம மென்னோ கூறுவாய்.

குறிப்புரை :—இறைவ! இதுகாறும் அடிமை யெடுத்துரைத்தும், என் குறைக்குப் பதிலாக இரங்காததும் பெருங்கருணைக்குத் தகுந்ததாகுமோ? அல்லது அதன் மர்மந்தான் யாதோ! அறிந்திலன். (340)

௩௪௧. கற்பனையாப் பாடுகின்றேன் கண்ணீருங் கம்பலையுஞ்
சொற்பனத்துங் காணேனென் சொல்வேன் பராபரமே.

பொழிப்புரை :—ஏழையடியேன், மனம்போன வாறாகப் பற்பல வாறாய்ப் பாமாலை சொல்லி வருகின்றேனாலும் யேதேனும் நின் திருவருட் குறிக்கான கண்ணீர் கம்பலையென்பதே கனவினும் கண்டறிந்திலனே! இதற்கென் கடவேன்! என்பது.

குறிப்புரை :—யான் யெனக்குரிய குறை முறை கூறிவருவதைத் தவிர, நின் அருண்முறை யேதும் அடிமையால் காணகில்லேனே! ஈதென் விதி வசமோ! மற்றியாதோ! அறிந்திலன். (341)

௩௪௨. வன்பொன்று நீங்கா மனதிறப்ப மாறாப்பேர்
அன்பொன்றும் போதுமெனக் கையா பராபரமே.

பொழிப்புரை :—வலிமை மிக்க கொடுஞ்செயல் வாய்ந்த மனமிறந்தொழிந்து, தேவரீர்பால் எளியேற்குரித்தாம் இடையறாத பேரன் பொன்றுமே பெரிய பயனைக் கொண்டனன் என் ஐயனே! என்பது.

குறிப்புரை :—இப்பேதைக்கு முதற் பயனாய்ப் பெற்றது மனமிறத்தலொன்றானாலும், நின்பால் நீண்ட அன்பைப் பெற்றுள்ளதே பெரிய பதவியாகக் கருதியுள்ளேன் என்பதாம். (342)

௩௪௩. ஏதுந் தெரியா வெளியேனை வாவெனநின்
போதநிலை காட்டிற் பொறாதோ பராபரமே.

பொழிப்புரை :—யாதொரு சாதனமுறையுந் தெரிந்தில்லாத யேழை மதிப்பேதைக் கிரங்கியருளி, வருவா யென்றழைத்து நினது பரம ஞான நிலையினை அறிவித்தருளாலும் இவ்வுலகம் தாங்காதோ? ஈதென்ன புதுமையோ!

குறிப்புரை :—இறைமைத்தேவே! நின் முறைமை மாநன்றே! சாமானியமாக ஓர் சாதனமுந் தெரிந்திராதவனானாலும், நின்பேரருளினாலே இரக்கமுற்று எளியேனை வருவித்து ஒப்பற்ற ஞானநிலையை யோதியறிவிக்கின், அதுகொண்டுலகம் அதெப்படியென்று நின்னைக் கண்டித்துவிடுமோ?

இதனால் முன்னம் நால்வர்க்கிரங்கி கைக்காட்டியருளலாம் உபதேசம் செய்தமைபோன்று எளியேற்கும் அறிவிக்கத்தகாதோ என்பது இதுவும், அடிமைச் சுதந்தரங் கொண்டன்பொடும் வினுதல் செய்ததாம். (343)

௩௪௪. ஓராம லெல்லா மொழிந்தேற்குன் றெய்வவருள்
தாரா திருக்கத் தகுமோ பராபரமே.

பொழிப்புரை :—பேராயிரம் படைத்த பெம்மானே! அடிமை யாது முணராமே உள்ளதுள்ளபடியாகவே கூறிவந்த எளியவனுக்கும் நினது ஒப் பற்ற தெய்வீகம்வாய்ந்த திருவருட் பிரசாத மளித்துக் காத்தருளாமையுந் தக்கதாமோ !

குறிப்புரை: —என்னிலே யாவையும் ஒன்றுமொளியா துரைத்தும், நீ திருவருள் வழக்கமே வழங்கா திருப்பதும் நீதியாமோ ! என்பது. (344)

௩௪௫. மோனந் தருஞான மூட்டி யெனக்குவட்டா
ஆனந்த வாழ்க்கை யருளாய் பராபரமே.

பொழிப்புரை:—மவுனத்திற் காஸ்பதமான ஞானவமுதருந்தி திகட்ட லில்லாத பரமானந்தப் பெருவாழ்வினை யெளியேற் கனுக்ரகித்து அருளு லும் என்றுகொலோ வென்று இரக்கின்றேன். என்பது.

குறிப்புரை :—உத்தமோத்தமமான மெய்ஞ்ஞானம் பாலித்து மவுனத் திருத்தி யென்னை சதானந்தப் பெருவாழ்வில் நிலைநிறுத்துவாயாக. (345)

௩௪௬. வாடுமுகங் கண்டென்னை வாடாம லேகாத்த
நீடுங் கருணை நிறைவே பராபரமே.

பொழிப்புரை :—இறைவ ! வாட்டமடைந்த என் முகநோக்கி வாடா தருள்வான் வேண்டி கருணையை யென்பால் பெருக்கிய சர்வ பரிபூரணவத் துவே ! அருளன்னையார் தம்மை யடுத்தில்லையோ ! (346)

௩௪௭. புந்தியினு னின்னடியைப் போற்றுகின்ற மெய்யடியார்
சிந்தையிறப் போநின் றியானம் பராபரமே.

பொழிப்புரை :—அந்தமிலின்பத் தருணிறைவே ! தேவரீர்தம் திரு வடித் தாமரையை தனது புத்தியைக்கொண்டு துதிபுரியும் மெய்யன்பர் களது மனோ நாசமுறுவது தானோ நின் மெய்த்தியான யோகமாகும் ? (எனக்கு நன்கறிவுறுத்துவாயாக.)

குறிப்புரை :—இவ்வினவின் கருத்தாவது :—கிஞ்சித்தும் நெஞ்சம் யாதொரு நினைவுங் கொள்ளாமே சும்மாயிருக்கும் சாதனத்தில், இறைவன் தியானமேதான் வந்துறும் தன்மைத்தாதலின், அதனைக் காட்டாது காட்டியருளினர் போலுமென்க. ஆகவே, அங்ஙனம் சும்மா யிருப்பதுவே தியானயோக மென்றார் பெரியாரும்.

செம்மான் மகளைத் திருடுந் திருடன்
பெம்மான் முருகன் பிறவா னிறவான்
சும்மா விருசொல் லறவென் றலுமே
அம்மா பொருளொன் றுமறிந் திலனே.

என்று அருணகிரியார் குறிப்பிட்டது மதுவே யென்ப. (347)

௩௪அ. உனக்குவமை யாக்கருணை யுள்ளவரும் வன்மைக்
கெனக்குவமை யானவரு மில்லை பராபரமே.

பொழிப்புரை :—இறைவனே ! நின்பெருமை பொருந்திய கருணைக்கு உவமையாக வொருவரைக் கூறவும், வன்னெஞ்சில் எனக்கு ஒப்பானவரும் இங்கு கண்டிலேன் என்பது.

குறிப்புரை :—இதனால், இறைவனை நோக்கி, நீயோ கருணையிற் சிறந்துள்ளாய் ; யானோ கடுஞ்சித்த முள்ளவனாயுள்ளேன் ; ஆனாலும் என் கன்னெஞ்சைக் கரையச் செய்யவேண்டுவது நின் கருணையால் என்பது. (348)

௩௪௯. தாயிருந்தும் பிள்ளை தளர்ந்தாற்போ லெவ்விடத்தும்
நீயிருந்து நான்றளர்ந்து நின்றேன் பராபரமே.

பொழிப்புரை :—பெற்ற தாயார் இருக்கும் பிள்ளையானது தயங்குவது போலவே, யாண்டும் நீ வியாபகமாக விளங்கியிருந்தாலும் நின் அடிமைப் பிள்ளையாகிய யான் அருளின்றி வாடுவதுந் தருமமோ என்பது.

குறிப்புரை :—இறைவ ! திருவருட் சத்தியாராய பரம கருணை நிதியன்னை யிருக்கிறபோது, அநாதைபோன்று அடிமை வருந்திக் கதறுவதும் நினக்கு அழகாயிருக்கிறதோ ? என்பது. (349)

௩௫0. வாயாற் கிணறுகெட்ட வாறேபோல் வாய்பேசிப்
பேயானார்க் கின்பமுண்டோ பேசாய் பராபரமே.

பொழிப்புரை :—கேணியானது சும்மாயிராதுதான் தன் வாயினாலே கெட்டாற் போன்று, வாயினாலே வெறும் ஞானப் பேச்சுப்பேசி போது போக்கும் பைத்தியக்காரர்களுக்கு சிற்சுகோதயம் உண்டாகா தென்பதாம்.

குறிப்புரை :—உள்ளபடியான சாதனை புரிந்து பரமனடியிணைக்குப் பக்தி பூர்வமா யாட்படாமே வீணான வாசா கைங்கரியக் காரர்களானோர்க்கு மெய்ஞ்ஞானப் பேறும் சுகமும் மேவுமோ! பாடுபட்டார்க்கன்றிப் பார்த் திருந்தார்க்கும் பயனெய்துமோ என்பது. (350)

௩௫௧. பாவமென்று லேதும் பயமின்றிச் செய்யவிந்தச்
சீவனுக்கார் போதந் தெரித்தார் பராபரமே.

பொழிப்புரை :—கொடிய தீச்செயல் செய்யத்துணிந்த இச்சீவான் மனுக்கு, செய்தற்குமுன் துணிவைக் கெடுத்தருளியது யாவெரென்று தெரியவில்லையே!

குறிப்புரை :—இதனால், பாவகிருத்தியம் புரிபவனைப் பிரேரகசத்தியா யிருந்து செய்யத்தூண்டினது இறைவன்றன் மாயாசத்தியே யாதலால், ஈண்டு மாயையைக்குறிக்கும் மெய்ந்நூலென்ப. (351)

௩௫௨. இன்ப நிருவிகற்ப மின்றேதா வன்றெனிலோ
துன்பம் பொறுப்பரிது சொன்னேன் பராபரமே.

பொழிப்புரை :—நல்லோர் தொழு ஞானநவமணியே! பரம சுகானு பவத்திற்காதாரமான நிருவிகற்ப நிட்டையினை எளியேற்கு இப்போதே அநுக்ரகிப்பாய், இல்லையானாலோ, யேற்படவிருக்கும் கஷ்டம் சகிப்புற எளியனாலாகாது, சொல்லி விட்டேன் என்பது.

குறிப்புரை :—இறைவ! நிருவிகற்ப நிட்டையை யருளிச் சுகத்திற்கு ஆஸ்பத மில்லாமற் போமேல் என்னால் இனி இலவலேசமுந் துன்ப நுகர வொண்ணா தென்பதே. (352)

௩௫௩. கற்குநிலை கற்றாற் கருவியவி ழாதருளாய்
நிற்குநிலை கற்பதுவே நீதம் பராபரமே.

பொழிப்புரை :—கற்றறிய வேண்டிய நிலையெதுவோ அதை யறிந்து கற்பின் கருவி காரணாதிகள் சிறிதும் ஓய்வுறாமேபோகா; ஆனாலும், திருவரு ளம்சமா யிருந்திடும் ஓர் நிலையினைக் கற்றலே நியாயமாகு மென்பது ஆன் றோர் கூறிய சான்றும்.

குறிப்புரை :—இனிக் கற்பன கற்றுக் கருவியாதியன ஒடுங்கச் செய்த வினும், திருவருள் சார்பில் நிற்றலே நியாயமும், நன்மைபயக்குந் தன்மையு முளவா மென்பது முடிவுரையாகும். (353)

௩௫௪. தாய்ச்சச் சுடர்விடும்பொற் கட்டிபோ னின்மலமாய்ப்
பேச்சற்றவரே பிறவார் பராபரமே.

பொழிப்புரை :—பொன்னை உருக்கு முகத்தில் மிக்க சுடர் பிரகாசிப் பதியல்பாம்; அதுபோன்றே வார்த்தை யொழிந்த மவுனநிலைகொண்ட மகா ஞானியரே இனிப்பிறந்திறவா பேரின்ப நிலையெய்துவர் என்பது.

குறிப்புரை :—கருவி கரணாதிய வினைத்தையும் ஓய்வுறக்கண்ட சுத்த மௌனம் சித்தித்துவிடின், பின்னர் அன்னார் பெருமைக்கோர் அளவே யிடையாவாம். (சுத்தசிவத்தை யொத்தாராவரே).

வெண்பா

எல்லாங் கழன்றிடமே யேகாந்த மானவிடஞ்
சொல்லா ரிறந்திடமே சுகவுதய—நில்லா
விசுவ மிறந்திடமே மென்சுவர்க்க மென்றான்
சிசுக்குமுடி சாய்த்த சிவன். (354)

௩௫௫. பற்றொழிந்து சிந்தை பதைப்பொழிந்து தானேதான்
அற்றிருப்ப தென்றைக் கமைப்பாய் பராபரமே.

பொழிப்புரை—:இறைவ! இருமைப்போகானுபவப் பற்றுக்களு மற்று, மற்றும் மனாதிகளின் சலிப்பதுமொடுங்கிச் சீவபோத முதலியமுனைப் பொழிந்து நிற்றலாகிய பரிசுத்த நிலையை யனுக்ரகிப்ப தென்றைக்கோ வறியேன் எனையனே.

குறிப்புரை :—இம்மை மறுமையனுபவ ஆசையை யொழித்து, மனக் குதிப்பு மொழிந்து, சிவபோதமாய் நிற்கும் அந்த நன்னிலையினை யெளியேற் கருள்வதும் எக்காலமோ என்பது. (355)

௩௫௬. உருவெளிதான் வாதவூ ருக்தமர்க்கல் லாலினமுங்
குருவழிநின் றார்க்குமுண்டோ கூறாய் பராபரமே.

பொழிப்புரை :—இறையவனே! சிதாகாயப் பரவெளியால் ஸ்ரீவாத வூராளியராம் மணிவாசகப் பெரியாரைக் கலந்து ஆண்டருளியது போன்று, குருவழி நின்று அடிமை பூண்டு பக்தியால் பணிந்தார்க்கும் அம்முறையாய் அயிக்கியப் படுத்திக் கொள்ளுதலும் உளவாமோ சொல்லியருள்வாய் என்பது.

குறிப்புரை: —“வான்கலந்த மாணிக்க வாசக” வென்றோர் வாசக மெடுத்தோதிய பெரியார் கருத்தொக்க, இனியும் அவ்வயிக்யபதவி குரு முறை கொண்ட மெய்யன்பர்க்கு முண்டாமோ வென்பதாம். வாதவூ ருத்தமரொன்றது, பணியினைக் கருதி யென்பதாம். (356)

௩௫௭. தேகமியா தேனுமொரு சித்திபெறச் சீவன்முத்தி
யாகுநெறி நல்லநெறி யையா பராபரமே.

பொழிப்புரை :—இந்த மானிட சரீரமுள்ளபோதே எதாவது ஓர்வித சித்தி முத்தியினைப் பெறுவதில் சீவன் முத்திபெறுவதுதான் மிகவும் நன் மார்க்கமானதாகும் எனையனே !

குறிப்புரை :—மேன்மையான மனிதவுடல் மாயுமுன்னர் யாதொரு சித்தியைப் பெற்றிடல் அவசியமாகும் ; அதிலும் சீவனோடு முத்தியடைத லன்றி பின்னர் பெறுவோமென்றல் பேதமையாகும். (357)

௩௫௮. உலகநெறி போற்சடல மோயவுயிர் முத்தி
இலகுமெனல் பந்த வியல்போ பராபரமே.

பொழிப்புரை :—அநித்தியமான இப்பிரபஞ்ச அநுபவாதிகளைப் போன்று மானிடதேகம் வியோகமாயின பின்னர், ஆன்மா மோக்ஷபதவி யைப் பெற்றிடுமென்று நிச்சயித்தலானது பாசத்தின் பிணிப் பொக்கு மன்றே யென்பதாம்.

குறிப்புரை :—இவ்வநித்திய உடலுள்ளபோதே மனோநாசமுற்று அமல யோகமெய்திச் சிற்சத்தியின் கிருபாநோக்கால் திருவருள் கூடப்பெற்று முப் புறமென்னும் அவத்தாத்திரயங் கடந்து அப்பாலுள்ள துரியநிலை பேறடை தல்தான் நிலைபெற்ற முக்தியாகுமன்றி உடற்கொரு முத்தியும் பின்னர் உயிர்க்கொரு முத்தியு மின்றாமென்று நன்றாயறிக. (358)

௩௫௯. பரமாப் பரவெளியாப் பார்ப்பதல்லான் மற்றெவர்க்குந்
திரமேது மில்லைநன்றாய்த் தேர்ந்தேன் பராபரமே.

பொழிப்புரை :—ஒப்பற்ற சுயஞ்சோதிப் பரம்பொருளைத் தம்மறிவி னாலே, பரமாயும் பராகாயமாகவுங் கருதி நோக்கலேயல்லாது மற்று மோர் ஞானச் சுகவழியில் நின்று சித்திபெறுதலின்றென்றே நன்கு விளங்கிக் கொண்டேன் என்பது.

குறிப்புரை :—இறைவன் திருவருளால் சற்குரு தரிசனங் கிடைத்தும், அவரால் உத்தமமான உபதேசம் பெற்றும், அம்முறை நின்று அநுபூதி யடைந்து துரியாதீதமாய அத்துவிதமாவதுவே மேலான ஐக்கிய பதவியாக் காண்டலே தூநெறியாம் என்பது. (359)

௩௬௦. தேடுவே னின்னருளைத் தேடுமுன்னே யெய்திநடம்
ஆடுவே ஞனந்த மாவேன் பராபரமே.

பொழிப்புரை :—சிற்சபைக்கண் வாழ் பெரிய சீமானே ! நினது மேலான திருவருட் செல்வத்தை ஆராய்வேன் ; அவ்வண்ணம் அது

கிடைக்கப் பெற்றால், யானும் பரமானந்த நட்டம் பயில்வேன்! அன்றிச் சின்மயானந்த நித்திரையுஞ் செய்துய்வேன்.

குறிப்புரை :—கள்ளமிலா ருள்ளம்வாழ் கற்பகமே! தேவரீர்தம் திருவருளைத் தேடியது கைக்குவரின் ஆடுவதும் பாடுவது மல்லால் மற்றெனக்கும் நினைக் கூடிடவே வேலையாக் கொள்வேன் என்பதாம். (360)

௩௬௧. உள்ளங் குழையவுடல் குழைய வுள்ளிருந்த
கள்ளங் குழையவென்று காண்பேன் பராபரமே.

பொழிப்புரை :—கொன்றை முடிக்கணிந்த கோமானே! என்னெஞ்சங்குழையவும், சரீரம் வாடவும், என்னகத்துள்ள வஞ்சம் குழைந்திடவும் நின் பொன் வடிவப் பொலிவை யென்று கொலோ தரிசிக்கப் பெறுவேன் என்பதாம்.

குறிப்புரை :—இதனால், இறைவன் திருவடி தரிசனம் கிடைத்த ஞான்றே மனமும் சரீரமும், மற்றும் அந்தக் கரணாதிகளில் வஞ்ச நிலையும் எல்லாமே நீராளமாய் நெகிழ்ந்து விடுமென்பது நிச்சய வார்த்தையாகும். என்பது. (361)

௩௬௨. பட்டப்பகல் போலப்பாழ்த்த சிந்தை மாளினெல்லாம்
வெட்டவெளி யாக விளங்கும் பராபரமே.

பொழிப்புரை :—இறைவ! பாழடைந்த என்மனமானது, பகலைப் போன்று ஒழிந்து வெளிச்சமாம்போது, யான் பெறற்கரியனவாய அனைத்தையும் வெள்ளிடை மலையென விளக்கமுறும் என்பது.

குறிப்புரை :—மனமிறந்த வக்கணமே இராப்பகலற்ற யேகவெளிக்கண் காண்பன வனைத்தும் காண்டகு மென்பதாம். ஈண்டு மனமிறத்தலாவது, நினைப்பு மறப்பு மற்றிருத்தலேயாம் என்பது. (362)

௩௬௩. பார்க்கினணுப் போற்கிடந்த பாழ்ஞ்சிந்தை மாளி
யார்க்குச் சரியிடலா மையா பராபரமே. [னென்னை

பொழிப்புரை :—ஆராய்ந்து பார்க்கும்போது பரமாணுப் பிரமாணமாகக் காணப்பட்டுள்ள பாழாகும் நெஞ்சமானது சிந்தையுறவே யொழியுமாயின், அதுமுதலாக எனை எவர்க்கு ஈடாகக் கூறலாமென் ஐயனே!

குறிப்புரை :—அநுபூதிச் செல்வர்களுக்கு முதற்கண் முக்கியமாகச் சிந்தை நசிந்தொழிதல் சித்தியாமேல் அதினின்றும் படிப்படியாக சகலானுபூதியுஞ் சித்தியாகி திருவருளுங்கைக் கொண்டு முத்திக்கரையேறலு முடிந்

திடு மென்பது முறையாதல் கொண்டே "யார்க்குச் சரியிடலா" மென்றனர். ஆதல்கொண்டே ஆசிரியரும் மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் என்றார் போலும். (363)

௩௬௪. பாட்டுக்கோ வன்பினுக்கோ பத்திக்கோ வன்பர்தங்கள்
நீட்டுக்கெல் லாங்குறுகி நின்றாய் பராபரமே.

பொழிப்புரை :—மெய்யடியவர்தம் பாமாலையென்ன, அன்றியவர்தம் அன்பென்ன, மற்றும் அன்னார் உண்மைப் பத்தியென்ன, இவை முதலாக அன்பர்போன போக்கின் வழிக்கெல்லாம் பிணைபட்டுச் சிறுத்துக் காணப் பட்டாயே! நின் அன்பென்ன அன்போ!

குறிப்புரை :—நின்பால் அன்பால் உடல் பொருளாவி மூன்றையுந் தத்தஞ் செய்த மெய்யடியார்க்கு தாம் ஈடு பட்டதை நோக்குமிடத்து, அன்பரன்பு தம்மன்புக்கு ஆயிரத்திலோர் கூறு மிணையாகாதே! தேவரீர்தம் தாழ்மையை யென்னென்று கருதி யெவ்வாறு துதிப்பேம்! ஆ! எனையனே! இது கண்டன்றோ, மணிவாசகப் பெரியாரும் அன்று,—"தம்பெருமை தாமறியாத் தன்மையன்காண் சாழலோ" என்றார். (364)

௩௬௫. முத்தாந்த வித்தே முளைக்குநில மாயெழுந்த
சித்தாந்த மார்க்கச் சிறப்பே பராபரமே.

பொழிப்புரை :—முத்தி முடிவென விளங்கியுள்ள விதையானது முளைத்தற் காதாரமாயுள்ள சித்தாந்த மார்க்கமாம் சிறந்த பூமியே!

குறிப்புரை :—முத்தாந்த இறுதிக்கண் காண்டகும் முழுமுதற் பொருளானது வித்தாதலால், அப்பரவித்து முளைத்துத் தோன்றிப் பலனளித்து வாழிடமானது சித்தாந்த நெறியாம் பூமி யென்பதே தெளிவுறக்காண்டகும் என்பது. (365)

௩௬௬. உன்னு வெளியா யுறங்காத பேருணர்வாய்
என்னுயிக் குள்ளே யிருந்தாய் பராபரமே.

பொழிப்புரை: —நினைத்தற் கருமையாய பராகாயமாயும், தூங்குதலற்ற பேருணர்ச்சியாயும் எனது ஆன்மாவினகத்திருந் தருளினையே! நின் வன்மை யென்னே!

குறிப்புரை :—இறைவனே! தேவரீர் எண்ணற்கரிய பரவெளியாயும் மங்கலிலாப் பேருணர்ச்சியாகவும் என்னகத்தே உயிர்க்குள்ளுயிராய்ப் பொருந்தியிருந்துவரும் பேராற்றலை யெவ்வாறறிந்து யாவர்பாற் கூறுவதோ! (366)

௩௬எ. தத்துவமெல் லாமகன்ற தன்மையர்க்குச் சின்மயமாம்
நித்தமுத்த சுத்த நிறைவே பராபரமே.

பொழிப்புரை :—தத்துவ நிலையெலாந் தாண்டி நிற்கும் தன்மையோ ராகிய மெய்ஞ்ஞானியர்க்கு என்றும் விளங்குபவனே, முத்தி முதல்வனே, சுத்தனே, பரிபூரணம்சனே ! என்பதாம்.

குறிப்புரை :—தத்துவாதீத ஞானியர்களுக்கு ஞானமயமான முத்தனே ! பரிசுத்த பரிபூரணனே ! இறையவனே யென்றபடி. (367)

௩௬அ. உள்ளக் கொதிப்பகல வுள்ளுள்ளே யானந்த
வெள்ள மலர்க்கருணை வேண்டும் பராபரமே.

பொழிப்புரை :—இறைவ ! என்னகத்துள்ள மனோதுக்கங்களனைத்தும் நீங்குமாறதாக, நெஞ்சத்து நிலவும் சுகானந்த வெள்ளத்தில் முளைத்தெழுந்த கஞ்சமலர் எனுங் கருணை பூத்தருளல் வேண்டும்.

குறிப்புரை :—திருவருள் பெறுது அடைந்துவருந் துக்கங்களொழியும் படிக்கு நின் பரமானந்த வெள்ளத்திலே கருணைக் கஞ்சமலர் பூத்தருளவே எளியேன் வேண்டிநிற்கின்றேன் என்பது. (368)

௩௬௯. என்னைப் புரப்பதரு ளின்கடனு மென்கடனும்
நின்னிற் பணியறவே நிற்கை பராபரமே.

பொழிப்புரை :—எம்மானே ! இந்த யேழை யடிமையைக் காத்தருள வேண்டுவது நின் ஒப்பற்ற திருவருளின் பரமாகும் ; என் கடமையோ வென்றால், தேவரீர் தம் திருப்பணிவிடையே செய்து கிடத்தலா மென்பாம்.

குறிப்புரை :—என்னைக் காத்தருளல் நின்னருளின் கடமையும், தம் பணியையே புரிந்து நிற்பது என் கடமையுமாம் என்பது. (369)

௩௭௦. தானேயா னன்னிலையைத் தந்தவரு ளானந்த
வானே மனுதீத வாழ்வே பராபரமே.

பொழிப்புரை :—அனைத்தும் தாமாகியும், யானும் தன்னவனுக்கியு முள்ள மேலானவோர் உத்தம நிலையினைக் கொடுத்தருளிய கிருபா மயமான ஞானுகாயமே ! மனத்திற்கும் அப்பாற்பட்ட அதீத பரம வாழ்வே ! என்பதாம்.

குறிப்புரை :—எனைத் தானாகச் செய்த நல்லவோர் தன்மையைக் கொடுத்தருளிய திருவருளானந்த ஞானவெளியே! மனத்தாலு மன்ன வொணா பெருவாழ்வே என்பது. (370)

௩௭௧. மண்ணாதி பூதமெல்லாம் வைத்திருந்த நின்னிறைவைக்
கண்ணாரக் கண்டு களித்தேன் பராபரமே.

பொழிப்புரை :—மண்முதலாயுள்ள சமஸ்த பூதான்மாக்களையும் நின் அருள்வெளியினூடே அடக்கிவைத்திருந்த மர்மத்தை அதாவது பரிபூரண நிலையை யான் என் கண்கூடாகப் பார்த்து ஆனந்தமடையலானேன் என்பது.

குறிப்புரை :—பிருதிவிமுதலாய பஞ்சபூதங்களையும் நின் பரிபூரணத் திருவருள் வெளிக்குளே நன்கு விளங்க என்னறிவினாற் காணப்பெற்றேன். அதாவது,—சராசரங்கள் யாவும் அப்பரமாத்மன் அம்சமே யென்பதை சொல்வழி கேட்டமை போன்று அநுபூதியிலும் உணர்ந்தமையால் ‘ களித்தே ’ னென்றனர் என்பது. (371)

௩௭௨. அறியாமை யீதென் றறிவித்த வன்றேதான்
பிறியா வருணிலையும் பெற்றேன் பராபரமே.

பொழிப்புரை :—விளங்கப் பெருமையானது இத்தன்மையதென்று அன்று எளியேற் கறிவித்த போதுதான், என்னைப் பிரிவுறாத் திருவருணிலையிலே யான் நிலைபெறுவதும் பெற்றேன் என்பது.

குறிப்புரை :—தெரியாதன தெரிவித்த அப்போதே அடிமையைவிட் டகலா வருணிறைவில் யான் நிலைபெற்றேன் என்பதாம். இந்நிலையினை வள்ளற் பெரியாரும் :—

“ அருணிலை விளங்கு சிற்றம்பல மெனுஞ்சிவ
சுகாதீத வெளிநடுவிலே
யண்டபகி ரண்ட கோடிகளுஞ் சராசர
மனைத்து மவையாக்கன் முதலாம்
பொருணிலைச் சத்தரொடு சத்திகளனந்தமும்
பொற்பொடு விளங்கியோங்க ”—என்பதாலுணர்க. (372)

௩௭௩. தீதெனவு நன்றெனவுந் தேர்ந்துநான் றேர்ந்தபடி
ஏது நடக்கவொட்டா தென்னே பராபரமே.

பொழிப்புரை :—தீயனவும் நல்லனவும் யானறிந்திருந்தும், அம் முறையை யான் அநுசரித்து வர முடியாமைக்குக் காரணமியாதோ அதை யறிவிப்பாயாக என்பது.

குறிப்புரை:—தீமை நன்மை தெரிந்துள்ள எளியேற்கும் அதிற் றள்ள வேண்டியன விலக்கிக் கொள்ளவேண்டியன கொண்டு செல்வதற்குச் சாத்திய மாகாமைக்குக் காரணமியாதோ என்பது. (373)

௩௭௪. கண்டவறி வகண்டா காரமென மெய்யறிவிற்
கொண்டவர்க்கே முக்தி கொடுப்பாய் பராபரமே.

பொழிப்புரை :—கண்ணளவுக் கெட்டியவரைக் கண்டசொரூபமே அகண்டாகார மெனவும் தம் பகுத்தறிவாலறிந்துள்ள பேரறிவாளர்க்கே மோக்ஷபத மருளுவைபோலும் என்பதாம்.

குறிப்புரை :—கண்ட சொரூபம், அகண்ட சொரூபம் என இருவகையுள் இறைவன் சொரூபம் கண்டமாப் பாராது அகண்டமாப் பார்த்துள்ள பெரியார்க்கு மட்டுமே மோக்ஷபதவி கிடைக்கு மென்பதாயிற்று. (374)

௩௭௫. ஈறுக வல்வினைநா னென்றுமவ லின்பசுகம்
பேறும் படிக்கடிமை பெற்றேன் பராபரமே.

பொழிப்புரை :—கொடியவினை முடியுங்காறும் நானென்றே முன்னேறுது நிர்மலானந்தம் நிலைபெறுமாறு நின்பால் அடைக்கல மெய்தப்பெற்றேன் என்பதாம்.

குறிப்புரை :—தீயவினை சூன்யமடைய வேண்டி, அகங்கார சேஷ்டித மென்பதைத் தலை நிமிராதடித்து விலக்கி பரானந்தமெய்துமாறு நினக்கு அபயமாயினேன் என்பதாம். (375)

௩௭௬. பெற்றா ரநுபூதி பேசாத மோனநிலை
கற்றா ருனைப்பிரியார் கண்டாய் பராபரமே.

பொழிப்புரை :—சுவானுபூதி சித்தியாகப்பெற்றோரும், பேச்சற்ற மவுன சாதனையிற்றெளிந்த மெய்ஞ்ஞானியரும் நின்னையென்றும் பிரிந்திராரென்பதாம். இது நீ யறிந்ததே!

குறிப்புரை :—சுவானுபவச் சாதனையிற் சிறந்தாரும், உண்மை ஞானியரும் இமைப்போதும் நின்னைப்பிரிந்திரா ரென்பது மறிவாய். இதனால் ஞானிகள் தன்மயமே யாவரென்பது விகசிதமாயிற்று. (376)

௩௭௭. நீயே நானென்று நினைப்பு மறப்புமறத்
தாயே யனையவரு டந்தாய் பராபரமே.

பொழிப்புரை :—இறைவ ! நீ நான், நான் நீ யென்கின்ற பேதவெண்ணமும் மறத்தலு மொழிந்துபோமாறு தாயையொத்த திருவருளைத் தந்தருளினை ! யென்பதாம்.

குறிப்புரை:—நீ நானென்னும் பேதமொழிந்து அபேதமாய், அதாவது துவிதபாவமற்று அத்துவித பாவமுற்று வாழ்தற்கே நின் திருவருள் தந்தாண்டனை யென்பதாம். (377)

௩௭அ. சஞ்சலமற் றெல்லாநீ தானென் றுணர்ந்தேனென்
அஞ்சலியுங் கொள்ளா யரசே பராபரமே.

பொழிப்புரை :—மனோசாஞ்சல்ய மனைத்தும் அறவேயொழித்து, சகலமும் நீயே யென்றுணரப்பெற்றேன் ; ஆகவே, இனி தேவரீர் என் வணக்கமாய சிரமேற் கரங்குவித்துத் துதித்தலை, யங்கீகரித்தாண்டருளவேண்டு மென்பதாம்.

குறிப்புரை :—இறைவனே ! அவ்யாகிருத வியாபாரமாய மனச்சலனதிகளொழிந்து யாவும் நீயேயென நன்குணர்ந்தால், இனி யென் வந்தனுதிகளைப்பெற்று ஆண்டருள்வாயாக. என்பது, (378)

௩௭௯. பூதமுத னாதவரை பொய்யென்ற மெய்யரெல்லாங்
காதலித்த வின்பக் கடலே பராபரமே.

பொழிப்புரை:—ஞானவெளிவாழும் நடத்தரசே ! ஐம்பூத முதலாகிய நாதபரியந்த முள்ளதத்துவாதிகளை யெல்லாம் பொய்யென்றே கண்டொதுக்கிய உண்மை ஞானியரெவர்களோ அவர்களெல்லாம் மிகவும் விரும்பிய பேரின்பவாரியே! என்பது.

குறிப்புரை :—பூதாதி நாதமீறும் தத்துவகூட்டங்கள் மித்தை யெனக் கண்டு, அவை பொருளல்லவெனக்கடந்து, அப்பாலாம் துரியநிலையுள்ள தூயர்களான ஞானயோகியர் தம் அநுபவமாகிய பேரின்ப வாரிதியே ! என்பது. (379)

[வேறுய்ப்

௩அ0. வாக்குமன மொன்றுபட்ட வார்த்தையல்லால் வெவ்
போக்குடைய வார்த்தை பொருந்தேன் பராபரமே.

பொழிப்புரை :—மனவாக் கொருப்பட்ட சொல்லேயல்லாமல், பலவிதப் போக்கான வார்த்தையை யான் ஒருபோதும் அறிவிற் கொள்ளுதல் எனக்கு வழக்கமில்லை யென்பதாம்.

குறிப்புரை :—மனவாக்கினுக்கு நேராகாதவோர் சொல்லை அங்கீகரித்தல் செய்தறியேன் பின்னவெரதைக் கொள்வேனென்றால், உள்ளமும் புறமும் ஒத்தசொல்லே கோள்வதென்றனர் போலும்.

மனவாக்குக் காயத்தால் வல்வினை மூளும்
மனவாக்கு நேர் நிற்கில் வல்வினை மன்னா
மனவாக்குக் கெட்டவர் வாதனை தன்னாற்
றனைமாற்றி யாற்றத் தகுஞானி தானே. (380)

௩அக. வன்மையின்றி யெல்லா மறிக்துணர்வாய்க் காகெடுவேன்
தன்மையொன்றுந் தோயாத் தடையோ பராபரமே.

பொழிப்புரை :—மனவலிமையற்று யெவற்றையும் திருவருள் வலத்தால் அறிகின்ற நினக்கு, யென்னையடைய, அந்தோ ! கெடுமையேன் பரிபக்குவ மிலனாய்விட்டேனே ! என்செய்வது ! என்பது.

குறிப்புரை :—பக்குவப்பட்டிராத யெளியனைக்கலந்தருளப் பொருந்தாமைக்கு ஏது என் துர்ப்பாக்கியமே யன்றி மற்றன் றென்க. (381)

௩அஉ. பத்தர்சித்தர் வாழிபரி பக்குவர்கள் வாழிசெங்கோல்
வைத்தவர்கள் வாழிகுரு வாழி பராபரமே.

பொழிப்புரை :—பரமபக்தர்களும் சித்து புருஷர்களும் நாளும் வாழ்ந்திடுக ; பரிபக்குவமுடையோரும் வாழ்ந்திடுக ; மற்றும் செங்கோல் கொண்டு தேசம்புரக்கும் நீதிமன்னர்களும் வாழ்க ; என் சற்குருநாதனும் என்றும் வாழ்ந்தோங்குக. என்பது.

குறிப்புரை :—பக்திவான்களும், சித்தாதியரும், சிவயோகியர் முதல் நீதி மன்றத்தாரும் பரமாசாரியரும் என்றும் வாழ்ந்திடுக. (382)

௩அ௩. கல்லாதே னானலுங் கற்றுணர்ந்த மெய்யடியார்
சொல்லாலே நின்னைத் தொடர்ந்தேன் பராபரமே.

பொழிப்புரை :—இறைவ ! யான் கற்றுணராதவனாயினும், ஞான நூல்களிற் சிறந்த ஆராய்ச்சியரான உண்மை யன்பர்கள்பால் கேட்டறிந்து தெளிந்த மெய்நூல் அநுசந்தான விசேஷத்தாலே நின்னைப் பின்பற்றியுள்ளேன். என்பது.

குறிப்புரை :—மறைதுதி பதாம்புய மாநடத்தரசே ! இச் சிறியேன், கற்பன கல்லாதவன் ; ஆனாலும், முறையுணர்ந்தாராய்ந்த மூதறிஞர்பால் நன்கு ஓதியுணர்ந்தும், அன்னார் அருளிய மெய்ந்நூல்களை நன்கறிந்தும்

அதன்வழி கண்டுணர்ந்து அதன் பின்னரே தேவரீர்தம் திருவடிக்கமலத்தில் அன்புகொண்டு சித்தந்திருத்த தலைப்பட்டேன் என்பதாம். (383)

௩அச. சொல்லிறப்பச் சற்குருவாய்த் தோன்றிச் சுகங்கொடுத்த
நல்லுரைக்கே கொத்தடிமை நான்காண் பராபரமே.

பொழிப்புரை :—பொய்யடியர்க் கெட்டாப்புத்தமுதே! வாய் வார்த்தையொழிந்து மவுன முத்திரையான் மெய்ஞ்ஞானப் பிரசாதம் பெற் றுய்யுமாறு கருணைபூத்து உத்தம ஆசிரியராய்த் தோன்றி வந்து அருளிச் செய்த அரிய திருமொழிக்கேயான் நின்பால் கொத்தடிமை யாயினேன் என் பதை நன்கறிவாயாக.

குறிப்புரை :—வாயுரை மறுத்து மவுன முறுவான் வேண்டிக் குரு மூர்த்தமாய் வந்து அதியற்புத திருவார்த்தை யோதிச் சுகமளித்தமைக்காக யான் நின்னடிக் கடிமையாயினேன் என்பதறிவாயாக.

கொத்தடிமையாவது—பழவடிமையாம். (384)

௩அரு. முத்திக்கு வித்தான மோனக் கரும்புவழி
தித்தித் திடவிளைந்த தேனே பராபரமே.

பொழிப்புரை :—மோக்ஷத்திற்கு விதையாயுள்ள மௌனக் கரும்பு மார்க்கமாகிய மெய்ந்நெறியிலே மதுரித்துத் தோன்றியருளிய தேனமிர் தமே! யென்பதாம்.

குறிப்புரை :—மோக்ஷாதாரமாகிய மோனக்கரும்பா மார்க்கத்தி வினிப் புறுவான் தோன்றியருளிய தேனமிழ்தே! (385)

௩அசா. நித்திரையும் பாழ்த்த நினைவுமற்று நிற்பதுவோ
சுத்தவரு ணிலைநீ சொல்லாய் பராபரமே.

பொழிப்புரை :—என்னம்பலத்தும் பொன்னம்பலத்தும் இன்ப நடம் புரிவோய்! தூக்கமும், பாழான மனநினைவும் ஒழிந்துபோய் துரிய நிலைக் கண் வாழ்ந்திருத்தலோ மிக மேலாகிய திருவருணிலை யெனப்படுவது? நீ கூறியருள்வாய் ஐயனே! என்பது.

குறிப்புரை :—தூக்கமும் நினைவும் தொலைந்த வோர் நிலைமையில் பொருந்தி யிருப்பதுவோ உண்மையாம் அருணிலையான மேனிலையாகும் என்பதை நீயே கூறுவாயாக வென்பது. (386)

௩அஎ. மன்னு மறிகடலு மற்றுளவு மெல்லாமுன்
கண்ணி லிருக்கவுநான் கண்டேன் பராபரமே.

பொழிப்புரை :—இப்பூமண்டலமும், இதன்கணுள்ள அலைவீசு சமுத்திராதிகளும், இன்னு முண்டாயுள்ள வனைத்தும் நின்னிடமே குடிகொண்டிருப்பதை யானறிந்துள்ளேன் என்பது.

குறிப்புரை :—இவ்வுலகமும் கடலும் மற்றுமுள்ள அனைத்தும் நினது திருவருள் விழியால் கட்டுண்டிருக்க யானறிந்தனன். ஈதன்றி, நின் நெற்றிக் கண்ணாகிய அக்னியைச் சுற்றியுள்ளனவாகச் சிலர் கூறுவது முண்டு என்பது. (387)

௩அஅ. பூட்டிவைத்து வஞ்சப் பொறிவழியே யென்றனையீ
ஆட்டுகின்ற தேதோ வறியேன் பராபரமே.

பொழிப்புரை :—பலவுறுப்புகளால் என்னை மானிடனாக ஆக்குவித்துப் பின்னர் கபடமாய ஐவகைப் பொறிகளாலும் எனைத் தேவரீர் நடத்துவிப்பதும் எதனாலோ தெரிந்திலனே !

குறிப்புரை :—பல்வகைத் தத்துவங்களால் பொருத்திவைத்து ஐம்பொறி மார்க்கத்தால் நீவிர் எனை நடத்திவருதலும் யாது காரணமோ? அதனை யானறிந்தில னென்பதாம். பூட்டிவைத்து - தத்துவத் தொகுதிகளால் பொருத்தி வைத்ததாம். (388)

௩அ௯. பொய்யுணர்வா யிந்தப் புழுக்கூட்டைக் காத்திருந்தேன்
உய்யும் வகையு முளதோ பராபரமே.

பொழிப்புரை :—பொய்யறிவினால் இந்த அதிகேவல புழுநிறைக் கூட்டினை இதுகாறும் அன்னபானாதிகளால் காப்பாற்றி வைத்திருந்தனன்; ஆதலினாலே இனி எளியேன் எவ்வகையானும் நித்தியதேகம் பெற்றுச் சுகவாழ்வெய்த மார்க்கமுளவாமோ கூறாய் !

குறிப்புரை :—அழிவுள்ளதான இவ்வுடம்பை அறிவீனத்தால் காத்துவந்தது போதும் ; இனியாவது நல்லறிவால் நல்வாழ்வுறவும் ஏதுவுளவாமோ ! என்பது. (389)

---

## பைங்கிளிக்கண்ணி.



௧. அந்தமுட னாதி யளவாம லென்னறிவிற்
சுந்தரவான் சோதி துலங்குமோ பைங்கிளியே.

பொழிப்புரை :—ஆதியுமந்தமும் அளவிடற்கரிய மேலாம் பரஞ்சோதி சொரூபமானது இனி யென் புந்தியிடைப் பொருந்தி பிரகாசிக்குமோ கூறு வாய் பசிய கிள்ளாய் !

குறிப்புரை :—ஆதியந்த மில்லா வரும்பெருஞ் சோதியானது என்னறி வில் பிரகாசிக்குமோ வென்பதாம். (1)

உ. அகமேவு மண்ணனுக்கென் னல்லலெல்லாஞ் சொல்லிச்
சுகமான நீபோய்ச் சுகங்கொடுவா பைங்கிளியே.

பொழிப்புரை :—என் இதயமேவியுள்ள வெம்பெருமானுக்கு ஏ கிள் ளாய் ! என் துன்பங்களனைத்தையுங் கூறி, நான் இன்பெய்தற்கேதுவாக ஓர் நல்ல செய்தியை வந்து கூறுவாயாக என்பது.

குறிப்புரை :—ஏ, கிளிப்பிள்ளாய்! நீ என் இறைவன்பாற் சென்றடுத்து என் குறைகூறி, யான் இன்புறக் கேட்டுவருவாய். (2)

ங. ஆவிக்கு ளாவியெனு மற்புதனார் சிற்சுகந்தான்
பாவிக்குங் கிட்டுமோ சொல்லாய்நீ பைங்கிளியே.

பொழிப்புரை :—ஏ பசுங்கிள்ளாய் ! என்னுயிர்க்குள்ளுயிரா அதியற் புத மூர்த்தியார்தம் ஞானவானந்த மானது, இப்பாவியேனாகிய எனக்குங் கிடைக்கப் பெறுவேனோ ! கூறுவாய்.

குறிப்புரை :—ஏ கிள்ளாய் ! என்னுயிர்த் துணைவராகிய பரமபதியார் தம் ஞானனந்தம் இப்பாவிக்குங் கிட்டுமோ ! கூறுவாய். (3)

ச. ஆருமறி யாமலெனை யந்தரங்க மாகவந்து
சேரும் படியிறைக்குச் செப்பிவா பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய் ! நீ என் ஆத்மநாயகன்பாற் சென்று, அவர் எவர்க்குந் தெரியப்படாமே யென்னிடம் வந்து பொருந்தி வாழச் சொல்லி வருவாய்.

குறிப்புரை:—கிள்ளையே ! நீ யென் உயிர்த் துணைவனிடம்போய் பரம இரகசியமாக என்னிடம் வந்து சேரச் சொல்வாய். (4)

ரு. ஆறான கண்ணீர்க்கென் னங்கபங்க மானதையுங்
கூறாத தென்னோ குதலைமொழிப் பைங்கிளியே.

பொழிப்புரை :—மழலை மொழிக்கிள்ளாய் ! ஆறெனவடிந்த என் கண் ணீர்ப் பெருக்கினல் என் சரீரம் வருந்தினதறிந்தும் அவர்பாற் கூறாத தென்னோ !

குறிப்புரை :—கிள்ளாய்! இறைவனைக் கருதி கண்ணீர் ஆறுபோற் பெருகி அதனாற்சரீரம் வருந்தியதை நீ ஏன் அவர்பால் தெரிவித்தாயில்லை ? (5)

சா. இன்பருள வாடையழுக் கேறுமெமக் கண்ணால்சுத்த
வம்பரமா மாடை யளிப்பானோ பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! அழுக்கேறிய வஸ்திர மணிந்துள்ள எமக்கு அருளின்பருள்வான் கருதி, ஆகாயமாகிய சுத்த வஸ்திரத்தை இறைவன் தந்தருள்வனோ வென்பதாம்.

குறிப்புரை :—கிள்ளையே! எம்மிறைவன் எற்கு அருளின்பங் கொடுத்தருளு முன்னர் என்னழுக்குடை நீத்து ஆகாய வஸ்திர மளித்தற் கிசைவனோ! நீ சொல் பார்க்கலாம். (6)

எ. உன்னுமை லொன்றிரண்டென் றோராமல் வீட்டுநெறி
சொன்னான் வரவும்வகை சொல்லாய்நீ பைங்கிளியே.

பொழிப்புரை :—எ, கிள்ளாய்! எவையுநினையாதும், பரவஸ்து ஒன்றோ இரண்டோ வென்றாயாதும், மோக்ஷமார்க்கங் கூறியருளிய எம்மான் என்பால் வந்து சேரவும் உளவொன் றுரைப்பாயாக.

குறிப்புரை :—கிள்ளையே! எவையுங்கருதலற்று, துவிதமோ அத்துவிதமோ வென ஆராயாதும், மோக்ஷவழிகூறிய இறைவன், என்மாட்டெய்த யுக்தி யுரைசெய்வாய். என்பது. (7)

அ. ஊருமிலார் பேருமிலா ருற்றார்பெற் றாருடனே
யாருமிலா ரென்னை யறிவாரோ பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! தனக்கோரூரும், ஓர் பெயரும் மற்றும் உறவின் முறையார், தாய் தந்தையார் இவர்கள் யாருமற்ற தன்னந் தனிப்பேர் வழியார் என்னை இன்னாரென்று தெரிவரோ ?

குறிப்புரை :—ஊர், பேர், உற்றார், பெற்றார் முதலிய யாருமில்லாதவர் எனை யெங்ஙன முணர்வரோ ? உணரா ரென்ப. (8)

கூ. ஊரைப் பாராமலெனக் குள்ளகத்து நாயகனார்
சீரைப்பார்த் தாற்கருணை செய்வாரோ பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய் ! இறைவர் படைத்த ஊரினைக் கருதாமே என்னகத்துள்ள இறைவர் சிறப்பினைப் பார்க்குமிடத்து, கிருபை கூர்வரோ கூறாரோ ? நீயுரை செய்வாய். என்பது.

குறிப்புரை :—ஊரார் செய்கையைக் கருதாது என்னுள்ளுறையுங் எம்மான் சீரினைக் கவனிக்கும் போது, கிருபை பாலிப்பதில் ஐயப்பாடா யிருப்பதால் நீ உண்மை யோதுவாய் என்பது. (9)

௧0. என்று விடியு மிறைவரவோ வென்றென்று
நின்றநிலை யெல்லா நிகழ்த்தாய்நீ பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய் ! "எளியேற்கு எப்போது நல்ல பொழுதாக விடியு மென்னப்பனே" யென்று பலநாலும் ஒரு படித்தாயிருந்து வந்துள்ள என் சுபாவத்தினை நீ யெடுத்தோதி வருவாயாக வென்பதாம்.

குறிப்புரை :—இறைவர் திருவருள் பெறுமாறு எனக்கெப்போது நல்ல காலம் பிறக்குமென சதா எண்ணி யிருப்பதை நீ அவர்க்குரை செய்வாய். (10)

௧௧. எந்த மடலூடு மெழுதா விறைவடிவைச்
சிந்தைமட லாவெழுதிச் சேர்ப்பேனோ பைங்கிளியே.

பொழிப்புரை :—என் கிள்ளாய் ! எம்மடலினும் எழுத வொண்ணாத வெம்பெருமானது திவ்ய திருவுருவத்தினை, என் இதய வேட்டின்மீதெழுதிச் சேர்த்திடுவனோ ! கூறாய் ?

குறிப்புரை:—யாதொரு ஏட்டின் கண்ணும் வரைதற் கியலாத இறைவர்தம் முருவை யென்னெஞ்சகமே யெழுதிவைப்பேன் என்பது. (11)

௧௨. கண்ணுண்மணி போலின்பங் காட்டி யெனைப்பிரிந்த
திண்ணியரு மின்னம்வந்து சேர்வாரோ பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய் ! என் கண்ணிற் கருமணிபோல் விளங்கி யின்பளித்துப் பிரிந்த அதிப் பிரியராய கண்ணியரும் இன்னும் என்பால் வந்து இனிதுவப்பரோ ?

குறிப்புரை :—என் கண்மணி போன்ற இறைவர், இன்பளித்துச் சென்றவர் பின்களித்தும் வருவரோ வென்று, காதலி காதலனையே கருதி எதிர்நோக்கி யிருத்தலாம். என்பது. (12)

௧௩. ஏடார் மலர்சூடே னெம்பெருமான் பொன்னடியாம்
வாடா மலர்முடிக்கு வாய்க்குமோ பைங்கிளியே.

பொழிப்புரை :—இளங் கிள்ளாய்! யான் இதழ்களை யுடைய புஷ்பங்களை யணியேன்; மற்றெதைச் சூடிக்கொள்வே னென்றாலோ? எம் அரிய இறைவர்தம் பொற்கமலம் போன்ற திருவடியாம் வாடா மலரையே சிரசினிடமாகத் தரித்துக் கொள்ளவுங் கிடைக்குமோ?

குறிப்புரை :—இதனால், இறைவர்தம் திருவடி தீக்ஷை கிடைக்கப் பெறுவேனோ வென்பது தலைவி கொள்கையாம். (13)

கச. கல்லேன் மலரேன் கனிந்தவன்பே பூசையென்ற
நல்லோர்பொல் லாவெனையு நாடுவரோ பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! இறைவன் அடிமலர்க்குப் பூசை செய்வான் கல்லெதற்கோ, அன்றிப் பலவகைப் புஷ்பங்களெதற்கோ, இவை எம்போன்றார்க்கு அவசிய மன்று, என்றுரை செய்யும் உத்தமர்களுக்கு, அன்பே பரம பூசையாக்கும் என்னும் பெரியார்கள், தீயவனான எளியனையும் சிநேகிப்பரோ?

குறிப்புரை :—இறைவன் பூசைக்குக் கல்லும் மலரும் வேண்டுவதில்லை, மற்றெது வேண்டுமெனில், அந்தரங்க அன்பொன்றே வேண்டுமென்பதுவே இதன் முடிந்த கருத்தாமென்க. ஆனலிம்முறை ஆன்றோர்க்காம். (14)

கரு. கண்டதனைக் கண்டு கலக்கந் தவிரெனவே
விண்டபெரு மானையுநான் மேவுவனோ பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! எல்லா முணர்ந்த இறைவனைத் தரிசித்து மனோ கவலையை யொழிப்பா யென்று வெளியிட்ட இனிய எம் மருளாசிரியனையும் யான் அடையப் பெறுவேனோ?

குறிப்புரை :—இறைவனைத் தரிசித்தவர்க்கே மனக்கவலை யொழியு மென்றருளிய எம்மானைச் சேர்ந்துய்யப் பெறுவேனோ? என்பது. (15)

கசா. காணாத காட்சி கருத்துவந்து காணாமல்
வீணாள் கழித்து மெலிவேனோ பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! எவராலுங் காண்டற் கனுத் துணையுங் கூடாவென்று வேதங்கள் விண்டவறியோல மிடத்தக்க அப்பரஞ் சுடரினை என் புத்தி தோன்றிய பின்னரும் காணற்கின்றி வாணாளை வீணாளாக் கழித்து வாடுவனோ?

குறிப்புரை :—எவரும் இலேசாய்க் காண்டற்கரிய பரம்பொருளை யான் இனி காணாது காலங்கழியேன்' கண்டே தீருவேன் என்றபடி. (16)

கஎ. காந்த மிரும்பைக் கவர்ந்திழுத்தா லென்னவருள்
வேந்த னெமையிழுத்து மேவுவனோ பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! காந்தமானது இரும்பினைத் தன் வசப்படுத்தி யீர்ப்பது போலவே திருவருட் கிறைவனும் எம்மைத் தம்பா லீர்த்துச் சேர்வனோ வென்பதாம்.

குறிப்புரை :—காந்த சுபாவம் போன்றே இறையவனும் எம்மை யீர்த்து எப்போது திருவருளிற் சேர்த்திடுவன் என்பது. (17)

கஅ. காதலால் வாடினதுங் கண்டனையே யெம்மிறைவர்
போதரவா யின்பம் புசிப்பேனோ பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! யான் மிக்க ஆசையொடு வாட்ட முற்றதுங் கண்டுள்ளாய்; ஆனால், எம்மண்ணலார்தம் ஆதரவோடும் பரானந்த மெய்தப் பெறுவனோ? இது விஷயமாக நன்கு யோசித்துக் கூறு வாய். (18)

கக. கிட்டிக்கொண் டன்பருண்மை கேளாப் பலவடிகொள்
பட்டிக்கு மின்பமுண்டோ சொல்லாய்நீ பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! மெய்யன்பரைச் சேர்ந்து அவரது மெய்யுபதேச மொழியினைக் கேட்டலின்றியே, பல அடிகளை அடிக்கப் பெறுகின்ற பட்டிமாட்டிற்குச் சுகமின்மை போன்ற எளியேற்கும் பரானந்த முண்டாமோ! கூறுவாயாக.

குறிப்புரை :— பெரியாரைச் சார்ந்து உண்மையுரை வினாதல் செய் யாது, பட்டிமாடனைய எனக்கும் இன்பநிலை யெய்துமோ வென்ப தாம். (19)

உ௦. கிட்டேராய் நெஞ்சிற் கிளர்வார் தழுவவென்றால்
எட்டேர ராவரவர் நேசமென்னோ பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! அதி சமீப ஊரவர்போல் என் னெஞ்சகம் நிலவுவர்; அவரைக் காடாலிங்கனஞ்செய்ய முயலுவனேல், மிக்க தூரத்தூரவராய் ஆய்விடுவர்; இத்தகைய நட்பினால் ஆவதென்னோ வறியேனே!

குறிப்புரை :—நம்மிறைவர் மிகச் சமீபித்தார் போல்வர் நெஞ்சகத்தே; பின்னும் நெருங்கிச் செறியின், யெட்டத்தவராவர்; இவர் தாந்திரீக மென்னே!

"தனக்கு நிகரிங்கில்லா துயர்ந்த தம்பமொன்றதே, அதைத் தாவிப் போக போக நூலின் றாத்தினின்றதே"—என்றார் பெரியாரும். (20)

உக. கூறுங் குணமுமில்லாக் கொள்கையினு ரென்கவலை
யாறும் படிக்கு மணைவாரோ பைங்கிளியே.

பொழிப்புரை:—பசிய கிள்ளாய்! ஒருவித தன்மையும் குணமுமற்ற நிதானத்தவரான எம்மிறையவனார் என் காதல் தணிவுறக் கலப்பரோ நீ நன்காய்ந்தோதுவாயாக.

குறிப்புரை:—குணங் குறியில்லா கொள்கையராங் கொழுனராய இறைவன், எனைச்சேர்ந்து என் காதல் தணிப்பரோ, கூறாய். (21)

உஉ. சின்னஞ் சிறியேன்றன் சிந்தைகவர்ந் தாரிறைவர்
தன்னந் தனியே தவிப்பேனோ பைங்கிளியே.

பொழிப்புரை:—பசிய கிள்ளாய்! என்னிறைவர் மிகவுஞ் சிறியவனான என் மனோபாவத்தை நன்கு அறிந்து கொண்டார்; ஆகவே இனி யான் தனிமையா யிருந்து வாடுவனோ? வாடேன் என்பது.

குறிப்புரை:—எனதுரிமை நாயகனு மிறைவர் எனது சிறிய தன்மையையும், நெஞ்சினினைவையும் நன்கறிந்த பின்னரும் யான் கவலையுறுவனோ! ஒருக்காலும் துன்புறாது இன்பமே யெய்துவனென்பதாம். (22)

உஙு. சிந்தை மருவித் தெளிவித் தெனையாள
வந்தகுரு நாதனருள் வாய்க்குமோ பைங்கிளியே.

பொழிப்புரை:—என் பசிய கிள்ளாய்! மனோமயக்கைத் தெளிவித் தெனையாண்டருள்புரிய வந்தருளிய சற்குரு மூர்த்தியார்தம் திருவருள் கிடைக்கப் பெறுவனோ! என்பதாம்.

குறிப்புரை:—என் மனந்தெளிவுறச் செய்து என்னையாட்கொள வந்த குருநாதனருளும் கிடைக்கப் பெற்றுய்வனோ. (23)

உச. சொல்லிறந்து நின்ற சுகரூபப் பெம்மானை
அல்லும் பகலு மணைவேனோ பைங்கிளியே.

பொழிப்புரை:—பசிய கிள்ளாய்! வார்த்தையற்ற மவுனானந்த பெருமானை இடைவிடாது இராப்பகலாகத் தழுவி வாழ்வனோ?

குறிப்புரை:—மௌனாசாரியனாய ஞானானந்தப் பெரும்பதியை என்றும் நீங்கப்பெறாமே ஒன்று பட்டு வாழ்ந்திருப்பனோ! (24)

உரு. தற்போதத் தாலே தலைகீழதாக வையன்
நற்போத வின்புவர நாட்செலுமோ பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! என் சீவபோதத்தால் யான் தலை கால் தெரியாமல் நடப்பதால், எம்பெருமான்றன் சிவபோத சுகானந்தம் வந்து தோன்றுதற்கு மிகவுங் காலந் தாழ்க்குமோ ?

குறிப்புரை :—தற்போத மென்னும் அகங்கார மமகாரத்தால் யான் யேறுமாறாக நடந்துவருவதால் அஃதொழிந்து சிவானந்தானுபவ மெய்த இன்னமும் எத்தனை நாள் செல்லுமோ ? (25)

உசா. தன்னை யறியுந் தருணந் தனிற்றலைவர் [யே
என்னை யணையாதவண்ண மெங்கொளித்தார் பைங்கிளி

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! தன்னைத்தானறிந்த பக்குவ சமயத்திலே ஒப்பற்ற தனியிறைவனார் எனை யணைந்தின்புறுமே எங்கு சென்று மறைந்தனரோ தெரியேனே !

குறிப்புரை :—தன்னையுணர்ந்தார் தலைவனை யுணரற்குரிய சமயத்தில் இறைவர் யாங்ஙன மொளித்தனரோ ? (26)

உஎ. தாங்கரிய மையலெல்லாந் தந்தெனைவிட் டின்னருளாம்
பாங்கியைச் சேர்ந்தாரிறைக்குப் பண்போசொல்
[பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! சகித்தற்கரியதான அன்பைப் பெருக்கிவிட்டு யெனை நீங்கி இனிய வருளாய தோழியை மருவிநின்றார்; இதுவும் இறைவர்க்குரியதோ ? கூறுவாய்.

குறிப்புரை :—தம்பால் ஆசைப்பெருக்கைப் பெருக்கிவிட்டே இறைவர் பாங்கியைச் சார்ந்து மறைந்ததுவுந் தக்கதாமோ ? (27)

[டத்
உஅ. தாவியதோர் மர்க்கடமாந் தன்மைவிட்டே யண்ணலி
தோவியம்போ னிற்கினெனை யுள்குவரோ பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! பாயும் சுபாவ முள்ள கேவல குரங்கின்குணத்தை விடுத்தே இறைவர்பால் சித்திரமொத் தடங்கி நிற்பின் எனையும் நினைத்தல் செய்வரோ கூறாய் ?

குறிப்புரை :—குரங்கின் குணம் நீங்கி இறைவன்பால் சித்திரம்போ லொடுங்கி நிற்பேனுயின் எனை நினைவுற்று விசுவாசிப்பரோ ? (28)

உகூ. தீராக் கருவழக்கைத் தீர்வையிட்டங் கென்னையினிப்
பாரேரு தாண்டானைப் பற்றுவனே பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! தீர்தலில்லா ஜனன வழக்கத்தை யொழித்தே, யெளியேனை இனிமேல் பூமியிற் பிறந்திறவாவகை யாண்டரு ளிய இறைவனைச் சேர்வேனே.

குறிப்புரை :—தீராத பிறவி நோயை யொழித்து இனி யெனையே மீண் டும் பூமியில் பிறந்திறவா தாண்டருளிய இறைவனை யடைவனே (29)

௩௦. தூங்கிவிழித் தென்னபலன் றூங்காமற் றூங்கிநிற்கும்
பாங்குகண்டா லன்றோ பலன்காண்பேன் பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! யான் தினமுந் தூங்கித்தூங்கி விழித்து வருவதால் பலனொன்றுங் காண்கிலன்; இனித்தூங்காது தூங்கு தலாகிய பரானந்த நிட்டையினைக் கைக்கொண்டனுபாலனஞ் செய்யும் முறைமையைக் கண்டறிந்தாலல்லவோ என்றுமில்லா நித்தியானந்த சுகம் பெறுவேன் என்பதாம்.

குறிப்புரை :—இராப்பகல் தெரியாது பேய்த்தூக்கந் தூங்குவதை யொழித்து, நித்யானந்த பரநிட்டையாந் தூக்கத்தைக் கொண்டனுட்டித்து வருவதுதான் சித்திப பலன் பெறக்கூடியதாம். என்பது. (30)

௩க. தொல்லைக் கவலை தொலைத்துத் தொலையாத
எல்லையிலா வின்பமய மெய்துவனே பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய் ! பழமையாய்த் தொடர்ந்துவரா நின்ற மனக்கவலை யொழிந்து, என்றும் நீங்கப் பெறாத அளவில்லாத பேரின்ப சாகரத்தில் படிந்து வாழ்வனே ?

குறிப்புரை :—தொன்மைத் தொடர்பாம் மனக்கவலை யொழிந்தே, இடையறா தென்றுமுள்ள பேரின்ப போகமெய்தி வாழ்வனே ! (31)

[தார்

௩உ. நன்னெஞ்சத் தன்பரெல்லா நாதரைச்சேர்ந் தின்பணைந்
வன்னெஞ்சத் தாலேநான் வாழ்விழந்தேன் பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! தெளிவுகொண்ட நெஞ்சுடையா ரனைவரும் இறைவரைச் சார்ந்து உய்யப்பெற்றார்கள். இங்கு யான் என்

கொடிய மனத்தினாலே பேரின்பப் பெருவாழ்வை யிழந்தொழிந்தேன், யென் செய்கேனே !

குறிப்புரை :—ஞானானுபூதிபெற்ற நன்மனத்து நல்லோரெல்லாம் இறைவரை யடைந்தின்புற்றார்கள். யான்பாவி, தீய நெஞ்சால் வாழ்வின்றித் தாழ்வடைந்தேன் என் செயக்கடவேன் என்பது. (32)

௩௩. நானே கருதின்வர நாடார்சும் மாவிருந்தாற்
றானேயணைவரவர் தன்மையென்னே பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய் ! யானாக இச்சை கொள்ளுங்கால் இறைவர் அதற்கிசைந்து வாரார் ; யான் சிறிதுங் கருதா திருக்க, அப்போதவர் தாமாக வந்தெனையே தழுவிச் சுகந்தருவர் ; அவர்க்குரிய இத்தன்மையை யென்னென்பது ?

குறிப்புரை :—ஆகவே, யான் நெருங்கும்போது அவர் அகல்வதும் யான் நினையாதபோது அவர்நெருங்குதலும் இயல்பாகக் கொண்டுள்ளார் ; இத்தகையாளரை என்னென்று சொல்வது ! (33)

௩௪. நீர்க்குமிழி போன்றவுட னிற்கையிலே சாசுவதஞ்
சேர்க்கவறி யாமற் றிகைப்பேனோ பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய் ! நீர்மேற் றோன்றும் குமிழியை யொத்த இவ்வனித்திய சரீரமானது உள்ளபோதே இது நிலைபெறுமாறு செய்யாது விடுவனோ ? விடேனென்பதாம்.

குறிப்புரை :—இம்மானிட தேகமுள்ளபோதே நிலைபெற்ற ஞான தேகம் பெற்று ஆத்மானந்த சுகத்தை யடையப் பெறுவே னென்பதாம். (34)

௩௫. நெஞ்சகத்தில் வாழ்வார் நினைக்கின்வே றென்றணையார்
வஞ்சகத்தா ரல்லரவர் மார்க்கமென்னே பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய் ! என் இதயதாமரையில் வீற்றிருப்பவராய எம்மானார், நினைத்தலால் எனை வேறுயாவரோ வென்று அணைய ஒருப்படார் ; இதனால் அவர் கொடிய வஞ்சகத்தரு மல்லர் ; ஆகவே அவர் போக்கு ஒருவிதமாய்த் தெரிந்திலதே !

குறிப்புரை :—என்னறிவுக்கறிவா மிறைவர் எனைப் பேதபாவனையாகக் கருதமாட்டார் ; கபடமின்று ; ஆனாலும் அவர் கொள்கை ஓர் படித்தாயில்லையாம் என்பது. (35)

௩௬. பன்முகத் திரைச்சமயம் பாழ்படக்கல் லாலடிவாழ்
சின்முகத் திரையரசைச் சேர்வேனோ பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! பலவேறு சின்னங்களையுடைய புறச் சமயங்கள் அழிந்தொழியுமாறு, கல்லாலின் கீழ்வாழ் கண்ணுதற்றலைவரை யான் அடைந்துய்வனோ?

குறிப்புரை :—இதனால், கல்லாலடியமர்ந்த சின்மயானந்த குருமூர்த்தியைச் சேர்ந்துய்வனோ! வென்பதாம். (36)

௩௭. பச்சைகண்ட நாட்டிற் பறக்குமுனைப் போற்பறந்தேன்
இச்சையெல்லா மண்ணற் கியம்பிவா பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! பசுமையான சோலைகள் நிறைந்துள்ள நாடுகளிலே நாடுகின்ற நும்மைப் போன்று யானும் பறந்தோடி விரைந்துள்ளேன்; ஆகவே என் விருப்பத்தின் விரைவைப்பற்றி நமது பெரியாரது காதிலோதி வருவீர்களாக.

குறிப்புரை :—நும்போன்று யானும் விரைந்து பாந்தோடி, எம்மையனைப் பார்த்து விரும்பி நிற்பதை அவர்பாற் கூறிவருவீராக. (37)

௩௮. பாசபந்தஞ் செய்ததுன்பம் பாரமல லெம்மிறைவர்
ஆசைதந்த துன்பமதற் காற்றேனென் பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! எனக்குரிய பாசப் பிணிப்பின் கஷ்டத்தைச் சிறிதும் நோக்காமலே, என் தலைவர்பால் வைத்திருந்த பேரன்பின் துயரத்தைச் சற்றும் சகிக்கலாற்றேன். என்பது.

குறிப்புரை :—பந்தபாச வினையால் வந்த கஷ்டத்தையேனும் ஒருவாறு சகிக்கலாம்; எனது நாதன் காட்டிய ஆசையால் ஏற்பட்ட துக்கத்தையோ அம்மம்ம! அரைக்கூணமும் சகிக்க முடியவில்லையே! (38)

௩௯. பாராசை யற்றிறையைப் பற்றறநான் பற்றிநின்ற
பூராய மெல்லாம் புகன்றுவா பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! உலக ஆசையை யான் ஒழித்து, இறைவரைப் பெரும்பற்றுதலாய்க் கொண்டுள்ளதைப் பற்றி விர்த்தாந்தமாய்க் கூறி வருவாயாக.

குறிப்புரை :—இதனால், எம்மான் அன்பைத் தவிர்த்து பின்பொருள் ஆசையுங் கொண்டிலேன் என்பதை விவரித் துரைசெய்து வருவாய் என்பது. (39)

சய. பேதைப் பருவத்தே பின்றொடர்ந்தென் பக்குவமுஞ்
சோதித்த வண்ணல்வந்து தோய்வாரோ பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! என்பேதைப் பருவத்திலேயே யெனைப் பின்பற்றி வந்து, என் பக்குவா பக்குவத்தையும் நன்குறத் தெரிந்து கொண்ட பெரியார் மீண்டும் வந்து எனைக் கலந்திடுவாரோ சொல்லாய் நீ யென்பதாம்.

குறிப்புரை :—என்னை முன்னம் வந்து எல்லாந் தெரிந்து சென்ற இறைவர், மீண்டும் வந்து பொருந்திடுவாரோ கூறுவாய். (40)

சக. பைம்பயிரை நாடுமுன்போற் பார்பூத்த பைங்கொடிசேர்
செம்பயிரை நாடித் திகைத்தேனான் பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! நீ பசிய பயிரினைத் தேடுவது போன்றே, யானும் இவ்வுலகம் படைத்த பசுமையான கொடியனைய பராசத்தியார் கலந்தருளிய சிவந்த வெஞ் சிவநாதனைத் தேடித் திகைக்கின்றேன் என்பது.

குறிப்புரை :—நீ பசுமைப்பயிரை நாடி யிரைதேடல் போன்றே யானும் எம்மிறைவரைத் தேடி வாடுகின்றேன் என்பது. (41)

சஉ. பொய்க்கூடு கொண்டு புலம்புவனோ வெம்மிறைவர்
மெய்க்கூடு சென்று விளம்பிவா பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! யான் இந்நிலவுலகத்தே அநித்திய சரீரத்தைப் பெற்று இனி இதை நம்பியே யிருந்து கொண்டு புலம்பித் தவிப்பேனோ! ஆதலினாலே நீ எம் தலைவரைச் சென்றடைந்து, அவர்தம் மெய்க்கூடாகிய நித்திய ஞான தேகத்தினுள்ளே நுழைந்து என் பரதவிப்பை ஓதி வருவாய்.

குறிப்புரை :—இனியான் இவ்வனித்திய சரீரத்தோ டிருந்துகொண்டு துன்புற விசையேன், நித்தியஞான தேகந் தந்தருளுமாறு அவர்பால் தெருவித்து வருவாய் என்பது. (42)

[வென்பால்

சங. பொய்ப்பணி வேண்டேனைப் பொருட்படுத்தி யண்ணல்
மெய்ப்பணியுந் தந்தொருகால் மேவுவனோ பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! கேவலம் பொய்த் தொண்டினையே அபேக்ஷியாத எனை, ஓர் பொருளாமதித்து என்னிறைவர் எனக்கே உண்மை யுழைப்பளித்து, ஓர் சமயம் சேர்ந்திடுவரோ?

குறிப்புரை :—இந்த பொய்ப் பணிவிடையேற்கு, இனியும் ஓர்கால் வந்து எமதிறைவர் நித்தியத்துவ ஊழிய மருளிச் சேர்வரோ? (43)

சச. மண்ணுறங்கும் விண்ணுறங்கு மற்றுளவெ லாமுறங்குங்
கண்ணுறங்கே னெம்மிறைவர் காதலாற் பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! இந்த நிலவுலகோரும், தேவலோகத்தாரும், மற்றுள்ள பல சீவகோடிகளும் தூங்கிவரும்; யானோ! என் இறைவர் மேற்கொண்டுள்ள காதற் பெருக்கினாலே இமைப்போதேனும் நித்திரை செய்தலேயின்றாம்!

குறிப்புரை :—ஆண்டு மீண்டுமுள்ள அனைத்துயிரும் நித்திரை செய்ய, யான் மட்டும் தலைவராசையால் உறங்கியறியேன் என்பது. (44)

சரு. மட்டுப் படாத மயக்கமெல்லாந் தீரவென்னை
வெட்டவெளி வீட்டிலண்ணல் மேவுவனோ பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! மிதமீறிய மருட்சியை யெல்லாம் ஒழியத்தக்கதாக எம்மிறைவர் தம் பரவெளி வீட்டினுள்ளே கலந்தருள்வரோ! சொல்லுவாயாக.

குறிப்புரை :—என் ஐயமகல அருளிறைவர், மெய்யதான பரவெளி வீட்டினுள்ளே கலந்தருள் புரிவரோ? என்பது. (45)

சசா. மாலை வளர்த்தென்னை வளர்த்திறைவர் பன்னெறியாம்
பாலை வனத்தில்விட்ட பாவமென்னோ பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! இறைவர் முதன் முதலாகத் தம்பால் மயக்கத்தை மிகுவித்து, பின்னர் என்னறிவையும் மிகுவித்து, அதன் பின்னே பலமதங்களாம் மணற்காட்டிலே தன்னந் தனிமையாய் விட்ட என் பாவத்தை என்னென்று கூறுவேன்!

குறிப்புரை :—இறைவர் தம்பால் ஆசையை விர்த்திசெய்து, அறிவையு மிகுவித்து, இதன்மேல் பலவேறு மதங்களான மணற் பாங்கில் விட்ட வென் கொடுமையை யார்பா லெடுத்துரைப்பேன்! (46)

சஎ. மெய்யினைப் மாற்றவுழ்த மெத்தவுண்டெம் மண்ணறந்த
மையனைத் தீர்க்க மருந்துமுண்டோ பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! சரீரத்துள்ள வியாதியை நிவிர்த்திக்கத்தக்க மருந்துகள் இவ்வுலகத்திலே அளவிறந்துள்ளன; எமது தலைவனார் ஊட்டிய மையலாம் ஆசைப்பிணியகல ஓர் மருந்தும் இவ்வுலகத்தின் கண் இருக்கின்றதோ ? இல்லவேயில்லை என்பது.

குறிப்புரை :—இச்சரீரத்தில் இயல்பாயுள்ள வியாதிக்கு மருந்திருக்கிறது ; இறைவன் காட்டிய மையலாசைப் பிணி நீங்கவு மருந்துளவாமோ ! (47)

சஅ. மேவுபஞ்ச வண்ணமுற்றாய் விண்சிறையா லல்லலுற்றாய்
பாவிபஞ்ச வண்ணம் பகர்ந்துவா பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய் ! நீயோ, ஐவகை வர்ணமும் பொருந்தப் பெற்றுள்ளாய் ; நினக்குக் கிடைத்த அகாரணச் சிறைவாசத்தாலே பலவாறான துன்பத்துக்காளானாய் ! என் செய்வல் ! இப்பாவியாகிய எனது பஞ்சகோலத்தைப் பற்றி எம்மிறைவர்பாலோதி வருவாயாகவென்பது.

குறிப்புரை :—இறைவர்பாற் சென்று, " தம்மிறைவியார் தம்காதல் மிகுதியால் மெத்தப் பஞ்சைகோலமாயுள்ளாள் ; ஆதலால் தாம்வந்து தணித்தருள தணித்தருளும் " என்றோதிவருக. (48)

சகூ. வாய்திறவா வண்ணமெனை வைத்தாண்டார்க் கென்று
நீதிறவாச் சொல்லி னிசமாங்காண் பைங்கிளியே. [யரை

பொழிப்புரை :—பசிய கிள்ளாய் ! என் வாய்திறந்தோர் வார்த்தை சொல்லற்கின்றி, மோகலாகிரியால் மவுனமாக வைத்துவந்த என்தனித் தலைவர்பாற் சென்று வெள்ளிடைமலைபோல் என் துக்கத்தை வெளியிடின், உண்மையெனக் கொண்டு ஓடிவருவர் என்பதாம்.

குறிப்புரை :—யான் வாய் திறந்தோர் வார்த்தை சொல்ல யேதுவின்றி வைத்துள்ள எம்மிறைவர்க்கே என் துன்பத்தை வெளிப்படையாய்க் கூறின் நம்பி வருவர் என்பது. (49)

ருo. வாட்டப்படாத மவுனவின்பங் கையாலே
காட்டிக் கொடுத்தானைக் காண்பேனோ பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய் ! மனவாட்ட முறுதற்கில்லா மவுன வின்பத்தினைக் கைக்குறியால் காண்பித்தருளிய இறைவனைக் கண்டு மகிழ் வெய்தப் பெறுவனோ ?

குறிப்புரை :—மவுனானந்த தவத்தினைத் தன் கைக்குறிப்பாற் காட்டியரு ளிய எம்மானை என்றுகொலோ கண்டு இன்புறுவேன் ? (50)

ருக. வாரா வரவாக வந்தருளு மோனருக்கென்
பேராசை யெல்லாம்போய்ப் பேசிவா பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய் ! வருதற்கரிய விருந்தாக வந்தருளு மௌனதேசிகர்பால் என் அளவுகடந்த ஆசையைப்பற்றி யெடுத்தோதி வருவாயாக.

குறிப்புரை :—தேடக்கிடையா திரவியம் போன்று வரத்தகா விருந்தினராய் வந்தருளும் மோனஞான தேசிகோத்தமற்பாற் சென்று மிதமீறிய என் அன்பைப்பற்றிப் பெரிதும் எடுத்தோதி வருவாயாக. (51)

ருஉ. விண்ணவர்தம் பாலமுதம் வேப்பங்கா யாகவென் பாற்
பண்ணியதெம் மண்ணான்மயல் பார்த்தாயோ பைங்
[கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய் ! எம்மரிய விறைவர்பால் எமக்குற்ற மற்றமையலானது, தேவர்க்காக பாற்கடற் பிறந்த தேவாமிர்தமும், வேம்பின் காயினுங் கைப்பதாத் தெரிகின்றதே ! இதனை நீ யறிவாய்.

குறிப்புரை :—இறைவர் மையல் மிகுதியால், தேவாமிர்தமும் எட்டியினுங் கெட்டதாத் தெரிகின்றதே ! என்பது. (52)

ருங. விண்ணுள் வளியடங்கி வேறற்ற தென்னவருட்
கண்ணு ளடங்கிடவுங் காண்பேனோ பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய் ! மகாகாயத்திலே வாயுவடங்கி ஒன்றுபட்டு நிற்றல் போலவே, இறைவரது திருவருட் கண்ணுளே பொருந்திப் பிரிவுறாதிருப்பக் காண்பனோ ? என்பது.

குறிப்புரை :—விரிவாயுள்ள ஆகாயத்தில் காற்று பிரிவற்று நிறைவுற்றுள்ளமைபோல, யானும் எம்மிறைவர் திருவருட் கண்ணுள் கருமணி போன்று கலந்திருக்கப் பார்ப்பனோ வென்பதாம். (53)

ருச. விண்ணூர் நிலவுதவழ் மேடையிலெல் லாருமுற
மண்ணூன வீட்டிலென்னை வைத்ததென்னே பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! ஆகாய நிலவிய நிலவொளி தவழ்ந்த சந்த்ரகாந்த மேடையிலே மதிவல்லா ரெல்லாரும் மதியமிழ்துண்டு மனமலர் விண்டு களியாட, கேவலமான மண்ணாய வீட்டின்கண் என்னை வாழ்விக்க வைத்தருளியது என்னபயன் குறித்தோ?

குறிப்புரை :—

" நாதமுடி மேலிருக்கும் வெண்ணிலாவே—அங்கே
நானும்வர வேண்டுகின்றேன் வெண்ணிலாவே "

என்று ஓர் அரிய பெரியார் கூறியருளினது போன்றே, ஆசிரியரும் நாத தத்துவத்திற் கப்பாற்பட்டுள்ள சந்திர மண்டலச் செழுந்தேன்மடை திறந் துண்டுளந் தேக்கிட்டு அடற்பெரும்பசிநீக்கி மவுனச்செருக்குற்றுலாவு காரணச் சேட்டையற் றருளின்ப வீட்டினுட்டத்தைச் சிந்தைகுடி கொள்ளவென்றே " நிலவுதவழ் மேடையில் எல்லாருமுற, மண்ணான வீட்டில் என்னை வைத்த தென்னோ " வென்றனர் போலும். (54)

௫௫. உள்ளத்தி னுள்ளே யொளித்திருந்தென் கள்ளமெல்லாம்
வள்ளலறிந் தாலெனக்கு வாயுமுண்டோ பைங்கிளியே.

பொழிப்புரை :—என் பசிய கிள்ளாய்! வள்ளற் பெருமானும் என் னிறைவர் உள்ளத்தின் கண்ணே மறைந்திருந்து கொண்டு கள்ள நினை வனைத்தையும் அறிந்து வரும்போது எளியேற்கு வாய்திறந்து கேட்க வகையுமுளவாமோ கூறாய்.

குறிப்புரை:—இறைவர் நெஞ்சகமிருந்து வஞ்ச நினைவனைத்து முணர்ந்து வந்திருக்குங்கால், எளியவடிமை வாய்விட்டுப் பேசிக் கேட்டற் கும் சொல்லற்கும் வகையிலையே யென்பது. (55)

௫௬. ஆகத்தை நீங்குமுன்னே யாவித் துணைவரைநான்
றாகத்தின் வண்ணந் தழுவுவனோ பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! யான் இவ்வுடலை விடுமுன்னதாகவே என்னுயிர்த் துணையாமிறைவரை, ஆசையாகிய தாகத்தைக் கருதிச் சேர்ந் துய்வனோ! வென்றபடி.

குறிப்புரை :—இச்சரீரம் நீங்குமுன்னதாக என்னிறைவன்பால் அத்து வித முறையால் ஒன்றுபட்டு வாழ்ந்திடுவனோ! என்பது. (56)

௫௭, நானே சுபாவந் தலைப்படநின் றூன்ஞான
வானவரும் வருவாரோ பைங்கிளியே.

76

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! எவற்றினுக் 'தான்' என்று முன் னிற்கின்ற அகங்காரமாம் தற்போதம் தலைப்பட்டு விட்டால், பரஞான சம் பூர்ணராகிய பரமபதி அங்கு தலைகாட்டா ரென்பது.

குறிப்புரை :—அகங்கார‌ந் தலைசிறந்த விடத்தே இறைவர் எட்டிப் பாரார் என்பது. (57)

ருஅ. கள்ளத் தலைவரவர் கைகாட்டிப் பேசாமல்
உள்ளத்தில் வந்த வுபாயமென்னே பைங்கிளியே.

பொழிப்புரை :—பசிய கிள்ளாய்! கள்ளத்தன்மை வாய்ந்த இந்த நம் மிறைவர், வார்த்தை யில்லாமே கைசாடை காட்டிப் பின்னர் என் னெஞ் சகத்தில் வந்துள்ள தந்திரவுத்தி யென்னவோ!

குறிப்புரை:—பேச்சற்ற வெம்பெரிய பெருமானுர் கைக்குறிப் புணர்த்தி என் சித்தமிசை குடிகொண்ட செய்தியை யானறியேனே! "காடுடைய சுடலைப்பொடி பூசியெனுள்ளங் கவர்கள்வன்" என்றார் ஸ்ரீ ஞானசம்பந்த சுவாமிகளும். (58)

---

## எந்நாட் கண்ணி

### தெய்வ வணக்கம்

க. நீர்பூத்த வேணி நிலவெறிப்ப மன்றாடுங்
கார்பூத்த கண்டனையான் காணுநா ளெந்நாளோ.

பொழிப்புரை: —கங்கைவாழ் முடியின்கண்ணே சந்திரனும் விளங்க, ஸ்ரீ சிற்சபையில் பரமானந்தத் திருநடம் பயிலும் திருநீல கண்டத் தெய்வத் திருமணியை அடியேன் தரிசித்துய்யுங்காலம் எக்காலமோ!

குறிப்புரை :—கங்கையென்ன, சந்திரனென்ன, நீலகண்டமென்ன இவைகள் நன்கு துலங்குமாறு பரமானந்த நடம்புரியும் பரமபதியை என்றுகொலோ கண்டு மகிழுநானே! (1)

உ. பொன்னுரு மன்றுண்மணிப் பூவைவிழி வண்டுசுற்றும்
என்னு ரமுதினைய மிச்சிப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—செம்பொற் பிரகாச சிற்சபையிலே நீலநிறப் பூவை யன்ன நிரந்தரியாம் உமையம்மையின் உபய நேத்திரவண்டுகளும் தம்பாற் சூழ்ந்து மொய்க்கப்பெற்ற என் ஆருயிரமுதாய வம்பலவாணத் தம்பிரான்றன் இன்ப நலமெய்துநா ளெந்நாளோ !

குறிப்புரை :—ஸ்ரீ சிதம்பர சிற்சபைக்கண்ணே இறைவனுடல் கண் டின்புறும் என்பெரும் பரம மாதாவான உமாதேவியின் உபய அருணேத் திர வண்டுகள் பொருந்தப்பெறும் பொற்சபை யிறைவர் தம் பூரண சுக நலம் பெற்றுய்யுங்காலம் எக்காலமோ !

பொன் ஆரும் மன்று - பொன்னம்பலச்சபை. பூவை - நாகணவாய் பக்ஷி. மயிறு வென்றுங் கூறுவர். இதன் நிறம், வார்த்தை என்னு மிவ் விரண்டின் ஏற்றத்தானும் பார்வதிக் குவமை கூறினர் போலும். (2)

௩. நீக்கிமலக் கட்டறுத்து நேரே வெளியிலெம்மைத்
தூக்கிவைக்குந் தாளைத் தொழுதிடுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—என் மும்மலக் கட்டினை யறுத்துத் தொலைத்து பிரத்யக்ஷமாக எம்மவரை மேனிலைக்கேற்றி வைக்குந் திவ்ய திருவடியை வணங்கி வாழுங்காலம் எக்காலமோ வென்பது.

குறிப்புரை :—மாயா மலமறுத்து ஒப்பற்ற பரவெளியி னிறுத்தி வைத் தாண்டருளிய திவ்ய திருவடித்தாமத்தை யிணங்கி வணங்கி வாழுங்காலம் இனி எந்தக் காலமோ ! அறியேனே ! (3)

௪. கருமுகங் காட்டாம லென்றுங் கர்ப்பூரம்வீசுந்
திருமுகமே நோக்கித் திருக்கறுப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—கருப்பாசயக்குழி யடையாதபடி, எக்காலத்தும் கருப்பூர மணங்கமழும் இறைவனது திவ்ய திருவதன தரிசனமே செய்து குறையொழிந் திருப்பது எக்காலமோ !

குறிப்புரை :—இனிப், பிறந்திறவாதிருந்து எம்பெருமான் தரிசனமே பேரின்பமாக் கொண்டு நிற்றல் எப்போதோ ! என்பது. (4)

௫. வெஞ்சே லெனும்விழியார் வேட்கைநஞ்சுக் கஞ்சினரை
அஞ்சே லெனுங்கைக் கபயமென்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—வெவ்விய சேல்கெண்டை யொத்த கண்களையுடைய கணிகை மாதர்தம் விருப்பமாகிய விஷத்திற்குப் பயந்தொதுங்கிய உத்த

மோக்ஷம பரிபக்குவ பக்தர்களை அஞ்சற்க வென்று அபயஞ்செய்யும் வலத் திருக்கரத்திற்கு யான் அடைக்கலமென்று அடிமை பெற்றுய்வதும் எக் காலமோ !

குறிப்புரை :—வேசையர்தங் நஞ்சொத்த கண்வலையிற் சிக்காதொழிந் துள்ள பக்த சிகாமணிகளை அஞ்சேலென்றுதரிக்கும் அபய கரத்திற்கு யான் அடைக்கலப்படுவ தென்றோ. என்பது. (5)

சா. ஆறு சமயத்து மதுவதுவாய் நின்றிலங்கும்
வீறு பரை திருத்தாள் மேவுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—அகச்சமயங்கள் ஆறினுக்குரிய கடவுளராய் விளங்கி வருகின்ற பிரமமாதாவான ஒப்பற்ற எம்பரா பரையின் திருவடித் தாம ரையை யடையப் பெறுங்காலம் எக்காலமோ !

குறிப்புரை :—ஆறுசமயங்களுக்கும், அந்தந்த மதக் கடவுளாய் நின்று வியாபிக்கும் பரமமாதாவான சிற்சத்தியாரை யடைந்துய்தலும் இனி யென்று கொலோ வென்பது. (6)

எ. பச்சைநிற மாய்ச்சிவந்த பாகங் கலந்துலகை
இச்சையுட னீன்றாளை யாங்காண்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—பசிய திருமேனிவாய்ந்து,சிவபரஞ்சுடரார்தம் செம் பவளத் திருவுருவ இடப்பாகத்தைப் பெற்று, அகில மீன்று காத்தருளும் உமாதேவியாரை யான் தரிசித்துய்வ தெப்போதோ !

குறிப்புரை :—இவ்வகிலாண்ட புவனங்களை யெல்லாம் படைத்துக் காத்து இறைவரிடப் பாகத்தமர்ந்தருளும் எம்பரம மாதாவை யானடைந் துய்வது மெப்பொழுதோ ! தெரிந்திலன். (7)

அ. ஆதியந்தங் காட்டா தகண்டிதமாய் நின்றுணர்த்தும்
போதவடிவா மடியைப் போற்றுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—தோன்றலு மறைதலு மில்லாது அகண்டாகார நித் தியவத்துவாய் வியாபித்துணர்த்தும் ஞானசொரூபத் திருவடித்தாமரையை யான் துதிசெய்து வாழ்கின்ற நாள் எப்போதோ !

குறிப்புரை :—நித்தியவத்துவா யிருந்து இப்பூமண்டல மனைத்தும் படைத்து காத்திடும் எம்பரமேஸ்வரியின் ஞானகாரத் திருவடிணையைத் துதி செய்வதும் எக்காலமோ வென்பது. (8)

க௯. கங்கைநிலவு சடைக்காட்டானைத் தந்தையெனும்
புங்கவெண் கோட்டானைபதம் புந்திவைப்ப தென்னாளோ.

பொழிப்புரை :—கங்காதேவிமருவிய சடையுடைப் பெருமானைத் தந்தையென்றழைக்கும் தெய்வமாய வெண்கொம்புடைய விநாயக மூர்த்தியின் திவ்ய திருவடிமலரை என் புத்தியிற் பொருந்திடுவது எக்காலமோ!

குறிப்புரை :—ஸ்ரீ சிவபராஞ் சுடரார்தம் மூத்த குமாரரான வெண்கொம்புடைய யானைமுகப் பிள்ளையின் திருவடியை மனத்தகத்திருத் திடுவது மெப்போதே! (9)

க0. அஞ்சுமுகங் காட்டாம லாறுமுகங் காட்டவந்த
செஞ்சரணச் சேவடியைச் சிந்தைவைப்ப தென்னாளோ.

பொழிப்புரை :—எளியேன் பயமெய்தற்கான முகத்தைக் காண்பியாதபடி ஒப்பற்ற ஆறுவதனங்களையுந் தரிசிக்குமாறு எம்மனோர்க்குக் காட்டியருளவந்த சிவந்த திருவடிக் கமலங்களை என் சிந்தையின்கண் நிறுத்திவைப்பதுவும் எக்காலமோ!

குறிப்புரை :—யான் அஞ்சத்தக்க முகத்தோடுங்கூடி நின் முன்வாராது, நின் ஆறுதலையான அறுமுகங்களையுங் காட்டிச் சாந்தஞ்செய்யவென்றே வந்தருளிய நின் சிவந்த திருவடியைச் சிந்தித்து வாழ்தல் எப்போதோ! (10)

கக. தந்தையிரு தாடுணித்துத் தம்பிரான்றாள் சேர்ந்த
வெந்தையிரு தாளிணைக்கே யின்புறுவ தென்னாளோ.

பொழிப்புரை :—பிதாவின் உபயபாதங்களையும் வாள்கொண்டு வீசி சிவபெருமானது திருவடிநீழலை யடைந்த எந்தையராம் சண்டேசுர நாயனார் திருவடிகளைக்கண்டு வணங்கி சுகமெய்தலு மெக்காலமோ!

குறிப்புரை :—தந்தையின் கால்களை வெட்டி வீழ்த்திய சரிதம் தெரிய வேண்டுமாயின் பெரிய புராணத்திற் பார்க்கலாம். (11)

---

## குருமரபின் வணக்கம்



க. துய்யகர மலராற் சொல்லாமற் சொன்னவுண்மை
ஐயனைக்கல் லாலரசை யாமணைவ தென்னாளோ.

பொழிப்புரை :—மகா விசேஷகரம் பொருந்திய வலத்திருக்கர கமலத்தாற் சமிக்ஞை செய்துணர்த்தியருளிய உண்மை ஞான உபதேச பரமாசிரியனையும், கல்லால விருக்ஷ நிழலிலிருந்த பெரியதோர் மகா மவுன அரசையும் யாம் சார்ந்துய்வது எப்போதோ !

குறிப்புரை :—உண்மை ஞான உபதேச குருமூகூர்த்தமாய் கல்லாலடியில் வீற்றிருந்து உபதேசித்தருளிய சற்குருவைச் சாருவதும் எப்போதோ ! (1)

உ. சிந்தையினுக் கெட்டாத சிற்சுகத்தைக் காட்டவல்ல
நந்தியடிக் கீழ்க்குடியாய் நாமணைவ தெந்நாளோ.

பொழிப்புரை :—நெஞ்சிற் குணர்வரிய ஞானச் சுகோதயத்தைக் காட்டற்குரியவராம் நந்திகேசுரர்தம் அடிமலர்க் குடியாயமர்ந் துய்வதும் எக்காலமோ.

குறிப்புரை :—நந்திகேஸ்வரர் சிவசம்ஸரானமையின், அவர்தம் அடிமலர்க்கீழமர்தல் வேண்டுவதை வேண்டினராகவும், வணக்கமாகவுங் கொண்டோதியதாகு மென்க. (2)

ங. எந்தை சனற்குமர ராதியெமை யாட்கொள்வான்
வந்த தவத்தினரை வாழ்த்துநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—என் தந்தைபோன்ற சனற்குமாரர் முதலாயுள்ளவர்களையும் எம்போன்றார்களையும் ஆண்டருள எழுந்தருளிவந்த தவசிகாமணிகளனைவர்களையும் துதிசெய்வதும் எக்காலமோ !

குறிப்புரை —சனற்குமாராதிய ரென்றமையான், அவர்தம் சீடர் சத்தியஞான தரிசனிகளும், இவர்மாணவர் பரஞ்சோதி முனிவரையும் சேர்த்தருளினா ரென்பதும் பொருந்துவனவாம். (3)

ச. பொய்கண்டார் காணாப் புனிதமெனு மத்துவித
மெய்கண்ட நாதனருண் மேவுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—உலகப் பொய்மதத்துப்புக்கி நின்றார் காண்டற்கரிய உத்தம மார்க்கமாம் அத்வைத வுண்மையினைக் கைகண்ட மெய்கண்டாரது திருவருளைப் பெற்றுய்வதும் எக்காலமோ !

குறிப்புரை :—அத்துவித வுண்மைகண்ட மெய்கண்ட சிவாச்சாரிய சுவாமிகளது திருவருள் பெற்றுய்வது யெக்காலமோ வென்பது. (4)

௫. பாதிவிருத் தத்தாலிப் பார்விருத்த மாகவுண்மை
சாதித்தார் பொன்னடியைத் தாள்பணிவ தெந்நாளோ.

பொழிப்புரை :—ஸ்ரீசைவசித்தாந்த சாத்திர சிரசாயுள்ள சிவஞான சித்தியார் என்னும் பிரதம பிரபந்தத்திலேயுள்ள ஓர் விருத்தப் பாதியைக் கொண்டே இவ்வுலகவாழ்வும் இன்பமும் கேவல அநித்தியத்துவமானதென விளங்குமாறு சத்தியஞான மார்க்கத்தைக் கைக்கொண்டுள்ள சகலாகமபண்டிதராம் அருணந்தி சிவசாரியாரது அரிய திருவடித்தாமரையை நமஸ்கரிப்பதும் எக்காலமோ !

குறிப்புரை :—" பாரிலுள்ள நூலெல்லாம் பார்ப்பானேன் சித்தியிலே
ஓர்விருத்தப் பாதிபோதும் "—
என்றனவுந் தக்க சான்றாம். (5)

௬. சிற்றம்பல மன்னுஞ் சின்மயராந் தில்லைநகர்க்
கொற்றங் குடிமுதலைக் கூறுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—ஸ்ரீசிதம்பராலய சிற்சபைக்கண் கலந்தருளிய திவ்ய ஞான சொரூபராம் உமாபதி சிவாசாரியாரது ஆசிரியராய ஸ்ரீ மறைஞான சம்பந்தசிவாசாரியரைத் துதிபுரிவது மெக்காலமோ !

குறிப்புரை :—ஸ்ரீசிதம்பர க்ஷேத்திரத்திற் கணித்தான கொற்றங்குடியிற் குடிகொண்டருளிய உமாபதி சிவாசாரியாரது ஆசிரியர் மறைஞான சம்பந்த சிவாசாரியரைத் துதித்து வாழ்வது மெக்கால மென்பது. (6)

௭. குறைவிலருண் ஞானமுதல் கொற்றங் குடியடிகள்
நறைமலர்த்தாட் கன்புபெற்று நாமிருப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—திருவருண் ஞானம் நிறையப் பெற்றுள்ள முதன்மையாளராம் கொற்றங்குடி யடிகளாரது மறைமலர்ப் பாதத்திற்கு உரிமையன்பு கொண்டு வாழ்வதும் எக்காலமோ !

குறிப்புரை :—இவ் வெழுவகைப் பாவினுலும், முறையாக ஸ்ரீ கண்ட பரமேசுரர், நந்திகேசுரர், சனற்குமாரர், சத்தியஞான தரிசனிகள், பரஞ்சோதி மாமுனிவர், மெய்கண்டதேவர், அருணந்தி சிவாசாரியர் ஆகிய இத்தகையாரையும் போற்றினரென்க. கொற்றங்குடியடிகளே உமாபதி சிவாசாரிய ரென்பது. (7)

௮. நாளவங்கள் போகாம னன்னெறியைக் காட்டியெமை
ஆளவந்த கோலங்கட் கன்புவைப்ப தெந்நாளோ.

பொழிப்புரை:—என் ஜீவியகால அளவு வீணாட்படாமே, உத்தமமான சைவசித்தாந்த சன்மார்க்கத்தை நன்கறிவுறுத்தி, மேலே எம்மை ஆண்டருள் புரியுமாறு எழுந்தருளிவந்த பற்பல திருக்கோலங்க ளனைத்தினுக்கும் அன்புகொண்டுய்வதும் இனி யெக்காலமோ ! அறிந்திலே னென்பது.

குறிப்புரை :—என்வாழ்நாள் நன்னெறிப்பட ஆண்டருள்புரிவான் அவ்வப்போது எழுந்தருளிவந்த பலதிருக்கோலங்கட்கும் யான் ஆசை வைத்து வாழ்வதுவும் எக்காலமே ! (8)

௯. என்னறிவை யுள்ளடக்கி யென்போல் வருமவுனி
தன்னறிவுக் குள்ளேநான் சாருநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—எனது பாசபந்த அறிவினைத் தம்பொறிவழி போக வொட்டாதடக்கி, என்போன்று சாதாரண மானிடாம்சமாய் வந்தருளிய மௌன குருநாதன்றன் பொன்னறிவினுள்ளே யான் பொருந்தி வாழ் வதும் எக்காலமோ !

குறிப்புரை :—என் பொய்யறிவைப் புதைத்து மௌனாசிரியரது மெய் யறிவூடே பொருந்திவாழ்தலு மெக்காலமோ. என்பது. (9)

௧௦. ஆறுளொன்றை நாடினதற் காறுமுண்டா மென்றெ
கூறு மவுனியருள் கூடுநா ளெந்நாளோ. [மக்குக்

பொழிப்புரை :—அறுசமயத்துள் ஓர் சமயத்தைப்பற்றி நிற்பின் அச்ச மயவழியே கடைத்தேறும் மார்க்கமும் உண்டாகுமென எளியேற்கோதி யருளிய மவுனகுருவின் திருவருள் பெறுவது எக்காலமோ !

குறிப்புரை :—அகச்சமயம் ஆறினுள் சைவசமயத்தைக் கடைப்பிடித் தால் கதி பெறலாமென வோதிய குருமூர்த்திதன் திருவருள் கிடைக்கப் பெறுவது எப்போதோ ! அறிந்திலன். என்பது.

அறுசமயம்—முன்னே குறிப்பித்துள்ளன. எச்சமயமானாலும் சரியே என்பது. (10)

௧௧. நில்லாம னின்றருளை நேரேபா ரென்றவொரு
சொல்லான் மவுனியரு டோற்றுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—யாதொன்றையுங் கருதாது, திருவருள் பெறும் எண்ணமொன்றையே மனத்திற் கருதிநின்று, திருவருளை நேர்மையா யுற்று நோக்கென்ற வோர் சொல்லால் மவுனியருள் தழைப்பது எக்காலமோ ! நில் லாது நிற்றல் – வேறொன்று முன்னாது திருவருளையே சிந்தித்து நிற்ற லாகும்.

குறிப்புரை :—நிர்ச்சிந்தையாயிருந்து திருவருளையே நோக்கி நிற்பின் அத்திருவருள் நின்னைப் பார்த்தருளு மென்பது (11)

கஉ. வைதிகமாஞ் சைவ மவுனிமவு னத்தளித்த
மெய்திகழ்ந்தென் னல்லல் விடியுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—வைதிகமாகிய சைவசமய மவுனசிரியர், தாம் மவுன நிலையுடனிருந்து அநுக்ரகித்த உண்மை நெறிபற்றி விளங்கி யெனல்லலாந் துன்பமனைத்துந் தொலைதல் எக்காலமோ!

குறிப்புரை :—உத்தம சைவசமயோத்பன்னராய்வந்த மவுனதேசிகரு ரைத்தருளிய உண்மைஞானங்கொண்டு துன்பொழிவ தெக்கலாம் என் பது. (12)

கங. வாக்குமன மற்ற மவுனிமவு னத்தருளே
தாக்கவு மென் னல்லலெல்லாந் தட்டழிவ தெந்நாளோ.

பொழிப்புரை :—மனவாக்காய இந்திரியங்களை யடக்கியாளும் மவுன குருவின் மோனநிலையாற் காட்டியருளிய திருவருள் என்பால் தழைத்த வஞ்ஞான்றே என்துன்பமெலாம் தட்டுக்கெட்டொழிதலும் எக்காலமோ!

குறிப்புரை :—மனவாக்காதி கருவிகரணாதிகளை யெல்லாம் அயர்ந் தொழியச் செய்த சுத்த மவுன மெத்தவர் உபதேச மொழியால் யான் ஞான நன்னிலையுற்று நித்யானந்தம்பெற்று சாஞ்சல்யமற்று சகச நிட்டைகொண்டு வாழ்தலும் எக்காலமோ! என்பது. (13)

---

## அடியார் வணக்கம்.

---

க. வெம்பந்தந் தீர்த்துலகாள் வேந்தன் றிருஞான
சம்பந் தனையருளாற் சாருநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—கொடிய பிறவிப் பிணிப்பொழித்து, இவ்வுலகை, வைதிக சைவநெறி நிறுத்திச், சிவபரஞ்சுடரே ஒப்பற்ற பரம்பொருள் என நிலைநாட்டியாண்டருளிய திருஞானசம்பந்த வள்ளலாரைத் திருவருள் வலத்தால் சார்ந்துய்யுங்காலம் எக்காலமோ!

குறிப்புரை :—பாசபந்தந் தொலைத்து, அம்மை திருமுலைப்பாலும் ஞானத்திருவமுதும் உண்டு, புறமதக் காட்டைவேரறத் துடைத்து, வைதிக

சைவப்பயிரைச் சாலவும் பெருக்கியருளிய எம் சம்பந்த சுவாமிகளைச் சார்ந்துய்யுங்காலம் எக்காலமோ! (1)

உ. ஏரின் சிவபோக மிங்கிவற்கே யென்னவுழ [ளோ.
வாரங்கொள் செங்கையர்தாள் வாரம்வைப்ப தெந்நா

பொழிப்புரை :—மேன்மைவாய்ந்த சிவபோகச் செல்வமாயது இவ்வுலகத்துளே திருவாதவூரடிகட்காகவே யேற்பட்டதென்று மாறு கைக்கொண்டியற்றியருளிய உழவாரப்படையைத் தாங்கியுள்ள சிவந்த திருக்கரத்து அப்பர்சுவாமிகளது திருவடிகளைப் பங்கிட்டு வணங்குவதும் எக்காலமோ!

குறிப்புரை :—சைவசமயாசிரியராம் வாதவூராளியார்தம் திருவடித்தாமரை பாத்தியம் பெற்றுய்யுவதும் எக்காலமோ! என்பது (2)

ங. பித்த ரிறையென்றறிந்து பேதைபாற் றூதனுப்பு
வித்த தமிழ்ச்சமர்த்தர் மெய்புகழ்வ தெந்நாளோ.

பொழிப்புரை :—ஸ்ரீ சிவபெருமான், கேவலம் உன்மத்தரெனக் கொண்டேபேதமையாளாய பரவை நாச்சியார்பாற் றூதுசெலச் செய்வித்தவராகிய நம் செந்தமிழ்ச் செல்வராம் சுந்தரமூர்த்தி சுவாமிகளது சத்திய தன்மையைக் கொண்டாடுவதும் எக்காலமோ! என்பது.

குறிப்புரை :—சைவசமயத்தைப் பலவற்புதங்களானும் நிலை நாட்டிச் சிறப்புறச்செய்த சுந்தரமூர்த்தி சுவாமிகளது சத்தியசித்தாந்த சம்பன்ன நிலையை எடுத்துவியத்தல் செய்துய்வதும் இனி யெக்காலத்திலோ வென்பது. (3)

ச. போதவூர் நாடறியப் புத்தர்தமை வாதில்வென்ற
வாதவூரைய னன்பை வாஞ்சிப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—மெய்ஞ்ஞானப் பிரதேசம் இன்னதென உலகெலாமுணருமாற்றால், புத்த சமயவாதியரை, வாதில் செயம்பெற்றருளிய திருவாதவூரரெனும் ஸ்ரீமத் மாணிக்கவாசக சுவாமிகளது அன்பின் பெருக்கை விரும்பி வாழ்த்துதல் செய்வதும் எக்காலமோ!

குறிப்புரை :—சுத்தாத்துவித சித்தாந்த ஞானச் சைவசமயமே மெய்ச்சமயமென்றும், மற்றன புறப்புறச்சமயப் பொய்க் கோட்டைகளெனவும், நாட்டவர் பலரும் நன்குணர்ந் துய்யுமாறதாகப் பலவற்புதச் செயல்களால் நிலைநாட்டியருளிய சைவசமய குரவர் பெருமான் பேரன்பினைப் பெரிதும் வாய்சிறப்ப வாழ்த்துங்காலம் எக்காலமோ! என்பது. (4)

ரு. ஒட்டுடன்பற் றின்றி யுலகைத் துறந்த செல்வப்
பட்டினத்தார் பத்ரகிரி பண்புணர்வ தெந்நாளோ.

பொழிப்புரை :—இலவலேசமும் ஒட்டலின்றி ஆசை யெனும் பற்றைப் பற்றறத் துடைத்தருளி இவ்வுலக வாழ்வின் வாஞ்சையினைத் துச்சமெனத் தொலைத்து, பேரின்பச் செல்வப் பேற்றினுக்கே பற்றுளாராய வெண்காடர் பத்ரகிரியார் என்னும் இரு முனீந்திரர்களின் நெறியறிந்துய்யுங் காலம் எக்காலமோ ! (5)

சா. கண்டதுபொய் யென்றகண்டா கார சிவ மெய்யெனவே
விண்டசிவ வாக்கியர்தாள் மேவுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—உலகில் காணப்பட்டன வனைத்தும் அழிவுள்ளன வென விகழ்ந்து, உண்மைப்பொருள் அகண்டாகார நித்த வியாபக சச்சிதானந்த சிவபரஞ் சுடரேயென நன்கு வெள்ளிடையாய்த் தெரிவித்தருளிய சிவவாக்கியரது திருவடித்தாமரையை யடைந்துய்யப் பெறுதலும் எக்காலமோ ! என்பது.

குறிப்புரை :—இவ்வகிலத்துளே திரிசிய பதார்த்தமா யுள்ளதனைத்தும் யதார்த்த மானதன்றென்று ஒதுக்கி, உண்மைப் பொருளும் ஒப்புயர்வற்றதுமானது சிவமொன்றே யெனவும் சித்தாந்தித்துத் தவசீலராய் விளங்கிய சிவவாக்கியர் திருவடியை யடைந்து தரிசித்தலும் எக்காலமோ ! என்பது. (6)

எ. சக்கர வர்த்தி தவராச யோகியெனு
மிக்கதிரு மூலனருண் மேவுநா ளெந்நாளோ.

பொழிப்புரை: —தவராஜ யோகியருட் சிறந்த சிவராஜயோகச் செல்வராம் திருமூல நாயனாரது திவ்ய திருவருட் பிரசாதத்தைக் கைக்கொண்டுய்தலும் எக்காலமோ ! என்பது.

குறிப்புரை :—சிவராஜயோகச் சிகாமணியாராயினரும், தெய்வப்ர பாவமாம் சைவப்பிரபந்தங்கூறி யருளியவருமாய திருமூலதேவர்தம் திவ்ய திருவருட் பிரசாதம் பெற்றுய்யுங்காலம் எக்காலமோ தெரிந்தேனில்லையே ! என்பது. (7)

அ. கந்தரனு பூதிபெற்றுக் கந்தரனு பூதிசொன்ன
எந்தையரு ளடி யிருக்குநா ளெந்நாளோ,

பொழிப்புரை:—அறுமுகக் கடவுளாது உபாசனைப் பேற்றினாலே அன்னார்க்குரிய தோத்திரப்பாமாலை யோதியருளிய எனப்பனும் அருணகிரி நாதரொனும் பேரடியார்தம் திருவருட் செல்வத்தினை யடைந்துய்யுநாள் எக்காலமோ!

குறிப்புரை:—கந்தரனுபூதி கந்தரலங்காரம், திருப்புகழ் ஆகிய இந் நூலாசிரியரும், முருகனருள்பெற்ற முத்தமிழ்ச் செல்வருமாய அருணகிரி நாதராம் ஞானச்சீமான்றன் திருவருளைப் பெறுவான் விரும்பிச் சார்ந்திருத் தலும் எக்காலமோ! (8)

௯. எண்ணரிய சித்த ரிமையோர் முதலான
பண்ணவர்கள் பத்தருள் பாலிப்ப தெந்நாளோ.

பொழிப்புரை:—கணக்கற்ற சித்தாதியர்களென்ன, மற்றுமுள்ள தேவர் களென்ன, பற்பல தெய்வ வருட்பிரசாதியர் என்ன, ஆகிய இத்தகையாளர் கள் எமக்குத் திருவருள் புரிவது மெக்காலமோ!

குறிப்புரை:—பலசித்தர், முனிவர்கள், தேவர், ஞானியர், பக்தர் முத லிய மகா பிரமுகர்களது திருவருள்வாய்ப்ப தெக்காலமோ! என்பது. (9)

---

## யாக்கையைப் பழித்தல்

---

௧. சுக்கிலமு நீருஞ் சொரிமலமு நாறுமுடற்
புக்குழலும் வாஞ்சையினிப் போதுமென்ப தெந்நாளோ.

பொழிப்புரை:—விந்துவென்ன, பல சிறுநீர்களென்ன, வழிகின்ற நாகலும் பொருந்தி துர்வாடை வீசப்பெற்ற இவ்வுடலின்கண்ணுள்ள ஆபாசாதிகளை நன்கறிந்திருந்தும் இதனோடு சம்பந்தித்து வாழ்கின்ற ஆசை யானது அடங்குங்காலம் இனி எந்தக்காலமோ தெரியேன் என்பது.

குறிப்புரை:—பலவாறான மலஞ்செறிந்திலங்கும் இந்நாற்றவுடல் வாழ்வில் இனி வெறுப்புற்று மனம் சுத்தியாவதும் எக்காலமோ வென் பது. (1)

௨. நீர்க்குமிழி பூணமைத்து நின்றாலு நில்லாமெய்
பார்க்குமிடத் திதன்மேற் பற்றறுவ தெந்நாளோ.

பொழிப்புரை:—நீர்க்குமிழியானது அதி சீக்கிரமாக உடைந்து போத லைக் கருதி ஓர் மதியூகி பூண்கட்டிப் பார்க்கினும், அது உடைந்தே போதல்

போல, இச்சரீரமும் வெகு அநித்தியத்துவமானதால் இதிலிச்சை யொழி வதும் எக்காலமோ !

குறிப்புரை :—குமிழியினும் அநித்தியத்துவமுடைய இந்தச் சரீரத்தில் வெறுப்புற்று, நித்திய ஞானதேகம் பெற விருப்புற்றுத் தவங்கிடப்ப தென்னாளோ வென்பது.

இங்ஙனமாய சரீரவெறுப்பால், அதி சீக்கிரம் ஞானநெறி சித்தியா மென்க. (2)

௩. காக்கைநரி செந்நாய் கழுகொருநாட் கூடியுண்டு
தேக்குவிருந் தாமுடலைச் சீயென்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—காகப்பக்ஷிகளென்ன, நரி நாய்களென்ன, கழுகென்ன இவைகள் ஒருங்குற்றுண்டு தேக்கிடும் யோக்கியமான விருந்தாகிய இத் தீயுடம்பை சீச்சீ யெனவே வெறுத்தல் செய்திடுவதும் எக்காலமோ !

குறிப்புரை :—பல இழிந்த செந்துக்கள் பிடுங்கித் தின்னற் காதாரமாகிய இவ்வுடம்பை வெறுப்புற்றொதுக்குதலும் எக்காலம் என்பது. (3)

௪. செங்கிருமி யாதி செனித்தசென்ம பூமியினை
இங்கெனுட லென்னு மிழுக்கொழிவ தெந்நாளோ.

பொழிப்புரை :—சிவந்த புழுக்கூட்டங்கள் முதலாயுள்ளன புழுத்தற்கு யோக்கியமான பூமி யொத்துள்ள இவ்வுடலை, நம்முடம்பு என்று சொல்லுகின்ற அறியாமை நீங்குவதும் எக்காலமோ !

குறிப்புரை:—தோன்றும் புழுக்களாதி செந்துக்களுக்கு உறைவிடமாம் பூமியொத்த நாறுடலை நந்தேகமென் றபிமானித்துக் கூறும் குற்றம் வெளிப்பட வுணர்தலும் எக்காலமோ ! என்பது. (4)

௫. தத்துவர் தொண்ணூற்றறுவர் தாமாய்வா ழிந்நாட்டைப்
பித்தனென் னென்னும் பிதற்றொழிவ தெந்நாளோ.

பொழிப்புரை :—தொண்ணூற்று ஆறு தத்துவக் கூட்டாளிகளும் ஒன்றுகூடி வாழ்தற்கிடமாயுள்ள இச்சரீரமாகிய நாட்டினை, பைத்தியக் காரனாகிய யான், யான் யென்று கூறும் பேதமை நீங்கி சுத்தனாய் வாழ்தலும் எக்காலமோ !

குறிப்புரை:—தத்துவங்கள் தொண்ணூற்றாறின் விவரம் முன்னே விவரித்துள்ளமையான் ஆண்டுணர்க. (5)

சா. ஊனொன்றி நாத னுணர்த்துமதை விட்டறிவேன்
நானென்ற பாவிதலை நாணுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—எம்மான் இச்சரீரத்தினூடே வியாபித்திருந்து அவ்வப்போது தெரிவிப்பன தெரிவித்துவர, யான் அவற்றை அறவே மறந்தொழிந்து பின்னர் "நான் தெரிந்துவேன்" எனக்கூறும் என் நிர்மூட அகங்கார வார்த்தையாகிய சீவபோதச் சிரநாணல் இனி எக்காலமோ! அறியேன் என்பது.

குறிப்புரை :—என்னிறைவன் என்னுள்ளிருந்தே அவ்வப்போது அகங்கார மமகாராதி சேஷ்டிதங் கூடாதென் றறிவித்து வந்தும் யானதை மறந்து மீண்டு மீண்டும், நான் படித்தேன், நான் தேடினே னென்பனவாதி கெர்வித வசனங்கள்கூறும் அம்மடமை யடியொடும் தலையெடாதழிவது எக்கால மென்பது. (6)

எ. வேலையிலா வேதன் விதித்தவிந்த்ர சாலவுடன்
மாலை வியாபார மயக்கொழிவ தெந்நாளோ.

பொழிப்புரை :—வேறு காரியமற்ற சதுர்முகப் பிரமனால் அமைத்துள்ள இந்திரசாலமாய இவ்வுடற் றொகுதிகளின் சகல தத்துவாதிகளாகிய கருவி கரணாதிகளது மயக்க வழக்க காரியாதிகளின் அஞ்ஞான மொழிந்து ஞானநெறி நிற்றலும் இனி யெக்காலமோ.

குறிப்புரை :—பிரமன் படைப்பின் காரியமாய இம்மனித சரீர கருவி கரணாதி சேஷ்டிதங்கள்யாவு மொழிந்து ஞானநெறி நிற்றல் இனி எந்தக் காலமோ தெரிந்திலன் என்பது. (7)

அ. ஆழ்ந்து நினைக்கி னரோசிகமா மிவ்வுடலில்
வாழ்ந்துபெறும் பேற்றை மதிக்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—இம்மனித சரீரத்தோடுங் கூடி வாழ்ந்து அடைதற்கிருக்கும் பிரயோசனத்தை ஆழ்ந்து யோசிக்கின் மிக்க அருவருப் பாகும்; ஆதலால் இதைவெறுத்து, மோக்ஷத்திற் காஸ்பதமான நித்திய தேகத்தைப் பெறக்கூடிய காலம் எக்காலமோ!

குறிப்புரை:—அநித்தியமானதும் அருவருப்போடுங் கூடியதுமான இவ்வுடலோடு கூடிய வாழ் வொழித்து நித்திய ஞானதேகம் பெற்றுய் தலையே மதித்து வாழ்தல் எக்காலமோ என்பது. (8)

கூ. மும்மலச் சேறான முழுக்கும்பி பாகமெனும்
இம்மலக் காயத்து ளிகழ்ச்சிவைப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—மூவகை மலங்களான சக்தி மலிந்த கும்பியாக மென்கின்ற இந்த மலபாண்டச் சரீரத்தின்மேல் இச்சையொதுக்கி இழிவாக வெண்ணலும் எக்காலமோ !

குறிப்புரை:—கேவலம் சர்வ இரசாபாசக் கடமாயமைந்த இச் சரீரத்தை இச்சியாது துச்சமென வெறுத்தல் அவசிய மென்பதாயிற்று. (9)

கo. நாற்றமிகக் காட்டு நவவாயில் பெற்றபசுஞ்
சோற்றுத் துருத்தி சுமையென்ப தென்னாளோ.

பொழிப்புரை :—துர்வாசனையே வீசும் ஒன்பது வோட்டைகளை யுள்ள பசிய சோற்றுத் துருத்தியாய சுமைப்பொதி யென்றுணர்ந்து வெறுத் தொதுக்குவதும் எக்காலமோ !

குறிப்புரை: —தீயவாடைக் காஸ்பதமாயதும், சோறடைப்பையு மாயதும் இவ்வுடலெனக்கண்டு கழித்து, ஞானவுடற் காசைவைத்தல் வேண்டு மென்பது சாரமாகும். (10)

கக. உருவிருப்ப வுள்ளேதா னூறுமலக் கேணி
அருவருப்பு வாழ்க்கையைக்கண் டஞ்சுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—அகத்தே அறிவுருவத் தெய்வ மிருக்கிறபோது, மல சலமாயது கிணறுபோல் ஊற்றெழா நிற்கும் ; ஆகவே இந்த அருவருக்கத் தக்க சரீர வாழ்வைக் கண்டறிந்து இதற்குப் பயந்து வெறுப்படைதலும் எக்கால மென்பதாம்.

குறிப்புரை :—நாறுமுடலை நஞ்செனவே வெறுத்து பேறுபெறும் ஞானப் பேருடலம் பெறல் வேண்டு மென்பது சாரம். (11)

## மாதரைப் பழித்தல்.

க. மெய்வீசு நாற்றமெல்லா மிக்கமஞ்சளான் மறைத்துப்
பொய்வீசும் வாயார் புலையொழிவ தெந்நாளோ.

பொழிப்புரை :—மாதர்தம் சரீரத்தினின்றும் வீசாநின்ற துர்வாடையை மிகுந்த மஞ்சள்பூசி மாற்றுகின்றதோடு சதா பேசும்போதெல்லாம் பொய்கலந்த வார்த்தையே வெளியிடும் வாய்கொண்டுள்ள அவர்களோடு விளையாடும் புலையாடலை ஒழித்து நிற்றலும் எக்காலமோ !

குறிப்புரை :—பொய்மலிந்த மாதர் புலையாட்டை வெறுத்தார்க்கே கைமலிந்து ஓங்குங் கதியென்றார் மேலோரும். (1)

உ. திண்ணியநெஞ் சப்பறவை சிக்கக் குழற்காட்டிற்
கண்ணிவைப்போர் மாயங் கடக்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—திட்பமாய நெஞ்சப்பக்ஷியானது சிக்குணும்படியாயுள்ள தங்கள் கூந்தலாம் காட்டகத்து கண்ணிருத்தி யிடுபவராய தீய மங்கையரது மாயசால வலையில் தப்பிப் பிழைப்பதும் இனி யெப்போதோ வென்பது.

குறிப்புரை :—ஆடவரது திட்பமனத்தினையே பக்ஷி யென்றார்போலும் கொடிய மாதர்தம் மயக்கிலகப்பட்டு தியக்கமுறாது பரகதிக்குப் பாடுபட வேண்டு மென்பதுவே சாரமாயிற்று. (2)

௩. கண்டுமொழி பேசிமனங் கண்டுகொண்டு கைவிலையாக்
கொண்டுவிடு மானார்பொய்க் கூத்தொழிவ தெந்நாளோ.

பொழிப்புரை:—கற்கண்டைப்போன்ற இனிப்புரைகூறி ஆடவன் நெஞ்சினிலையறிந்து கைவிலைக்குக் கொண்டுவிடுவது போன்று மனத்தைத் தன் வசப்படுத்திக் கொண்டாட்டுவிக்கும் மான்போன்ற மருண்ட பார்வையையுடைய வஞ்சமாதர்தம் போலி நடிப்பை விட்டொழிக வென்றுகொலோ !

குறிப்புரை :—வஞ்சமடமாதர் நஞ்சனைய நாட்டத்தினின்றும் தப்பிப் பிழைத்து விடின் அதுவே முதற்றவமாமென்பது.

"தீயமடவார்க் கடிமையாளனுய்ச் சஞ்சலத்தீக்குழி படுங்கொடிய வென், சித்தம தகற்றிசிவ பத்திசெய வைத்தருடி சிற்றிடைகுறத்தி மகிழ்ணே" என்றார் பிறரும். (3)

ச. காமனைவா வென்றிருண்ட கண்வலையை வீசுமின்னார்
நாம மறந்தருளை நண்ணுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—மன்மதனைத் தமது இரண்டு கண்வலை வீசி மெல்லென வீர்த்திடு மின்னலையொத்த இடையுடைய யேந்திழையார்தம் பெயரையே அடியோடு மறந்து திருவருளைப் பெற்றுய்வதும் இனி யெக்காலமோ !

குறிப்புரை :—'காமனை' யென்றது, காமுகனை யெனினுமாம். மாதர் மையல் மறந்து திருவருளைப் பெறுவதெந்தக் காலமோ என்பது. (4)

ரு. கண்களில் வெண்பீளை கரப்பக் கருமையிட்ட
பெண்கள் மயறப்பிப் பிழைக்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—கண்ணிருந்திழியும் வெண்பீளை யென்னும் ஓர் வித சிறுமலத்தை மறைத்தல் செய்தற் காகவே மையிட்டழகு செய்கின்ற மாதர் மையலினின்றும் தப்பித்துக்கொண்டு உஜ்ஜீவிப்பதும் இனி யெக்காலமோ! தெரிந்திலன்.

குறிப்புரை :—மாதர்கள் தங்கள் அங்கத்தினின்று காணப்படும் சிற்சில இழிநிலையை மறைத்தற் பொருட்டே பகட்டித் திரிவதறிக வென்பது. (5)

சா. வீங்கித் தளர்ந்து விழுமுலையார் மேல் வீழ்ந்து
தூங்குமதன் சோம்பைத் துடைக்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—விம்மிப் புடைத்து மேலோங்கிப் பின் துவண்டு விழும் ஸ்தனங்களையுடைய மாதர்கள் மேல் சாய்ந்து சுகம்பெறத்துயிலும் காமுகர் மயக்கத்தைத் தொலைக்குங் காலம் எக்காலமோ! (6)

எ. கச்சிருக்குங் கொங்கை கரும்பிருக்கு மின்மாற்றம்
வைச்சிருக்கு மாதர் மயக்கொழிவ தெந்நாளோ.

பொழிப்புரை :—வார் என்கின்ற கச்சுக்குள்ளிருக்கின்ற தனங்களும், கரும்பின் இனிப்பொத்த வார்த்தைகளையும் கொண்டுள்ள பெண்களின் மாயா மயக்கத்தை மாய்ப்பதினி யெந்தக் காலமோ!

குறிப்புரை :—கச்சு என்பதையே தற்காலம் தமிழ் நாட்டார் 'இரவிக்கை' யென்று வழங்கி வருகின்றனர் என்ப. (7)

அ. பச்சென்ற கொங்கைப் பசப்பியர்பா ழானமயல்
நச்சென் றறிந்தருளை நண்ணுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—பசுமை படர்ந்த தனபாரங்களைக் கொண்டு பசப்பித் திரியும் பாழுந்தையலர்த மையல் மயக்கை, கொடிய நஞ்சே போன்றதென் றிகழ்ந்துத் தள்ளி, இறைவன் திருவருட் பிரசாதத்தைப் பெற்றுய்வது எக் காலமோ என்பது.

குறிப்புரை: —இதனால், கொடிய வஞ்சமலிந்த நாரியர் ஊட்டும் மையலானது விஷத்தினுங் கொடிதென்பது தோன்ற நின்றது. (8)

கூ. உந்திச் சுழியா லுளத்தைச் சுழித்தகன
தந்திக் தனத்தார் தமைமறப்ப தெந்நாளோ,

பொழிப்புரை :—கொப்பூழென்னும் நாபிச்சுழியலைக் கொண்டு ஆடவன் மனத்தினைச் சுழலச்செய்திழுக்கும், பேருருவம்பெற்ற யானையின் மத்தகக் கொப்பியை யொப்பிட்ட தனபாரங்களைப் பெற்றுமுள்ள வஞ்சியர்களை மறந்தொழிவது மினி எக்காலமோ.

குறிப்புரை :—இதனால் கொடிய மாதர்கள் ஆடவனது புந்தியைத் தன்னுந்திச்சுழி கொண்டு மருட்டுவ ரென்பதும் வெளியாயது. (9)

க0. தட்டுவைத்த சேலைப்பூங் கொய்சகத்திற் சிந்தையெல்லாங்
கட்டிவைக்கு மாயமின்னார் கட்டழிவ தெந்நாளோ.

பொழிப்புரை :—தட்டுத் தட்டாய் மடித்துள்ள சேலைக் கொய்சகமிட்டுள்ளதில் ஆடவர் நினைவம்மட்டும் முடியிட்டுவைக்கின்ற மாயாசால மின்னலொத்த மாதர்களது வஞ்சமனக்கட்டும் கெட்டழிதலு மெக்காலமோ !

குறிப்புரை :—இதனால், தையலார் மையலில் மீண்டாரே திருவருளுக்கிலக்காவ ரென்பதும் வெளியாயது. (10)

கக. ஆழாழி யென்ன வளவுபடா வஞ்சநெஞ்சப்
பாழான மாதர்மயற் பற்றொழிவ தெந்நாளோ.

பொழிப்புரை :—ஆழ மறியப்படா சமுத்திரம்போன்று நிலையறியக் கூடாத கபட நெஞ்சினராய பாழும் பெண்பேயர்தம் பேராசை யொழிந்து கரையேறுவ தெக்காலமோ !

குறிப்புரை :—மாதரார் மனத்தின் ஆழமானது கடலாழத்தினும் ஆழ்ந்ததென் றேற்படலாயிற்று என்பதாம். (11)

கஉ. தூயபனித் திங்கள் சுடுவதெனப் பித்தேற்று
மாய மடவார் மயக்கொழிவ தெந்நாளோ.

பொழிப்புரை :—பரிசுத்தமான வெள்ளிய சீதளச் சந்திரன் தகிக்கின்றதென்று மையற் பித்தை ஆடவர்க் கேற்றும்படியான மாயாசால மயக்கினை யொழித்திடுவதும் எக்காலமோ !

குறிப்புரை :—ஆடவர் மனதை நீராளமாக்குவிப்பதில் மிகு சமர்த்தர்களான வஞ்ச மாதர் மயக்கினும் பெரிது மற்றொன்றின் றென்பது. (12)

கங. ஏழைக் குறும்புசெயு மேந்திழையார் மோகமெனும்
பாழைக் கடந்து பயிராவ தெந்நாளோ.

பொழிப்புரை :—ஏழைத் தன்மையான குறும்பு செயலாளிகளாகும் மங்கையர்தம் மோகமாம் பாழான வெல்லையைக் கடந்து, அதன் பின்னர் திருவருளை முன்னிட்டு பரிபக்குவியாதல் எக்காலமோ!

குறிப்புரை :—இனி யான், மாதர்மோக பாழெல்லை கடந்து கரை யேறி திருவருளுக்குப் பக்குவியாதலும் எக்காலமாமோ! (13)

கச. விண்டு மொழிகுளறி வேட்கைமது மொண்டுதருந்
தொண்டியர்கள் கட்கடையிற் சுற்றுழிவ தெந்நாளோ.

பொழிப்புரை :—வார்த்தை குளறிப் பகிரங்கமாய்ப் பேசி ஆசையாங் கள்ளினை எதேஷ்டமாய்த் தந்திடுகின்ற கணிகைமார் கடைக்கண்ணி லகப் பட்டுச் சுழன்று திரிவதொழிந்து மீளுவதும் இனி யெக்காலமோ! கணிகை யர் - தாசிகள்.

குறிப்புரை :—கணிகையர்தம் கடைக்கண்ணாகிய வேலாயுதத்திற்குத் தப்பிப் பிழைத்து இனி ஆளாவ தென்றுகொலோ வென்பது. (14)

கரு. மெய்யிற் சிவம்பிறக்க மேவுமின்பம் போன்மாதர்
பொய்யிலின் பின்றென்று பொருந்தாநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—எதார்த்த நிலையில் இறைவன் வெளிப்படல் கண் டின்புறல் போன்று, மாதர்தம் பொய்ம் முழக்கின் மயக்கில் பொருள் தோன்றுவென்றே அன்னாரை வெறுத்துதறி மேனோக்கும் நன்னாளானது எந்நாள் வருமோ வென்பது.

குறிப்புரை :—'பொய்யைத் தள்ளி, மெய்யைத் தழுவு' என்ற பெரி யார் மொழிப்போன்றே எம்மெய்ப் பொருளாம் பரம்பொருளை எதிர் நோக்கியுள்ளேன் என்பதாம்.

இங்கே பொய்யென்பது, மாதராசையில் முயங்குதல்.
மெய்யென்பது, இறைவன் றிருவருளிற் பொருந்த நிற்றல். (15)

---

## தத்துவ முறைமை

க. ஐம்பூதத் தாலே யலக்கழிந்த தோடமற
எம்பூத நாதனரு ளெய்துநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—பஞ்சபூத பௌதிகமாய இச்சரீரத்தைத் தாங்கி நின்று இதனு லெய்தப்பெற்ற கொடிய பாவங்களை யெல்லாம் அறவே யொழிந்திடுமாறு பூதநாதனும் இறைவன்றன் ஒப்பற்ற திருவருளைப் பெற் றுய்யுங்காலம் எக்காலம் !

குறிப்புரை :—பஞ்சபூத தத்துவங்களா லமையப் பெற்றுள்ள இவ் வுடற் சுமையால் விளைந்த வினைப்பயன் றொலைந்திட இறைவன் றிருவரு ளெனு மருந்தே இன்றியமையாத தென்றறிந்தாம். (1)

உ. சத்தமுத லாம்புலனிற் சஞ்சரித்த கள்வரெனும்
பித்தர்பயந் தீர்ந்து பிழைக்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—பஞ்ச தன்மாத்திரைகளான சப்தாதி புலன்களிற் சார்ந்து நுகர்ந்து வரும் ஐவகை ஆசைகளாகிற பித்தர்கட் கஞ்சி, அதா வது அவ்வாசையை யொழித்து நிராசையில் நிற்பதும் இனி எக்கால மென்றபடியாம்.

குறிப்புரை :—இதனால், ஐம்புல திரஸ்காரம் அவசியம் என்பதாயிற்று. திரஸ்கரித்தல் - நீக்குதல். ஆகவே ஐந்தாசைகளையும் ஒழித்த லாம். (2)

௩. நாளும் பொறிவழியை நாடாத வண்ணமெமை
ஆளும் பொறியா லருள்வருவ தெந்நாளோ.

பொழிப்புரை :—நிததினமும் ஐம்பொறிகளின் நுகர்ச்சியின்றி எம்மை யாண்டருள் புரிந்திடும் பேரறிவாளரால் திருவருண் முறைக்கு இலக்காதல் இனி எக்காலமோ வென்பதாம்.

குறிப்புரை :—ஐம்பொறியவா நீங்கற்கும் அவனருளாந் திருவருளே அத்தியாவசிய மன்றி நம் வெறு மறிவாலாகா வென்பதும் நன்கு ஈண்டு புலனாகியதாம்.

'அவனருளாலே யவன்றாள் வணங்கி' யென்பதே சாலும். (3)

௪. வாக்காதி யானகன்ம மாயைதம்பால் வீண்காலம்
போக்காம லுண்மை பொருந்துநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—வாக்கு என்னும் சப்தார்த்தத்தை முதன்மையாக் கொண்டுள்ள கன்மேந்திரியங்கள் ஐந்தின் மாயா காரியங்களிலே அடிமை ஆழ்ந்து காலத்தை வீணாகக் கழித்திடா வண்ணம் யதார்த்தமாகிய திரு வருளைப் பெற்றிடுங்காலம் எக்காலமோ !

குறிப்புரை :—வாக்காதி கன்மமாவன,—வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் என்னும் ஐந்துவகையாம். இவை கன்மேந்திரியமென வழங்கப்பெறும்; இவ்வைவகைகளின் காரியமாவது,—வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம் என்பனவாம். மற்றவை, சமய நேர்ந்துழி வரும். (4)

ரு. மனமான வானரக்கைம் மாலையா காமல்
எனையா ளடிகளடி யெய்துநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—யான், மனம் என்கின்ற ஓர் பேய்க்குரங்கின் கையி லகப்பட்ட புஷ்ப மாலையானது எவ்வாறு பயன்பெறாது சின்னபின்னமாய்ப் பிய்த்தெறியப் பெறுமோ அவ்வாறு கெட்டலைந்து போகாமே, யெனை யாளற்கான அடிகளார்தம் திருப்பாதப் போதைப் பெற்று வாழுங்காலம் எக்காலமோ!

குறிப்புரை :—இதனால் இரண்டுங் கெட்டவனாகாது திருவருட் பிர சாதம் பெற்றுய்தல் வேண்டு மென்பது கருத்தாம். (5)

சா. வேட்டைப் புலப்புலையர் மேவாத வண்ணமனக்
காட்டைத் திருத்திக் கரைகாண்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—பகிர்முகப்பட்டு வேட்டையாடும் ஐம்புலன்களாகிய புலைமையுள்ள இந்திரியங்கள் என்பால் மேவிடாதபடி, மனம் என்கின்ற வனத்தைச் சீர்படுத்தி சமநிலங் காண்பதான திருவடிப் பேற்றைக் கைக் கொள்ளுங்காலம் எக்காலமோ!

குறிப்புரை :—ஐம்புலப் புலையர் என்றமை,—தத்தம் சுயேச்சையாக, இறைவர் நெறி யேகாமே மனவழிசென்று கெடுதல் புரிதலால், அங்ஙனங் கூறலாயிற் றென்றறிதல் வேண்டும் என்பது.

மனக்காட்டைத் திருத்தலாவது,—மனதைத் தன்வழியில் செல்ல விடாது, அறிவின் வசமாய்ச் செலுத்தலாம். (6)

எ. உந்து பிறப்பிறப்பை யுற்றுவிடா தெந்தையருள்
வந்து பிறக்க மனமிறப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—இருவினைகட் காஸ்பதமான பிறவிப்பிணியைப் பெறாதபடி, எம் பரமபிதாவாகிய இறைவர் திருவருள் சுரந்தருளற்கு எளியன் மனமானது மாய்ந்திடலும் எக்காலமோ!

குறிப்புரை :—மனம் மாய்தலாவது, தன்தொழிலாம் சிந்தனை அற்றுப் ஓய்வுற்றிருத்தலாம். (7)

அ. புத்தியென்னுந் துத்திப் பொறியரவின் வாய்த்தேரை
ஒத்துவிடா தெந்தையரு ளோங்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை:—அறிவெனும் படப்பொறி வாய்ந்த சர்ப்பத்தினது வாய்ப்பட்ட தேரையைப் போன்று மலின மடையாமல் என் பரம பிதாவாகிய இறைவர் தன் திருவருள் விருத்தி பெறுங்காலம் எக்காலமோ தெரியேன் என்பது. (8)

கூ. ஆங்கார மென்னுமத யானைவா யிற்கரும்பாய்
ஏங்காம லெந்தையரு ளெய்துநா ளெந்நாளோ.

பொழிப்புரை:—அகங்காரம் எனப்படும் மதங்கொண்ட யானையின் வாய்ப்பட்டுள்ள கரும்பினைப் போன்று கெடாதபடி எந்தந்தையா மிறைவர் திருவருள் வாய்க்கப் பெறுங்காலம் இனி யெக்காலமோ, தெரிந்திலனே!

குறிப்புரை:—இதனால், இறைவர்க்குத் திருவருள் சுரக்கும் இரக்கம் திரும்பாமையைக் கருதி அடுத்தடுத்து அவரையே குறித்து 'அருள் புரிதல் எக்காலமோ' வென்று வேண்டுவராயினர் போலும். (9)

௧௦. சித்தமெனும் பௌவத் திரைக்கடலில் வாழ்துரும்பாய்
நித்தமலை யாதருளி னிற்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை:—சித்தம் எனப்பெறும் மிக விசாலமான அலைவீசுங் கடற்கண்ணகப்பட்ட சிறிய துரும்பேபோன்று யான் இங்கு கிடந்து அலைந்தோயாது திருவருள் நிலையிலே பொருந்தி வாழும் நாள் இனி யெக்காலமோ வென்பதாம்.

குறிப்புரை:—சித்தம் நித்தம் வீணிலே அலைந்து கெடாதபடி திருவருணிலைபெறும் நாள் எந்நாளோ வென்பது. (10)

௧௧. வித்தியா தத்துவங்க ளேழும் வெருண்டோடச்
சுத்தபர போகத்தை துய்க்குநா ளெந்நாளோ

பொழிப்புரை:—காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை யென்னும் இவ்வெழுவகை வித்தியா தத்துவங்களும் வெருட்சி கொண்டோட்டெடுப்ப, பரிசுத்தமாய சுவாநுபவத்தால் மெய்வாழ் வுறுங் காலம் எக்காலமோ!

குறிப்புரை:—இகபோகம் வெறுத்து, சுத்த பரபோகமாஞ் சுவாநுபூதி செய்து பெருவாழ் வெய்தலையே ஈண்டு குறித்தனர் என்பது. (11)

கஉ. சுத்தவித்தை யேமுதலாத் தோன்றுமோ ரைந்துவகைத்
தத்துவத்தை நீங்கியருள் சாருநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—சுத்தவித்தை முதல் ஐவகைத் தத்துவங்கட்கும் அப்பாற்பட்டு இறைவன் திருவருட் செல்வம் பெற்று பெருநிலை வாழ்வுறுவதும் இனி யெக்காலமோ என்பது.

குறிப்புரை :—சுத்தவித்தை, ஈஸ்வரம், சாதாக்கியம், சத்தி, சிவம் என்கின்ற ஐவகையினவும் சிவதத்துவங்களாகும். (12)

கங. பொல்லாத காமப் புலைத்தொழிலி லென்னறிவு
செல்லாம னன்னெறியிற் சேருநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—மிகுதியுங் கேவலமான காமாநுபவமாகிய அதி யிழிவான காரியத்திலே என் அரிய அறிவானது பிரவேசியாது சன்மார்க்கமாம் அருணெறி பற்றுநாள் எக்காலமோ !

காமத்தா லிந்திரன் கலக்க மெய்தினன்
காமத்தா லிராவணன் கருத்த ழிந்தனன்
காமத்தாற் கீசகன் கவலை யுற்றனன்
காமத்தா லிறந்தவர் கணக்கி லார்களே.

என்று இங்ஙனம் பெரியார் இகழ்ந்தமை யானும், ஆசிரியர் "பொல்லாத காமப் புலைத்தொழி" லென்றிழித் துரைத்தனர். (13)

கச. அடிகளடிக் கீழ்க்குடியா யாம்வாழா வண்ணங்
குடிகெடுக்கும் பாழ்மடிமைக் கூறொழிவ தெந்நாளோ.

பொழிப்புரை :—இறைவன் திருவடித் தாமரைக்குக் கீழமர்ந்து யாம் நித்தியவாழ்வு வாழப் பெறுவகையாக எம் குடியினைக் கெடுக்கும் பாழ்பட்ட சோம்பலைத் தொலைத்து மீள்வது மெக்காலமோ ! என்பது. (14)

கரு. ஆனபுறக் கருவி யாறுபத்து மற்றுளவும்
போனவழி யுங்கூடப் புன்முளைப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—இயல்பாயுள்ள புறக்கருவிகள் அறுபதும், இன்னுமுள்ளனவும் ஒழிந்து போயினவாய மார்க்கங்களிலே அவை மீண்டும் வாரா வகையாகப் புல் முளைத்துப் போவதுவும் இனி எத்தனை நாட்கள் செல்லுமோ !

குறிப்புரை :—

புறக்கருவிகள் அறுபதாவன :—

பிருதுவியின் கூறு 5.—மயிர், எலும்பு, தோல், நரம்பு, தசை.

அப்புவின் கூறு 5.—நீர், உதிரம், மச்சை, மூளை, சுக்கிலம்.

தேயுவின் கூறு 5.—ஆகாரம், நித்திரை, பயம், மைதுனம், சோம்பல்.

வாயுவின் கூறு 5.—ஓடல், நடத்தல், நிற்றல், இருத்தல், கிடத்தல்.

ஆகாயத்தின் கூறு 5.—காமம், குரோதம், உலோபம், மோகம், மதம்.

வாயுக்கள் 10.—பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன்.

நாடிகள் 10.—இடை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, அத்தி, சிகுவை, அலம்புடை, புருடன், குகு, சங்கினி.

வசனாதிகள் 5.—வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம்.

வாக்குகள் 4.—சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி.

குணங்கள் 3.—சத்துவம், ரஜஸ், தமஸ்.

ஏடணை 3.—புத்திர ஏடணை, உலக ஏடணை, அர்த்த ஏடணை.

ஆக புறக்கருவிகள் அறுபதாம். (15)

கசா. அந்தகனுக் கெங்குமிரு ளானவா றுவறிவில்
வந்தவிருள் வேலை வடியுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—பிறவிக் குருடனுக்கு எப்போதும் எவ்விடமும் இருளாகவே தோன்றுவது போலவே, என்னறிவூடு ஒட்டியுள்ள அஞ்ஞானப் பேரிருளானது சமுத்ரம் வரத்தொழிவதும் இனி யெந்தக்காலமோ, தெரிந்திலன் என்பது.

குறிப்புரை :—அந்தகன் - இங்கே கண்தெரியப் பெறாதவன். (16)

கஎ. புன்மலத்தைச் சேர்ந்துமல போகம் பொருந்துதல்போய்
நின்மலத்தைச் சேர்ந்துமல நீங்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—அதிகேவல கன்ம மலத்தைக் கொண்டே அஞ்ஞானவறிவு மிகுந்து நாசமுறுது, நிர்மல சொரூபியாய எம் பரமகருணை நிதியாம் பரம்பொருளைச் சார்ந்து மலமாயையை வேற வோட்டுவதும் இனி யெக்காலமோ ! நின்மலம் = மலமற்றது.

குறிப்புரை :—நெடுங்காலமாக என்னைப் பற்றி வந்த மலமாயாபந்த மொழிந்து பரிசுத்தனாவதும் எக்காலம் என்பது. (17)

கஅ. கண்டுகண்டுந் தேறுக் கலக்கமெல்லாந் தீர்வண்ணம்
பண்டைவினை வேரைப் பறிக்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—நேரே பார்த்துப் பார்த்திருந்தும் தெளிவு பெறுமே யிருந்துள்ள கள்ளமனக் கலக்கங்க ளத்தனையும் நீங்குமாறதாகப் பூர்வ சம்பந்த வினைகளாம் வேரினைப் பறித்துப் போடுவதும் இனி எக்காலமோ !

குறிப்புரை :—பழவினை சூன்யமானுலன்றிச் சென்மம் முடிவடையாதென்பது இதனுல் தெளி பொருளாயது. (18)

கக. பைங்கூழ் வினைதான் படுசாவி யாகவெமக்
கெங்கோன் கிரணவெயி லெய்துநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—ஏற்கனவே செய்துள்ள பயிரான வினைகளைச் சாவிபட்டுத் தொலையும்படி எமக்கு என்னிறைவனுர் திருவருட் கிரணமாம் வெயிலைக்காயப் பெறுவதும் எக்காலமோ ! என்பது.

குறிப்புரை :—பழவினையைப் பைங்கூழெனும் நெற்பயிராகவும், அதைக்காய்ந்து மடிக்கும்படிக்கு இறைவன் றிருவருளை மிதமீறிய வெயிலாகவுங் கற்பித்தோதினரென்க. (19)

உ௦. குறித்தவித மாதியாற் கூடும்வினை யெல்லாம்
வறுத்தவித்தாம் வண்ணமருள் வந்திடுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—தீய முறையில் நினைத்தலாதிகளா லுண்டாம் வினைத் தொகுதிகள் யாவும், வறுபடுமாறு செய்த விதையைப்போன்று முளையாதொழிய திருவருள் வந்தெய்தப் படுவதும் எக்காலமோ !

குறிப்புரை :—வறுபட்ட வித்து முளையாதொழிவதுபோல பழவினைகள் பாறும் வண்ணம் திருவருள் புரிவா யென்பது சாரமாம்.

" சொல்லால் வருங்குற்றஞ் சிந்தனையால் வருந்தோடஞ்செய்த
பொல்லாதவினை பார்வையிற் பாவங்கள் புண்ணியநூ
லல்லாத கேள்வியைக் கேட்டிடுந்தீங்குக ளாயவுமற்
றெல்லாப் பிழையும் பொறுத் தருள்வாய் "—என்றூர் வெண்காட்டடிகளும். (20)

உக. சஞ்சிதமே யாதி சரக்கான முச்சேறும்
வெந்தபொரி யாகவருண் மேவுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—சஞ்சித கன்ம முதலாயுள்ள மூவகைச் சக்திகளும் காய்ந்து வெந்து பொரிந்த பொரியைப் போன்று ஒழியுமாறு திருவருள் சாரந்தருளுங் காலம் எக்காலமோ.

குறிப்புரை :—சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம் என மூவகைக் கன்மங்களையே இங்கு ஆசிரியர் "சஞ்சிதமேயாதி சரக்கான" என்று கூறினராக. (21)

உஉ. தேகமுத லஞ்காத் திரண்டொன்றாய் நின்றிலகு
மோகமிகு மாயை முடியுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—மோகத்தால் வந்த இத்தேகம் நால்வகைப் பிரிவால் வளர்ந்துவந்து பின் யேகவுருவாய் நின்று மோக மீக்கூறலால்வந்த மாயைப் பிரதிமையானது சூன்யமாவது எக்காலமோ !

குறிப்புரை :—தேகம் மோகத்தால் தோன்றியதாதலின் இது சூன்யப் பட்டொழிய, நித்தியதேகத்தை விரும்பலாயின ரென்பது. (22)

உங. சத்த முதலாத் தழைத்திங் கெமக்குணர்த்துஞ்
சுத்தமா மாயை தொடக்கறுவ தெந்நாளோ.

பொழிப்புரை :—சத்த முதலாகவுடைய பஞ்ச தன்மாத்திரைகள் விரியப்பெற்று இங்கெனக்கே யுணர்விக்கும் தனியான மாயா தொடர்பானது அற்றொழிவதும் இனி யெக்காலமோ என்பது.

குறிப்புரை .—சத்தமுதலாக வுடையது.—சப்த, ஸ்பரிச ரூப, ரச, கந்தம் என்னும் ஐவகைத் தன்மாத்திரை யென்பது. (23)

உச. எம்மைவினையை யிறையை யெம்பாற் காட்டாத
அம்மை திரோதை யகலுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—எம்மையும், என் இருவினைகளையும், எம் இறைவனையும் எமக்கறிய வொண்ணாது மறைத்திடுகின்ற அன்னையொத்த திரோதான சத்தியார் என்னை விட்டொழிவதும் எக்காலமோ !

குறிப்புரை :—திரோதான சத்தியாரே பொருளைக்காண வொட்டாது மறைத்து நிற்பவ ளென்க. (24)

உரு. நித்திரையாய் வந்து நினைவழிக்குங் கேவலமாஞ்
சத்துருவை வெல்லுஞ் சமர்த்தறிவ தெந்நாளோ.

பொழிப்புரை :—நித்திரை யவஸ்தையாக வந்தணைந்து மனத்தின் காரியமாய நினைத்தலைக் கெடுக்கும் கேவலம் விரோதியை செயங்கொள்ளும் வழியைத் தெரிந்துய்வதும் எக்காலமோ !

குறிப்புரை :—நினைவை மறப்பதே கேவலாவத்தை யென்பர் வேதாந்த சாத்திரக்காரர்கள். (அவத்தாத்திரயம் மூன்றாகலான்) சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்னு மூன்றையும் அவத்தை யென்றனர் போலும். (25)

உசு. சன்னல் பின்னலான சகலமென்னுங் குப்பையிடை
முன்னவன் ஞானக்கனலை மூட்டுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—சன்னல் பின்னலென்னும் சிக்கலான மறத்தல் நினைத்தலாம் குப்பையின்கண் இறைவன் ஞானாக்னியிட்டுத் தகிப்பித்து மேல் நிலைக்குய்த்திடலும் இனி யெந்தக்காலமோ !

குறிப்புரை :—ஈண்டு சன்னல் பின்னலென்பது நினைத்தல் மறத்தல்களை யென்றுணரற்பாலது. ஆகவே, நினைப்பும் மறப்புமொழித்தலே மனமிறத்தலாகும். மனமிறக்க, திருவருள் கண்திறந்து நோக்கு மாறதாம். இந் நினைப்பு மறப்பற்று மனம் ஏகாக்கிர மடைதலையே நிட்டையென்பர் மேலோர். (26)

உஎ. மாயா விகார மலமொழிசுத் தாவத்தை
தோயா வருளைத் தொடருநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—மாயாகாரிய விகாராதிகளை யெல்லாம் நிரஸனிக்கும் சுத்தாவத்தைக் குட்பட்டு திருவருட் பேற்றைப் பின்றொடர்ந்தேகுவதும் எந்தக்காலமோ தெரிந்திலன் என்பது.

குறிப்புரை :—ஈதன்றிச் சுத்தாவத்தை யென்பதே இருவினைகளும் சமத்துவமாய்க் கொண்டு நிற்றலென்பது. மலபரிபாககாலமும் இதன்மே லென்பது நூன்முறையாகும். (27)

---

## தன்னுண்மை.



க. உடம்பறியு மென்னுமந்த வூழலெல்லாந் தீரத்
திடம்பெறவே யெம்மைத் தெரிசிப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—' இந்தசரீரமே யறியுந்தகைமைத் ' தென்கின்ற இந்த விவேக ஆபாசங்கள் ஒழியுமாறே திடமாக எம்மை யாமறிந்து வாழ்தலும் இனி எக்காலமோ ! என்பது

குறிப்புரை :—இடப்ரக்ஞை வாராத வரையில் தன்னைத் தானறிதலின்றாம். (1)

உ. செம்மை யறிவாலறிந்து தேகாதிக் குள்ளிசைந்த
எம்மைப் புலப்படவே யாமறிவ தெந்நாளோ.

பொழிப்புரை :—இச்சரீராலயத்தினூடு எழுந்தருளியுள்ள எம்பரம் பொருளினை தெளிவான நுண்ணறிவாலறிதற்கு முன்னம், என்னை யானறிதல் அவசியமாதலின் அங்ஙனம் என்னையுணர்தலும் இனி யெக்காலமாமோ !

குறிப்புரை :—ஆழ்ந்த விசாரணையினாலே தானாகிய அறிவையறிதலே தன்னைத்தானறிதலன்றி மற்றெத்தத்துவங்களு மன்றாம், இங்ஙனந் தன்னைத் தானறிந்தால் தலைவனையும் பின்னறியலாம். (2)

ங. தத்துவமாம் பாழ்த்த சடவுருவைத் தான் சுமந்த
சித்துருவா மெம்மைத் தெரிசிப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—தத்துவக்கூட்டங்கள் ஒன்று கூடிவந்த யிந்தபாழான சடசரீரத்தைச் சுமந்திராநின்ற ஞானசொரூபமான பேரறிவாய எம்மைத் தரிசித்தலும் இனி யெந்தக்காலமோ !

வெண்பா

ஆக்கைநீ யல்ல வறிவுநீ யென்றுமறை
வாக்கியங்க ளென்கும் வகுத்துரைத்து—நோக்காமன்
மீட்சிதரு மீசன் விழியெதிராய் முன்னின்று
காட்சிதா வென்னுங் கடை.—என்னுமிப் பெரியார்தம் பேருரை யாற் றெரிந்து கொள்க. (3)

ச. பஞ்சப்பொறியை யுயிரென்று மந்தப்பஞ்சமறச்
செஞ்சவே யெம்மைத் தெரிசிப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—ஐவகைப் பொறிகளையும் உயிர் என்று கொண்டுள்ள குருட்டுக்கொள்கை யொழியுமாறு எமைச் செவ்வையாய்த் தெரிந்துய்யப் பெறுவதும் இனி யெந்தக்காலமோ !

குறிப்புரை :—பஞ்சமற வென்றது, ஈண்டு விவேகப் பஞ்சம் ஒழிந்து திடமான மெய்யறிவாலறிதலை யென்க. (4)

ரு. அந்தக் கரணமுயி ராமென்ற வந்தரங்க
சிந்தைக் கணத்திலெம்மைத் தேர்ந்தறிவ தெந்நாளோ.

பொழிப்புரை:—அந்தக்கரணங்கள் நான்குமேதான் பிராணன் என்று தங்களுள்ளே கொண்டுள்ள கொள்கை யொழிவதாக்க, எம்மைத் தெளிவு பெறத் தெரிந்துகொள்வதும் எக்காலமோ!

குறிப்புரை :—அந்தக்கரணங்களாவன :—மனம், அகங்காரம், சித்தம், புத்தி யென்பன. இவை யல்லவென்பது. (5)

சு. மூக்குணத்தைச் சீவனென்று மூடத்தை விட்டருளால்
அக்கணமே யெம்மை யறிந்துகொள்வ தெந்நாளோ.

பொழிப்புரை :—மூவகைக் குணங்களேயும் சீவனுகக் கொண்டுள்ள மூடப்பிராந்தி யொழிந்து நினது திருவருளினுலே அந்தக்ஷணமே யாம் எம்மை யுண்மையாகத் தெரிந்துகொள்வதெக்காலமோ!

குறிப்புரை :—இராசத, தாமத, சாத்துவிகங்களாகிற மூவகைக் குணங்களேயே சீவன் என்னல் அபாவப்ராந்தியாம். (6)

எ. காலேயுயி ரென்னுங் கலதிகள்சொற் கேளாமற்
சீலமூட னெம்மைத் தெளிந்துகொள்வ தெந்நாளோ.

பொழிப்புரை :—தசவாயுக்களில் பிராணவாயுவான மூச்சாகிற சுவாசத்தினேயே சீவன் என்று உளறிவரும் மூதேவித் தன்மையர்களது மூடப் பிராந்தி யுரைகோடாது, சுத்தமான உண்மைச் சீவன் இன்னதென்றுணர்ந்து எம்மை யானறிந்து வாழ்தலும் இனி யெக்காலமோ!

குறிப்புரை :—பத்துவகை வாயுக்களேயும் தன் வன்மையால் நடத்துவித்தால் அதனேப் பிராணவாயு வென்றதேயன்றி சீவன் அதுவல்ல வெனத் தெரிதல் அவசியம்.

1. என்னுடம்பி தென்கால்கை யென்வயிறீ தென்விழிநா
வென் சென்னியென் றுமயங்கும்

2. ஆக்கை சடமென்று மான்மா வறிவென்று
நோக்காது நூலின்வழி.

என்னுமிப் பேருரையால் சீவனேக் கண்டுணர்க. (7)

அ. வான்கெடுத்துத் தேடு மதிகேடர் போலவெமை
நான்கெடுத்துத் தேடாம னன்கறிவ தெந்நாளோ.

பொழிப்புரை :—ஆகாய வெளியைக் கைக்குடையால் மறைத்துள்ளதை மறந்து, பிறகுதான் ஆகாயத்தைக்காணே மென்று தேடுமதி கெட்

டார்போல, என்னையே யான் தேடியலையாவாறு உண்மையா மென்னை யோர் வது மெக்காலமோ தெரிந்திலன். என்பது. (8)

---

## அருளியல்பு.

---

க. ஈனந் தருநா டிதுநமக்கு வேண்டா மென்
றூனந்த நாட்டி லவதரிப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—கேவல பிறப்பிறப்பைக் கொடுத்தருளும் தேயமிது, ஆகவே இந்நாடு வேண்டிலன், வேண்டுவதும் நித்தியானந்த மருளும் திருவருளாம் திவ்ய திருநாட்டின்கண் தோன்றி யிருத்தலும் இனி யெந்தக் காலமோ தெரியேன். என்பது.

குறிப்புரை :—இதனால், ஆனந்த நாட்டின் அதிபதியாம் இறைவன் றிருவரு ளாட்டத்தையே யெய்தப்பெறுதல் வேண்டுமென்பதாம். (1)

உ. பொய்க்காட்சி யான புவனத்தை விட்டருளா
மெய்க்காட்சி யாம்புவன மேவுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—பொய்ஞான மென்னும் அஞ்ஞானக் காட்சிக்கு ஆஸ்பதமாயுள்ள இம்மாயாசகித உலகத்தை யொழித்தே, திருவருளாலாய உண்மையா யென்றுமுள்ள பேரறிவாம் புவனப்ரதேசமுற்று ஆங்கு வாழ்வதும் எக்காலமோ!

குறிப்புரை :—பொய்ப்படு தத்துவத் தொகுதிகளோடுங்கூடி பொய் வாழ்வு வாழ்வதைவிட்டே, திருவ்ருளாட்டமாந் திருபுவனமுற்றுத் திவ்ய பேரறிவோடுங் கூடிவாழ்வது மெக்காலமோ! (2)

ங. ஆதியந்தங் காட்டாம லம்பரம்போ லேநிறைந்த
தீதி லருட்கடலைச் சேருநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—உற்பத்தி லயங்கள் தெரிதராது, ஆகாய நிறைந்துள்ளமை போன்று, எங்கணும் குற்றமற்ற திருவருட் சமுத்திரம் போன்றுள்ள அத்தனிப் பரம்பொருளைச் சேர்ந்துய்யுங்காலம் எக்காலமோ!

குறிப்புரை :—இதனால், பரமானந்த நாட்டிற் பதிந்து, பரானந்த வாழ்விலிருந்தருள்வதும் எக்காலமோ என்பது வெளியாயது. (3)

ச. எட்டுத் திசைக்கீழ்மே லெங்கும் பெருகிவரும்
வெட்டவெளி விண்ணாற்றின் மெய்தோய்வ தெந்நாளோ.

**பொழிப்புரை:**—அட்ட திசைகளென்ன, கீழுமேலு மென்ன ஆக தச திசைகளும் அப்பாலும் எப்பாலும் எந்நாளும் பரிபூரண நிறைவா யோங்கி பிரவேசித்துவராநின்ற ஆகாய நதியின்கண்ணே யான் படிந்து வாழ்ந்தெழுவது மெக்காலமோ!

**குறிப்புரை:**—எங்கும் பராகாயம் விரிந்து நிறைந்த விடமெல்லாம் பூரணப் பொருளாயுள்ளதாம் ஆகாய கங்காபெருக்கின்கண் மூழ்கி யெழுந் துய்வதும் எக்காலமோ வென்பது. நீங்கொணாத திருவருட்டாகமுடை மையான் விண்ணாற்றின் படிவதாக் கூறினர். (4)

ரு. ஶ்ரீதான மென்று சுருதியெல்லா மோலமிடு
மீதான மானவெற்பை மேவுநா ளெந்நாளோ.

**பொழிப்புரை:**—மிக்க மறைவிடமென்றே அரிய சுருதிகளாம் வேத சாத்திராதிகள் யாவும் விளம்பும் புருவமத்யாந்தப் புரத்தோங்கும் மீதானச் சுடரொளியாம் பர்வதத்தில் பொருந்தி வாழுங்காலம் இனி யெக்காலமோ வென்பதாம்.

**குறிப்புரை:**—இந்த மீதானமென்னும் புருவமத்ய ஸ்தானமே நந்தி வொளி யெனவும், சுழிமுனைச் சோதிஸ்தான மெனவும், சோதி மலையென வும், இவ்வொளி தரிசனமே பரம ஞானத்திற் காஸ்பதமான தெனவும் மேலோர் கூறியுள்ளார்.

இது மிகப் பிரதானதான தென்றுணரற் பொருட்டே அறிகுறியாக அந்த புருவ மத்யஸ்தானத்தின் மேலே திலத மிட்டும் குறிப்பிட்டு வருத லைக் குறிப்பா யுணர்க.

இந்த வோர் நிலையையே விவேகிகள் கண்டறியுமாறு வீடுகடோறும் ஆங்காங்கு தீபம்வைத்தற்காக அமைத்துள்ள மாடமெனும் முக்கோணப்பி றையை யமைத்து அதில் சோதியாம் தீபம்வைத்து வழங்கி வந்துளார்கள். இதனானே நன்கு விளங்கு மென்க. இதுவே உண்ணிலைக் குறியாம். (5)

சா. வெந்துவெடிக் கின்றசிந்தை வெப்பகலத் தண்ணருளாய்
வந்துபொழி கின்றமழை காண்ப தெந்நாளோ.

**பொழிப்புரை:**—அதி கேவல தத்துவாதிகளால் சகிக்கொணா வெதுப் புற்று மனம் வெடிபடு நிலையானது மாறிச் சாந்தமுற, குளிர்ந்த திருவருண்

மாரியாகவந்து என்பால் பொழிந்து தணிவிக்கும் அம்மழையைத் தரிசிப்ப தும் இனி யெக்காலமோ !

குறிப்புரை :—கருவி கரணாதிகளின் விசிரிம்பால் நேர்ந்துள்ள மனோ களைப் பாறுமாறு அருண்மாரி பொழிந்தருள்வதைக் காண்ப தெப் போதோ ! (6)

எ. சூரியர்கள் சந்திரர்க டோன்றாச் சுயஞ்சோதிப்
பூரணதே யத்திற் பொருந்துநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—இராப்பக லற்றதாயுள்ள பரவெளியாம் துரிய வெளி யிலே யுள்ள பரிபூரண பரஞ்சோதி நாட்டின்கண் நிலவி வாழ்தலும் இனி யெந்தக்காலமோ தெரிந்திலனென்பது.

குறிப்புரை :—துரிய மலைமேலுளதோர் சோதிவள நாடென்றார் பெரி யார். (7)

அ. கன்றுமன வெப்பக் கலக்கமெலாந் தீரவருட்
டென்றல்வந்து வீசுவெளி சேருநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—தத்துவ சேஷ்டிதங்களால் நேர்ந்த மனோவிசார கட்ட நட்டங்கள் யாவு மொழிந்து திருவருளாகிய தென்றற் காற்று வீசும் சுகவெளியை யடையுங்காலம் எக்காலமோ !

குறிப்புரை :—கொடிய கருவி கரணாதி சம்சர்க்காதிகளால் உண்டாய மனக் கொதிப்பானது நீங்கற்கேற்ற திருவருள் தென்றல் வீசுவதும் இனி யென்றுகொலோ வென்பதாம். (8)

௯. கட்டுநமன் செங்கோல் கடாவடிக்குங் கோலாக
வெட்டவெளிப் பொருளை மேவுநா ளெந்நாளோ.

பொழிப்புரை: —இயமன் பிணைக்கும் பாசச் செங்கோலானது அவன் ஏறிவரும் எருமைக்கடாவை வோட்டத்தக்கதாகப் போய்விட, யான் பறை குடிலையென்னும் பரவெளி வீட்டகத்துள்ள பரஞ்சோதி சொரூபத்தைப் பற்றி நிற்குங்காலம் எக்காலமோ !

குறிப்புரை :—பக்தன் பக்தியால் பரமனை நாடி நிற்றல் போல், ஆசிரி யரும் தம்பேரறிவாற்றலால் இறைவனிருப்பிடந்தேடி அங்கு அவரை அணைந்து நிற்ப, வந்த எமன்கோல் வாளா வந்தவழி நோக்காது எந்த வழி யும் போகாமைபோலாம் என்பதாயிற்று. (9)

கഠ. சாலக் கபாடத் தடைதீர வெம்பெருமான்
ஓலக்க மண்டபத்து ளோடுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—மேல் நிலையாம் ஆனந்த நாட்டிற்கேகப் பெருந் தடைக் கபாடங்களாயுள்ள தத்துவப் பகுதிகளை யொழித்து எம்மான்றன் திருவோலக்க மண்டபமாகிய பரவெளிவீட்டின்கண் ஓடியடையுங்காலம் எக் காலமோ தெரிந்திலன் என்பது. (10)

கக. விண்ணாவன்று ளென்னும் விரிநிலா மண்டபத்திற்
றண்ணீ ரருந்தித் தளர்வொழிவ தெந்நாளோ.

பொழிப்புரை :—இறைவன் திருவடித் தாமரையாகிய சந்திரகாந்த மேடையெனு மண்டபத்தின்கண் சோகமோகந்தீரும் தாக நீரருந்தி என் தளர்வனைத்து மொழிந்து தண்ணென்று குளிர்வாடையால் தழைத்தோங்க லும் எக்காலமோ ! என்பது.

குறிப்புரை :—இறைவன் திருவடித்தாமச் சீதள நீர் அருந்தி யிருந்து களையாறி ஆங்கே பரானந்த வாழ்வுறுங்காலம் எக்காலமோ ! (11)

க௨. வெய்ய புவிபார்த்து விழித்திருந்த வல்லலறத்
துய்ய வருளிற் றுயிலுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—வெப்பத்தோடுங்கூடிய இப்புவியை நோக்கி யிருந்த (பல கவலைகளாகிற) துன்மொழியைப் பெற்று மிகமேலாய திருவருட்டாய் மடி மீதமர்ந்து திவ்யானந்த நித்திரை புரியுங்காலம் எக்காலமோ !

குறிப்புரை:—கண்விழித்த மயக்கம் கண்ணுறங்கினன்றித் தீராமை போன்று, இங்கு நீண்டகாலமாகத் துன்பத்து ளாழ்ந்திருந்த களை யெலாந் தீருமாறு திருவருட் சீதளத் தாமத்திலங்குமாறு அங்ஙன மோதின னென் பது தோன்ற நின்றது. (12)

கங. வெய்ய பிறவிவெயில் வெப்பமெலாம் விட்டகல
ஐய னடிநீழ லணையுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—மிகக் கொடுமையான பலபிறவிகளின் வெதுப் பனைத்தும் தொலையுமாறு எம்மான்றன் திவ்ய திருவடிக் கமல நன்னீழ லமர்ந்து இன்புறுங்காலம் எக்காலமோ !

குறிப்புரை :—மெய்யன்றிருவடித் தண்ணிழற்றங்கி மேலாம் உபசாந் தம் பெறுதலும் எக்காலமோ வென்பதாம். (13)

கச. வாதைப் பிறவி வளைகடலை நீந்தவையன்
பாதப் புணையிணையைப் பற்றுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—துன்பாஸ்பதமாய பிறவிக்கடலை கடந்து கரையேறு மாறு எம்மான்றன் திருவடித் தெப்பங் கொண்டுய்வதும் இனி எந்தக் காலமோ தெரிந்திலனே !

குறிப்புரை :—பான்றாட் பல்பிறவி வேதனையற்றுப் பரமன்றிருவ டியா மரக்கல சாதகத்தால் பிறவிப் பெருங்கடல் கடப்பதுவே பெரும் பேறென்பதாயிற்று. (14)

கரு. ஈனமில்லா மெய்ப்பொருளை யிம்மையிலே காணவெளி
ஞானமெனு மஞ்சனத்தை நான்பெறுவ தெந்நாளோ.

பொழிப்புரை :—மாசற்ற உண்மைப் பொருளாம் பரவத்துவை இம் மைக்கண்ணே கண்டுய்வான், ஞானமாயப் பேரறிவா மையினைப் பெற்றுய் வதும் எக்காலமோ என்பது.

குறிப்புரை :—மாசில்லா மெய்ம்மணியை இப்பவத்திற்றானே பகிர்முக மாய்த் தரிசிப்பான் வேண்டி மெய்ப்போத மென்னும் மையினை யான் கைக் கொள்வ தென்றுகொலோ. (15)

கசு. எல்லா மிறந்தவிடத் தெந்தைநிறை வாம்வடிவைப்
புல்லாமற் புல்லிப் புணருநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—சகல தத்துவங்களையுங் கடந்த அப்புறத்தேயுள்ள எம்பரமபிதாவான பரமானந்தர், சர்வ பரிபூரணமாய் விளங்கும் அத்தனிப் பரவத்துவைச் சேராது சேர்ந்து ஒருமை பெறுங்காலம் எக்காலமோ ! என்பது.

குறிப்புரை :—இங்கு புல்லாமற் புல்லுதலாவது ; தன்னறிவாலன்றிச் சிவபோதமாந் திருவருள் கூட்டக் கூடுதலென்க. ஆகவே துரியநிலைக்கு அப்பாற்பட்ட சோதிவளநாட்டில் வாழ்தலெனினும் பொருந்து மென் பாம். (16)

கஎ. சடத்துளுயிர் போலெமக்குத் தானுயிராய் ஞான
நடத்துமுறை கண்டுபணி நாம்விடுவ தெந்நாளோ.

பொழிப்புரை :—இம்மானிட யாக்கையாம் சடவடிவின்பால் சீவன் எவ்வாறு நிறைந்துறுமோ அவ்வாறே என்னறிவிற்குப் பேரறிவாய் நின்று விளங்கும் பரம்பொருளின் பரமானந்த சின்மயத் திருநடக்குறியுணர்ந்து நாமெனுந் தற்போத மொழித்து நிற்ப தெக்காலமோ !

குறிப்புரை :—எமதறிவிற்கு அறிவாய பரம்பொருளினைத் தரி சித்து நிர்மல நிலைபெற்றுய்வதும் எந்தக் காலமோ வென்பது. (17)

கஅ. எக்கணுமாந் துன்ப விருட்கடலை விட்டருளாம்
மிக்ககரை யேறி வெளிப்படுவ தெந்நாளோ.

பொழிப்புரை :—என்னைச் சுற்றிச் சூழ்ந்துள்ள கஷ்டமாகிய அந்தகாரச் சமுத்திரத்தைத் தாண்டி திருவருளாய மேலாம் கரையேறி பரமாகாயத்தின்கண் நிலைப்படுவதும் எக்காலமோ !

குறிப்புரை :—துன்பக்கடல் கடந்து தூயவருட்கரையேறி யின்பநிலை யுற்றே யேமாப்ப தெந்தக்காலமோ வென்பது. எங்கணும் என்றசொல் எக்கணும் என்று திரிந்ததாம். (18)

---

## பொருளியல்பு

[ஞான
க. கைவிளக்கின் பின்னேபோய்க் காண்பார்போன் மெய்ஞ்
மெய்விளக்கின் பின்னேபோய் மெய்காண்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—கைத்தீபத்தாலே ஓர் பொருளைக் காண்பது போலவே, உண்மையறிவாம் மெய்த்தீபங் கொண்டுபோய் யதார்த்த வஸ்துவைக் கண்டானந்தித்தலும் எக்காலம் என்பது.

குறிப்புரை :—புறவிருளிற் புதைபட்ட பொருளைத் தீபசாதகத்தாற் தேடியறிவதுபோல அகவிருளாம் அஞ்ஞானந்தகாரத்தில் மறைந்து கிடக்கும் பரம்பொருளினை சுத்தஞானச் சோதிகொண்டு தேடிக்கண்டு கொண்டாடலும் எக்காலமென்பது. (1)

உ. கேடில்பசு பாசமெல்லாங் கீழ்ப்படவுந் தானேமே
லாடுஞ் சுகப்பொருளுக் கன்புறுவ தெந்நாளோ.

பொழிப்புரை:—கெட்டொழிதலற்ற பசுவும், அவற்றின் பாசபந்தங்களும் தாழ்ந்து போகவும், மேலோங்கி நிர்த்தனஞ் செய்கின்ற சின்மயானந்தப் பரம்பொருளினிடத்தே ஆசைவைத்து நேசிப்பதும் இனி யெந்தக் காலமோ வென்பதாம்.

குறிப்புரை :—பசுவாம் ஆன்மாவைப் பந்தித்துள்ள பாசத் தொகுதிகள் விட்டொழிய, தானுன தற்பரம் மேனிலையில் நின்றாடும் மன்றுட்டக்

கண்டு கொண்டாட்டங் கொண்டு சிற்சுக வாழ்வைப் பற்றி நிற்பதுவும் எக் காலமோ வென்பது. (2)

௩. ஆணவத்தை நீக்கி யறிவூடே யைவகையாக்
காணவத்தைக் கப்பாலைக் காணுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—ஆணவாதி மலங்கள் மூவகையினையும் ஒழித்து, என்னறிவகத்திற் செறியும் ஐந்துவகை யவஸ்தைகளுக்கும் புறம்பாயுள்ள வெம்பரம் பொருளைக் கண்டு களிகொளும் திவ்ய திருநாள் என்றுகொலோ வென்பது.

குறிப்புரை :—ஆணவாதி யொழிந்து அறிவு தெரிவாய் நிறைவுற, அதனால் துரியநிலைப் பொருளைக் கண்டறிதல் என்றோ! (3)

௪. நீக்கப் பிரியா நினைக்கமறக் கக்கூடாப்
போக்குவர வற்ற பொருளணைவ தெந்நாளோ.

பொழிப்புரை :—பிரிவிக்கப் பிரியாததும், நினைத்தற்கும் மறத்தற்கும் ஏதுப்படாததுமான ஒழிபுந் தோன்றலு மற்றுள்ள பரவத்து வந்து நம்பால் சேர்வதும் எக்காலமோ!

குறிப்புரை :—போக்கும் வரவு மில்லாப் பூரணப் பொருளையும், நீக்க நினைக்க, மறக்கவுங்கூடாத நித்தியவத்துவையும் நித்தியம் பிரியாநிலைப் பொருளுமாய பெரிய பொருள்சார்பே பெரும் பேறதாகு மென்பது பெறப்பட்டதாம். (4)

௫. அண்டருக்கு மெய்ப்பில்லைவப்பா மாரமுதை யென்னகத்
கண்டுகொண்டு நின்று களிக்குநா ளெந்நாளோ [திற்

பொழிப்புரை :—தேவர்கட்கும் தோன்றாத் துணை புரிந்தோங்கும் அரிய தேவாமிர்தத்திற் கொப்பானவத்துவை என்னுள்ளே தரிசித்து நின்று களியாடல் செய்வதும் இனி எக்காலமோ!

குறிப்புரை :—இதனால், தேவர்க்கு மரிய திரவியமெனும் பரம்பொருளென்பதும், அத்தகைய பரவத்துவே யென்றும் எவர்க்கும் உற்றிடத்துதவக் கூடிய தெனவும் ஆசிரியர் விவரித்தமை நன்கு வியக்தமாயது என்பது. (5)

௬. காட்டுந் திருவருளை கண்ணுகக் கண்டுபர
வீட்டின்ப மெய்ப்பொருளை மேவுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—எவற்றையும் உள்ளபடி யறிவிக்கும் திருவருளேயே மிக்க ஞானக்கண்ணுகக் கொண்டுமோக்ஷ வீட்டின் யதார்த்த வத்துவைச் சேர்ந்து வாழுநாள் எக்காலமோ !

குறிப்புரை :—திருவரு ணேத்திரத்தான மோக்ஷவீட்டின்ப உண்மை வத்துவை அடையப்பெறுதல் எக்காலமோ ! என்பது. (6)

எ. நானுன தன்மை நழுவியே யெவ்வுயிர்க்குந்
தானுன வுண்மைதனைச் சாருநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—யானெனும் மமதாங்கார வியர்க்கை யகலவிட்டு, சகல சீவராசிகட்கும் ஆதாரமாயுள்ள யதார்த்த பரவத்துவைப் பெற்றுய்யுங் காலம் எக்காலமோ !

குறிப்புரை :—நான், நான் எனும் கெர்வித சுபாவம் வேரறப் பிடுங்கப் பெற்று, சர்வான்மாக்கட்கும் ஆதாரமான பரவத்துவைச் சார்வதும் இனி எக்காலமோ என்பது.

உண்மைதனை யென்றது,—நித்திய பரவத்துவே யாமென்க. (7)

அ. சிந்தை மறந்து திருவருளாய் நிற்பவர்பால்
வந்தபொரு ளெம்மையுந்தான் வாழ்விப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—எண்ணு மெண்ணங்களற்றுத் திருவருண் மயமாய் நிலையுற்ற பெரியார்பால் பொருந்தி வாழும் பெரியபொருள் எளியேனையும் பெருவாழ்வில் இருத்திவைத் தருளுவதும் எக்காலமோ !

குறிப்புரை :—தன்னினைவற்ற தன்மையரைச் சார்ந்துள்ள மெய்ப் பரம்பொருளார் எமையும் தம்மன்பனுய் வாழுமாருக் குவித்தருளுவதும் இனி யெக்காலம் என்பது. (8)

கூ. எள்ளுக்கு ளெண்ணெய்போ லெங்கும் வியாபகமா
யுள்ளவொன்றை யுள்ளபடி யோருநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—எள்ளுள் நிறைந்த எண்ணெய்போன்று எங்கணும் சர்வ்வியாபியாயிருந்து வருகின்ற ஒப்பற்ற ஒரு தனிப்பரம் பொருளினை, யதார்த்தமாக தியானஞ் செய்கின்ற காலம் எந்தக்காலமோ வென்பது.

குறிப்புரை :—சர்வ வியாபக விசேஷண பூரணப்பொருளாய எம் பரம கருணு நிலயமே பரம்பொருளென்று சிந்தை குடிகொள்ளும் காலம் எப்போதோ வென்பது. (9)

கo. அருவுருவ மெல்லா மகன்றதுவா யான
பொருளெமக்கு வந்து புலப்படுவ தெந்நாளோ.

பொழிப்புரை :—அரூபமென்ன, சொரூபமென்ன, அருவுருவ்மென்ன இவைகள் அனைத்து மல்லாது, சர்வமுந் தன்மயமாக் கொண்டுள்ள அப்பாஞ் சோதித் தெய்வம் எமது அறிவுக் கெட்டுவதும் எக்காலமோ வென்பதாம்.

குறிப்புரை :—உலகுக்கொருவனு யோருருவே மூவுருவாய் வந்தருளிய பரங்கருணைத் தடங்கடலை யான் பார்ப்பது என்று கொலோ என்பது. (10)

கக. ஆரணமுங் காணு வகண்டிதா காரபரி
பூரணம்வந் தெம்மைப் பொருந்துநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—சதுர் வேதங்களும் பண்டையோர்கால் கண்டறியாப் பரமானந்தப் பதிப்பொருளும், பிரமாண்டப் பேரொளியுமா யுள்ள பூரணப்பொருள் எமைப்பற்றிக் கொள்ளும் காலம் எந்தக் காலமோ வென்பதாம்.

குறிப்புரை :—அகண்டிதாகார மென்பது,—கண்டிதமற்ற சர்வாண்ட புவனுதிகளுங் கொண்டு ஒரே பேருருவாயுள்ள பெரிய பொருளைத் தெரிதற் பாற்றும். (11)

க௨. சத்தொடு சித்தாகித் தயங்கியவா னந்தபரி
சுத்த வகண்டசிவந் தோன்றுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—என்று முள்ளதும், ஞானமயமானதுமான சச்சிதானந்த சொரூபமாய் விளங்கிவரும் பரமானந்த சுத்த வகண்டித சிவபரம் பொருளானது என்னறிவுக்கு வெளிப்படுமாறு காண்பதுவும் இனி யென்றோ வென்பதாம்.

குறிப்புரை :—சச்சிதானந்த வகண்டிதாகார பரசிவ சொரூபமாக என்னறி வறிந்துய்யுங் காலம் எக்காலமோ என்பது. (12)

கங. எங்கெங்கும் பார்த்தாலு மின்புருவாய் நீக்கமின்றித்
தங்குந் தனிப்பொருளைச் சாருநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—கட்புலனுகு மெங்கும் பார்க்கினும், சிறிதும் இடையறுதின்ப சொரூபமா யிலங்கியுள்ள ஒப்புவமையற்ற தன்னந்தனிப் பொருளினைச் சார்ந்துய்யுங்காலம் எக்காலமோ.

குறிப்புரை :—எல்லாவறிவும், எல்லாமுதன்மையும், எல்லா வனுக்ரகமு முடைய சடைமுடித் தனிநட மிடுமொரு முதலைப் பொருந்தி யேகமா யிருந்து வாழும்நாள் எந்நாளென்பது. (13)

கச. அடிமுடி காட்டாதசுத்த வம்பரமாஞ் சோதிக்
கடுவெளிவந் தென்னைக் கலக்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—பிரம விட்டுணு முதலாயினோர்க்கும் தம் பாதமுதல் சிரம் ஈறாக விளங்குமாறு செய்யாத பரிசுத்தாகாயமாகிய பராஞ்சோதியார் தம்பரம சூக்குமாகண்டத்வ மகிமையைக் கடும் பெருவெளியாயுள்ள அப் பரமாத்ம சொரூபம் வந்து எமைப் பேதமறக் கலந்தின்புறுதலும் எக் காலமோ என்பது.

குறிப்புரை :—பெருங்கருணைப் பேரின்பாகாரத் தனிப்பெரும் பதியார் இனிப்புற வெனையே வந்தெய்துங்காலம் எக்காலமோ என்பது. (14)

கரு. ஒன்றனையுங் காட்டா வுளத்திருளைச் சூறையிட்டு
நின்றபராஞ் சோதியுடன் நிற்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—யாதொரு வத்துவையுங் காட்டில்லா நெஞ்சகத் திருளாம் அஞ்ஞானப்பாசியை வாறியெறிந்து மிச்சமாயுள்ள சச்சிதானந்த நிரவயவப் பரவுருவாம் சுயம்பிரகாசத் தனிமுதலை நேடியடைதலும் என்று கொலோ வென்பது.

குறிப்புரை :—தற்போதங்கழன்று சிவபோதமுற்று சிவபராஞ் சுட ரோடும் சேர்ந்திருக்கும் காலம் எக்காலமோ என்பது. (15)

கசா. எந்தச் சமய மிசைந்துமறி வூடறிவாய்
வந்தபொருளே பொருளா வாஞ்சிப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—பலவேறு சமயங்களுள் எந்தச்சமயங்களிலும் நுழைந் திருந்து அச்சமயிகளது அறிவுக்குள் அறிவாயிருந்து தூண்டிவரும் பொரு ளெதுவோ அதுவே பரமபொருளாகக் கொண்டு விசுவாசிப்பதும் எக் காலமோ.

குறிப்புரை :—சமயங்கடோறும் உள்ள ஆன்மகோடிகளினது அறிவுள் ளறிவாயிலங்கித் தூண்டுபவனைச் சார்ந்துய்தலு மெக்காலம் என்பது. (16)

கஎ. எவ்வாறிங் குற்றுணர்ந்தார் யாவரவர் தமக்கே
அவ்வாறாய் நின்றபொருட் கன்புவைப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—எச்சமயத்தார் எவ்விதமாகக் கொண்டு உபாசிக்கினும் அவரவர்க் குரியவிதமாகத் தோன்றி யனுக்கிரகிப்பவன்றன்னை அன்பு செய்து வாழ்வதும் எக்காலமோ.

குறிப்புரை :—யாதொரு தெய்வங்கொண்டா லத்தெய்வமாகி யாங்கே போதரும் இறைவன் யாவனோ, அவனைக்காண்பது மெக்காலமோ என்பது. (17)

கஅ. பெண்ணா ணலியெனவும் பேசாம லென்னறிவின்
கண்ணூடே நின்றவொன்றைக் காணுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—இறைவன், பெண்பாலெனவாவது, அன்றி ஆண்பாலெனவாவது, அல்லது இரண்டுமற்ற அலி (பேடி) சொரூபமென்றாவது சொல்லவியலாதே, என் கண்ணனைய நல்லறிவினூடே தோன்றியுள்ளவோர் பொருளினைத் தரிசிப்பதும் எக்காலமோ வென்பது.

குறிப்புரை :—மெய்யடியர்தம் மறிவுக் கெட்டியருளும் பேரறிவாளரான எம்மண்ணலாரைக் கண்டு களிப்பது மெக்காலமோ. (18)

கசு. நினைப்பு மறப்புமற நின்றபரஞ் சோதி
தனைப்புலமா வென்னறிவிற் சந்திப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—நினைத்தல் மறத்தலாதியன அறவொழிந்த வந்நிலையில் விளங்கியுள்ள எம் பரம காருணிய வத்துவை என் மெய்யறிவின்பால் பரிஷ்காரமாகத் தரிசிக்கப் பெறுதலு மெக்காலமோ.

குறிப்புரை :—இராப்பகலற்ற பராகாய இதயவெளியூடு பொருந்தி நிற்கும் சுகாரம்பத் தனி முதலை அறிவாலறிவது மெக்காலமோ. (19)

---

## ஆனந்த வியல்பு

---

க. பேச்சுமூச் சில்லாத பேரின்ப வெள்ளமுற்று
நீச்சுநிலை காணும னிற்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—வார்த்தை யற்றொழிந்து மவுன நினைவாயிருந்துவப்புறும் பேரானந்தப் பெருக்கின்கண் மூழ்கி நிற்றலும் இனி எந்தக் காலமோ வென்பதாம்.

குறிப்புரை :—மனமிறந்து நின்ற அறிவாகார சுத்த மவுன நிலையில், ஆனந்தாநுசந்தான முற்றுத் திளைத்தலும் எப்போ தென்பது. (1)

உ. சித்தந் தெளிந்தோர் தெளிவிற் றெளிவான
சுத்த சுகக்கடலுட் டோயுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—மிகத் தெளிவுற்ற நெஞ்சத்தோர் தம் தெளிவிலே தெளிவுகொண்டு தோன்றும் பரிசுத்தமாய சுகாரம்பச் சமுத்திரத்திலே முழுகியிருக்குங் காலம் இனி எக்காலமோ என்பது.

குறிப்புரை :—மவுனானந்தானுபவக் கடலினிடை சிற்சுகோதய முற்றுப் பெருவாழ் வெய்தப் பெறுதலும் எக்கால மென்பது. (2)

௩. சிற்றின்ப முண்டூழ் சிதையவனந் தங்கடல்போல்
முற்றின்ப வெள்ளமெமை மூடுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—சிற்றின்பத்திற் றிளைத்த முன் வினையனைத்தும் போயொழிய, பல கடற் பெருக்கொத்தே விளைகின்றதான சுகானந்தக் கடலுள் மூழ்கிக் கிடப்பதும் இனி எக்காலமோ.

குறிப்புரை :—சஞ்சித ஆகாமிய பிராரத்த மென்னும் மூவிதமாய வினைப்பயனும் சுகதுக்காதிகளை அனுபவித்து முடிந்தக்கால், பின்றோன்றிய பரசுகானந்தக் கடலில் முங்கியிருப்பதும் எக்கால மென்பது.

முற்றின்பம் - பேரின்பம் ; அதாவது நித்திய சுகமென்க. (3)

௪. எல்லையில்பே ரின்பமய மெப்படியென் றோர்தமக்குச்
சொல்லறியா வூமர்கள்போற் சொல்லுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—அளவுகடந்த பேரின்ப மயமென்பது எவ்வாறு மென்று வினவினோர்க்கு, பேசவியலாத ஊமையர்களை யொத்தே சமிக்ஞை மொழி கொண்டுணர்த்துவதும் எக்காலமோ. என்பது.

குறிப்புரை :—அளவிடற்கரிய பேரின்ப சுகத்தினை இன்னனவென்று கூறவியலாது மவுனியைப் போன்று சமிக்ஞை கொண்டோதுவ தெக்காலம். என்பது. (4)

௫. அண்டரண்ட கோடி யனைத்துமுகாந்த வெள்ளங்
கொண்டதெனப் பேரின்பங் கூடுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—கணக்கற்ற அண்டகோடிகளனைத்தும் ஒருங்காக ஊழிவெள்ள முண்டானாற் போன்று, பேரின்ப வெள்ளம் தோன்றி யெமைக் கவர்ந்து கொள்வதும் எக்காலமோ என்பது.

குறிப்புரை :—உகாந்த வெள்ளமொத்தே எம்மைப் பேரின்பமுற்றுத் தன்னுளமிழ்த்திடலு மென்று கொலோ என்பது. (5)

சா. ஆதியந்த மில்லாத வாதி யநாதி யெனுஞ்
சோதியின்பத் தூடே துளையுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—உற்பத்தி லயமற்ற ஆதியநாதியென்று விவரிக்கின்ற பரஞ்சோதியின்ப சாகரத்தில் பரபோகத்திற் குள்ளாக நீந்துதலும் எப்போதோ என்பது.

துளைதல் - நீந்துதல் ; அல்லது நீந்திவிளையாடல்.

குறிப்புரை :—பரானந்தப் பரபோகத்துள் சதா படிந்து கிடத்தல் வேண்டுமென்பதே இதன் சாரமென்பாம். (6)

எ. சாலோக மாதி சவுக்கியமும் விட்ட நம்பால்
மேலான ஞானவின்ப மேவுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—சாலோக முதலாயுள்ள நால்வகைப் பதவிகளினும் உண்டாகும் சுகபோகாதிகளை விலக்கியுள்ள என்னிடத்திலே ஒப்பற்றதான ஞானானந்த மெய்துங்காலம் எக்காலமோ.

குறிப்புரை :—சதுர்வித பதவியும் விரும்பாதுள்ள எமக்கு, முடிவான மோனஞான சுகமுற்றுவது மெக்கால மென்பது. (7)

அ. தற்பரத்தி னுள்ளேயுஞ் சாலோக மாதியெனும்
பொற்பறிந்தா னந்தம் பொருந்துநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—தற்பர சிவத்தின்பாலும் சாலோகாதியகா வுளவாந் தன்மையை யறிந்து, அதன் பின்னர் நிரதிசயானந்த முறுவது மெக்காலமோ. (8)

கூ. உள்ளத்தி னுள்ளே தா னூறுஞ் சிவானந்த
வெள்ளந் துளைந்து விடாய்தீர்வ தெந்நாளோ.

பொழிப்புரை :—சுத்த சித்தத்தின்பால் விளையாநின்ற பரசிவானந்த ப்ரவாகத்திலே யான் மூழ்கி நீந்தி எனது நீண்டகால திருவருட்டாகத்தைத் தணித்துக் கொள்வது மெப்போதோ !

குறிப்புரை :—சிந்தாப்ரதேசத்தில் தோன்றும் தற்பரானந்த வெள்ளத் தாடு மூழ்கி விளையாடினன்றி விடாய் தீராதென்பது. (9)

க0. கன்னலுடன் முக்கனியுங் கற்கண்டுஞ் சீனியுமாய்
மன்னுமின்ப வாரமுதை வாய்மடுப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—கரும்பு, முப்பழவகை, கற்கண்டு, சீனச்சருக்கரை இவை கலந்தினிப்புறுஞ் சுவையன்ன பேரின்பம் பயக்கும் ஆருத தேவாமிர்தத்தினை என் வாய்கொண்டு அருந்தி வாழ்வதும் இனி யெத்தனை நாட் செல்லுமோ !

குறிப்புரை :—மகா மதுரங்களனைத்தும் ஒன்று கூட்டியுண்ட சுவை யொத்த பரமானந்த யேதுவாம் சிதானந்த திவ்யாமிர்துண்டு திருவருட்டாகந் தீர்வதுவே அவசிய மென்றதாயிற்று. (10)

கக. மண்ணூ டுழன்ற மயக்கமெல்லாந் தீர்ந்திடவும்
விண்ணூ டெழுந்தசுக மேவுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—மண்ணென இவ்வுலகத்திலே சகல வாஞ்சையோடும் கலந்து வாழ்ந்ததாலுண்டாய மனோவிகாராதி மயக்கங்களனைத்தும் ஒழியுமாறு துரியநிறை பராகாய வெளிக்கண்ணிலவி, ஆண்டுள்ள பரசுக போகந் துய்ப்பது மினி யெக்காலமோ ! என்பது.

குறிப்புரை :—இம்மண்ணுலகத்தூடு வாழ்ந்த மனமயக்காதிய பாச பந்த விழுக்கனைத்தும் பாறும் வண்ணம், மேலாம் வீடாய துரியநிலை நின்று பரசுகானந்த முறுவது மெக்காலமோ ! (11)

கஉ. கானற் சலம் போன்ற கட்டுழலைப் பொய்தீர
வானமுத வாவி மருவுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—கானல் நீரனைய பொய்யுலக வாழ்வின் பொய்யனுபவாதிக ளெல்லாம் நீங்கும்படி ஒப்பற்றதாயுள்ள திவ்யாமிர்தத் தடாகத்தில் துளைவதும் எக்காலமோ !

குறிப்புரை :—இவ்வநித்திய உலகவாழ்வின் அற்பவின்பாதி யனுபவங்கள் துலைந்து மேலான பரபோகத் தடாகத்தில் துளைந்து வாழ்வது மெப்போதோ. (12)

கங. தீங்கரும்பென் றுலினியா தின்று லினிப்பனபோற்
பாங்குறும்பே ரின்பம் படைக்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—இனிக்குங் கரும்பென்ற சொன்மாத்திரையி லினிப்புருது தின்றவக்கணத்தினிப்புறல் போல், அநுபோகத்தில் இனித்திடக் கூடிய சிவானந்தத் தெள்ளமுதருந்துங் காலம் எக்காலமோ.

குறிப்புரை :—பரசிவானந்த சிற்சுகோதய அநுபூதி பெற்று பரமானந்தப் பரசுகம்பெறுவதே பரமுத்தி யென்பதாயிற்று. (13)

கச. புண்ணிய பாவங்கள் பொருந்தாமெய் யன்பரெல்லாம்
நண்ணிய பேரின்பசுக நாமணைவ தெந்நாளோ.

பொழிப்புரை :—புண்ணிய கன்மம், பாவகன்ம மென்னும் இருவகைக் கன்மங்களும் பிறவிக்கு வித்தேயென வொழித்த உண்மை யடியார்களனைவர் களும் முடிவில் அடைந்த பரபோகாதிகளை யாமும் பெற்றுய்வது இனி யெக்காலமோ!

குறிப்புரை :—இருவினையும் ஒன்றேயென்றிகழ்ந் தொதுக்கிய சிவாநுபூதிச் செல்வர்கள் பெறும் பரபோகந் துய்ப்பதும் எக்கால மென்பது. (14)

---

## அன்பு நிலைமை.

க. தக்கரவி கண்ட சரோருகம்போ லென்னிதய
மிக்கவருள் கண்டு விகசிப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—சூரியனைக்கண்டு முகம் விண்ட தாமரைமலரைப் போன்று இறைவன் திருவருளாம் கிரணங்கண்டு என்னிதய தாமரை மலர்வ தென்றுகொலோ என்பது.

குறிப்புரை :—இதனால், மரைமலர் கதிரவனைக்கண்டு மலர்வதுபோலே திருவருள்கண்டு என் மனமாகிய மலர் மலர்வதும் எப்போதென்பது. (1)

உ. வானமுகில் கண்ட மயூரபக்ஷி போலவையன்
ஞானநடங் கண்டு நடிக்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—ஆகாயத்தில் சஞ்சரிக்கும் மேக படலங்களைக்கண்ட மயிலானது குதூகலித்தாடல் போன்று, எம்மான்றன் ஞானானந்தத் திருநடனத்தரிசனத்தால் யான் ஆநந்தக் கூத்தாடலு மெப்போது.

குறிப்புரை :—எம்பெருமான்றிரு நடங்கண்டானந்தக் கூத்தாடுவதும் இனி யெக்காலமோ வென்பது. (2)

௩. சந்திரனை நாடுஞ் சகோரபக்ஷி போலறிவில்
வந்தபரஞ் சோதியையாம் வாஞ்சிப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—பூரண சந்திரிகையைக்கண்ட சகோரப்பக்ஷியானது எவ்வாறு மனக்கிளர்ச்சி கொள்ளுமோ அதுபோல என்னறிவிற் றோன்றிய பரஞ்சோதியினைக் கண்டானந்தங் கொள்வதும் இனி யெக்காலமோ! என்பது.

குறிப்புரை :—இதனால், என்னறிவில் பரஞ்சோதி தோற்றமுண்டாகி அதனை யான் கண்டு அன்புற்று ஆனந்திப்பது மெப்போதென்பது. (3)

௪. குத்திரமெய்ப் புற்றகத்துக் குண்டலிப்பாம் பொன்றாட்
சித்தனையென் கண்ணாற் றெரிசிப்ப தெந்நாளோ. [டுஞ்

பொழிப்புரை :—வஞ்சமலிந்த இந்தவுடலாம் புற்றினிடத்தேயுள்ள குண்டலி சத்தியெனும் பாம்புவடிவத்தை ஆட்டிவரும் பிரசித்தனை என திரு கண்களாலும் தரிசித்தானந்திப்பது மெப்போதோ!

குறிப்புரை :—“ குண்டலிப்பால் நின்றிலங்கும் வெண்ணிலாவே—அந்த
குண்டலிப்பால் வேண்டுகின்றேன் வெண்ணிலாவே ”
என்றார் ஓர் பெரியாரும். (4)

௫. அந்தரத்தே நின்றாடு மானந்தக் கூத்தனுக்கென்
சிந்தைதிறை கொடுத்துச் சேவிப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—ஞானகாய வெளியிலே நின்று பரானந்த நிருத்தஞ் செய்தருளுகின்ற தலைமைப் பெரும்பதிக்கே என் மனமாகிய திறைப்பொருளீந்து தரிசிப்பது மெக்காலமோ!

குறிப்புரை:—பொன் மன்றத்தாடும் புனிதப் பெருமாற்கே என் மனத்தை யீடாக்கி எளியேன் தரிசிப்பது மெக்காலம் என்பது. (5)

௬. கள்ளனிவ னென்றுமெள்ளக் கைவிடுதல் காரியமோ
வள்ளலே யென்று வருந்துநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—இவன் மெத்தக் களவாளன்! என்று எனைக் கை விட்டகற்றலும் ஓர் பெருங்காரியமன்று; யான் எவ்வாறேனும் நின்னை “ வரை யாதளிக்கும் வள்ளற் பெரும்பதியே ” யென்று வருந்தி யழைத்தலொன்றுமே போது மென்பது.

குறிப்புரை :—கள்ளனென்றெனைக் கைவிடற்க; யான் தம்மை எள்ளல் செய்யாது யேத்தல் செய்தலே யெனக்குறும் பெரும்பயனும் என்பது. (6)

எ. விண்ணுடர் காணு விமலா பரஞ்சோதி
அண்ணவா வாவென் றரற்றுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—பொன்னுலகப் புத்தேளுருங் காண்டற்கரிய பேரழகா, சோதி சொரூபப் பெரியோனே, வாவா வென்று அழும் காலம் எனக்கு எப்போது வந்துறுமோ !

குறிப்புரை:—தேவருங் காண்டற்கரிய இறைவனை அண்ணவா, அப்பாவா வென்றென்றும் அழுது கூவும் நாள் எந்நாளோ வென்பது. (7)

அ. ஏதேது செய்தாலு மென்பணிபோய் நின்பணியாம்
மாதேவா வென்று வருந்துநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—யான் யெக்காரியஞ் செய்திடினும் அவை நின் காரிய மாயே முடிவாயது ; ஆகவே, ஏ மகாதேவனே ! வந்தருள்வா யென்றே வருந்துங்காலம் எக்காலமோ.

குறிப்புரை :—யான் செய்வன வனைத்தும் நீ செய்வ தெவ்வாறெனின், என் உடல், உயிர், பொருள் எல்லாம் நின்பால் தந்த அன்றே என் செயல் நின் செயலன்றோ ! என்பதாம். (8)

கூ பண்டுங் காணேனுன் பழம்பொருளே யின்றுமுனைக்
கண்டுங் காணேனெனவுங் கைகுவிப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—ஆதியந்தமில்லா வரும்பொருளே ! நின்னை யான் முன்னேயும் பார்த்திலேன், அன்றி இப்போதும் பார்த்தறியேன் இனிப் பார்ப்பது மெப்போதோ வென்று கைகூப்புதலுந் தெரியேனே என்பது.

குறிப்புரை :—அநாதியான அமல மூர்த்தியை முன்னும் இப்போதும் யான் தரிசித்திலனே ! யென்று அஞ்சலிக்கவு மெண்ணிலனே ! என்பது. (9)

க0. பொங்கேதமான புழுக்க மெல்லாந் தீரவின்பம்
யெங்கேயெங் கேயென் றிரங்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—மிதமீறியவென் பிழையனைத்தும் ஒழியுமாறதாக என் மனம் வருந்தி திருவருட் சுகமானது எங்கே யெங்கே யென்று இரந்து திரியுங்காலம் எக்காலமோ.

குறிப்புரை :—தன் குற்றங்கண்டு தளர்ந்த மனமாதியன, அக்குற்றம் நீங்க அருளமுதம் எங்கேயென்று இரங்குநாள் என்றோ. (10)

கக. கடலின் மடை கண்டதுபோற் கண்ணீ ராறாக
உடல் வெதும்பி மூர்ச்சித் துருகுநா ளெந்நாளோ.

பொழிப்புரை:—கடல் மடை திறந்ததென்ன என் கண்ணில் நீர் பெருக்கெடுத்து ஆறுபோற் பெருகியும், சரீரம் வெதுப்புற்றும், மூர்ச்சை பட்டு நெஞ்சம் நீராளமா யுருகுங்காலம் எக்காலமோ.

குறிப்புரை:—இதனால், அன்பின் பெருக்கால் அடியேன் கண்ணீரும் பெருகி மெய் சிலிர்த்து நெஞ்சம் நெக்குருகுமேல் அன்றே அருளுதயமா மென்பதை அகக்கண் கண்டறிந்ததாகும். (11)

கஉ. புலர்ந்தேன் முகஞ்சருகாய்ப் போனே னிற்காண
அலந்தே னென்றேங்கி யழுங்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை:—இறைவ! தேவரீர்தம் தரிசனங் கிட்டாமையானும், திருவருள் என்பால் திரும்பாமையானும் அடிமை முகம் வாடப்பெற்றும், தேகம் சருகன்ன வுலர்ந்தும் மிக்க களைத்தேன்; இனி நின் கருணைக் கென்றே யேக்குற்றழுநா ளெந்நாளோ! தெரியேன்.

குறிப்புரை:—நின் கருணைப்பிரவாகம் என்பால் அன்பால் திரும்புநலும் என்று கொலோ வென்றேங்கி யெதிர் நோக்குகின்றேன். (12)

கந. புண்ணீர்மை யாளர் புலம்புமாபோற் புலம்பிக்
கண்ணீருங் கம்பலையுங் காட்டுநா ளெந்நாளோ.

பொழிப்புரை:—கொடிய புண்ணுபாளர் ஆற்றொணாது புலம்புத லொத்தே யானும் அழுதலுத்து, கண்ணீரொழுக்கும், கம்பிதமுங் காண் பிக்குங்காலம் இனி யெக்காலமோ!

குறிப்புரை:—தொல்லைவினை வழிவந்த துன்பந் தொலைத்தருள அன் பின் முதிர்ச்சியினாலே கண்ணீர் கம்பிதங்கொண்டு, கண் மூன்றுடையான் நடைக்கண்ணேக்கங் கொள்வதும் எக்காலமென்பது. (13)

கச. போற்றேனென் றூனுமென்னைப் புந்திசெய்யும் வேதனைக்
காற்றேனாற் றேனென் றரற்றுநா ளெந்நாளோ. [கிங்

பொழிப்புரை:—இதுகாறும் நின்னையான் வணக்கஞ் செய்யா விட்டாலும், என்னை என் புத்தியானது உட்படுத்துகின்ற துன்பத்திற்கு இங்கே இனிச்சகிக்கேன்! எனவே ஒலியொடு அழுது கூவுதலும் எக்காலமோ என்பது.

குறிப்புரை :—என் புத்தியின் கிலேசத்தால் நின்னை ஓலமிட்டு ஆற்ருமை யாகினேன் ! ஆற்ருமையாகினேன் !! என்று அழுகொலியோடு கூவுதலும் எக்காலமோ என்பது. (14)

கரு. பொய்ம்முடங்கும் பூமிசில போட்டலறப் பூங்கமலன்
கைம்முடங்க நான்சனனக் கட்டறுவ தெந்நாளோ.

பொழிப்புரை :—பொய்யே மலிந்துள்ள சில நிலபுலங்கள் விளைவிலாது கிடக்கவும், தாமரை யாசனனுய பிரமன் தன் படைப்பை நிறுத்திக் கை முடக்கமா யிருக்கவும், யான் பிறப்பிறப்பின்றி யிருப்பதும் எக்காலமோ !

குறிப்புரை :—சிலபோது பிரமன் தன்ருெழிலாம் படைப்பை நிறுத்தின் யான் சிலகாலம் சனன மரணமிலா தயர்ந்திருக்கவும் வாய்க்காதோ என்பது. (15)

[காமே
கசா. கற்குணத்தைப் போன்றவஞ்சக் காரர்கள்கை கோர்க்
நற்குணத்தார் கைகோத்து நான்றிரிவ தெந்நாளோ.

பொழிப்புரை :—இரக்கமில்லாது கல்லையொத்த வஞ்சக்குண நெஞ்சர் கையினைக் கோத்துலவாமே, தபான மனத்தவர் கைகோத்துக் களிப்பொடுந் திரிந்துலவுதலும் எக்காலமோ !

குறிப்புரை :—கல்லொத்த நெஞ்சத்தவரைக் கலந்திராமே நல்ல நெஞ்சுடையாரைக் கலந்து கைகோத்து வாழ்தலும் இனியோர் காலமும் வாய்க்குமோ வென்பது. (16)

கஎ. துட்டனைமா மாயைச் சுழனீக்கி யந்தரமே
விட்டனையோ வென்று வியக்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—கொடிய தீயோனுகிய எனையே மகா மாயையாம் சுழலினின்றெடுத்தே, மேலான ஞானுகாயத்திடை நிலைபெறச் செய்தனையோ வென்று நின்னை மிகவுங் கொண்டாடிப் பூஷிக்கும் நாள் எந்நாளோ வென்பது.

குறிப்புரை :—கொடிய மாயா சகிதனை மாயா ரஹிதனுக்கி சிற்பர வெளிக்கண் சேர்த்தனையோ வென்று துதி செய்யுங்காலம் எக்காலமோ என்பது. (17)

# அன்பர் நெறி



க. அத்துவா வெல்லா மடங்கச்சோ தித்தபடிச்
சித்துருவாய் நின்றோர் தெளிவறிவ தெந்நாளோ.

பொழிப்புரை :—அத்துவாக்க ளனைத்தும் முற்றுறப் பரிசீலனை செய்த வாறாக ஞான சொரூபராய பேரறிவாளரது தெளி நிலையினை யானு ணர்ந்துய்தலும் எக்காலமோ ! என்பது.

குறிப்புரை :—அத்துவாவென்பன அறுவகையவாம் ; அதாவது,— மந்திரம், பதம், வர்ணம், புவனம், தத்துவம், கலை, என்பன. இவைக ளும், மந்திரம் 11. பதம் 81. வர்ணம் 51. புவனம் 224. தத்துவம் 96. கலை 5. என்னும் பாகுபாடா யுள்ளனவாம். (1)

உ. மூச்சற்றுச் சிந்தை முயற்சியற்று மூதறிவாய்ப்
பேச்சற்றோர் பெற்றவொன்றைப் பெற்றிடுநா ளெந்நா [ளோ.

பொழிப்புரை :—மூச்சென்ற பிராணவாயுவினை வெளிவிடாது யோக முறையால் உள் நிறுத்தியும், மனோ முயற்சிகளின்றியும், பேரறிவினாலே வார்த்தையு மொழித்தோர் அடைந்துள்ள அரிய மெய்ஞ்ஞான ஐஸ்வரிய மொன்றினை யான் பெற்றுய்யுங்காலம் இனி எக்காலமோ ! என்பது.

குறிப்புரை :—ஒப்பற்ற யோக சித்தியோடும், மெய்ஞ்ஞானனு சந் தான பராளாயுள்ள பரம ஞான சீலர்கள் கைக்கொண்டுள்ள அரும்பெரும் பரம பாக்கியத்தை அடிமை எக்காலம் பெறுவனோ ! (2)

ரு. கோட்டாலை யான குணமிறந்த நிர்க்குணத்தோர்
தேட்டாலே தேடுபொருள் சேருநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—வியாகூலத்திற் காதாரமான துர்க்குணமற்ற நற் குணத்தோர்கள், அரிய தவத்தேட்டத்தால் தேடுகின்ற சத்துவகுணப் பொருளாம் சிவபோத சம்பத்தான சின்மயானந்த வத்துவானது தன்னைச் சாருங்காலம் எக்காலமோ ! என்பது.

குறிப்புரை :—நற்குண விசேஷமான சத்தாம்ஸ பிரவிர்த்தி சாதனை யால் வருந்தவத்தேட்ட சின்மயானந்தம் சித்திப்பது மெப்போதோ. (3)

சு. கெடுத்தே பசுத்துவத்தைக் கேடிலா வானந்தம்
அடுத்தோ ரடுத்தபொருட் கார்வம்வைப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—பசுத்துவமாகிய சீவபோதங்கழன்று, உத்தமமான நித்தியானந்தப் பேற்றினைக் கைவல்யமாக்கிய பெரியோர் அடைந்துள்ள பரம்பொருட்கே அன்புசெய்யப் பெறுவதும் இனி எக்காலமாமோ!

குறிப்புரை :—சீவபோதமற்று சிவபோதங் கொண்டுள்ள நித்தியானந்த பக்தசிகாமணிகளார் அடைந்துள்ள ஒரு தனிப்பெரும் பொருட்கே யான் அன்பு செய்வதும் எக்கால மென்பது. (4)

ரு. கற்கண்டா லோடுகின்ற காக்கைபோற் பொய்ம்மாயச்
சொற்கண்டா லோடுமன்பர் தோய்வறிவ தெந்நாளோ.

பொழிப்புரை—கல்லைக்கண்ட மாத்திரத்தே பறந்தோடுங் காக்கைகள் போன்று, அசத்தியமாயா வார்த்தைக்கே பயந்தோடும் நின் மெய்யன்பர்களது சேர்க்கையால் ஏற்படும் நற்பயனை யானும் நாடுவது எக்காலமோ வென்பது.

குறிப்புரை—உத்தம ஞானப் பத்தி மார்க்கப் பரம ஞான சீலர்கள் பொருந்துமாறனைத்தும் அறிந் தொழுகுவதும் இனி யெந்தக் காலமோ தெரிந்திலேன் என்பது. (5)

சா. மெய்த்தகுலங் கல்விபுனை வேடமெல்லா மோடவிட்ட
சித்தரொன்றுஞ் சேராச் செயலறிவ தெந்நாளோ.

பொழிப்புரை :—உண்மையான குல நலமென்ன, ஆழ்ந்த கல்வியென்ன, பூண்டுள்ள வேடமென்ன இவையனைத்தும் போக்கிய உத்தம மனமுடைய பெரியோர், யாதொன்றினும் பற்றுதலில்லாத அரிய செய்கையை யானறிந்துய்யதலு மெக்காலமோ!

குறிப்புரை :—உத்தமகுண பரம சாதுக்களின் தூய நெறியாம் பற்றற்ற நன்னெறியின் நிலையறிந்துய்வதும் எக்காலமோ! என்பது. (6)

எ. குற்றச் சமயக் குறும்படர்ந்து தற்போதம்
அற்றவர்கட் கற்றபொருட் கன்புவைப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—மட்டற்ற குற்றங்களுக் காஸ்பதமாயுள்ள பொய்ச் சமயங்களான புறச்சமயக் குறும்புகளும், சீவபோதமும் ஒழிந்துள்ள சுத்த சன்மார்க்க சீலர்கட்குச் சந்தேக விபரீதமறத் தெளிவுபெற்ற பரம்பொருளுக்கு அன்பு செலுத்துதல் எக்காலமோ.

குறிப்புரை :—ஒப்புயர்வற்ற மெய்ஞ்ஞானத் தபோதனர்கட்குள் தெளிவுபெற வோங்கிய பரம்பொருளுக்கு அன்புசெயல் எப்போது. (7)

அ. தர்க்கமிட்டுப் பாழாஞ் சமயக் குதர்க்கம்விட்டு
நிற்குமவர் கண்டவழி நேர்பெறுவ தெந்நாளோ.

பொழிப்புரை :—தர்க்க விவகாரத்தாலே பாழ்படும் பொய்ச் சமயக் குதர்க்கங்க ளெல்லாம் அடியோடு மொழித்து, உண்மை நிலை நிற்கும்படியான உண்மை ஞானவான்கள் ஆய்ந்துணர்ந்த மெய்ந்நெறியின் கணக்கறிவதும் எக்காலமோ! என்பது.

குறிப்புரை :—பொய்ந்நெறி போகாது மெய்ந்நெறியே கடைப் பிடித்த உத்தமோத்தமர்தம் உண்மை வழியறிவதும் எக்காலம் என்பது. (8)

கூ. வீறியவே தாந்தமுதன் மிக்க கலாந்தம்வரை
ஆறுமுணர்ந் தோருணர்வுக் கன்புவைப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—மேன்மை வாய்ந்த வேதாந்த முதலாக சுத்த கலாந்தவரைக்குள்ள அறுவகை அந்தங்களும் நன்கறிந்துள்ளார் தம் பேருணர்வுக்கு யான் அன்பு வைத்தலும் எக்காலமோ என்பது.

குறிப்புரை :—வேதாந்த முதலாகக், கலாந்தம்வரை யுள்ள ஆறு அந் தங்களான வேதாந்தம், சித்தாந்தம், நாதாந்தம், போதாந்தம், யோகாந் தம், கலாந்தம் என அறுவகை யந்தமாய முடிவறிந்தோர்தம் பேருணர்வுக்கு அன்பு வைப்பதும் எப்போதோ. ஆறந்த விவரணம் விரிக்கப்புகின் ஈண்டு விரியுமாதலின், சித்தாந்த நூலில் கண்டுகொள்க. (9)

கo. கண்டவிட மெல்லாங் கடவுண்மய மென்றறிந்து
கொண்டநெஞ்சர் நேயநெஞ்சிற் கொண்டிருப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—பார்ப்பதெல்லா முலகில் பரனிறைவேயன்றி யின்று யென்று கொண்ட பேரறிஞர் நண்பு கொண்டு வாழ்தலே பெரு நண்பா மென்றுணர்ந் துய்வதும் எக்காலமோ! என்பது.

குறிப்புரை :—காண்பன வனைத்தும் கண்ணுதலான்றன் மயமே யென்ற மேன்மையர்தம் கேண்மையையான் மிக மதிப்பதென்று கொலோ என்பது. (10)

கக. பாக்கியங்க ளெல்லாம் பழுத்துமனம் பழுத்தோர்
நோக்குந் திருக்கூத்தை நோக்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—சற்குரு மூர்த்தியால் அநுக்ரகிக்கப்பெற்ற சகல பாக் கியமாகிற உபதேச சாதனையால் மனமாதிகள் பக்குவமுற்றுள்ளோர், அந்தர்

முகமா யிறைவர் ஆடுந் திருநடத்தைப் பார்த்தானந்திப்பது போல, யானும் பார்த்துய்வதும் இனி எக்காலமோ என்பது.

குறிப்புரை :—அன்பர் உளமலரில் இறைவராடும் திருநடங் கண்டானந்திப்பது வொப்ப, யானும் அவ்வாறு அந்தரங்க நடங்காண்பதுவும் இனி எக்காலமோ ! என்பது. (11)

கஉ. எவ்வுயிருந் தன்னுயிர்போ லெண்ணுந் தபோதனர்கள்
செவ்வறிவை நாடிமிகச் சிந்தைவைப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—சகலான்மாக்களையும் தன்னுயிர் போன்றே கருதி வரும் மெய்த்தவச் சீமான்களது மேலாம் பேரறிவு கண்டு என் சிந்தையில் வைப்பதும் இனி எக்காலமோ !

குறிப்புரை :—எல்லா உயிர்கண்மாட்டும் தண்மைவைத்து தம்போன்று பார்க்கும் பெரியார் நெறிபற்றுவதும் எக்கால மென்பதாம். (12)

---

## அறிஞருரை

---

க. இருநிலனாய்த் தீயாகி யென்றதிருப் பாட்டின்
பெருநிலையைக் கண்டணைந்து பேச்சறுவ தெந்நாளோ.

பொழிப்புரை :—‘இருநிலனாய்த் தீயாகி’ யென்பதாதியாய திருத்தாண்டகத்தின் மேலாங் கருத்துணர்ந்து அந்நெறி கண்டணுகி மவுன முறுவதும் இனி எக்காலமோ !

குறிப்புரை :—ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகள் ‘இருநிலனாய்த் தீயாகி’ என்றெடுத்தோதி யருளிய திருத்தாண்டகத்தின் உட் கருத்துணர்ந்து அந்நெறி நின்று, மவுனமா யிருந்து வருதலும் இனி எக்காலமோ ! (1)

உ. அற்றவர்கட் கற்றசிவ னாமென்ற வத்துவித
முற்றுமொழி கண்டருளின் மூழ்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—‘அற்றவர்கட்கற்ற சிவனாம்’ என்ற அத்வைத நிலை கொண்டவோர் சொற்றொடரின் தாற்பரிய முணர்ந்து, மேலே திருவருட் கடலின்கண் படிந்து வாழ்தலும் இனி எக்காலமோ வென்பது.

குறிப்புரை :—பற்றற்றார்கட்கு சந்தேக விபரீதமற்றது சாட்சாத் சிவ பரம்பொருளே யென்ற ஓர் துணிவுரைகொண்டு, திருவருட் கடலின்கண் வாஞ்சைகொண்டழுந்தி நிற்றலும் எக்காலமோ என்பது.

"அற்றார்கட் கண்ணிதா யல்லார்க்குச் சேய்மையாய்ப்
பற்றற் றிருக்கும் பதி."—யென்றார் பெரியார். (2)

ங. தானென்னை முன்படைத்தா னென்ற தகவுரையை
நானென்று வுண்மைபெற்று நாமுணர்வ தெந்நாளோ.

பொழிப்புரை :—'தானென்னை முன்படைத்தான்' யென்பதாதியாய தகைமைபெறும் பாசுரங்கண்டு யானெனும் அகங்காரமொழியற்ற பெருநிலைநின்று பேருணர் வெய்தலும் எக்காலமோ.

குறிப்புரை :—ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் கயிலைக் கெழுந்தருளு முன்னிலையாக ஸ்ரீ கயிலாயநாதரைத் தோத்திரித்தருளிய "தானெனை முன்படைத்தா" னென்பதாதியாம் பாசுரம்பாடினார். அம்மெய்ம் மொழி கருத்துணர்ந்து, நானென்பதகற்றி நன்னிலையுறுவதும் இனி எக்காலமோ யென்றனர் போலும். (3)

ச. என்னுடைய தோழனுமா யென்றதிருப் பாட்டின்
நன்னெறியைக் கண்டுரிமை நாஞ்செய்வ தெந்நாளோ.

பொழிப்புரை :—'என்னுடைய தோழனுமாய்' என்பதாதியாம் பாசுரத்தின்மேலாம் நெறியறிந்தே இறைவர்மாட்டு உரிமைகொண்டு நிற்றலும் இனி எக்கால.மென்பது.

குறிப்புரை :—'என்னுடைய தோழனுமாய்' என்பதாதி பாசுரத்தால் இறைவனுரிமை தோன்றக் கிடத்தல் போன்று யானும் அந்நெறி முறையால் உரிமை பெற்றுய்தலும் எக்கால மென்பது. (4)

ரு. ஆருடனே சேரு மறிவென்ற வவ்வுரையைத்
தேரும் பழக்கருடான் சேருநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—'அறிவு ஆருடனே சேரும்' என்ற அவ்வார்த்தையின் உட்கருத்துணருமாறு யான் திருவருளைப் பெற்றுய்யுங் காலம் இனி எக்காலமோ! என்பது.

குறிப்புரை :—'ஆருடனே சேரு மறிவு' யென்ற திருவார்த்தைகளின் தத்துவார்த்த முணர்வான் வேண்டி யான் திருவருள் வசப்பட்டு வாழ்தலும் எக்காலமோ வென்பது. (5)

சு. உன்னிலுன்னு மென்ற வுறுமொழியா லென்னிதயந்
தன்னிலுன்னி நன்னெறியைச் சாருநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—'உன்னிலுன்னும்' என்ற வொப்பற்ற நல்லுரையைக்கொண்டே என்னெஞ்சத்திற் கருதி நன்மார்க்கத்தைப் பெற்று வாழுங் காலம் எக்காலமோ!

குறிப்புரை :—'உன்னிலுன்னு' மென்னும் இன்னுரையினாலே என்னிதயத்தில் ஆழ்ந்து நினைத்து மேலே சன்மார்க்கத்தைத் தழுவுவதும் எக்காலமோ வென்பது. (6)

எ. நினைப்பறவே தானினைந்தே னென்றநிலை நாடி
அனைத்துமா மப்பொருளி லாழுநா ளெந்நாளோ.

பொழிப்புரை:—என் 'நினைப்பறவே தானினைந்தேன்' என்னும் ஓர் நன்னினைவைச் சார்ந்து, எல்லாமாய் விளங்கும் அப்பரம் பொருளிலேயே யான் கலந்திடும் காலம் எக்காலமோ என்பது.

குறிப்புரை :—'நினைப்பு மறப்பு மொழியுமாறதாகத் தான நினைவு கொண்டேன்' என்னும் ஓர் பெருநிலையை நாடி, சர்வமும் தானான அப் பொருளாம் மெய்ப்பொருளை நட்டொன்றுமாறு கொண்டவோர் கொள்கை முற்றுதலும் எக்கால மென்மது. (7)

அ. சென்றுசென் றேயணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்
றின்றுவிடு மென்றநெறி நிற்குநா ளெந்நாளோ. [றுகி

பொழிப்புரை :—அறிவுமயமாய பசுப்பொருள் அதன்பால் சென்று சென்று தேய்ந்து அணுமாத்திரமாகிப் பின்னர் ஒன்றாய்விடும் பான்மையாகும் உத்தம நெறியில் யான் நிலைபெறுவதும் எக்காலம் என்பது.

குறிப்புரை :—நாளடைவில் பசுப்பொருள் பதிப்பொருளை நாடிச் சென்று காலக்கிரமமாகக் கரைந்து அணுத்தன்மைக்கு வந்து ஈற்றில் ஒன்று பட்டுவிடும் அந்நெறி நிற்பதெப்போதோ! (8)

கூ. ஆதியந்த மில்லா வரியபரஞ் சோதியென்ற
நீதிமொழி கண்டதுவாய் நிற்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—உற்பத்தியும் இலயமு மில்லாத அருமையான பரம சோதிசொரூப மென்ற உண்மை நிலையை யறிந்து அப்பரம் பொருளாகவே அமைவுறுங் காலம் எக்காலமோ என்பது.

குறிப்புரை :—அநாதியான அரிய பரஞ்சோதி யென்னும் தன்மய நிலைகண்ட பின்னர், அப்பொருண்மயமாகும் நிலையிலேயே ஒரு படித் தாயுற்று வாழ்தலும் எக்காலம் என்பது. (9)

௧0. பிறிதொன்றி லாசையின்றிப் பெற்றிருந்தே னென்ற
நெறியுடையான் சொல்லினிலை நிற்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—யாதொன்றின் கண்ணும் ஆசையுறுமே நிராசையை யுடைத்தாயிருந்தேன் என்ற மார்க்கத்தானது சொல்லின் உறுதியில் நிலை பெறுங்காலம் எக்காலமோ என்பது.

குறிப்புரை :—நிராசையை யுடைத்தாயிருந்தனன் என்னும் நெறி யுடையானது உறுதிமொழியைக் காக்குங் காலம் எப்போதோ ! (10)

௧௧. திரையற்ற நீர்போற் றெளியவெனத் தேர்ந்த
உரைபற்றி யுற்றங் கொடுங்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—அலையிலாக் கடனீர்போன்று தெளிவுபெற வேண்டு மென்னும் திறப்பட்ட வார்த்தையைக் கொண்டு தெளிவடைந்தே அடங்குங் காலம் எக்காலமோ வென்பது.

குறிப்புரை :—தெள்ளிய கடல் நீரொத்தே தெளிவடைந்துள்ள மெய் யுரை கொண்டொழுகி யுறங்காதே யுறங்குவது மெப்போது ? என்பது. (11)

௧௨. அறியா வறிவி லவிழ்ந்தேற வென்ற
நெறியா முரையுணர்ந்து நிற்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—அறியப்படாதுள்ள பேரறிவிலே, பந்தக்கட் டவிழ்ந்து அவ்வறிவிற் பொருந்துறலெனும் நன்னெறியா முறையினைத் தெரிந்தே நிலைபெறுவதும் எப்போதோ என்பது.

குறிப்புரை :—'அறியாவறிவி லவிழ்ந்தேற' வென்ற நன்னெறிக்கே ஏதுவாயுள்ள நன்மொழியுரை யுணர்ந்துய்யுங் காலம் எப்போது ! (12)

௧௩. எனக்குனீ யென்று மியற்கையாப் பின்னும்
உனக்குனா னென்ற வுறுதிகொள்வ தெந்நாளோ.

பொழிப்புரை :—என்னுள் நீயும் இயல்பாகிப் பின்னர், உன்னுள் யான் என்னும் உறுதிப்பாட்டைப் பெறுதலும் எக்காலமோ !

குறிப்புரை:—முன்னர் என்பால் நீயும், பின்னர் நின்பால் யானும் ஈடு பட்டு நிற்றல் இனி எக்காலமோ வென்பதே. இவ்வுண்மை மா வியப் புடைக் கூற்றுமென்க. (13)

கச. அறிவை யறிவதுவே யாகும் பொருளென்று
உறுதி சொன்ன வுண்மையினை யோருநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—அறிவை அறிந்தொழுகுதலே ஆகும் பொருளெனவே உறுதியா வுரைத்த வோர் யதார்த்த நிலையினை நன்கு ஆய்ந்துணர்தலும் எக்காலமோ வென்பது.

குறிப்புரை :—புலனறியாப் பேருணர்வை யறிதல்தான் நமக்கு ஏற்படக்கூடிய பிரதம பொருளென்று கூறிய உறுதி மொழியினை உள்ளவாறுணர்தலும் அவசிய மென்றாயிற்று. (14)

---

## நிற்கு நிலை

க. பண்ணினிசை போலப் பரமன்பா னின்றதிறன்
எண்ணியரு ளாகி யிருக்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—திருவருளானது, பண்ணுடனே இசை பேதமிலாது ஒன்றுபட் டிருக்குமாறு போலவே இறைவனிடத்தில் பற்றி நிற்றலையுணர்ந்து யான் அத் திருவருள் ஆகாரமா யமர்ந்திருக்குங் காலம் இனி எக்காலமோ என்பது.

குறிப்புரை :—இறைவனைத் திருவருள் எங்ஙனம் பேதமறப் பற்றி நிற்குமோ அவ்வாறாகவே அவ்வருள் சொரூபமாக யான் பற்றி யிருப்பதும் இனி எக்காலமோ வென்பதுவாம். (1)

உ. அறிவோ டறியாமை யற்றறிவி னூடே
குறியி லறிவுவந்து கூடுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—எண்ணுதலோடு மறத்தலு மொழிந்த பேரறிவுக்குள்ளே குறிப்பற்ற நித்தியத்துவ நின்மலானந்த கூர்த்த மெய்ஞ்ஞான வுணர்வு வந்து பொருந்துங் காலம் எக்காலமோ.

குறிப்புரை :—நினைத்தல் மறத்தலாதியன வில்லாத நிர்மலானந்த பேரறிவினூடாகத் தெய்வீக வுணர்வுவந்து தோய்தலும் எப்போது. (2)

ந. சொல்லான் மனத்தாற் றொடராச்சம் பூரணத்தில்
நில்லா நிலையாய் நிலைநிற்ப தெந்நாளோ.

---

ற்போதமாந் தன்னிலையன்றிச் சிவபோதமாய் நிற்றலே மூன்று நிலையாம்.

பொழிப்புரை —சொல்லினாலும், மனத்தினாலும் அளவிடற் கரிய தான பரிபூரணப் பொருளினிடத்தே இடையறாது ஊன்றிய நிலைமையாக ஸ்திரமாய்த் தங்கி வாழ்தலும் எக்காலமோ ! (3)

ச. செங்கதிரின் முன்மதியந் தேசடங்கி நின்றிடல்போல்
அங்கணனார் தாளி லடங்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை: —செவ்வானச் சூரியன் முன்னுள்ள சந்திரிகையானது எவ்வாறு தன்னொளி மங்கி நிற்குமோ அதுபோன்றே சிவசொரூபத்தின் திருவடித் தாமத்தில் யான் இலயமாவதும் எப்போது !

குறிப்புரை :—கதிரொளிக்கண் மதியொளி அடங்குமாறதாய், இறைவன் அடிமலர்க்கண் யானும் ஒடுங்குமாறதாக நேர்வது மெக்காலம். (4)

ரு. வானா டடங்கும் வளிபோல வின்புருவாங்
கோனா டடங்குங் குறிப்பறிவ தெந்நாளோ.

பொழிப்புரை :—ஆகாய மெங்கணும் பொருந்தி நிற்கும் காற்றினைப் போன்றே ஆனந்தமயமான இறைவன்பால் யான் லயமாகுங் குறிப்பறிதலும் இனி எக்காலத்திலோ !

குறிப்புரை —யான் பரமானந்த இறைவன்பால் பற்றி வாழ்தலின் குறிப்புணர்ந்து கொள்வதுமினி எக்காலமோ ! என்பது. (5)

சா. செப்பரிய தண்கருணைச் சிற்சுகனார் பூரணத்தில்
அப்பினிடை யுப்பா யணையுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—சொலற்கரிய குளிர்ந்த காருணிய மயமான ஞானானந்த இறைவனார் தம் பரிபூரண இயற்கைத் தன்மையிலே, தண்ணீரில் உப்பானது எப்படி மக்னமாமோ அதேபோல யானும் பேதமிலாது ஒன்றுபடுங்காலம் எக்காலமோ என்பது.

குறிப்புரை :—கருணாகரனது பூரண விலாசத்திலே, நீரில் உப்புக் கரைந்து கலப்பதுபோல யான் கலந்து கொள்வதும் எப்போதென்பது. (6)

எ. தூயவறி வான சுகரூப சோதிதன்பாற்
றீயினிரும் பென்னத் திகழுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—சுத்தஞானச் சுகசொரூப தேஜஸின்பால், அக்னியிற் காய்ந்த இரும்பென்ன, யான் ஒன்றுபட்டு நிற்பதும் இனி எக்காலமாமோ வென்பது.

குறிப்புரை :—அக்னியில் இரும்பு சம்பந்தித்தல்போல, சுத்தஞானச் சுயஞ்சோதி சொரூபத்திலே யான் கலப்புறுவதும் எப்போதென்பது. (7)

அ. தீதணையாக் கர்ப்பூர தீபமென நானகண்ட
சோதியுட னொன்றித் தூரிசறுவ தெந்நாளோ.

பொழிப்புரை :—யாதாமோர் அசந்தர்ப்பத்தானு மணைதலில்லாக் கர்ப்பூர வொளிபோன்று, யானும் அகண்டாகார பரஞ்சோதி சொரூபத்திலே கலந்து என் குற்றங் குறைதீர்ந்து பரிசுத்தனாவதும் இனி யெந்தக் காலமோ !

குறிப்புரை :—கர்ப்பூர சோதியில் கசடின்மைபோல யான் பரஞ்சோதிக்கண் கலந்து சுக சொலிதமாவதும் எப்போ தென்பது. (8)

கூ. ஆராருங் காணாத வற்புதனார் பொற்படிக்கீழ்
நீரார் நிழல்போல் நிலாவுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—அனைவருங் காண்டற் கணுத்துணையுங் கூடாத அற்புத வடிவத்தாராது அழகுவாய்ந்த திருவடிகளுக்குக் கீழே, சற்குணத்தார் நிழலைப்போன்று நிலையுற்றிருப்பதும் எக்காலமோ.

குறிப்புரை :—குணக்ஞானது நிழல் போன்று, காண்டற்கரிய கண்ணுதலார் தந்திருவடிக்கீழ் நிலைபெறுவதும் எப்போ தென்பது. (9)

க0. எட்டத் தொலையாத வெந்தைபிரான் சந்நிதியிற்
பட்டப் பகல்விளக்காய்ப் பண்புறுவ தெந்நாளோ.

பொழிப்புரை :—மனவாக்குக்களால் எட்டவியலாத எம்பரமபிரான் சந்நிதானத்திலே ஏற்றியுள்ள பகல் தீபம் போன்று யான் என்னுருமங்கி வாழ்தலும் எக்காலமோ வென்பதாம்.

குறிப்புரை :—இறைவன் சந்நிதிக்கண் ணேற்றிய பகல் தீபம் போன்று யான் எம்மான் முன்னே மிகவொடுங்கி நிற்றலும் வேண்டுவன் என்பது. (10)

கக. கருப்புவட்டை வாய்மடுத்துக் கண்டார்நாப் போல
விருப்புவட்டா வின்புருவை மேவுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—கரும்பு வெல்லக் கட்டியை வாய்வைத்து ருசித்தவர் நாவினைப்போன்று விருப்பம் குன்றா ஆனந்த சொரூபத்தினை யான் பற்றி வாழுங் காலம் எக்காலமோ வென்பது.

குறிப்புரை :—இனிப்புற்ற நாவானது மீண்டும் உவட்டாது தேடுதலே போன்று இடையறு வின்பமருள் சுகானந்த சொரூபத்தைக் காண்பதும் எப்போ. (11)

கஉ. துச்சப் புலனாற் சுழலாமற் றண்ணருளால்
உச்சிக் கதிர்ப்படிக மொவ்வுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—அதி கேவல புலன்கள் வழிப்பட்டுச் சுற்றித் திரியாதபடி தண்ணிதான திருவருள் வலத்தால் உச்சியிலுள்ள சூரியன் முற்பட்ட படிகக் கல்லை யொத்தேயுள்ள காலம் எக்காலமோ !

குறிப்புரை :—உச்சிப்போது சூரியன் முற்பட்ட பளிங்குக் கல்லானது அக்னியை கக்கி தன் பக்க வஸ்துக்களைத் தகித்து விடுதல் போன்று, யான், யென்பால் நின்று என்னைக்கெடுத்து வரும் ஐம்புலாதிகளை நாசப்படுத்த வேண்டுமென்பதுவே. துச்சம் - சாமானியம். (12)

கங. இம்மா நிலத்தி லிருந்தபடி யேயிருந்து
சும்மா வருளைத் தொடருநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—இந்த பூமியினிடத்தே யான் எப்போதும் போல் இருந்த வண்ணமாகவே சும்மா விருந்து கொண்டு திருவருளினைக் குறித்து எதிர்பார்த்திருக்குங் காலம் எக்கால மென்பது.

குறிப்புரை :—யான் இவ்வுலகில் சும்மா விருந்துவந்து திருவருளைப் பற்றித் தொடர்ந்து வருங்காலம் எக்காலம் என்பது. ஈண்டு சும்மாவிருத்தல், நிர்ச்சிந்தையா யிருந்து வருதல் என்பது. (13)

கச. தானவனுந் தன்மையெய்தித் தண்டமென வண்டமெங்
ஞானமத யானை நடத்துநா ளெந்நாளோ. [கும்

பொழிப்புரை :—இறைமைத் தத்துவத்தை யான் பெற்று, அண்டபுவன சராசரமெங்கணும் செல்லத்தக்கதாக மெய்ஞ்ஞானமாம் மதயானையினை பாகன்போன்று செல்விக்குங் காலம் எப்போதுறுமோ !

குறிப்புரை :—யான் தெய்வ தத்துவமான ஞான சம்பன்னனாகி உலகெங்கணும் நிரம்புமாறு ஞான பரிபாலனஞ் செய்தலும் எப்போது வாய்க்குமோ வென்பதுவே சாரம். தானவனுந் தன்மையாவது.—அத்துவித நன்னிலை யென்க. (14)

கரு. ஒன்றிரண்டு மில்லதுவா யொன்றிரண்டு முள்ளதுவாய்
நின்ற சமத்துநிலை நேர்பெறுவ தெந்நாளோ.

பொழிப்புரை:—அத்துவித நிலையோர் சமயம் உளவாக்கோடலும், மற்றோர் சமயம் இல்லனவாகலும் ஆகிய சமரச நிலையினை நேரே யான் பெற்றுய்தலும் எக்கால மென்பதாம்.

குறிப்புரை :—சமரச நிலையாக யான் அத்துவித நிலை பொருந்தி நிற்றலும் இனி எக்காலமோ வென்பது. (15)

கசு. பாச மகலாமற் பதியிற் கலவாமல்
மாசில் சமத்துமுத்தி வாய்க்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—பந்தபாசங் கெடாதும், பதிப்பொருளோடு ஒன்றுபடாதும், குற்றமற்ற சமநிலை முத்தியானது எனக்கே கிடைக்கப் பெறுங் காலம் எக்காலமோ. சமநிலை - இருவினையொப்பென்றுணரற்பாலது. பாசமாவது - பசுவும் பதியும், ஒவ்வாது கெடலாம். (16)

கஎ. சிற்றறிவு மெள்ளச் சிதைந்தெம்மான் பேரறிவை
உற்றறியா வண்ணமறிந் தோங்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—என் சிற்றுணர்வானது பையக் கெட்டொழிந்து எம் பரம கருணையனது பேரறிவாய ஞானவுணர்வானதை யொட்டி யுணராவகையாகத் தெரிந்து கொண்டு மேற்போம் காலம் இனி எக்காலமாகுமோ வென்பதாம்.

குறிப்புரை :—என் சிற்றறிவற்றே, இறைவன் பேரறிவுற்று வாழத் தெரியாவழி தெரிந்து வாழ்தலும் இனி என்றுகொலோ வென்பது. (17)

கஅ. தந்திரத்தை மந்திரத்தைச் சாரினவை யாமறிவென்
றெந்தையுணர் வேவடிவா யெய்துநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—தாந்திரீகத் தொழிலையும், மாந்திரீகத் தொழிலையும் சார்ந்து பார்க்கின், அவைகள் அகங்கார மமகார விருத்தியைக் கொண்டு வந்து விட்டு, உள்ள அறிவையுங் கெடுத்து விடும் என்று கருதி, எம்மான்றன் பேரறிவையே எனக்குற்ற வடிவமாகக் கொண்டு வாழுநாள் எக்காலமோ என்பது.

குறிப்புரை :—தந்திர மந்திராதிகள் அகங்கார மமகார சேஷ்டிதம்; ஆகையால் இறைவன்றன் பேரறிவு வடிவே வேண்டுமெனல் ஆசிரியர் தங் கருத்தா மென்பது தோன்றநின்றது என்பது. (18)

கக. போக்குவர வற்றவெளி போனிறைந்த போதநிலை
நீக்க மறக்கூடி நினைப்பறுவ தெந்நாளோ.

பொழிப்புரை :—உற்பத்தி லயமற்ற ஆகாயத்தை யொத்தே பூரணமா யுள்ள மெய்ஞ்ஞான நிலையினை இடையறாது சேர்ந்து கொண்டே சிந்தை யிறந்து வாழ்தல் எப்போ தென்பது.

குறிப்புரை :—என்றும் பரிபூரணமாய் நிறைந்துள்ள ஞான வழியைச் சார்ந்து நின்றே, வஞ்ச நெஞ்ச நினைப்பற்று வாழ்தலே தமக்கு இட்ட மென்பதாய்த் தெரிகின்றது. இதனால், ஞான நினைவு கொண்டு, மாயா மனதை விண்டு வாழவேண்டு மென்பது. (19)

உ0. காண்பானுங் காட்டுவதுங் காட்சியுமாய் நின்றவந்த
வீண்பாவம் போயதுவாய் மேவுநா ளெந்நாளோ.

பொழிப்புரை:—காண்பான், காட்சி, காணப்படும் பொருள் என மூவ கைப்பட்டுள்ள அந்த பாவனை நீங்கி, அத் தற்பரவத்துவாக வமைந்து நிற் கும் காலம் எக்காலமோ ! என்பது.

குறிப்புரை :—ஈண்டு, 'அது' வென்பது தற்பரவத்துவாம் என்க. (20)

உக. வாடாதே நாறுவாய் மாயாதே யெங்கோவை
நாடாதே நாடி நலம்பெறுவ தெந்நாளோ.

பொழிப்புரை :—வாட்ட முறுமலும், பலவகையாக நினைந்து மலையா மலும் இறைவனையே பொருளாக உறுதி கொண்டு அந்தர்முகமாக நாடி வந்து முத்தியைப் பெறுவது மெப்போதோ !

குறிப்புரை ;—பலவாறுமலைந்து மனதைக் கெட்டவழி செலுத்தாது இறைவனையே அகத்துள் அறிந்துய்யதலே தகுதி யென்பதாயிற்று. (21)

உஉ. ஆடலையே காட்டியெம தாடலொழித் தாண்டான்
றாடலைமேற் சூடித் தழைக்குநா ளெந்நாளோ. [பொற்

பொழிப்புரை :—இறைவன் தம் பரமானந்தத் திருநடனத்தைக் காண்பிவித்து, என் மாயா திருக்கூத்தை யொழித்து ஆண்டருள் புரிந் துள்ள அவர்தம் பொன் போன்ற திருவடிகளை எனது சிரத்திற்கணியாத் தரித்துப் பெருவாழ் வெய்துங்காலம் எப்போதோ !

குறிப்புரை :—எம்மான்றன் திருநடங்காண்பித்து, பின்னர் என் குடும் பப் பேயாட்ட மோய்வித்து ஆண்டருளிய அத்திருவடி முடி சூடியுய்வதும் அவசிய மென்பதாயிற்று. தழைத்தல் - மேலோங்கிய பெருவாழ்வைப் பெறுதலாம். (22)

உ௩. மேலொடுகீ ழில்லாத வித்தகனார் தம்முடனே
பாலொடுநீர் போற்கலந்து பண்புறுவ தெந்நாளோ.

பொழிப்புரை :—ஒப்புயர்வற்ற பரஞானானந்தரோடும், யான், பாலின்கண் தண்ணீர் கலந்த ஒருமையைப் போன்று பேதமின்றிக் கலப்புற்று மேன்மையோடும் வாழுங்காலம் எக்காலமோ!

குறிப்புரை :—ஒப்பற்ற பரம ஞான ஆனந்த சொரூபராம் இறைவரைப் பேதமின்றிக் கலந்து சிறப்படைவதும் வேண்டு மென்பது. (23)

உ௪. அறியா தறிந்தெமையா ளண்ணலைநா மாகக்
குறியாத வண்ணங் குறிக்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—இறைவனை நாளுக வறிதலின்றிச் சிவபோதங் கொண்டறிந்தும், யானுகக் குறியாது அவனது பேரருட் குணத்தால் குறித்துணருங் காலமும் எக்காலமோ வென்பது.

குறிப்புரை :—இறைவன் காட்சியையும், அவரருட் குணுதிசயங்களையும் தற்போதத்தாலன்றிச் சிவபோதங் கொண்டு காண்டலே பேரறிவின் பெரிய நிலையென்பது நன்கு புலனுயது.

அண்ணல் - எவைக்கு மூத்தோன் என்பது பொருள். (24)

உ௫. ஓராமன் மந்திரமு மூன்னுமை னம்பரனைப்
பாராமற் பார்த்துப் பழகுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—நமது இறைவனை ஆராய்ந்தறியாது, மந்திராதிகளை முணுமுணுக்காதும், ஊனக்கண்ணுற் பாராது ஞானக்கண் கொண்டு பார்த்தும் அவன்பால் பக்தி பழக்கங் கொள்ளுதலும் எக்காலமோ.

குறிப்புரை :—இறைவன் இதைய வெளியில் வீற்றிருந்தருளுவதை முறை தெரிந்து உள்ளன்பால் பார்த்தல் வேண்டு மென்பதே.

"ஊனக்கண் கொண்டு பார்க்கின்ற வூமர்காள்!
ஞானக்கண் கொண்டு பார்ப்பதே யானந்தம்"—என்றூர் பெரியார். (25)

உ௬. ஊன்பற்று மென்னே டுறவுபற்றும் பூரணன்பால்
வான்பற்றுங் கண்போன் மருவுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—பொய்யான உடலாம் ஊனை மிகவும் உற்ற துணையாகப் பற்றி வளர்க்கும் என்னுடனே அநாதியாக உறவு கொண்டுள்ள பரி

பூரணனிடத்தே யாதாமோர் தங்குதடையில்லாது ஆகாய வெளியினைப், பார்க்கும் நேத்திரங்கள்போன்று சேர்ந்தின்புறுங் காலம் எக்காலமோ! என்பதாம்.

குறிப்புரை:—மெய்ஞ்ஞானியர் இறைவனை ஆகாயஸ்தானத் திருத்தி நோக்குதல்போன்று, யானும் பராகாய வெளிக்கண் பார்த்தல் வேண்டு மென்பது வெளியாயிற்று. இஃது ஞானியர் வழக்கம். (26)

உஎ. ஆண்டான் மவுனி யளித்தவறி வாலறிவைத்
தூண்டாமற் றூண்டித் துலங்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை:—ஏற்கனவே மவுனகுரு மூர்த்தியாக வந்து உப தேசித்து ஆண்டருளிய தெந்த தூண்டுகோலோ அதனால் என்னறிவான தீபச்சுடரினைத் தூண்டாமல் தூண்ட, யான் விளக்கமுறுங் காலம் எப்போதோ.

குறிப்புரை:—மவுனகுரு தூண்டுதலான உபதேச மொழிகொண்டு என்னறிவாய தீபத்தை மென்மேலும் தூண்டி விளக்கமாய் வாழவேண்டு மென்பது. (27)

உஅ. ஆணவத்தோ டத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோ டத்துவிதஞ் சாருநா ளெந்நாளோ.

பொழிப்புரை:—யான், நெடுங்காலமாக ஆணவத்துடனே ஒருமைப் பட்டிருந்து வந்ததையொழித்து, உண்மைஞான சொரூபியாய சிவபெரு மானுடனே அத்துவிதமாகி அவரைப் புகலிடமாக் கோடலும் இனி யெக் காலமோ வென்பதாம். (28)

---

## நிலைபிரிந்தோர் கூடுதற்குபாயம்.

---

க. கன்மநெறி தப்பிற் கடுநரகென் றெந்நாளும்
நன்மைதரு ஞானநெறி நாமணைவ தெந்நாளோ.

பொழிப்புரை:—சரியை கிரியா கன்மங்களிற் சிறிது தவறிடின், அத னால் கொடிய நரகமெனும் நூன்முறை கண்டுளதால் அதைவிட்டு, எக் காலும் நலத்தைப் பயக்கும் மெய்ஞ்ஞான மார்க்கத்தை யாம் சார்ந்துய்வது எக்காலமோ!

குறிப்புரை :—கன்ம நெறியாம் சரியை கிரியை விட்டு, யோக ஞான மார்க்கத்தில் நன்மைதரு மெய்ஞ்ஞான மார்க்கத்தை நிலைக்களமாகக் கொண்டு வாழ்தலும் அவசிய மென்பதாயிற்று. (1)

உ. ஞானநெறி தானே நழுவிடினு மூப்பதத்துள்
ஆனமுத்தி நல்குமென வன்புறுவ தெந்நாளோ.

பொழிப்புரை :—மெய்ஞ்ஞான நிலையியல்பாகத் தவறிடினும், ஏனைய மூவித நெறிகளானும் ஏற்ற பதவிகள் கிட்டு மாதலால் அந்த ஞான மார்க்கத்தின்கண் அழுந்தி நிற்பது எக்காலம் என்பது.

குறிப்புரை :—இதனுல், சென்மத்திற்கேதுவான கன்ம நெறியைக் காட்டிலும் நன்மைக்குரிய ஞான நெறியே சிலாக்கியமாக ஆசிரியர் ‘ நாமணைவது எக்காலம் ’ என்றுர் போலும். (2)

ஈ. பன்மார்க்க மான பலவடிபட் டேனுமொரு
சொன்மார்க்கங் கண்டு துலங்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—பலவாறுன நெறிகளில் அடிப்பட்டாலும், யான், எனது அருளாசிரியன் அன்றுரைத்த ஓர் சொல் நிலையினின்றும் சிறப்புறுதல் இனி யெக்காலமோ.

குறிப்புரை :—பன்னெறிகிடந்து பலவாறலக்கழியினும், நன்னெறி ஞான நிலையே நமக்காம் என்றுர் போலும். (3)

சு. அத்துவித மென்ற வன்னியச்சொற் கண்டுணர்ந்து
சுத்த சிவத்தைத் தொடருநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—அத்துவிதமாகிய வேறும் ஓர் மொழியினை ஆய்ந்துணர்ந்தே பரிசுத்த பரசிவத்தைப் பற்றி வாழுங்காலம் இனி யெக்காலமோ வென்றுர்.

குறிப்புரை :—இதனுல், ஆசிரியர் இதுகாறும் துவிதமார்க்கமே நின்றுரென்பதும், இனி, ‘ அத்துவிதம் ’ என்ற பரிசுத்தமாகிய பரவஸ்துவைத்தாம் கலந்து கொளவேண்டுமென்பதும் வெளியாயது. (4)

ரு. கேட்டன்முத னன்காலே கேடிலா நாற்பதமும்
வாட்டமற வெமக்கு வாய்க்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—கேட்டல் முதலாயுள்ள நால்வகை அநுபாலனத்தானும் இடையூறின்றியே மனவாட்ட மில்லாது எனக்கு உண்டாகுங் காலம் இனி யெந்தக் காலமோ வென்பதாம்.

குறிப்புரை :—கேட்டல் முதல் நான்கென்பன—ஆசிரியர்பாற் கேட்டறிதல், அதனைப்பின் சிந்தனை செய்தல், பொருள்கண்டு தெளிவுபடல், தெளிந்த பின்னர் நிட்டைகூடலான சுவானுபவம் புரிதல் என்பனவே. கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடலென நால்வகையாகப் பிரித்தார் பெரியார் என்க. (5)

சா. என்னதியா னென்பதற வெவ்விடமு மென்னுசான்
சன்னிதியாக் கண்டுநிட்டை சாதிப்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—எதனிலும் யான் யென்று முன்னுரை கூறலும், என்னது என்று சுதந்தரம் பாராட்டலும் ஆகயிந்த அகங்கார மமகாரக் கிரந்தியை அறவொழித்து, எங்கணுமே எனது திருவருட் குருநாதன் சந்நிதியாக் கொண்டு பரநிட்டையைப் பாராட்டலும் இனி யெக்காலமோ வென்பதாம்.

குறிப்புரை :—அகங்காரநீத்து, எங்கெங்கும் இறைவன் சந்நிதியாக் கொண்டு நிட்டைபுரிதல் வேண்டு மென்பதாயிற்று. (6)

எ. நாம்பிரம மென்று னடுவேயொன் றுண்டாமாற்
றேம்பியெல்லா மொன்றாய்த் திகழுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—நாம் பிரமமே யென்போமாயின் இதன் மத்தியில் ஓர் வினாவெழும்பிடும் ; ஆதல்கொண்டு, இரண்டும் ஒன்றாயிடின் அன்றிந்த சங்கையின்றாதலால் அங்ஙனம் ஒன்றுங்காலம் எக்கால மென்று எதிர்நோக்கு செய்கின்றார்.

குறிப்புரை :—இதனால், துவிதந் தொலைந்து அத்துவிதமுத்தி சித்திப்ப தெத்தின மென்கின்றார். (7)

அ. முச்சகமே யாதி முழுதுமகண் டாகார
சச்சிதா னந்தசிவந் தானென்ப தெந்நாளோ.

பொழிப்புரை :—சுவர்க்க மத்திய பாதாள மென்னும் மூவுலகங்களும் மற்றனவுமாய வனைத்தும் அகண்ட ஒரே சிவ சொரூப சச்சிதானந்த வத்துவாயறிந்து நிற்றல் எக்காலமோ வென்பது.

குறிப்புரை :—மூன்று லோகங்களும் ஒரே சச்சிதானந்த சிவசொரூபமாகவே விளங்கப்பெறல் வாய்க்குமோ வென்கின்றனர். (8)

கூ. எவ்வடிவும் பூரணமா மெந்தையுரு வென்றிசைந்த
அவ்வடிவுக் குள்ளே யடங்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—என்னால் காணப்படுகின்ற எல்லாச் சொரூபங்களும் பரிபூரண வத்துவாகிய எம்பரம பிதாவின் அம்ஸமாகவே கண்டா மாத வின், யான் அச்சொரூபத்தினூடு லயப்படுங்காலம் எப்போதோ !

குறிப்புரை :— காண்பதனைத்தினும் பரசிவானந்த பரம்பொருளே யெனக்காண்டலின் அப்பரவெளி வீட்டில் வாழ வெண்ணினார் போலும். (9)

கo. சிந்தித்த தெல்லாஞ் சிவபூரணமாக
வந்தித்து வாழ்த்தி வணங்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—யான் நினைந்து வருவனவனைத்தும், பரிபூரண பர சிவமாகவே யாகலான், அதனைத் தோத்தரித்தும் வணங்கியும் வாழ்த்தியும் வருகின்ற காலம் இனி யெக்காலமோ வென்பது.

குறிப்புரை :—பார்ப்பன நினைப்பன வனைத்தும் சர்வ பரிபூரண வஸ்து வாகவேகொண்டு துதித்து வணங்குவேன் என்பது. (10)

கக. தாங்கியபார் விண்ணாதி தானேஞா னக்கினியாய்
ஓங்கு மியோகவுணர் வுற்றிடுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—ஆதிசேடன் சுமந்துள்ள மண்ணுலகென்ன, தேவ லோகமென்ன, மற்றுள்ளனவென்ன இவையனைத்தும் தனக்குத் தானாகவே ஞானக்கினிமயம் ஓங்குமாறான யோகப் பேருணர்ச்சி யுண்டாங்காலம் இனி எக்காலமோ வென்பது.

குறிப்புரை :—சொர்க்க மத்திய பாதலமென்னும் மூவுலகத்தும் இயல் பாகவே ஞானக்கினிக் காஸ்பதமாய சிவயோகப் பேருணர்வு தோன்றுங் காலம் உண்டாங்கொல்லோ வென்பது. (11)

க௨. ஆசனமூர்த் தங்க ளறவகண்டா காரசிவ
பூசைசெய வாசை பொருந்துநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—யான், அகண்டாகார சிவபூசை செய்வான் வேண்டி, ஆசனாதிகளென்ன, மூர்த்தங்களென்ன இவைகள் வேண்டப்படாமே அன்பு பொருந்துங்காலம் எக்காலம்.

குறிப்புரை :—ஆசனமும், மூர்த்தமுமின்றி அகண்டாகார சிவபூசை செய்ய ஆசையுண்டாக வேணுமென்பது என் இச்சை. (12)

கங. அஞ்செழுத்தி னுண்மை யதுவான வப்பொருளை
நெஞ்சழுத்தி யொன்றாகி நிற்குநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—ஸ்ரீபஞ்சாக்கரத்தின் உண்மைப் பொருளாய அப்பர சிவானந்த முதற்பொருளை யான் எனது இதயதாமரைப் பிரதேசத்தில் பதித்து அதுவும் யானும் ஒரே பொருளா யிருக்குங்காலம் எக்காலமோ.

குறிப்புரை :—இதனால் சுத்த சிவாத்துவித நிலையைப் பெற்றுப் பேரானந்தப் பெரும்பேறெய்த வேண்டு மென்பதாம். (13)

கச. அவ்வுயிர்போ லெவ்வுயிரு மானபிரான் றன்னடிமை
எவ்வுயிரு மென்றுபணி யாஞ்செய்வ தெந்நாளோ.

பொழிப்புரை :—அகரம், மற்ற வக்கர உயிர்கட்கும் உடனிகழ்வாதல் போல, இறைவனும் எல்லா செகசீவ பரங்களு மாயினமையான், எவ்வுயிரும் இறைவ னடிமைகளே யென்று யான் அவைகட்குப் பணிபுரிந் துய்வதும் எக்கால மென்பதாம்.

குறிப்புரை:—செகஜீவ பரங்களெல்லாம் இறைவ னடிமைகளே யெனத் துணிந்து அவைக்குப் பணி செய்துய்வது மெப்போ தென்பது. (14)

கரு. தேசிகர் கோனான திறன் மவுனி நந்தமக்கு
வாசி கொடுக்க மகிழுநா ளெந்நாளோ.

பொழிப்புரை :—தவராஜ குருநாதனான மவுனபிரான் அடியேற்கு வாசியாய சிவராஜ யோக நிலையினை உபதேசித்தருள, மகிழ்வடையுங் காலம் எக்காலமோ !

குறிப்புரை :—எம்மானுய இறைவன், சற்குருமணியாக வந்தருளி தமக்கு இராஜயோக பாக்கியத்தை யருளவேண்டு மென்பது. (15)

கசா. குருலிங்க சங்கமமாக் கொண்டதிரு மேனி
யருண்மயமென் றன்புற் றருள்பெறுவ தெந்நாளோ.

பொழிப்புரை :—மெய்யன்பர்க் கருள்வான் வேண்டி இறைவனே குருவாகவும், இலிங்காகாரமாகவும், சாது சங்கமங்களாகவும் விளங்கப் பெற்றுள்ளாரென்றும், ஆகவே அவை மூன்றும் திருவருள் வடிவங்களே யென்றும், வணங்கித் துதிபுரிந்து அருட்பிரசாதம் பெறுவதும் எக்காலமோ என்பாராயினர்.

குறிப்புரை :—இம் மூன்றினிடத்தும் அன்புடன் சார்ந்து பக்தி சாதித்தலே முறையாமென்று மெய்ந்நூல் முழங்கும். (16)

## காண்பேனோ வென்கண்ணி

---

க. சிந்திக்குந் தோறுந் தெவிட்டா வமுதேயென்
புந்திக்கு ணீதான் பொருந்திடவுங் காண்பேனோ.

பொழிப்புரை :—நின்னை நினைவுறும் போதெல்லாம் தெவிட்டுத லில்லாத திருவமுதமே! எனது புத்தியின்கண் நீ கலந்துறுவதுங் காணப் பெறுவேனோ வென்பதாம்.

குறிப்புரை :—என்னறிவுக்குள்ளே பேரறிவா யிருந்தருளலுங் காண்பது, இனி எந்தக்காலமோ வென்பது. (1)

உ. கேவலத்தி லுன்கிடந்து கீழ்ப்படா தின்பவருட்
காவலன்பா லொன்றிக் கலந்திடவுங் காண்பேனோ.

பொழிப்புரை :—கேவலாவத்தையால் நான் துன்புறுமே பரமசுக யேதுவான திருவருட் செல்வன்பால் பேதமின்றி ஒருமைப்பட்டு வாழவுங் காணப்பெறுவனோ!

குறிப்புரை :—சகல, கேவல மென்னும் நினைத்தல் மறத்தல்களால் கஷ்டமுறுது திருவருளிறைவனைச் சேர்ந்துய்ய வேண்டு மென்பது. (2)

ங. துரியங் கடந்த வொன்றே தூவெளியாய் நின்ற
பெரியநிறை வேயுனைநான் பெற்றிடவுங் காண்பேனோ.

பொழிப்புரை :—பரிசுத்த நிலையமாகிய துரியபூமிக் கப்பாற்பட்ட யேக பரவஸ்துவே! பராகாயமாய்த் துலங்கும் பேரருள் வெளியே! எங்கு நிறை பூரணமாயவுன்னை யான் அடைந்திடவும் காணப் பெறுவனோ வென்பது.

குறிப்புரை :—துரியத்திற் கப்பாற்பட்ட தூவொளியே! எங்கு நிறைவாயுள்ள வெம்பரமே! யானடைதலினி யென்றுகொலோ! (3)

ச. மாசற்ற வன்பர்நெஞ்சே மாறாத பெட்டகமாத்
தேசுற்ற மாமணிநின் றேகினையுங் காண்பேனோ.

பொழிப்புரை :—பரிசுத்தமான இதயத்தோடுங் கூடிய மெய்யன்பர்களது திருவுளத்தையே நிலைபெற்ற பெட்டியாகக் கொண்டு அதன்பால்

பொருந்தி விளங்கும் பிரகாசம் பொருந்தியுள்ள திவ்ய இரத்னமொத்த திருமணியே! யான் நினையுங் காணப் பெறுவனோ வென்பது. (4)

ரு. மாயா விகார மலமகல வெந்தைபிரான்
நேயானு பூதி நிலைபெறவுங் காண்பேனோ.

பொழிப்புரை :—மாயையின் சேஷ்டிதங்களான திரிமலங்களின் விகாரக் கிருத்தியங்களும் நீங்க, என் பரம பிதாவான இறைவனது கூட்டுறவின் வழக்க நிலையினை நிலைபெறுமாறு காணப்பெறுவனோ!

குறிப்புரை :—மாயா சேஷ்டைகளறுமாறு, இறைவன்பால் நேசவாசம் நிலைபெறவுங் காணப் பெறுவனோ வென்பது. (5)

சு. பொய்யுலகும் பொய்யுறவும் பொய்யுடலும் பொய்
மெய்யநினை மெய்யெனவே மெய்யுடனே காண்பேனோ. [யெனவே

பொழிப்புரை :—அநித்தியமான உலகமும், வஞ்சவுறவினரும், நிலையற்ற காயமும் ஆகிய இவையெலாம் கேவலம் அழிவுள்ளனவெனத் தீர்மானித்து, ஏ நித்தியானந்த நின்மல பிரபுவே! நினையே எக்காலமும் அழிவிலா இறையவன் எனக்கொண்டு இச்சரீரமுள்ளபோதே நினைக்காண்பான் விரும்புகின்றேன்.

குறிப்புரை :—இவ்வுலகு, உற்றார் பெற்றார், சரீரம் இவையனைத்து சுத்தமித்தை யென்றும், தேவரீரே என்றும் விளங்கு மிறைவனெனக் கொண்டுள்ளமையான், இக்காயத்தோடும் தம்மைப் பார்க்க விரும்பலானேன். (6)

எ. வாலற்ற பட்டமென மாயா மனப்படலங்
காலற்று வீழவுமுக் கண்ணுடையாய் காண்பேனோ.

பொழிப்புரை :—திரியம்பகத் தேவனே! மாயா சொரூபமாயுள்ள எனது மனமாகிய பட்டம், வாலற்று வீழ்ந்த பட்டம்போல் மாய்ந் தொழியுமாறு யான் காணக்கூடுமோ! என்பது.

குறிப்புரை :—வாலறுந்த பட்டமென, என் மனப்பட்டமும் ஓய்ந்து விழுவதை யான் பார்த்தானந்திக்கக் கூடுமோ வென்பது. ஈண்டு மனமுற்று வீழ்தலாவது, நினைப்பு மறப்புமற்று ஓய்வுறல். (7)

அ. உள்ளும் புறம்பும் ஒருபடித்தாய் நின்றுசுகங்
கொள்ளும் படிக்கிறைநீ கூட்டிடவுங் காண்பேனோ.

பொழிப்புரை :—இறைவ ! யான் உள்ளகமும் புறத்தினும் ஒரே நிலையாய் விளங்கிச் சுகம் பெறுமாறு நீயெனைக் கலக்கவும் யான் பார்க்க வியலுமோ வென்பது.

குறிப்புரை :—அகம்புறமொத்து எனைச் சுகப்படுமாறு நீ சேர்த்திடலும் யான் பார்க்கக் கூடுமோ என்பது. (8)

௯. காட்டுகின்ற முக்கட் கரும்பே கனியேயென்
ஆட்ட மெல்லாந் தீரவுன தாடலையுங் காண்பேனோ.

பொழிப்புரை :—காண்பன காட்டும், மூன்றுகண் கொண்ட கரும்பனையாய் ! கனிந்த நறுங்கனி போன்றாய் ! எனது திண்டாட்ட மனைத்தும் நீங்குமாறதாக நின் திருநடமுங் காணப் பெறுவனோ என்பது.

குறிப்புரை :—என் புலையாட்டொழிந் நின் ஆனந்தநிலையாட்டமுங் காணப் பெறுவனோ வென்பதாம். (9)

௧௦. தூங்காமற் றூங்கிச் சுகப்பெருமா னின்னிறைவில்
நீங்காம னிற்கு நிலைபெறவுங் காண்பேனோ.

பொழிப்புரை :—எம்பெருமானே ! பொய்யுறக்கங் கொள்ளாது மெய்யுறக்கமாகிய யோகுறக்கங் கொண்டு நினது பரிபூரணமான நிறைவின் கண் இடைவிடாது ஒரே நிலையாய் நிலைபெற்று வாழவுங் காணப் பெறுவேனோ வென்பதாம்.

குறிப்புரை :—நின் பரிபூரணமான பேரருணிறைவிலே யான் யோகபரனாயிருந்து வாழவேண்டு மென்பது இச்சை என்பது. (10

௧௧. வாதவூ ராளிதனை வான்கருணை யால்விழுங்கும்
போதவூ ரேறேநின் பொன்னடியுங் காண்பேனோ.

பொழிப்புரை :—திருவாதவூராராம் மணிவாசகரை பெருங்கருணை கொண்டு விழுங்கியாண்ட சிதம்பரத் தெய்வ நடத்திறையே ! நினது ஒப்பற்ற பொற்பாத கமலங்களையும் யான் காணப் பெறுவனோ !

குறிப்புரை :—" விழுங்கும் போதவூரேறே " யென்றது—ஸ்ரீ சிதம்பர சிற்சபையிற் கலந்தருளினமை யென்க. போதவூரேறேயென்று கூறியது ஞானாகாய ஸ்தலமாம் சிதம்பரத் தெய்வமென்னும் ஸ்ரீ நடராஜ வள்ளலை யென்றுணர்தலே முறையாம். (11)

கஉ. சாட்டையிலாப் பம்பரம்போ லாடுஞ் சடசால
நாட்டமற வெந்தை சுத்த ஞானவெளி காண்பேனோ.

பொழிப்புரை :—சாட்டையின்றியாடும் பம்பரம்போன்றே, சடப் பொருளாம் சரீரத்தின் பொய் விருப்பாதிக ளனைத்தும் பற்றற நீங்குமாறு எனது பரம பிதாவாகிய பரமானந்தன் வாழும் பர ஞானகாயமாம் சிதம் பரத்தைத் தரிசித்துய்யலாகுமோ. என்பது.

குறிப்புரை :—சாட்டையிலாப் பம்பரம்போலாடும் சடசாலமாவது— சாட்டையை விட்டு நீங்கியாடும் பம்பரம்போன்று, ஞான வுணர்வில்லாச் சாமானியரை யென்க. (12)

கங. மன்றாடும் வாழ்வே மரகதஞ்சேர் மாணிக்கக்
குன்றேநின் றாட்கீழ்க் குடிபெறவுங் காண்பேனோ.

பொழிப்புரை —ஒப்பற்ற ஞானசபைக்கண்ணே திருநடமாடும் பரமா னந்தப் பெருவாழ்வே! மரகதம் சேர்ந்தோங்கும் மாணிக்கச் சிறுமலையன் னாய்! நின் திருவடியின் கீழாக யான் தங்கி வாழ்வதும் காணப்பெறு வேனோ வென்பது. ஈண்டு மரகதமாவது அம்பிகையும், மாணிக்கக் குன் றென்பது ஸ்ரீ சிவபெருமானுமாம். (13)

கச. பொய்யென் றறிந்துமெமைப் போகவொட்டா தைய
வையங்கள மயக்கமாற் றிடவுங் காண்பேனோ. [விந்த

பொழிப்புரை —இறைவ! இவ்வுலகம் கேவலம் அநித்தியத்துவ மாயதென்றுணர்ந்திருந்தும், இதன் மாயா மயக்கமானது மேற்செல்ல விடாது; ஆதல்கொண்டே இதனைக் கடந்து நிற்றலும் யான் காணப் பெறுவேனோ வென்பது.

குறிப்புரை :—இவ்வுலகப் பிராந்தியின் வன்மையை யென்னென்பேன்! இஃதென்னை விட்டுத் தொலைந்தும் யான் மீள்வேனோ! என்பது. (14)

கரு. தாயினும் நல்ல தயாளுவே நின்னை யுன்னித்
தீயின்மெழு கொத்துருகுஞ் சிந்தைவரக் காண்பேனோ.

பொழிப்புரை: —நாலாயிரந்தாயி னற்றாயனையாய்! கருணைவடிவமே! நின் திவ்ய சொரூபத்தை நினைந்து அக்னியுற்பட்ட மெழுகினைப் போன் றிளகிவரும் நெஞ்சமமையக் காணப்பெறுவேனோ வென்பது. தந்தை யினும் தாயிரக்கம் மிக்கதென்றனர் போலும்.

குறிப்புரை :—சிந்தை நைந்துருகார்க்குத் திருவருள் வந்தருளாதென்பது இதனால் நன்கு புலப்படலாயிற்று. (15)

[யன்யா

கசு. என்செயினு மென்பெறினு மென்னிறைவா வேழை
நின்செயலென் றன்னு நினைவுவரக் காண்பேனோ.

பொழிப்புரை :—எனக்கினிய இறைவனே ! யானோ, ஏழைமதியுடையேன் ; ஆதலின், யான் எதைச் செய்திடினும், அன்றி எதைப் பெற்றிடினும் அவையெல்லாம் நின் செய்கையே யென்று நினைவு கொள்ளும் தன்மை யொன்று மட்டும் வந்திடின்போதும் ; ஆனால் அவ்வாறான பேறிவும் வந்துறப்பார்ப்பேனோ ! என்பதாம். நின் செயலென்றுன்னுவதும் நீ செயல் வேண்டும்.

குறிப்புரை :—"எல்லாம் நின்றிருவருட்செயலே" யென்றெண்ணி நிற்கும் நன்னிலையை நீயே நிலையுறுத்த வேண்டு மென்பது. (16)

கஎ. எள்ளத் தனையு மிரக்கமிலா வன்பாவி
உள்ளத்து மெந்தை யுலாவிடவுங் காண்பேனோ.

பொழிப்புரை :—கேவலமான எட்டுணையளவாவது இரங்குதலில்லாத கொடிய மகாபாவியேனது நெஞ்சகத்தும் என் பரம பிதாவானவர் பொருந்தி யிடவும் பார்க்கலாமோ !

குறிப்புரை :—இறைவன் உள்ளக்கமலத்தில் ஊன்றியிடலைப் பார்க்க எளியேன்றன் இச்சையென்பது புலப்பட்டது. (17)

கஅ. வஞ்சகத்துக் காலயமாம் வல்வினையே னுங்கெடுவேன்
நெஞ்சகத்தி லையாநீ நேர்பெறவுங் காண்பேனோ.

பொழிப்புரை :—தீவினை விசேடத்தால் வந்த யான் மிக்க வஞ்சமாதிகளுக்கெல்லாம் கோவிலாயுள்ளேன் ! ஆ ! கெடுவேன் ! இவ்விழி நிலையென் நெஞ்சிடமாக என் இறைவனே, நீயும் பொருந்துதற் கிசைவையோ ! அங்ஙனம் நேர்படினும் யான் அதனைப் பார்க்கவும் கிடைக்கப் பெறுவேனோ !

குறிப்புரை :—மிகக்கொடிய வஞ்ச நெஞ்சினனும் தீவினையாளனுமாய என்னிதயத்தில் எம்மான் பொருந்தி வாழ்தலு முண்டாமோ ! (18)

கக. தொல்லைப் பிறவித் துயர்கெடவு மெந்தைபிரான்
மல்லற் கருணை வழங்கிடவுங் காண்பேனோ.

பொழிப்புரை :—பழவினைத் தொடர்பால் வந்த துக்கமானது தொலையவும், என் பரமபிதாவான இறைவனது பூரணகிருபை செய்தருளவுங் காணப்பெறுவனே ! என்பது.

குறிப்புரை :—முன்வினைத் துயர்கெட, முன்னோனது முழுகிருபையையும் பெற்றுய்யக் காணவேண்டுமென்பது. (19)

உ0. வாளாருங் கண்ணார் மயற்கடலி லாழ்ந்தேன்சற்
றாளாக வெந்தை யருள்செயவுங் காண்பேனே.

பொழிப்புரை :—கூரிய வேலாயுதத்தை யொத்த கண்களையுடைய பெண் மக்களார்தம் மையலாகும் சமுத்திரத்தில் அமிழ்ந்து தத்தளிக்கும் யான், சிறிது மேலேவர எம் பரமபிதாவான இறைவர் திருவருள் புரியவுங் காணப்பெறுவனே !

குறிப்புரை :—கொடிய மாதர் மையலிற் சிக்குண்டு விழிக்கும் சிறியேன் தலைநிமிர்ந்து மேனோக்கிவர இறைவன் திருவருள் புரிவனே ! (20)

உக. பஞ்சாய்ப் பறக்குநெஞ்சப் பாவியைநீ கூவியையா
அஞ்சாதே யென்றின்னருள் செயவுங் காண்பேனே.

பொழிப்புரை :—ஐயனே ! பெருங்காற்றாடு பஞ்செனப் பறக்கும் நெஞ்சுடைய இந்தப்பாவியேனையு மழைத்து, அஞ்சற்கவென்றே ஆதரித்து நின் இனிய திருவருள் புரியவுங் காணப்பெறுவனே !

குறிப்புரை :—பஞ்சினு மெல்லிய இந்த பாவகாரியை யழைத்து இறைவன் திருவருள் புரிந்தாள வேண்டு மென்பது. (21)

உஉ. ஆடுகறங் காகி யலமந் துழன்றுமனம்
வாடுமெனை யையாநீ வாவெனவுங் காண்பேனே.

பொழிப்புரை :—சுழலுகின்ற காற்றாடியையொத்தே உலக வாழ்விலகப்பட்டு அலமந்து வந்தவாட்டங்க ளனைத்தும் நீங்குமாறதாக எனையனே ! தேவரீர் 'வருவா' யென்றழைப்பக் காணப்பெறுவனே !

குறிப்புரை :—பலவாறுனுந் துன்புறும் என்மனவாட்டத்தை யொழிப்பான் வேண்டி 'நீவா' வென்று அழைத்தருளல் வேண்டு மென்பது. (22)

உ௩. சிட்டர்க் கெளிய சிவனேயோ தீவினையேன்
மட்டற்ற வாசை மயக்கறவுங் காண்பேனே.

பொழிப்புரை :—மகா தவசீலர்க்குச் சுலபசாத்தியரான சிவபெருமானே! கொடிய வினையாளனாகிய எனது அடங்காத பேரவா மயக்காதிகளனைத்தும் எனை விட்டொழியு மாறாகக் காணப்பெறுவதும் இசையுமோ வென்பது.

குறிப்புரை :—இறைவன்பால் தங்குறையாம் ஆசா மயக்கொழிப்பான் கூறி, வேட்கைப் பெருக்கை வெறுத்துரைக்கின்றார் என்பது. (23)

உ௪. உண்ணின் றுணர்த்து முலப்பிலா வொன்றேநின்
தண்ணென்ற சாந்தவருள் சார்ந்திடவுங் காண்பேனோ.

பொழிப்புரை :—என்னகத்தே பொருந்தியிருந்து அறிவித்துவரும் நித்திய வத்துவான ஏகனே! நினது குளிர்ச்சிவாய்ந்த சாந்தமாகிய திருவருள் எனைப் பொருந்தவும் காணப்பெறுவனோ !

குறிப்புரை :—என்னறிவூடமர்ந்து அறிவித்துவரும் ஒப்பற்ற வொருவா! நின் குளிர்ந்த திருவருளானது என்பால் சார்ந்தருள வேண்டு மென்பது. (24)

உ௫. ஓடுங் கருத்தொடுங்க வுள்ளுணர்வு தோன்றநினைக்
கூடும் படிக்கிறைநீ கூட்டிடவுங் காண்பேனோ.

பொழிப்புரை :—என்னை விட்டுப்பலவாறு யோட்டெடுக்கும் என் எண்ண மொடுக்கமுறவும், அறிவின் விசேடம் அதிகப்படவும், அன்றி நின்னைச் சார்ந்துய்யவும் இறைவனாகிய நீ அநுக்ரகித்தருள்வதுங் காணப்பெறுவனோ !

குறிப்புரை :—சதா சலிக்கின்ற மனமொடுங்கி அறிவு துலங்க நினைச் சார்ந்துய்யுமாறு நீயே கிருபை புரிய வேண்டும். என்பது. (25)

உ௬. வாக்கான் மனத்தான் மதிப்பரியாய் நின்னருளை
நோக்காம னோக்கிநிற்கு நுண்ணறிவு காண்பேனோ.

பொழிப்புரை:—வாக்கினாலும் மனத்தினாலும் நிச்சயித்தற் கரியவனே! நினது திருவருளினை அறிவால் நோக்குற்று நிலை பெறும்படியான நுட்ப புத்தியும் காணப்பெறுவனோ !

குறிப்புரை :—மன வாக்காதியனவால் அறிவரிய பொருளாய இறைவனே! நின் திருவருள்வந்து எனக்கு வாய்ப்பதை நான் என் பேரறிவு கொண்டு பார்க்க வேண்டு மென்பது. (26)

உஎ. இவ்வுடம்பு நீங்குமுனே யெந்தாய்கே ளின்னருளாம்
அவ்வுடம்புக் குள்ளே யவதரிக்கக் காண்பேனோ.

பொழிப்புரை :—இவ்வனித்திய தேகம் நீங்கற்கு முற்பட்டே என் அரிய தாயனையாய்! நின் அரிய திருவருளாம் தனூடாக யான் மேலான ஞான தேகம் பெற்று வாழக் காணப் பெறுவனோ!

குறிப்புரை :—அநித்திய சரீர மடங்கு முன்னேயே நீ திருவருள் சுரந்து திவ்ய ஞான தேகமும் பெற்றிட வேண்டு மென்பது. (27)

உஅ. நித்தமா யொன்றாய் நிரஞ்சனமாய் நிர்க்குணமாஞ்
சுத்தவெளி நீவெளியாய்த் தோன்றிடவுங் காண்பேனோ.

பொழிப்புரை :—என்று முள்ளதாய், ஏக வஸ்துவாய், கட்புலனுக்குத் தெரியாததாயும், குண ரகிதப் பொருளாயும், பராகாயமயமாயு முள்ள நீ, யெனக்கு வெளிப்படவுங் காணப் பெறுவனோ!

குறிப்புரை :—சச்சிதானந்த மயமாயுள்ள தேவரீர்தம் ஞான வடிவம் யென்பார்வைக்கு வெளிப்படக் காண்ப தெப்போதோ! (28)

உகூ. கண்ணிறைந்த மோனக் கருத்தேயென் கண்ணேயென்
உண்ணிறைந்த மாயை யொழிந்திடவுங் காண்பேனோ.

பொழிப்புரை :—என் இருகண்ணூடும் பொருந்தியுள்ள மவுன நிலையே! என் கண்ணே! எனக்குள்ளே பொருந்தியதான மாயா மயக்கு தொலைந் திடவுங் காணப்பெறுவனோ!

குறிப்புரை :—என்னகத்தே நீ யிருந்திருப்பது சத்தியமே யாயின், மாயா மயக்கை உடன்வைத்திருப்பதும் நீதியோ வென்பது; இதனால் மாயை விலக்கம் செய்தருள வேண்டு மென்பது. (29)

௩௦. அத்தா விமலா வருளாளா வானந்த
சித்தா வெனக்குனருள் செய்திடவுங் காண்பேனோ.

பொழிப்புரை :—எவைக்கு முன்னோய்! மலரஹிதா! திருவருளாளி யானவனே! பரமானந்த சித்தனே! எளியேற்கு நின்றிருவருள் புரிந்திடலும் காணப்பெறுவனோ! என்பது.

குறிப்புரை :—ஒப்புவமையற்ற ஒருதனிப் பெரும்பதியோய்! எளியனது பேருவப்பாம் திருவருள் சுரந்திடலும் என்று கொலோ! (30

௩௧. வீணே பிறந்திறந்து வேசற்றே னாசையறக்
காணே னிறைநின் கருணைபெறக் காண்பேனோ.

பொழிப்புரை :—ஐயனே! யான் வீணாக இவ்வுலகத்தில் பிறந்து மிறந்தும் பலவாறு அலக்கழிந்தேன்! ஆசாபாச மொழிந்திடக் காண்கிலனே! ஆகையால் இனியேனும் நின் திருக்கருணை பெற்றுய்யவுங் காணப் பெறுவனோ!

குறிப்புரை:—ஆசையற்று, நின் திருக்கருணையுங் கிடைக்கப் பெறுவனோ! (31)

௩௨. சட்டையொத்த விவ்வுடலைத் தள்ளுமுன்னே நான்சகச
நிட்டையைப் பெற்றையா நிருவிகற்பங் காண்பேனோ.

பொழிப்புரை :—சட்டையினைப் போன்ற இச் சரீரத்தை விழச் செய்யு முன்பதாக, ஐயனே! சகச நிட்டாபரனாய், நிருவிகற்ப சமாதியுங் கூடக் காணப்பெறுவனோ!

குறிப்புரை :—இதனால், அநித்தியத்தைக் குறித்து நிருவிகற்ப சமாதியாம் பரநிட்டை கூடவேண்டு மென்பது கொள்கையாம். (32)

௩௩. எல்லாந் தெரியு மிறைவாவென் னல்லலெல்லாஞ்
சொல்லாமு னீதான் றொகுத்திரங்கக் காண்பேனோ.

பொழிப்புரை :—சகலமுந் தெரிகின்ற சர்வேசுவரா! என் துன்ப மனைத்தும் நின்பால் யான் தெரிவிக்கு முன்பாக, நீயே ஆய்ந்துணர்ந்து கருணைசெய்யக் காண்பேனோ!

குறிப்புரை :—இறைவனே! என்குறையை யான் விண்ணப்பிக்காத படி, நீயே முன்னதாக உணர்ந்து இரக்கமுற்று நிவர்த்திப்பா யென்பது என் வேண்டுகோள். (33)

௩௪. அண்டபகி ரண்ட மனைத்து மொருபடித்தாக்
கண்டவர்கள் கண்டதிருக் காட்சியையுங் காண்பேனோ.

பொழிப்புரை :—அண்டமென்ன, பகிரண்டமென்ன, இவையெங்கணும் ஒரே நிலைமைத்தாகக் கண்டறியும் பேரறிவினாட்டத்தைக் கண்டருளும் மகான்களின் அந்த யேக பார்வையையும் யான் என்னறிவினுக் கெட்டுமாறு காணப் பெறுவனோ!

குறிப்புரை :—அண்டங்களின் அகம்புற மென்னும் எங்கணும் ஒரே பார்வையாகக் கூடிய அப்பரம நாட்டத்தைப் பார்த்தல் வேண்டும். (34)

௩௫. ஊனிருந்த காய முடனிருப்ப வெந்தை நின்பால்
வானிருந்த தென்னவுநான் வந்திருக்கக் காண்பேனோ.

பொழிப்புரை :—மாமிச மயமாகிய சரீரமானது உடனிகழ்ச்சியாக விருக்கிறபோதே என் பரமபிதாவே! நின்னிடத்தே மேலாய தத்துவ மமைந்திருக்கும்வாறே போல், யானும் நின்பால் பொருந்தி வாழவுங் காணப் பெறுவேனோ வென்பது.

குறிப்புரை :—ஊன் சரீரத்திடையே நீ கலந்திருத்தல் போன்றே, நின் ஒப்பற்ற பரஞானத் திருவருள் வெளியிலே வந்து யான் வாழவுங் காண்பனோ! (35)

௩௬. தினையத் தனையுந் தெளிவறியாப் பாவியேன்
நினைவிற் பரம்பொருணீ நேர்பெறவுங் காண்பேனோ.

பொழிப்புரை :—தினையளவேனும் தெளிதலில்லாத இந்த அபாக்கியன் எண்ணத்தூடே பரம்பொருளாயுள்ள நீயும் கலந்து விளங்கலையும் யான் காணப்பெறுவனோ!

குறிப்புரை :—மிக்க அபாக்கியஸ்தனையுள்ள என் எண்ணத்தூடு எம்மான் கலந்து நிலைபெறவுங் காண வேண்டு மென்பதாம். (36)

௩௭. துன்பமெனுந் திட்டனைத்துஞ் சூறையிட வையாவே
இன்பவெள்ளம் வந்திங் கெதிர்ப்படவுங் காண்பேனோ.

பொழிப்புரை :—என்பால் நிறம்பிக் கிடக்கும் விசார மேட்டினை, என்னிறைவனே! நின் பேரின்ப மெனும் பிரவாகத்தைக் கொண்டு அடித்துப்போக யான் பார்த்தலுங் கூடுமோ!

குறிப்புரை :—இறைவ! என் துன்பத்திடலை நின் இன்ப வெள்ளத்தால் வாறிச்செல்ல வேண்டு மென்பது. (37)

---

## ஆகாதோ வென்கண்ணி



க. கல்லாத நெஞ்சங் கரைந்துருக வெத்தொழிற்கும்
வல்லாய்நின் னின்பம் வழங்கினு லாகாதோ.

பொழிப்புரை :—எல்லாக் காரியாதிகட்கும் தலைமைப் பெரும்பதியே! ஏது முணரப்பெறாத மூடத்தனமுடைய என் இதயம் நீரானமாகக் கரைந்

துருகுமாறு நின்பரானந்த ஏதுவாம் பரம சுகத்தினை அருளிச் செய்யின் தக்கதன்றோ !

குறிப்புரை :—பேரறிவற்ற பிள்ளைமதியேன் உள்ளம் உருகுமாறு பரம சுகமளித்தருள வேண்டு மென்பது. (1)

உ. என்னை யறிய வெனக்கறிவாய் நின்றருணின்
றன்னையறிந் தின்பநலஞ் சாரவைத்தா லாகாதோ.

பொழிப்புரை :—என்னை யான் அறியுமாறு எனக்கும் பேரறிவாக விளங்கும் நின்னை யறியவும், பரபோகந் துய்க்கவும் நீ திருவருள் புரிந்து இரக்ஷிக்கின் ஆகாதோ ! என்பது.

குறிப்புரை :—என்னறிவூடிருந்து யென்னையறியச் செய்யும் நின்னையும் யான் அறிந்து பரானந்த மெய்தச் செய்ய வேண்டும். என்பது. (2)

ந. பொய்ம்மயமே யான புரைதீர வெந்தையின்ப
மெய்ம்மயம்வந் தென்னை விழுங்கவைத்தா லாகாதோ.

பொழிப்புரை :—என்னிறைவ ! அநித்தியத்துவமாய குற்ற மறுமாறு, நின் சச்சிதானந்த சொரூபம்வந்து என்னைத் தன்னுள் இலயப் படுத்திக் கொள்ளலும் தக்கதன்றோ ! என்பது.

குறிப்புரை :—இறைவன் தன்னை அத்துவித நிலையில் வைத்தருள வேண்டு மென்பதைத் தெரிவித்துக் கொள்கின்றார். (3)

ச. மட்டிலாச் சிற்சுகமாம் வாழ்வேநின் னின்பமயஞ்
சிட்டர்போல் யானருந்தித் தேக்கவைத்தா லாகாதோ.

பொழிப்புரை :—அளவுகடந்த ஞானானந்த வற்புத வாழ்வே ! தபோதனரைப்போன்று, பரமயின்ப பரபோகாதிகளை யெல்லாம் யான் அநுபூதி செய்யத் திருவுளம் பற்றினலாகாதோ !

குறிப்புரை :—மிக மேலாய தவ சிகாமணிகளார் போன்று, யான் தம் பரபோகானுபவ முற்று வாழச்செய்தலும் தகாதோ ! என்பது. (4)

ரு. அத்தாநின் பொற்று ளடிக்கே யனுதினமும்
பித்தாக்கி யின்பம் பெருகவைத்தா லாகாதோ.

பொழிப்புரை :—எவைக்கு மூத்தோய் ! நின் பொன்போன்ற திருவடிக் கமலங்கட்கே யெப்போது மென்னைப் பேரன்புறச் செய்து பரானந்த மெய்தவும் நீ கிருபை செய்யின் தக்கதன்றோ !

குறிப்புரை :—இறைவனது அழகுவாய்ந்த திருவடிக்கே அன்புற்றுக் கிடக்குமாறு இன்ப நிலை பொருந்தச்செய்யின் தக்கதாகாதோ! (5)

சு. மெல்லியலார் மோக விழற்கிறைப்பே னையாநின்
எல்லையிலா னந்தநல மிச்சித்தா லாகாதோ.

பொழிப்புரை :—ஐயனே! மிருதுவாகிய சரீரிகளான மங்கைமார் இச்சா மயக்கமாகிய விழற்புல்லுக் கிறைக்கும் உன்மத்தனும், நின் கணக்கற்ற பரமானந்த நிலையை விரும்பினால் அது தகாதோ!

குறிப்புரை :—மாதர் மயக்குடையேனாயினும் யான் போதானந்த அனுபூதி பெற்று வாழ ஆசைப்படலுந் தகாதோ! (6)

எ. சுட்டழகா வெண்ணு மனஞ் சூறைவிட்டா னந்தமயக்
கட்டழகா நின்னைக் கலக்கவைத்தா லாகாதோ.

பொழிப்புரை :—சுட்டுதல் மிக விசேடமெனக் கொண்டுள்ள மனத்தினைத் துவம்சப்படுத்திய பரமானந்த சொரூபனே! நின்னை எளியன்பால் சேர்த்து வைத்தலானது தக்கதன்றோ!

குறிப்புரை :—அன்றி, என்னையாவது நீ கலந்தருள் புரிதலும் தக்கதன்றோ! சுட்டுதல் - முன்னிலையிற் சுட்டிப்பேசுதல். (7)

அ. சோதியே நந்தாச் சுகவடிவே தூவெளியே
ஆதியே நின்னை யறியவைத்தா லாகாதோ.

பொழிப்புரை :—சொலித மயமே! கெடுதலிலாச் சுத்த பேரின்ப மயமே! பராகாய நிறைவே! எப்பொருட்கு முதன்மையோய்! இத்தகையதாயுள்ள தேவரீரை யானறியுமாறு செய்தல் தக்கதன்றோ.

குறிப்புரை :—ஒப்பருந்தற்பரா! எல்லா வன்மையும் வாய்ந்த நீ நின்னைப் பார்க்கும்படி செய்தால் அது தக்கதாகாதோ! (8)

கூ. நேசஞ் சிறிதுமிலே னின்மலனே நின்னடிக்கே
வாசஞ் செயவிரங்கி வாவென்றா லாகாதோ.

பொழிப்புரை:—நின்மல சொரூபனே! யான் நின்பால் அன்பாலணைதல் சற்று மில்லேனே! ஆனாலும், நின் திருவடிக் கமலங்களின் கீழே நின்று வாழ்தற்கு கருணை பூத்து எனை வருவாயென்றால் அது தக்கதன்றோ!

குறிப்புரை :—இறைவனே! யான் அன்பென்பது சற்று மில்லாதவனாலும் நின் பெருங்கருணை கொண்டு வா வென்று சேர்த்துக் கொள்வாயாக. (9)

க0. என்னறிவுக் குள்ளே யிருந்தது போலவே
நின்னறிவு ணின்னுடன்யா னிற்கவைத்தா லாகாதோ.

பொழிப்புரை :—என் புத்திக்குள்ளாக நீ மருவி யறிவித்துள்ளாய்; அதுபோலவே நினது பேரறிவினூடும் நின்னோடும் எனை நிலைப்படுத்தினால் அது தக்கதாகாதோ!

குறிப்புரை :—என்றனறிவூடாக நீயுள்ளாய்; அதுபோன்றே என்னை நின்னறிவிடத்தில் சேர்த்திடலும் வேண்டு மென்பது. (10)

கக. ஆதிப் பிரானேயென் னல்ல லிருளகலச்
சோதிப்ர காசமயந் தோன்றுவித்தா லாகாதோ.

பொழிப்புரை :—சர்வ புவன மூலகாரணனே! எனக்குரிய துன்பங்களான கொடிய இருட்டானது நீங்குமாறதாக நின் சொலித மயமாயுள்ள தன்மையை யென்பால் தெரியும்படிச் செய்தல் தக்கதன்றோ!

குறிப்புரை :—என் அல்லலறுமாறு நின் பரம சோதி மயத்தைத் தோற்றுவித்தால் அதனால் நான் மிகவும் சாந்த முறுவேன் என்பது. (11)

க௨. ஆசைச் சுழற்கடலி லாழாம லையாநின்
நேசப் புணைத்தா ணிறுத்தினா லாகாதோ.

பொழிப்புரை :—ஐயனே! ஆசாபாசமாஞ் சுழலுடைக் கடற்கண் மூழ்கிக் கெட்டுப்போகாவாறு நினது நேசமாக்கும் பூம்பாத நீழலின்பால் எனை நிலையுறச் செய்யின் தக்கதாகாவோ!

குறிப்புரை :—யான் கெடாதபடி, நின் தாட்புணைதந்து இரக்ஷித்தருளல் வேண்டும். (12)

கங. பாசநிக ளங்களெல்லாம் பஞ்சாகச் செஞ்செவே
ஈசவெனை வாவென் றிரங்கினா லாகாதோ.

பொழிப்புரை :—பாசங்களாகிய இருப்பு விலங்குகள் பலவும் பஞ்சுபோல் பறந்தோட, இறைவ! எனைவா வென்று இரங்கி யாண்டாலாகாதோ!

குறிப்புரை :—பாசாதிகளொழிய வரவழைத்து இரங்கி யாண்டருள் புரிந்திடின் ஆகாதோ! என்பது. (13)

கச. ஓயாவுள் ளன்பா யுருகிவாய் விட்டரற்றிச்
சேயாகி யெந்தைநின்னைச் சேரவைத்தா லாகாதோ.

பொழிப்புரை :—இறைவனே! இடைவிடாத உள்ளன்பு கொண்டு மனங்கரைந்து வாயால் அழுதும் வரும் சிறு குழந்தையா மெனையும் நின்னொடும் ஒன்று பெறச்செய்யின் தக்கதன்றோ!

குறிப்புரை :—எனை நின்பாற் சேர்த்தருளல் வேண்டுமெனல். (14)

கரு. ஆதியாம் வாழ்வா யகண்டிதமாய் நின்றபரஞ்
சோதிநீ யென்னைத் தொழும்பனென்றா லாகாதோ.

பொழிப்புரை :—இறைவ! நீயோ, எவற்றினுக்கும் முன்னைப் பழம் பொருளாயுள்ள அனாதி வாழ்வுடையவன்; அன்றியும் அகண்டாகாரமா யுள்ள பரமப்ரகாசமயன்; இத்தகையோன் எனைத் தொண்டனாகக் கொண்டால் தக்கதாகாவோ! (15)

கசா. விண்ணூரக் கண்ட விழிபோற் பரஞ்சோதி
கண்ணூர நின்னிறைவைக் காணவைத்தா லாகாதோ.

பொழிப்புரை :—ஆகாய மெங்கணும் யேக பார்வையாகப் பார்த்திட்ட நேத்திரம்போன்று, ஏ பரஞ்சோதிசொரூபா! நின் அருள் நிறைவை யான் என் கண்கள் நிறைப் பார்த்திடச் செய்வதும் தகாவோ?

குறிப்புரை :—பரமப் பிரகாசனே! யான் திருவருணிறைவை கண் குளிரப் பாரேனோ! (16)

கஎ. சேராமற் சேர்ந்து நின்று சின்மயனே நின்மயத்தைப்
பாராமற் பாரெனநீ பக்ஷம்வைத்தா லாகாதோ!

பொழிப்புரை :—ஞான சொரூபனே! பகிர்முகமாகச் சேர்க்கிராது அந்தர் முகமாகச் சேர்ந்து நின்று நின் சொரூபத்தைப் பார்ப்பா யென்று அன்பு வைத்தருளின் தகாதோ!

குறிப்புரை :—யான் தம்மைப் பார்க்கவேணு மென்கின்ற பிரியமுண்டாமேல் பார்க்க முடியாமற் போமோ! (17)

கஅ. கண்ணாடி போலவெல்லாங் காட்டுந் திருவருளை
உண்ணாடி யையா வுருகவைத்தா லாகாதோ.

பொழிப்புரை :—சகலத்தையுங் காண்பிக்கும் கண்ணாடிபோன்று, ஐயனே! பிரபஞ்சாதிய வனைத்தும் தன்னருள் வெளியில் காட்டக்கூடிய திருவருளை நோக்கி உள்ள முருகுமாறு செய்விக்கத் தகாவோ!

குறிப்புரை :—இறைவன் றிருவருளின்றி யமையாதொன்றும் என்றே "நீ உருகவைத்தா லாகாதோ" வென்றனர் போலும். (18)

கக. மூலவிருள் கால்வாங்க மூதறிவு தோன்றவருட்
கோலம்வெளி யாகவெந்தை கூடுவித்தா லாகாதோ.

பொழிப்புரை :—பரம பிதாவே! ஜெனன ஆஸ்பதமாகிய அஞ்ஞான மென்னும் பேரிருள் ஒழியவும், இதன்மேல் மெய்யறிவு விளக்கப் பெறவும், திருவருட் கோலமானது வெளித்தோன்றி யருளவும் நீ ஆக்குவித்தா லாகாதோ!

குறிப்புரை :—அஞ்ஞான மகற்றி, நல்லறிவு பாலித்து, திருவருள் என்பால் திரும்பவும் செய்தருள வேண்டுமென்று வேண்டுவாராயினர். (19)

உ0. சாற்றரிய வின்பவெள்ளந் தாக்குமதி னீமூளைக்கில்
ஊற்றமுறு மென்னவதி லுண்மைசொன்ன லாகாதோ.

பொழிப்புரை :—சொல்லுதற் கருமையாகிய பேரின்ப வெள்ளம் பெருகுவதில் நீ சம்பந்திக்கின் மிகக் கெடுமையாகிவிடு மென்று அதன் பிரபாவத்தினை வெளியிடுவையேயாயின் தக்கதாகாதோ

குறிப்புரை :—சச்சிதானந்த அநுபூதியினை யெதிரிடையா வுணர்தல் ஆகாதென்பது உட்கிடை யென்க. ஊற்றம் - தீமை. (20)

உக. கையுங் குவித்திரண்டு கண்ணாருவி பெய்யவருள்
ஐய நின்றாட் கீழே யடிமைநின்ற லாகாதோ.

பொழிப்புரை :—இரு கரங்களையுஞ் சிரமீது கூப்பி நிற்கவும், இரு நேத்திரங்களினின்று நீர் அருவியென வழியவும் கிருபைசெய்யு மெய்யனே! திருவடிக் கீழாக அடிமையை நிறுத்தி வைத்தலும் தக்கதன்றோ!

குறிப்புரை :—அன்பும் உரிமையு'மாக்குவித்த நீ, எனை நின் அடி நிழலமர்த்தின் தக்கதாகாவோ! (21)

---

## இல்லையோ வென்கண்ணி.

---

க. ஏதுந் தெரியா தெனைமறைத்த வல்லிருளை
நாதநீ நீக்கவொரு ஞானவிளக் கில்லையோ.

பொழிப்புரை :—எதனையும் விளங்காதபடி மறைத்திட்ட கொடிய அஞ்ஞானவிருளை, எ நாதா! நீ விலக்கியாண்டருள நின்பால் மெய்ஞ்ஞான தீப மொன்றில்லாமற் போயிற்றே!

குறிப்புரை :—என் அஞ்ஞானமகல மெய்ஞ்ஞான விளக்காகிய பேரறி வைத் தந்தாள என்பால் தயையில்லையோ! (1)

உ. பணியற்று நின்று பதைப்பறவென் கண்ணுண்
மணியொத்த சோதியின்ப வாரியெனக் கில்லையோ.

பொழிப்புரை :—யாதாமோர் காரியமுமின்றி, மனப்பதைப்பும் நீங்க, எனது கண்ணூடுள்ள சோதியின் சுகக்கடல் எளியேற்கு மில்லாமற் போயிற்றே வென்பது.

குறிப்புரை :—இறைவ! எளியேற்கு சுகானந்தக் கடலிலாழ்தலும் இனி எனக்குண்டோ வன்றி இலையோ! வென்பது. (2)

௩. எம்மா லறிவதற வெம்பெருமான் யாதுமின்றிச்
சும்மா விருக்கவொரு சூத்திரந்தா னில்லையோ.

பொழிப்புரை :—என்னிறைவனே! என் தற்போதத்தாலே தெரிவது ஒழியுமாறும், ஓர் கன்ம சங்கல்பமு மின்றிச் சும்மா யிருந்து வருதற்கான வோர் சூழ்ச்சிதானும் எனக்கின்றே!

குறிப்புரை :—சிவபோத மொழிந்து சும்மா விருத்தற்கு யாதாமோர் தந்திரோபாயங்கூட எனக்கில்லையோ! (3)

௪. நாய்க்குங் கடையானே னாதாநின் னின்பமயம்
வாய்க்கும் படியினியோர் மந்திரந்தா னில்லையோ.

பொழிப்புரை :—நாயினு மிழிந்தேனாயினன்; எ, இறைவனே! நினது பேரின்ப சொரூபம் கிடைக்கு மாறதாக இனி யாதாமோர் மந்திர சக்திதானும் நின்பாலின்றே!

குறிப்புரை :—இழிந்த வெளியேற்கும், நினது சுகப் பெருக்கென்பது மில்லையோ வென்பது. (4)

௫. ஊனாக நிற்கு முணர்வைமறந் தையாநீ
தானாக நிற்கவொரு தந்திரந்தா னில்லையோ.

பொழிப்புரை :—தேகமே யானென்னும் அஞ்ஞானவறிவகன்று, யான் நீயாய் நிற்றற்குரிய தாந்திரீக மொன்றுமின்றே. எனையனே! யென்பது.

ஊனாக நிற்றல் - தன் சரீரத்தைத் தானாகப் பாவித்தலாம். நீ தானாக நிற்றல் - இறைவனோடு சம்பந்தித்திருத்தல். என்பது. (5)

சா. அல்லும் பகலு மகண்டவடி வேயுனைநான்
புல்லும் படியெனக்கோர் போதனைதா னில்லையோ.

பொழிப்புரை :—அகண்டாகார சொரூபனே! யான் நினையே இராப் பகலாகச் சேர்ந்து வாழ்தற்கு எளியனுக்கோர் உபதேசங்கூட இல்லையோ! வென்பது.

குறிப்புரை :—இறைவனே! யான் தம்மோடும் அத்துவித முறையால் ஒன்றுபட்டு வாழ்தற்கான உபதேசமொழி யேது மில்லையோ. (6)

---

## வேண்டாவோ வென்கண்ணி.

க. கண்டவடி வெல்லாநின் காட்சியென்றே கைகுவித்துப்
பண்டுமின்று நின்றவென்னைப் பார்த்திரங்க வேண்டா
[வோ

பொழிப்புரை :—காணும் சொரூபங்க ளனைத்தும் நினது அரிய திருச் சேவையே யென்று என்னிரு கரங்களையுங் கூப்பி அன்று முதலின்றளவும் ஒரே நிலைமையாக நிற்கின்ற என்னை நோக்கிச் சற்றுவது இரக்கமுற வேண்டாமா!

குறிப்புரை —காண்பன வெல்லாம் தமது அம்ஸமாகவே நோக்குவது மன்றிக் கரங்கூப்பியும் வருகின்றேன். இத்தகையனுக்குத் தேவரீர் திருக் கருணை செயலாகாதோ. வென்பது. (1)

உ. வாதனையோ டாடு மனப்பாம்பு மாயவொரு
போதனைதந் தையா புலப்படுத்த வேண்டாவோ.

பொழிப்புரை :—ஐயனே! நானாவிதமாகிய ஆசாபாச துன்பாதிக ளோடுங்கூடிய மனமெனு மோர் சர்ப்பமானது ஓய்ந்திருக்குமாறு ஓர் உப தேச முறையானேதிவந்து என்புலாதிகளைத் தெரிவிக்க வேண்டாமா! என்பது.

குறிப்புரை :—என் ஓயா நெஞ்சம் ஓய்ந்திருக்குமாறதாகத் தக்கவோர் மந்திரோபதேசஞ் செய்வித்து என்னறிவுக்கும் புலனாகச் செய்ய வேண் டாமோ! (2)

௩. தன்னை யறியத் தனியறிவாய் நின்றருளு
நின்னையறிந் தென்னறிவை நீங்கிநிற்க வேண்டாவோ.

பொழிப்புரை :—தன்னைத் தானறிந்திடுமாறு, தாம் பேரறிவாய், நின்று விளங்கு முன்னையறிந்து, பின்னர் என் சீவபோத மொழிந்துவிடலும், வேண்டாவோ வென்பது.

குறிப்புரை :—என்னை யான் அறிதற்கு, ஒப்பற்ற தன்னந் தனியறிவா யுள்ள தம்மையறிந்து பின்னே என்னறிவு நீக்கம் வேண்டாவோ ! (3)

௪. அள்ளக் குறையா வகண்டிதா னந்தமெனும்
வெள்ளமெனக் கையா வெளிப்படுத்த வேண்டாவோ.

பொழிப்புரை :—ஐயனே ! எடுக்கக் குறைவுபடாததான அகண்ட சொரூபானந்தமாய வெள்ளப் பெருக்கினை எனக்குத் தோற்றச் செய்ய வேண்டாமோ வென்பது.

குறிப்புரை :—அகண்டம் + ஆனந்தம் = அகண்டானந்தம். அருள்வெளி யெங்கணும் ஒரே பரமானந்த மயமா யமர்ந்திருத்தல். (4)

௫. அண்டனே யண்ட ரமுதேயென் னாருயிரே
தொண்டனேற் கின்பந் தொகுத்திரங்க வேண்டாவோ.

பொழிப்புரை :—பிரமாண்டனே ! தேவர்க்கினிய தெள்ளமுதமே ! என் அரிய உயிர்க்குயிராயமர்ந்தவா ! இந்தத் தொழும்பனுக்கும் பரானந்தம் திட்டஞ்செய்திட வேண்டாவோ !

குறிப்புரை :—தம்மடிமைக்கும் பரானந்த சுக மளிக்குமாறு திட்டஞ் செய்ய வேண்டாவோ ! தொகுத்திரங்கல் - இரக்கமாக் கொடுத்தல். (5)

௬. பாராதே நின்று பதையாதே சும்மாநான்
வாரா யெனவும் வழிகாட்ட வேண்டாவோ.

பொழிப்புரை :—எதிராகப் பார்த்தல் செய்யாதே ; நிலையாகப் பதைப்புறாதே ; சாதாரணமாய் வருவாயென்று எனக்குரிய மேல்வழி காட்ட வேண்டாவோ !

குறிப்புரை :—வாராயென வழைத்தே வழி யெனக்கு நீயருளி நேராக முத்திநிலை நீ தெரித்தல் வேண்டாவோ. என்பது (6)

## நல்லறிவே யென்கண்ணி.



[வுயிராய்க்
க. எண்ணிறைந்த மேன்மைபடைத் தெவ்வுயிர்க்கு மவ்
கண்ணிறைந்த சோதியைநாங் காணவா நல்லறிவே.

பொழிப்புரை :—அளவு கடந்த பெருமைவாய்ந்து, சகலான்ம கோடி கட்கும் உயிர்க்குயிராய் நிறைந்தும், கண்களிலும்பொருந்தியுள்ள சோதி மணியினை நாம் பார்த்தற்கு வருவாய் என் இனிய அறிவே. (1)

உ. சித்தான நாமென் சடத்தை நாமென்ன வென்றுஞ்
சத்தான வுண்மைதனைச் சாரவா நல்லறிவே.

பொழிப்புரை :—சித்தாயுள்ள யாம், சடத்தினை யாமெனற்கு வேது யாதென தேறித் தெளிந்து பின் உண்மை தெரிந்தே சத்தினைச் சாருமாறு நல்ல அறிவே, நீ வருவாய்.

குறிப்புரை :—சத்த சத்தறிந்து சார்ந்துய்தற்கு எனக்கினிய உறவாம் அறிவே வருவாய் வருவாய். (2)

ங. அங்குமிங்கு மெங்குநிறை யற்புதனார் பொற்பறிந்து
பங்கயத்துள் வண்டாய்ப் பயன்பெறவா நல்லறிவே.

பொழிப்புரை :—அவ்விடம் இவ்விட மென்னும் எங்கணும் பரிபூரண மாயுள்ள அதியற்புதப் பெருமானார்தம் அளவுகடந்த வன்மை யுணர்ந்து, மரைமலர் வண்டினைய, என்னறிவே நீ வருவாய்.

குறிப்புரை :—எங்கும் பரிபூரணமாய் நிறைந்திலங்கும் அளவிலாப் பரமானந்தப் பரசிவத்தின் றன்மை யறிந்துய்வோம் வா என் அறிவே. (3)

ச. கான்றசோ றென்னவிந்தக் காசினிவாழ் வத்தனையுந்
தோன்ற வருள்வெளியிற் றோன்றவா நல்லறிவே.

பொழிப்புரை:—இவ்வுலக வாழ்வனைத்தும் கேவலம் கக்கல் சோற்றை நிகர்த்ததா விளங்க, திருவருள் வெளிக்கண்ணே வந்திடுவாய் எனது இனிய புத்தியே! என்பது.

குறிப்புரை :—கக்கின சோறொத்த திவ்வுலக வாழ்வென்ன துலங்கு மாறு திருவருள் வெளிக்கே வந்திடுவாயென் இனிய புத்தியே. (4)

## பலவகைக் கண்ணி.

---

௧. என்னரசே கேட்டிலையோ வென்செயலோ வேதுமிலை
தன்னரசு நாடாகித் தத்துவங்கூத் தாடியதே.

பொழிப்புரை :—இறைவனே! கேட்டாயோ! யான், எனக்கு யாதொரு சுதந்திரத்துவமு மின்றி ஓய்ந்து நிற்க; என்னகத்துள்ள தத்து வாதிக ளெல்லாம் ஒன்று கூடித் தாங்களாகவே தன்னரசு செலுத்தியாடி வருகின்றதே! ஈதென்ன விந்தை!

குறிப்புரை :—இதனால், அகக்கரண புறக்கருவிகளில் தான் கலவாமே ஏகமாய் நிற்பது இனிது புலனாயது. (1)

௨. பண்டொருகா னின்பாற் பழக்கமுண்டோ வெந்தை
கண்டொருகாற் போற்றக் கருத்துங் கருதியதே. [நினைக்

பொழிப்புரை :—எனப்பனே! முன்னோர் சமயம் என் மனமானது நின்னை நினைத்திருக்கலாம்; அதனால் நினக்கேதும் பழக்க வழக்கங்க ளிருக் குமோ? சொல்வாயாக என்பது. (2)

௩. கண்டனவே காணுமன்றிக் காணாவோ காணுவென்
கொண்டறிவே னெந்தைநினைக் கூடுங் குறிப்பினையே.

பொழிப்புரை :—முன்பார்த்தவையே பின்னர் பார்க்க நேரும்; இதன்றி நூதனமாக வொன்றைக்காண வியலாவாம்; இவ்வாறாக, எம் மானே! நின்னைக்காணும் தன்மையை இதுகாறும் அறிந்திலனாக, இப்போ தெங்ஙனங் காண்பது, கூறுவாயாக? (3)

௪. கல்லா லடியில்வளர் கற்பகமே யென்னளவோ
பொல்லா வினைக்குப் பொருத்தந்தான் சொல்லாயே.

பொழிப்புரை :—கல்லால விருக்ஷத்தடியில் வீற்றிருந்தருளும் கற்பகத் தருவனையாய், கொடிய தீவினைகளுக்கு யான்தான் பொருந்து மிடமோ? நீ கூறுவாயாக. வேறிட மில்லையோ வென்பது. (4)

௫. தப்பிதமொன் றின்றியது தானாக நிற்கவுண்மை
செப்பியது மல்லாலென் சென்னியது தொட்டனையே.

பொழிப்புரை :—தவறொன்று மிழையாமே அப்பொருள் தானாக நிற்குமாறு எளியேற்கு ஆசிரியராய்வந்து உண்மை யொன்றோதியது மன்றி என் உச்சி சிரந்தொட்டனையே !

குறிப்புரை :—ஈண்டு சிரந் தீண்டல், ஹஸ்தமஸ்தக சையோகமாகும் ; அதாவது—ஆசிரியர் தன் கரகமலங்கொண்டு உச்சி சிரம் வைத்தலாம். இது தீக்ஷைகளி னொன்று. (5)

சா. மாசான நெஞ்சினவன் வஞ்சனென்றோ வாய்திறந்து
பேசா மௌனம் பெருமான் படைத்ததுவே.

பொழிப்புரை :—குற்றமுள்ள மனத்தோடும், மகா வஞ்சமானவனுயு முள்ளான் என்றுதானோ, தேவரீர் மவுன விரதத்தைக் கைக்கொண்டருளியது ? (6)

எ. கற்பதெல்லாங் கற்றேறுங் கண்ணுடையாய் நின்பணி
நிற்பதுகற் றன்றோ நிருவிகற்ப மாவதுவே. [யாய்

பொழிப்புரை :—திரிநேத்திரதாரியே ! கற்பனவாய வனைத்தையுங் கற்றனம் ; ஆனாலும், நின் ஊழியமாய் நிற்ப துணர்ந்தாலல்லவா நிருவிகற்ப சமாதியாகும். என்பது. (7)

அ. முன்னளவில் கன்ம முயன்று னிவனென்றோ
என்னளவி லெந்தா யிரங்கா திருந்ததுவே.

பொழிப்புரை :—இன்னோன் முன்னே கணக்கற்றதான தீய கர்மாக்களைப் புரிந்தவ னென்றுதானோ, எந்தையே ! நீ என் மட்டில் இதுகாறும் இரக்கமுற் றருள்புரியா திருந்தது ? (8)

கூ. நெஞ்சகம் வேறாகி நினைக்கூட வெண்ணுகின்ற
வஞ்சகனுக் கின்ப மெந்தாய் வாய்க்குமா றெவ்வாறே.

பொழிப்புரை :—எம்மன்னாய் ! மனமானது இதர விவகாரத்திற் செல்லவிட்டு, நின்னை யடைந்துய்யக் கருதும் இக்கொடிய கபடனேற்கும் திருவருளின்பம் கிடைப்பது எவ்வாறோ ? (9)

கo. பள்ளங்க டோறும் பரந்தபுனல் போலுலகில்
உள்ளம் பரந்தா லுடையாயென் செய்வேனே.

பொழிப்புரை :—எனையுடையவனே ! பள்ளங் கண்டவிடத்தே தண்ணீர் ஓடி நிறைதல் போன்றே, இவ்வுலகத்திடையே என் மனம் விரைந்தோடின் யான் என் செய்க்கடவேன் ! (10)

கக. முன்னினைக்கப் பின்மறைக்கு மூடவிரு ளாகெடுவே
என்னினைக்க வென்மறக்க வெந்தை பெருமானே.

பொழிப்புரை :—எம்பெருமானே ! முன்னே யான் நினைத்தலை உட னுக்குடனாகப் பின்னே மறைத்துவிடும் மூட சுபாவமான காரிருள் ; ஆ ! கெடுவேன் ; இவ்வாறாகும்போது, யான் எதை நினைப்பேன் ! எதனை மறப்பேன் ! என்பது. (11)

கஉ. வல்லாளா மோனாநின் வான்கருணை யென்னிடத்தே
இல்லாதே போனா லெவ்வண்ண முய்வேனே.

பொழிப்புரை :—வல்லாண்மை யென்பதெல்லா முடையாய் ! மவுன தேசிகோத்தமனே ! நினது மேன்மை வாய்ந்த கருணாகரத்தன்மை யென் மட்டிலே இல்லாதொழியின், யான் எவ்விதமாகப் பிழைக்கப் போகிறேன் ! பிழையேன் என்பது. (12)

கங. வாக்கு மனமு மவுனமுற வெந்தை நின்னை
நோக்கு மவுனமிந்த நூலறிவி லுண்டாமோ.

பொழிப்புரை :—வாயென்ன, மனமென்ன இவ்விரண்டும் மவுனத் தன்மை பொருந்தியிட, எந்தையே ! தேவரீரைச் சதா உண்முகமாகப் பார்த்து நிற்கும் மோன நிலையானது இச்சாஸ்திர ஆராய்ச்சியினாலே கிடைக் கப் பெறுமோ ? என்பது. (13)

கச. ஒன்றாய்ப் பலவா யுலகமெங்குந் தானேயாய்
நின்றாயை யாவெனைநீ நீங்கற் கெளிதாமோ.

பொழிப்புரை :—இவ்வகில மெங்கணும் ஒரு பொருளாயும் மற்றெல் லாமாயும் தானே நிலை நின்றிருக்கும்போது எனையனே ! என்னை நீ நீங்கி யிருத்தற்கும் நியாயமுண்டோ ! இல்லை. ஏன் ? இதனால் சர்வ வியாபகத் திற்கு பங்கம் வருமென்பது கருத்து. (14)

கரு. ஆவித் துணையே யருமருந்தே யென்றனைநீ
கூவியழைத் தின்பங் கொடுத்தாற் குறைவாமோ.

பொழிப்புரை :—என்னுயிர்த்துணையே ! அரிய தேவாமிர்தமே ! எளி யனை நீ வலிந்து அழைத்தே நித்யானந்த ஆஸ்பதமான பரம வின்பத்தைத் தந்தருளின் நின்னைக் குறை கூறுவரோ ? (15)

கசா. எத்தனையோ நின்விளையாட் டெந்தாய்கே ளிவ்வள
றத்தனையு மென்று லறியுந் தரமாமோ. [வென்

பொழிப்புரை :—எந்தாய்கேள் ! நின் திருவிளையாடல்கள் அன்பர் நிமித்தமாகச் செய்தருளியது இவ்வளவென்று கணக்கிட்டு அனைத்தையுஞ் சொல்லுதற்கும் அறிதற்கும் வன்மையுண்டோ ! (16)

கஎ. தேடுவார் தேடுஞ் சிவனேயோ நின்றிருத்தாள்
கூடுவான் பட்டதுயர் கூறற் கெளிதாமோ.

பொழிப்புரை :—தேடுதற் கரியனவாய தேட்டமாம் மோக்ஷ சுகத்தினைத் தேடும் தவசீல ஞானவான்களுக்கினிய சிவ பெருமானே ! நின் திவ்ய திருவடிக் கமலங்களைக் கடைப்பிடித்துய்யுமாறு அடைந்து வருந் துன்பங்களைக் கூறுதல் சாத்தியமாமோ ! (17)

கஅ. பற்றினதைப் பற்றுமெந்தாய் பற்றுவிட்டாற் கேவலத்தி
உற்றுவிடு நெஞ்சமுனை யொன்றிநிற்ப தெப்படியோ. [ல்

பொழிப்புரை :—என்னப்பனே ! எனது இதயமானது தான் பிடித்துள்ளதை விட்டு விடாமே ஸ்திரப்பற்றாய்க் கொள்ளும் ; அப்படிக்கின்றி அப்பிடிப்பை விடுமேல் சகல கேவலாவத்தைக்குட் பட்டு வருந்தும். ஆகவே, இவ்வழி நில்லாதேல் அந்த நெஞ்சமானது தம்மடிச் சார்ந்துய்வது மில்லாமற் போமே. (18)

கசு. ஒப்பிலா வொன்றேநின் னுண்மையொன்றுங் காட்டாமற்
பொய்ப்புவியை மெய்போற் புதுக்கிவைத்த தென்
[னேயோ.

பொழிப்புரை :—ஒப்பும் உயர்வுமற்ற நற்பரனுமொருவ ! நினது யதார்த்த தத்துவமொன்றையு மறிவியாது, கேவலம் அநி அநித்தியமாயுள்ள இந்த மாயாகற்பித உலகத்தை உண்மைப் பொருள் போன்று சித்திரித்துள்ளது மெற்றுக்கோ ! (19)

உ0. காலரல் வழிநடவுங் காலத்தே கண்முளைத்தாற்
போலே யெனதறிவிற் போந்தறிவாய் நில்லாயோ.

பொழிப்புரை :—கண்பார்வையின்றிக் காலினால் மார்க்கத்தைத் தடவிச் செல்லும்போது கண்ணொளி யேற்பட்டது போன்று, நீ தோன்றாத் துணையாய் வந்து என்னறிவூடமர்ந்து ஆதரியாயோ !

குறிப்புரை :—திக்குத் திசையறியாது திகைப்புற்று புந்தி மயக்குறும் போது, இறைவ! நீ என்னறிவிற்காந் துணைபுரிவாய். என்பது. (20)

உக. தன்னரசு நாடாஞ் சடசால பூமிதனிலே
யென்னரசே யென்னை யிறையாக நாட்டினையோ.

பொழிப்புரை :—இறைவனே! சுயேச்சை யாட்சியாயுள்ள சடப் பொருளாம் இச்சரீரமாகிய சாலகோல பூமியின்கண், எளியேனையும் தலைவனாகக் கற்பித்து வைத்துளாயோ! (21)

உஉ. திங்களமு தாநின் றிருவாக்கை விட்டரசே
பொங்கு விடமனைய பொய்ந்நூல் புலம்புவனோ.

பொழிப்புரை :—இறைவனே! சந்திரனது சீதளாமிர்த மனைய நின் வேதாகமாதிய உண்மைத் திருவாக்குகளை யொழித்து, சாமானியமாய்ச் சீறியெழும் விடமொத்த அசத்திய சாத்திராதிகளை யுணர்ந்தே புலம்பித் திரிவேனோ! திரியே னென்றபடி. (22)

உங. உன்னவுன்ன வென்னையெடுத் துள்விழுங்கு நின்னி
இன்னமின்னங் காணுமலெந் தாய் சுழல்வேனோ. [றைவை

பொழிப்புரை :—எனையனே! நின்னை யான் தியானிக்க தியானிக்க எனைச் சிறிதுசிறிதா யுட்கொள்ளுகின்ற நின் பரிபூரண தத்துவத்தை இன்னமுங் காணப்பெருமே வீணுகச் சுத்தித் திரிவேனோ!

குறிப்புரை :—இனி, யெளியன் வீண்போது போக்கற் கிசைந்தில னென்றபடி. (23)

உச. ஆரா வமுதனைய வானந்த வாரியென்பாற்
றூராமலையாநீ தள்ளிவிட வந்ததென்னோ.

பொழிப்புரை :—ஆராவமுதாந் தேவாமிர்தத்தை யொத்த பரானந்த சமுத்திரத்தை யென்பால் தந்தருளாமே, எனையனே விலக்குவிக்க வந்தது என்ன காரணமோ! என்பது. (24)

# நின்ற நிலை



க. நின்றநிலையே நிலையா வைத்தானந்த
நிலைதானே நிருவிகற்ப நிலையுமாகி
என்றுமழி யாதவின்ப வெள்ளந் தேக்கி [மந்தோ.
இருக்க வெனைத் தொடர்ந்துதொடர்ந் திழுக்கு

பொழிப்புரை:—தற்போதுள்ள நிலையே ஸ்திரநிலையாக, பரானந்த நிலையையே நிருவிகற்ப நிலையாகவுங் கொண்டு, எக்காலுங் குன்றலிலாத பேரின்ப மென்பதை பிரவாகமாக நிறைத்து வைக்கவே என்னைத் தொடர்ந்துபற்றி யீர்த்திடுவதாயிற்று அந்தோ! (1)

உ. இருக்காதி மறைமுடிவுஞ் சிவாகமாதி
யிதையமுங்கை காட்டெனவே யிதயத் துள்ளே
ஒருக்காலே யுணர்ந்தவர்கட் கெக்காலுந் தான்
ஒழியாத வின்பவெள்ள முலவா நிற்கும்.

பொழிப்புரை:—இருக், முதலாயுள்ள நான்மறைச் சிரப்பொருள்களும் சைவாகமாதியனவாயுள்ள சாராம்ஸங்களும் ஒத்ததாய் நிரூபிப்பது அறிவித்ததாயுள்ள கைக்காட்டலாகும் என்று நன்குணர்ந்த திடப்பிரக்ஞருக்கு ஒருபோதும் இடையறாதோங்கும் நிரதிசயானந்த வெள்ளமாகவே விருத்தி பெற்றோங்கும். கைகாட்டல்—'ஞானாசிரியர் குறிப்பிட்ட சின் முத்திரை' எனப்படும். (2)

ங. கற்றதுங்கேட் டதுந்தானே யேதுக்காகக்
கடபடமென் றுருட்டுதற்கோ கல்லா லெம்மான்
குற்றமறக் கைகாட்டுங் கருத்தைக் கண்டு
குணங்குறியற் றின்பநிட்டை கூட வன்றோ.

பொழிப்புரை:—அறிவு நூல்களைக் கற்றறிந்ததும், அதன்கணுள்ள ஐயந்திரிபைக் கேட்டறிந்ததும் எதற்காக, கடத்தையும் படத்தையும் உவமைகாட்டி வீண் குதர்க்கவுரை கூறிடும் பேத்தல் வார்த்தைக் காகவோ! கல்லால விருக்ஷத்தின்கண் வீற்றிருந்தருளும் எம் பரமாசாரியன் நம் குறையறிந்து, அஃதொழித்தாள்வான் கருதியே அச்சின் முத்திரையை வலது கரகமலத்தான் வகுத்தருளி யிருப்பதும், யாதுங் குறியா துணருமாறும், பரானந்த நிட்டை கைவரவு மன்றோ! (3)

## பாடுகின்ற பனுவல்

---

க. பாடுகின்ற பனுவலோர்கள், தேடுகின்ற செல்வமே
நாடுகின்ற ஞானமன்றில், ஆடுகின்ற அழகனே.

பொழிப்புரை :—பத்திமைகொண்டு வித்யாமுறையால் பாடும் பரம சாதுக்களால் தேட்டம் செயக்கூடிய திரவியமே! தபோ சீலர்களும் பக்த கோடிகளும் முனீந்திரர்களும் நாட்டமுறும் சிதாகாய சபையின்கண் நிர்த்தனஞ் செய்திடும் பேரழகுப் பெருமானே! (1)

உ. அத்தனென்ற நின்னையே, பத்திசெய்து பனுவலாற்
பித்தனின்று பேசவே, வைத்ததென்ன வாரமே.

பொழிப்புரை :—அனைவர்க்கும் அருந்தந்தையாம் நின்னையே பக்தி புரிந்து பாராட்டி, நின்னைப் பித்தனெனும் நூன்முறையால் பெருக வாழ்த் தற்கும் காரணம் யெதுவோ! அன்பு மிக்குறுதலேயோ! (2)

ந. சிந்தையன்பு சேரவே, நைந்துநின்னை நாடினேன்
வந்துவந்து ளின்பமே, தந்திரங்கு தாணுவே.

பொழிப்புரை :—என் இதயத்தி லன்புண்டாகவே மனமுருகி நின்னை யும் யான் அடையப் பெற்றேன்; ஆதலால் ஏ இறைவனே! நீ வந்து உவப் புற்று என்னுள் சுகானந்தமே உண்டாமாறு கிருபை செய்ய இரங்குவாயாக. தாணு - என்று முள்ளவர். (3)

ச. அண்டரண்டம் யாவும் நீ, கொண்டுநின்ற கோலமே
தொண்டர்கண்டு சொரிகணீர், கண்டநெஞ்சு கரையுமே.

பொழிப்புரை :—அண்ட பகிரண்ட மெல்லாமும், அவற்றில் வாழ் வோருமாகிய யாவும் தாமேயாகுமென்று நின் தொழும்புடைய பக்தர்களறிந்து, ஒப்பற்ற ஞானனந்த முதிர்ச்சியால் சிந்திவரும் ஆனந்தக் கண்ணீரைக் கண்டக்கால் என்னெஞ்சம் உருகிடுமே! (4)

ரு. அன்னைபோல வருண்மிகுத்து, மன்னுஞான வரதனே
என்னையே யெனக்களித்த, நின்னையானு நினைவனே.

பொழிப்புரை :—அம்மைபோன்று திருவருள் மிக்குடைய நித்திய ஞானவள்ளால்! ஏனை எனக்கே யாக்குவித்தருளிய தேவரீரை யானும் என்னிதயமே கொண்டுளேன். (5)

---

## ஆனந்தக்களிப்பு

சங்கர சங்கர சம்பு—சிவ
சங்கர சங்கர சங்கர சம்பு.

க. ஆதி யனாதியு மாகி எனக்
கானந்த மாயறி வாய்நின்றி லங்குஞ்
சோதி மௌனியாய்த் தோன்றி அவன்
சொல்லாத வார்த்தையைச் சொன்னாண்டி தோழி
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை :—எவற்றிற்கும் முன்னதாயும், தான் ஆதியந்த மற்ற தாகியும், எளியேற்குச் சுகங் கொடுப்பவனாகியும் நிலை பெற்றுவாழும் பரஞ்சோதியார் மவுனசிரிய சொரூபங்கொண்டு வந்தருளி வாய்கொண்டுரைத் தற்காகா வோருண்மைப் பொருளினைக் கரகமலங் கொண்டு சின் முத்திரையாகக் காண்பித் தருளினன் என் தோழியே—சங்கர என்பது. (1)

உ. சொன்னசொல் லேதென்று சொல்வேன் என்னைச்
சூதாய்த் தனிக்கவே சும்மாவிருத்தி
முன்னிலை யேதுமில் லாதே சுக
முற்றச்செய் தேயெனைப் பற்றிக்கொண் டாண்டி
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை :—எம்மான் கூறியருளிய வார்த்தையை என்னவென்று கூறுவேன்! அடிமையைக் கபடமாய்த் தனிப்பட சலனமற்றிருக்கச் செய்து, முன்னிலையான சுட்டின்றியே பரானந்த வெள்ள மோங்குமாறு செய்வித்து ஈற்றிலெனைக் கவர்ந்தருளினனடி—சங்கர. (2)

ங. பற்றிய பற்றற வுள்ளே தன்னைப்
பற்றச்சொன் னான்பற்றிப் பார்த்த விடத்தே

பெற்றதை யேதென்று சொல்வேன் சற்றும்
பேசாதகாரியம் பேசினான் தோழி
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை :—ஏற்கனவே யான் பற்றிவந்த பற்றுக்களெல்லாம் ஒழிந்து, எனக்குள்ளாகவே தன்னைப் பரமாதாரவாகக் கொண்டு பற்றுமாறு சொல்லியருளினன் ; பின்னர் அவ்வாறாகப் பற்றிப்பார்க்கவும், யானடைந்துள்ள பேற்றினையா தென்றோதுவேன் ! இலவலேசமும் பேசற்கில்லாத வோர் விஷயத்தினைக் கூறியருளினன் தோழி—சங்கர. (3)

ச. பேசாவிடும்பைகள் பேசிச் சுத்தப்
பேயங்கமாகிப் பிதற்றித் திரிந்தேன்
ஆசா பிசாசைத்துரத்தி ஐயன்
அடியிணைக் கீழே யடக்கிக்கொண்டாண்டி
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை :—சொல்லொணு கடுமொழிகள் கூறிட, யான் சுத்தப் பிசாசின்வடிவமாய் பிதற்றல் செய்து திரிந்துழன்றேன் ; பின்னர் உடனாக ஐயன் ஆசாபாசப் பேயினையும் என்னைவிட்டோடும்படி விரட்டியடித்து எனைப் பரிசுத்தனாக்கித் தம் திருவடிக் கீழாக வாழச் செய்தனன்—சங்கர. (4)

ரு. அடக்கிப் புலனைப்பிரித்தே அவ
ருகிய மேனியி லன்பை வளர்த்தேன்
மடக்கிக்கொண்டா னென்னைத் தன்னுட் சற்றும்
வாய்பேசாவண்ண மரபுஞ்செய்தாண்டி
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை :—எனை யொடுக்குவித்து ஐவகைப் புலன்களையும் வேறுவேறாய்ப் பிரித்திட்டு, அவர்தம் திவ்ய திருமேனியாம் திருவடியின்கண் அன்பு செலுத்துவதை மிகவும் வளர்த்து வந்தனன் ; இவ்வாறாக, பின்னரென்னைத் தம்பாலொடிக்கிக் கொண்டே கொஞ்சமும் வாய்திறவாதபடிக்கான தந்திரங்களையுஞ் செய்தானடி தோழி—சங்கர. (5)

சா. மரபைக் கெடுத்தனன் கெட்டேன் இத்தை
வாய்விட்டுச் சொல்லிடின் வாழ்வெனக்கில்லை
கரவு புருஷனு மல்லன் என்னைக்
காக்குந்தலைமைக் கடவுள்காண் மின்னே
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை :—என் மரபின் முறைமையுங் கெடுத்து விட்டான் ஆ! கெட்டேன்! இது விஷயத்தை வெளியிட் டுரைப்பேனாயின் எனக்கு யோக்கியதை யிராது! ஆனால், அவன் சூதானமனுஷியனு மல்லன்; பின்னை யாவனென்றாலோ, எனைக் கார்த்துரக்ஷிக்கும் இறைமையான தெய்வ மாகுவன்—சங்கர. (6)

எ. கடலின் மடை விண்டதென்ன இரு
கண்களு மானந்தக் கண்ணீர் சொரிய
உடலும் புளகித மாக என
துள்ள முருக வுபாயஞ் செய்தாண்டி
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை :—கடலின்கண் மடைதிறந்தார் போன்று, இரண்டு கண்களிலேயும் இன்பநீர் ஆறெனப்பெருகி வழியவும் இச்சரீரமும் புளகாங் கிதங் கொள்ளவும், அன்றி யென் மனம் நீரானமா யுரிகிடவும் ஓர் உபா யத்தை யுண்டு பண்ணினனடி—சங்கர! (7)

அ. உள்ளது மில்லதுமாய் முன் உற்ற
உணர் வதுவாயுன் னுளங் கண்டதெல்லாந்
தள்ளெனச் சொல்லியென்னையன் என்னைத்
தானாக்கிக் கொண்ட சமர்த்தைப்பார் தோழி
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை :—நிலையுள்ளனவும், நிலையற்றனவுமாகிய பொருளெலா மாகியும் மற்றும் நேராகக் கண்டறி பொருளாகியும், நினது மனத்தால் உணர்ந்துள்ள எல்லாப் பொருள்களையும் தள்ளிவிடுவா யென்று கூறி என திறையவன் அடிமையைத் தானேயாகச் செய்து கொண்ட சாமர்த்தியத்தைப் பார்ப்பாயாக தோழீ—சங்கர! (8)

கூ. பாராதி பூதநீ யல்லை உன்னிப்
பாரிந்தி ரியங் காரணநீ யல்லை
யாரா யுணர்வுநீ யென்றான் ஐயன்
அன்பா யுரைத்தசொல் லானந்தந் தோழி
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை :—பிருதிவி முதலாயுள்ள ஐ வ கை ப் பூதங்களும் நீயல்லை; நன்றாயுற்று நோக்குவாய், இன்னும் பஞ்சேந்திரியாதிகளும் அந்தக்கரணாதிகளும் நீயாக மாட்டாய்; இவ்வாறாக நன்கு ஆய்ந்துணர்

கின்ற நல்லறிவெதுவோ அவ்வறிவே நீயெனத் தெளிவுறக்கூறினான் இறைவன்; இவ்வாறாக உள்ளன்போடும் கூறியருளிய உபதேசமொழி கேட்கவே பேரின்பமாயிற்று. என் தோழியே—சங்கர (9)

க0. அன்பருக் கன்பான மெய்யன் ஐயன்
ஆனந்த மோன னருட்குரு நாதன்
தன்பாதஞ் சென்னியில் வைத்தான் என்னைத்
தானறிந்தேன் மனந் தானிறந் தேனே
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை :—உண்மை யடியவர்கட்கு உற்றதுணையாகுவன், இறைவன் அன்றியும் பரானந்தத்திற்கு மூல காரணனாய மவுன தேசிகனுமாவான், திருவருள் பாலிக்கும் சற்குரு நாதன், இன்னவன் தனது திருவடிக் கமலங்களை என் சிரத்திற் கணியாகச் சூட்டியருளினன்; இவ்வாறு அநுக்ரகிக்கவே, என்னை இன்னவனென யான் நன்குணரலாயினேன்; இதன்மேல் என் மனம் இருந்த நிலையறியேன்! அதாவது மனம் இறந்தது. (10)

கக. இறப்பும் பிறப்பும் பொருந்த எனக்
கெவ்வண்ணம் வந்ததென் றெண்ணியான் பார்க்கின்
மறப்பு நினைப்புமாய் நின்ற வஞ்ச
மாயா மனத்தால் வளர்ந்தது தோழி
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை :—இறத்தல் பிறத்தல்களானவை என்பால் எவ்வாற்றான் வந்தடுத்தது என்று யான் ஆராய்ந்துணரும்போது, சகல கேவல மாத்திரமாயுள்ள வஞ்ச நெஞ்சகத்தின் வாயிலாக மாயா சகிதமா யேற்பட்டதென்று தெரிந்தது தோழீ! என்பது. சகல, கேவலம் - நினைப்பு மறப்பு. (11)

கஉ. மனதேகல் லாலெனக் கன்றோ தெய்வ
மௌன குருவாகி வந்துகை காட்டி
எனதாம் பணியற மாற்றி அவன்
இன்னருள் வெள்ளத் திருத்திவைத் தாண்டி
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை :—அடியவனுக்கு உரிய மனம் கல்லொத்ததாயல்லவோ விருக்கின்றது. (ஆகவே,) தெய்வீக மவுன தேசிகோத்தமனா யெழுந்தருளிவந்து எனக்கருளிச் செய்வனவற்றைக் கையினாலே சின்முத்திரையா

கக் காண்பித்து, என் ஜீவபோத மாற்றியருளி, அவன்றன் திருவருள் பிரவாகத்திலே மூழ்கச் செய்தருளினனடி—சங்கர. (12)

கரு. அருளா லெவையும்பா ரென்றான் அத்தை
அறியாதே சுட்டியென் னறிவாலே பார்த்தேன்
இருளான பொருள்கண்ட தல்லாற் கண்ட
என்னையுங் கண்டில னென்னேடி தோழி
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை:—நீ பார்ப்பன வனைத்தும் நின் தற்போதத்தால் பாராது திருவருளாலேயே பார்த்தல் வேண்டு மென்றனன்; ஆனால் அவ்வுபதேச உண்மையைச் சிறிது மறியாமே என்னறிவுகொண்டு பார்த்தனன்; அப்படிப் பார்த்ததில் விளங்கியது இருளன்றி யெதுவுங் கண்டிலேன்; பின்னர் எனையும் யானறிந்திலன், ஈதென்ன புதுமையாயுள்ளது தோழீ—சங்கர. (13)

கச. என்னையுந் தன்னையும் வேறா உள்ளத்
தெண்ணாத வண்ண மிரண்டற நிற்கச்
சொன்னது மோரொரு சொல்லை அந்தச்
சொல்லால் விளைந்த சுகத்தையென் சொல்வேன்
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை:—எனையும் நினையும் துவிதமாக நினையாதபடி யேகபாவனை கொண்ட உள்ளத்தோடு நிலை பெறுவா யென்றோதியவாறாக கூறியருளியதும் ஓர் மொழியே; அவ்வொரு மொழியாம் திருமொழியால் உண்டாகிய பரானந்தத்தை யென்னென்று கூறுவேன்—சங்கர! (14)

கரு. விளையுஞ் சிவானந்த பூமி அந்த
வெட்ட வெளிநண்ணித் துட்ட விருளாங்
களையைக் களைந்துபின் பார்த்தேன் ஐயன்
களையன்றி வேறொன்றுங் கண்டிலன் தோழி
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை:—பரபோகம் விளைதற்கேதுவாகிய சிவானந்த பூமியைத் துரியத்தானத்தில் போய்ப்பார்க்க, அது ஒரே வெட்ட வெளியாய்க் காணப்பட்டது; ஆங்கே மறைந்தொதுங்கியுள்ளதான தீய வந்தகாரமாகிய கலையினை வேரறப் பிடுங்கிப் பின்பார்க்க, அவ்விடத்தே இறைவனது

கலாப்பிரபையே யல்லாது வேறெவற்றையுங் காண்கிலேன் றோழி—சங்கர. (15)

கசு. கண்டார் நகைப்புயிர் வாழ்க்கை இரு
கண்காண நீங்கவுங் கண்டோந் துயிலுன்
கொண்டார்போற் போனாலும் போகும் இதிற்
குணமேது நலமேது கூறுய்நீ தோழி
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை :—இவ்வநித்திய சரீரத்தோடும் கூடிவாழும் பேய் வாழ்க்கையைப் பெரியார் நகைத்தற் கேதுவான காரியமென்க; எதனு லெனின், நம்மிரு நேத்திரங்களும் பார்க்க அழிவது தெரிதலான் என்க, அதாவது ஆன்மா தேகத்தை விட்டு அதி சீக்கிரத்தில் அகன்றொழிவதே சாலும். ஓர் சமயம் நித்திரை செய்வார் போன்று மாயும்; ஆதலினுல் இவ் வாழ்வில் நன்றே யின்றும்; துன்பமே மிச்சமாகும், போகமும் பொய்யாம்; நன்கு யோசிப்பாய் நீ தோழி—சங்கர. (16)

கஎ. நலமேது மறியாத வென்னைச் சுத்த
நாதாந்த மோனமா நாட்டந்தந் தேசஞ்
சலமேது மில்லாம லெல்லாம் வல்லான்
றளாலென் றலைமீது தாக்கினுன் றோழி
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை:—நன்மை தீமை யறியப் பெருவெனையே, மிகப் புனித மாய நாதமுடிவாயுள்ள மவுன நிலையெனும் நன்னேக்களித்துச் சிறிதேனும் மனேசலனமின்றிச் சர்வஞ்ஞத்துவம் வாய்ந்த பேரறிவாளன்றன் திரு வடிக் கமலங்களால் எனது சிரசின்கண் பொருந்தி யருளினுன் றோழி—சங்கர.

குறிப்புரை :—தாளால் தாக்கலாவது - சுண்டு திருவடி தீக்ஷை யென்ப. (17)

கஅ. தாக்குநல் லானந்த சோதி அணு
தன்னிற் சிறிய வெனைத்தன் னருளாற்
போக்கு வரவற் றிருக்குஞ் சுத்த
பூரண மாக்கினுன் புதுமைகாண் மின்னே
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை :—திருவடியைத் தாக்காநின்ற நல்ல பரானந்த பரம சோதி சொரூபராங் கடவுளார் அணுப் பிரமாணத்தினும் சிறிதாய சிற்றணு மாத்திரமாயுள்ள எனைத் தம்பெருங்கருணை கொண்டு இறத்தல் பிறத்தல் களற்ற பரிபூரணவத்துவாக்கி தன்னிலைச் சேர்த்தான்; இவ்வாறுக்கியது பெரும் ஆச்சரியகரமான காரியம் பாவாய்—சங்கர. (18)

கக. ஆக்கி யளித்துத் துடைக்குந் தொழில்
அத்தனை வைத்து மெள்ளத்தனை யேனுந்
தாக்கற நிற்குஞ் சமர்த்தன் உள்ள
சாக்ஷியைச் சிந்திக்கத் தக்கது தோழி
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை :—படைத்தல் காத்தல் அழித்தல் முதலிய பஞ்சகிருத்தியாதி சமஸ்த காரிய காரண கர்த்தாவாக விருந்தும், சற்றேனும் அவ்வச் செயல்களில் ஈடுபடாது சர்வ சாக்ஷிபூதமாயிருந்தருளும் சர்வசக்தனுக்கும் எந்தலைவன்; இதற்கு, உள்ளத்தி னிடத்தி லிருந்தும், ஆங்கு நிகழும் சங்கற்ப விகற்பாதிகளில் சம்பந்தியாமே தனித்து சாக்ஷிபூதமா யிருந்தருள் வதே தக்கசான்றாக உணரற்பாற்று தோழி—சங்கர. தாக்கற நிற்றல் - ஈடுபடாது தனித்து நிற்றலேயாம் என்பது. (19)

உ0. சிந்தை பிறந்தது மாங்கே அந்தச்
சிந்தை யிறந்து தெளிந்தது மாங்கே
எந்த நிலைகளு மாங்கே கண்ட
யானொ னிரண்டற் றிருந்தது மாங்கே
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை :—என் மனமானது தோன்றிய விடமும் அவ்விடமே யாகும்; அன்றியும் அம்மனம் மெலிவுற்று தெளிவுற்றதும் ஆங்கேயாம்; மற்றும் எந்தவிதமான நிகழ்ச்சியும் அவ்விடமே யென்க; இவை யுணர்ந்து வந்த யான் துவிதமன்றி யேகமாயொன்று பட்டது மவ்விடமே—சங்கர. (20)

உக. ஆங்கென்று மீங்கென்று முண்டோ சச்சி
தானந்த சோதி யகண்ட வடிவாய்
ஓங்கி நிறைந்தது கண்டாற் பின்னர்
ஒன்றென் றிரண்டென் றுரைத்திட லாமோ
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை :—அவ்விடத்தது இவ்விடத்தது என்று கூறவுங் கூடுமோ, சத்தும் சித்தும் ஆனந்த மயமானதுமான பரஞ்சோதி, அகண்டாகார சொரூபமாய்ப் பரிணமித்து யாண்டும் பரிபூரண நிறைவாய் நிலையுற்றதைப் பார்த்த பின்னர், ஏக மென்றாவது அல்லது இரண்டு என்றாவது ஸ்திரப்படுத்தக் கூடுமோ—சங்கர. (21)

உ௨. என்று மழியுமிக் காயம் இத்தை
ஏதுக்கு மெய்யென் றிருந்தீ ருலகீர்
ஒன்று மறியாத நீரோ யமன்
ஓலைவந் தாற்சொல்ல வுத்தர முண்டோ
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை :—எப்போதாவது இச்சரீரம் அழிந்து விடத்தக்கதேயாகும்; ஆதலால், உலகத்தீரே! இதனை எதற்காக நித்தியமான தென்றிருந்து வருகிறீர்கள்? நீவிர் எதுவும் உணரப்பெறா வுன்மத்தர்களோ! நாளை இயமதர்மனது கடைச்சீட்டு வரின் அதற்கு பதிற்சொல்லி மீட்டு விடுவீர்களோ—சங்கர. (22)

உ௩. உண்டோ நமைப்போல வஞ்சர் மலம்
ஊறித் ததும்பு முடலைமெய் யென்று
கொண்டோ பிழைப்பதிங் கையோ அருட்
கோலத்தை மெய்யென்று கொள்ளவேண் டாமோ
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை :—நம்போன்ற வஞ்ச நெஞ்சர்களும் இங்குளராவரோ! கேவல மல மூத்திராதிகள் நிரம்பித் ததும்பி வழிகின்ற இச்சரீரத்தை அழியாதது எனக்கொண்டுதான் ஜீவிப்பதோ! அந்தோ! இறைவன் திருவருட் செயலே யென்ற நிலையினை மெய்ந்நிலையெனக் குறித்தொழுக வேண்டாவோ—சங்கர. (23)

உ௪. வேண்டா விருப்பும் வெறுப்பும் அந்த
வில்லங்கத் தாலே விளையுஞ் சனனம்
ஆண்டா னுரைத்த படியே சற்றும்
ஆசையா திருந்துகொள் ளறிவாகி நெஞ்சே
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை :—நெஞ்சமே! நீ ஆசையும் நிராசையும் கொள்ளற்க; அந்த இராகத்வேஷத்தினாலேயே நினக்கு பிறப்புண்டாகு மாக்கும்; ஆத

விஞலே, எம்பெருமான் நமக்குத் தெரிவித்தன்னவாருகவே எதனினும் சிறிதும் பற்ருமே நின்னறிவால் நிதானித்திருந்து வருவாய்—சங்கர. (24)

உரு. அறிவாரு மில்லையோ வையோ என்னை
யாரென் றறியாத வங்கதே சத்தில்
வறிதே காமத்தீயிற் சிக்கி உள்ள
வான்பொரு டோற்கவோ வந்தேனுன் ருேழி
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை :—உண்மை நெறியினை தெரிவாரும் இங்கின்ருே! அந்தோ! எனை இன்னுனென்றுணரக் கூடாத உடம்பாகிய பிரதேசத்தின் கண் யாதொரு காரியமுமின்றிக் காமமெனும் தீவகத்தேயிருந்து, என்பாலுள்ள விசேடமான ஞானதத்துவ பதார்த்தங்களை யிழக்தொழியவோ யான் அங்குற்றது! தோழி—சங்கர. (25)

உசா. வந்த வரவை மறந்து மிக்க
மாதர் பொன்பூமி மயக்கத்தி லாழும்
இந்த மயக்கை யறுக்க எனக்
கெந்தை மெய்ஞ்ஞான வெழில்வாள் கொடுத்தான்
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை :—யான் இச்சரீரங்கொண்டு வந்தகாரணத்தை அடியோடு மறந்து, பெண்ணுசை, பொருளாசை, மண்ணுசை யென்னும் பேராசையாகிய மோகத்திலாழ்ந்தே கெடும்படியான இம்மாயா மயக்கொழியுமாறு எளியேற்கு எந்தைபோன்ற தலைவன் உண்மை ஞானமென்கின்ற அழகாய வாளாயுத மொன்றைத் தந்தாண் டருளினுன். என்பது சங்கர. (26)

உஎ. வாளாருங் கண்ணியர் மோகம் யம
வாதைக் கனலை வளர்க்குமெய் யென்றே
வேளா னவனுமெய் விட்டான் என்னின்
மிக்கோர் துறக்கை விதியன்ருே தோழி
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை:—வாளாயுதம் போன்ற நேத்திரங்கள் கொண்டுள்ள பெண்கள் மேலுள்ள ஆசையானது, இயமவாதையாம் தணலை விர்த்தியாக் கும் இது மிக்க உண்மையான விஷய மென்றே மன்மதனும் சொரூபம்

விட்டு அரூபங் கொண்டானென்றால், அறிவிற் சிறந்தோர் அவ்வாசையை அறவே யொழித்துவிடல் நியாய மல்லவா தோழி—சங்கர. (27)

உஅ. விதிக்கும் பிரபஞ்ச மெல்லாஞ் சுத்த
வெயின்மஞ்ச ளென்னவே வேதாக மங்கள்
மதிக்கு மதனை மதியார் அவர்
மார்க்கந்துன் மார்க்கஞ் சன்மார்க்கமோ மானே
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை—பிரம்ம சிருட்டியாகிய இவ்வுலகனைத்தும் அதிவெயிலூடு கிடந்த மஞ்சள் போன்றே வெளுத்திடு மென்று வேதாகமாதிகள் அவைகளைச் சிறிதும் மதிப்போரை கொஞ்சமேனும் மதிக்க வொண்ணா; அன்னார் மார்க்கமுந் தீயமார்க்கமே யல்லாது நன் மார்க்கமாகா, நீ கூறுவாய் தோழி—சங்கர. வெயிலிடைப்பட்ட மஞ்சள் மங்குமாறு இன்னார் துன்மார்க்கமும் துலங்காதென்க. (28)

உக. துன்மார்க்க மாதர் மயக்கம் மனத்
தூயர்க்குப் பற்றாது சொன்னேன் சனகன்
தன்மார்க்க நீதிதிட் டாந்தம் அவன்
றானந்த மானசதா னந்த னன்றோ
சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை :—தீயொழுக்கமுள்ள மாதர்களது ஆசையானது பரிசுத்தமான மனமுடையார்க்குப் பற்றின்றகலும், இது உண்மை. சொல்லிவிட்டேன்; இதற்கு, பண்டைய ஜனக மகா மன்னனது நீதிநெறியாட்சியே போதிய சான்றாம். அவன்றான் முடிவுடைய சதானந்த சீலனென்பார். ஜனகன் இல்லற ஞானியென மிக்க மதிப்பெய்திய மகாதீர முடையவன். (29)

௩௦. அன்றென்று மாமென்று முண்டோ உனக்
கானந்தம் வேண்டி னறிவாகிச் சற்றே
நின்றாற் றெறியு மெனவே மறை
நீதியெம் மாதி நிகழ்த்தினான் றோழி
சங்கர சங்கர சம்பு—சிவ
சங்கர சங்கர சங்கர சம்பு.

பொழிப்புரை :—அல்ல வென்றுவது ஆகு மென்றுவது கூறவும் நியாய முண்டோ! நின்றனக்கே பரானந்த மென்பது வேண்டுமானால், நீ

தனித்து அறிவு மயமாய்ச் சற்று நிர்பையேயாயின் தெரியலாகும் என்றே வேதாகம உண்மைகளை எம் தலைவன் எற்குணர்த்தியருளினன் தோழியே—சங்கா. (30)

---

## அகவல்.

திருவருண் ஞானஞ் சிறந்தருள் கொழிக்குங்
குருவடி வான குறைவிலா நிறைவே
நின்ற வொன்றே நின்மல வடிவே
குன்றாப் பொருளே குணப்பெருங் கடலே
ஆதியு மந்தமு மானந்த மயமாஞ்
சோதியே சத்தே தொலைவிலா முதலே
சீர்மலி தெய்வத் திருவரு ளதனாற்
பார்முத லண்டப் பரப்பெலா நிறுவி
அண்டச முதலா மெண்டரு நால்வகை
எழு பிறவியிற் றுழா தோங்கும்
அனந்த யோனியி னினம்பெற மல்க
அணுமுத லசல மான வாக்கையுங்
கணமுத லளவிற் கற்ப காலமுங்
கன்மப் பகுதிக் கொன்மைக் கிடா
இமைப்பொழு தேனுந் தமக்கென வறிவிலா
ஏழை யுயிர்த்திரள் வாழ வமைத்தனை
எவ்வுட லெடுத்தா ரவ்வுடல் வாழ்க்கை
இன்ப மெனவே துன்ப மிலையெனப்
பிரியா வண்ண முரிமையின் வளர்க்க
ஆதர வாகக் காதலு மமைத்திட்
டேக மின்றியே தேக நானென
அறிவு போலறி யாமை யியக்கிக்
காலமுங் கன்மமுங் கட்டுங் காட்டியே
மேலு நரகமு மேதகு சுவர்க்கமும்
மாலற வகுத்தனை யேலும் வண்ணம்
அமையாக் காதலிற் சமய கோடி
அறம்பொரு ளாதி திறம்படு நிலையிற்

குருவா யுணர்த்தி யொருவர்போ லனைவருந்
தத்த நிலையே முத்தி முடிவென
வாத தர்க்கமும் போத நூல்களும்
நிறைவிற் காட்டியே குறைவின்றி வயங்க
அங்கங்கு நின்றனை யெங்கு மாகிச்
சமயா தீதத் தன்மை யாகி
இமையோர் முதலிய யாவரு முனிவருந்
தம்மைக் கொடுத்திட் டெம்மை யாளென
ஏசற் றிருக்க மாசற்ற ஞான
நலமுங் காட்டினை ஞானமி லேற்கு
நிலையுங் காட்டுத னின்னருட் கடனே.

பொழிப்புரை :—மகா பாக்கிய மாகிய திருவருட் செல்வ மலிந்து அருண்ஞான மதிகரித்து குருநாதனு யெழுந்தருளும் குறைவிலாப் பரிபூரணமே! ஏகவத்துவாய் நிலைபெற்றுள்ள நிர்மலவத்துவே! எக்குறைவு மற்ற யேகபரம்பரனே! சற்குணசாகரமே! ஆதியந்தமற்ற ஆனந்தானு சந்தான சோதிமயமே! யதார்த்த நித்தியமே. அழிவற்ற தலைமைப் பொருளே! சிறப்புற்று தெய்விகமாந் திருவருளினாலே இப்பூமிமுதல் பிரமாண்டப் பரப்பனைத்தும் நிலைநாட்டி, பின் முட்டை—முதலான நால்வகை யோனித்துவாரமாக ஏழுவகையான பிறப்புக்களினும் தங்காதும், அளவு கடந்த யோனி வகைகளில் செறிந்தும், க்ஷணகாலமுதல் கற்ப கோடிகாலம் வரையிலும் இருவினைப் பகுதிகளுடைய பழமைக் கீடாக இமைப்பொழு தேனும் தமக்குரிய சுய அறிவின்றிய பரம ஏழ்மைச் சீவகோடிகள் வாழு மாறு அமைத்திருக்கிறாய்.

எவர்கள் எச்சரீர மெடுத்தார்களோ, அவர்கள் அவ்வந்த சரீரத்தோடும் கூடி வாழும் வாழ்க்கையை மிக்க இன்பமாயிருப்பதாகவே யெண்ணியும், துன்பமென்பது கிடையாதென்றும், மிகவும் உரிமை பாராட்டி வளர்த்தற்கு ஆதாரவாய் ஆசைவைத்து புத்தி யுத்திகளின்றிச் சரீரமேதானகக் கருதி அறிவுடைமை போன்று அறிவின்மையை வெளிக்காட்டி, காலப் பகுப்பையும், கன்மப் பகுப்பையும், அவைக்குரிய நியமாதிகளையுங் காண்பித்து, பின்னரும் நரகாதிய வியவகார பரிஷ்கரிப்புச் செய்துகாட்டியும், மற்றும் அதிமேன்மை வாய்ந்த முத்தி விசேஷத்தையும் பொருந்தற்கென ஐயந்தீர விவரித்தருளினாய்.

இன்னும், அளவற்ற ஆசாபாசத்தோடும் கூடிய சமய கோடிகளின் தன்மையையும், புருஷார்த்தங்களான தர்மார்த்த காமமோக்ஷங்களையும் உற் றிப்பாடான தன்மைகொண்டு சற்குரு நாதனாக வந்தருளியும், ஒருவர்

போலவே யாவரும் தங்கடங்கள் மார்க்க நிலையே முத்தி முடிவாக்கூறி வாதிட்டு ஞானசாத்திராதிகளும் நன்கெடுத்தோதியும் ஆங்காங்கு நிலவுமாறதாக அங்கங்கும் முன்னின்றாய்.

இன்னும், சமயங்களுக் கெல்லாம் அதீதமாய் நின்று எங்கணும் வியாபித்துள்ளாய்; இன்னும் தேவர்கள் முதலாக பற்பல முனிவர், தவசியர், பக்தர்கள், விரதாதியர் ஆகிய இன்னோரெல்லாம் தம்மைத் தேவரீர்பால் அர்ப்பணம் பண்ணித் தங்களை யாட்கொண்டருள வேண்டுமென்று இரங்கி நிற்க, அவர்கட் கெல்லாம் மெய்ஞ்ஞான வழியையு மருளிச் செய்தாய்;

கொஞ்சமும் ஞானநெறியே இன்னதெனத் தெரிந்திலா எளியேனுக்கு, என் பரிதாப நிலைக்கேற்ற நன்னெறியுங் காண்பித்தருளலும் நின் மேலான திருவருட்குரித்தாகுங் கடனும் என்பது.

---

## வண்ணம்.

தனனந் தனன தந்த தனனந் தனன தந்த
தனனந் தனன தந்த—தன தன தான
தனனந் தனன தந்த தனனந் தனன தந்த
தனனந் தனன தந்த—தன தன தான
தனனந் தனன தந்த தனனந் தனன தந்த
தனனந் தனன தந்த—தன தன தான
தான தன தன தான தனன—

அருவென் பனவுமன்றி யுருவென் பனவுமன்றி
யகமும் புறமுமன்றி—முறைபிறழாது
குறியுங் குணமுமன்றி நிறைவுங் குறைவுமன்றி
மறையொன் றெனவிளம்ப—விமலமதாகி
அசலம் பெறவுயர்ந்து விபுலம் பெறவளர்ந்து
சபலஞ் சபலமென்று—எறிவினர்காண
ஞானவெளியிடைமேவுமுயிராய்— (1/8)

பொழிப்புரை:—உருவம், அருவுருவம் என்று சொல்லுந்தகைமையல்லாமே, வெளிமுகம் உண்முக மென்பனவாயு மின்றி நெறி மாறுபடாதும், இவ்வண்ணம் இக்குணமென்று குறித்தற்கின்றியும், மற்றும் நிறம்பல்

குறைதலாதியனவு மின்றியும், சதுர் வேதங்களானவை யேகவத்து வென்றோ தவும், நிர்மல சொரூபியாய் அசைவற்றோங்கியும், இன்னும் அகண்டு வளர்ந் தும், மற்றும் நற்பேறு நற்பேறென்றே அகத்திற் கருதுகின்ற பேரறிவாளர் கள் காணுமாறு சிதாகாய மெனும் பரானந்த வெளியூடு அமர்ந்துள்ள பர மான்ம சொரூபமாய் என்பது.

அனலொன் றிடவெரிந்து புகைமண் டிடுவதன்று
புனலொன் றிடவமிழ்ந்து—மடிவில தூதை
சருவும் பொழுதுயர்ந்து சலனம் படுவதன்று
சமர்கொண் டழிவதன்றொ—ரியல்பின தாகும்
அவனென் பதுவுமன்றி அவளென்பதுவு மன்றி
அதுவென் பதுவுமன்றி—எழில்கொ டுலாவும்
ஆருநிலையறி யாத படியே— (¼)

பொழிப்புரை :—அக்னிபற்றி யெரிந்து புகைமேலோங்குவது மல்ல; தண்ணீர்ப் பெருக்கில் ஆழ்ந்து அதில் மடிந்தொழிவது மன்று; ஆகாய காற்றிலகப்பட்டு அலமந்தழிவது மல்ல; போரிலகப்பட்டு அதில் அகப்பட் டிறப்பது மல்ல; ஆனால், ஓரியல் கொண்டதாம்; அதாவது, அவனென லும் அவளெனலும் அதுவெனலும் அல்லாது, எவரும் உண்மை நிலையறி தற்கின்றி மிக அழகொடும் யாண்டும் நிலவிவாழும்.

இருளென் பதுவுமன்றி யொளியென் பதுவுமன்றி
யெவையுந் தனுளடங்க—வொருமுத லாகும்
உளதென் பதுவுமன்றி யிலதென் பதுவுமன்றி
உலகந் தொழவிருந்த—வயன்முத லோர்கள்
எவருங் கவலைகொண்டு சமயங் களில்விழுந்து
சுழலும் பொழுதிரங்கி—யருள்செயு மாறு
கூறரியசக மாயையறவே— (⅜)

பொழிப்புரை :—இருளென்பனவும் ஒளியமென்பது மல்லாமல் எத் தாத்த பொருளேனும் தன்பாலிலங்கத்தக்க ஒப்புவமையில்லா வொரு தனித்த பெரும் பொருளாகும்; உள்ளபொரு ளென்பது மல்லாது இல்லாப் பொருளென்பதும் அல்லாது, இவ்வுலகத்தோடும் எவ்வுலகமுந் தொழுதய்யு மாறான பிரமதேவன் முதலாயுள்ள யெல்லோரும் துன்புற்று சமயமார்க்கக் குழிகளிலே கிடந்து சுழன்று திரியும்போது இரக்கமுற்றருள்புரியும் வகை யினை யுடையது சொல்லற் கருமையான இச்சக மாயை யற்றொழியுமாறு.

எனதென் பதையிகழ்ந்த வறிவின் றிரளினின்று
மறிவொன் றெனவிளங்கு—மபயமா தாக
வறியுந் தரமுமன்று பிறியுந் தரமுமன்று
வசரஞ் சரமிரண்டி—னொருபடி யாகி
எதுசந் ததநிறைந்த தெதுசிந் தனையிறந்த
தெதுமங் களசுபங்கொள்—சுகவடி வாகும்
யாதுபரமதை நாடியறி— ($\frac{1}{2}$)

பொழிப்புரை :—எனதென தென்னும் மமகாரக் கிரந்தியைப் போக்கிய பேரறிவின் சமூகத்தினின்றும், மேலாம் ஞானமானது ஒன்றேயெனத் தெரிந்துள்ளது. இரண்டு படவும் தெரியத் தக்கனவுமாகா; அன்றியும் அகன்றுபோம் சுபாவமுடையது மன்றும்; சரிப்பதும் சஞ்சரியாததுமாய இருவகையுள்ளும் ஒருவகையாகிய எப்போதும் குறைவில்லா நிறைவாயிருப்பது எப்பொருள், இன்னும் மனமற்ற பொருளெதுவோ, மிக்க சுபகரமான ஆனந்தாம்சங் கொண்டருளியது யாதோ, அப்பரம் பொருளையே நீ சார்ந்து அறிந்து கொள்வாய்.

பருவங் குலவுகின்ற மடமங் கையர்தொடங்கு
கபடந் தனில்விழுந்து—கெடுநினை வாகி
வலையின் படைமறிந்த மறியென் றவசமுண்டு
வசனந் திரமுமின்றி—யவரித ழூறல்
பருகுந் தொழிலிணங்கி யிரவும் பகலுமின்சொல்
பகரும் படி துணிந்து—குழலழ காக
மாலைவகைபல சூடியுடனே— (5/8)

பொழிப்புரை :—பக்குவமான மங்கைப் பருவம் வாய்ந்துள்ள இளம் பெண்மக்களார் அபிநயித்துவரும் கபடச் செய்வினைகளில் மயங்கிக் கிடந்து தீமைக்கிடமாய், வலையில் அகப்பட்டு விழிக்கு மான் போல் மருண்டு மயக்குற்று வார்த்தை சுத்தமு மில்லாமே பொய்க் கூற்றுடைமையாய் அம்மாதர்கள்தம் இதழ் நீர்ப்பருகிக் கிடந்தும், இராப்பகலாக அன்னவர் பயிலும் பொய்யுரையாம் இன்சொல்லுக்கே செவி கொடுத்தும், அவர்கள் கருமையான கூந்தற்கான பல மலர் மாலைகளைச் சூட்டி, உடனாக, என்பது.

பதுமந் தனையிசைந்த முலையென் றதையுகந்து
வரிவண் டெனவுழன்று—கலிலெனவாடுஞ்
சிறுகிண் கிணிசிலம்பு புனைதண் டை கண்முழங்கும்
ஒலிதன் றெனமகிழ்ந்து—செவிகொள நாசி

பசுமஞ் சளின்வியந்த மணமுந் திடமுகந்து
பவமிஞ் சிடவிறைஞ்சி—வரிசையி னூடு
காலின் மிசைமுடி சூடிமயலாய்— (3/4)

பொழிப்புரை :—தாமரை மொட்டொத்த இளமுலையென மிகவும் விரும்பியும், இரேகையுள்ள வண்டுகள் போன்று அதை நாடியலக்கணுற்றும், கலீரென்று சப்திக்கும்படியான சிறிய கிண்கிணிகளும் சிலம்புகளும், மற்றும் சுட்டியுள்ள தண்டைகளும் இவைகள் ஒலிசெயும் சப்தங்கள் நன்றாயிருக்கின்றதென மனமிக மகிழ்ந்து காது கொடுத்து ஆனந்தங் கொண்டும், நாசியானது பசுமையுள்ள மஞ்சளின் மணத்தையும் அதன் காந்தியுங்கண்டு வியந்தின்புற்றுத் திளைக்கவும், இன்னும் பாவத்திற் காஸ்பதமாக அன்னார் காலில் தங்கள் சிரம்பட வணங்கி மயங்கி, என்பது.

மருளுந் தெருளும்வந்து கதியென் பதைமறந்து
மதனன் சலதிபொங்க—விரணம தான
வளிபுண் டனைவளைந்து விரல்கொண் டுறவளைந்து
சுரதஞ் சுகமிதென்று—பரவச மாகி
மருவுந் தொழின்மிகுந்து தினமுந் தினமும்விஞ்சி
வளரும் பிறைகுறைந்த—படிமதி சோர
வானரமதென மேனிதிரையாய்— (7/8)

பொழிப்புரை :—முன்னே மயக்கமும் பின்னே தெளிவு முண்டாகி, மேலான கதி மோக்ஷங்களை அடியோடு மறந்துபோய், காம இச்சைக் கடலென அதிகரிப்ப, இரணம் போன்ற புண்ணினைக்கண்டு சூழ்ந்து விரல் கொண்டு பரிசித்து சுரதலீலையாக்கொண்டு கலவி செய்து பரமானந்தமென்று பரவசமாய் ஒவ்வொரு நாளும் விருத்தியாகி வளர்ந்து வரும் சந்திரனது கலாம்சம் குறைந்து விடல்போல அறிவும் மங்கிப்போய் உடம்பும் மெலிவுற்று குரங்குடல்போல் திரையப்பட்டும்,

வயதும் படவெழுந்து பிணியுந் திமிதிமென்று
வரவுஞ் செயலழிந்து—ளிருமலு மாகி
யனமுஞ் செலுதலின்றி விழியுஞ் சுடர்களின்று
முகமுங் களைகளின்று—சரியென நாடி
மனையின் புறவிருந்த வினமுங் குலைகுலைந்து
கலகஞ் செயவிருண்ட—யமன்வரும் வேளை
யேதுதுணைபழி காரமனமே—

பொழிப்புரை :—வயதும் நாளடைவில் முதிர்ச்சியடைய, மேலே பல வாறான வியாதிகளும் ஒன்றின்பின்னொன்றாய் வந்துகூடி நலிவுசெய்ய, எற்கனவே யுள்ள தேக திடமுமற்று, அகத்தின்கண் ஈளை யிருமலாதி யுண்டாகி போசனங் குறைவுற்று, கண்களினொளிமங்கி, முகம்வாடித் திரைத்து, இனி யெழுந்தருள வேண்டியது தானென்று நினைவுண்டாகி, மனங்களைத் தும், பந்துக்களும் மனையாளும் நாளடைவில் வெறுப்பெய்தி கலகங்கள் மலிந்தோங்கிப் பின் பேரிரைச்சலாக, உடனே கறுத்த நமன் நமையுந்தே சித்துப் புறப்பட்டு வரும்போது நமக்குத்துணைசெய்து காத்திடுவோர் எவருமின்றே! ஏ பழிக்கஞ்சா பாழ்நெஞ்சே !

---

தாயுமான சுவாமிகள் திருப்பாடல்

மூலமும் தெளிவான பொழிப்புரையும் விசேடக் குறிப்புரையும்

ஆக பாடல் 1452.

முற்றிற்று.

உ

கடவுள் துணை

# தாயுமான சுவாமிகளுடைய

மாணாக்கராகிய

# அருளையரென்பவர்

அந்தச் சுவாமிகளைத் துதிசெய்த

## அருள் வாக்கிய அகவல்.



திருவளர் கருணைச் சிவானந்த பூரணம்
ஒருவரு மறியா வொருதனிச் சித்து
நவந்தரு பேதமாய் நாடக நடித்துர்
பவந்தனை நீக்கிப் பரிந்தருள் பராபரங்
கண்ணுங் கருத்துங் கதிரொளிபோல

நண்ணிட வெனக்கு நல்கிய நன்மை
ஒன்றாய்ப் பலவா யொப்பிலா மோனக்
குன்றாய் நிறைந்த குணப்பெருங் குன்றம்
மண்ணையும் புனலையும் வளியையுங் கனலையும்
விண்ணையும் படைத்த வித்திலா வித்துப்

பந்த மனைத்தையும் பாழ்பட நூறியென்
சிந்தையுட் புகுந்த செழுஞ்சுடர்ச் சோதி
விள்ளொணா ஞானம் விளங்கிய மேலோர்
கொள்ளை கொண்டுண்ணக் குறைவிலா நிறைவு
தாட்டா மரைமலர்த் தாணினைப் பவர்க்குக்

காட்டா வின்பங் காட்டிய கதிநிலை
வாக்கான் மனத்தான் மதித்திட வரிதென
நோக்கா திருக்க நோக்கியே நோக்கம்
ஆதியா யறிவா யகண்டமா யகண்ட
சோதியாய் விரிந்து துலங்கிய தோற்றம்

பரவெளி தன்னிற் பதிந்தவென் னுளத்தின்
விரவி விரவி மேற்கொளும் வெள்ளஞ்
சுட்டுக் கடங்காச் சோதி யடியார்
மட்டுக் கடங்கும் வான்பெருங் கருணை
யெல்லைக் கடங்கா வேகப் பெருவெளி

தில்லைப் பொதுவிற் றிருநடத் தெய்வம்
வாதவூ ரெந்தையை வரிசையாய் விழுங்கும்
போதவூர் மேவுகர்ப் பூரவிளக்குச்
சுகரை யகண்டத் தூவெளி யெல்லாந்
திகழவே காட்டுஞ் சின்மய சாட்சி

செழுந்தமி ழப்பரைச் சிவலிங்க மாகி
விழுங்கிய ஞான வித்தக வேழம்
எழிறரு பட்டினத் திறைவனை யென்று
மழிவிலா விலிங்க மாக்கிய வருநிதி
சாந்த பூமி தண்ணருள் வெள்ள

மார்க்க நீழ லசையாக் ககனம்
பரவுவார் நெஞ்சிற் பரவிய மாட்சி
யிரவுபக லற்ற வேகாந்தக் காட்சி
யாட்சிபோ லிருக்கு மகிலந் தனக்குச்
சாட்சியா யிருக்குந் தாரகத் தனிமுதல்

ஆணும் பெண்ணு மலியுமல் லாததோர்
தாணுவாய் நின்ற சத்தாந் தனிச்சுடர்
எள்ளு மெண்ணெயு மெப்படி யப்படி
உள்ளும் புறம்பு முலாவிய வொருபொருள்
அளவிலா மதத்தொரு மவரவர் பொருளென

உளநிறைந் திருக்கு மொருபொற் பணிதி
துள்ளு மனப்பேய் துடிக்கத் தறிக்கக்
கொள்ளு மோனவாள் கொடுத்திடு மரசு
பெரிய பேறு பேசாப் பெருமை
அரிய வுரிமை யளவிலா வளவு

துரிய நிறைவு தோன்று வதீதம்
விரியுநல் லன்பு விளைத்திடும் விளைவு
தீராப் பிணியாஞ் செனன மறுக்க
வாரா வரவாய் வந்த சஞ்சீவி
ஆலைக் கரும்புபா கமுதக் கட்டிநீள்

சோலைக் கனிபலாச் சுளைகத லிக்கனி
பாங்குறு மாங்கனி பாறேன் சருக்கரை
ஓங்குகற் கண்டுசேர்த் தொன்றாய்க் கூட்டி
அருந்திய ரஸமென வறிஞர் சமாதியிற்
பொருந்திய வின்பம் பொழிசிற் சுகோதயம்

எங்கணு நிறைந்த வியல்பினை யெனக்குச்
செங்கையால் விளங்கத் தெரித்தமெய்த் தேசிகன்
தன்னையறி வித்துத் தற்பர மாகி
என்னுளத் திருந்தரு ளேக நாயகன்
அடிமுடி யில்லா வரும்பொரு டனக்கு

முடியடி யிதுவென மொழிந்திடு முதல்வன்
மெய்யலான் மற்றவை மெய்யல வெல்லாம்
பொய்யென வறியெனப் புன்னகை புரிந்தோன்
அருளும் பொருளு மபேதமா யிருந்தும்
இருதிற னென்னு மியலுமுண் டென்றோன்

அருளெனக் குண்டே லருளும் வெளிப்படும்
பொருண்மயந் தானே பொருந்து மென்றுரைத்தோன்
சத்தசத் திரண்டு தன்மையுந் தானே
ஒத்தலாற் சதசத் துனக்கென வுரைத்தோன்
ஆணவ மறுவிடி னருளுறு தென்னக்

காணரு நேர்மையாற் காணவே யுரைத்தோன்
சென்மமுள் ளளவுந் தீரா திழுக்குங்
கன்மம் விடாதெனக் காட்டிய வள்ளல்
உளதில தெனவு முறுதலான் மாயை
வளமில தெனவும் வருத்தினி துரைத்தோன்
இல்லறத் திருந்து மிதய மடக்கிய
வல்லவன் றானே மகாயோகி யென்றோன்

துறவறத் திருந்துஞ் சூழ்மனக் குரங்கொன்
றறவகை யறியா னஞ்ஞானி யென்றோன்
இறவா மனந்தா னிறக்க வுணர்த்திப்

பிறவா வரந்தரும் பேரறி வாளன்
அத்தன தருளா லனைத்தையு மியக்குஞ்
சுத்தமா மாயையின் றோற்றமென் றுரைத்தோன்
இருண்மல மகல விசைந்ததி லழுத்தும்
பொருளருட் டிரோதைப் பொற்பெனப் புகன்றோன்

வீறு சிவமுதல் விளம்பிய படியே
ஆறு மதாதியென் றறிஞருக் குரைப்போன்
கொல்லா விரதங் குவலயத் தோர்கள்
எல்லாம் பெறுமினென் றியம்பிய தயாநிதி
தருமமுந் தானமுந் தவமும் புரிபவர்க்

குரிமையா யவரோ டுறவு கலப்பவன்
தன்னுயிர் போலத் தரணியின் மருவிய
மன்னுயி ரனைத்தையும் வளர்த்திடும் வேந்தன்
களவுவஞ் சனைகள்செய் கருமிக டமக்குந்
தெளிவுவந் துறவருள் செய்திடுந் திறத்தோன்

தான்பெறும் பேறு சகமெலாம் பெறவே
வான்பெருங் கருணை வழங்கிய மாரி
தஞ்சமென் றடைந்த தாபதர் தம்மை
அஞ்சலென் றாளு மதிஞர் சிகாமணி
சிவகோ டிகளுஞ் சித்தகோ டிகளும்

யாவரும் புகழ யாவையு முணர்ந்தோன்
யானென தென்னு மிறைவனெம் பெருமான்
தானவ னாகிய தலைவனெங் கோமான்
அருண கிரியார்க் காறுமுகன் சொலும்
பொருணல மல்லது பொருளென மதியான்

பூத முதலாப் பொலிந்திடு நாத
பேதமுங் கடந்த பெருந்தகை மூர்த்தி
மூலா தார முதலா யுள்ள

மேலா காரமும் வெறுவெளி கண்டவன்
மண்டல மூன்றிலு மன்னிய வுருவிலுங்

கண்டவை யத்திலுங் கடவுளாய் நின்றோன்
பகர்சம யந்தொறும் பரமே யிருந்து
சுகநடம் புரியுந் தொழிலெனச் சொன்னோன்
பேத வபேத பேதா பேத
போத மிதுவெனப் புகன்றிடும் புண்ணியன்

அதுநா னெனவே யாற்றிடு மனுபவஞ்
சதுர்வே தாந்தத் தன்மையென் றுரைத்தோன்
அல்லும் பகலு மறிவா னோர்க்குச்
சொல்லும் பொருளுஞ் சுமையெனச் சொன்னோன்
சுதனே குருவாஞ் சுவாமி நாயகற்கெனின்

அதிக மெய்ஞ்ஞான மல்லவோ வென்றோன்
நேசயோ கத்துறு நிருபரெல் லாந்தொழும்
இராசையோ கத்திறை யிராச யோகத்தான்
பொறுமை தெளிவு புனிதவா சாரம்
மறுவிலா வண்மை வார மியற்கை

தண்ணமர் சாந்தந் தயங்கிய கீர்த்தி
எண்ணெண் கலைபயி லிணையிலாக் கல்வி
நல்ல விரக்க நடுநிலை சத்தியம்
இல்லை யென்னாம லெவர்க்குந் தருங்கொடை
நற்குண னெல்லா நண்ணிய பெருந்தகை

சிற்குண வாரி திருவருட் செல்வன்
கரமே லெடுத்துக் கருத்துற வணங்கிப்
பரமே யுனக்குப் பரமெனப் பகர்ந்தோன்
ஆலடி மேவு மரசினை யடுத்தே
சீலமெய்ஞ் ஞானந் தெளிந்தன னென்னவுஞ்

சித்த மௌனி திடசித்த மாக
வைத்த நிலையின் வளர்ந்தன னென்னவும்
மூலன் மரபின் முளைத்த மௌனிதன்

பாலன்யா னெனவும் பரிவொடும் பகர்ந்தோன்
வடமொழி யியற்கையின் மகிமையை யுணர்ந்து

திடமுற முப்பொருட் டிறத்தையுந் தெளிந்து
கண்டமு தென்னக் கனிரச மென்னத்
தண்டமிழ் மாரி தன்னைப் பொழிந்து
சித்தியு முத்தியுஞ் சிறந்தருள் கொழிக்கு
நித்திய நிரஞ்சன நிராலம்ப நிறைவைப்

பாடியு நாடியும் பணிந்தெழுந் தன்பால்
ஆடியு மரற்றியு மகங்குழை வெய்தியும்
உடலங் குழைய வுரோமஞ் சிலிர்ப்பப்
படபடென் றுள்ளம் பதைத்துப் பதைத்துப்
பாங்குறு நெட்டுயிர்ப் பாகிப் பரதவித்

தேங்கி யேங்கி யிரங்கி யிரங்கி
ஓய்ந்தபம் பரம்போ லொடுங்கியே சிறிதும்
ஏய்ந்த விழிக ளிமைப்பது மின்றிச்
சோர்ந்து சோர்ந்து துவண்டு துவண்டுமெய்
ஆர்ந்த வன்போ டவசமுற் றடிக்கடி

உண்ணடுக் குறவே யுருகியே சற்றுத்
தண்ணமர் மொழியுந் தழுதழுத் திடவே
யுள்ளும் புறம்பு மொருவித் துருகி
வெள்ள நீர்போல் விழிநீர் பெருக்கிக்
கன்று பசுவைக் கருதிக் கதறிச்

சென்றுசென் றோடித் திகைப்பது போல
வென்பு நெக் குடைய விருகரங் குவித்துப்
புன்புலால் யாக்கை பொருந்தா தினியென
உணர்ந்துணர்ந் தன்பா யுவகைமேற் கொண்டினிக்
கணம்பிரி யேனெனக் கருதியே குறித்துத்

திருவுரு வெல்லாந் திருநீறிலங்க
இருகர நளின மியன்முடி குவித்துப்
பூரண சந்திரன் போலொளி காட்டுங்

காரண வதனங் கனின்குறு வெயர்வுற
இளநிலா வெனவே யிலங்கிய சிறுநகை

தளதள வென்னத் தயங்கி யெழில்பெற
வித்தன்மை யெல்லா மிசைந்து மிவனருட்
சித்தெனச் சிவகதி தேர்ந்தவ ருரைப்பப்
பாத்திரமாடப் பரிவுட னாடிச்
சாத்திரங் காட்டித் தயவுசெய் தருளும்

வல்லவ னெனவே மன்னுயிர்க் காக
வெல்லையி லன்ப னிவனென விளங்கி
ஈன வுலகத் தியற்கைபொய் யென்றே
ஞான நூன் மெய்யென நவின்றினி திரங்கிக்
கேவல சகலங் கீழ்ப்பட மேலாய்

மேவருஞ் சுத்த மெய்யினை நல்க
அருளே யுருவுகொண் டவனியில் வந்த
பொருளே யிவனெனப் பொலிந்திடும் புனிதன்
சைவஞ் சிவனுடன் சம்பந்த மென்பது
மெய்வளர் ஞானம் விளக்குமென் றிசைத்தோன்

கதிர்விழி யொளியுறக் கலத்தல்சித் தாந்த
விதிமுறை யாமென விளம்பிய மேலோன்
முடிவினி லாகம முறைமையி னுண்மைய
அடியரைக் குறித்துரைத் தருளிய வண்ணல்
சிதம்பர நேர்மை திறமா வுரைத்திறை

பதம்பர மெனப்பகர் பரமமெய்ஞ் ஞானி
முத்திபஞ் சாக்கர முறைமையி லயிக்கியஞ்
சத்திய மிதுவெனச் சார்ந்தவர்க் குரைத்தோன்
அஞ்செழுத் துள்ளே யனைத்தையுங் காட்டியென்
னெஞ்சழுத் தியகுரு நீதி மாதவன்

எல்லா நிறைந்த விறைவன் செயலெனக்
கல்லா வெனக்குங் கருணைசெய் கடவுள்
குருவரு ளாலே கூடுவ தல்லாற்

திருவரு ளொன்றெனத் தெரிந்திட வுரைத்தோன்
குருவுரு வருளெனக் கொண்டபின் குறையாப்
பொருண்மய மாமெனப் புகன்றிடு போதன்
எந்த மூர்த்திகளையு மெழிற்குரு வடிவெனச்
சிந்தையிற் றியக்கறத் தேர்ந்தவர்க் குரைத்தோன்
சதாசிவ மென்றபேர் தான்படைத் ததுதான்
எதாவதே பொருளென் றெடுத்தெடுத் துரைத்தோன்

கல்லானை கன்னல் கவர்ந்திடச் செய்தவன்
எல்லாம் வல்லசித் தெம்மிறை யென்றோன்
எவ்வுயிர் தோறு மிறைமே வியதிறந்
செவ்விய பிரம்படி செப்பிடு மென்றோன்
எவ்வண மெவரெவ ரிசைத்தன ரவரவர்க்

கவ்வண மாவனெம் மானென வறைந்தோன்
ஒருபாண னுக்கே யொருசிவ னட்படின்
வருமடி யார்திறம் வழுத்தொணா தென்றோன்
சிவனடி யாரைச் சிவனெனக் காண்பவன்
எவனவன் சிவனே யென்றெ டுத்துரைத்தோன்

விருப்பு வெறுப்பினை வேரறப் பறித்துக்
கருப்புகா தென்னைக் காத்தருள் செய்தோன்
இருசொல் லுரையா தியானின்ப மெய்த
ஒருசொல் லுரைத்த வுயர்குண பூதன்
அத்துவா மார்க்க மாறையு மகற்றித்

தத்துவா தீதத் தன்மையைத் தந்தோன்
திருமகண் மருவிய திகழ்வள மறைசையில்
வருமுணர் வாளன் மருளிலா மனத்தான்
எண்ணிய வெண்ணமெல் லாந்தெரிந் தெனக்குத்
தண்ணருள் செய்தவன் றூய மானவன்

ஒருமொழி பகர்ந்த வுதவியா லவன்றன்
இருபத முப்போ திறைஞ்சி வாழ்த்துவனே.

முற்றுப் பெற்றது.

கடவுள் துணை.

(இது, பின்னர்க் கிடைத்த பிரதியொன்றிற் காணப்படுகிறது.)

கொச்சகம்.



தத்துவம்வே றென்னைவே றாக்கியரு டந்ததிலே
யுற்றுணர்வும் வேண்டாவென் றோரிரண்டு மூன்றினையும்
நித்தியமென் றேகாட்டி நில்லாம னில்லெனவே
தத்துவத்தோ டத்துவிதந் தருந்தாயு மானவனே. (1)

நந்தமதென் றெண்ணி நலிந்தவுடல் வேறாக்கி
வந்தபொரு ளுன்னதல்ல வென்றெனது வல்லமையு
முந்தனக்கன் றெல்லா நமதென்றே யுட்புகுந்த
தந்தையுநீ மற்றுமரு ளாந்தாயு மானவனே. (2)

பந்தாடு மாபோற் பதிந்துகருப் பட்டேற்குச்
சிந்தா மணியாய்ச் செகந்தனிலே தீவகம்போல்
வந்தான் மறைசைநகர் மற்றுமோர் மெய்கண்ட
சந்தானத் தானத் தவத்தாயு மானவனே. (3)

பின்னைத்தா ளென்றினையுங் காட்டாத பேரருளி
னுன்னைத்தான் கண்ணிலர்போ லொன்றாகித் தானுழன்ற
வென்னைத்தா னிவ்வணமென் றெண்ணறியா வேழை
யென்றே, தன்னைத்தான் றந்தாண்டான் றனித்தாயுமா
னவனே. (4)

திடக்குப்பை யாடரவஞ் செங்கட்கே ழற்கோ
டுடுக்குப்பை நீத்தே யுயர்மறைசை வந்தெழுந்து
விடக்குப்பை கோலால் விளங்கிய பொய்மெய்யனவாழ்
சடக்குப்பை யென்றுதவிர்த் தான்றாயு மானவனே. (5)

புகப்பட்டான் வல்லிருளின் பொல்லாத வேழாம்
பகப்பட்டா னீங்காப் பரப்பான தீவினையி
னகப்பட்டான் மாயாவிகார வடவியெனுஞ்
சகப்பட்டா னென்றிரங்கி னன்றாயு மானவனே. (6)

கஞ்சனரி காணாத காரணமே யன்பருக்காப்,
பஞ்சவன்முன் சேரப் பரிமே லெழுந்தபரம்
மஞ்சுலவுஞ் சோலையின் மாமறைநசை வந்தோங்கித்
தஞ்சமென்றாற் கஞ்சலென வாடாயு மானவனே. (8)

மனக்கவலை தீர்த்தென் மயக்கவிகற் பங்களெல்லா
முனக்கலவென் றெவ்வொன்றாய் வேறுக்கி யொன்றுமற
நினைக்கவரி தானவின்ப நிட்டையிலென் றேயுரைத்தான்
றனக்குவமை யில்லா னெனக்குமருட் டாயவனே. (9)

முற்றியது.





Printed at the Pearl Press, No. 1, Dharmaraja Koil 1st Lane, Mint Post, Madras—1937.